# முருகவேள் பன்னிரு திருமுறை

## தொகுதி-3

தணிகைமணி
டாக்டர் வ. சு. செங்கல்வராயன்

# முருகவேள் பன்னிரு திருமுறை

தொகுதி -3

அருணகிரிநாதர் அருளிய

## திருப்புகழ்

[பாடல்கள் 996 முதல் 1304 முடிய]

உரையாசிரியர்

டாக்டர் வ.சு. செங்கல்வராயன். எம்.ஏ., டி.லிட்.

திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்.

154, டி.டி.கே.சாலை, ஆழ்வார்பேட்டை,
சென்னை - 600 018.

வடக்குப்பட்டு சுப்பிரமணிய பிள்ளை செங்கல்வராயன் (1883)



THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS
PUBLISHING, SOCIETY, TINNEVELLY, LTD.

கழக வெளியீடு -1926
பதி-1 1951
பதி-2 1965
பதி-3 1992



# MURUGAVEL PANNIRU THIRUMURAI

**Part - III. Vol. V.**

**Tiruppugazh**

APPAR ACHAKAM, MADRAS - 600 108.

# பதிப்புரை

சிவபெருமானுக்குப் பண்டு பன்னிரு திருமுறைகள் வகுக்கப்பட்டுப் பன்னூறு ஆண்டுகளாகச் செந்நெறிச் செல்வர்களால் ஓதி வழிபடப்பட்டு வருதல் போலத் திருமுருகப் பெருமானுக்கும் பன்னிரு திருமுறைகள் வகுத்தல் வேண்டும் என உளங் கொண்ட டாக்டர் தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளை, எம். ஏ., அவர்கள் 'முருகவேள் பன்னிரு திருமுறை' என்னும் இத்தொகுப்பினைத் தக்க ஆராய்ச்சி உரையுடன் தொகுக்க முன் வந்து அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ்ப் பாடல்களை ஏழு திருமுறைகளாக வகுத்து உரையெழுதி ஐந்து தொகுதிகளாக அமைத்து அச்சிட்டு வெளியிட்டனர்.

அடுத்து அருணகிரிநாதர் அருளிய கந்தரலங்காரம் கந்தரந்தாதி ஆகிய இருநூல்களையும் எட்டாந் திருமுறையாகவும், திருவகுப்பை ஒன்பதாந் திருமுறையாகவும், கந்தரனுபூதியைப் பத்தாந் திருமுறையாகவும் திருமுருகாற்றுப்படை, கந்தர் கலிவெண்பா, மற்றும் முருகனைப் பற்றிய பாடல்களைப் பதினொன்றாந் திருமுறையாகவும், தேனூர் வரகவி சொக்கலிங்கம் பிள்ளை அவர்கள் பாடிய சேய்த்தொண்டர் புராணம்' பன்னிரண்டாம் திருமுறையாகவும் தொகுக்க 'முருகவேள் பன்னிரு திருமுறை' உருப்பெறலாயிற்று.

இப் பன்னிரு திருமுறைகளின் மறு பதிப்புகளைக் கழகவழி வெளியிடக் கருதி ஏற்று, 1965 ஆம் ஆண்டில் சில தொகுதிகளை வெளியிட்டோம். முதன் முறையாக முன்பு வெளியான ஆறு தொகுதிகளையும் ஒரு சேர வெளியிட வேண்டுமென்ற ஆவல் நிறைவேறும் வகையில் ஈண்டு நான்கு பாகங்களில் வெளியிட்டுள்ளோம். திருமுருக அன்பர்கள் இதனை ஏற்றுப் போற்றி முருகன் அருள் பெறுவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முன்னுரை

திருத்தணிகேசர் திருவருள் துணை கொண்டு எங்கள் பாட்டனார் உயர்திரு வ.த. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் பல இடங்களினின்றும் சேகரித்த ஓலைச் சுவடிகளிலிருந்து திருப்புகழ்ப் பாக்களை யாவரும் பாடி வணங்குவதற்கு முதன் முதலாக நூல் வடிவில் மூன்று பாகங்களாக அச்சேற்றித் திருமுருகனுக்குத் தொண்டாற்றினார். வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபினில் யான் ஒருவன் அன்றோ என்ற வள்ளற் பெருமானின் வாக்கிற்கொப்ப எங்கள் தந்தையார் தணிகைமணி டாக்டர் வ.சு.செ. அவர்கள் அருணகிரிநாதர் அருளிச் செய்த திருப்புகழ்ப் பாக்களிலும் பிறவற்றிலும் திளைத்து, பக்தியில் ஆழ்ந்து இன்புற்று, பல வகையான ஆராய்ச்சிகளைச் செய்து தணிகை எம்பெருமானை வணங்கினார்கள். சைவத் திருமுறைகள் பன்னிரண்டு உள்ளவற்றைப் போல முருகப் பெருமானுக்கும் திருப்புகழ் முதலாய நூல்களை முருகவேள் பன்னிரு திருமுறை என வகுத்து ஆராய்ச்சி உரையுடன் தொகுத்து வெளியிட்டு மகிழ்ந்தனர். இவற்றின் முதல் பதிப்பு திருநிறை மீனாட்சி கல்யாணசுந்தரம் அவர்களால் 1952 - 1957 ஆம் ஆண்டுகளில் வெளியிடப்பட்டது. சில தொகுதிகளின் இரண்டாம் பதிப்பு சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தாரால் 1965-ல் வெளியிடப்பட்டது. பின்னர் முருக பக்தர்களின் வேண்டுகோளுக்கிணங்கிப் பல்லாண்டுகளாகக் கிடைக்காதிருந்த இத்தொகுதிகளை மீண்டும் பதிப்பிக்கத் திட்டமிட்டோம்.

முருகவேள் பன்னிரு திருமுறை எனச் சுமார் 4300 பக்கங்களில் ஆறுதொகுதிகளாக இதுவரை இருந்தவற்றை இம்மூன்றாம் பதிப்பில், முதல் இரு தொகுதிகளை ஒன்றாகச் சேர்த்து முருகவேள் பன்னிரு திருமுறை பாகம் ஒன்று என்று[illegible] மூன்று, நான்கு தொகுதிகளை ஒன்று சேர்த்துப் பாகம் இரண்டு என்றும்; ஐந்தாம் [illegible] பாகம்

மூன்று என்றும்; ஆறாம் தொகுதியைப் பாகம் நான்கு என்றும் வகைப்படுத்தி ஒளியச்சு முறையில் அச்சமைத்து நல்ல தாளில் தெளிவான எழுத்துகளில் பெரிய அளவில் நான்கு பாகங்களாக வெளியிடும் பேற்றினைப் பெற்றமைக்குப் பெரிதும் உவக்கின்றோம்.

இவ்வரிய பணி விரைவாகவும் செம்மையாகவும் நிறைவேறத் தூண்டுகோலாய் இருந்து உதவிய டாக்டர் யு. மத்வநாத் அவர்கட்கும், அரிய தமிழ்த் தொண்டாற்றி வரும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்க்கும் எங்கள் உளங் கனிந்த நன்றி என்றென்றும் உரித்தாகுக. பக்தர்களும், ஆராய்ச்சியாளர்களும் இதனைப் பெற்றுப் பயனடையும் பேற்றினைத் திருத்தணிகேசன் அருள்வாராக.


சிவாலயா

10, வேங்கடராமன் தெரு,

இராசா அண்ணாமலைபுரம்,

சென்னை - 600 028.

வ. செ. தணிகை நாயகன்

ஞானபூரணி மத்வநாத்

வ.செ. சசிவல்லி


Sep. 1992.

# முருகவேள் பன்னிரு திருமுறை

திருத்தணிகையெம் பெருமான் திருப்புகழ்ச் செல்வத்தை எங்கள் குடும்பத்துக்குத் தந்து அச் செல்வத்தைப் பெருக்கும் வாய்ப்பு ஒன்றையும் இப்போது தந்தனர்.திருப்புகழே அன்றி முருகன் பெரும்புகழ்ப் பெருநூல்கள் அனைத்தையும் பன்னிரு திருமுறைகளாக வகுக்கலாம் என ஓர் எண்ணத்தை உதவினர். சிவபிராற்கு உரிய பன்னிரு திருமுறைகளுக்கு ஒப்பனவாக, முருகவேளுக்கும் உரிய பன்னிரு திருமுறைகளாவன:-

**1 முதல் 7 திருமுறைகள்**

முதல் ஏழு திருமுறைகளாம் 'தேவாரம்' போல திருப்புகழும் முதல் ஏழு திருமுறைகளாம்.(ஆறு படை வீட்டுத் திருப்புகழ்ப் பாக்கள் ஆறு திருமுறைகள்: பிற திருப்பதிகளின் திருப்புகழும் பொதுத் திருப்புகழும் ஏழாந் திருமுறை)

**8 ஆந் திருமுறை**

'திருவாசகம்' 'திருக்கோவையார்' எட்டாந் திருமுறை யாமாறு, திருவாசகத்துக்கு இணையாம் கந்தரலங்காரமும் அகப் பொருள் கொண்ட திருக்கோவையாருக்கு ஒப்ப அகப் பொருள் அமைந்த கந்தரந்தாதியும் எட்டாந் திருமுறையாம்.

**9 ஆந் திருமுறை**

ஒன்பதாம் திருமுறையாகுந் 'திருவிசைப்பா'வுக்கு ஒப்ப, இசைப் பாடலாம் திருவகுப்பு ஒன்பதாந் திருமுறையாம்.

**10 ஆந் திருமுறை**

மந்திர நூலாய்ப் பத்தாந் திருமுறையாகும் 'திருமந்திரத்' துக்கு இணையாக, மந்திர நூலாம் கந்தரநுபூதி பத்தாந் திருமுறையாகும்.

**11 ஆந் திருமுறை**

அடியார் பலரின் பாடல் தொகுதியாம் பதினோராந் திருமுறைக்கு ஒப்ப, முருகவேளுக்குரிய பழைய அடியார்கள் பலர் பாடினவற்றுள், திரட்டப்பட்ட பகுதிகள் முருகப் பெருமானது பதினோராந் திருமுறையாகும்.

**12 ஆந் திருமுறை**

திருத்தொண்டர் புராணமாம் பெரிய புராணத்துக்கு ஒப்ப, முருகவேள் தொண்டர்களின் புராணம் 'சேய்த்தொண்டர் புராணம்' என்னும் அருமைப் பெயருடன் ஒன்று. அது பன்னிரண்டாந் திருமுறையாம்.

உ

வேலு மயிலுந் துணை

# திருப்புகழ்.

## பொதுப்பாடல்கள்.

### 996. மாயையற

தான தத்தன தானா தனாதன
தான தத்தன தானா தனாதன
தான தத்தன தானா தனாதன தந்ததான

போத நிர்க்குண போதா நமோநம
நாத நிஷ்கள நாதா நமோநம
*பூர ணக்கலை சாரா நமோநம †பஞ்சபாண-
பூபன் மைத்துன பூபா நமோநம
நீப புஷ்பக தாளா நமோநம
போக சொர்க்கபு பாலா நமோநம ‡ சங்கமேறும்;
X மாத மிழ்த்ரய சேயே நமோநம
O வேத வத்ரய வேளே நமோநம
**வாழ்ஜ கத்ரய வாழ்வே நமோநம என்றுபாத-
வாரி ஜத்தில்வி ழாதே மகோததி
†† யேழ்பி றப்பினில் மூழ்கா மனோபவ
மாயை யிற்சுழி யூடேவிடாதுக லங்கலாமோ;

---

*முருகவேள் 'சகலகலா வல்லவர்' - பாடல் 320-
பக்கம் 296 கீழ்க்குறிப்பு.

† பஞ்ச பாணம் - பாடல் 19-பக்கம் 60 கீழ்க்குறிப்பு

‡ ஞான சம்பந்தர் தமது பாடல்களைச் 'சங்கமலி செந்தமிழ்கள்' எனக் கூறியுள்ளார். (சம்பந்தர்-3-74-11)

X தமிழ்த்ரயம்-முத்தமிழ்-இயல்-இசை-நாடகம்

O வேதம்-மூன்று: "மூன்றேவேதம்; நாலாவது-மந்திர சாகையான அதர்வ வேதம்" - தக்கயாக. 380 உரை - "மூம் மறை யாலும் வணங்கப்படுகின்ற முக்கணக்கன்" - பொன் வண்ண - 87. 'அதர்வம் தலையாய ஒத்தன்மை பொருளிற் கூறினாம்'- என்பர் நச்சினார்க்கினியர் - மதுரைக் காஞ்சி

(தொடர்ச்சி 3 ஆம் பக்கம் பார்க்க)

# 996.

ஞானம் நிறைந்தவனாய், குணாதீதனாய் உள்ள ஞானமூர்த்தியே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; தலைவனே! உருவம் அற்ற மூர்த்தியே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; எல்லாக் கலைகளின் சாரமாயுள்ள தெய்வமே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன் - (மலர்ப் பாணங்கள் ஐந்து கொண்ட

அரசனாம் மன்மதனுடைய மைத்துனனாம் அரசே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; கடப்ப மலர்களைத் தன்னிடம் கொண்ட திருவடிகளை உடையவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; (போகங்களுக்கு) இன்பங்களுக்கு (இடமாம்) பொன்னுலகைக் (காத்தளித்த) அரசே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; சங்கத்தார் போற்றத்தக்க (அல்லது சங்கப் பலகையில் ஏறியமர்ந்த)

சிறப்பு வாய்ந்த முத்தமிழ்ச் செம்மலே! உன்னை வணங்கு-கின்றேன், வணங்குகின்றேன்; (வேதத் த்ரயம்) இருக்கு, யசுர், சாமம் எனப்படும் மூன்று வேதங்களும் (போற்றும்) வேளே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; வாழ்கின்ற மூவுலகங்களும் (போற்றும்) செல்வனே; உன்னை வணங்குகின்றேன், வணங்கு-கின்றேன், - என்று போற்றி உன் திருவடித்-

தாமரைகளில் விழாமல், மகா சமுத்திரம் போன்ற ஏழ்பிறப்பில் (நான்) மூழ்கி, (மனத்திலே உதிக்கின்ற) எண்ணங் களாம் மாயையின் சுழற்சியினுள்ளே வெளிவர முடியாது அகப்-பட்டுக் கலங்குதல் நன்றா! (நன்றன்று என்றபடி).

---

உரை - 468. " இருக்கும் எசுரும் சாமமும் - இவை தலையாய ஓத்து; இவை வேள்வி முதலியவற்றை விதித்தலின் இலக்கணமுமாய் வியாகரணத்தாற் காரியப் படுதலின் இலக்கியமுமாயின. அதர்வமும் ஆறங்கமும் தரும நூலும் இடையாய ஓத்து; அதர்வம் ஒழுக்கம் கூறாது பெரும்பான்மையும் உயிர்கட்கு ஆக்கமேயன்றிக் கேடு சூழும் மந்திரங்களும் பயிறலின் அவற்றோடு கூறப்படாதாயிற்று." தொல். புறத் - சூ. 20- ந.

** ஜகத்ரயம் - மூவுலகு - சுவர்க்கம், மத்தியம், பாதாளம் என்ற மூன்று உலகங்கள்; பூமி, அந்தரம், சுவர்க்கம்; பூலோகம் பரலோகம், பாதாள லோகம் - என்பாரு முளர்.

†† ஏழ் பிறப்பு. பாடல் 743-பக்கம் 218 - கீழ்க்குறிப்பு

கீத நிர்த்தவெ தாளா டவீநட
நாத புத்திர பாகீ ரதீகிரு
பாச முத்திர ஜீமூத வாகனர் தந்திபாகா-

கேக யப்பிர தாபா முலாதிப
மாலி கைக்கும ரேசா விசாகக்ரு
பாலு *வித்ரும காரா ஷடானன புண்டரீகா,

வேத வித்தக†வேதா விநோதகி
ராத லக்ஷ்மி††கி ரீடா மகாசல
வீர விக்ரம பாரா வதானவ கண்டசூர-

வீர நிட்டுர வீராதி காரண
தீர நிர்ப்பய தீராபி ராம‡வி
நாய கப்ரிய வேலாயு தாசுரர் தம்பிரானே (1)

## 996-1. ஆண்டருள

தான தத்தன தானா தனாதன
தான தத்தன தானா தனாதன
தான தத்தன தானா தனாதன தந்ததான

ஓது முத்தமிழ் தேராவ்ரு தாவனை
வேதனைப்படு காமாவி காரனை
ஊன முற்றுழல் ஆபாச ஈனனை அந்தர்யாமி-

---

* முருகவேள் - பவள நிறத்தினர் - பாடல் 593-பக்கம் 360 கீழ்க்குறிப்பு †. 'அம் பவழத்திரு மேனியும் ஆடிட ஆடுக செங்கீரை'. முத்து. பிர்[redacted]

† 'மறையோனொடும் விளையாடியே' - திருப்புகழ் 741

†† கிரீடா மகாசல-மகா அசல - லீலை செய்த சிறப்புற்ற வள்ளிமலை.

‡ விநாயகப் பிரிய - பாடல் 454-பக்கம் 10 கீழ்க்குறிப்பு ‡ பாடல் 23, 114, 987, 1218, பார்க்க. 'ஐங்கரத்தோன் அன்பு கூர்ந்து மாதவமே என அழைத்துப் புயத்தணைக்கத் திருவுளத்து மகிழும் கோவே' (போரூர் சந்நிதி முறை - மட்டு விருத்தம்)

(கீத நிர்த்த) பாடல் ஆடல் கொண்ட (வேதாள அடவி) வேதாள கணப் பெருங்கூட்டத்துடன் - அல்லது - பாடல் ஆடலை (வேதாளம்) பேய்களுடன் (அடவி) சுடுகாட்டில் (நடநாத புத்திர) நடனம் செய்கின்ற தலைவராம் சிவனது புத்திரனே! (பாகீரதி புத்திர) கங்கையின் புத்திரனே! (கிருபா சமுத்திர) கருணைக் கடலே! ஜீமூதவாகனர்) மேகவாகனனாம் இந்திரன் (வளர்த்த) யானை - தேவசேனையின் (பாகா) பாங்கனே - கணவனே!

(கேகயப் பிரதாபா) மயில் வாகனம் கொண்ட கீர்த்திமானே! (மூலாதிப) மூலகாரண அதிபனே - தலைவனே! மாலைகள் அணிந்த குமரேசனே! விசாகனே! கிருபாளனே! (வித்ரும - ஆகாரா) பவள நிற உருவத்தனே! ஆறு திருமுகங்களை உடையவனே! தாமரையில் உதித்தவனே! (அல்லது தாமரையன்ன ஆறு முகங்களை உடையவனே!)

வேதங்களில் வல்ல (வேதா) கடவுளே! (அல்லது வேதா விநோத - பிரமனோடு பொருள் வினவி விளையாடினவனே!) (விநோத) அற்புதகரமான வேட லக்ஷ்மியாம் வள்ளியுடன் (கிரீடா) லீலைகள் புரிந்தவனே! (மகாசல வீரா) மிக்க கோபத்துடன் (சூரனுடன் பொருத) வீரனே! (அல்லது - மகாசலம் - புண்ணிய தீர்த்தமாம் கங்கையில் (தோன்றிய) வீரனே! அல்லது மகா அசல வீர - பெரிய மலைகளில் வீற்றிருக்கும் வீர! (விக்ரம) பராக்ரமசாலியே! பாராவதான - பார அவதான - மிக்க கவனம் கொண்டவனே! (அகண்ட) பூரணமான- சூரத்துவம் வாய்ந்தவனே!

வீரனுக்கு உரிய (நிட்டுரம் - நிஷ்டூரம்) கொடுமை கொண்ட வீரனே! (அல்லது அகண்ட சூரவீர நிட்டுரவீரா! - பூரண சூரத்வம் கொண்ட வீர சூரனைக் கோபித்த வீரனே!) (ஆதிகாரண) மூல காரணப் பொருளே! தீரனே! பயமற்ற தீரனே! (அபிராம) அழகனே! விநாயக மூர்த்தியிடம் பிரியம் கொண்டவனே! (அல்லது விநாயகர் பிரியப்படுபவனே!) வேலாயுதனே! தேவர்கள் தம்பிரானே!

(மாயையிற்...... கலங்கலாமோ)

## 996 - 1.

ஓதப்படும் முத்தமிழைத் தேர்ந்தறியாத வீணனை, வேதனையே படுகின்ற காம விகாரனை, குற்றம் - பழிகொண்டு திரியும் அசுத்தமான இழிவுள்ளவனை, எங்கும் வியாபித்திருக்கும் தன்மை வாய்ந்த

யோக மற்றுழல் ஆசாப சாசனை
மோக முற்றிய மோடாதி மோடனை
ஊதி யத்தவம் நாடாத கேடனை அன்றிலாதி;
பாத கக்கொலை யேசூழ்க பாடனை
நீதி சற்றுமி லாகீத நாடனை
பாவியர்க்குளெ லாமாது ரோகனை மண்ணின்மீதில்
பாடு பட்டலை மாகோப லோபனை
வீடு பட்டழி கோமான வீணனை
பாச சிக்கினில் வாழ்வேனை
யாளுவ தெந்த நாளோ;
ஆதி சற்குண சீலா நமோநம
ஆட கத்*திரி சூலா நமோநம
ஆத ரித்தருள் பாலா நமோநம
† உந்தியாமை
ஆன வர்க்கினி யானே நமோநம
ஞான முத்தமிழ் தேனே நமோநம
ஆர ணற்கரி யானே நமோநம
‡ மன்றுளாடும்,
தோதி தித்திமி தீதா நமோநம
வேத சித்திர ரூபா நமோநம
சோப மற்றவர் சாமீ நமோநம ×தன்மராச
தூத னைத்துகை பாதா நமோநம
நாத சற்குரு நாதா நமோநம
‡ஜோதி யிற்ஜக ஜோதீ மஹாதேவர்
தம்பிரானே (2)

---

*முருக வேளுக்கு குலப்படை - பாட்டு 35 அடி 3.

† திருமாலுக்க இனியவர் முருக வேள் - பாடல் 497 அடி 5
திருமால் ஆமையானது - கடல் கடைந்தபோது - வரலாறு-
பாடல் 489-பக்கம் 108 கீழ்க்குறிப்பு.

‡ தோதி திகுதிகு தீதீ செக செக சோதி நடமிடு பெருமாளே' என்றார் 1274 - ஆம் பாடலிலும்.

X தரும ராஜனுடைய தூதன் - காலன் (கூற்று) பாடல் 760 - பக்கம் 262 தருமனது ஏவல் செய்யும் கூற்றம் - பரிபாடல் - 3- உரை. 'காலனாவான் யமதூதர்க்கு நாயகம்செய்வான்' - தக்கயாகஉரை - 444.

*யோக நிலையைக் கடவாமல், திரிகின்ற ஆசைப் பெருமை காம மயக்கம் நிரம்பிய மூர்க்கருள் தலைமை பெற்ற மூடனை, முத்தி தரக்கூடிய தவத்தைத் தேடாத கேடுகொண்டவனை அன்றிப் பறவையாதிய உயிர்களைப்-*

*பாபத்துக்கு ஈடாகக் கொலை செய்யவே கருதுகின்ற (கடையனை) வஞ்சகனை, ஒழுக்க நெறியில்லாத இசைப் பாட்டுக்களை விரும்புகின்றவனை, பாவியர்களுக்கெல்லாம் மகா பாதகனைப் பூமியின்மீது -*

*கஷ்டப்பட்டு அலைகின்ற மிக்க கோபமும் சயாமைக் குணமும் வாய்ந்தவனை, (விடு) விடுதல்பட்டு - அழிவுபட்டு அலைகின்ற (கோமாளம்) - களித்து விளையாடும் வீண் பொழுது போக்குபவனை, உலகப் பற்றுக்களிற் சிக்குண்டு வாழ்பவனை - (நீ) ஆண்டருளுதல் எந்த நாளோ! (ஆண்டருளும் ஒரு நாள் எனக்குக் கிட்டுமா என்றபடி.)*

*ஆதி மூர்த்தியே! சற்குணமூர்த்தியே! பரிசுத்த மூர்த்தியே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; (ஆடகம்) பொன்மயமான முத்தலைச் சூலாயுதனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; அன்புடன் பாதுகாத்தருளும் காவல் தெய்வமே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; (உததி) கடலில் ஆமையாகச்-*

*சென்றவர்க்குத் (திருமாலுக்குப்) பிரியமானவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; ஞானப் பொருள் நிறைந்த முத்தமிழ்வல்ல (ரசப்பொருளே) இனியனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; வேதம்வல்ல பிரமனுக்கு எட்டாத அருமையனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; அம்பலத்தில் (ஆடும்)*

*தோதி தித்திமி தீதா - எனக் கூத்தாடுபவனே! உன்னை வணங்குகின்றேன். வணங்குகின்றேன்! வேதங்களில் ஓதப்படும் அழகிய ரூபனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; (சோபம்) துக்கநிலையிலாதவர் துதிக்கும் சாமியே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; தருமராசனாம் (எமன் அனுப்ப வந்த)*

*(தூதனை) தூதனாம் காலனைத் துகைத்த - உதைத்து அழிக்கவல்ல (அல்லது அழித்த) திருவடிகளை உடையவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன். தலைவனே! சற்குரு நாதனே! உன்னை வணங்குகின்றேன் வணங்குகின்றேன்; ஜோதிகளுக்குள் ஜகஜோதியே! (உலகின் பேரொளியே)! மகாதேவராம் சிவபிரானுக்கும் தம்பிரானே! (பெருமானே)!*

*(எனையாளுவ தெந்த நாளோ.)*

## 997. துதி

தான தத்தனா தானா தனாதன
தான தத்தனா தானா தனாதன
தான தத்தனா தானா தனாதன தந்ததான

வேத வித்தகா சாமீ நமோநம
வேல்மி குத்தமா சூரா நமோநம
வீம *சக்ரயூ காளா நமோநம விந்துநாத
வீர பத்மசீர் பாதா நமோநம
நீல மிக்க† கூ தாளா நமோநம
மேக மொத்தமா யூரா நமோநம விண்டிடாத;
போத மொத்தபேர் போதா நமோநம
‡பூத மற்றுமே யானாய் நமோநம
பூர ணத்துளே வாழ்வாய் நமோநம துங்கமேவும்-
பூத ரத்தெலாம் வாழ்வாய் நமோநம
ஆறி ரட்டிநீள் தோளா நமோநம
பூஷ ணத்துமா மார்பா நமோநம புண்டரீக,
×மீதி ருக்குநா மாதோடு சேயிதழ்
மீதி ருக்குமே ரார்மாபு லோமசை
வீர மிக்கஏழ் பேர்மாதர் நீடினம் நின்றுநாளும்-

---

*யூகம் - படையின் அணிவகுப்பு சக்ர வியூகம் - சக்கர வடிவமாகச் சேனையை ஒழுங்குபட நிறுத்தல்.

" படை வகுப்பாவது வியூகம், அஃது ஏழு வகை யுறுப் பிற்றாய், வகையால் நான்காய், விரியால் முப்பதாம்." திருக்குறள் 767- பரிமேலழகர் உரை 'தடந்திரைப் பரவை யன்ன சக்கரயூகம்'- கம்ப ராமா நிகும்பலை 69. நாற் புறத்தும் பயமுண்டாம் போது சக்கர வியூகம் வகுக்கத்தக்க தென்றும் சுக்கிர நீதி கூறும். சேனையை எயில்கள் வளைப்பன போற், சக்கர யூகம் வகுத்திரதத் திடை சயமுற நின்றனனே - பாரதம் 13-ஆம் நாட்போர்-4.

† கூதளம் - முருகவேள் - கூதளம் அணிவது - பாடல்கள் 99, 960, 1137- பார்க்க.

‡ பூதம்பலை ஐந்தாய்.. வேறாயுடனானானிடம் வீழிம்மிழலையே - சம்பந்தர் 1-11-2.

× தேவியைக்கலைமகள், திருமகள் முதலானோர்போற்றுவது-பாடல்337 - அடி 5 - பார்க்க

(தொடர்ச்சி 9 ஆம் பக்கம் பார்க்க)

## 997.

வேதம்வல்ல பேரறிவாளனே! சாமியே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; வேலாயுதத்தைச் சிறப்புற ஏந்தும் மகா சூரனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்! போர்க்களத்தில் (வீமம்) அச்சம் தரக்கூடிய (சக்ர யூகாளா) சக்ர யூகம் - சக்கர வடிவாக அமைந்த படை வகுப்பை ஆண்டவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; (விந்துநாத) - சிவபிரானது நவபேத மூர்த்தங்களுள் அருவத் திருமேனியாம் - நாத விந்துவாம்-

வீரனே! தாமரையன்ன அழகுள்ள திருவடிகளை உடையவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்! நீலநிறத்துக் கூதளப்பூமாலையனே! (நீலோற்பலமும், நிரம்ப கூதளமும் எனவும் பொருள் கொள்ளலாம்) உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; மேக நிறம் கொண்டுள்ள மயில் வாகனனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன் - வெளியே சொல்லுதற்கில்லாத-

ஞான நிலையைக் கூடினவர்களின் ஞானப் பொருளே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; (மண், நீர், தீ, வாயு, விண் எனப்படும்) பஞ்சபூதங்களாய், பிறவாய் விளங்குபவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; பூரணப் பொருளாய் எல்லாமாய் வாழ்பவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; உயர்ச்சியும் பரிசுத்தமுமுள்ள-

மலைகளில் எல்லாம் வாழ்பவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; பன்னிரண்டு பெரிய தோளனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; ஆபரணங்கள் அணிந்த அழகிய மார்பனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; (வெள்ளைத்) தாமரையின்

மேலே வீற்றிருக்கும் (நாமாதோடு) சரஸ்வதியுடனே, (சேயிதழ்) - சிவந்த இதழ்களை உடைய செந்தாமரைமீது வீற்றிருக்கும் (ஏர் ஆர்) அழகு நிறைந்த (மா) இலக்குமியும், (புலோமசை) இந்திராணியும், வீரம் மிகுந்துள்ள சப்த மாதாக்களும், அவர்களுடன் (நீடினம்) கூடிநிற்கும் எல்லாத் தெய்வ மகளிரும் எதிரே நின்று நாள் தோறும்-

---

O சத்த மாதாக்கள் - அபிராமி, மகேசரி, கௌமாரி, நாராயணி, வராகி, இந்திராணி, காளி. (பிரமாணி, நாராயணி, மாயேசுரி, கௌமாரி, வராகி, உருத்திராணி, இந்திராணி - பிங்கலம்)

வேத வித்தகி வீமா விராகிணி
வீறு மிக்கமா* வீணா கரேமக
*மேரு வுற்றுவாழ் சீரே சிவாதரெ † யங்கராகீ,
ஆதி சத்திசா மாதேவி பார்வதி
நீலி துத்தியார் நீணாக பூஷணி
ஆயி நித்தியே கோமரி மாதவி யென்றுதாழும்
‡ ஆர்யை பெற்றசீ ராளா நமோநம
சூரை யட்டுநீள் பேரா நமோநம
ஆர ணத்தினார் வாழ்வே நமோநம தம்பிரானே (3)

## 998. வீண் பொழுது போக்காதிருக்க

தான தாத்தன தாத்தன தான தாத்தன தாத்தன
தான தாத்தன தாத்தன தனதானா

ஆவி காப்பது மேற்பத மாத லாற்புரு டார்த்தமி
தாமெ னாப்பர மார்த்தம துணராதே
ஆனை மேற்பரி மேற்பல சேனை போற்றிட வீட்டொட
நேக நாட்டொடு காட்டொடு தடுமாறிப்
பூவை மார்க்குரு காப்புதி தான கூத்தொடு பாட்டொடு
பூவி னாற்றம தாத்தன கிரிதோயும்
போக போக்யக லாத்தொடு வாழ்ப ராக்கொடி ராபபகல்
போது போக்கியெ னாக்கையை விடலாமோ;
தேவி பாராப்பதி சேர்ப்பர பாவ னார்க்கொரு சாக்ர அ
தீத நீகைஷுப ரீகைஷுக னறவோதுந்

---

*தேவி கையில் வீணை உண்டு. 'விபஞ்சி' எனப்படும் ஏழு தந்திகளை உடையது; கலைமகள் கையில் உள்ள வீணைக்கு ஒரு தந்தி இது. 'சுரவித்தை' எனப்படும்; திருமகள் கையில் உள்ளது 'வீணை' அது ? தந்திகளைக் கொண்டது. 'மூவகை - வகுத்த வீணை'- வில்லிபாரதம் 409 'அம்பன கரதலி' - திருப்புகழ் 137 'பண் கனிக்கும் குரல் வீணையும் கையும்'- அபிராமி அந்தாதி 70

(*) 'மேருமலையில் வாழ்பவளே' எனலுமாம் "ஸு - மேரு மத்ய ச்ருங்கஸ்த்தாயை" -லலிதா சஹஸ்ரநாமம்-55

† அங்க ராகம் - உடம்பிற் பூசும் பரிமளதிரவியம். 'அங்காரக மணியார மார்ப'- வில்லி பாரதம் - மணிமாலை 109

‡ 'ஆரியை - இதன் பொருள் உயர்ந்தோள் என்பது' ஆரியை சங்கிருதம். அஃது ஆரியை என்று பிராகிருதமாய்த் திரிந்தவாறு தக்கயாக 410 உரை

*[illegible] மங்கலியே! (விராகினி) பற்றற்றவளே! (வீறு) சிறப்பு நிரம்பி உள்ள அழகிய வில்லினைக் கையில் ஏந்தியவளே! [illegible] விளங்கும் [illegible] (சிறப்பை) உடையவளே! (சிவாத்மிரே) சிவனுடைய பாதித் [illegible] பங்கு கொண்டவளே! (அங்கராகி) பரிமள திரவியங்களைப் பூசியுள்ளவளே!*

*ஆதி சக்தியே! (சாமாதேவி) சாமவேதம் போற்றும் தேவியே! (அல்லது சாம நிறம் - பசுமை (பச்சை) நிறம் கொண்ட தேவியே!) பார்வதி! நீலியே! (நீல நிறத்தவளே); புள்ளிகள் நிறைந்த பெரிய பாம்புகளை அலங்காரமாக அணிந்தவளே! (ஆயி) தாயே! (நித்தியே) (என்றும் இருப்பவளே) அழிவிலாதவளே! (கௌமாரம்) எனப் புள்ள துர்க்காதேவி" என்று தோத்திரம் செய்து வணங்குகின்ற*

*மறையா தேவிபெற்ற சீராளனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன், சூரனை வதைத்துப் பெரும் புகழ் பெற்றவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; வேதம் கற்றவர்களின் செல்வமே! தம்பிரானே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்*

# 998.

*உயிரைக் காத்து உய்விப்பது மேலானதொரு (பதம்) பக்குவச் செயலாதலால் - தகுதியான செயலாதலால், புருஷார்த்தம் (அறம், பொருள், இன்பம், வீடு எனப்பட்ட) உறுதிப் பொருள்கள் இது ஆம் (எனா) என்று உணர்ந்து, (பரமார்த்தமது) மேலான உண்மைப் பொருளைத் தெரிந்து கொள்ளாமல்-*

*யானையின் மேலும், குதிரையின் மேலும், பல படைகள் போற்றி செய்ய, வீட்டிலும், பலநாட்டிலும், காட்டிலும் (உலவித்) தடுமாறுதல் உற்று*

*பூவைமார்க்கு - (மாதர் மயக்கில்) உருகி, புதிய புதிய கூத்துடனும் பாட்டுடனும் மலர்களின் நறுமணம் நீங்காத கொங்கை மலைகளில் தோய்கின்ற-*

*இன்பம் அனுபவிப்பதிலும், ஊடல்களிலும் வாழ்கின்ற (பாயக்கொடு) விளையாடல்களிலே இரவும் பகலும் பொழுதைப் போக்கி எனது உடலை விட்டுப்போதல் நன்றா? (நன்றன்று என்றபடி)*

*தேவி - பார்வதி சேர்கின்ற மேலான (பாவனார்க்கு) பரிசுத்த மூர்த்தியாம் சிவனுக்கு ஒப்பற்ற (சாக்கிர அதீத) - ஆன்மா தத்துவங்களை விட்டு நிற்கும் நிலைக்கு மேற்பட்டதான (தீக்ஷை பரிபாஷைகள்) உபதேசங்களையும், உபதேச விளக்கங்கள் முழுமையும் புகல*

தேவ பாற்கர நாற்கவி பாடு லாசஷண மோகஷதி
யாக *ராத்திகழ் †கார்த்திகை பெறுவாழ்வே
மேவி னார்க்கருள் தேக்கது வாத சாகஷஷ டாகஷர
‡மேரு வீழ்த்தப ராக்ரம வடிவேலா-
வீர ராக்கத ரார்ப்பெழ வேத தாகஷக Xனாக்கெட
வேலை கூப்பிட வீக்கிய பெருமாளே (4)

## 999. பரமார்த்தம் பெற

தான தாத்தன தாத்தன தான தாத்தன தாத்தன
தான தாத்தன தாத்தன தனதானா
○ஏக மாய்ப்பல வாய்ச்சிவ போக மாய்த்தெளி வாய்ச்சிவ
மீதெ னாக்குரு வார்த்தையை யுணராதே-
ஏழு பார்க்கும்வி யாக்கிரன் யானை னாப்பரி தேர்க்கரி
யேறு மாப்பிரு மாப்புட னரசாகித்.
தோகை மார்க்கொரு காற்றொலை யாத வேட்கையி னாற்கெடு
சோர்வி னாற்கொடி தாக்கையை யிழவாமுன்-
சோதி காட்ட **வ ராச்சுத நாத னார்க்கருள் போற்றிய
தூரி தாப்பர மார்த்தம தருள்வாயே;

---

*ரா இராத்திரி (நாமதீப. 553)

† கார்த்திகை பெறுவாழ்வு - "உவகையொடு கிர்த்திகையர் அறுவரும் எடுக்க அவர் ஒருவர் ஒருவர்க்கு அவன் ஓரோர் புத்ரன் ஆனவனும்.. வேடிச்சி காவலனே"- வேடிச்சி காவலன் வகுப்பு.

‡ மேரு = மலை; இங்கே க்ரவுஞ்சம்.

X நா = சொல். 'நம்பி நாவினுள் உலக மெல்லாம் நடக்கும்' சிந்தா 316.

○" ஒரு பொருளாய்ப் பலவுருவாய் ஒளியாகி ஆனந்த உண்மையாகி "- திருவுத்தர கோசமங்கைப் புராணம்.

'ஒன்றும் பலவுமாய வேடத்தொருவர்' சம்பந்தர் - 1-68-5

'ஏகன் அனேகன் இறைவனடி வாழ்க'- திருவாசகம் சிவபுராணம்

** குமாரக் கடவுள் ஸ்ரீ ஞானசம்பந்தராக வந்தபொழுது அச்சுதனுக்குச் சிவசாரூப்பியம் அளித்த வரலாறு குறிக்கப் பட்டது; வர அச்சுதன் எனப் பிரிக்க, "புகலூ கொண்டற்குச் சித்திய‌ளிக்கும் பெருமாளே." என்றார் 458-ஆம் பாடலிலும். பாடல் 458-பக்கம் 27 பார்க்க. தணிகையில் நாரணற்கு முருகவேள் அருளினார் பாடல் 832 பக்கம் 446-கீழ்க்குறிப்பு

தேவனே! (பாற்கர) - (ஞான) சூரியனே! (ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் எனப்படும் நால்வகைக் கவிகளையும் (சம்பந்த மூர்த்தியாய்ப்) பாடின (லக்ஷணம்) அழகுவாய்ந்தவனே! (மோக்ஷ தியாக) வீடுபேறு அளிக்கும் கிருபாமூர்த்தியே! (ரா) இரவில் (திகழ்) விளங்கும் (கார்த்திகை) கார்த்திகை மாதர்கள் பெற்ற செல்வமே!

விரும்பி உன்னை அடைந்தவர்க்கு அருள் நிரம்ப வழங்கும் (துவாதச அக்ஷ) பன்னிரு கண்களை உடையவனே! (ஷடாக்ஷர) - ஆறு திருவெழுத்துக்கு உரிய மூர்த்தியே! கிரவுஞ்ச மலையை அட்ட பராக்ரமசாலியே! கூரிய வேலாயுதனே!

வீரனே! அசுரர்களின் (ஆர்ப்பு எழ) அலறுங் கூச்சல் எழவும், வேதநாக்ஷகன் - வேதத்தலைவனாம் பிரமனது (நா) சொல், (கெட) ஒடுங்கவும் (பொருள் கூறத் தெரியாது மயங்கிப் பேசுதற்கு இலாது சிறையிற்படவும்), வேலை கூப்பிட - கடல் ஓலமிட்டுக் கலங்கவும், (வீக்கிய) (வேலாயுதத்தை) வேகமாகச் செலுத்தின பெருமாளே!

(பொது போக்கி என் ஆக்கையை விடலாமோ)

## 999.

ஒன்றாகிப், பலவாகிச், சிவாருபமாய்த், தெளிவுப் பொருளாய்ச், (சிவம்) மங்கலப் பொருளாயுள்ளது இதுவே என்று, குரு செய்த உபதேசத்தை நான் உணர்ந்து அதன்படி ஒழுகாமல்-

ஏழுலகுக்கும் புவி நானே என்று, குதிரை, தேர், யானை இவற்றின் மீது ஏறும் (மாப்பு) மிகுந்த (இறுமாப்புடன்) செருக்குடனே அரசாட்சியை வகித்து-

மாதர்களிடத்தே (ஒருகால்) ஒருபோதும் நீங்காத காம இச்சையினால் அழிவைத்தரும் தளர்ச்சியால் தீயவழியிலே (இந்த) உடலை நான் இழப்பதற்கு முன்பாக-

ஒளிவளர் உண்மையை அடியேனுக்குக் காட்ட அடியேன் கண்டுணர - (நீ சம்பந்தப் பெருமானாய்) (வர அச்சுதனார்க்கு) - (சிவ சாருபம் வேண்டி) வரம் கிடந்த - தவம் புரிந்திருந்த திருமாலுக்கு அருள் பாலித்ததும், (தூரிதா) தூரமான- எட்டாததுமான - மேலான பொருளை உபதேசித்தருளுக.

*நாக மேற்றுயில் வார்க்கய னான பேர்க்கரி யார்க்கொரு
ஞான வார்த்தையி னாற்குரு பரனாய-
நாத நாட்டமு றாப்† பல காலும் வேட்கையி னாற்புகல்
நாவ லோர்க்கரு ளாற்பத மருள்வாழ்வே.
வேக மேற்கொ ளராப்புடை தோகை மேற்கொடு வேற்கொடு
வீர ‡மாக்குலை யாக்குல வரைசாய-
மேலை நாட்டவர் பூக்கொடு வேல போற்றியெ னாத்தொழ
வேலை கூப்பிட வீக்கிய பெருமாளே (5)

## 1000. வாழ்வுற

தான தந்தன தானா தானன
தான தந்தன தானா தானன
தான தந்தன தானா தானன தனதானா

தோடு மென்குழை யூடே போரிடு
வானெ டுங்கயல் போலே யாருயிர்
சூறை கொண்டிடு வேல்போ லேதொடர் விழிமாதர்
சூத கந்தனி லேமா லாயவர்
ஓது Xமன்றறி யாதே யூழ்வினை
சூழும் வெந்துய ராலே தானுயிர் சுழலாதே,
ஆடு வெம்பணா ○கோகோ நாசன
மூறு கண்டிட மேல்வீழ் தோகையி
லாரும் வண்கும ரேசா ஆறிரு புயவேளே-
ஆரு நின்றரு ளாலே **தாடொழ
ஆண்மை தந்தருள் வாழ்வே ††தாழ்வற
ஆதி தந்தவ நாயேன் வாழ்வுற அருள்வாயே;

---

*சிவபிரான் அரி அயற்கு அரியனாய் நின்றது

'யானே பரம்' என்று பிரமனும் திருமாலும் தருக்கித்துப் போர் செய, அவர்களின் நடுவே எரி பிழம்பாய்ச்சிவபிரான் நிற்க திருமால் பன்றியாய்ப் பூமியெலாம் தோண்டிச் சென்றும், பிரமன் அன்னமாய் விண்ணெலாம் பறந்து சென்றும் அந்த ஜோதியின் அடியையும் முடியையும் காண முடியாதவராய் அலைந்தனர் அங்ஙனம் அவர்களால் அண்ண (எட்ட) முடியாதவரே அண்ணா மலையார்

(தொடர்ச்சி 16 ஆம் பக்கம் பார்க்க)

பாம்பணைமேல் துயிலும் திருமாலுக்கும், அயன் எனப்பட்ட பிரமனுக்கும் எட்டுதற்கு அரியவரான சிவபெருமானுக்கு ஒரு ஞானோபதேசம் செய்த காரணத்தால் குருமூர்த்தியாய் விளங்கின

நாதனே (தலைவனே)! (நாட்டம் உறா) - நாட்டம் வைத்து (தமது விருப்பத்தை - கருத்தை - வைத்து) பல பொழுதும் (எப்பொழுதும்) ஆசை கொண்டவராய் (உன்னைப்) புகலும்- உன் நாமங்களைச் சொல்லிப் போற்றும் நாவலோர்க்கு - புலவர்க்குத் திருவருள் பாலித்து (உனது) திருவடியை அருள்கின்ற செல்வனே!

வேகத்தை மேற்கொண்ட பாம்பைத் துவைக்கும் மயில் மீது ஏறி, வேலாயுதத்தால் வீரம் பொருந்திய மாமரமாய் நின்ற சூரனைக் (குலைத்து) - அழித்துக், குலவரை - சிறப்புற்றிருந்த கிரௌஞ்சகிரி சாய்ந்தழியவும்,

விண்ணுலகத்துத் தேவர்கள் (பொற்) பூமாரி பொழிந்து வேலாயுதமூர்த்தியே போற்றி' எனக் கூறித் தொழவும், கடல் கலங்கி ஒலி செய்யவும் (வேலைச்) செலுத்தின (அல்லது பூங்கழல் காட்டின) பெருமானே!

(பரமார்த்தம தருள்வாயே)

## 1000.

தோடும், மெல்லிய குழையும் அணிந்துள்ள காதினிடத்தே போர் செய்யும் ஒளி பொருந்திய, நீண்ட கயல்மீன் போல விளங்கி, அரிய உயிரையும் கொள்ளை கொள்ளும் வேல்போலப் பாய்வதான கண்களை உடைய மான்போன்ற மாதர்களின் (வேசையர்களின்)

வஞ்சம் நிறைந்த உள்ளத்தினிடத்தே மோகம் கொண்டவனாய், அவர்கள் பேசுகின்ற (அன்று) விரோதச் சொற்களின் உண்மை நிலையை) அறியாமல், தலைவிதி சூழ்ந்து தருகின்ற கொடிய துன்பத்தாலேயே (என்) உயிரானது சுழன்று சஞ்சலம் உறாமல்

ஆடும் கொடிய படத்தை உடைய பாம்பாகிய உணவை (ஊறு கண்டிட) துன்பம் செய்ய அதன் மேற் பாய்ந்து விழுகின்ற மயில் (வாகனத்தில்) நிறைந்து விளங்கும் வளப்பம் - வாய்ந்த குமரேசனே! பன்னிருபுயம் கொண்ட செவ்வேளே!

யாரும் உன்னை வணங்கி நின்று உனது அருளால் உன் திருவடியைத் தொழ அவர்களுக்கு (ஆண்மை) மனோதிட வெற்றியைத் தந்தருளும் செல்வனே! (தேவர்களுக்குச் சூரனால் உற்ற) தாழ்வு - இழிவான நிலை ஒழிவதற்கு வேண்டி ஆதிமூர்த்தியாகிய சிவபெருமான் தந்தருளிய பெருமானே! நாயேன் - அடியேன் நல்வாழ்வு பெற அருள்புரிவாயாக.

ஒடு வெங்கதி ரோடே சோமனு
மூழி யண்டமும் லோகா லோகமு
மூரு மந்தர நானா தேவரு மடிபேண-
•ஊழி டம்புயன் †வேலா வாலய
மூடு தங்கிய மாலா ராதர
வோத வெண்டிரை சூர்மார் பூடுற விடும்வேலா
‡வேடு கொண்டுள வேடா ×வேடைய
வேழ வெம்புலி போலே வேடர்கள்
மேவு திண்புன மீதே மாதொடு மிகமாலாய்-
மேக மென்குழ லாய்நீ கேளினி
வேறு தஞ்சமு நீயே யாமென
○வேளை கொண்டபி ரானே வானவர்
பெருமாளே (6)

---

(14ஆம் பக்கம் தொடர்ச்சி)

"மணிகொண்ட நெடுங்கடலில் விழிவளரு மாதவனும்
அணிகொண்ட புண்டரிகம் அகலாத சதுமுகனும்..
காணரிய ஒருபொருளாய்க் களங்கமற விளங்கு பெரும்
சோணகிரி எனநிறைந்த சுடரொளியாய் நின்றருள்வோய்"

- அருணைக் கலம்பகம் பாடல் 319-பக்கம் 292 - குறிப்பு.

† பேரும் பொழுதும் பெயரும் பொழுதும் பெம்மானென் றாருந்தனையும் அடியாரேத்த அருள் செய்வார்'- சம்பந்தர் 2-60-2

‡ மா = மாமரமாய் நின்ற சூரன் X அன்று = விரோதச்சொல்

○ காகோதம் = காகோதரம் - பாம்பு, காகோத அசனம் = பாம்பாகிய உணவு.

** இறைவனை வழிபட ஆண்மை பிறக்கும். "துணிவுடையவர் .. மணிமிடறனதடி யிணை தொழுமவரே"- சம்பந்தர் 1-125-4

†† "விண்ணோர் முறைக் கிரங்கி ஐந்துமுகத்தோ டதோ முகமுந்தந்து . தீப்பொறி ஆறுய்ப்ப"- கந்தர் கலி வெண்பா,

"அமரர் சொல்வார் யாமெலாம் இந்நாள் காறும், வன்றிறல் அவுணர் தம்மால் வருந்தினம் அதனை நீங்கி.. ஆக்கம் நண்ணுவான் . நின்பால்.. வரம் வேண்டுற்றாம்" ... ஒரு குமரன் தன்னை நீ தரல் வேண்டும்... நின்னையே நிகர்க்க என்றார்.

(தொடர்ச்சி 17 ஆம் பக்கம் பார்க்க)

(நித்தமும்) ஓடிக் கொண்டிருக்கின்ற வெப்பமுள்ள சூரியனுடனே (சோமனும்) சந்திரனும், ஊழிகாலம் வரையும் அழியாத அண்டங்களும், பல உலகங்களும் (அங்குள்ள) ஊரார்களும், (அந்தரம்) விண்ணில் உள்ள பலவகையான தேவர்களும் திருவடியைப் போற்றி விரும்ப

ஊழிடு (அவரவர்க்கு) விதியை விதிக்கின்ற (அம்புயன்) பிரமனும், கடலிடையே தங்கியிருக்கின்ற (மால்) திருமாலும் ஆதரவு ஓத - உனது அன்பும் உதவியும் வேண்டு மென்று உன்னிடம் முறையிட்டுச் சொல்ல, வெண்ணிறத்து அலைவீசும் கடலிடையே நின்ற சூரனுடைய மார்பினுள் உருவும்படி வேலாயுதத்தைச் செலுத்தினவனே!

வேடனைப் போல வேடம் கொண்டவனே! கொடுமை வாய்ந்த யானை போலவும், கொடிய புலி போலவும் இருந்த வேடர்கள் குடியிருந்த திண்ணிய (தினைப்) புனத்தில் இருந்த (மாது) வள்ளியிடம் அதிக மோகம் கொண்டவனாய்-

"கருமேகம் போன்ற மெல்லிய கூந்தலை உடையவளே! நீ கேட்பாயாக; இனிமேல் (எனக்கு வேறு) - தனியான - ஒப்பிலாத- (தஞ்சமும்) பற்றுக்கோடாய் - புகலிடமாய் உள்ளவளும் நீயே ஆவாய்" என்றுகூறி (வேளை கொண்ட) அந்த மாதினிடம் காத்திருந்து காவல் கொண்டு பொழுது போக்கின தலைவனே! தேவர்கள் பெருமாளே!

(நாயேன் வாழ்வுற அருள்வாயே)

---

'வந்திக்கும் மலரோ னாதி வானவர் உரைத்தல் கேளாப்
புந்திக்கு ளிடர் செய் யற்க புதல்வனைத் தருதும் என்னா
அந்திக்கு நிகர் மெய் யண்ணல் அருள்புரிந் தறிஞ ராயோர்
சிந்திக்குந் தனது தொல்லைத் திருமுகம் ஆறும் கொண்டான்'

- கந்தபுரா 1-11-40-43

---

* ஊழ் இடு அம்புயன் - பிரமதேவன் விதிவிதிப்பை 'அக்ஷர தேவி கோவின் விதிப்படி' என்றார் 1204- ஆம் பாடலில்; அக்ஷர தேவி கோ - சரஸ்வதியின் தலைவன் - (பிரமன்).

† வேலாவலயம் = கடல். ‡ வேடனைப்போல் வேடங் கொண்டவனே! பாடல் 994-பக்கம் 876. கீழ்க்குறிப்பு பார்க்க.

X வேடை = கொடுமை.

O வேளை கொண்ட பிரானே - வேளைக்காரன் - பொருள் பாடல் 166 - பக்கம் 387, பாடல் 624 பக்கம் 451-பார்க்க.

## 1001. வினைதீர

தான தந்தன தானா தானன
தான தந்தன தானா தானன
தான தந்தன தானா தானன தனதான

நாலி ரண்டித ழாலே கோலிய
ஞால முண்டக மேலே *தானிள
ஞாயி றென்றுறு கோலா காலனு மதின்மேலே

ஞால முண்டபி ராணா தாரனும்
யோக மந்திர மூலா தாரனு
நாடி நின்றப்ர பாவா காரனு நடுவாக;

மேலி ருந்தகி ரீடா பீடமு
நால நிந்தம ணிமா மாடமு
மேத கும்ப்ரபை கோடா கோடியு மிடமாக

வீசி நின்றுள தூபா தீபவி
சால மண்டப மீதே யேறிய
வீர பண்டித வீரா சாரிய வினைதீராய்;

ஆல கந்தரி மோடா மோடிகு
மாரி பிங்கலை நானா தேசிய
மோகி மங்கலை லோகா லோகியெ வுயிர்பாலும்

ஆன சம்ப்ரமி மாதா மாதவி
ஆதி யம்பிகை ஞாதா வானவ
† ராட மன்றினி லாடா நாடிய அபிராமி,

---

*இள ஞாயிறு - செம்பொன் நிறம். 'செம் பொனின் மேனியனாம் பிரமன்'- சம்பந்தர் 1-107-9.

† ஆடக மன்று - ஆட மன்று எனக் குறுகிற்று எனக் கொண்டால் 'பொன்னம்பலம் எனப் பொருள்படும்.

# 1001.

(நாலிரண்டு இதழாலே) ஆறிதழ்க்கமலமாய்க் (கோலிய) வகுத்து அமைக்கப்பட்டுள்ளதான ஞால முண்டக மேலே - ஞாலம் அம் முண்டக மீதே - தொங்கிப் பொருந்தியுள்ள அந்தத் தாமரையின் மேல் - சுவாதிஷ்டானம் எனப்படும் ஆதார ஸ்தானத்தே (இளஞாயிறு) உதிக்கும் செஞ்ஞாயிறு என்று சொல்லும்படியான செம்பொன் நிறமுள்ள (கோலா கலனும்) ஆடம்பரம் - சம்பிரமம் உள்ள பிரமனும், அந்த ஆதாரத்தின் மேல் நிலையிலே-

பூமியை உண்டவரும், உயிர்களைக் காக்கும் தொழிலைக் கொண்டவரும் (ஆதாரனும்) மணி பூரகம் எனப்படும் ஆதார ஸ்தானத்தில் உள்ளவருமான திருமாலும், யோகமந்திர மூலாதாரனும் - யோகத்துக்கும் மந்திரங்களுக்கும் மூல ஆதார ஸ்தானமாகிய இருதய கமலத்தே - அனாகதம் எனப்படும் ஆதார ஸ்தானத்தே உள்ள ருத்ர மூர்த்தியும் - (ஆக மூவரும்) விரும்பித் தேடிநிற்கும் (ப்ரபா ஆகாரனும் அல்லது ப்ரபாவ ஆகாரனும் - ஒளியும் மேன்மையும் கொண்ட உருவத்தனாய்ப் புருவ மத்ய ஸ்தானத்தில் உள்ள சதாசிவ மூர்த்தியும் நடுநிலைகளில் வீற்றிருக்க -

இவர்களுக்கு மேலான நிலையில் இருந்த கிரீடா பீடமும் க்ரீடைகளுக்கு (உனது) லீலைகளுக்கு வேண்டிய இருப்பிடமும், (சாத்திர) நூல்கள் 'இறைவன் வீற்றிருக்கும் ஸ்தானம் இது' என்று அறிந்து கூறுவதுமான ரத்னமயமான அழகிய (மாடமும்) மண்டபமும் ஆன, மேன்மை வாய்ந்த (ப்ரபை) ஒளி (கோடா கோடியும்) கோடா கோடிக்கணக்காய் (பெருங்கணக்காய்) விளங்கும் இடமே - உனது) இடமாகக் கொண்டும் -

வீசி நின்று காட்டப்படும் தூபதீபங்கள் விளங்கும் விசாலமான மண்டபத்திலே ஏறி அமர்ந்துள்ள வீர பண்டிதனே! வீர ஆசாரியனே! எனது வினைகளை ஒழித்தருளுக;

விஷம் பொருந்திய கழுத்தை உடையவள், (மோடா மோடி) ஆடம்பரமுள்ள துர்க்கை (காடுகாள்), குமாரி (மூப்பு இலாதவள்), (பிங்கலை) பொன்னிறத்தவளாம் 'காகினி, பல வித ஒளிகளில் ஆசை பூண்டவள் (அல்லது - பல ஒளியினள் - (அமோகி) ஆசை அற்றவள்), (மங்கலை) என்றும் சுமங்கிலி, (லோகா லோகி) எல்லா உலகங்களையும் ஈன்று புரப்பவள், எல்லா உயிர்களிடத்தும்-

அன்பு வைத்துள்ள பெருமிதம் உடையவள், தாய் மாதவி (துர்க்கை), ஆதி நாயகி, அம்பிகை, (ஞாதா ஆனவர்) எல்லாம் அறிந்த இறைவன் நடிக்க, (அவருடன்) அம்பலத்தே ஆடி விரும்பின அழகி-

கால சங்கரி சீலா சீலித்ரி
சூலி மந்த்ரச பாஷா பாஷணி
காள கண்டிக பாலீ மாலினி கலியாணி-
காம தந்திர *லீலா லோகினி
† வாம தந்திர நூலாய் வாள்சிவ
காம சுந்தரி வாழ்வே தேவர்கள் பெருமாளே.(7)

## 1002. ஆதிக்க

தானன தந்தன தாத்தன தானன தந்தன தாத்தன
தானன தந்தன தாத்தன தனதான

போதிவி ருந்துவி டாச்சதுர் வேதமொ ழிந்தவ
னாற்‡புளி
னாகமு கந்தவ னாற்றெரி வரிதான-
போதுயர் செந்தழ லாப்பெரு வானநி றைந்த Xவிடாப்புக
ழாளன ருஞ்சிவ கீர்த்திய னெறிகாண,
ஆதர வின்பருள் மாக்குரு நாதனெ னும்படி போறறிட
ஆனப தங்களை நாக்கரு திடவேயென்-
ஆசையெ னும்படி மேற்கவி பாடுமி தம்பல பார்த்தடி
யேனும நிற்துனை யேத்துவ தொருநாளே;
காதட ரும்படி போய்ப்பல பூசவி டுங்கய லாற்கனி
வாயித ழின்சுவை யாற்பயில் குறமாதின்-
காரட ருங்குழ லாற்கிரி யானத னங்களி னாற்கலை
மேவும ருங்கத னாற்செதி O குழையோலை.

---

* லீலா + ஆலோகினி. ஆலோகம் - பார்வை - லீலைகளை நடத்திப் பார்ப்பவள்.

† வாம தந்திர நூலாய்வாள் - பாடல் 943 - பக்கம் 712 கீழ்க்குறிப்பு †பார்க்க.

‡ புள்ளின் ஆகம் உகந்தவன் = கருட வாகனத்தை விரும்பிய விஷ்ணு.

X விடாப் புகழாளன் - சிவன். "எங்கும் எங்கள் பிரானார் புகழல திகழ்பழி யிலரே" - சம்பந்தர் 2-91-1.

O முருகவேள் தாம் வள்ளிக்கு அடிப்பட்ட வழியடிமை - என எழுதித்தந்த சாசனம் - இரு வகைத்து; ஒன்று யாவரும் காணும் படி மேரு மலையில் - கற்பொறியாக-எழுதிவைத்தது இதனை

(தொடர்ச்சி 22 ஆம் பக்கம் பார்க்க)

யமனைச் சங்கரித்தவள், பரிசுத்த தேவதைகளுக்குள் மிகப் பரிசுத்தமானவள், முத்தலைச் சூலத்தை ஏந்தியவள், மந்திரங்களின் நல்ல சொற்களைப் பேசுபவள், (காளகண்டி) கறுத்த நீலநிறக் கழுத்தை உடையவள், கபாலத்தை ஏந்தியவள், (மாலினி) மாலையை அணிந்தவள் (அல்லது அக்ஷரங்களின் தெய்வமாக இருப்பவள்), (நித்ய) கல்யாணி-

காம சாத்திரம் கூறும் லீலைகளை லோகத்தில் நடத்தி வைப்பவள், (வாம தந்திர நூல்) சத்தி உபாசனை முறையைக் கூறும் ஆகம நூலால் ஆராயப்பட்டவள், ஆகிய சிவகாம சுந்தரியாம் பார்வதியின் செல்வமே! தேவர்கள் பெருமாளே!

(வினை தீராய்)

## 1002.

(போதில்) தாமரைப் பூவில் வீற்றிருந்து அதனை விட்டு நீங்காதவனும், அல்லது விடாது - எப்போதும், நான்கு வேதங்களையும் சொன்னவனுமான பிரமாவினாலும் கருட வாகனத்தை விரும்பின திருமாலாலும் அறிதற்கு அரியதான வகையில்-

(தக்க) சமயத்தில் அவர்கள் இருவரும் மிகவும் மாறுபட்டுப் பொருத அந்தப் போதினில் - சமயத்தில்) உயர்ந்தெழுந்த செவ்விய தீப்பிழம்பாகிப் பெருத்த வானம் எல்லாம் நிறைவுற்று நின்ற நீங்காத புகழ் பெற்றவனான அரிய 'சிவன்' எனக் கீர்த்தி பெற்றவனான ஈசன் - உண்மை நெறியைத் தான் காண - காணும் பொருட்டு-

அன்பையும் இன்பத்தையும் ஊட்டின சிறந்த 'குருநாதன்' என்னும் வகையில் (உன்னைப்) போற்றி செய்ய இருந்த (உனது) திருவடிகளை (என்னுடைய நா - (எண்ணித்) துதித்திட, எனது-

ஆசை (உன்னை) எண்ணியபடியே, எண்ணிய வகையிலேயே (அல்லது உன்னைக் கருதுதற்கு) உன்மேல் (கவிகள்) பாடல்கள் பாடும் (இதம்பல) இன்ப நிலையைப் பார்த்து அறிந்து, அடியேனும் (உன்னை) அறிந்து எத்துவது (போற்றும்படியான) ஒரு நாள் எனக்குக் கிட்டுமா!

காதை நெருக்குவது போல அதன் (அருகிலே) போய், பல (பூசல்களை) (கலாங்களை விளைவிக்கின்ற) சச்சரவுகளைச் செய்கின்ற கயல்மீன் போன்ற கண்ணையும், கொவ்வைக்கனி போன்ற வாயிதழின் இனிய சுவையையும் நிரம்பக் கொண்ட (குறமாது) வள்ளியின்-

கருமை நிறைந்த கூந்தலாலும், மலைபோன்ற கொங்கையாலும் ஆடை (அல்லது மேகலை) அணிந்துள்ள இடையினாலும், நெருங்கப் பொருத்தியுள்ள (உன்) காதோலையே-

சாதன மென்றுரை டாப்பரி தாபமெ னும்படி வாய்த்தடு
மாதிம னந்தன ராத்தனி திரிவோனே-
சாகர மன்றெரி யாக்கொடு சூரகு லும்படி யாத்திணி
வேலையு ரம்பெற வோட்டிய பெருமானே (8)

## 1003. முருகன் பெருமையை உணர

தானன தந்தன தாத்தன தானன தந்தன தாத்தன-
தானன தந்தன தாத்தன தனதான

வேடர்செ முந்தினை காத்திதன் மீதிலி ருந்தபி ராட்டிவி
லோசன அம்புக ளாற்செயல் தடுமாறி-
மேனித ளர்ந்துரு காப்பரி தாபமு டன்புன மேற்றிரு
வேளைபு குந்தப ராக்ரம மதுபாடி
நாடறி யும்படி கூப்பிடு *நாவலர் தங்களை யார்ப்† பதி
னுறுல கங்களு மேத்திய இருதாளில்-
நாறுக டம்பணி யாப்‡ பரி வோடுபு கந்தப ராக்ரம
நாடஅ ருத்தவம் வாய்ப்பது மொருநாளே

(20 ஆம் பக்கம் தொடர்ச்சி)

'வேடுவர் சிறுமி ஒருத்திக்கு யான் வழியடிமை எனச்செப்பி

(யாவரும்) அறிய மேருவில் மிகவும் எழுத்திட்ட" சாசனம் என்றார் பாடல் 1199-ல்; இது "Public Registry" ஆகும்; பிறிதொன்று மூல பத்திரம் - அதை எழுதின இடம் - வள்ளியின் காதோலையில் -

இது "Original document in personal custody" வள்ளியின் கையகத்துள்ள மூல பத்திரம் ஆகும் இதுவே இந்த 1002-ஆம் பாடலில் கூறப்பட்ட "குழை ஓலை சாதனம்"

- அருணகிரி நாதர் வரலாறு - பக்கம் 136 பார்க்க.

---

*'நாவலர் தங்களி யாப்பதி'- என்றும் பாடம் - நாவலர்களுடைய மகிழ்ச்சிக் கிடமாய் எனப் பொருள்படும்.

ஆர் பதினாலுலகம் - நிறைந்த - பதினாலுலகம் எனலுமாம்; அப்போது நாவலர் தங்களைப் பரிவோடு புரந்த - எனக்கூட்டவும்.

இங்ஙனம் வள்ளிக்காக முருகவேள் காட்டிய பராக்ரமத்தைப் பாடி நாடறியும்படி கூப்பிட்ட நாவலர் அருணகிரியாரே - அவரே 'மேதகு குறத்தி திரு வேளைக்காரனே' என்று வள்ளி வேளைக்காரன் வகுப்புப் பாடியும், 'மலைக்குறவர் பரவிய புனத் திதணில் மயிலென இருக்குமொரு வேடிச்சி காவலனே' என்று வேடிச்சி (வள்ளி) காவலன் வகுப்புப் பாடியும் - " பெருத்த பாருளீர்! மலை மருவுடைய புனத்தி வளருமிரு குன்ற மொத்தி வலி குடி புகுந்திருக்கு மார்பினான் - மயிலையும் அவன் திருக்கை

(நான் உனக்கு அடிமை என்று [illegible] அவ்வாறு பத்திரமாம் - என்று கூறிப், பரிதாபம் [illegible] என்று சொல்லும்படியான நிலையை அடைந்து, பேச்சும் தடுமாற்றம் அடைந்து, மனமும் சோர்வு அடைந்து திரிந்தவனே!

கடல் அன்று எரிந்து கொந்தளிக்கும்படியாக கொடிய சூரர்களாம் அசுரர்கள் மடிந்து சிதறும்படியாக, கூர்மை வாய்ந்த வேலாயுதத்தைச் (சூரனுடைய) உரம் பெற மார்பிலே அழுந்தும்படி (அல்லது) பலமாக வேகமாகச் செலுத்தின பெருமாளே! (உனை ஏத்துவது ஒருநாளே)

## 1003.

வேடர்களுடைய செழுமை வாய்ந்த தினைப்புனத்தைக் காத்து (அங்கு) இதண் (பரண்) மீதில் இருந்த தேவி வள்ளியின் கண்களென்னும் அம்புகள் (பாய்வதால்), செயல் தடுமாறி - வள்ளியை வசப்படுத்த இன்னது செய்வதென்று அறியாமல் தடுமாற்றமுற்று-

மேனிசோர்வடைந்து, மனம் உருகி, பரிதபிக்கத்தக்க நிலையில் (அவளிருந்த) தினைப்புனத்தின் அருகே திருவேளை புகுந்த (தக்க சமயம் பார்த்துச் சென்ற) உனது பராக்ரமத்தை (திறமையை) பாடல்களில் அமைத்துப் பாடி-

உலகிலுள்ளோர் (உனது கருணையை) அறிந்து உய்யும்படி (தங்கள் கவிகளின் மூலமாய்) ஒலமிட்டு உரைக்கின்ற நா வல்ல புலவர்கள் தங்களுடைய களை (பிறவி அலுப்பு) ஆர் (நீங்கி திருப்தி அடையும்) உனது இருதாளில் - அல்லது - (நாவலர் தங்களை - நாவல்ல புலவர்களை - (ஆர்) ஆர்த்தும் - கட்டி வசீகரிக்கும் உனது இருதாளில், பதினாலுலகங்களும் போற்றும் உனது இருதாளில்

நறுமணம் வீசும் கடப்பமாலையை அணிந்து அன்புடனே, (ஆன்மாக்களை) (அல்லது மேற்சொன்ன நாவலர்களைப்) புரந்த - காக்கின்ற (உனது) பராக்ரமத்தை (திறமையை) நாட - ஆய்ந்தறிய வேண்டிய அருமைத் தவச்செயல் அடியேனுக்குக் கூடும்படியான ஒருநாள் கிட்டுமா (கிடைக்க வேண்டும் என்றபடி)

---

அயிலையும் அவன் கடைக்கண் இயலையும் நினைந்திருக்க வாருமே'- என்று நாடறியும்படி கூப்பிட்டும் பாடி மகிழ்ந்தவர்.

† இறைவன் திருவடி "இரு நிலத்தார் இன்புற்றங் கேத்தும் அடி." அப்பர் 6-6-5.

‡ முருகவேள் பரிவோடு உலகைப் புரத்தல்-

" சேவலங் கொடியோன் காப்ப ஏம வைகல் எய்தின்றால் உலகே"- என்பது குறுந்தொகை - கடவுள் வாழ்த்து.

*ஆடக மந்தர நீர்க்கசை யாமலு ரம்பெற நாட்டியொ
ராயிர வெம்பகு வாய்ப்பணி கயிறாக-
ஆழிக டைந்தமு தாக்கிய நேகர்பெ ரும்பசி தீர்த்தரு
ளாயனு மன்றெயில் தீப்பட அதிபார;
†வாடைநெ டுங்கிரி கோட்டிய வீரனு ‡மெம்பர மாற்றிய
வாழ்வென வஞ்சக ராக்ஷதர் குலமாள-
வாசவன் வன்சிறை மீட்டவ ஞருமடங்கலு மீட்டவன்
வானுல குங்குடி யேற்றிய பெருமாளே (9)

## 1004. பிறவி மாயை அற

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

இலகி யிருகுழை கிழிகயல் விழியினு
மிசையி னசைதரு மொழியினு மருவமர்
இருள்செய் குழலினு மிடையினு நடையினு மநுராக-
இனிமை தருமொரு இதழினு நகையினு
மிளைய ம்ருகமத தனகுவ டழகினு
மியலு மயல்கொடு துனிவது பணிவது தனியாதே.

---

*கடல் கடைந்த விவரம் - பாடல் 509 பக்கம் 162 கீழ்க்குறிப்பு - கயிறு - வாசுகி என்றும் கூறுவர்; ஆதி சேடன் என்றும் கூறுவர்.

"நிரைகதிர்க் குளிர்மதி தறியென நிறுவி
நெடுகிய மந்தரம் மத்தென நாட்டி
உரைதகு வாசுகி கயிறெனப் பூட்டி
ஒளிர்மணிப் பாற்கடல் கொறுகொறு என்ன
வரைவலம் இடம்திரி தரக்கரம் நீட்டி
வாங்கினர் கடைந்தனர்'- தணிகைப் புராணம் - நாகம் 3.

"மாயன் உவந்தவ ரோடெழீஇத்
தீதில் பாற்கடற் றீரத்திற் சென்று மத்
தீதெ னாமந் தரத்தை யிருத்தியப்
போது நாம்பெனப் பூட்டினன் சேடனை"-
தணிகாசல புராணம் - சேடன் 4

† சிவபிரான் மேருச்சிலை கொடு திரிபுரம் எரித்தது - பாடல் 285-பக்கம் 206 கீழ்க்குறிப்பு.

‡ பரம் = பரத்வம் - 'உம்பர்களாயவர் தங்களைப் பரங்

பொன்மயமான மந்தரமலையை (நீர்க்கு) கடல் நீரிலே அசையாதபடி பலமாக (மத்தாக) நாட்டி - பொருத்திவைத்து ஒப்பற்ற ஆயிரக்கணக்குள்ள கொடிய தடிய பிளப்புள்ள, நாக்குகளையுடைய பாம்பாகிய ஆதிசேடனை (மத்தின்) கயிறாகச் சுற்றிக்

கடலைக் கடைந்து அமுதத்தை வரவழைத்து அனேக (தேவர்களுடைய) பெரியபசியை நீக்கி அருளின ஆயன்) திருமாலும், முன்பு முப்மதில்களும் தீயிலழிய அதிகபாரமான தும்

(வாடை) வடக்கேயுள்ளதுமான பெரிய மேருமலையைக் (கோட்டிய) (வில்லாக) வளைத்த வீரனாகிய சிவபிரானும்

'எம்பரம் மாற்றிய வாழ்வு' எங்களுடைய பரத்துவத்தை மாற்றின - அதாவது எங்களுக்கும் மேற்பட்ட பரத்வத்தை உடைய (வாழ்வு என) செல்வன் என்று (போற்றவும்), அல்லது எங்கள் பரம் - பாரத்தை - மாற்றிய - நீக்கின - வாழ்வு என்று போற்றவும்) வஞ்சக அரக்கர்களின் கூட்டம் அழியவும்

இந்திரனை வலிய சிறையினின்றும் மீட்டும், அவன் ஊராகிய பொன்னுலகமும் (அடங்கலும்) மற்றும் அவனுக்கிருந்த செல்வங்கள் யாவற்றையும் மீட்டுத் தந்தும், அவனுடைய விண்ணுலகத்தில் தேவர்களைக் குடியேற்றின பெருமாளே.

(அருந்தவம் வாய்ப்பதும் ஒரு நாளே!)

## 1004.

விளங்குகின்ற இரு காதிலுள்ள குழைகளைக் கிழித்துத் தாக்கும் கயல்மீன் போன்ற கண்ணிலும், இன்னிசை போல அசைந்து எழும் பேச்சிலும், (மரு) வாசனையுள்ள இருண்ட கூந்தலிலும், இடையிலும், நடையிலும், காம இச்சையைத் தரும்

இனிப்புள்ள சுவையைத் தருகின்ற ஒப்பற்ற வாயிதழிலும், நகையிலும் - பல்வரிசையிலும் அல்லது சிரிப்பிலும் இளம் பருவத்ததும் (முதிராததும்), கஸ்தூரி அணிந்துள்ளதுமான கொங்கைமலையின் அழகிலும், (இயலும்) சேர்கின்ற (மயல்கொடு) மோகத்திலே நான் துணிந்து ஈடுபடுவதும் (அம்மோகத்துக்கு நான் அடிமைப்பட்டுப் பணிவதுமான மனப்பான்மை) குறையாமலே-

---

'கெடுப்பவன் நஞ்சையுண்டு'- சம்பந்தர் 2-9-3.

எம்பரம் மாற்றிய வாழ்வு - சிவனது சூலமும் மாயன் ஆழியும் சூரனை வெல்லாது. முருகன் கைவேலே வெல்லும் ஆதலால் சிவன் - மால் இவர்களின் தலைமை மாறி முருகனுக்கு ஏற்றம் வாய்த்தது.

"வெங்காள கண்டர்கைச் சூலமும், திருமாயன் வெற்றி பெறு சுடராழியும் சூரன் குலங்கல்வி வெல்லா எனக்கருதியே . நீ சயித்தருளெனத் தேவரும் சதுர்முகனும் நின்றிரப்ப. . தனி யாண்மை கொண்ட நெடுவேல்"- வேல் விருத்தம்.

குலவி விரகெனு மனறிடை முழுகிய
கொடிய நடலைய னடமிட வருபிணி
குறுகி யிடஎம னிறுதியி லுயிரது கொடுபோநாள்-
குணகி யழுபவர் அயர்பவர் முயல்பவர்
குதறு முதுபிண மெடுமென வொருபறை
குணலை யிடஅடு சுடலையில் நடவுத
லினிதோதான்;

*மலையில் நிகரில தொருமலை* தனையுடல்
மறுகி யலமர அறவுர முடுகிய
வலிய பெலமிக வுடையவ னடையவு மதிகாய-
மவுலி யொருபது மிருபது கரமுடன்
மடிய †வொருசரம் விடுபவன் ‡ மதகரி
மடுவில் முறையிட வுதவிய க்ருபைமுகில்
மதியாதே;

X அலகை யுயிர்முலை யமுதுசெய் தருளிய
அதுல னிருபத மதுதனி லெழுபுவி
யடைய அளவிட நெடுகிய அரிதிரு மருகோனே-
அவுண ருடலம தலமர அலைகட
லறவு மறுகிட வடகுவ டனகிரி
யடைய இடிபொடி படஅயில் விடவல
பெருமானே. (10)

---

*இராவணன் கயிலையை எடுத்தது - பாடல் 188-பக்கம் 440

† ஸ்ரீ ராமர் ஒரு அம்பு விடுதல் - பாடல் 452- பக்கம் 6 கீழ்க்குறிப்பு ‡ பார்க்க.

‡ கஜேந்திரனுக்கு உதவியது - பாடல் 939-பக்கம் 731.

X பேய் முலை உண்ட வரலாறு - (கண்ணன்) கிருஷ்ணனுக்கு தாய் தேவகி; மாமன் கம்ஸன். தன்னைக்கொல்லப் பிறந்துள்ளான் கண்ணன் என்று நாரதர் மூலமாய் அறிந்த கம்ஸன் பூதகி என்னும் ராக்ஷஸியை நல்ல பெண்ணுருவத்தோடு கண்ணனிடம் அனுப்ப, பூதகி ஸ்ரீ கிருஷ்ண சிசுவை எடுத்துத் தனது விஷம் தடவிய முலையைக் கொடுத்துக் கொல்ல முயல, குழந்தை அவ்வரக்கியின் கொங்கைகளைக் கையால் இறுகப்பிடித்துப் பாலுண்ணும் பாவனையில் அவள் உயிரையும் உறிஞ்சி அவளை இறக்கும்படிச் செய்தது.

'வஞ்ச முலைப்பேயின் நஞ்சமதுண்டவனே'

'கஞ்சன் கறுக்கொண்டு நின்மேல் கருநிறச் செம்மயிர்ப் பேயை

(குலவி, பொழுது போக்கி விரகெனும் அனறிணை (முழுகிய) தந்திரச் செயல்களாகிய சேற்றில் முழுகிய - சுடுபட்டுத் திளைத்து முழுகின (கொடிய நடலையன்) பொல்லாத துன்பத்துக்கு ஆளான வனாகிய என்னிடம், நடமிட-தாண்டவம் செய்ய - அல்லது - அடமிட - பலவந்தமாய்ப் பிடிக்க எழுகின்ற நோய்களெல்லாம் வந்து அணுக, எமன் முடிவில் என் உயிரைக் கொண்டு போகும்அந்த நாளில்-

(குனகியழுபவர்) அன்புச் சொற்களைச் சொல்லி அழுபவர்களும், அயர்பவர் - சோர்வுற்றிருப்பவர்களும் முயல்பவர் - ஆக வேண்டிய ஈமச்சடங்குகளைச் செய்ய முயற்சி செய்பவர்களும், (குதறு முதுபிணம்) பிணமாகி நேரமாகிவிட்டது. அது குதறும் - அழுகிப்போம்; ஆதலால் அதை எடுங்கள் என்று கூற அப்போது ஈமப்பறை- குணலையிட - ஒலி செய்ய, அடு சுடலையில் (உடலை அழிக்கின்ற சுடுகாட்டில்) (என் உடல்) ஏகுதல் நல்லதா? (நல்லது அன்று என்றபடி)

மலைகளுக்குள்ளே தனக்கு ஒப்பில்லாததான கயிலை-மலையைத் (தனது) உடல் கலங்கி வேதனைப்பட (அற உரம் முடுகிய) மிக்க திடத்தைக் காட்டி எடுக்க முயன்ற வன்மைப் பலத்தை நிரம்ப உடையவனான, ராவணன். அடையவும் போரில் எதிர்த்து வரவும், அவனுடைய அதிகாயம் - பெருத்ததான உடலும்

முடிகள் ஒருபத்தும், இருபது கரங்களுடனே (அடையவும் - எல்லாம்) மடிய - அற்றுவிழ ஓர் அம்பைப் பிரயோகித்தவனும், மதகரி - கஜேந்திரன் மடுவில் நீர்நிலையிலே (முதலை வாய்ப்பட்டு) ஒலிட்டு அழைத்தபொழுது வந்து உதவிய கருணை நிரம்பிய மேக வண்ணனும், தன்னை மதிக்காமல் வந்த-

(பெண்) பேயின் உயிரைக் கொங்கைப் பாலுடன் உண்டு போக்கி அருளின தனக்கு ஒப்பில்லாதவனும், தனது இரு திருவடி-களால் ஏழுலகங்கள் முடியவும் அளக்க நீண்டவனுமான (விசுவ ரூபமெடுத்த) (அரி) திருமாலின் அழகிய மருகனே!- அல்லது அரிக்கும் - திரு - இலக்குமிக்கும் மருகனே!-

அசுரர்களுடைய உடல்கள் வேதனைப்படவும், அலை வீசுங் கடல் மிகவுங் கலங்கவும், வடகுவடு அன்ன - மேருமலை போன்ற கிரவுஞ்ச மலை முழுதும், இடிபட்டுப் பொடியாகவும் வேலாயுதத்தைச் செலுத்த வல்ல பெருமாளே!

(சுடலையில் நடவுதல் இனிதோதான்)

---

வஞ்சிப்பதற்கு விடுத்தான்"- பெரியாழ்வார் 1-5-4; 2-8-6.

திருப்புகழ்ப் பாடல் 115 - பக்கம் 274; பாடல் 408 - பக்கம் 534- பாடல் 852-பக்கம் 496 பார்க்க.

O பூமியை அளந்தது - பாடல் 268-பக்கம் 166 கீழ்க்குறிப்பு.

## 1005. மாதர் மீதுள்ள மயக்கு அற

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

கடலை பயறொடு துவரையெ ளவல்பொரி
சுகியன் வடைகனல் கதலியி னமுதொடு
கனியு முதுபல கனிவகை நலமிவை யினிதாகக்-
*கடல்கொள் புரிமுதல் துளிர்வொடு வளமுற
அமுது துதிகையில் மனமது களிபெற
கருணை யுட† னளி திருவருள் மகிழ்வுற
நெடிதான,
‡குடகு வயிறினி லடைவிடு மதகரி
பிறகு வருமொரு முருகசண் முகவென
குவிய இருகர மலர்விழி புனலொடு பணியாமற்-
கொடிய நெடியன அதிவினை துயர்கொடு
வறுமை சிறுமையி னலைவுட னரிவையர்
குழியில் முழுகியு மழுகியு முழல்வகை யொழியாதோ.
நெடிய கடலினில் முடுகியெ வரமுறு
மறலி வெருவுற ரவிமதி பயமுற
நிலமு நெறுநெறு நெறுவென வருமொரு கொடிதான-
நிசிசர் கொடுமுடி சடசட சடவென
பகர கிரிமுடி கிடுகிடு கிடுவென
நிகரி லயில்வெயி லெழுபக மையநிற முளதான.
நடன மிடுபரி துரகத மயிலது
முடுகி கடுமையி னுலகதை வலம்வரு
நளின பதவர நதிகுழ குழுவென முநிவோரும்-
நறிய மலர்கொடு ஹரஹர ஹரவென
அமரர் சிறைகெட நறைகமழ் மலர்மிசை
நளியெ சரவண மதில்வன ரழகிய பெருமாளே (11)

---

*'கடல் கொள்.. துதிக்கையில்' -எனக் கூட்டினால் விநாயகர் கடல் நீரைத் துதிக்கையால் உறிஞ்சினதைக் குறிக்கும் (விநா துதி 5 பக்கம் 14 கீழ்க்குறிப்பு.) † அளி = அள்ளி.

‡ குடகு - குடகுமலை கணபதியின் வயிறு - பெருவயிறாதலின் 'குடகுவயிறு' என்றும் கூறுவர் புலவர்கள்.

"குடவயி றுளதலை மகனை வளர்த்தவள் கொட்டுக சப்பாணி"

- உத்தரகோச மங்கை பிள்ளைத்தமிழ்.

# 1005.

கடலை, பயறு இவைகளுடன் துவரம் பருப்பு, எள், அவல், பொரி, சுகியன், வடை, கனல் - (கன்னல்) கரும்பு , (கதலி) வாழை, (இன்னமுது) இனிய அமுதுபோன்ற சுவையுடனே பழுத்துள்ள முதிர்ந்த பல பழவகைகள் அல்லது பலாப்பழ வகைகள், நல்ல படி இவைகளை இன்பத்துடனே-

கடலால் சூழப்பட்ட பூமியில் உள்ளோர் முதல் யாவரும் தழைத்து வளப்பம் பெற அமுதாகத் தனது துதிக்கையில் மனம் மகிழ்ச்சிபெற, (உலகின் மாட்டுக்) கருணைமிக்கு வைத்து, அள்ளி எடுத்துத் தனது திருவருளைப் பாலிக்க மகிழ்ச்சியுடனே, பெரிதாயுள்ள-

குடகு - குடம்போன்ற - பரிகசிக்கத்தக்க தன் வயிற்றினில் அடைக்கின்ற மதயானை போன்ற கணபதியின் பின் தோன்றி வந்த ஒப்பற்ற முருகனே! சண்முகனே! என்று இரண்டு கரங்களும் (மேலே) குவிய, மலர்ந்த கண்ணினின்றும் நீர்பெருக (உன்னைப்) பணியாமல்-

கொடிதானதும், பெரிதானதும் ஆன மிக்க வினைத்துயருடன் (தலைவிதியால் ஏற்பட்ட வினையால் வரும் துக்கத்தை அடைந்து, வறுமையால் வரும் இளப்பத்தின் - தாழ்வினால் அலைச்சலடைந்து மாதர் குழியிலே முழுகியும் அதிலே (அழுகியும்) பாழடைந்தும் - பதனழிந்தும் - திரிகின்ற குணத்தின் தன்மை என்னைவிட்டு நீங்காதோ!

பெரிய கடல்போல (முடுகியே) விரைந்து எழுந்து, (உயிர்களைக் கொண்டுபோகும்) வரம் பெற்ற யமன் பயப்படவும், (இரவி) சூரியனும், (மதி) சந்திரனும் பயப்படவும், பூமியும் நெறு நெறு நெறு என்று அதிர்ச்சி கொள்ளவும் வந்த ஒரு கொடியவர்களான

அசுரர்களின் கொடிய தலைகள் சட சட சட என்று முறிய, சொல்லப்படும் (அல்லது அழகிய) மலைகளின் சிகரங்கள் கிடு கிடு கிடு என்று அதிர்ச்சியுற, ஒப்பில்லாத வேலாயுதத்துடனே, ஒளிவீசும் பச்சைநிறமுள்ளதும்,

நடனம் செய்ய வல்லதுமான வாகனமான குதிரை போன்ற மயிலை வேகமாகச் செலுத்தி உக்ரத்துடனே உலகை வலம் வந்த தாமரையன்ன (பத) திருவடிகளை உடையவனே! (வரநதி) கங்கை குமு குமு என்று கொந்தளிக்க, முநிவர்களும்

நறு மணமுள்ள பூக்களைத் தூவி ஹர ஹர ஹர என்று போற்றி செய்ய, தேவர்கள் சிறை நீங்க, வாசனை வீசும் (தாமரை) மலர்மீது தங்கிச் சரவணமடுவில் வளர்ந்த அழகிய பெருமாளே! (உழல்வகை ஒழியாதோ)

## 1006. அரிய பொருள் உணர

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

கமல குமிளித முலைமிசை துகிலிடு
விகட கெருவிக ளசடிகள் கபடிகள்
கலக மிடுவிழி வலைகொடு தழுவிக
ளிளைஞோர்கள்-

கனலி விடுமெழு கெனநகை யருளிகள்
அநெக விதமொடு தனியென நடவிகள்
கமரில் விழுகிடு கெடுவிகள் திருடிகள் தமைநாடி;

அமுத மொழிகொடு தவநிலை யருளிய
*பெரிய குணதர குரைசெய்த மொழிவகை
அடைவு நடைபடி பயிலவு முயலவு மறியாத

அசட னறிவிலி யிழிகுல னிவனென
இனமு மனிதரு ளனைவரு முரைசெய
அடிய னிதுபட அரிதினி யொருபொரு
ளருள்வாயே;

திமித திமிதிமி டமடம டமவென
சிகர கரதல டமருக மடிபட
தெனன தெனதென தெனவென நடைபட
முநிவோர்கள்-

சிவமி லுருகியு மரகர வெனவதி
பரத பரிபுர மலரடி தொழஅநு
தினமு நடமிடு பவரிட முறைபவள் தருசேயே,

குமர சரவண பவதிற லுதவிய
தரும †நிகரொடு புலமையு மழகிய
குழக குருபர னெனவொரு மயில்மிசை
‡ வருவோனே-

---

*அருணகிரியார் முன் செய்துள்ள பெருந் தபோ பலத்தை உணர்ந்த அருணாசலேசுரரே எனத் தோற்றிய தவப் பெரியார் ஒருவர் அருணகிரியாரிடம் வந்து "அன்ப! நீ தவ நிலையில் இருந்து ஆறுமுகக் கடவுளை இடைவிடாது தியானிப்பாயாக" என உபதேசித்துச் சென்றனர். அவ்வுபதேச மொழியைப்பின்பற்றாது சிலகாலம் இவர் வீணாக்கினார். இதையறிந்து இனத்தாரும் ஊராரும் ஏசியும் பேசியும் வருந்தினர். "பெரிய குணதரர்" என்பது அருணாசலேசுரராகவே இருக்கலாம் - சிவ பிரானை

## 1006.

தாமரை மொக்குப் போலப் புடைத் தெழுந்துள்ள கொங்கைமேல் ஆடையை அணியும் மிகுந்த கர்வம் பிடித்தவர்கள், மூடர்கள், வஞ்சகர்கள், கலகத்தை விளைக்கும் கண்வலை கொண்டு தழுவு பவர்கள், இளைஞர்கள்

நெருப்பிலிட்ட மெழுகுபோல உருகும்படிச் சிரிக்கின்றவர்கள், பலவிதமான - இணையிலாத வகையில் நடை நடப்பவர்கள், படுகுழிப் பிளவில் விழும்படிச் செய்யும் கேடு சூழ்பவர்கள் - திருட்டுக்குணம் உடையவர்கள் (ஆகிய வேசையர்களைத்) தேடிச் சென்று-

அமுதம்போன்ற சொற்களால் எனக்குத் தவநிலையைத் தந்து அருளிய பெரிய குணவானாகிய பெருமான் உபதேசித்த மொழியின் படி - தகுதியான நடைமுறையை அநுட்டிக்கவும், மேற்கொண்டு முயற்சி செய்யவும் அறியாத

முட்டாள், அறிவு இல்லாதவன், இழிந்த குலத்தவன் இவன் என்று - என்னை - உறவினரும் பிற மனிதர்கள் யாவரும் பேச, அடியேன் அத்தகைய பேச்சிற் படுதல் கஷ்டம், கஷ்டம்; இனி ஒப்பற்ற (ஞானப்) பொருளை உபதேசித் தருள்செய்வாயாக. (திமிதி) பேரொலியாய்த் திமிதிமி, டம டம டம என்று உயரப் பிடித்த கையில் உள்ள (டமருகம்) உடுக்கை அடிபட, தெனன தெனதென தென என்று நிகழ்ச்சிகள் நிகழ, முநிவர்கள்

சிவத்யானத்தில் உருகியும், ஹர ஹர ஹர என்று ஒலி எழுப்பியும், (அதி பரத பரிபுர மலரடி) சிறப்பான பரத சாத்திர முறையில் ஆடும் சிலம்பணிந்த மலரன்ன திருவடிகளைத் தொழ, நாள்தோறும் நடனம் புரியும் கூத்தப் பெருமானது இடது பாகத்தில் இருப்பவளாம் பார்வதி பெற்ற குழந்தையே!

குமர மூர்த்தியே! சரவணபவனே! (அடியேனுக்குத்) திறல், ஞான வலிமையைத் தந்த தரும மூர்த்தியே! ஒளியும் புலமையும் அழகொடு விளங்கும் (குழகனே) இளைஞனே! குருமூர்த்தியே! என்று போற்றும்படி ஒப்பற்றமயில்மீது வருபவனே - வந்தவனே!

---

அருணகிரியார் "பெரியர்" என்றே அழைப்பர். "திரிசிர குன்றில் தெரிய இருந்த பெரியவர் தந்த சிறியவ"- திருப்புகழ் 342-என வருவதைக் காண்க. "உரைத்த புத்திகள் கேளா நீசனை என்றார் பிறிதோரிடத்து - திருப்புகழ் 853.

(அருணகிரி நாதர் வரலாறு - பக்கம் 4-5)

† நிகர் = ஒளி ‡ இது அருணகிரியார் வரலாற்றைக் குறிக்கும்

குறவ ரிடுதினை வனமிசை யிதணிடை
*மலையு மரையொடு †பசலைகொள் வளர்முலை
குலவு குறமக ளழகொடு தழுவிய
பெருமாளே (12)

## 1007. பெரும் பொருள் உணர

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

திசையு முதிரமு நிணமொடு செருமிய
கரும கிருமிக ளொழுகிய பழகிய
சடல வுடல்கடை சுடலையி லிடுசிறு குடில்பேணுஞ்
சகல கருமிகள் ‡சருவிய சமயிகள்
சரியை கிரியைகள் தவமெனு மவர்சிலர்
சவலை யறிவினர் நெறியினை விடஇனி யடியேனுக்
கிசைய இதுபொரு ளௌ அறி வுறவொரு
வசன முறஇரு வினையற மலமற
இரவு பகலற எனதற நினதற அநுபூதி

---

* முலை அரையை மலைவது:
" பார இள நீர் சுமக்கப் பண்டே பொறாத இடை
ஆர வடஞ் சுமக்க ஆற்றுமோ"- (சொக்கநாதப் புலவர்)
இலைக்கறி விற்பாள் மருங்குல் இற்றுவிடு மென்று
முலைக்கறிவிப் பாரிலையே: முன் (காள மேகம்)
†பசலை - தலைவர் பிரிவதால் - காம நோயால் உண்டாகும்
நிற வேறுபாடு. "பசலை பாயப்பிரிவு" ஐங்குறு நூறு 231
" நங்கை பயணம் நமக்கென் றுரைத்தளவில்
அங்கம் பசலை நிறம் ஆனதே" - (சொக்கநாதப் புலவர்)
" பாசியற்றே பசலை காதலர் தொடுவுழித் தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழிப் பரத்தலானே"- குறுந்தொகை 399)
'முயங்காக்காற் பாயும் பசலை'- நாலடி 391.
'முலைக்கற்றம் பார்க்கும் பசப்பு'- குறள் 1186.
'விடுவழி விடுவழிச் சென்றாங்கவர்
தொடுவழித் தொடுவழி நீங்கின்றாற் பசப்பே"
- கலித்தொகை 130.
'பூனைந்து முலையும்... திருநுதலும் செம்பசலை மூழ்க'
- சிந்தாமணி 732.
‡ சருவிய = போராடுகின்ற.

குறவர்கள் பயிரிட்ட தினைவனத்திலே பரண்மீது, (அரையொடு) இடையொடு (மலையும்) போர்செய்யும் - (இடை ஒடியும் படி கனத்திருக்கும்) கொங்கை - பசலை நிறம் கொண்டெழுந்த கொங்கை - (அழகு தேமல் அல்லது - பொன்னிறம் - கொண்ட கொங்கை விளங்கும் குறமகளை (வள்ளியை) அழகு பெறத் தழுவின பெருமாளே !

(ஒரு பொருள் அருள்வாயே)

## 1007.

சதை, ரத்தம், மாமிசம், நெருங்கியுள்ள - செயல் நிறைந்துள்ள -புழுக்கள் இருந்து பழகும் - அறிவில் பொருளாம் உடல், ஈற்றில் சுடுகாட்டில் இடப்படுகின்ற சிறிய வீடு - இதைப் போற்றி வளர்க்கும்-

சகல (கருமிகள்) சாத்திரப்படி சகல கிரியைகளையும் செய்பவர்கள், போராடுகின்ற சமயவாதிகள், சரியை, கிரியை, தவம் எனச் சொல்லும் சிலர், மனக் குழப்பம் உள்ள அறிவினர், ஆகிய இன்னோர் கொண்டுள்ள மார்க்கத்தை நான் விட்டொழிக்க, இனி அடியேனுக்குப்-

பொருந்தும்படி, இதுதான் (ஞானப்) பொருள் என்று என் புத்தியிற் படும்படி, ஒப்பற்ற ஒரு உபதேசத்தை நான் பெற, நல்வினை தீவினை எனப்படும் இருவினைகளும் நீங்க, (ஆணவம், கன்மம், மாயை எனப்படும்) மும்மலங்களும் நீங்க, இரவு பகல் - ஆன்மாவின் கேவல சகல நிலைகள் ஒழிய, என்னுடையது என்னும் மமதை - மமகாரம் நீங்க, உன்னுடையது என்னும் துவித (நோக்கம்) பாவம் நீங்க, (அநுபூதி) அநுபவஞான உண்மையை-

இனிமை தருமொரு தனிமையை மறைகளின்
இறுதி யறுதியி டவரிய *பெறுதியை
† இருமை யொருமையில் பெருமையை வெளிபட
மொழிவாயே;
அசல குலபதி தருமொரு திருமகள்
அமலை ‡ விமலைக ளெழுவரும் வழிபட
அருளி அருணையி · லுறைதரு மிறையவ ளபிராமி-

---

*பெறுதி = பேறு.

† இருமை ஒருமையில் பெருமை.

இதைக்குறித்த ஒரு விசேடத்தைச் சேய்த் தொண்டர் புராணத்தில் 76, சச்சிதானந்தநாயனார் புராணம் பாடல் 171- பக்கம் 516 பார்க்க.

சிவம் - சக்தி இருமை; 'பிணை பெணொ டொருமையின் இருமையும் உடைய (ன்) னல்... இடைமருதே' -சம்பந்தர் 1-121-3

'தொல்லை முதல் நாளொன்று மெல்லியிரு பேதங்கள்
- திருப்புகழ் 389-பக்கம் 480 - கீழ்க்குறிப்பு.

இருமை ஒருமை - " எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவனும் நிற்பன்"- என்றதனால் ஒருமை

(சித்தியார் சுபக்கம் - 165)

" இருமையின் ஒருமையும் ஒருமையின் பெருமையும்"- என்பது சம்பந்தப் பெருமான் அருளிய திரு எழு கூற்றிருக்கை.

"இருவகைப் பயனாய் ஒன்றாய் விரிந்து நின்றனை"-
இது திருமங்கை ஆழ்வார் திரு எழு கூற்றிருக்கை.

"இரண்டு நீக்கி ஒன்று நினைவோர்க்கு உறுதியாயினை"-
நக்கீரர் திரு எழு கூற்றிருக்கை

இனி, இருமை ஒருமையில் பெருமை என்பது ஜீவாத்மா-பரமாத்மா என்னும் இரண்டில் ஜீவாத்மா - பரமாத்மாவுடன் கலந்து ஒன்றாவதின் பெருமை. ஜீவன் சிவனுடன் கலந்து ஒன்றாயின் அதனால் வரும் பெருமை யாதோ எனில் - அங்ஙனம் கலந்திடின் மும்மலமும் கெடும் என்பதே இது-

" ஒன்றிரண் டாகிநின் றொன்றியொன் றாயினோர்க்
கொன்றும் இரண்டும் ஒருகா லுங் கூடா"
எனவரும் திருமந்திரத்தால் (2077) பெறப்படும்.

[ஒன்று - இரண்டு ஆகி சிவன் - ஜீவன் என இரண்டாகி, ஒன்றாயினோர் - சிவனோடு கலந்தோர்; ஒன்றும் இரண்டும் - என்பது மும்மலம்.]

பின்னும், இருமை - சிவம் - சக்தி என்னும் இரண்டின் சிவனுடைய (சிவத்தின் ஐந்து திருமுகங்களும்) சக்தி - பார்வதியின் ஒரு திருமுகமும் - ஒருமை - ஒன்றுபட்டு - (ஆறுமுகம் கொண்ட) ஒரு திருவுருவமான - பெருமையை - (ரகசியப்) பொருள் மாட்சியை வெளிச்ச மாம்படி

இன்பத்தைத் தருகின்ற ஒப்பற்ற தனிநிலையை - வேதங்களின்முடிவான பொருள்களும் (அறுதியிட அரிய) முடிவு செய்து கூறுவதற்கு அரிதான பேற்றினை - (இருமை ஒருமையில் பெருமையை) சக்தி சிவம் என்னும் இரண்டு பேதங்களின் ஒன்றாந் தன்மையின் பெருமை மிக்க விளங்கப் பொருளினை (அல்லது சிவன் - சீவன் என்றும் இரண்டில் சீவன் சிவனொடு கலந்து ஒன்றாவதால் வரும் பெருமைப் பேற்றினை) (அடியேனுக்கு) வெளிப்படும்படி உபதேசித்தருள்வாயாக;

மலைகளுள் சிரேஷ்டமான இமய பர்வதராஜன் ஈன்ற ஒப்பற்ற அழகிய மகளாகிய பார்வதி, (அமலை) மல மற்றவள், சப்தமாதர்களும் தன்னைவழிபட அவர்களுக்கு அருள் செய்து திரு அண்ணா மலையில் வீற்றிருக்கும் தேவி அபிராமி (அழகி)

---

மொழிந்தருளுக - என்று மாம். " ஆறுமுகமான பொருள் நீயருளல் வேண்டும்"- துதி.

X விமலைகள் எழுவர் - சப்த மாதாக்கள் - பாடல் 997 - பக்கம் 9

**எழுவரும் வழிபட்டது:-**

விளையாட்டாக இறைவன் திருக்கண்களைத் தேவி மூட உலகெலாம் இருண்டது; அந்தப் பாவம் நீங்கக் காஞ்சியில் கம்பை யாற்றங் கரையில் தேவி தவஞ் செய்தனள். இறைவன் மகிழ்ந்து என்ன வரம் வேண்டும் உனக்கு என்று கேட்கத் தேவி உனது இடது பாகத்தைத் தந்தருளுக என வேண்டினள். இறைவன் நீ திருவண்ணாமலையில் வந்து தவம் புரியின் தருவேன் என்றனர். தேவி அப்படியே திருவண்ணாமலையில் கௌதமர் ஆசிரமத்துக்கு வந்து அங்கே தவச்சாலை இயற்றித் தவம் புரிந்து இடது பாகம் பெற்றனள். அங்ஙனம் தவம் புரிந்தபோது சத்த மாதர்களும் தவச்சாலையின் புறங்காத்தனர் என்பது வரலாறு.

" சோண பூதரமா மதன் குணபாற் பன்ன சாலை
புதி தமைப்பித்து, அகமகிழ்ந்து புறம்பு காக்க
மாத ரெழுவரை யமைத்து, நாலுபாலின்
வாயிலை என் வயிரவர்கள் மகிழ்ந்து காக்க,
ஆதரவின் நிறுத்தி, மைந்தர் மருங்கு காக்க
அந்தரி உட்புறங் காக்க அமைத்தாள் மன்னோ"

- அருணாசல புரா - திருக்கண் 73.

அநகை அநுபவை அநுதயை அபிநவை
*அதல முதலெழு தலமிவை முறைமுறை
அடைய அருளிய பழையவ ளருளிய சிறியோனே,
† வசுவ பசுபதி மகிழ்தர வொருமொழி
‡ மவுன மருளிய மகிமையு மிமையவர்
மரபில் வனிதையும் வனசரர் புதல்வியும்
வடிவேலும்-
மயிலு மியலறி புலமையு முபநிட
மதுர கவிதையும் விதரண கருணையும்
வடிவு மிளமையும் வளமையு மழகிய
பெருமாளே (13)

### 1008. (நாம பஜனை செய்ய)

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

xநெடிய வடகுவ டிடியவு ০மெழுகிரி
நெறுநெ றெனநெரி யவு **முது பணிபதி
நிபிட முடிகிழி யவுநில மதிரவும் விளையாடும்-
நிகரில் கலபியும் †† ரவியுமிழ் துவசமும்
நினது கருணையு முறைதரு பெருமையும்
நிறமு மிளமையும் வளமையு மிருசர ணமும்நீப

---

*அதலம், விதலம், சுதலம், தராதலம், இரசாதலம், மகாதலம், பாதலம் - (ஏழு தலங்கள்).

† வசுவ பசுபதி - அக்கினி சொரூபியாகிய சிவபிரான்.
'அனலுருவினன்' - சம்பந்தர் 1-19-2

‡ ஒரு மொழி மவுனம் அருளியது :-
ஒரு மொழி உபதேசம் - 'சும்மா ஒரு சொல்லற'- எனும் மௌனோபதேசம்.

" மோன முத்திரையைக் காட்டி ஒரு கணஞ்செய லொன்றின்றி யோகு செய் வாரி னுற்றான் - இளையதோர் தன்மை காட்டி எம்பிரான் உணர்த்தக் கண்டு. ஞான போதம் தெரிந்து புந்தியின் ஒடுக்கம் பெற்றார்"- என்புழிப் போன்ற மௌனோபதேசம். கந்த புரா - 1-3-12-13.

X மனப்பாடஞ் செய்ய தக்க பாடல் இது.

(தொடர்ச்சி 37 ஆம் பக்கம் பார்க்க)

(அனகை) பாவமற்றவள், (அநுபவை) ஞான அநுபவத்தை உடையவள், (அநுதயை) தயையோடு கூடியவள், (அபிநவை) என்றும் புதியவள்.(அதலமுதல்) அதலம் முதலான ஏழு உலகங்களுக்கும் முறைப்படி முறைப்படி சகல (செல்வங்களையும்) அருள்பாலிக்கும் பழையவள் ஆகிய பார்வதி பெற்றருளிய குழந்தையே!

(வசுவ பசுபதி) அக்நி சொரூபியாகிய சிவபிரான் மகிழும் படி ஒப்பற்ற உபதேசமொழியான மௌன உபசேதத்தை நீ அவருக்கு உபதேசித்த விசேடப் பெருமையும், தெய்வகுலத்தில் வந்த வநிதையும் (தேவசேனையும்),(வனசரர் புதல்வியும்) வேடர்மகளாம் வள்ளியும், கூரிய வேலாயுதமும்,

மயிலும், இயற்றமிழில்வல்ல புலமையும் (ஞானமும்), (உபநிடமதுர கவிதையும்) உபநிஷத்துக்களின் சாராம்சங் களைக்கொண்ட இனியபாடல்களாகிய (திருநெறித்தமிழெ னப்படும் தேவாரமாகிய உனது பாடல்களும்). கொடைத்திறம் நிறைந்த உனது கருணையும்(உனது) வடிவமும், இளமையும், (வளமையும்) செழுமையும் ஆகிய இவையெலாம் அழகுற விளங்கும் பெருமாளே!

(பெருமையை வெளிபட மொழிவாயே)

## 1008

நீண்டதும், வடக்கேயுள்ளதுமான குவடு (மேருமலை) இடிபட்டுப் பொடிபடவும், ஏழுமலைகளும் நெறு நெறு என்று நெரிவு உண்ணவும், முதுமை வாய்ந்ததும் பாம்புகளுக்குத் தலைவனுமான அதிசேடனது நெருங்கிய பணாமுடிகள் கிழிபட, பூமி அதிர விளையாடுவதும்,

ஒப்பிலாததுமான மயிலும்சூரியனைக் கக்குகின்ற (சூரியன் உதிக்கும் படிக் கூவுகின்ற) கொடியாகிய சேவலும், உனது கருணையும், உன்னிடம் நிலைத்துவிளங்கும் உனது பெருமையும், உனது (நிறமும்) ஒளியும்இளமையும், வளமையும், இரண்டு திருவடிகளும் கடம்பணிந்த

---

O எழு கிரியை அட்டது - பாடல் 43-பக்கம் 117- கீழ்க்குறிப்பு

** ஆதி சேடன் திண்டாடுவது:-

"சேடன் முடி திண்டாட ஆடல்புரி.. மயிலாம்"-

மயில் விருத்தம் 2

†† சேவல் சூரியனை உமிழ்வது-பாடல் 387-பக்கம் 474 - கீழ்க்குறிப்பு † பார்க்க.

முடியு மபிநவ வனசரர் *கொடியிடை
தளர வளர்வன மருமமத பரிமள
முகுள புளகித தனகிரி தழுவிய திரடோளும்

மொகுமொ கெனமது கரமுரல் குரவணி
முருக னறுமுக னெனவரு வன †பெயர்
முழுது மியல்கொடு பழுதற மொழிவது மொருநாளே;

கொடிய படுகொலை நிசிசர ரரமொடு
குமுகு மெனவிசை யுடனிசை பெறமிகு
குருதி நதிவித சதியொடு குதிகொள விதியோடக்-

குமுறு கடல்குடல் கிழிபட வடுமர
மொளுமொ ளென அடி யொடலறி விழவுயர்
‡ குருகு பெயரிய வரைதொளை படவிடு சுடர்வேலா,

இடியு முனைமலி குலிசமு மிலகிடு
கவள தவளவி கடதட கனகட
இபமு மிரணிய தரணியு முடையதொர் x தனியானைக்-

கிறைவ குருபர சரவண O வெகுமுக
ககன புனிதையும் **வனிதைய ரறுவரும்
எனது மகவென வுமைதரு மிமையவர் பெருமாளே.(14)

---

* இடைதளரக் கொங்கை வளர்வது - பாடல் 1006 -1010
பக்கம் 32, 42 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

† 'முருகன் குமரன் குகனென் றுமொழிந்
துருகுஞ் செயல்தந் துணர்வென் றருள்வாய்" அநு 15

‡ குருகு பெயரிய வரை - பறவைப் பெயருடைய மலை; அது கிரவுஞ்சம். "குருகு பெயர் பெற்ற கனவட சிகரி" - வேடிச்சி காவலன் வகுப்பு 'குருகு பெயர்க் குன்றம்' - சிலப்பதி - குன்றக் குரவை.

x இடி, குலிசம், ஐராவதம், பொன்னுலகு இவை தேவசேனையின் சொத்து; வள்ளியின் சொத்து - சொம்பு, கோழிக் கொடி, வேல்,மயில், மலை ஆட்சி - கந்தர் அந்தாதி - 8.

O 'ஆயிர முகத்து நதி' - 'வேளைக்காரன் வகுப்பு'

** கார்த்திகை மாதர்களின் மகவு - 'கிர்த்திகையர் அறுவரும் எடுக்க. புத்ரனானவன்'- வேடிச்சி காவலன் வகுப்பு.

[illegible] அமர்ந்து சுழலின திரண்ட தோள்களுடைய

மொகுமொகு என்னும் ஒலியுடன் வண்டுகள் ஒலிக்கின்ற குராமலரை அணியும் முருகன், ஆறுமுகன் என்றெல்லாம் வருவனவாகிய உனது திருநாமங்கள் முழுமையும் இயற்றமிழில் அமைத்துக் குற்றமிலா வகையில் சொல்லும்படியான (பாக்கிய) நாள் ஒன்று எனக்குக் கிடைக்குமா?

பொல்லாத கொடிய கொலைகளைச் செய்யும் அசுரர்களுடைய மார்புடனே (குமுகுமென விசையுடன் இசைபெற) குமுகுமென இசை பெற விசையுடன் - குமுகுமு வென்னும் ஒலியுண்டாம்படி வேகத்துடனே நிரம்ப ரத்தம் - நதி (வெள்ளம்) என்னும்படித் - தாளத்துடனே குதித்துப் பாய்ச்சல் கொள்ளவும், பிரமன் அஞ்சி ஓடவும்,

கலங்கி ஒலிக்கும் கடலின் (குடல்) உட் பாகங்கள் கிழிபடவும் (அடுமரம்) கொல்லுந் தன்மையுடைய சூரனாகிய மாமரம் (அல்லது) (வடுமரம்) வடுமா காய்க்கும் சூரனாகிய மாமரம், மொளுமொளென்று அடிப்பாகம் முதல் அலறி விழவும், உயர்ந்து வளர்ந்திருந்த பறவையின் பெயர் கொண்ட மலை - கிரௌஞ்ச கிரி தொளைபடவும் செலுத்தின ஒளிகொள் வேலனே!

இடியும், கூர்மை மிகுந்த குலிசாயுதமும், விளக்கங் கொண்டதும் - கவளமாக ஊண் உண்பதும்- வெண்ணிறமுடையதும் - அழகுள்ளதும், பரந்ததுமான - மதக்கவட்டினின்று மிகுந்த மதம் பொழிவதுமான (இபம்) ஐராவதம் என்ற வெள்ளை யானையும் (இரணிய தரணியும்) பொன்னுலகமும் இவை தனைச் சொந்தமாகக் கொண்ட ஒரு - ஒப்பற்ற (யானை) தேவசேனைக்குத்

தலைவனே! குருபரமூர்த்தியே! சரவண பவனே! பல முகமாய்ப் பரந்துவரும் ஆகாச கங்கையும், கிருத்திகை மாதாக்கள் அறுவரும் எங்கள் குழந்தை என்று பாராட்டும்படி உனை யம்மை தந்தருளிய பெருமாளே! தேவர் பெருமாளே!

(பெயர் முழுதும் பழுதற மொழிவது ஒருநாளே)

## 1009. சிவபதம் பெற

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

*பகிர நினைவொரு தினையள விலுமிலி
கருணை யிலியுன தருணையொ டுதணியல்
பழநி மலைகுரு மலைபணி மலை†பல மலைபாடிப்-
பரவு மிடறிலி படிறுகொ டிடறுசொல்
பழகி பழகிலி குலமிலி நலமிலி
‡ பதிமை யிலிபவ ஒதுமிலி மகிமையி லிxகுலாலன்,

திகிரி வருமொரு செலவினி லெழுபது
செலவு வருமன பவுரிகொ டலமரு
திருக னுருகுத லழுகுதல் தொழுகுதல் தினையாத-
திமிர னியல்பிலி யருளிலி பொருளிலி
திருடன் மதியிலி கதியிலி விதியிலி
செயலி லுணர்விலி சிவபத மடைவது மொருநாளே;

மகர சலநிதி முறையிட நிசிசரன்
மகுட மொருபது மிருபது திரள்புய
வரையு மறவொரு கணைதெரி புயல்குரு திருபனு தன்
○நெடுவில் மதகரி முதலென வுதவிய
வரத **விருதிறல் மருதொடு பொருதவன்
†† மதலை குதலையின் மறைமொழி யிகழிர
ணியனாகம்,

---

*மனப்பாடம் செய்யத்தக்க பாடல் இது.

'தினையளவு பங்கிட்டு உண் கை'- திருப்புகழ் 17.

'நொய்யிற் பிளவளவேனும் பகிர்மின்கள்' - கந் -அலங் - 18.

† பல மலை - குன்று தோறாடல் - திருப்புகழ் 233-237 பார்க்க.

‡ பதிமை - பத்திமை.

x குயவன் சக்கரம் வரும் ஒரு சுற்று நேரத்தில் - நமது மனம்பல சுற்று வருதல்.- "ஒரு கால், திரிகையி லாயிரக் கோடி சுற்றோடுந் திருத் துளமே" - (கந்தரந்தாதி - 34)

" ஐவர் கள்வர் வல்லிதிற் புகுந்து
மண்மகன் திகிரியில் எண் மடங்கு சுழற்ற
வாடுபு கிடந்த பிடில் நெஞ்சத்து"- பட்டினத்தார்-
கோயில் நான்மணி - 12.

○ கஜேந்திரனுக்கு உதவினது - பாடல் 939-பக்கம் 731- கீழ்க்குறிப்பு.

(தொடர்ச்சி 41 ஆம் பக்கம் பார்க்க)

# 1009.

பகிர்ந்து இரப்போர்க்குக் கொடுக்கவேண்டு மென்கின்ற நினைப்பு தினையளவுகூட இல்லாதவன் நான், கருணையே இல்லாதவன் நான், நீ வீற்றிருக்கும் தலங்களான திரு அண்ணாமலை, திருத்தணிகை, பழநிமலை, சுவாமிமலை, பாம்புமலையாகிய திருச்செங்கோடு, (ஏனைய) பலமலை களையும் பாடிப்.

போற்றுகின்ற திறம் இல்லாதவன் நான், வஞ்சனையுடன் தடையான - மாறுபாடுள்ள பேச்சுக்களில் பழகுபவன் நான், அழகில்லாதவன் நான், குலமில்லாதவன் நான் நற்செயல் ஒன்றும் இல்லாதவன் நான், பக்தி யென்பது இல்லாதவன் நான், பெருந்தன்மை யில்லாதவன் நான், எவ்வித பெருமையு மில்லாதவன் நான், குயவனுடைய,

சக்கரம் சுழலும் ஒரு சுழலின் வேகத்துக்குள், எழுபது சுழற்சி கொள்ளும் மனச் சுழற்சி கொண்டு வேதனைப்படும் மனக் கோணலுடையவன் நான், உள்ளம் உருகுதல், வாய்விட்டு அழுதல், உடல் வணங்குதல் இம் மூன்றின் நினைப்புங்கூட இல்லாத

(ஆணவ) இருள்கொண்டவன் நான், நல்ல தன்மையில்லாதவன்நான், அருளில்லாதவன் நான், பொருள் இல்லாதவன் நான், திருட்டுத் தொழிலுடையவன் நான், அறிவில்லாதவன் நான், நற்கதியில்லாதவன் நான், நல்லவிதி (தலை எழுத்து) இல்லாதவன் நான், நற்செய்கைகள் செய்யும் உணர்ச்சியில்லாதவன் நான், இத்தகைய நான் சிவபதம் சேரும்படியான ஒரு நாளும் உண்டோ!

மகரமீன்கள் உள்ள கடல் ஒலிட்டு அலறவும், அரக்- களாம் ராவணனுடைய கிரீடங்கள் ஒரு பத்தும், இருபது திண்ணிய புய மலைகளும் அற்று விழும்படி ஒரு பாணத்தைத் தெரிந்து செலுத்திய மேக வண்ணனும், (குருநிருப) குரு நாட்டரசர்களாகிய பஞ்சபாண்டவர்களுக்குத் தூதனா யமைந்தவனும்,

நீர் நிலையில் மதயானையாகிய கஜேந்திரன், (முதலைை) ஆதிமூலமே என்றழைக்க வந்து உதவின வரதராஜப் பெருமாளும், இரண்டு வலிமை வாய்ந்த மருதமரங்களைச் சாடி முறித்த வரும் பிள்ளையாகிய பிரகலாதனுடைய) குதலைச் சொற்களாகப் பிறந்த (நாராயணாயநம என்னும்) வேத மொழியை இகழ்ந்த இரணியாசுரனுடைய உடலை

** மருதொடு பொருதது - பாடல் 143- பக்கம் 332 - குறிப்பு.

†† இரணியனை வதைத்தது - பாடல் 327-1-பக்கம் 317 - கீழ்க்குறிப்பு

உகிரி னுதிகொடு வகிருமொ ரடலரி
திகிரி தரமர கதகிரி யெரியுமிழ்
*உரக சுடிகையில் நடநவி லரிதிரு மருகோனே-
உருகு மடியவ †ரிருவினை யிருள்பொரு
முதய தினகர இமகரன் வலம்வரும்
உலக முழுதொரு நொடியினில் வலம்வரு
பெருமாளே (15)

## 1010. திருவடி உயிர்த்துணை

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

முருகு செறிகுழ லவிழ்தர முகமதி
முடிய வெயர்வர முதுதிரை யமுதன
மொழிகள் பதறிட வளைகல கலவென அணைபோக-
முலையின் மிசையிடு வடமுடி யற ‡ இடை
முறியு மெனஇரு பரிபுர மலறிட
முகுள அலரின நிலவெழ இலவிதழ் பருகாநின்;
றுருகி யுளமுட லுடலொடு செருகிட
வுயிரு மெனதுயி ரெனமிக வுறவுசெய்
துதவு மடமக ளிர்களொடு மமளியி லநுராக-
உததி யதனிடை விழுகினு மெழுகினும்
உழலு கினுமுன தடியிணை யெனதுயி
ருதவி யெனவுனை நினைவது மொழிவது
மறவேனே;

---

* களிங்க நிர்த்தனம் - பாடல் 868- பக்கம் 544- கீழ்க்குறிப்பு †

† 'இடராணவ திமிரமே யரி சூரிய'- திருப்புகழ் 717.

'அகத்திருளைத் தொலைப்பதற்கு - ஞான சூரியனைக்கூவுவாயே'
- சேவற்பத்து.

‡ கொங்கைப் பாரத்தால் இடை நலியும் -
பாடல் 1006-பக்கம் 32 கீழ்க்குறிப்பு*

'மோட்டிளங் கொங்கை முடியச் சுமந்தேற
மாட்டா திடையென்று வாய்விட்டு - நாட்டேன்
அலம்புவார் கோதை அடியிணையில் வீழ்ந்து
புலம்புமா நூபுரங்கள் பூண்டு"-
நளவெண்பா (சுயம்வர - 33).

(தொடர்ச்சி பக்கம் 43)

நகத்தின் நுனிகொண்டு [illegible] [illegible] [illegible] வாய்ந்த (அரி) நரசிங்கமூர்த்தி, (திகிரியா) சக்கராயுதத்தை ஏந்தின (மரகதகிரி) "பச்சைமாமலை[1] போல் மேனியை" யுடையவர், நெருப்பைக்கக்குகின்ற காளிங்கன் என்னும் பெரும்பாம்பின் தலை உச்சியில் -படங்களின் உச்சியில் நடனம் செய்த (அரி) விஷ்ணுமூர்த்தி - ஆகிய திருமாலின் அழகிய மருகனே!

(உள்ளம்) உருகும் அடியவர்களுடைய நல்வினை தீவினை யெனப்படும் (இருளொடு பொரும்) இருளை விலக்கத் தோன்றும் (ஞான) சூரியனே! (இமகரன்) பனிக்கிரணங் களுடைய சந்திரன் (வலம்) சுற்றிவருகின்ற உலக முழுமையும் ஒரு நொடியில் சுற்றிவந்த பெருமாளே!

(சிவபதமடைவது மொருநாளே)

## 1010

நறுமணம் நெருங்கிய கூந்தல் அவிழவும், சந்திரனை யொத்த முகம் முழுமையும் வியர்வை எழவும், பழைமையான (திரை) கடலிற் பிறந்த அமுதம் போன்ற மொழிகள் (பதறிட) கலக்குண்டு வரவும் கைவளைகள் கலகல என்று ஒலிக்கவும், அணைக்கப்படுகின்ற (போகம்) போக இன்பத்திற்கு இடமான

கொங்கையின்மேல் அணிந்துள்ள மாலைகள் முடிச்சற்று விழவும், இடைமுறிபடுமென்று காலிலணிந்துள்ள இரண்டு சிலம்புகளும் ஓலமிட்டலறவும், மலருந் தன்மையுள்ள இதம் மலர்களின் இடையே இளநிலவின் ஒளியைப் பற்கள் வீச இலவம் பூப்போலச் சிவந்ததுமான வாயிதழ் ஊறலைப் பருகி நின்று

(உள்ளம்) உருகி, உடலும் உடலும் ஒன்றோடொன்று பொருந்த,(அம்மாதர்களுடைய) உயிரும் என்னுயிர்போலவே மிகவும் உறவு கொண்டாடும்படி உதவி செய்கின்ற அழகிய பெண்களுடன் படுக்கையில் காம இச்சையாகிய

கடலிடையே நான் விழுந்தாலும், விழுந்து எழுந்தாலும், அதிலேயே சுழன்றாலும், உன்னுடைய திருவடி இரண்டும் (எனதுயிருதவியென) என் உயிருக்கு உற்ற துணையென நான் உன்னை நினைப்பதையும்,போற்றுவதையும் மறக்கமாட்டேன்;

---

'எயத்திடை வருந்த எழுந்து புடைபரந்
தீர்க்கிடை போன இளமுலை மாதர் - திருவாசகம் 4-33.
'அறச் சற்றான இடையை நலிவன = திருப்புகழ் 983.

எருவை யொடுகொடி கெருடனும் வெளிசிறி
திடமு மிலையென வுலவிட அலகையின்
இனமும் நிணமுண எழுகுறள் களுமிய
விசைபாட

இகலி முதுகள மிசைமிசை யொடுதனி
யிரண பயிரவி பதயுக மிகுநட
மிடவு மிகவெதி ரெதிரெதி ரொருதனு
விருகாலும்,

வரிசை யதனுடன் வளைதர வொருபது
மகுட மிருபது புயமுடன் மடிபட
வலியி னொருகணை விடுகர முதலரி
நெடுமாயன்

மருக குருபர சரவண மதில்வரு
மகிப சுரபதி பதிபெற அவுணர்கள்
மடிய இயல்கொளு மயில்மிசை வரவல
பெருமாளே (16)

## 1011. திருவடியைச் சிந்திக்க

தனன தானன தனதன தனதன
தனன தானன தனதன தனதன
தனன தானன தனதன தனதன தனதான

இலகு வேலெனு மிருவிளை விழிகளும்
எழுதொ ணாதெனு மிருதன கிரிகளும்
இசையி னால்வசை பொசிதரு மொழிகளு
மெதிர்வேகொண்-

டெதிரி லாவதி பலமுடை யிளைஞரை
னினிய மாவினை யிருளெனும் வலைகொடு
இடைவி டாதெறு *நடுவனு மெனவளை
மடவார்தம்;

கலவி மால்கொடு கலைகளு மறிவொடு
கருதொ ணாதென முனிவுற மருள்கொடு
கரையி லாவிதி யெனுமொரு கடலிடை கவிழாதே

---

* பெண்கள் காலனுக்கு ஒப்பிடப் பட்டது
- பாடல் 734-பக்கம் 194 - கீழ்க்குறிப்பைப் பார்க்க

(எருவையொடு) கழுகுடனே (கொடி) காக்கையும், கருடனும் ஆகாய வெளியில் கொஞ்சமேனும் வெற்றிடம் (காலியான இடம்) இல்லை என்னும்படி (நெருங்கி) உலவ, பேய்களின் கூட்டங்களும், மாமிசங்களை உண்ண அங்கு வந்துள்ள (குறள்களும்) பூத வேதாளங்களும் இயற்றமிழ், இசைத்தமிழ்ப் பாடல்களைப் பாட

(இகலி) மாறுபட்டெதிர்க்கும் முற்றின போர்க்களத்தில் (இனம்) சுற்றமாகிய கணங்களின் இசைப்பாட்டுடன் ஒப்பற்ற ரணபயிரவியின் (பதயுகம்) இரண்டு பாதங்களும் மிக்க நடனத்தைச் செய்யவும் மிகவும் எதிருக்கெதிராக நேரே நின்று ஒப்பற்ற வில்லின் இருமுனையும்

(வரிசையதனுடன்) முறைப்படி வளைவுபெற - (வில்லை-கோதண்டத்தை வளைத்து) ஒரு பத்துமுடிகளும் இருபது புயங்களுடனே மடிந்துவிழ , வலிமை வாய்ந்த ஒப்பற்ற ஓர் அம்பைச்செலுத்தின திருக்கரங்களையுடைய முதல்வனாகிய (அரி) திருமாலாகிய (நெடுமாயன்) நீண்ட மாயவனுடைய

மருகனே! குருபரமூர்த்தியே!சரவண மடுவில் வந்த பெருமையனே! (சுரபதி) தேவர் தலைவனாம் இந்திரன் (பதி பெற) தனது பொன்னுலகத்தைப் பெறவும், அசுரர்கள் மடியவும், தகுதி வாய்ந்த மயில்மீது ஏறிவரவல்ல பெருமாளே!

(உனை நினைவது மொழிவது மறவேனே!)

## 1011.

விளங்குகின்ற வேல் போன்றதும், பெரிய வினைகள் விளைவதற்குக் காரணமானதுமான கண்கள், (படத்தில்) எழுதி அமைத்துக் காட்டுதற்கு முடியாதெனும் படியான இரண்டு கொங்கை மலைகள், ஒசையுடனே, பேசப்படுகின்ற பழிப்புச்சொற்கள் வெளிவருகின்ற பேச்சுக்கள், இவைகளின் சந்திப்பால் (இவைகளைக் கொண்டு தாக்கி)

(எதிரிலா) இணையற்ற மிக்க பலத்தைக் கொண்ட இளைஞர்கள் என்கிற இன்பங் கொண்ட (மாவினை) விலங்குகளை - அவர் தம் அஞ்ஞானம் என்னும் வலையில் மாட்டி (இடைவிடா) ஓய்வில்லாமல், (தெறு) கொல்கின்ற அல்லது வருத்துகின்ற (நடுவனும் என) யமன் என்று சொல்லும்படி - (வளை) வளைக்க வல்ல (தமது சூழ்ச்சியிற் சிக்கும்படி இழுக்கின்ற) மாதர்களின்-

புணர்ச்சி ஆசைகொண்டு - கலை நூல்களை அறிவு கொண்டு (கருதொணாதென) நினைக்கவும் முடியாதென்னும்படியாக (முனிவுற) - வெறுத்து விலக்க, (மருள்கொடு)- மயக்க உணர்ச்சியால் - கரை யென்பதே இல்லாத விதி என்கிற ஒரு கடல் நடுவில் நான் கவிழ்ந்து போகாமல்-

கருணை வானவர் தொழுதெழு மயிலுறை
குமர கானவர் சிறுமியொ டுருகிய
*கமல தாளிணை களவிது நினைவுற
அருள்தாராய்;

பலகை யோடொரு பதுசிர மறாதி
பகழி யானர வணமிசை துயில்தரு
பரமன் மால்†படி யளவிடு மரிதிரு மருகோனே-
பழுதி லாமன முடையவர் மலர்கொடு
பரவ ‡மால்விடை மிசையுறை பவரொடு
Xபரம ஞானமு மிதுவென வுரைசெய்த
பெரியோனே.

அலகை காளிகள் நடமிட அலைகட
லதனில் நீள்குடல் திணமலை பிணமலை
அசுரர் மார்பக மறஅது படவிடு மயில்வேலா-
Oஅரிய பாவல நுரைசெய அருள்புரி
முருக ஆறிரு புயஇய லிசையுடன்
**அழகு மாண்மையு மிலகிய சரவண
பெருமாளே. (17)

## 1012. திருவடியைப் பெற

தனன தானன தனதன தனதன
தனன தானன தனதன தனதன
தனன தானன தனதன தனதன தனதான

முருகு லாவிய குழலினு ††நிழலினும்
‡‡ அருவ மாகிய இடையினு நடையினு
முளரி போலுநல் விழியினு மொழியினு மடமாதர்-
முனிவி லாநகை வலையினு நிலையினும்
இறுக வாரிடு மலையெனு முலையினு
முடிவி லாததொர் கொடுவிட மடுவித மயலாகி;

---

* கமல = முக கமலத்தை யுடையவனே

† உலகை அளந்தது - பாடல் 268-பக்கம் 166-கீழ்க்குறிப்பு.

‡ திருமால் விடையானது - பாடல் 389 பக்கம் 481-
பாடல் 786 - பக்கம் 333 - கீழ்க்குறிப்பு.

X தந்தைக்கு உபதேசித்தது - பாடல் 327-பக்கம் 314 - குறிப்பு

O நக்கீரருக்கு அருளியது - பாடல் 91-பக்கம் 212
பாடல் 203 -பக்கம் 20 கீழ்க்குறிப்பு

** அழகும் - ஆண்மையும் - பாடல் 1254-அடி 8- பார்க்க.

†† நிழல் - ஒளி - 'நிழல் திகழ் மழு' - சம்பந்தர் 36-3-4
'நிழல் கால் நெடுங்கல்'-சிலப்பதி 5-127(தொடர்ச்சி பக்கம் 47)

கருணை நிறைந்த - தேவர்கள் வணங்கியெழும் - மயில் வாகனக் குமரனே! வேட்டுவச் சிறுமி வள்ளி பொருட்டு மனமுருகி (நடந்த தாமரை போன்ற) உனது திருவடியிணைகளை - (அல்லது வள்ளி பொருட்டு மனம் உருகின முக கமலத்தை உடையவனே! உனது திருவடியிணைகளைக்) கனவிலும் (நான்) நினைக்கும்படி. (உனது) திருவருளைத் தந்தருளுக.

பல கைகளுடன் ஒப்பற்ற பத்துத் தலைகளும் அற்று விழும்படிச் செலுத்தின அம்பை உடையவன், பாம்பணையின் மேல் துயிலுகின்ற பரமன், மாயோன், பூமியை அளந்த அரி, (ஆகிய திருமாலின்) அழகிய மருகனே!

குற்றமில்லாத மனத்தை உடைய அடியார்கள் மலர் கொண்டு போற்றி செய்ய பெருமை வாய்ந்த (அல்லது திருமாலாம்) இடப வாகனத்தின்மீது வீற்றிருப்பார் ஆகிய சிவ பெருமானுக்கு மேலான ஞானப் பொருள் இஃதாம் என்று உபதேசித்த பெரியோனே!

பேய்களும், காளிகளும் கூத்தாட, அலை வீசும் கடலிலே நீண்ட குடல்களும், மாமிச மலையும், பிண மலையும் (நிறையும்படி) அசுரர்களின் மார்பிடங்கள் சேறுபட்டழியச் செலுத்தின கூரிய வேலாயுதனே!

அருமை வாய்ந்த புலவர்கள் உன்னைப்பாடிப் புகழ (அருள் புரியும் முருகனே!) (அல்லது அருமை வாய்ந்த பாவலராம் நக்கீரர் உன்னைத் திருமுருகாற்றுப்படை என்னும் புகழ்ப்பாவைப் பாடிப் பரவ) அவருக்கு அருள்புரிந்த முருகனே! பன்னிரு திருப்புயங்களை உடையவனே! தகுதியும், புகழும் (அல்லது இயற்றமிழும், இசைத் தமிழும்) அழகும், ஆண்மையும் விளங்கும் பெருமாளே! சரவண மடுவில் தோன்றிய பெருமாளே!

(தாளிணை கனவிலும் நினைவுற அருள்தாராய்)

## 1012.

நறுமணம் வீசுகின்ற கூந்தலினும், கூந்தலின் (நிழலினும்) ஒளியினும்,கண்ணுக்குப் புலப்படாத அளவில் நுணுகியிருக்கின்ற இடையினும் நடையழகினும், தாமரை மலர் போன்ற அழகிய கண்ணிலும், பேச்சிலும் அழகிய பெண்களின் -

கோபக்குறியிலாத புன்னகையாம் வலையிலும், அவர்கள் உள்ள (நிலையிலும்) தன்மையிலும், அழுத்தமாக ரவிக்கையால் மூடப்பட்ட மலை போன்ற கொங்கையிலும், முடிவே இல்லாததும், ஒப்பற்ற பொல்லாத விஷம் கொல்வது போன்ற தன்மையதுமான மோகத்தைக் கொண்டவனாகி-

‡‡ இடை அருவ மாதலின் - "மதன தனு நிகர் இடை" என்றார் 1184- ஆம் பாடலில்

நரகி லேவிழு மவலனை யசடனை
வழிப டாதவொர் திருடனை மருடனை
நலமி லாவக கபடனை விகடனை வினையேனை-
நடுவி லாதன படிறுகொ ளிடறுசொ
லதனில் மூழ்கிய *மறவனை †யிறவனை
நளின மார்பத மதுபெற ஒருவழி யருள்வாயே;
‡ வரிய ராவினின் முடிமிசை நடமிடு
பரத மாயவ xனெழுபுவி யளவிடு
வரதன் மாதவ oனிரணிய னுடலிரு பிளவாக
வகிரு மாலரி திகிரிய னலையெறி
தமர வாரிதி முறையிட நிசிசரன்
மகுட மானவை யொருபதும் விழவொரு
கணையேவுங்;
கரிய மேனியன் •• மருதொடு பொருதவன்
†† இனிய பாவல னுரையினி லொழுகிய
கடவுள் ‡‡ வேயிசை கொடுநிரை பரவிடு
மபிராமன்-
கருணை நாரண னரபதி சுரபதி
மருக கானக மதனிடை யுறைதரு
கரிய வேடுவர் சிறுமியொ டுருகிய
பெருமாளே (18)

---

* மறவன் - கொடியோன் - 'மறவர் மறவ'- பெரும்பாண் - 455
'கொடியோர்க்குக் கொடியவனே' - நச்சினார் உரை
† இறவனை - இறவு - சாவு " பெருந்தகை பிறவினொ
டிறவு மானான்"- சம்பந்தர் 1-110-1

இறவனை - இறப்பதற்கு ஒருப்பட்ட என்னை -
'மண்ணிலே பிறந் திறந்து மண் ணாவதற் கொருப்படு கின்றேனை';
'செத்துப் போய் அரு நரகிடை வீழ்வதற் கொருப் படுகின்றேனை' - திருவாசகம் அதிசய - 6,4.

‡ காளிங்க நிர்த்தனம் - பாடல் 245-2-பக்கம் 114 கீழ்க் குறிப்பு X
•• பாடல் 402-பக்கம் 518 கீழ்க்குறிப்பு.
பரதம் - கூத்து -
அராகம் - ராகம் - "பாவமோ டராகம் தாளமிம் மூன்றும்"
பள்ந்திடு முறையினால் பரதம் - திருவிளை - மாதிபாடின 8.
X புவி அளந்தது - பாடல் 267-பக்கம் 166 - குறிப்பு ‡
O இரணியனை அட்டது - பாடல் 327-1- பக்கம் 317 - கீழ்க்குறிப்பு.
(தொடர்ச்சி பக்கம் 49)

நரகத்திலே விழுவதற்குற்ற வீணன், முட்டாள், ஒரு நல்வழிக்கும் வராத ஒப்பற்ற திருடன், மயக்க அறிவு கொண்டவன், நன்மை நினைவே இல்லாத (அக கபடன்) உள்ளக் கபடன் - மன வஞ்சகன், (விகடன்) செருக்குள்ளவன் - அல்லது உன்மத்தம் கொண்டவன், தீவினைக்கு ஈடானவன் -

நடுநிலைமையே (நியாயமே) இல்லாது (படிறு) வஞ்சகமே பூண்டு தடை வார்த்தைகளைப் பேசுவதிலேயே முழுகியுள்ள (மறவன்) கொடியோன், இறந்தொழிவதற்கே பிறந்தவன் - ஆகிய நான்- தாமரை போன்ற உனது திருவடியைப் பெறுதற்கு ஒரு வழியை உபதேசித்தருளுக.

கோடுகளை உடைய (காளிங்கன்) என்னும் பாம்பின் முடி மீது நடனம் செய்யும் கூத்தில் வல்ல மாயவன், ஏழுலகையும் அளவிட்ட (வரதன்) வரமளிப்பவன், மாதவன், இரணியனுடைய உடலை இரண்டு பிளவாகும்படிக்

கீறின மாயோன், அரி, சக்கரமேந்தியவன், அலை வீசுகின்றதும் ஒலிப்பதுமான கடல் ஒலிட்டலறவும், அரக்கன் (ராவணனுடைய) கிரீடம் அணிந்த ஒரு பத்துத் தலைகளும் அற்றுவிழ ஒரு அம்பைச் செலுத்தின-

கரிய மேனிப் பிரான், மருத மரங்களைச் சாடினவன், இனிமை வாய்ந்த பாவலனாம் திருமழிசை யாழ்வாரின் சொல்லுக்கு இணங்கி அதன்படி நடந்த கடவுள், புல்லாங்குழலின் இன்னிசையாலே பசுக் கூட்டத்தைப் பரிபாலித்த அழகன் -

கருணை நிறைந்த நாராயணமூர்த்தி, அரசன் (அல்லது நரன்;அருச்சுனனுக்குப் (பதி) தலைவன்), தேவர்கள் தலைவன் - ஆகிய-திருமாலுக்கு மருகனே! காட்டினிடையே குடியிருந்த கருநிறங் கொண்ட வேடர்களின் சிறுமியாம் வள்ளிபால் உருகிய பெருமாளே!

(பதமது பெற ஒருவழி யருள்வாயே)

---

** மருதொடு பொருத விவரம் - பாடல் 143 -பக்கம் 332

கீழ்க்குறிப்பு.

†† " வண்டமிழ் பயில்வோர் பின் திரிகின்றவன்"- என்றார் பிறிதோரிடத்தும் - (திருப்புகழ் -3). வரலாறு - பாடல் 3- பக்கம் 26, பாடல் 991-பக்கம் 868 - கீழ்க்குறிப்பு.

‡‡ புல்லாங்குழ லூதி ஆநிரை மேய்த்தல் -

'ஆநிரை காத்த பிரான் - கோவலனாய்க்
குழலூதி யூதி கன்றுகள் மேய்த்து' - பெரியாழ்வார் 3 4-4

## 1013. திருவடியை நினைக்க

தனதன தனதன தந்த தானன
தனதன தனதன தந்த தானன
தனதன தனதன தந்த தானன தனதான

அரிசன பரிசஅு லங்க்ரு தாம்ருத
கலசமு மதனுய ரம்பொன் மாமுடி
யதுமென இளைஞர்கள் நெஞ்சு மாவியு
மொருகோடி

அடைபடு குடயுக ளங்க ளாமென
ம்ருகமத களபம ணிந்த சீதன
அபிநவ கனதன மங்கை மாருடன் விளையாடி

இரவொடு பகலொழி வின்றி மால்தரு
மலைகட லளறுய டிந்து வாயமு
தினிதென அருளஅ ருந்தி யார்வமொ டிதமாகி

இருவரு மருவிய ணைந்து பாழ்படு
மருவினை யறவும றந்து னின்தரு
மிணைமல ரடிகள்நி னைந்து வாழ்வது
மொருநாளே

சுரர்குல பதிவிதி விண்டு தோலுரி
யுடைபுனை யிருடிக ளண்ட ரானவர்
துதிசெய எதிர்பொர வந்த தானவ ரடிமாள

*தொலைவறு மலகையி னங்க ளானவை
நடமிட நிணமலை துன்ற வேயதில்
துவரிது புளியிது தொய்ந்த நீதிது இதுவீனால்

பருகுத லரியது கந்த நீதிது
உளதென குறளிகள் தின்று மேதகு
†பசிகெட வொருதனி வென்ற சேவக மயில்வீரா

பகிரதி சிறுவவி லங்க லூடுறு
குறமகள் கொழுநப டர்ந்து மேலெழு
பருவரையுருவஎ றிந்த வேல்வல பெருமானே (19)

---

* 6,7 - அடிகள் பூத வேதாள வகுப்பின் கருத்தைக் கொண்டவை.

† பேய்களுக்குப் பசி அதிகம் " உணங்கல் வயிறு குளிர உவந்து பருக பருக" " பிரமனை வேண்டிப் பின்னும் பெரும் பசி பெறவும் வேண்டும்" - கலிங்கத்துப்பரணி - அவதாரம் 72, 75

(தொடர்ச்சி 51 ஆம் பக்கம் பார்க்க)

# 1013.

மஞ்சள் பூசியுள்ள, அலங்காரமான, அமிர்த கலசம் என்றும், (மதன்) மன்மதனுடைய சிறந்த அழகிய பொன்னாலாய, பெருமை வாய்ந்த கிரீடம் என்றும் சொல்லும்படியாய் விளங்கி இளைஞர்களுடைய நெஞ்சம் உயிரும் ஒரு கோடிக் கணக்கில் -

(வந்து) அடைபடுவதான (குட யுகங்களாமென) குடங்கள் இரண்டென்று சொல்லும்படியாய்க், கஸ்தூரிக் கலவையை அணிந்துள்ள, குளிர்ச்சியுள்ள, புதுமை வாய்ந்த, கனத்த கொங்கைகளைக் கொண்ட மங்கையர்களுடனே லீலைகள் புரிந்து -

இரவும் பகலும் ஓய்வே இல்லாமல், மோகத்தைத் தரும் அலைவீசும் (காமக்) கடற் சேற்றிற் படிந்து, வாயிதழ் ஊறல் இனிக்கும் எனத் தர அதனைப் பருகி, அன்பும் இன்பமும் பூண்டு -

இருவரும் பொருந்தி அணைந்து பாழாவதற் கிடமாகும் பெரிய (வினைக்கீடான) செயலை அடியோடு மறந்து, உனது (நீள்தரு) ஒளி பொருந்திய இரண்டு தாமரை மலர் அனைய திருவடிகளை நினைந்து வாழ்வதான ஒரு நாள் எனக்குக் கிட்டுமா!

தேவர் குலத்துத் தலைவனான இந்திரனும், (விதி) பிரமனும், (விண்டு) திருமாலும், (மான்) தோல் உரியை ஆடையாக அணிந்துள்ள ரிஷிகளும், தேவர்களும் தோத்திரம் செய்ய, எதிர்த்துப் போர் செய வந்த அசுரர்கள் அடியோடு இறந்துபட-

(தொலைவு) சோர்வு இல்லாத பேய்க் கூட்டங்களானவை (மகிழ்ச்சியிற்) கூத்தாடும்படியாக, மாமிச மலை நிரம்ப (அவை களுக்குக்) கிடைக்க - (அதில்) அங்ஙனம் கிடைத்த மாமிசத்தில் - துவர்ப்புள்ள பாகம் இது, புளிப்புள்ள பாகம் இது, (தோய்ந்து போன - கட்டியாய் உறைந்துபோன பாகம் (ஈது) இது, இன்னது இன்னது வீணாய் - கெட்டுப்போனது-

உண்பதற்கு உபயோக மற்றது இது, உண்ண இனிப்பது இது-இங்கே உளது என்று கூறிக் (குறளிகள்) பூத பிசாசுகள் உண்டு, மிக்க தமது பசி தீரும்படியாக, ஒப்பற்ற தனித்த நிலையில் வெற்றி கொண்ட பராக்ரம மயில் வீரனே!

கங்கையின் புதல்வனே! (விலங்கல் ஊடுறு) மலையில் வாசஞ் செய்திருந்த குறமகள் (வள்ளியின்) (கொழுந) கணவனே! அகன்று மேலே ஓங்கி வளர்ந்த பெரிய கிரவுஞ்சமலை ஊடுருவும் படிச் செலுத்தின வேலாயுதத்தை (ஏந்த) வல்ல பெருமாளே!

(மலரடிகள் நினைந்து வாழ்வதும் ஒருநாளே)

---

சூர சம்மாரத்தின்போது பேய்களுக்கு உணவு நிரம்பக் கிடைத்தது :- "சூரொடும் பொர வஞ்சி சூடிய பிள்ளையார் படை தொட்ட நாள், ஈருடம்பு மிசைந் திரண்டுதிரப் பரப்பு மிறைத்தனம்"- தக்க, யாகப் 231.

## 1014. கதி பெற

தனதன தனதன தந்த தானன
தனதன தனதன தந்த தானன
தனதன தனதன தந்த தானன தந்ததான

உரைதரு பரசம யங்க ளோதுவ
துருவென அருவென வொன்றி லாததொ
ரொளியென வெளியென வும்ப ராமென
இம்பரா நின்-

றுலகுகள் நிலைபெறு தம்ப மாமென
வுரைசெய அதுபொருள் கண்டு மோனமொ
டுணர்வுற வுணர்வொடி ருந்த நாளும
ழிந்திடாதே;

பரகதி பெறுவதொ ழிந்தி டார்வன
பரிசன தெரிசன கந்த *வோசைகள்
பலதல விதமுன துன்ப மாகிம யங்கிடாதே

பரிபுர பதமுன வஞ்ச மாதர்கள்
பலபல விதமுள துன்ப சாகர
படுகுழி யிடைவிழு பஞ்ச பாதக
னென்றுதீர்வேன்;

அரகர சிவசுத கந்த னேநின
தபயம பயமென நின்று வானவர்
அலறிட வொழிகினி யஞ்சி டாதென
அஞ்சலகூறி-

அடல்தரு நிருதர தந்த வாகினி
யமபுர மடையஅ டர்ந்து போர்புரி
அசுரன தகலமி டந்து போகவ கிர்ந்தவேகம்,

விரிகடல் துகளெழ வென்ற வேலவ
மரகத கலபசி கண்டி வாகன
விரகுள சரவண முந்தை நான்மறை யந்தமோதும்-

விரைதரு மலரிலி ருந்த வேதனும்
விடவர வமளித யின்ற மாயனும்
விமலைகொள் சடையர னும்ப ராவிய
தம்பிரானே. (20)

---

* ஓசைகள் - என்றதனால் உபலக்கணத்தால் - 'ரசம்' என்பதையும் சேர்க்க.

† பஞ்ச பாதகம் - பாடல் 79- அடி 1.

# 1014.

சொல்லப்படுகின்ற மேலான சமயங்களால் (அல்லது பிற சமயங்களால்) ஓதப்படுவதும், உருவம் உருவமின்மை என்று ஒன்றும் இல்லாததும், ஒளி என்றும், வெட்ட வெளி என்றும், மேலே, உளதென்றும்இங்கே உளதாம் என்றும், நிற்பதாய்

உலகங்கள் நிலைபெற்று நிற்க உதவும் (தூண்) பற்றுக் கோடாம் என்று சொல்லும்படியாய், உள்ள அந்த பரம் பொருளை உணர்ந்தறிந்து, மௌன நிலையில் ஞான உணர்ச்சி உண்டாக, அந்த ஞான உணர்ச்சியோடு இருந்து, அத்தகைய நாள்கள் அழிந்து வீண்போகாமல் -

மேலான நற்கதியைப் (பெறுவது ஒழிந்திட) பெறும்படி யான பாக்கியம் ஒழிந்துபோக - என்னை விட்டு விலக - (ஆர்வன)- ஆசைக்கிடந்தரும் ஸ்பரிசம், (தெரிசனப்) ரூபம், (ரசம்), கந்தம், ஓசை முதலான ஐம்புலங்களால் உண்டாகும் பலவிதமான சிற்றின்ப விதங்களைக் கொண்டதான துன்பத்திற்பட்டு நான் மயக்கம் கொள்ளாமல் -

சிலம்பு அணிந்த பாதங்களை உடைய வஞ்சகம் கொண்ட பெண்களால் வரும் பலபல வகையாக உள்ள துன்பக கடலாகிய பெருங் குழியினிடையே விழுகின்ற பஞ்சபாதகனாகிய நான் என்று ஒரு முடிவு கண்டு கரையேறுவேன்!

ஹர ஹர சிவகுமரனே! கந்தபிரானே! உனது அடைக்கலம், அடைக்கலம் (நாங்கள்) என நின்று தேவர்கள் ஓலமிட - (உங்கள் பயம்) (ஒழிக - இனி) இனி ஒழிவதாக, பயப்பட வேண்டாம் என்று அபயம் கூறி - அஞ்சாதீர்கள் என்று அருள் பாலித்து-

வலிமை மிக்க அசுரர்களின் (அநந்த) அளவற்ற - கணக்கற்ற (வாகினி) சேனைகள் - படைகள் யமபுரம் சேரவும், நெருங்கிப் போர்புரிந்த (அசுரனது) சூரனுடைய (அகலம்) மார்பு (இடந்து போக) கிழிபட (வகிர்ந்த) பிளந்தெறிந்த வேகத்தில் -

பரந்துள்ள கடலும் (வற்றித்) தூளெழும்படி செயங்கொண்ட வேலாயுதனே! பச்சை நிறத் தோகையைக் கொண்ட மயில் வாகனனே! (விரகுள) சாமர்த்தியம் உள்ள சரவண பவனே! பழைய நான்கு வேதங்களை அழகாக ஓதுகின்றவனும் (வேதங்களை முடிவுவரை ஓதவல்லவனும்)

நறுமணமுள்ள தாமரை மலரில் இருப்பவனுமான பிரமனும், விஷங்கொண்ட (அரவு அமளி) ஆதிசேடனாகிய பாம்பணைமேல் துயில்பவனுமாகிய திருமாலும், பரிசுத் தமான கங்காதேவியைக் கொண்ட சடாபாரத்தையுடைய சிவனும் - ஆக மூவர்களும் பரவிப் போற்றும் தம்பிரானே! (பஞ்சபாதகன் என்று தீர்வேன்)-

## 1015. கழல் பெற

தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தந்தத் தனந்த தந்தன
தனதன தந்தத் தனந்த தநதன தந்ததான

*இமகிரி மத்திற் புயங்க வெம்பணி
கயிறது சுற்றித் தரங்க வொண்கடல்
இமையவர் பற்றிக் கடைந்த அன்றெழு நஞ்சுபோலே-
இருகுழை தத்திப் புரண்டு வந்தொரு
குமிழையு மெற்றிக் கருமபெ னுஞ்சிலை
ரதிபதி வெற்றிச் சரங்க ளஞ்சையும் விஞ்சிநீடு.
சமரமி குத்துப் பரந்த செங்கயல்
விழியினில் மெத்தத் ததும்பி விஞ்சிய
தமனிய வெற்புக் கிசைந்த வம்பணி கொங்கைமீதே-
தனிமனம் வைத்துத் தளர்ந்து வண்டமர்
குழலியர் பொய்யக்குட் கலங்க லின்றியெ
சததளம் வைத்துச் சிவந்த நின்கழல் தந்திடாயோ;
அமரர்து திக்கப் புரந்த ரன்தொழ
† எழுபது வர்க்கக் குரங்கு கொண்டெறி
‡ யலைவைய டைத்துக் கடந்து சென்றெதிர் முந்துபோரில்-
அசுரர்மு தற்கொற் றவன்பெ ருந்திறல்
இருபது கொற்றப் புயங்கள் சிந்தி-
அழகிய கொத்துச் சிரங்க ளொன்பது மொன்றுமானக்:
கமலம லர்க்கைச் சரந்து ரந்தவர்
மருமக மட்டுக்க கொன்றை யந்தொடை
மறையற வொப்பற்ற தும்பை யம்புலி கங்கைசூடுங்-

---

* மேரு, இமயம், மந்தரம், இவற்றை வேறுபாடின்றி
ஒன்றாகக் கூறுதல் வழங்கி வந்தது:-
'ஆடகச் சிலம்பொடு கடைந்து'- திருப்புகழ் 545
'பார மேரு பருப்பதம் மத்தென'- திருப்புகழ் 956
'ஆடக மந்தரம் நாட்டி'- திருப்புகழ் 1003
'ஆடக வெற்பைப் பெருத்த மத்தென'- திருப்புகழ் 1186
கரிகாற் சோழன் இமயத்திற் புலிக்குறி யிட்டதை -
"புண்டரிகம் பொன்வரை மேல் ஏற்றிப் புலியளிக்கும்"
- என்றார் பெரிய புரா -608.

(தொடர்ச்சி பக்கம் 55

# 1015

இமயமலை (மந்தரம்) என்னும் மத்தில் (புயங்க வெம்பணி) (ஆதிசேடன்) என்னும் நாகராஜனாகிய கொடிய பாம்பைக் கயிறாகச் சுற்றி, அலைவீசும் ஒள்ளிய கடலைத் தேவர்கள் பற்றிக் கடைந்த பொழுது, அன்று எழுந்த விஷம் போல்வதாய்-

இரண்டு காதின் குழைகள்மீது பாய்ந்து புரண்டு வந்தும், ஒரு குமிழம்பூப் போன்ற மூக்கைத் தாக்கியும் கரும்பாகிய வில்லை ஏந்திய (ரதி கணவனாம்) மன்மதனும் ஜெய பாணங்கள் ஐந்தையும் (மலர்ப் பாணங்கள் ஐந்தின் வேகத்தையும் - செயலாற்றும் திறமையையும்) வென்று மேம்படுவதாய் நீண்டு -

போர்த்தொழில் நிறைந்ததாய், அகன்றுள்ளதாய், செவ்விய கயல் மீன்போன்ற கண்களிலும், மிகவும் பூரித்து மேலெழுந்துள்ள பொன்மலை போன்றதும், அதற்குத் தக்க ரவிக்கை அணிந்ததுமான கொங்கையிலும் -

தனியாக (வேறு கவனமின்றி அதே கவனமாய்) மனத்தை வைத்துச் சோர்வுற்று, வண்டுகள் விரும்பிச் சேரும் கூந்தலை உடைய மாதர்களின் பொய்யான இன்பத்தினாற் கலக்கம் அடைதல் ஒழிந்து, நூற்றிதழ்த் தாமரையாம் மலர் வைத்து (நான்) பூசிக்க, அல்லது தாமரை (வைத்து) போன்ற சிவந்த - உனது திருவடிகளை அடியேனுக்குத் தந்தருள மாட்டாயோ!

தேவர்கள் துதிசெய்ய இந்திரன் தொழுது வணங்க எழுபது வகையான குரங்குப் படைகளைக் கொண்டு அலைவீசும் கடலை அணையிட்டு அடைத்து, அந்த அணையின் உதவியால் கடலைக் கடந்து இலங்கையிற் சென்று, எதிரில் முனைந்து வந்த போரிலே-

அரக்கர்களின் தலைவனாய் நின்ற அரசனாம் இராவணனுடைய மிக்க பராக்ரமம் கொண்ட இருபது வெற்றித் தோள்கள் அற்று விழவும், அழகான கொத்தாயிருந்த தலைகள் (ஒன்பதும் + ஒன்றும்) பத்தும் மாண்டு விழத் -

தாமரை மலர் போன்ற திருக்கரத்தால் அம்பைச் செலுத்தின (ஸ்ரீ ராமரின்) திருமாலின் மருகனே! தேன் சொட்டும் கொன்றையாலாய அழகிய மாலை மாசு இல்லாத - நிகரில்லாத தும்பைமாலை, அம்புலி - நிலவு, கங்கை இவைகளைச் சூடியுள்ள-

---

* கடல் கடைந்த வரலாறு - பாடல் 509 - பக்கம் 162

பாடல் 604-பக்கம் 396 கீழ்க்குறிப்பு

† எழுபது வர்க்கக் குரங்கு - திருப்புகழ் 515 பக்கம் 180 கீழ்க்குறிப்பு; பாடல்கள் 811, 880-ம் பார்க்க.

‡ கடலை அடைத்தது - பாடல் 754-பக்கம் 248 கீழ்க்குறிப்பு †பாடல் 177 - பக்கம் 412- கீழ்க்குறிப்பு.

கடவுளர் பக்கத் தணங்கு தந்தருள்
குமரகு ருத்தத்தை பின்தி ரிந்தவன்
கடினத னத்திற் கலந்தி லங்கிய தம்பிரானே (21)

## 1016. மாதர் நேய மயக்கு அற

தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தத்தத் தனந்த தந்தன தந்ததான

முகமுமி னுக்கிப் பெருங்க ருங்குழல்
முகிலைய விழ்த்துச் செருந்தி சண்பக
முடியநி றைத்துத் ததும்பி வந்தடி முன்பினாக-
முலையைய சைத்துத் திருந்த முன்தரி
கலையைநெ கிழ்த்துப் புனைந்து வஞ்சக
முறுவல்வி ளைத்துத் துணிந்து தந்தெரு
முன்திலூடே;

மகளிர்வ ரப்பிற் சிறந்த பந்தியின்
மதனனு நிற்கக் கொளுந்து வெண்பிறை
வடவையெ றிக்கத் திரண்டு *பண்டனை வண்டுபாட-
† மலயநி லத்துப் பிறந்த தென்றலு
நிலைகுலை யத்தொட் டுடம்பு புண்செய
மயலைய ளிக்கக் குழைந்து சிந்தைம
லாகுலாமோ;

பகலவன் மட்கப் புகுந்து ‡ கந்தர
கணமூ கட்டைப் பிளந்து மந்தர
பருவரை யொக்கச் சுழன்று பின்புப றந்துபோகப்-
பணமணி பட்சத் X துரங்க முந்தளி
முடுகிந டத்திக் கிழிந்து விந்தெழு
பரவைய ரற்றப் ப்ரபஞ்ச நின்றுப யந்துவாடக்;

---

* பண்டனை = பண் தனை.

† தென்றல் மலய நிலத்தில் - (மலயாசலம் - பொதியமலையில்) பிறத்தலால் 'மலய மாருதம்' எனப்படும். "பூஞ்சோலையும் தடமும் மருங்களை மலய மாருதமும்... இன்னும் காண்குமோ என மனங்கசிந்தான்"- வில்லி - பாரத - குருகுல -81.

‡ கந் தரம் = மேகம்.

X மயிலின் வேகம் - "வாசி விசை கொண்ட வாகனப் பீலியின்

• கொத்தசைபடு கால்பட் டசைந்தது மேரு அடியிட எண் திசை வரை தூள்பட்ட அத் தூளின் வாரி திடர் பட்டதே"-

கந்தரலங் 11.

கடவுள் சிவபிரானது (இடது) பக்கத்தில் உள்ள (அனாங்கு) தேவி பார்ப்பதி பெற்றருளிய குமரனே! குறக் கிளி (வள்ளியின்) பின் - வள்ளியை நாடித் திரிந்து - அவளுடைய வன்மை கொண்ட கொங்கையில் அணைந்து விளங்கின தம்பிரானே!

(சிவந்த நின்கழல் தந்திடாயோ)

# 1016.

முகத்தை அலங்கரித்து மினுக்கி, நீண்ட கரிய கூந்தலாம் மேகத்தை அவிழ்த்து, அக்கூந்தலில் செருந்திப்பூ, சண்பகப்பூ முதலிய மலர்களை நிரம்ப வைத்து முடித்துத் (ததும்பி வந்து) உள்ளத்தில் களிப்பு நிறைந்து வந்து, (அடி முன்பினாக) அங்கும் இங்கும் அடி வைத்து - முன்னும் பின்னும் அடியிட்டு உலவிக் -

கொங்கைகளை அசைத்தும் - (திருந்த) சரிப் படுத்துவது போல -(முன்) முன்னே தரித்துள்ள (கலையை) ஆடையைத் தளர்த்தியும், அணிந்தும், வஞ்சகம் நிறைந்த புன்னகை செய்தும், துணிவுடனே தாம் வாசம் செய்யும் தெருவின் முன் புறத்திலே (நிற்கும்)

பெண்களுடைய (வரப்பில்) எல்லையில் - அவர்களுடைய சிறப்புற்ற கூட்டத்தில் - மன்மதனும் நின்று (அவனது பாணங்களை ஏவ - அவனது தொழிலைச் செய்ய), தீப்போல எரியும் வெண்ணிலாவும் வட வாக்கினி போல - நெருப்பை வீசக், கூட்டமாகக் கூடிப் (பண்தனை) - ராகங்களை வண்டுகள் பாட-

மலய நிலம் - பொதிகை மலையில் நின்று புறப்படும் தென்றற் காற்றும் எனது மன உறுதி கெடும்படி என்மேற்பட்டு, எனது உடம்பெலாம் புண்ணாகும்படித் தாக்கி, காம இச்சையை விளைவிக்க - அதனால் உருகி உளைந்து என் சிந்தை கலக்கம் அடையலாமா!

சூரியன் (மட்க) ஒளிகுன்றி ஒடுங்கச் சென்று மேகங்களைக் கொண்ட ஆகாய உச்சியைக் கிழித்துதச் சென்று, மந்தரமலை போன்ற பெரிய மலைகள் எல்லாம் ஒருங்கே சுழலும்படியும் - தான் செல்லும் வேகத்தில் தன்பின் அவை பறந்து வரும்படியும்

படத்தில் ரத்னங்களைக் கொண்ட பாம்பை உண்ணும் மயிலாம் குதிரையை (அல்லது பணம் அணி - பாம்பை அணிந்துள்ளதும், படசம் - சிறகுகளை உடையதுமான மயிலாம் குதிரையை)ஒப்பற்ற வகையில் முடுகிச் செலுத்தி - அதனால் - கிழிபட்டு(விந்து) நீர்த்துளிகள் எழுகின்ற (அல்லது இந்து எழு - சந்திரன் உதிக்கின்ற) கடல் ஒலிடவும், உலகமெல்லாம் நின்று பயப்பட்டு வாடவும்,

குகனென முக்கட் சயம்பு வும்பரிய
மிக*வக ராக்குக் குரம்பை வந்தரு
குறவமர் குத்திப் பொருங்கொ டும்படை
வென்றவேளே-
குழை† சவை யொப்பத் திருந்த சங்கரி
கவுரியெ டுத்துப் பரிந்து ‡ கொங்கையில்
குணவமு தய்க்கத் தெளிந்து கொண்டருள்
தம்பிரானே (22)

## 1017. முருகன் கதி தருவான்

தனதன தனதன தனதன தனதன
தத்தத் தத்தன தத்தத் தத்தன தந்ததான

படிதனி லுறவெனு மனைவர்கள் பரிவொடு
பக்கத் திற்பல கத்திட் டுத்துயர் கொண்டுபாலப்-
பணைமர விறகுடை யழலிடை யுடலது
பற்றக் .கொட்டுகள் தட்டிச் சுட்டலை
X யொன்றியேகக்;
கடிசம னுயிர்தனை யிருவிழி யனலது
கக்கச் சிக்கென முட்டிக் கட்டியு டன்றுபோமுன்-
கதிதரு முருகனெ மெனநினை நினைபவர்
கற்பிற் புக்கறி வொக்கக் கற்பது தந்திடாயோ;
வடகிரி தொளைபட அலைகடல் கலறிட
மற்றுத் திக்கெனு மெட்டுத் திக்கிலும் வென்றிவாய-
வலியுட னெதிர்பொரு மசுரர்கள் பொடிபட
மட்டித் திட்டுயர் கொக்கைக் குத்திம லைந்தவீரா;

---

* குரம்பு - எல்லை. 'நல் கூர்ந்தாராயினும் சான்றோர் குரம்பெழுந்து குற்றங்கள் டோர்"- நாலடி - 16-3.
அசுரர்க்கு - நான்காம் வேற்றுமை உருபு ஆறாம் வேற்றுமைப் பொருளில் வந்த உருபு மயக்கம்.
† சவை = பார்வதி.
‡ இது முருகன் என்றாவது - சம்பந்தர் என்றாவது கொள்ளலாம்.
" உமை முலைப் பா லுண்ட பாலன்"- கந்தரலங் 81.
'உச்சிமோந்து முலைப்பால் அகத்துள் மகிழ்வூத் தளித்து'-
கந்தர் கலிவெண்பா 85.
'திரு முலைப் பால் வள்ளத்துக் கறந்தருளி... உண்
அடிசில் என ஊட்ட உமை யம்மை"
- பெரிய புரா - ஞானசம் 67 - 68.
x அலை ஒன்றி ஏகுதல் - 'நீரிற் படிந்து விடு பாசத் தகன்று' என்றார் 162-ஆம் பாடலில் - பக்கம் 376- கீழ்க்குறிப்புப்பார்க்க.

(இங்ஙனம் மயில் மீது நீ ஆரோகணித்துச் செல்லும் திருக்கோலக் காட்சியைக் கண்டு) 'குக மூர்த்தியே!' என்று முக்கண் சம்பு மூர்த்தியும் (சிவனும்) உன்மீது பிரியம் மிகக் கொள்ள. (அசுரர்க்கு)-அசுரர்களுடைய (குரம்பை) உடல் வந்து அருகு உற - சமீபிக்க (அசுரர்கள் நெருங்கிவர - என்ற படி) (அல்லது அசுரர்களுக்கு உள்ள (குரம்பை) - எல்லையை (வந்து அருகுற) சேர்ந்து சமீபிக்க அசுரர் இருப்பிடம் சமீபிக்கப் - போரில் அவர்களைக் குத்திச் சண்டை செய்த கொடிய (அவர்களுடைய) சேனையை ஜெயித்த செவ்வேளே!

குழையை அணிந்துள்ள (சடை) பார்வதி, ஒப்பில்லாது விளங்கின சங்கரி, கௌரி - ஆகிய தேவி எடுத்து, அன்புகூர்ந்து, கொங்கையில் உள்ள ஞான அமுதத்தை - ஞானப்பாலை - (உய்க்க) கொடுக்கத் தெளிவுடன் அதை உட்கொண்டு அருள் பாலிக்கும் தம்பிரானே!

(சிந்தை மலங்கலாமோ)

## 1017.

(இந்தப்) பூமியிலே சுற்றத்தார்களாக உள்ள எல்லாரும் அன்புடனே பக்கத்திலே நின்று பலவகையாக (அழுகைக்) கூச்சலிட்டுத் துக்கம் கொண்டு (பாவ) - சூழ்ந்து பரவி நிற்கப் -

பெருத்த மரக்கட்டைகளில் உண்டாகும் நெருப்பிடையே உடலானது தீப்பிடிக்கக் (கொட்டுகள் தட்டி) பறைகள் கொட்டித் தட்டி (உடலைச்) சுட்டு, (அலை ஒன்றி) நீரிற் படிந்து குளித்து (அவரவர்) தத்தம் இடத்துக்குச் செல்ல-

(கடி சமன்) அழித்தல் தொழிலை உடைய யமன் உயிரைத், தனது இருகண்களும் நெருப்பை உமிழ, அகப்படும் படித்தாக்கிக், கட்டி (உடன்று போமுன்) கோபத்துடன் கொண்டு போவதற்கு முன்பாக-

நற்கதியை நமக்குத் தருவான் முருகனும் - என்று உன்னை நினைப்பவர்களுடைய (கற்பில் புக்கு) தியான நெறியில் - (நானும்) புகுந்து -நல்லறிவு எல்லாம் கூடும்படி உன்னைக் (கற்பது) ஓதிப்பயிலும் கருத்தை (எனக்குத்) தந்தருள மாட்டாயோ!

வடக்கே இருந்த கிரவுஞ்சமலை தொளைபட்டழியவும், அலை வீசும் கடல் வற்றிப் போகவும், மற்றுத் திசைகளாகிய (அல்லது - திக் என்று பயந்த எட்டுத் திசைகளிலும் ஜயம் வாய்ந்த ஜயம்பெற்ற-

வன்மையுடனே எதிர்த்துச் சண்டை செய்த அசுரர்கள் பொடிபட்டு அழிய, (மட்டித்திட்டு) அவர்களை முறித்தழித்து, மேம்பாட்டுடன் நின்ற (கொக்கை) மா மரமாம் சூரனை (வேல் கொண்டு) குத்தி எதிர்த்த வீரனே!

அடர்சடை மிசைமதி யலைஜல மதுபுனை
அத்தர்க் குப்பொருள் கற்பித் துப்புகழ்
கொண்டவாழ்வே-
அடியுக முடியினும் வடிவுட னெழுமவு
னத்திற் பற்றுறு *நித்தச் சுத்தர்கள்
தம்பிரானே (23)

## 1018. முத்தி பெற

தனதன தனதன தனதன தனதன தனதன தனதன
தத்தத் தத்தன தத்தத் தத்தன தந்ததான

விடமென அயிலென அடுவன நடுவன மிளிர்வன
சுழல்விழி
வித்தைக் குப்பக ரொப்புச் சற்றிலை
யென்றுபேசும்-
விரகுடை வனிதைய ரணைமிசை யுருகிய
வெகுமுக கலவியில்
இச்சைப் பட்டுயிர் தட்டுப் பட்டுவு
ழன்றுவாடும்,
நடலையில் வழிமிக அழிபடு தமியனை நமன்விடு
திரளது
கட்டிச் சிக்கென வொத்திக் கைக்கொடு
கொண்டுபோயே-
நரகதில் விடுமெனு மளவினி லிலகிய நறைகமழ்
திருவடி
முத்திக் குட்படு நித்யத் தத்துவம் வந்திடாதோ;
இடியென அதிர்குரல் நிசிசரர் குலபதி யிருபது
திரள்புய
மற்றுப் பொற்றலை தத்தக் கொத்தொடு
நஞ்சுவாளி-
எரியெழ முடுகிய சிலையின ரழகொழு கியல்சிறு
விணைமகள்
பச்சைப் பட்சித ணைக்கைப் பற்றிடு
மிந்த்ரலோகா,

* நித்தச் சுத்தர்கள் - நித்ய சூரிகள் - பரம பதத்து வாழும் நித்தர்கள்

நெருங்கியுள்ள சடைமேலே (மதி) நிலவையும், அலைகொண்ட கங்கை நீரையும் சூடியுள்ள (அத்தர்க்கு) தந்தைக்கு - பிரணவப் பொருளை உபதேசித்துக் (குருவிலாதவர்க்குக் குரு என்றும் - தகப்பன் சாமி என்றும்) புகழைக் கொண்ட செல்வனே!

கடைசியான யுகாந்த காலத்தும் - யுகம் முடியும் காலத்தும், தங்கள் வடிவு குலையாது தோற்றம் தருபவர்களும், மௌன நிலையில் பற்று வைத்துள்ளவர்களும், நித்ய சூரிகளுமான பரிசுத்தர்களின் தம்பிரானே!

(நினை கற்பது தந்திடாயோ)

## 1018.

விஷம் போலவும், வேல் போலவும் கொல்லும் தகையனவாய், (நடுவன) யமனுக்கு ஒப்பாக விளங்குவனவாய்ச், சுழல்கின்ற கண்களின் (மாய) வித்தைக்குச் சொல்லக்கூடிய உவமைப் பொருள் - ஒப்புப் பொருள் (சற்றேனும் இல்லை) ஒன்றும் இல்லை என்று சொல்லத் தக்க-

(விரகு உடை) தந்திரத்தைக் கொண்ட பெண்களின் படுக்கை மீதில் மன வருக்கம் கொண்ட பலவிதமான புணர்ச்சி லீலைகளில் ஆசைப் பட்டு அதனால் உயிர் அலைச்சல் உற்றுக் கலங்கி வாடுகின்ற

துன்பந் தரும் வழியில் மிகவும் அழிந்து போகின்ற தனியனாம் என்னை, எமன் அனுப்பும் (தூதர்) கூட்டம் கட்டி, அகப்படும்படியாக (ஒத்திக் கைக் கொடு - கைக் கொடு ஒத்தி-) கையால் தாக்கி (இழுத்துக்) கொண்டுபோய்-

நரகத்தில் தள்ளுங்கள் என்னும் (அளவினில்) காலம் வரும் போது விளங்கும் (உனது) நறுமணம் வீசும் திருவடியாம் முத்தி நிலையிற் சேரும் (நித்யத் தத்துவம்) அழியா இன்பநிலை அமைப்பு எனக்குக் கைகூடாதோ!

இடிபோலச் சப்திக்கும் குரலை யுடையவனும், அரக்கர் குலத்துக்குத் தலைவனுமான இராவணனுடைய இருபது திரண்ட புயங்கள் அற்று விழவும், அழகிய தலைகள் (தத்தக் கொத்தொடு - கொத்தொடு தத்த) கொத்தாகச் சிதறி விழவும் - விஷங் கொண்ட அம்பு-

தீயைக் கக்கும்படிச் செலுத்தின (கோதண்டம்) என்னும் வில்லை உடையவராம் ஸ்ரீராம (திருமாலின்) - அழகு ஒழுகும் தன்மைவாய்ந்தவளும், (சிறுவினை) சிறிய தொழிலாம் தினை காத்தலைச் செய்தவளுமான மகள், பச்சைப் பட்சி - பச்சைக் கிளி போன்றவளுமான வள்ளியைக் கைப்பிடித்த இந்த்ர லோகாதிபதியே!

வடவரை யிடிபட அலைகடல் சுவறிட மகவரை பொடிபட
*மைக்கட் பெற்றிடு முக்ரக் கட்செவி பஞ்சசூரன்-
மணிமுடி சிதறிட அலகைகள் பலவுடன் வயிரவர் நடமிட
முட்டிப் பொட்டெழ வெட்டிக் குத்திய தம்பிரானே

## 1019. அறிவு திருமேனி

தனதனன தான தந்த தந்த
தனதனன தான தந்த தந்த
தனதனன தான தந்த தந்த தனதான

குகையில் † நவ நாத குஞ்சி றந்த
முகைவனச சாத னுந்த யங்கு
குணமுமசு ரேச குந்த ளங்க முரல் ‡வேதக்-
குரகதபு ராரி யும்ப்ர சண்ட
மரகதமு ராரி யுஞ்செ யங்கொள்
குலிசகைவ லாரி யுங்கொ டுங்க ணறநாளும்;
அகலிய புராண மும்ப்ர பஞ்ச
சகலகலை நூல்க ளும்ப ரந்த
அருமறைய நேக முங்கு விந்தும் அறியாத-
X அறிவுமறி யாமை யுங்க டந்த
○அறிவுதிரு மேனி யென்று ணர்ந்துன்
அருணசர ணார விந்த மென்று அடைவேனோ;

---

* மை - பசுமை. மைக்கண் கட்செவி - 'பைங்கண் வாளரவு'
- சம்பந்தர் 3-92-9.

† நவ நாதர் - சத்திய நாதர், சதோக நாதர், ஆதி நாதர், அனாதி நாதர்,வகுளி நாதர்,மதங்க நாதர்,மச்சேந்த்ர நாதர், கடேந்த்ர நாதர், கோரக்க நாதர், எனப் பிரதான சித்தர் ஒன்பதின்மர் - 'நவ நாத சித்தர்களும் உன் நட்பினை விரும்புவார்' - தாயுமா - மௌன - 7.

'சம்பு பூசனையால்... சித்தராயினரே; மற்றவர்.... செற்றமே ஒருவி வரு நவ நாத சித்திரென் றியாவரும் புகழப் பெற்றனர் -

உபதேச. ஞான வரோ... 1729-30

திருப்புகழ் 718 அடி 2 (உரைப்பகுதி - பக்கம் 155).

‡ வேதம் குதிரை - திரிபுரம் எரித்த வரலாற்றைப் பார்க்க. பாடல் 285-பக். 206 - குறிப்பு.

(தொடர்ச்சி பக். 63.)

வடக்கே இருந்த (கிரவுஞ்சமலை) இடிபட்டுப் பொடிபடவும், அலை வீசும் கடல் வற்றவும், மகாமேருமலையும் பொடி படவும், (மைக்கண்) பசிய கண்களை உடையதும், உக்ரமானதுமான (ஆதிசேடன் என்னும்) பாம்பு அஞ்சவும், சூரனுடைய

ரத்னகிரீடம் அணிந்த தலை சிதறி விழ, பேய்கள் பலசூழ, பைரவர் (போர்க்களத்தில்) நடனமிட, (பகைவர்களைத்) தாக்கி, அவர்கள் பொடியாகும்படி அவர்களை (வாளால்) வெட்டி வேலாற் குத்தின தம்பிரானே!

(நித்யத் தத்துவம் வந்திடாதோ)

## 1019.

குகையில் வாசம் செய்யும் நவநாதர்களும் திருமாலின் கொப்பூழாம் சிறந்த தாமரை மொட்டில் (ஜாதனும்) தோன்றிய பிரமனும், விளங்கும் முக்குணங்களும், அசுரர் தலைவர்களும், கடல் போல ஒலிக்கின்ற வேதத்தைத்-

(திரிபுரத்தை எரித்த அந்த நாளில் - தேரின்) குதிரையாகக் கொண்ட திரிபுர சம்மார மூர்த்தியாம் சிவனும், வீரம் மிக்கவரும் பச்சை நிறங் கொண்டவரும், முரன் என்னும் அசுரனை அழித்தவரும் ஆகிய திருமாலும், வெற்றி பெற்ற குலிசாயுதத்தைக் கையிற் கொண்டவனும், வலன் என்னும் அசுரனை அழித்த வனுமான இந்திரனும், (கொடுங்கண்) கடுமையான விதிகளைத் - திட்டங்களை விதிக்கும் தரும சாஸ்திர நூல்களும்-

விரிவான புராணங்களும், உலகிலுள்ள சகல கலை நூல்களும், விரிந்துள்ள அரிய மறைநூல்கள் (வேதம் முதலிய மறை நூல்கள்) பலவும் ஆக இவையெல்லாம் ஒன்று கூடிச் சேர்ந்து முயன்றும் அறிய முடியாத -

அறிவு, அறியாமை ஆகிய இரண்டையும் கடந்த அறிவு எதுவோ அதுவே உனது திருமேனியாகும் என நான் உணர்ந்து உன்னுடைய சிவந்த தாமரையன்ன திருவடியை என்று சேர்வேனோ!

---

X 'அறிவறி யாமை இரண்டும் அகற்றிச்
செறிவறி வாய் எங்கும் நின்ற சிவனை' - திருமந்திரம் 2580.
திருப்புகழ்க் பாடல் 509 - பக்கம் 164 கீழ்க்குறிப்புப் பார்க்க.

O அறிவு திருமேனி -
" அறிவு வடிவென் றறியாத என்னை
அறிவு வடிவென் றருள் செய்தான் நந்தி
அறிவு வடிவென் றருளால் அறிந்தே
அறிவு வடிவென் றறிந்திருந் தேனே" - திருமந்திரம் 2357

பகைகொள்துரி யோத னன்பி றந்து
படைபொருத பார தந்தெ ரிந்து
பரியதொரு கோடு கொண்டு சண்ட வரைமீதே
பழுதறவி யாச னன்றி யம்ப
*எழுதியவி நாய கன்சி வந்த
†பவளமத யானை பின்பு வந்த முருகோனே;
மிகுதமர சாக ரங்க லங்க
‡எழுசிகர பூத ரங்கு லுங்க
விபரிதநி சாச ரந்தி யங்க அமராடி
விபுதர்குல வேழ மங்கை துங்க
பரிமளப டீர கும்ப விம்ப
ம்ருகமதப யோத ரம்பு ணர்ந்த
பெருமாளே (25)

## 1020. மாதர் மீதுள மயக்கு அற

தனதனன தான தந்த தந்த
தனதனன தான தந்த தந்த
தனதனன தான தந்த தந்த தனதான

x மழையளக பார முங்கு லைந்து
o வரிபரவு நீல முஞ்சி வந்து
மதிமுகமும் வேர்வு வந்த ரும்ப அணைமீதே
மகுடதன பார முங்கு லுங்க
மணிகலைக ளேற வுந்தி ரைந்து
** வசமழிய வேபு ணர்ந்த ணைந்து மகிழ்வாகிக்;
குழையஇத ழூற லுண்ட முந்தி
குருகுமொழி வாய்ம லர்ந்து கொஞ்ச
குமுதபதி போக பொங்கு கங்கை குதிபாயக்
குழியிவிழி யாவி தங்க ‡‡ ளொங்கு
மதனகலை யாக மங்கள் விஞ்சி
குமரியர்க ளோடு ழன்று நைந்து விடலாமோ;

---

* பாரதம் எழுதினது - பாடல் 441 - பக்கம் 608 குறிப்பு.

† விநாயகர் பவள நிறம் - பாடல் 960-பக்கம் 785 குறிப்பு.

‡ எழு கிரியை அட்டது - பாடல் 43-பக்கம் 117 கீழ்க்குறிப்பு.

x "மழை யொக்கும் வடித்த கூந்தல்"- கம்ப. மாரி - 70

o "வரிசெறிபு நீலமும் குவிந்து" - என்றும் பாடம்.

** "வசமழிய வேபு ணர்ந்த வின்ப மதிலாகவ;

(தொடர்ச்சி 65 ஆம் பக்கம் பார்க்க.)

பகைமை உணர்ச்சி கொண்ட துரியோதனன் தோன்றிப்படை-களுடன் போர்புரிந்த பாரத வரலாற்றை அறிந்து, பருத்த தனது ஒற்றைக் கொம்பு கொண்டு மிகப் பெரிய மலையாம் மேருமலை மேலே-

குற்றமற்ற வகையில் வியாச முநிவர் அன்று சொல்லிவர எழுதின விநாயகமூர்த்தி, சிவந்த பவள நிறத்தைக் கொண்ட மதயானை - (ஆகிய கணபதியின்) பின்பு தோன்றிய குழந்தையே!

அதிக ஒலி செய்யும் கடல் கலங்கச், சிகரங்களைக் கொண்ட ஏழு மலைகளும் குலுங்கி அசைவுற, மாறுபாடான புத்தியைக் கொண்ட அசுரன் (சூரன்) கலக்கமுறும்படிப் போர்புரிந்து-

தேவர் குலத்திடையே வாழ்ந்தவளும், (ஐராவதம் என்னும்) யானையால் வளர்க்கப்பட்டவளும், ஆகிய தேவசேனையின் பரிசுத்தமானதும், நறுமணம் கொண்டதும், சந்தனம் அணிந்ததும், குடம் போன்றதும், ஒளி கொண்டதும், கஸ்தூரி அணிந்ததுமான கொங்கையை அணைந்த பெருமாளே!

(சரணாரவிந்தம் என்று அடைவேனோ)

# 1020

மழைபோல நீண்ட கூந்தற் பாரம் அவிழ்ந்து குலைய, ரேகைகள் பரவியுள்ள நீலோற்பலம் போன்ற கண்களும் செந்நிறம் அடையச், சந்திரன் போன்ற முகத்தில் வேர்வைத் துளிகள் வந்து கூடப், படுக்கை மீது-

கிரீடம் போன்ற கொங்கைப் பாரம் குலுங்க, மணிகலைகள் (ரத்னமேகலை முதலிய இடையணிகள்) (அல்லது அழகிய ஆடைகள்) மிகவும் (திரைந்து) அலைவுண்டு விலகத், தன்வசம் இழக்கும்படிப் புணர்ந்து, அணைந்து, மகிழ்ச்சி பூண்டு -

மனம்குழைய வாயிதழ் ஊறல் உண்டு, காம மயக்கிலேயே அழுந்தி,(குருகுமொழி) புட்குரலுடன் வாய்திறந்து கொஞ்சிப் பேசக், (குமுதபதி) சந்திரன் (போக - வரக்கண்டு, பொங்குகின்ற கங்கைபோலக் (காமரசம் குதித்துப்) பாய -

(அல்குற்) குழியில் இழிந்து பலவிதங்களாக விளங்கும் காம சாஸ்திர விதிகளிலே மிகவும் மேம்பட்டு இளம் பெண்களுடன் திளைத்து உடல் நொந்துவிடல் நன்றா!

---

குழைய இத மூற லுண்டு கொண்டு
குனகி யெழில் வாய் மலர்ந்து கொஞ்ச
குவியகர தாட ளங்கள் பொங்க நகரேகை -
குறிகள் செய நூபு ரங்கள் கொஞ்ச
மதனகலை யாக மங்கள் மிஞ்ச
கொடியமட மாத ரின்ப நம்பி யழிவேனோ;' என்றும் பாடம்.

‡‡ ஒங்கு = ஓங்கு

எழுபடைகள் சூர வஞ்ச ரஞ்ச
இரணகள் மாக அன்று சென்று
*எழுசிகர மாநி லங்கு லுங்க விசையூடே
†எழுகடலு மேரு வுங்க லங்க
விழிபடர்வு தோகை கொண்ட துங்க
இயல்மயிலின் மாறு கொண் டமர்ந்த
வடிவேலா

பொழுதளவு நீடு குன்று சென்று
குறவர்மகள் காலி னும்ப ணிந்து
புளிஞரறி யாம லுந்தி ரிந்து புனமீதே
‡புதியமட லேற வுந்து ணிந்த
அரியபரி தாப முந்த ணிந்து
புளகிதப யோத ரம்பு ணர்ந்த பெருமாளே (26)

## 1021. பக்திமான்களுடன் கூட

தத்தானத் தாத்தத் தனதன
தத்தானத் தாத்தத் தனதன
தத்தானத் தாத்தத் தனதன தனதான

கற்பார்மெய்ப் பாட்டைத் தவறிய
சொற்பாகைக் காட்டிப் புழுகொடு
கஸ்தூரிச் சேற்றைத் தடவிய இளநீரைக்
கட்சேலைக் காட்டிக் குழலழ
கைத்தோளைக் காட்டித் தரகொடு
கைக்காசைக் கேட்டுத் தெருவினில்
மயில்போலே

நிற்பாருக் காட்பட் டுயரிய
வித்தாரப் பூக்கட் டிலின்மிசை
நெட்டூரக் கூட்டத் தநவர தமுமாயும்
நெட்டாசைப் பாட்டைத் துரிசற
விட்டேறிப் போய்ப்பத் தியருடன்
நெக்கோதிப் போற்றிக் கழலிணை பணிவேனோ;

* 'எழுகிரிகள்' என்றும் பாடம்.

எழுகிரிகள் - பாடல் 257-பக்கம் 140 கீழ்க்குறிப்பு †

† 'எழுகடலு நீர்வறண் டிரங்க, அமரர்நட மாடிநின் று பொங்க, எழின்மயிலி லேறு கந்த துங்க'- என்றும் பாடம்.

‡ முருகவேள் மடலேறத் துணிந்தது - பாடல் 668-பக்கம் 32-33 கீழ்க்குறிப்பு.

(தொடர்ச்சி பக்கம் 67)

போர்க்கெழும் படைகளுடனே சூரர்களாகிய வஞ்ச அரக்கர்கள் பயப்பட, (போர்க்களம்) ரணகளமாக அன்று நீ போய் ஏழுகிரிகளும் பெரிய நிலப்பரபும் அசைவு கொள்ள, வேகத்துடனே

ஏழுகடல்களும், மேருமலையும் கலக்கம் கொள்ள, கண்கள் (பட்ர்வு) படர்ந்துள்ள பீலிகளைக் கொண்ட பரிசுத்தமான தகுதியுள்ள (சூரனாம்) மயில் மீது (மாறு கொண்டு) அதை அடக்கும் எண்ணம் கொண்டு வீற்றிருந்த கூரிய வேலனே!

பொழுது போகும் வரையில் பெரிய (வள்ளிமலைக்) குன்றில் அலைந்து சென்று, (குறவர்மகள்) வள்ளிகாலிலும் பணிந்து வணங்கிப்(புளிஞர்) வேடர்களுக்குத் தெரியாமல் திரிந்து, தினைப்புனத்தில்-

புதிதாக மடலேறுதற்கும் துணிந்திருந்த அந்த பரிதாப நிலையும் குறைந்து (வள்ளியின்) புளகம் கொண்டிருந்த கொங்கையை அணைந்த பெருமாளே.

(குமரியர்களோடு உழன்று நைந்து விடலாமோ)

## 1021.

(கற்பு ஆர் மெய்ப் பாட்டை) கற்பு நிறைந்த மெய்யான பாடு - நிலைமையினின்றும் தவறிய வழியிற் செல்லும் சொற்களின் (பாகை) வெல்லம் போன்ற இனிப்பைக் காட்டி, (புழுகொடு) புனுகு சட்டம் கஸ்தூரி இவைகளின் கலவி பூசப்பட்ட (இளநீரை) இளநீர் போன்ற கொங்கையையும்-

(கட் சேலை) சேல் மீன் போன்ற கண்ணையும் காட்டி, (குழல்) கூந்தலின் அழகையும் தோளையும் காட்டி (மத்தியில் தரகர் வைத்துப் பேசி) கைக்குக் காசு கேட்டுத் தெருவில் மயில் நிற்பது போல

நிற்கின்ற வேசையர்களுக்கு நான் அடிமைப் பட்டு, உயர்ந்ததும்,அகலம் உள்ளதுமான அழகு நிறைந்த கட்டிலின்மேல் (நெட்டூர) நெட்டு - நெடிது - நீண்ட நேரம் - ஊர - மேலே ஊர்ந்து அசைவுறும் அந்தக் (கூட்டத்து) புணர்ச்சியில் எப்போதும் (மாயும்) அழிகின்ற

(நெட்டாசைப் பாட்டை) நீண்ட ஆசை, அநுபவத்தைத் (துரிசு அற) குற்றம் நீங்கும்படி விட்டு விலகிப் போய்ப், பக்தி மான்களுடன் உள்ளம் நெகிழ்ந்து, (உன்னை)ப் பாடிப் போற்றி உன் கழலிணைகளிற் பணிவேனோ! பணியும் பாக்கியம் எனக்குக் கிடைக்குமோ!

---

1019-ஆம் பாடலில் தேவசேனையை அணைந்த பெருமாளே எனத்துதித்து, அதே சந்தத்தில் இந்தப் பாடலில் வள்ளியை அணைந்த பெருமாளே எனத் துதித்துள்ளார்.

*வெற்பால்மத் தாக்கிக் கடல்கடை
† மைச்சாவிக் ‡ காக்கைக் கடவுளை
விட்டார்முக் கோட்டைக் கொருகிரி யிருகாலும்
விற்போலக் கோட்டிப் பிறகொரு
சற்றேபத் காட்டித் தழலெழு
வித்தார்தத் வார்த்தக் x குருபர னெனவோதும்;

---

* கடல் கடைந்த வரலாறு - பாடல் 509- பக்கம் 162

† மைச்சு - மைத்து என்பதன் திரிபு.

மைத்து - கறுத்து - 'மைத்திருள் கூர்ந்த மனமாக நீர'

மணிமேகலை 12-85

திருமால் நிறம் கறுத்தது.

கடல் கடைந்த பொழுது எழுந்த ஆலகால விஷவேகத்தால் திருமாலின் வெள்ளை நிறம் கறுத்தது; அவரும் 'கரியவன்' எனப் பேர் பெற்றார்.

"வருகனல் வல்விஷம் தாக்கி மாயவன் வெள்ளநிற மேனி கருகினன்; அன்றுதொடங்கிக் கரியனெனப்பெயர் பெற்றான்" - காஞ்சிப் புராணம் - மணிகண்டேச - 19.

விஷம் தாக்குமுன் திருமால் வெள்ளை நிறத்தினர் என்பது - "மலைதனக் கிறகு கண்டேன் மால் வெள்ளை நிறமுங் கண்டேன்"

எனவரும் பாடலிலும் காணலாம்.

'வச்சிர மணி நிறம் முருக்கி நீல வண்ணமே ஆக்கியது'

- கந்த புரா 6-13-331

‡ காக்கைக் கடவுளை விட்டார்.

திரிபுரத்தில் இருந்த அசுரர்கள் சிவ பூஜையை விட்டால் ஒழிய அவர்களை வெல்ல முடியாதென உணர்ந்த திருமால் - புத்த ஆசாரியராகவும் நாரதர் அவர் மாணாக்கராகவும் போந்து-பலவித அற்புதங்களைக் காட்டி, அசுரர்களை மயக்கிச் சிவ பூஜையைக் கைவிடச் செய்தனர்; ஆனால் திரிபுரங்களுக்குத் தலைவராயிருந்த மூவர் மாத்திரம் திருமாலின் மாயைக்கு உட்படாது சிவ பூஜை நெறியிலேயே ஒழுகினர். திருமாலின் மாயைக்குச் சிக்காமல் அவரை விலக்கி விட்டார்களாதலின் "காக்கைக் கடவுளை விட்டார்" என்றது அத்திரிபுரத் தலைவர் மூவரைக் குறிக்கும்; நாரதர் திருமாலிடம் கூறுவது:-

மலையையே மத்தாக அமைத்துக் கடலைக் கடைந்து (விஷம் தாக்க) (மைக்க) - மைத்து - கறு நிறங்கொண்டு (ஆவிக் காக்கைக் கடவுள்) உயிர்களைக் காக்கின்ற கடவுளாகிய திருமாலை (விட்டார்) (அவர் செய்த உபதேச மொழிகளைப் பின்பற்றாது) விட்டவர்களாகிய திரிபுரத் தலைவர் மூவர்களின் - மூன்று கோட்டைகளும் - மும்மதிலுக்கும் - ஒருகிரி - ஒப்பற்ற மேருமலையில் இரண்டு முனைப்பக்கங்களையும்-

வில்லை வளைப்பது போலக் (கோட்டி) வளைத்துப், பின்பு ஒருசிறிது (புன்னகை செய்து) பற்களைக் காட்டி, நெருப்பை மூள வைத்த - சிவ பிராற்கு - (தத்வார்த்தக் குருபரன்) உண்மைப் பொருளை உபதேசித்த குரு பர மூர்த்தி என்று சொல்லப்படுகின்ற

---

"சங்கம் தரித்தோய்! மூ எயிற்கும் தனித்தொவ் வொருவர்
ஒழிய, மற்றத் துங்க அசுரர் மோகிதராய்த் தொழுது
நமது வசமானார்"; " அவரை நம் மாயை நடவிப்
பிணிக்க அறியாது தண்டுமாய்த்தார்ப் பன்னவனே"

- உபதேச ஞானவிரோ . 2087, 2090

திரிபுரம் எரித்த வரலாறு - திருப்புகழ்ப் பாடல் 285-பக்கம் 206 கீழ்க்குறிப்பு

காக்கைக் கடவுளை விட்டார் - என்பது திரிபுர சம்மாரத்தில் திருமால் அம்பாக அமைந்தராதலின் - திருமாலாம் அம்பைவிட்டார் - செலுத்தினார் எனவும் பொருள் தரும். சிவபிரான் தழலெழச் சிரித்த நெருப்பு முன் சென்று எரிக்கத், தேவர்களின் வேண்டுகோளின்படி, திருமாலாகிய ஏரம்பையும் இறைவன் செலுத்த அந்த அம்பு அந்தச் சிரிப்பு நெருப்பைப், பின்தொடர்ந்து எரிந்த புரத்தைத் தானும் எரித்தது என்று உபதேச காண்டம் கூறுகின்றது.

'சிரிப்பினால் வெந்து தொலைந்த முப்புரங்களைக் கண்டு.. எனையும் நாடி விட்டருடி என்றிரக்க - சரம் விடுத்தான்;சரத்தினில் எரி, புன் மூரலின் எரி பின் தழீ இத்தொடர்ந்து, அடியனேன் எரிந்த புரத்தினை தானும் எரித்தனன் என்று புகழ் பெறவேண்டுமென்றிரக்க, வரத்தினை மூரலெரி சர எரிக்கு வழங்கியே, கூட மாய்த்தது.'

- உபதேசகாண்டம் - ஞான - 2153 - 2154

'குலவரையே சிலையாகக் கூரம்பு தொடுத்தானைப்

புரமெரிய'- அப்பர் 4-7-10.

'அம்புந்தி மூ எயிலெய்தவன்'- சம். 1-10-11.

X சிவனுக்கு உபதேசித்தது - பாடல் 327 - பக்கம் 314 குறிப்பு.

பொற்பா *பற் றாக்கைப் புதுமலர்
† பெட்டேயப் பாற்பட் டுயரிய
பொற்றோளிற் சேர்த்துக் கருணைசெ யெனமாலாய்ப்-
புட்கானத் தோச்சிக் கிரிமிசை
பச்சேனற் காத்துத் திரிதரு
‡ பொற்பூவைப் பேச்சுக் குருகிய
பெருமாளே (27)

## 1022. பிறவியற

தத்தானத் தாத்தத் தனதன
தத்தானத் தாத்தத் தனதன
தத்தானத் தாத்தத் தனதன தனதான

சிற்றாயக் கூட்டத் தெரிவையர்
வித்தாரச் சூழ்ச்சிக் கயல்விழி
சற்றேறப் பார்த்துச் சிலபணி விடையேவிச்-
சிற்றாயத் தாக்கைப் பொருள்கொடு
X பித்தேறிக் கூப்பிட் டவர்பரி
செட்டாமற் றூர்த்தத் தலைபடு ○சிறுகாலை
உற்றார்பெற் றார்க்குப் பெரிதொரு
பற்றாயப் பூட்டுக் கயிறுகொ
டுச்சாயத் தாக்கைத் தொழிலொடு தடுமாறி-

---

* பற்றாக்கை - "அம்புத்திரள் கட்டும் கயிற்றின் பெயர் -
'பகழித் திரளின் பெயர் பற்றாக்கை'- பிங்கலம் 445.
"பற்றாக்கையும் வெந்து சங்க்ராம வேளும்பட விழியாற்
செற்றார்"- கந்தரலங் - 58

அம்பு கட்டும் பாசம் (கயிற்றின் பெயர்) பற்றாக்கை -
சூடாமணி நிகண்டு

† பெட்டேய - பெட்டென எப்ப. பெட்டெனல்-
விரைவுக் குறிப்பு. "தாபதர், நோவோர், பெண்டிரும்
நும் அரண் ஏகுதிர் பெட்டென்று"
காஞ்சிப்புரா - நாட்டுப்படலம் - 21

‡ பொற்பூவைப் பேச்சுக்கு உருகியது :-
" குறப்பெண் குறிப்பறிந் தருகணைந்துன், குற்றேவல் செய்யக் கடைக்கண் பணிக்கெனக் குறையிரந் தவள் தொண்டை வாய்த் தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவன் செங்கீரை யாடியருளே"
- முத்து. பிள்ளை - செங்கீரை 5

'திரி குற பொற் பூவை' - என்றும் பாடம்
X பித்தேறி = பித்தேற்றி (தொடர்ச்சி பக்கம் 71)

(பொற்பா) அழகா! (பற்றாக்கை) அம்புத் திரள் கட்டும் கயிற்றினின்று (மன்மதன்) புது மலர்கள் - தனது மலர் பாணங்களை(பெட்டு) பெட்டென்று - விரைவாக - (ஏய) எய்ய பிரயோகிக்க - பாற்பட்டு - அந்த அம்புகளால் காம வசத்தின் பாற்பட்டு - காம இச்சை கொண்டு - (உயரிய) பெருமை பொருந்திய (உனது) பொற்றோளில் - அழகிய தோளில் (என்னை அணைத்து கிருபை புரிவாயாக என்று (வள்ளியிடம் கூறி) மாலாய் -ஆசை பூண்டவனாய் -

புள் - பறவைகளைக் (கானத்து) தினைக் காட்டில் (ஓச்சி) ஓட்டி,(கிரி மிசை) மலை மீது, (பச்சேனல்) பசிய தினைப் புனத்தைக் காத்துத் திரிந்த அழகிய பூவை போல்வாளாகிய (நாகண வாய்ப் புள் போன்ற) வள்ளியின் பேச்சுக்கு உருகிய பெருமாளே!

(கழலிணை பெறுவேனோ)

## 1022.

சிறிய தமது (ஆயக் கூட்டத் தெரிவையர்) தோழியர் கூட்டத்துடனேஉள்ள மாதர்களின் (வித்தாரச் சூழ்ச்சி) விரிவான தந்திரங்களைக் கொண்டதும், கயல்மீன் போன்றதுமான கண்ணைச் சற்று (ஏறப்பார்த்து) - கொஞ்சம் தூக்கிப் பார்த்து - (அத்தகைய) பார்வை கொண்டே) சில பணிவிடை - சில வேலைகளைக் (ஏவி) கட்டளையிட்டு -

சில் தாபத்து ஆக்கை- அற்பமான விரக தாபம் - காம தாகம் கொண்ட (இந்த) உடலை (விற்று) பொருள் கொண்டு பொருளைச் சம்பாதித்து (தம்மிடம் வந்தவர்களுக்கு) காமப் பித்தை ஏற்றிக் கூப்பிட்டவர்களாகிய வேசையர்களுக்கு (பரிசு எட்டாமல்) கொடுக்க வேண்டிய கொடைப் பொருள் கிட்டாமையால் - (தூர்த்தத்து அலை படு) துன்மார்க்க (நெறியில்) அலைபடுகின்ற (சிறு காலை) இளம் பருவத்தில்-

(உற்றார்) - நெருங்கிய சுற்றத்தார் நண்பர் ஆயினோர்க்கும், பெற்றார்க்கு (தாய் தந்தையர்க்கும்) பெரிதொரு பற்றாய் - மிக்க அன்புக்கு இடமானவனாய் - அப்பூட்டுக் கயிறு கொடு - (அந்த உற்றார் பெற்றோர்களின்) கட்டுப்பாடாகிய கயிற்றினாற் கட்டுண்டு, (உச்சாயத்து) உயர்ந்த நிலையிலே இந்த உடல் கொண்டு செய்ய வேண்டிய தொழில்களிலே ஈடாகி அலைந்து

---

○ சிறு காலை - இளம் பருவம்

'சிறு காலையே.. தோட் கோப்புக் கொள்ளார்'

- நாலடி - 328

'கொன்றையினானடிக்கே சிறு காலை ஏத்து மினோ'

- சம்பந்தர் 3-103-4 (தொடர்ச்சி பக்கம் 72)

உக்காரித் தேக்கற் றுயிர்நழு
விக்காயத் தீப்பட் டெரியுட
லுக்கேன்மெய்க் காட்டைத் தவிர்வது
மொருநாளே;

†வற்றாமுற் றாப்பச் ‡சிளமுலை
யிற்பால்கைப் பார்த்துத் தருமொரு
மைக்காமக் கோட்டக் குலமயில் தருபாலா-

Xமத்தோசைப் போக்கிற் றயிருறி
நெய்ப்பாலுக் காய்ச்சிக் கிருபதம்
வைத்தாடிக் காட்டிப் பருகரி மருகோனே;

O கற்றாவிற் காட்டிக் **கரை துறை
†† நற்றாயிற் காட்டிப் புகழ் ‡‡ கலை
கற்றார் சொற் கேட்கத் தனிவழி வருவோனே-

கைச்சூலக் XX கூற்றைக் OO கணைமத
னைத்தூள்பட் டார்ப்பக் கனல்பொழி
கர்த்தாவுக் கேற்கப் பொருளருள்
பெருமாளே (28)

---

"கற்றறிவ தென்றுங் களவிலுமுன் நாமமே
மற்றறியேன் வள்ளி மணவாளா - வெற்றிச்
செழுந் திருக்கை வேலைச் சிறுகாலை வாழ்த்தி
எழுந்திருக்கை வேலை எனக்கு" (தனிப்பாடல்)

* 'என் ஆட்ட மொழிந் தீர உன தாடலையும்
காண்பேனோ'- தாயுமானவர் - காண்பேனோ -9

† மாறிலா வளமுலை மங்கை' - சம்பந்தர் 2-79-7.

‡ 'வாரேறிள மென்முலை யாள்'- திருவாசகம் - சதகம் 53

X 'உறியை முற்றத்து உருட்டி நின்றாடுவார்
நறு நெய் பால் தயிர் நன்றாகத் தூவுவார்;
- பெரியாழ்வார் 1-1-4

'மத்தளவுந் தயிரும் வார்குழல் நன் மடவார்
வைத்தன நெய் களவால் வாரி விழுங்கி'
- பெரியாழ்வார் 1-5-5.

O கல் தா வில் காட்டி = மலையை யொத்த வலிவுள்ள வில்லைக்காட்டி. தா - வலிமை 'தாவே வலியும் வருத்தமு மாகும்' - தொல். சொல் - 344.

** கரை துறை = சொல்லுகின்ற துறையை.

‡‡ நற் றாயில் காட்டி புகழ் = நற்றா யிரங்கலாகப் "பொன் போலுங் கள்ளி" என்றெடுத்துக் காட்டிப் புகழ்ந்த வரலாறு பாடல் 422-பக்கம் 562 - 5 கீழ்க்குறிப்பு.(தொடர்ச்சி பக்கம் 73)

(உக்காரித்து) சத்தமிட்டும், (ஏக்கற்று) இளைத்து அவத்தைப் பட்டும், (சற்றில்) உயிர் (இவ்வுடலை விட்டு) நழுவிப்போக, காய் அத்தீப்பட்டு - எரிக்கின்ற அந்த (சுடுகாட்டு) நெருப்பிற் பட்டு எரிந்து போகின்ற (இந்த) உடல் (உக்கேன் - உகேன் - சிந்திப் போம் வழியை - தொலையும் வழியைத் - தேடுகின்றேன் இல்லை; மெய்க்கு - இந்த உடலுக்கு உள்ள (ஆட்டை) ஆட்டங்களை ஒழிப்பது (என் பிறப்பு ஓய்வதான) ஒருநாள் எனக்குக் கிடைக்குமா!

வற்றிப் போகாததும், என்றும் முதிராது விளங்கு வதுமான, பசுமையும் இளமையும் வாய்ந்த கொங்கையில் உள்ள பாலை (கைப் பார்த்து) - இடம் பார்த்து - சமயம் அறிந்து - தந்த ஒப்பற்றவளும், (மை) கரு நிறத்தவளும் அல்லது மை பூசிய கண்ணை உடையவளுமான, (காமக் கோட்டம்) காம கோட்டம் என்னும் திருக் கோயிலில் வீற்றிருக்கும் சிறந்த மயிலனைய தேவி காமாட்சி தந்த குழந்தையே!

மத்தின் ஓசை செல்லும் போக்கை அறிந்து - (திசையை அறிந்து) உறியில் உள்ள தயிர், நெய், பாலுக்கு அவை வேண்டி - ஆய்ச்சிக்கு - தாயாகிய யசோதையின் முன்னிலையில் இரு பதம் வைத்து ஆடி - இரண்டு திருவடிகளைக் கொண்டு கூத்தாடித் தனது ஆடல்களைக் காட்டி - அந்தத் தயிர், நெய் பால் (பெற்று) உண்ட (அரி) திருமாலின் மருகனே!

(கல்) மலையைப் போன்ற (தா) வலிமை கொண்ட வில்லைக் காட்டி, (கரை) சொல்லப்படுகின்ற துறையை 'நற்றாயிரங்கல் துறையாகப் பாடிக் காட்டிப் புகழ்ந்த - கலைகள் கற்றவராகிய பொய்யா மொழிப் புலவரின் (சொல் கேட்க) பாடலைக் கேட்கத் தனியாக (அவர் வந்து கொண்டிருந்த) (காட்டு) வழியில் வந்தவனே!

கையில் சூலத்தை ஏந்தி வந்த யமனும், (கணை மதனை) மலர்ப் பாணங்களைக் கொண்டிருந்த மன்மதனும் (தூள்பட்டு) முற்றும் அழிந்து ஒலிடும்படிக் (கனல் பொழி) கோப நெருப்பைச் சொரிந்த தலைவராம் சிவபிரான் மகிழ்ந்து ஏற்கும்படி உபதேசப் பொருளை அருளிய பெருமாளே!

(மெய்க் காட்டைத் தவிர்வதும் ஒரு நாளே)

---

‡ ‡ கலை கற்றார் = பொய்யா மொழிப் புலவர்

XX கூற்றை அழித்தது - பாடல் - 399-பக்கம் 510 கீழ்க்குறிப்பு

OO மன்மதனை எரித்தது - பாடல் 399 - பக்கம் 510 கீழ்க்குறிப்பு

## 1023. ஆண்டருள

தனத்ததனத் தனத்ததனத்
தனத்ததனத் தனத்ததனத்
தனத்ததனத் தனத்ததனத் தனதான

இருட்குழலைக் குலைத்துமுடித்
தெழிற்கலையைத் திருத்தியுடுத்
திணைக்கயலைப் புரட்டிவிழித் ததிபார-
இழைக்களபப் பொருப்பணிகச்
செடுத்துமறைத் தழைத்துவளைத்
திருத்தியகப் படுத்திநகைத் துறவாடிப்;
பொருட்குமிகத் துதித்திளகிப்
புலப்படுசித் திரக்கரணப்
புணர்ச்சிவிளைத் துருக்குபரத் தையர்மோகப்-
புழுத்தொளையிற் *றிளைத்ததனைப்
பொறுத்தருளிச் சடக்கென அப்
புறத்திலழைத் திருத்தியளித் திடுவாயே;
உருத்திரரைப் பழித்துலகுக்
குகக்கடையப் பெனக்ககனத்
துடுத்தகரப் படுத்துகிரித் தலமேழும்-
உடுத்தபொலப் பொருப்புவெடித்
தொலிப்பமருத் திளைப்பநெருப்
பொளிக்க இருப் பிடத்தைவிடச் சுரரோடித்;
திரைக்கடலுட் படச்சுழலச்
செகத்ரயமிப் படிக்கலையச்
சிரித்தெதிர்கொக் கரித்துமலைத் திடுபாவி
செருக்கழியத் தெழித் †துதிரத்
திரைக்கடலிற் சுழித்தலையிற்
றிளைத்த அயிற் கரக்குமரப் பெருமாளே (29)

---

* இது அருணகிரியாரின் வரலாற்றுக் குறிப்பதாகும்.

† " திரைக் கடலை உடைத்து, நிறை புனற் கடிது குடித்து, உடையும் உடைப்பு அடைய அடைத்து, உதிரம் நிறைந்து விளையாடும். குகன் வேலே" வேல் வகுப்பு.

# 1023.

இருண்ட கூந்தலைக் கலைத்தும், முடித்தும், அழகிய ஆடையைத் திருத்தமாக அணிந்தும், இரண்டு கயல் மீன் போன்ற கண்களையும் புரட்டி விழித்தும், அதிக பாரமானதும் -

(இழை) ஆபரணங்களையும், கலவைச் சாந்தையும் கொண்ட மலை போன்ற கொங்கை அணிந்துள்ள ரவிக்கையை எடுத்தும், மறைத்தும், அழைத்தும், (கையில் உள்ள) (வளை - திருத்தி) வளையல்கள் திருத்தமாகச் சரிப் படுத்தியும் - அல்லது வளைத்து இருத்தி - தமது பேச்சின் திறத்தால் மனத்தைக் கவர்ந்து தம் வசப்படுத்தி இருக்கச் செய்து (தமது வலைக்குள்) சிக்க வைத்தும், சிரித்தும், உறவு கலந்து விளையாடியும் - (நட்புப் பாராட்டியும்)

பொருள் பெறுவதற்காக நிரம்பத் துதித்து, (பொருளைக் கண்டபின்) மனம் நெகிழ்ந்து, புலப்படு - தெரிந்த விசித்திரமானபுணர்ச்சி வகைகளைக் காட்டி மனத்தை உருக்குகின்ற பரத்தையர்களின் காம (பீடமாகிய)-

புழுவுக் கிடமாகிய (அல்குல்) குழியில் இடைவிடாது விளையாடின என் செயலை (நீ) பொறுத்தருளிச், (சடக்கென) வேகமாக என்செயலுக்கு (அப்) புறமான நன்னெறியில் அழைத்து, அந்நெறியில் என்னை (இருத்தி) பொருந்த வைத்துக் காப்பாற்றி அருள்வாயாக.

உருத்திரர்களைப் பழித்தும், உலகுக்கு (உலகை அழிக்க வந்த) உகக் கடை - யுகாந்தம் - யுக முடிவில் தோன்றும் - (அப்பெண)பிரளய நீரெனப் (பொங்கி எழுந்து), (சகனத்து) ஆகாயத்தில் உள்ள - (உடு - தகர - படுத்து) நக்ஷத்திரங்கள் சிதறும்படிச் செய்து, மலைகள் ஏழும் -

சூழ்ந்துள்ள (பொலப் பொருப்பு) பொன் மலையாம் மேரு வெடிபட்டு ஒலி எழுப்பவும், (மருத்து) காற்று (வாயு பகவான்) சோர்வு கொள்ளவும், நெருப்பு ஒளித்துக் கொள்ளவும், தத்தம் இருப்பிடத்தை - இருக்கையை விட்ட அத்தேவர்கள் ஓடிப் போய் -

அலை வீசும் கடலுட் பட்டு அலைச்சல் உறச் (செகத்ரயம்) மூன்று உலகங்களும் இவ்வாறு வேதனைப்பட - (அதைக் கண்டு) சிரித்தும் எதிர் நின்று ஆர வாரித்தும் போர் புரிந்த பாவியாம்

(சூரனுடைய) கர்வம் அழிபட, அவனை (தெழித்து) அடக்கி, (உதிரத் திரைக் கடலில்) - ரத்தத்தின் அலை வீசும் கடலின் சுழியிடத்தே (மூழ்கி) மகிழ்ந்து விளையாடின வேலாயுதத்தை (ஏந்திய) திருககரங் கொண்ட குமரப் பெருமாளே!

(அழைத்து அளித்திடுவாயே)

## 1024. தமிழ் பாடி உணர

தனத்ததனத் தனத்ததனத்
தனத்ததனத் தனத்ததனத்
தனத்ததனத் தனத்ததனத் தனதான

வினைத்திரளுக் கிருப்பெனவித்
தகப் *படவிற் சலப்பிலமிட்
டிசைக்குமிடற் குடிற்கிடைபுக் கிடுமாய-
வினைப்பகுதிப் பயப்பளவுற்
றமைத்ததெனக் கருத்தமைவிற்
சகப்பொருள்மெய்க் குறப்பருகக் கருதாதோ;
எனக்கெதிரொப் பிசைப்பவரெத்
தலத்துளரெச் சமர்த்தரெனப்
புறத்துரையிட் டிகழ்ச்சியினுற் றிளையாதுன்-
எழிற்கமலத் திணைக்கழலைத்
†தமிழ்ச் சுவையிட் டிறப்பற ‡எய்த்
திடக்கருணைத் திறத்தொளைவைத் தருள்வாயே;
சினத்தைமிகுத் தணைத்துலகத்
திசைக்கருதிக் கடற்பரவித்
திடத்தொடதிர்த் தெதிர்த்திடலுற் றிடுசூரன்-
சிரத்துடன்மற் புயத்தகலத்
தினிற்குருதிக் கடற்பெருகச்
சிறப்புமிகத் திறத்தொடுகைத் திடும்வேலா;
கனத்தமருப் பினக்கரிநற்
கலைத்திரள்கற் புடைக்கிளியுட்
கருத்துருகத் திணைக்குளிசைத் X திசைபாடி-

---

* படவு - சிறிய ஓடம் - "படவ தேறிப் பாரொடு விண்ணும் பரவிஏத்த"- திருவாசகம் 43 -3.

†'தமிழ்ச் சுவை யிட்டு' என்றார் முருகன் 'தண்டமிழின் மிகு நேய முருகேச' னாதலின் (திருப்புகழ் 729). 'முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழ வைப்போன்' ஆதலின் - கந் அல 22

‡ எய்த்திட = அறிய.

X வள்ளியின் குழலிப் ப ருவத்து அழுகைக் குரலையே-

" கின்னர நல் யாழொலியோ கேடில் சீர்ப் பாரதி தன்
இன்னிசை யோ என்றுயிர்க்க ஏங்கி அழு திட்டனளே" -

எனக் கூறுகின்றது கந்த புராணம் - (6-24 - 32) என்றால் அந்த

## 1024.

விளைக் கூட்டங்களுக்கு இருப்பிடமாகும் (வித்தகப் படவில்) அதிசயமான ஓடத்தில், சலப் பில மிட்டு - ஜலம் கொண்ட குகை பொருந்தக் கூட்டப்பட்டுள்ள (மிடல்) வலிமை கொண்ட குடிற்கிடை - உடலினுள் புகுந்துள்ள (இந்த) மாயம்

விளையும் (பகுதி) வாழ் நாள் பாகம், பயப்பு அளவுற்று - பயன்படும் கணக்குற்று, அமைக்கப் பட்டதெனக் கருத்தின் நினைவில் நன்றாக உணர்ந்து - உலகத்தில் உள்ள பொருள்களின் மெய்ம்மையையே - உள்ளத்திற் பொருந்தும்படி நுகருதற்கு அநுபவிப்பதற்கு - எண்ணாமல்

எனக்கு எதிராக நிகர் என்று சொல்ல வல்லவர் எந்தப் பூமியில் உள்ளார்கள், எந்த சாமர்த்தியப் பேர்வழிதான் உளன் என்று வெளியே பேசிப், (பிறரை) இகழ்ச்சி செய்வதிலேயே நான் இளைத்துப் போகாமல் - சோர்வுறாமல் - உன்னுடைய

அழகிய தாமரை போன்ற இரண்டு திருவடிகளைத், தமிழ்ச் சுவை பொருந்தும்படி, (இறப்பற - மரணம் நீங்குவதற்கு வேண்டிய வழியில், எய்த்திட - அறிய, உனது கருணைவழியில் என்னை (வைத்து) சேர்ப்பித்து - அருள் புரிவாயாக.

கோபம் மிகுந்து (அனைத்து உலகத்து) எல்லா உலகிலும் (இசை கருதி) புகழ் பெற எண்ணி, கூடலளவும் (தன் அதிகாரத்தைப் பரப்பி வலிமையுடனே யாவரையும் நடுங்கச் செய்து எதிர்த்தவனா யிருந்த சூரனுடைய -

தலையினின்றும் (மல்) மல்யுத்தத்துக்கு ஏற்ற புயங்களினின்றும், (அகலத்தினில்) மார்பிடத்தினின்றும் (குருதிக் கடல்) ரத்தக் கடல் பெருகி ஓடக், கீர்த்தி பெருகச் சாமர்த்தியத்துடனே - (உதைத்திடும்) செலுத்தின வேலாயுதனே!

(கனத்த மருப்பு) கனமுடைய தந்தங்களை உடைய இனக் கரி கரியினம் - யானைக் கூட்டமும், நற்கலைத்திரள், அழகிய மான் கூட்டமும், (கற்புடைக்கிளி), சொல்லுவதைக் கற்கவல்ல கிளி (க்கூட்டமும்) (உள் கருத்து உருக) உள்ளே தத்தம் உள்ளம் உருகும்படியாக, (தினைக்குள்) தினைப் புனத்தில் இசைத்து இசைபாடி - பொருந்திய முறையில் அமைத்து (இசைபாடி) ராகங்களைப் பாடினவளாம்-

---

வள்ளியின் இசையின் பெருமையைக் கூறவும் வேண்டுமோ! அவள் பேச்சை 'இந்திராம்ருத வசனம்' 'ரஞ்சிதாம்ருத வசனம்' 'கொல்லியைச் சேர்க்கின்ற சொல்' என்பர் அருணகிரியார். இனி கரி, கலைத்திரள், கற்புடைக்கிளி - ஆகிய வள்ளி இவர்தம் உட்கருத்து உருக முருகன் இசை பாடிச் சென்று வள்ளியை மணந்தனர் - எனவும் பொருள் காண்க.

கனிக் *குதலைச் சிறுக்குயிலைக்
கதித்தமறக் குலப்பதியிற்
களிப்பொடுகைப் பிடித்தமணப் பெருமாளே (30)

## 1025. புதுவையிற் பாட

தத்த தனதனன தானத் தான
தத்த தனதனன தானத் தான
தத்த தனதனன தானத் தானத் தனதான

முத்து மணிபணிக ளாரத் தாரு
மொய்த்த மலைமுலைகொ டேவித் தார
முற்று மிளைஞருயிர் மோகித் தேகப்
பொருமாதர்-

முற்று மதிமுகமும் வானிற் காரு
மொத்த குழல்விழியும் வேய்நற் றோளு
†முத்தி தருமெனும்வி னாவிற் பாயற்
கிடைமுழ்கிப்;

புத்தி கரவடமு லாவிச் சால
மெத்த மிகஅறிவி லாரைத் தேறி
பொற்கை புகழ்பெரிய ராகப் பாடிப் புவியூடே-

பொய்க்கு ளொழுகியய ராமற் போது
மொய்த்த கமல இரு தாளைப் பூண
பொற்பு மியல்புதுமை யாகப் பாடப்
புகல்வாயே;

பத்து முடியுமத னோடத் ‡தோளிர்
பத்து மிறையவொரு வாளிக் கேசெய்
பச்சை முகில் ×சதுர வேதத் தோடுற்
றயனாரும்-

---

* குதலை - 'கொச்சை மொழிச்சி', 'குதலையிசை'- திருப்புகழ் 728, 975.

† முத்தி தரும் எனும் வினா:- இது

"மணி நகை யாரே தெய்வம்; வாக்குப தேசம்; கொங்கைத்
துணை குரு பீடம்; பாதத் துணைவருடுவதே பூசை;
அணைவது முத்தி; ஆசான் இன்னமும் அறியாய் போலும்
கனிகையர் முகத்திற் கூறுங் காமமா கமங்க ளென்றான்" - எனவரும்
திருக்குற்றாலப் புராணப் பாடலை நினைவுறுத்தும் (மந்த மாருத - 41).

‡ இர் பத்தும் = ஈர் பத்தும் = இரு பத்தும்.

× 'சதுரம் மறை தான் துதி செய்து வணங்கும்....
மாமறைக் காடு' - சம்பந்தர். 2-37-1.

பழச்சுவை கொண்ட (அல்லது கனி - (க(ன்)னி) வள்ளியை) குதலைச் சொற்களை - மழலை மொழிகளைக் கொண்ட சிறிய குயில் போன்ற வள்ளியை, (கதித்து) அங்கிருந்த - (மறக்குலப் பதியில்) வேடர் கூட்டத்தினர்கள் ஊரில் - (களிப்பொடு) மகிழ்ச்சியுடனே கைப்பிடித்த மணவாளப் பெருமாளே!

(கருணைத் திறத்தெனைவைத் தருள்வாயே)

# 1025.

முத்து, ரத்னம் இவைகளாலாய ஆபரணங்களும், மாலைகளும் நெருங்கியுள்ளதும், மலைபோன்றதுமான கொங்கை கொண்டு, (வித்தாரம் முற்றும்) கல்வி நிரம்பின இளைஞர்களின் உயிர் (கூட)காம இச்சையிற் செல்லும்படிப் பொரவல்ல (தாக்க வல்ல) மாதர்களின்-

(முற்றுமதி) பூரண சந்திரன் போன்ற முகமும், ஆகாயத்தில் உள்ள (கரு) மேகம் போன்ற கூந்தலும், கண்களும், மூங்கில் போன்ற அழகிய தோள்களும், இதுவே முத்தி எனத்தகும் என்கின்ற (வினாவில்) ஆய்ந்த உணர்ச்சியுடன் (பாயல் கிடை - பாயற்கு - இடை) படுக்கையிற் கிடத்தலில் - படுக்கையிலே - (எப்போதும்) முழுகினவனாய் -

புத்தியில் வஞ்சக எண்ணம் உலவி மிகமிக அறிவு இல்லாதவர்களைத் தேர்ந்து எடுத்து, அவர்களது கை (பொற்கை) தங்கக் கை, "பொன்வீசும் கை" என்றும், அவர்கள் புகழிற் (பெரியராக) பெரியர் என்றும் வரும்படி அமைத்துப் பாடல் பாடி (இப்) பூமியிலே - (இங்ஙனம்)

பொய்யிலேயே பழகி நடந்து சோர்வு உறாமல், (போது) மொய்த்த - மலர்கள் நிறைந்த தாமரையன்ன ( உனது) இரண்டு திருவடிகளை நான் (பூண) - அடைய அழகு - ( பொலிவு) பொருந்திய (புதுமையான) புதிய வகையில் அமைய - (அற்புத வகையில்) பாடும்படி (ஓர் அநுக்கிரக வார்த்தையைக்) கூறி அருளுக.

பத்துத் தலைகளும், அவைகளுடன் அந்தத் தோள்கள் இருபதும், (மிறைய) பாழ்படும்படி - துன்புறும்படி - ஒரு பாணத்தினாலேயே செய்த பச்சை நிறத்தனும், மேக நிறத்தனும் ஆன திருமாலும், சதுர் வேதத்தோடு உற்ற - நான்கு வேதங்களுடனே திகழ்கின்ற பிரமதேவரும்-

பற்ற வரியநட மாடத் தாளில்
*பத்தி மிகவினிய ஞானப் பாடல்
† பற்று மரபுநிலை யாகப் பாடித் திரிவோனே;
மெத்த அலைகடலும் வாய்விட் டோட
வெற்றி மயில்மிசைகொ டேகிச் சூரர்
மெய்க்கு ஞறஇலகு வேலைப் போகைக்
கெறிவோனே-
வெற்றி மிகுசிலையி னால்மிக் கோர்தம்
வித்து விளைபுனமும் வேய்முத் தீனும்
வெற்பு முறையுமயில் ‡வேளைக் காரப்
பெருமாளே (31)

## 1026. மருளற

தத்த தனதனன தானத் தான
தத்த தனதனன தானத் தான
தத்த தனதனன தானத் தானத் தனதான

விட்ட புழுகுபனி நீர்கத் தூரி
மொய்த்த பரிமளப டீரச் சேறு
மிக்க முலையைவிலை கூறிக் காசுக்
களவேதான்-
மெத்த விரியுமலர் சேர்கற் பூர
மெத்தை மிசைகலவி யாசைப் பாடு
விற்கு மகளிர்சுரு ளோலைக் கோலக்
குழையோடே;
முட்டி யிலகுகுமிழ் தாவிக் காமன்
விட்ட பகழிதனை யோடிச் சாடி
மொய்க்கு மளியதனை வேலைச் சேலைக்
கயல்மீனை-
முக்கி யமனைபட மீறிச் சீறு
மைக்கண் விழிவலையி லேபட் டோடி
முட்ட வினையன்மரு ளாகிப் போகக்
கடவேனோ;

---

* ஞானப் பாடல் பாடித் திரிவோன் = ஞான சம்பந்தர் ." ஊனமில் காழி தன்னுள் உயர் ஞான சம்பந்தர்க் கன்று ஞான மருள் புரிந்தான்"; நாளு மின்னிசையாற் றமிழ்பரப்பும் ஞான சம்பந்தன்"- சுந்தரர்· 7-97-9; 7-62-8.

† மரபு நிலையாகப் பாடினது -

" சகமுளோர் பாடு பாட்டெடன மறைபாடி." என்றார்

பிறிதோரிடத்து - திருப்புகழ் 650

‡ வேளைக்காரன் - பாடல் 624 - பக்கம் 451 கீழ்க்குறிப்பு

பற்றுதற்கு (கண்டு களிப்பதற்கு) அரிதான (நடமாடு - அத்தாளில்) நடனமாடின அந்தத் திருவடியில் பத்தி (ரசம்) மிகவும் இனிதாக விளங்கும் ஞானப் பாடல்களைப், (பற்று மரபு நிலையாக -இப்பூமியில் உள்ளோர்களின் இயல்பான வழக்க முறையிலே) (தலங்கள் தோறும் சென்று சிவத்தைப்) பாடித் திரிந்த (ஞான சம்பந்த மூர்த்தியே!)

மிகவும் அலைவீசும் கடலும் (வாய் விட்டோட) ஓலமிட்டுப் புரள, வெற்றிமயில் மேல் மீது ஏறிச் சென்று சூரபதுமரின் உடலுக்குள் பாய ஒளி வீசும் வேலாயுதத்தைப் புகும்படிச் செலுத்தினவனே!

வெற்றிதரக்கூடிய சிறப்பினைக் கொண்ட (சிலையினால்) விற்போரில் மிகவல்லவர்களான வேடர்களுடைய (தினை) வித்து - விதைத்து விளையும் (தினைப் புனத்திலும்), மூங்கில்கள் முத்துக்களைத் தரும் மலையிலும் (வள்ளிமலையிலும்) வாசம் செய்த மயிலனைய வள்ளியிடம் (வேளைக்காரப் பெருமாளே) காவல் காத்த பெருமாளே!

(புதுமையாகப் பாடப் புகல்வாயே)

**1026**

விட்டுக் கலந்த புனுகுசட்டம், பன்னீர், கஸ்தூரி இவைகள் கலந்த நறுமணம் உள்ள (பமரச் சேறு) சந்தனச் சேறு நிரம்ப (அப்பியுள்ள) கொங்கையை விலைபேசி விற்றுக், கிடைத்த பொருளுக்குத் தக்க அளவிலே தான்-

நன்றாக விரிக்கப்பட்ட மலர் தூவினதும், பச்சைக் கர்ப்பூர மணம் கொண்டதுமான மெத்தைப் படுக்கையின் மேலே, புணர்ச்சி ஆசை விருப்பத்தை விற்கின்ற பொது மகளிர் அணிந்துள்ள சுருண்ட காதோலையையும், அழகிய குழைகளையும் -

தாக்கி, விளங்குகின்ற குமிழம்பூப் போன்ற மூக்கையும் தாண்டி மன்மதன் ஏவின மலர்ப் பாணங்களையும் ஒடும்படிச் (சாடி) மோதி, நெருங்கி மொய்க்கும் (அளி அதனை) வண்டையும், (வேலை) வேலாயு தத்தையு ம், (சேலை) சேல் மீனையு ம், கயல் மீனையு ம்

(முக்கி) தனக்குக் கீழ்ப்படச் செய்து அழுத்தி, யமனும் (அட மீறி) வருந்தும்படி மேம்பட்டுச் சீறி விளங்குவதும் மை பூசினதுமான கண்பார்வை என்னும் வலையிலே சிக்கி- அந்தப் புன்னெறியிலேயே) ஓடி, முழுத்(தீ) வினையாளனாகிய நான்(அல்லது, ஓடி முட்டிக்கொள்ள - தீவினைகளுக்கு கூடான நான்) மயக்க அறிவு கொண்டவனாகிப் போகக் கடவேனோ - மயக்க அறிவு கொண்டவனாய் அழிவேனோ என் தலை எழுத்து !

*செட்டி யெனுமொர்திரு நாமக் கார
வெற்றி யயில்தொடுப்ர தாபக் கார
†திக்கை யுலகைவல மாகப் போகிக்
கனமீனுஞ்-
சித்ர குலகலப வாசிக் கார
‡தத்து மகரசல கோபக் கார
செச்சை புனையுமண வாளக்கோலத்
திருமார்பா,
துட்ட நிருதர்பதி சூறைக் கார
செப்பு மமரர்பதி காவற் கார
×துப்பு முகபடக போலத் தானக் களிறூரும்-

---

* செட்டி - முருக பிரான் திரு நாமங்களுள் ஒன்று- பாடல் 215 - பக்கம் 48; பாடல் 956- பக்கம் 774 கீழ்க்குறிப்பு.

'முருகன் வேள் சாமி யாறு முகன் குகன் குழகன் மாயோன்
மருகன் சேய் கார்த்திகேயன் வரைபக எறிந்தோன் செட்டி.'
- (சூடாமணி நிகண்டு)

'முருகன் சூர்ப்பகை செட்டி குமரன்'- திவாகரம்
'சேந்தன் குறிஞ்சிக் கிழவன் செட்டி'- பிங்கலம்

செட்டி எனும் நாமம் பன்முறை வரும்படித் தணிகை உலாவில் வரும் பகுதி படித்து இன்புறத் தக்கது; அது பின் வருமாறு:-

'யாரென்றாள் இத்தேரில் அன்னமே செட்டியிவன்
பேரென்றாள் அப்பொழுதப் பேதையுந்தான் - சீரொன்று
செட்டியே யாமாகில் தின்ன அவ வோடுகள்ளல்
கட்டிவாங் கிக்கொடென்று கண் பிசைந்தாள் - பட்டி வள்ளி
கைவளைய வேற்றியிரு காலில் வளைந்தேற்றி
மைவளைய நெஞ்ச மயலேற்றி - வெய்ய
இருட்டு விடி யாமுன் இனத்தவர்கா ணாமல்
திருட்டுவியா பாரஞ்செய் செட்டி - வெருட்டி யொரு
வேடுவனா யோர் புலவன் வெண்பாவைக் கைக்கொண்டு
கோடு திரியுங் குறச் செட்டி - பாடா நற்
கீரனைப்பூ தத்தாற் கிரிக்குகையுட் கற்சிறை செய்
தோராரிய பாவை புகந்தணைந்து - கீரனுக்கு
வீட்டுவழி காட்டியிடும் வேளாண்மை யாஞ்செட்டி
ஆட்டிதுவந் தேறுமன்ன தான செட்டி - யீட்டு புகழ்

'செட்டி' என்கிற ஒப்பற்ற அழகிய பெயரைக் கொண்டவனே! வெற்றி வேலைச் செலுத்தும் கீர்த்தியைக் கொண்டவனே! (எட்டுத்) திசையளவும் உலகை வலமாகச் சூழ்ந்து க்ஷண நேரத்தில் மீண்டு வந்த

அழகிய கற்றையாகிய கூட்டமான தோகை நிறைந்த (குதிரையாம்) மயிலை உடையவனே! (தத்து) அலைபுரளுவதும், மகர மீன்களைக் கொண்டதுமான ஜலராசியாகிய கடலைக் கோபித்த மூர்த்தியே! வெட்சிமாலை அணிந்துள்ள மணவாளக் கோலத்தனாய திருமார்பனே!

துஷ்டனான அசுரர்களின் தலைவனான சூரனைச் சூறை-யாடினவனே! (சிதற அடித்தவனே)! (உன்னைப்) புகழ்ந்துநின்ற தேவர் தலைவனாம் இந்திரனுக்கு காவற்காரனாய் உதவினவனே! (துப்பு) பொலிவு உள்ள (முகபடாம்) முகத்தின் மேலணியும் அலங்காரத் துணியைக் கொண்ட (கபோலத் தானக் களிறு) கன்ன மதத்தைக் கொண்ட (ஐராவதம் என்னும்) யானையின் மீது ஊர்ந்து செல்லும் (இந்திரனுடைய)

---

தேவேந்திரன் மகள்பாற் சிந்தைகுடி கொண்ட செட்டி
நாவேந்தர்க் கேயின்ப நல்கு செட்டி - பூவேந்திக்
கண்டு பணிபவர்தங் காகபதிக் குஞ்செட்டி
பண்டறுவர் ஊட்டுதன பால செட்டி - தொண்டர்
மதுரையிற் சொக் கப்ப செட்டி மைந்தன் இளஞ் செட்டி
குதிரை மயிலாம் குமர செட்டி - சதிருடனே
சிவபர ஐக்கியஞ் செய்திடுகந் தப்ப செட்டி
மூவர் வணங்கு முரு கப்ப செட்டி - பாவனைக்கும்
அப்பாலுக் கப்பாலாம் ஆறுமுக செட்டியிவன்
தப்பாமற் கண்டாலுன் தன்னை விடான் - இப்போதெம்
வீட்டில் அவல் வெல்லம் வேணதுண்டு வாவெனச்சீ
ராட்டி அனைமா ரகம் புகுந்தார்"

(பேதைப் பருவம்)

† உலகை வலம் வந்தது - பாடல் 184- பக்கம் 430 கீழ்க்குறிப்பு.

‡ கடலைக் கோபித்தது - கடல் சுவற வேல்விட்ட திருவிளையாடல் - பாடல் 905- பக்கம் 640 கீழ்க்குறிப்பு.

X ஐராவதம் - பாடல் 951 முதல் 3 அடிகள்; பிணிமுகம் - 'ஓடாப்பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி', " வாடாமாலை ஓடையொடு துயல்வர.. கால் கிளர்ந்தன்ன வேழமேல் கொண்டு" - திருமுருகாற்றுப் படை

சொர்க்க கனதனவி நோதக் கார
*முத்தி விதரணவு தாரக் கார
சுத்த மறவர்மகள் வேளைக் காரப்
பெருமாளே (32)

## 1027. ஞான உணர்வு பெற

தானதன தத்த தானதன தத்த
தானதன தத்த தனதான

ஏடுமல ருற்ற ஆடல்மத னுய்க்கு
மேவதுப ழிக்கும் விழியாலே-
ஏதையும ழிக்கு மாதர்தம யக்கி
லேமருவி மெத்த மருளாகி;
நாடுநகர் மிக்க வீடுதன மக்கள்
நாரியர்கள் சுற்ற மிவைபேணா-
ஞானவுணர் வற்று நா†னெழுபி றப்பும்
நாடுநர கத்தில் விழலாமோ;
ஆடுமர வத்தை யோடியுடல் கொத்தி
யாடுமொரு பச்சை மயில்வீரா-
ஆரணமு ரைக்கு மோனகவி டத்தில்
‡ ஆருமுய நிற்கு முருகோனே;
வேடுவர்பு னத்தில் நீடுமித னத்தில்
மேவியகு றத்தி மணவாளா-
மேலசுர ரிட்ட தேவர்சிறை வெட்டி
மீளவிடு வித்த பெருமாளே (33)

## 1028. திருவடியைப் பெற

தானதன தத்த தானதன தத்த
தானதன தத்த தனதான

சீதமலம் வெப்பு வாதமிகு பித்த
மானபிணி சுற்றி யுடலூடே

---

* 'முத்திக்கு வித்தாய் முளைத்த தணிகாசலனே'
திருத்தணிகை நாற்பா அலங்கல் 1
'முத்திக் கடல் கரை விடுப்பவன்' - முத்து பிள்ளை அம்புலி -9
† எழு பிறப்பு - பாடல் 743-பக்கம் 218; பாடல் 668
பக்கம் 34 கீழ்க்குறிப்பு
‡ 'சேவலங் கொடியோன் காப்ப, ஏம வைகல் எய்தின்றால் உலகே'-
குறுந்தொகை - கடவுள் வாழ்த்து.

சொர்க்க பூமியில் உள்ள - (விண்ணுலகில் உள்ள கன தளம்) - பொருந்த (தேவ) சேனைகள் வியக்கும் சேனாபதியே! (அல்லது) களிறாரூம் பிணிமுகம் என்னும் யானை மீதெழுந்தருளும் விநோதத்கார! (ஐராவதத்திலேறும்) தேவ சேனையின்) (சொர்க்கம்) கொங்கைத் திரட்சியில் உள்ள செஞ்சாந்தில் இன்பம் கொள்பவனே! முத்திப்பேற்றை அளிக்கும் கொடைத்திறங் கொண்ட தயாநிதியே! பரிசுத்தமான வேடர் மகளாம் வள்ளியில் காவற் பணிபூண்ட பெருமாளே!

(மருளாகிப் போகக் கடவேனோ)!

## 1027.

இதழ்களை உடைய மலர்ப் பாணங்களைக் கொண்டு (ஆடல்) போர்புரியும் மன்மதன் செலுத்துகின்ற (ஏ அது) பாணத்தையும் (தனது கொடுமைத் திறத்தால் வென்று) பழிக்கவல்ல கண்களாலும் -

எதையும் எல்லாப் பொருளையும் அழிக்கின்ற ' மாதர் மயக்கு' என்பதிலே (நான்) சிக்கி மிகவும் காம மயக்கம் பூண்டு

(எனது) நாட்டையும், நகரையும், நிறைந்த வீடுகளையும், (தனம்) சொத்துக்களையும், (மக்கள்) குழந்தைகளையும், (நாரியர்கள்) பெண்டுகளையும், (சுற்றம்) பந்துக்களையும் (பேணா) பேணி நின்று (விரும்பி) -

ஞான உணர்ச்சியே இல்லாமல் (அல்லது) பேணா ஞான உணர்வு- பாசம் தரும் அவைகளை விரும்பாத ஞான உணர்ச்சி என்பது சற்றும்) இல்லாமல் நான் ஏழுவகையான பிறப்புக்களையே தேடி நின்று நரகத்தில் விழலாமோ! (விழலாகாது).

படம் எடுத்து ஆடுகின்ற பாம்பைக் கண்டதும் ஓடி அதன் உடலைக் கொத்தி நடனம் புரியும் ஒப்பற்ற பச்சைமயில் வீரனே!

வேதங்கள் சொல்லுகின்ற (மோனக இடத்தில்)- மோன அக இடத்தில் - மௌனத்தை உட்கொண்ட நிலையில் - சகல உயிர்களும் உய்ந்து வாழ நிற்கின்ற முருகனே!

வேடர்களுடைய தினைப் புனத்தில் நீண்ட பரண்மீது வீற்றிருந்த குறத்தி - வள்ளியின் மணவாளனே!

(மேல்) முன்பு அசுரர் இட்ட - அசுரர்கள் காவலில் இட்ட தேவர்களின் சிறையை வெட்டி - நீங்க (அத் தேவர்களை) மீள்வித்த பெருமாளே! (நான். நரகத்தில் விழலாமோ)

## 1028.

(சீத மலம்) சீத பேதி, (வெப்பு) சுரம், (வாதம்) வாயு, மிக்கு வரும் பித்தம் - ஆகிய நோய்கள் சூழ்ந்துள்ள இந்த உடலினுள்ளே-

சேருமுயிர் தப்பி யேகும்வனை மிக்க
நீதுவினை விக்க வருபோதில்;
தாதையொடு மக்கள் நீதியொடு துக்க
சாகரம தற்கு ளழியாமுன்-
தாரணி தனக்கு* ளாரண முரைத்த
தான்தர நினைத்து வரவேணும்;
† மாதர்மய லுற்று வாடவடி வுற்று
மாமயிலில் நித்தம் வருவோனே-
‡ மாலுமய னொப்பி லாதபடி பற்றி
மாலுழலு மற்ற மறையோர்முன்;
வேதமொழி வித்தை யோதியறி வித்த
நாதவிறல் மிக்க இகல்வேலா-
மேலசுர ரிட்ட தேவர்சிறை வெட்டி
மீளவிடு வித்த பெருமாளே (34)

## 1029. நாமத்தை நினைக்க

தானதன தத்த தானதன தத்த
தானதன தத்த தனதான

தோடுபொரு மைக்க ணாடவடி வுற்ற
தோர்தனம சைத்து இளைஞோர்தம்-
தோள்வலி மனத்து வாள்வலி யுழக்கு
தோகையர் மயக்கி லுழலாதே;
× பாடலிசை மிக்க ஆடல்கொடு பத்தி
யோடுநினை பத்தர் பெருவாழ்வே-

---

* 'மறை துலிடுந் தணிகை வள்ளல் அருளுருவம்
வாழி வாழி - தணிகைப் புரா - நாரதன் - 73

† பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் - ஆகிய எழு வகைப் பருவத்து மாதர்களும் முருகன் திருவுலா அழகைக் கண்டு வாடுதலை - தணிகை உலா முதலிய நூற்களிற் காணலாம்.

‡ முருகவேள் வேதத்தை மால், பிரமன் ஆதியோர்க்கு உபதேசித்தனர்:- "ததி பரு கச்சுதர், மலரி விருப்பவர், சனகர் அகத்தியர், புலவோர், மாதவர்கள், வசிட்டரொ, டடியர் துதித் திருசரணம் விருப்பொடு தொழுவே தான், அதிமது ரத்துடன் மறைசொலும் உத்தம" - திருவிரிஞ்சை பிள்ளை - 78.

சேர்ந்துள்ள உயிரானது நழுவிப் போம்படி, அதிக தீமை உண்டாகும்படி வருகின்ற சமயத்தில் -

தந்தையும், மக்களும் இயல்பாகவே துக்கக் கடலதனில் வேதனைப் பட்டழியா முன்பு

இப் பூமியில், வேதங்கள் போற்றுகின்ற (உனது) திருவடியை (அடியேனுக்குத்) தர, (நீ) நினைவுற்று வந்தருள வேண்டும்.

(மாதர்) ஜீவாத்மாக்களாகிய மாதர்கள், (மயலுற்று) (பரமாத்மாவாகிய) உன் மீது காதலுற்று வாடினால், திருவுருக் காட்சி தந்து அழகிய மயில்மீது நித்தும் வருபவனே!

(மாலும்) திருமால், (அயன்) பிரமன், ஒப்பிலாதபடி உயர்ந்த தவ நிலையில் (உன்னைப்) பற்றி - அன்பு வைத்து, மால் உழலும் - காதலில் திளைக்கும் மற்ற மறையோர் - வேதிய சிரேஷ்டர்கள் பிறர்க்கும், முன்பு - (அல்லது) - மாலும், பிரமனும் கூடத் தங்களுக்கு நிகரில்லை என்று சொல்லும் படியான வகையில் (உன்னைப்) பற்றி- (உன்னை) வழிபட்டுத் தாம் ஆசை கொண்டுள்ள (அற்றம்) ரகசியப் பொருளை வேண்டிநின்ற - அல்லது ஆசை கொண்டுள்ள (அற்றம்) சமயத்தில் - (மறையோர்) சனகாதி அந்தணர்களுக்கும், முன்பு-

வேத வார்த்தைகளின் உண்மைப் பொருளை ஓதிக் கற்பித்த தலைவனே! வீரம் மிக்க வலிமை வாய்ந்த வேலனே!

முன்பு அசுரர்கள் காவலில் இட்ட தேவர்களின் சிறையை நீக்கி (அவர்களை) மீள்வித்து விடுவித்த பெருமானே!

(தாள் தர நினைத்து வரவேணும்)

## 1029.

(தோடு என்னும் காதணியைத் தாக்கும் மை பூசிய கண்கள் அசைய, அழகுள்ளதான ஒப்பற்ற கொங்கைகளை அசைத்து, இளைஞர்களுடைய-

தோள் வலிமையும் (புஜ பராக்ரமத்தையும்), மனத்து வாள் வலி (மனத்தின் ஒளி வாய்ந்த திடத்தையும்) கலக்குகின்ற, மயிலனைய மாதர்களின் காம மயக்கத்திலே (நான்) சிக்கி அலைவுறாமல்-

பாடல், இசை, மிகுந்த ஆடல் இசை மூன்றும் கொண்டு பக்தியுடனே (உன்னை) நினைக்கின்ற பக்தர்களின் பெருஞ் செல்வமே!

---

மறையோர் - சனகாதி முநிவர்கள் - எனலுமாம்.

X பாடல், இசை, ஆடல் மூன்றினொடும் பக்தி புரிதல் - 'பாடி யாடிப் பரவுவார்', 'பாடி யாடு மெய்ப் பத்தர்கள்'- 'இசை பாடு பத்தர்' - சம்பந்தர் 1-28-7; 2-109-9; 2-88-11

பாவவினை யற்று ணாமதினை புத்தி
பாரிலருள் கைக்கு வரவேணும்;
ஆடலழ கொக்க ஆடுமயி லெற்றி
ஆண்மையுட னிற்கு முருகோனே-
*ஆதியர னுக்கு வேதமொழி முற்றி
யார்வம்வினை வித்த அறிவோனே;
வேடமய லுற்று வேடர்மக ளுக்கு
† வேளையென நிற்கும் விறல்வீரா-
மேலசுர ரிட்ட தேவர்சிறை வெட்டி
மீளவிடு வித்த பெருமாளே (35)

## 1030. நோயிலா வாழ்வு

தானதன தத்த தானதன தத்த
தானதன தத்த தனதான

தோதகமி குத்த பூதமருள் பக்க
சூலைவலி வெப்பு மதநீர்தோய்
சூழ்பெருவ யிற்று நோயிருமல் குற்று
சோகைபல குட்ட மலைதீரா;
வாதமொடு பித்த மூலமுடன் மற்று
மாயபிணி சற்று மணுகாதே-
வாடுமெனை முத்தி நீடியப தத்தில்
வாழுமிக வைத்து அருள்வாயே;
காதல்மிக வுற்று மாதினைவி ளைத்த
கானகுற மத்தி மணவாளா-
‡ காசினிய னைத்து மோடியள விட்ட
கால்நெடிய பச்சை மயில்வீரா,

---

* சிவனுக்கு உபதேசித்தது - பாடல் 327 பக்கம் 314 குறிப்பு
† வேளை என நின்றது - பாடல் 166-பக்கம் 387 குறிப்பு.
- பாடல் 624-பக்கம் 451 குறிப்பு.
‡ மயில் உலகை வலம் வந்தது - பாடல் 267-பக்கம் 164 கீழ்க்குறிப்பு.

(என்) பாவ வினையெலாம் தொலைந்துபோய், உனது திரு நாமங்களையே (நான்) நினைக்கும் படியான புத்தியை, இப்பூமியில் (நீ) எனக்கு அருள் புரிய வரவேணும்;

ஆடலின் அழகுக்கு ஏற்ப நடனம் புரியும் மயிலை வேகமாகச் செலுத்திப் பராக்ரமத்துடன் நிற்கின்ற முருகனே!

ஆதி மூர்த்தியாம் சிவனுக்கு வேதமொழி முடிய உபதேசித்து, மகிழ்ச்சியை (விருப்பை) ஊட்டிய அறிஞனே!

(வேடைமயல்) காம நோய் மோகம் கொண்டு வேடர் மகளாம் - வள்ளியிடம் (வேளை என) காவல் வேலையாளாக நின்ற அல்லது, சமயா சமயம் பார்த்து நின்ற - வெற்றி வீரனே!

முன்பு அசுரர்கள் இட்ட தேவர்களின் சிறையை (வெட்டி) ஒழித்து அவர்கள் மீளும்படி விடுவித்த பெருமானே!

(உன் நாமம் நினை புத்தி அருள்கைக்கு வரவேணும்)

## 1030.

(தோதகம்) வஞ்சகம் மிக்குள்ள (மண், நீர், தீ, காற்று, விண்) என்னும் ஐம்பூதங்களின் (மருள்) மயக்கினால் (ஏற்படும்) (அல்லது ஐம்பூதங்களால் (அருள்) உண்டாகும் பக்க சூலை - விலாப் பக்கங்களில் நோய் கொடுக்கும் சூலை நோய்; (வலி) குமர கண்டம் முதலிய இழுப்பு நோய்கள், (வெப்பு) சுரம், (மத நீர்) வீரிய சம்பந்தமான நோய், (தோய்) சேர்ந்து -

(சூழ்) எங்கும் பரவி நோய் தரும் பெரு வயிற்று நோய், இருமல், (குற்று) இடிப்பது போல் தலையிடி முதலிய நோய், (சோகை) ரத்த மின்மையால் உடம்பு ஊதுதல், (பல குட்டமவை) பல வகையான குட்ட நோய்கள், (தீரா) - தீர்க்க முடியாத

(வாதம்) வாயு சம்பந்தமான நோய்கள், பித்தம் - பித்த சம்பந்தமான நோய்கள், மூல நோய், இவையுடன் (மற்றும் ஆய பிணி) பின்னும் பல வகையான நோய்கள் - இவை எவையும் என்னைக் கொஞ்சமேனும் அணுகாதவாறு-

வருந்தி நிற்கும் என்னை நீ மோக்ஷம் நீடித்து விளங்கும் உனது திருவடியில் வாழும் படியாக நன்கு வைத்து அருள் புரிவாயாக.

ஆசை மிக வைத்து நல்ல தினையை விளைவித்த காட்டுக் குறத்தி - வள்ளியின் மணவாளனே!

உலகம் முழுமையும் ஓடி வலம் வந்த - ஓடி அளவிட்டு வந்த நீண்ட காலை உடைய பச்சை மயில் வீரனே !

*வேதமொழி மெத்த வோதிவரு பத்தர்
வேதனைத விர்க்கு முருகோனே-
மேலசுர ரிட்ட தேவர்சிறை வெட்டி
மீளவிடு வித்த பெருமாளே (36)

## 1031. காலனூர் புகுவோர்

தான தான தானான தானத் தனதான

† காதி மோதி வாதாடு நூல்கற் றிடுவோருங்-
‡ காசு தேடி யீயாமல் வாழப் பெறுவோரும்;
மாது பாகர் வாழ்வே யெனாநெக் குருகாரும்-
மாறி லாத மாகால னூர்புக் கலைவாரே;
x நாத ரூப o மாநாத ராகத் துறைவோனே-
நாக லோக மீரேழு பாருக் குரியோனே;

* வேத மொழி - திரு முருகாற்றுப் படை - எனக் கொள்ளலாம்; "வேத மொழி சூட்டு கீரர்" - என்றார் 1278-ஆம் திருப்புகழில். திருமுருகாற்றுப் படையை ஓதும் பக்தர்களுடைய வேதனைகளை முருகன் நீக்குவன் என்பதற்கு -

"நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற் றுப்படை யைத்
தற்கோல நாடோறுஞ் சாற்றினால் - முற்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்
தானினைத்த எல்லாம் தரும்" - எனவரும் தனிப்பாடலும் சான்றாம்.

† வாதாடு நூல்கள் அருணகிரியார்க்கு அருவருப்பை உண்டாக்கும்: - பாடல் 955 அடி 1-3 பார்க்க.

‡ "ஈயா மனிதரை ஏன் படைத்தாய் கச்சி ஏகம்பனே"-
பட்டினத்தார் - ஏகம்ப. 21

"உள்ளபோதே கொடாதவர்- வாழ்நாளை வீணுக்கு
மாய்ப்பவரே" - கந்தரலங் - 53.

x இறைவன் நாதரூபம்:- "ஓசை ஒலியெலாம் ஆனாய்
நீயே"- அப்பர். 6-38-1.

o மா நாதர் ஆகத்து உறைவோன்:- சிவபிரானது மார்பில் தாவி ஏறி சடை முடியில் தவழ்பவன் முருகன் என்றார்."

நாதர் மாதேவர் குழைய மாலின நாக மொடுதாவிக் குடில கோமளாகார சடில மோலி மீதேறு குமர"- என்றார்
திருப்புகழ் 1054-ஆம் பாடலில். (தொடர்ச்சி பக்கம் 91)

வேத மொழிகளை - அல்லது - வேத மொழி அனைய திருமுருகாற்றுப்படையை - நிரம்ப (ஓதி வரு) பாராயணம் செய்து வரும் பக்தர்களுடைய துன்பங்களை நீக்கும் முருகனே!

முன்பு அசுரர்கள் தேவர்களுக்கு இட்ட சிறையை நீக்கி அவர்களை மீளும்படிக் காப்பாற்றி விடுவித்த பெருமாளே!

(பிணி அணுகாதே - வாழவைத்து அருள்வாயே)

# 1031.

(காதி) வெட்டுதல் போற் பேசியும், தாக்கியும், வாதும் செய்வதற்குத் (தர்க்கம் செய்வதற்கு) உளதான நூல்களைக் கற்பவர்களும் -

பொருளைத் தேடி (ஒருவருக்கும்) கொடாது வாழ்க்கை செலுத்துபவர்களும்;

பார்வதிபாகராம் சிவபெருமானது செல்வமே என்று உனைப் புகழ்ந்து உள்ளம் உருகாதவர்களும்-

(மாறு இலாத) நீங்குதல் இல்லாது - (அல்லது நீதி மாறுதல் இலாத பெரிய யமபுரியிற் புகுந்து அலைச்சல் உறுவார்கள்.

(நாத ரூப) ஒலி உருவத்தவனே! ( மா நாதர்) பெரிய பெருமான் அடிகளாகிய சிவ பிரானது (ஆகத்து) உள்ளத்தில் இருப்பவனே! (அல்லது மா நாத ராகத்து - சிறந்த ஒலிகளை எழுப்பும் ராகங்களில் - இசைப் பண்களில் - பொலிந்து விளங்குபவனே)!

சுவர்க்க லோகம் ஆதிய பதினாலுலகங்களுக்கும் (உரிமைக் காரனாய்) தலைவனாய் நிற்பவனே!

---

ஆகம் - உள்ளம் என்னும் பொருளில்-

'ஆகத் தெழுகனல் கண்வழி யுக'- கம்பரா - கரன் - 97.

'சடைப் பரமர் சித்தத்தில் வைத்த கழலோனே'

- திருப்புகழ் 306

மா நாத ராகத்து உறைபவன் - முருக வேள் இசைப் பிரியராதலில் ராகத்து உறைபவரானார்

- பாடல் 173- பக்கம் 400 கீழ்க்குறிப்பு X

** ஈரேழு பார் - பாடல் 170 அடி 8, பாடல் 1003 அடி 3- பார்க்க. மேலுலகம் 7- பூலோகம், புவலோகம், சுவலோகம், சனலோகம், தபோலோகம், மகாலோகம், சத்தியலோகம், கீழுலகம் 7- அதலம், விதலம், சுதலம், தராதலம், மகாதலம், இரசாதலம், பாதாளம்.

நீதி லாத வேல்வீர சேவற் கொடியோனே;
தேவ தேவ தேவாதி தேவப் பெருமாளே (37)

## 1032. அகப் பொருள்

தான தான தானான தானத் தனதான

சூடு மார வேளார வாரக் கடலாலே-
கோப மீது மாறாத கானக் குயிலாலே;
மாறு போது மாதாவின் வார்மைப் பகையாலே;
மாது போத மாலாகி வாடத் தகுமோதான்-
ஏறு தோகை மீதேறி யாலித் திடும்வீரா-
† ஏழு லோகம் வாழ்வான சேவற் கொடியோனே;
சீறு சூரர் நீறாக மோதிப் பொரும்வேலா-
தேவ தேவ தேவாதி தேவப் பெருமாளே (38)

## 1033. ஆவி உய்ய

தான தான தானான தானத் தனதான

பேர வாவ றாவாய்மை பேசற் கறியாமே-
பேதை மாத ராரோடு கூடிப் பிணிமேவா;
ஆர வார மாறாத நூல்கற் றடிநாயேன்-
ஆவி சாவி யாகாமல் நீசற் றருள்வாயே;
சூர சூர சூராதி சூரர்க் கெளிவாயா-
தோகை யாகு மாரா கிராதக் கொடிகேள்வா;

---

* காமன் கொண்டார்க்குப் பகையானவை - மாரன், கடல், குயில் கூவுதல், தாய் வசை - பாடல் 218 பக்கம் 53, 54 கீழ்க் குறிப்பு.

† ஏழு லோகம் - கீழுலகம் 7-பக்கம் 91 குறிப்பு **

லோகம் வாழ்வான சேவல் - முருகன் திருக்கைவேற் சேவலே உலகை வாழ்விப்பது -

"அண்டமெலாம் முட்டையென இருசிறையி னுள்ளடக்கி அடயாய் காத்து... இடிக் குரல் காட்டும் சேவலே".

" யாமங்கள் தொறுந் துயிலும் மனிதர்கள் தம்
வாணாள் விணாயிற் றென்று, சேமங்கொள் சிறையடித்துக்
குக்குகூ கூவென்னும் சேவலே" (சேவற் பத்து)

"கொக்கரித்து நிலவுல கனைத்தும், உஞ்சேவல் செய்ய
இரு சிறை நிழல் பரப்பி"- (தணிகாசல புராணம்)

'சேவலங் கொடியோன் காப்ப ஏம வைகல் எய்தின்றால் உலகே'

- பாடல் 1027- பக்கம் 84 குறிப்பு.

தீமையே செய்யாத வேல் ஏந்தும் வீரனே! சேவலங் கொடி யுடையவனே!

தேவதேவனே! தேவாதிதேவர்களுக்கெல்லாம் பெருமாளாய் விளங்குபவனே! (இவரிவர் - காலனூர் புக்கலைவாரே)

## 1032.

சொல்லப் படுகின்ற மார வேளாகிய மன்மதனாலும், (ஆர வாரம்) பேரொலி செய்யும் கடலாலும்,

(என் மீது) கோபம் நீங்காத - கானம் - இசைபாடும் குயிலாலும்,

(எனக்கு) மாறு போலும் - பகைமை பூண்டவள் போலுள்ள (மாதாவின்) தாயின் (வார்மை) ஒழுக்கத்துக்கு உரிய பகையாலும் -

(மாது) பெண்ணாகிய நான் (போதம்) அறிவு (மாலாகி) மயக்கம் கொண்டு வாடுதல் நியாயமாகுமா? (ஆகாது என்றபடி).

(ஏறு தோகை) ஆண் மயிலின் மேல் ஏறி (ஆலித்திடும்) வீராவேசம் செய்யும் (களிக்கும்) வீரனே!

ஏழுலகங்களும் வாழ உதவும் சேவலங் கொடியனே!

கோபித்து எழுந்த சூரர்கள் பொடியாகும்படி மோதிப் போர் செய்த வேலனே!

தேவ தேவனே! தேவாதி தேவர்களுக்கெல்லாம் பெருமாளே! (மாது வாடத் தகுமோதான்)

## 1033.

(பேரவா) பேராசை, (அறா) அறாத-நீங்காத நிலையில் இருந்து (வாய்மை பேசுதற்கு) - உண்மை பேசுதற்குத் தெரியாமல் - (உண்மை பேசாமல்)

அறிவீனர்களாகிய மாதர்களோடு (நான்) சேர்ந்து - நோய்களை அடைந்து -

(ஆர வாரம்) ஆடம்பரம் - (மாறாத) நீங்காத-ஆறாத-தணியாத சமயக் கூச்சலுக்கு இடம் தரும் நூல்களைப் படித்து, அடிமை நாயான [redacted]து -

(ஆவி) உயிர் (சாவியாகாமல்) வீண் படாமல் நீ சிறிது அருள் புரிவாயாக.

சூரர்களுக்குட் சூரனான சூரபத்மா முதலான சூரர்களுக்கு (எளிவாயா - எளிவு ஆயா) எளிதில் - காட்சி கொடுத்தவனே!

(தோகையா) மயில் வாகனனே! குமார மூர்த்தியே! (கிராதக் கொடி) வேடர் கொடியாம் வள்ளி கணவனே!

* சூரன், சிங்கமுகன், தாரகன் - இவர் முருகவேளின் தரிசனத்தைப் பெற்றவர்கள் - கந்தபுரா. 1-20-126; 4-4-235, 12-347, 13-430.

தீர தீர தீராதி தீரப் பெரியோனே-
தேவ தேவ தேவாதி தேவப் பெருமானே (39)

## 1034. மெய்ப் பொருள் அறிய

தான தான தனத்தம் தான தான தனத்தம்
தான தான தனத்தம் தனதான

காதி லோலை கிழிக்குங் காம பாண விழிக்குங்
கான யாழின் மொழிக்கும் பொதுமாதர்-
காணொ ணாத இடைக்கும் பூண லாவு முலைக்குங்
காதில் நீடு குழைக்கும் புதிதாய;
கோதி லாத கருப்பஞ் சாறு போல ருசிக்குங்
கோவை வாயமு துக்குந் தணியாமல்-
*கூருவே †னொரு வர்க்குந் தேடொ ணாததொ
ர்த்தும்
கூடு மாறொரு சற்றுங் கருதாயோ;
பூதி பூஷணர் கற்பின் பேதை பாகர் துதிக்கும்
போத தேசிக ‡சக்ரந் தவறாதே
போக பூமி புரக்குந் த்யாக மோக குறப்பெண்
போத ஆதர வைக்கும் புயவீரா;
சோதி வேலை யெடுத்தன் றோத வேலையில் நிற்குஞ்
சூத தாருவும் வெற்பும் பொருகோவே-
சூரர் சேனை யனைத்துந் தூளி யாக நடிக்குந்
தோகை வாசி நடத்தும் பெருமானே (40)

---

* கூர்தல் = உள்ளது மிகுதல்.

† 'மனதாலே மட்டிட்டுத் தேட ஒணாதது', 'கதியாளர் விதித்துத் தேடரிதானது'; 'எவராலும் தொடரொணாது'- 'தொடர உணர அரிதாய தூரிய பொருள்'- திருப்புகழ் 489, 980, 1052, 1159.

‡ சக்ரம் தவறா துபுரத்தல் - கடவுளின் கடன் - என்பது - நீ ஏன் போருக்கு வந்தாய் எனச் சிங்கமுகாசுரன் கேட்க முருக வேள் கூறின பதிலால் விளங்கும்; இதை

"உறை தரும் அளியன் தன்னை வலியவன் ஒறுக்கின் நாடி
முறைசெயும் தண்டம் ஆற்றி அண்டங்கள் முழுவதுக்கும்
இறையினைப் புரிதும் அற்றால் நீவிர்கள் இமையோர்க் கிட்ட
சிறையினை அகற்ற வந்தேம் செருவுமத் திறந்துக் கென்றான்."

- எனவரும் பாடலிற் காண்க - கந்த புரா.4 -12-349

தீர தீர - மகா தீரம் (தைரியம்) உடையவனே! தீராதி தீரப் பெரியோனே - தைரியமாதி மேம்பட்ட இலக்கணங்களில் உறுதி வாய்ந்த பெரியவனே!

தேவ தேவனே! தேவர் முதலானோருக்குத் தேவனாய் விளங்கும் பெருமாளே! (ஆவி சாவியாகாமல் அருள்வாயே)

## 1034.

(பொது மாதர்களின்) காதில் அணிந்துள்ள ஓலையைக் கிழிக்கின்றதும், மன்மதனுடைய பாணத்தை (நிகர்ப்பதுமான) கண்களுக்கும், கானம் இசையை எழுப்புகின்ற யாழ்போன்ற மொழிக்கும், அப்பொது மாதர்களின்-

காணுதற்கும் அரிதாய் - அவ்வளவு நுண்ணியதான இடைக்கும், ஆபரணங்கள் அசை தரும் கொங்கைக்கும், காதில் நீண்டு தொங்கும் குழைமணிக்கும், (புதிதான புதுமை - அதிசயம் விளைவிப்பதும்-

(கோது இலாத) சக்கை-தோல் முதலிய குற்றம் இலாத கரும்பின் சாறு போலத் தித்திப்பதான கொவ்வைப் பழம் போலச் சிவந்த வாயிடத்து ஊறும் அமுதன்ன ஊறலுக்கும் - உள்ளம் அடங்காத வகையில் -

(காதல்) மிக்கெழுதலைக் கொண்டவனாகிய நான், யாராலும் தேடிக்காண முடியாததான ஒப்பற்ற (அர்த்தும்) (பேரின்பப்) பொருளைக் கண்டு கூடுமாறு(அடையும்படி) ஒரு சிறிதும் (நீ) நினைக்க மாட்டாயா! (நினைத்தருளுக என்றபடி).

விபூதியை அலங்காரமாகக் கொள்பவர் (திருநீற்றழகர்), கற்பொழுக்கம் நிறைந்த(பேதை) தேவி பார்ப்பதியின் பாகத்தர் (பார்ப்பதியை பாகத்திற் கொண்டவர் - ஆகிய சிவபிரான் தோத்திரம் செய்து போற்றின ஞான தேசிகனே! (ஆக்ஞா) நீதி சக்ரம் தவறாத வண்ணம் -

(போக பூமி) சுவர்க்க லோகத்தைக் காத்தளித்த (த்யாக) வரசீலனே! உன் ஆசைக்கு உரிய (குறப்பெண்) வள்ளி- (போத) நின்பால் வந்து சேர, ஆதரவு ஆதரம் - வைக்கும் அன்பு - ஆசை வைத்த புய வீரனே! (அல்லது குறப்பெண் - வள்ளியிடம் போத ஆதர வைக்கும் - செவ்வையாக அன்பு வைத்த புய வீரனே!

பேரொளி வீசும் வேலாயுதத்தை எடுத்து அன்று (ஓத வேலையில்) திரை வீசும் கடலிடத்தே நின்ற (சூதத்தாருவும்) மாமரமாம் சூரனுடனும், வெற்பும் - அவனுக்கு அரணாயிருந்த எழுகிரியுடனும் சண்டை செய்த தலைவனே!

சூரர்களுடைய படை யாவும் பொடியாகும்படி நடனம் செய்யும் மயிலாம் குதிரையை நடத்திச் செலுத்தின பெருமாளே!

(அர்த்தும் கூடுமாறு கருதாயோ)

## 1035. துதிக்க அருள் தா

தான தான தனத்தம் தான தான தனத்தம்
தான தான தனத்தம் தனதான

காருலாவு குழற்குங் கூரி தான விழிக்குங்
காதல் பேணு நுதற்குங் கதிர்போலுங்-

காவி சேர்பவ ளத்தின் கோவை வாயித ழுக்குங்
காசு பூணு முலைக்குங் கதிசேரா;

நேரி தான இடைக்குஞ் சீத வார நகைக்கும்
நேரி லாத தொடைக்குஞ் சதிபாடும்-

நீத மான அடிக்கும் மாலு றாத படிக்குன்
னேய மோடு துதிக்கும் படிபாராய்;

*பார மேரு வளைக்கும் பாணி யார்சடை யிற்செம்
பாதி சோம னொருக்கும் புனைவார்தம்

பால காஎன நித்தம் பாடு நாவலர் துக்கம்
பாவ நாச மறுத்தின் பதமீவாய்;

சோரி வாரி யிடச்சென் றேறி யோடி யழற்கண்
சூல காளி நடிக்கும் படிவேலாற்

சூரர் சேனை தனைக்கொன் றார வார மிகுத்தெண்
தோகை வாசி நடத்தும் பெருமாளே (41)

---

*திரிபுரம் எரித்தபோது மேரு மலையை வில்லாகச் சிவ பிரான் வளைத்தனர் - பாடல் 285-பக்கம் 206கீழ்க்குறிப்பு.

# 1035

(கரு) மேகம் போன்ற கூந்தலுக்கும், கூர்மை வாய்ந்த கண்களுக்கும், ஆசை விருப்பத்தை எழச் செய்யும் நெற்றிக்கும், (கதிர்) கிரண ஒளி போல ஒளி கொண்டதாய்-

(காவி) செந்நிறம் கொண்ட பவளத்தை ஒப்பதாய்க், கொவ்வைப் பழம் போலச் சிவந்ததான வாயிதழுக்கும், (காசு) தங்கக் காசுமாலை அணிந்துள்ள கொங்கைக்கும், (கதி சேரா) ஒரு நிலை சேராததாய் - உறுதித் தன்மை இலாது - ஒசிவது - ஒடிவதுபோல நுடங்குகின்ற-

(நேரிதான) நுண்ணிதான இடைக்கும், (சீதம்) குளிர்ச்சியையும், (வாரம்) அன்பையும் காட்டுவதான நகைக்கும் - புன் சிரிப்புக்கும், தனக்கு ஒப்பே இல்லாத தொடைக்கும் - தாளக் குறிப்பைக் காட்டும்

(நீதம்) தகுதியைக் கொண்டதான அடிக்கும், (நான்) மோகம் கொள்ளாதபடிக்கு, உன்மேல் (நேயமோடு) அன்போடு துதிக்கும்படி (என்னைக்) கண் பார்த்து அருளுக.

பாரமான மேரு மலையை வளைத்த திருக் கைகளை உடையவரும், சடையிலே செம்மை வாய்ந்த பிறைச் சந்திரனையும் எருக்க மாலையையும் அணிந்துள்ளவரும் ஆன சிவபிரானது.

குழந்தையே என நாள்தோறும் துதித்துப் பாடுகின்ற நாவலர்களின் (புலவர்களின்) துக்கத்தையும், பாபத்தையும், நாசம் செய்து தொலைத்து உனது இனிமை தங்கும் திருவடிகளைத் தந்தருள் பவனே!

ரத்தம் கடல் போற் பெருக (போர்க்களத்திற் போய்ச்) சேர்ந்து, ஓடி, நெருப்புப் போலும் கண்ணை உடைய - சூலம் ஏந்திய - காளி தேவி நடிக்கும்படி வேலாயுதத்தால்-

சூரர்களின் சேனைகளைக் கொன்று, பேரொலி மிக்குப் பெருக, மதிக்கத்தக்க மயிலாம் குதிரையைச் செலுத்தின பெருமாளே!

(நேயமொடு துதிக்கும்படி பாராய்)

## 1036. தாள் போற்ற

தானத்த தானத்த தானத்த தானத்த
தானத்த தானத்த தனதான

தோடுற்ற காதொக்க நீடுற்ற போருற்ற
தோய்மைக்க ணால்மிக்க நுதலாலே-
*தோள்வெற்பி னால்விற்கை வேளுக்கு †மேன்மக்கள்
சோர்கைக்கு மால்விற்கு மடவார்தம்,
ஊடற்கு ளேபுக்கு வாடிக்க லாமிக்க
ஓசைக்கு நேசித்து உழலாதே-
‡ ஊர்பெற்ற தாய்சுற்ற மாயுற்ற தாள்பற்றி
யோதற்கு நீசற்று ×முணர்வாயே;
○ வேடர்க்கு நீள்சொர்க்கம் வாழ்விக்க வோர்வெற்பின்
மீதுற்ற பேதைக்கொர் மணவாளா
**வேழத்தி னாபத்தை மீள்வித்த மாலொக்க
†† வேதத்தி லேநிற்கு மயனாருந்.
‡ தேடற்கொ ணாநிற்கும் வேடத்தர் தாம்வைத்த
×× சேமத்தி னாமத்தை மொழிவோனே

---

*மகளிர்க்குப் பொருந்து இருக்க வேண்டிய மூன்று அவயவங்களுள் தோள் ஒன்று ஆதலின் 'தோள் வெற்பு' என்றார்.

" அகலல்குல் தோள் கண் என மூவழிப் பெருகி, நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகி"- கலித்தொகை முல்லை -8

† மேன்மக்கள் சோர்கை - பாடல் 158-பக்கம் 368- குறிப்பு.

‡ " தாயு நீயே தந்தை நீயே", "சுற்று நீ பிரானும் நீ"

- சம்பந்தர் 1-50-7, 3-52-3

'ஊரே பேரே பிறவே' - திருப்புகழ் 954

× உணர்வாயே = உணர்த்தாயா? ○ வேடர்க்கும்=வேடரையும்

வேடர்க்கு நீள் சொர்க்கம்:-

" நீடிய ஆயுள் அந்தித்த காலைப், பொச்சமில் எம்மூல
செய்தி மீளாப், போகம் திளைத்தருள் சேர்தியென்று,
கச்சமில் பேரருள் நல்கிவிட்டான், காளவன் கைதொழு
தேகுகின்றான்"- தணிகைப்புரா - விடையருள். 6

** வேழத்தின் ஆபத்தை நீக்கினது :-

வரலாறு.- பாடல் 939-பக்கம் 731 கீழ்க்குறிப்பு.

†† 'வேதக் கிளர் தாமரை மலர் மேலுறை வேடில்'

# 1036.

தோடு என்னும் ஆபரணம் அணிந்துள்ள காது வரைக்கும் - காதைத் தொடும்படி - நீண்டுள்ளதும், போர் செய்வதற்குத் (தோய்ந்துள்ளது) செறிந்துள்ளதுமான - அல்லது போருக்கு உற்ற - மை தோய்ந்த - (கணால்) கண்களினாலும், சிறந்த நெற்றியாலும்,

தோள் வெற்பினால் - தோள் மலையாலும், (கரும்பு) வில் ஏந்திய கையை உடைய மன்மதனுடைய பாணங்களால் மேலான குணங்களை உடைய மக்களும் மனம் சோர்ந்து போகும்படியாக காம ஆசையை விற்கின்ற மாதர்களின்-

(உடற்குள்ளே புக்கு) கலவிப் பிணக்கிலே சிக்கி, அதனால் வாட்டமுற்று, (கலாம் மிக்க) சண்டைக் கோபத்தால் மிக்கெழுந்த கூச்சல் சப்தத்தை விரும்பி நான் அலைச்சல் உறா மல்-

(ஊர்) எனது ஊர், (பெற்றதாய்) என்னைப் பெற்ற தாய், (சுற்றம்) எனது உறவினர் - இவை எல்லாமாய் எனக்கு உள்ள (தாள் பற்றி) உனது திருவடியையே நான் கெட்டியாகப் பிடித்து (ஓதற்கு) போற்றுவதற்கு நீ சிறிது எனக்கு உணர்த்த மாட்டாயா!

வேடர்களையும் பெரிய சொர்க்க பூமியில் வாழ்விக்க விரும்பி ஒப்பற்ற (வள்ளி) மலையில் இருந்த பெண்ணாம் வள்ளிக்கு ஒப்பற்ற மணவாளனாய் அமைந்தவனே!

யானை - கஜேந்திரனை அதற்கு உற்ற ஆபத்திலிருந்தும் காப்பாற்றின திருமாலும், அவருடனே, வேதத்தையே ஓதி நிற்கும் (அல்லது வேத தாமரையில் வீற்றிருக்கும்) பிரம தேவரும்

தேடுதற்கு முடியாத நிலையில் நின்ற (வேடத்தர்)- அழலுருவம் கொண்ட - வேஷத்தினராம் சிவபிரானானவர்தாம் வைத்துள்ள (சேமத்தின்) புதை பொருளாம் பஞ்சாக்ஷரத்தின் - ஐந்தெழுத்தின் நாமத்தை - பெயரையும் புகழையும் எடுத்து மொழிந்தவனே!

---

"புவேறான் சாம வெண்டாமரை மேலயன்", - சம்பந்தர் 1-10-9, 3-60-9

‡‡ அரி, அயனுக்கு எட்டாது நின்ற வரலாறு -

பாடல் 319-பக்கம் 292 - பாடல் 535-பக்கம் 222 கீழ்க்குறிப்பு

XX சேமத்தின் நாமத்தை - ஐந்தெழுத்தின் பெயரையும் புகழையும் எடுத்து ஓதினது - இது சம்பந்த மூர்த்தியாய் "ஐந்தெழுத்தின்" உண்மையைத் 'துஞ்சலும் துஞ்சலிலாத போழ்தினும்'- என்னும் பஞ்சாக்ஷரப் பதிகம் பாடியும், 'காதலாகிக் கசிந்து'- என்னும் நமசிவாயப் பதிகம் பாடியும், விளக்கினதைக் குறிக்கும். சம்பந்தப் பெருமான் தனது உபநயன காலத்தில் பாடினது "பஞ்சாக்ஷரப் பதிகம்"

(தொடர்ச்சி 100 ஆம் பக்கம் பார்க்க)

தீதற்ற நீதிக்கு ளேய்பத்தி கூர்பத்தர்
*சேவிக்க வாழ்வித்த பெருமாளே (42)

## 1037. யமன் வருமுன் பக்தி பெருக

தானத்த தானத்த தானத்த தானத்த
தானத்த தானத்த தனதான

தோலத்தி யாலப்பி னாலொப்பி லாதுற்ற
தோளுக்கை காலுற்ற குடிலூடே-
சோர்வற்று †வாழ்வுற்ற கால்பற்றி யேகைக்கு
வேதித்த சூலத்த னணுகாமுன்;
கோலத்தை வேலைக்கு ளேவிட்ட சூர்கொத்தொ
டேபட்டு வீழ்வித்த கொலைவேலா-
கோதற்ற பாதத்தி லேபத்தி கூர்புத்தி
கூர்கைக்கு நீகொற்ற அருள்தாராய்;
‡ஆலத்தை ஞாலத்து ளோர்திக்கு வானத்த
ராவிக்கள் மாள்வித்து மடியாதே-
ஆலித்து மூலத்தொ டேயுட்கொ ளாதிக்கு
மாம் ×வித்தை யாமத்தை யருள்வோனே;

---

(99 ஆம் பக்கம் தொடர்ச்சி)

"செழுமறையோர்க் கருளியவர் தெருளும் ஆற்றால்,
முந்தைமுதன் மந்திரங்க ளெல்லாம் தோன்று முதலாகு
முதல்வனார் எழுத்தஞ் சென்பார், அந்தியினுள் மந்திரம்
அஞ்செழுத்துமே என், றஞ்செழுத்தின் திருப்பதிகம்
அருளிச் செய்தார்" - பெரிய புரா - சம்பந்தர் 266.

சம்பந்தப் பெருமான் தமது திருமணக் காலத்துப் பாடினது "நமசிவாயப் பதிகம்"

"ஞான மெய்ந் நெறிதான் யார்க்கும் நமச்சிவாயச் சொலாம் என் றானசீர் நமச்சிவாயத் திருப்பதிகத்தை யங்கண் வானமும் நிலனும் கேட்க அருள் செய்து"- பெரிய புரா - சம்பந்தர் 1248

---

* பத்தர் சேவிக்க வாழ்வித்த பெருமான்:-

இது அகத்தியர், (கண்ணப்பர் தந்தை நாகனார்), நக்கீரர், ஔவைப் பிராட்டி, நல்லிடைக் கோடன், பொய்யாமொழிப் புலவர், முருகம்மையார், முதலானோரைக் குறிக்கும்.

† வாழ்வுற்ற கால் - வாழ்வுற்றபோது, வாழ்வுற்ற திருவடி, வாழ்வுற்ற (கால்) வழி.

(தொடர்ச்சி பக்கம் 101)

குற்றம் இலாத நீதி நெறியில் பொருந்திய பக்தி சிறந்த பக்தர்கள் போற்ற அவர்களை வாழ்வித்த பெருமாளே!

(தாள்பற்றி ஓதற்கு நீ உணர்வாயே)

# 1037.

(தோல் அத்தியால்) தோலாலும் எலும்பினாலும் (அப்பி-னால்) நீராலும், ஒப்பிலாத வகையில் அமைந்துள்ள (தோளு) தோள், கை, கால் இவை கூடிய (குடிலூடே) குடிசையாம் உடலிடத்தே

தளர்ந்து போதலில்லாது (வாழ்வுற்ற கால்) நான் வாழ்ந்திருக்கும் காலத்தில், பற்றி - என்னைப் பிடித்து (ஏகைக்கு) செல்வதற்கு (அல்லது - நல் வாழ்வு தரும் உனது (கால்) திருவடியைப் பற்றி, ஏகைக்கு - நான் என் வாழ் நாளைச் செலுத்துதற்கு அல்லது - வாழ்வு தரும்படியான (கால்)- வழியை நான் பற்றி என் வாழ் நாளைச் செலுத்துதற்கு), (வேதித்த) என் மேல் மாறு கொண்ட (பகைமை பூண்ட) (சூலத்தன்) திரி சூலத்தை ஏந்தின யமன் என்னிடம் நெருங்கிவரும் முன்பாக-

(கோலத்தை) தனது உருவைக் கடலிலே (மாமரமாய்ச்) சேர்ப்பித்த சூரன், (கொத்தோடே பட்டு) தன் குலத்தாருடன் (பட்டு) அழிந்து விழச்செய்த கொலைத் தொழில் வல்ல வேலா யுதனே!

குற்றமற்ற உனது திருவடியிலே பத்திமிக்க புத்தி மிகுதற்கு நீ வெற்றி தருவதாம் திருவருளை (எனக்குத்) தந்தருளுக.

(கடலில் எழுந்த) ஆலகால விடத்தைப் பூமியில் உள்ளோர் களும், பல திசைகளில் இருந்தவர்களும் வானில் இருந்தவர்களும் தத்தம் உயிர் மாண்டு இறந்து படாமல்-

(ஆலித்து) களித்து - நடித்து (மூலத்தொடே) அடியோடு - முழு விஷத்தையும். (உட்கொள் ஆதிக்கும்) உட்கொண்ட - (உண்ட) ஆதி மூர்த்திக்கும் - (ஆம் வித்தையாம் அத்தை) - ஆகும் வித்தையாகின்ற அதை - ஏற்றதான (வித்தை) உண்மை ஞான மாகிய அந்தப் பொருளை உபதேசித்தவனே!

---

" உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்தாள்"

- திருமுருகாற்றுப்படை - ஆதலின் வாழ்வுற்ற கால் - என்றார்.

‡ ஆலம் உண்டது - பாடல் 509-பக்கம் 162 கீழ்க்குறிப்பு.

விஷம் முழுமையும் சுந்தரர் கொண்டுவந்து தர, இறைவன் உண்டனர். " யாண்டும் துன்றிய விடத்தைப் பற்றிச் சுந்தரன் கொடுவந் துய்ப்ப, ஒன்றொரு திவலையேபோல் ஒடுங்குற மலர்க்கை வாங்கி... மிடற்றில் எங்கோன் பொலன்மணி அணியதென்ன .... நிறுவி' - கந்த புரா. 6-13-354, 359

X உபதேசித்தது - பாடல் 327 - பக்கம் 314 கீழ்க்குறிப்பு.

சேலொத்த வேலொத்த நீலத்து மேலிட்ட
தோதக்கண் மானுக்கு மணவாளா-
நீதற்ற நீதிக்கு ளேய்பத்தி கூர்பத்தர்
சேவிக்க வாழ்வித்த பெருமாளே (43)

## 1038. அடியவரைத் தொழ

தானந் தனதன தானந் தனதன
தானந் தனதன தனதான

ஊனுந் தசையுடல் தானொன் பதுவழி
யூருங் கருவழி யொருகோடி-
ஓதும் பலகலை கீதஞ் சகலமு
மோரும் படியுன தருள்பாடி;
நானுன் திருவடி பேணும் படியிரு
போதுங் கருணையில் மறவாதுன்-
*நாமம் புகழ்பவர் பாதந் தொழஇனி
நாடும் படியருள் புரிவாயே;
காணுந் திகழ்கதி ரோனுஞ் சசியொடு
காலங் கனு† நடை யுடையோனுங்-
காருங் கடல்வரை நீருந் தருகயி
லாயன் கழல்தொழு மிமையோரும்;
வானிந் திரனொடு மாலும் பிரமனும்
வாழும் படிவிடும் வடிவேலா-
‡மாயம் பலபுரி சூரன் பொடிபட
வாள்கொண் டமர்செய்த பெருமாளே (44)

---

* அடியார்க்கடியன் ஆதலின் சிறப்பு :-

'எம்பிரான் தொண்டர் தொண்டரைத் தொழுதடி பணிமின்கள் தூநெறி எளிதாமே'- சம்பந்தர் 2-104-10 நாம விசேஷத்தை - பாடல் 661, 668, 871- கீழ்க்குறிப்புக்கள் - பக்கம் 16, 34, 548 - பார்க்க.

"முருகனை அருள்பட மொழிபவர் ஆராய்ந்து
வணங்குவர் தேவேந்திர சங்கமே"- திருவகுப்பு.

முருகன் நாமத்தை மொழிபவரைத் தேவேந்திர சங்கமும் வணங்கும் என்றார்.

† நடையுடையோன் = காற்று.

‡ "மாயச்சூர் அன்றறுத்த மைந்தன்"- சம்பந்தர் 2-62-1.

சேல் மீன் போன்றும், வேலாயுதம் போன்றும், நீலோற்பல மலருக்கும் மேலாகவும் உள்ளதும் (தோதகம்) தோதகக் கண் (உனக்கு) (காம) வருத்தும் தந்தருமான கண்களைக் கொண்ட மான் அனைய வள்ளிக்கு மணவாளனே!

குற்றமில்லாத நீதி நெறியிற் பொருந்தி நிற்கும் பத்திமிக்க பக்தர்கள் (உன்னை) போற்றி வழிபட (அவர்களை) வாழ்வித்த பெருமாளே!

(சூலத்தன் அணுகாமுன் - புத்திகூர்கைக்கு - அருள் தாராய்)

## 1038.

(ஊனும்) மாமிசமும், சதையும் கூடிய (இந்த) உடல்தான் ஒன்பது துவாரங்களுடன் கூடிச் சேர்ந்துவரும் கருவின் வழி ஒரு கோடிக் கணக்கானதும்; ஆதலினால் என்பிறப்பு ஒழிய மாறு நான்)

படிக்கின்ற பல சாத்திர நூல்களையும் (கீதம்) இசை ஞானத்தையும் - ஆக எல்லாவற்றையும் (ஒரும்படி) உணரும் படியும் உன்னுடைய திருவருளைத் துதித்துப் பாடி-

நான் உனது திருவடிகளை விரும்பிப் போற்றும்படியும்' காலை, மாலை இரு பொழுதிலும் உனது கருணைத் திறத்தினில் ஞாபகம் வைத்து (கருணையை மறவாமல் நினைந்து) உனது,

திரு நாமங்களைப் புகழ்பவர்களுடைய திருவடியைத் தொழ இனியேனும் விரும்பும் வண்ணம் (நீ) திருவருள் புரிவாயாக.

காட்டிலும் தனது கிரணங்களை வீசும் (கதிரோனும்) சூரியனும், (சசி) சந்திரனும், (அல்லது காடும், விளங்கும் சூரியனும், சந்திரனும்) இவர்களுடன் (காலங்களும்) இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் முக்காலங்களும், (நடையுடையோனும்) காற்றும்

* மேகமும், கடலும், மலையும் நீரும், இவைகளை யெல்லாம் படைத்தருளிய (கைலாயன்) சிவபெருமானுடைய திருவடியைத் தொழுது நின்ற தேவர்களும்,

விண்ணிலுள்ள தேவேந்திரனும், நெடியதிருமாலும், பிரமனும், வாழும்படியாகச் செலுத்தின கூரிய வேலாயுதனே;

மாயைகள் பலவற்றைப் புரிந்த சூரன் தூள்பட்டழியும்படி வாள் கொண்டு போர் புரிந்த பெருமாளே.

(நாமம் புகழ்பவர் பாதந்தொழ - அருள் புரிவாயே)

---

* 'இரவு, எல், ஆழி, மண், விண் தரு... கயிலாயி'- கந் அந். 34

## 1039. சிவயோகம் புரிய

தானந் தனதன தானந் தனதன
தானந் தனதன தனதான

தீயும் பவனமு நீருந் தரணியும்
வானுஞ் செறிதரு பசுபாசத்-
*தேகந் தனைநிலை யேயொன் றிருவினை
தீருந் திறல்வினை யறியாதே;
ஓயும் படி†யறு நூறும் பதினறு
-நூறும் பதினிரு பதுநூறும்-
ஓடுஞ் சிறுவுயிர் மீளும் படி நல
யோகம் புரிவது கிடையாதோ;
வேயுங் கனியும்வி ளாவும் படுபுன
மேவுஞ் சிறுமிதன் மணவாளா-
மீனம் படுகட லேழுந் தழல்பட
‡வேதங் கதறிய வொருநாலு;
வாயும் ×குலகிரி பாலுந் தளைபட
○மாகந் தரமதில் மறைசூரன்.

---

* 'ஐம்பூதத்தான் ஆகியதோர் ஆக்கை' - வெற்பந்து - 9.

† சுவாசக் கணக்கு கூறப்பட்டுள்ளது. நாழிகை ஒன்றுக்கு 360 சுவாசம்; ஒரு நாளைக்கு (60 நாழிக்கு 24 மணி நேரத்துக்கு) - 60 x 360 = 21600 சுவாசம்

மூலாதார சுவாசம் - 600

சுவாதிஷ்டானம், மணி பூரகம், அனாகதம் - ஒவ்வொன்றுக்கு 6000- ஆக 3 x 6000 = 18,000 சுவாசம்.

விசுத்தி, ஆக்ஞை, நாதாந்தம் ஒவ்வொன்றுக்கு 1000- ஆக 3 x 1000 = 3,000 சுவாசம்-ஆக 21,600 சுவாசம்.

'இருபத் தோரா யிரத்தறு நூறாய் மருவி நாடொறும் வளர் சுவாசத்தை' -சிற்றம்பல நாடிகள்

'இருபத் தோரா யிரத்தறு நூறு சுவாசம் அனைத்தும், தாம்பிர ஓடாய் உருவெடுத் தும்பர் மருவி அமைந்தன' - சிதம்பர விலாசம் - 30

சாதரணமாய், ஒருவன் ஒரு நாளைக்கு விடும் சுவாசம் 21, 600 - என்று சிவ யோக சாரம் கூறும்.

‡ வேதங் கதறிய ஒருநாலு வாய் = பிரமன். 'சரியா நாவின் வேதகீதன் தாமரை நான்முகத்தன்'- சம்பந்தர் I-63-1

(தொடர்ச்சி 105 ஆம் பக்கம் பார்க்க)

# 1039.

தீயும், காற்றும், நீரும், மண்ணும், விண்ணும் ஆகிய ஐம் பூதங்கள் நிறைந்துள்ளதும், (பசு) - ஜீவான்மாவும், (பாசம்) தளைகள் ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களும், கூடியதாயுள்ளதுமான-

(தேகந்தனை) இவ்வுடலை (நிலையே ஒன்றி) நிலைத்திருக்கும்படிப் பொருந்த வைத்து, நல்வினை தீவினை யென்னும் இருவினைகளும் முடியும்படியான திறமை வாய்ந்த செயல் (எதையும்) நான் அறிந்து கொள்ளாமல்

ஓயும்படி - பிறப்பு ஒய்வுறும் வண்ணம் - 600 + (பதின் உறழ்நாறு = பதின்மடங்கு நூறு - 1000 + (பதின் இருபது நூறு - பத்து இருபது நூறு = 10 x 20 x 100) + 20,000 ஆக 21,600 மூச்சுக்கள்

ஓடுகின்ற இந்த சிற்றுயிர் (மீளும்படி) விடுதலையடையும்படி - ஓய்வடையும்படி நல்ல சிவயோகத்தைப் பயிலும் பாக்கியம் எனக்குக் கிடைக்காதோ - என் பிறப்புத் தொழில் ஓயாதோ!

மூங்கிலும், (கனியும்) வேங்கை மரமும், விளாமரமும், இருக்கின்ற (புனம்) மலைச்சாரான கொல்லையில் இருந்த (சிறுமி) வள்ளியின் - மணவாளனே!

மீன்கள் உலவுகின்ற கடல் ஏழும் தீப்பட்டு வறண்டு போகவும், வேதத்தை வாய்விட்டு உரைக்கும் ஒப்பற்ற நான்கு

வாய்களையுடைய பிரமனும், (குலகிரி) உயர்ந்த மலையான கிரௌஞ்சத்தின் (பாலும்) இடங்களும் - (தளைபட) சிறையிற் பட்டு (வேதனைப்பட்டு) அழுங்க - அல்லது பிரமன் (குலகிரிபால்) கந்தகிரியில் ஓரிடத்தே சிறைபட்டழுங்கவும், (மா - கந்தரம் - அதில்) பெரிய மேகத்தினிடையே மறைந்து போர் செய்த சூரனுடைய

---

X 'சிறைபுரிந்திடுவித்தனன் கந்தமாஞ் சிலம்பில்'

- கந்தபுரா. 1-16-15

O சூரன் முருகவேளொடு செய்த போரில் அடிக்கடி மறைந்து நின்று போர் செய்தான். அப்போதைக்கப்போது ஆண்டவர் சூரனது மாயைப்போரை வென்றனர் -

" மாயை நீரால் அப்புறத் தண்டம் போனான்.... பின்னரும்
கரந்து செல்லப் பிரானும் அவ்வண்டந் தோறும்...
விடாது தொடர்ந்தயர் இயற்றிப் போனான்", " ஞாலமும்
ககன முற்றும் மாயிருள் உருவம் கொண்டு மறைந்து
நின்றார்க்க லுற்றான்"- கந்தபுரா 4-13-272, 273, 456

மார்புந் துணையுறு தோளுந் துணிபட
*வாள்கொளன் டமர்செய்த பெருமானே (45)

## 1040. பிறவியற

தானந் தனதன தானந் தனதன
தானந் தனதன தனதான

வாதந் தலைவலி சூலம் பெருவயி
றாகும் பிணியிவை யணுகாதே-
மாயம் பொதிதரு காயந் தனின்மிசை
வாழுங் கருவழி மருவாதே;
ஓதம் பெறுகடல் மோதுந் திரையது
போலும் பிறவியி லுழலாதே
ஓதும் பலஅடி யாருங் கதிபெற
யானுன் கழலிணை பெறுவேனோ;
†கீதம் புகழிசை நாதங் கனிவொடு
வேதங் கிளர்தர மொழிவார்தம்-
கேடின் பெருவலி மாளும் படியவ
ரோடுங் கெழுமுத லுடையோனே;
‡வேதந் தொழுதிரு மாலும் பிரமனு
மேவும் பதமுடை விறல்வீரா-

* 1039 - பாடலின் 6-8 அடிகள் வேல் வாங்கு வகுப்பின் கருத்தைக் கொண்டன.

† கீதமும் - வேதமும் - இறைவனும்-
'பண்ணொன்ற இசைபாடும் அடியார்கள் குடியாக
மண்ணின்றி விண் கொடுக்கும் மணிகண்டன்' - சம்பந்தர் 2-43-8
' நாலு வேதம் ஓதுவார்கள் நந்துணை என்றிறைஞ்ச
. சிரபுரம் மேயவனே'- சம்பந்தர் 1-47-9
'மறை .. வல்லவர் பால் மலிந்தோங்கிய சொல்லானை'
'வேதம் விரித்தோதுவார் கண்ணுளார்'
'உரையார் கீதம்பாட நல்ல உவப்பிலருள் செய்தார்'
'பண்களார்தரப் பாடுவார் கேடிலர் பழியிலர் புகழாமே' - சம்பந்தர்.
2-11-1, 2-12-7, 1-71-8, 2-104-2 (தொடர்.பக்.107

மார்பும், (துணைபுறுதோளும்) இரண்டு தோள்களும் (துணி பட) அறுந்து விழவும், வாளாயுதம் கொண்டு போர்புரிந்த பெருமாளே.

(நலயோகம் புரிவது கிடையாதோ)

## 1040.

(வாதம்) வாயு சம்பந்தமான நோய்கள், தலைவலி, (சூலம்) சூலை நோய், (பெருவயிறு) மகோதரம், ஆகிய நோய்களான இவை ஒன்றும் என்னை அணுகாமலும்-

மாயை - அஞ்ஞானம் - நிரம்பிய உடல் கொண்டு வாழும்படி விடும் கருவின் வழியொன்றும் (என்னைச்) சேராமலும்-

வெள்ளமாய் நிறைந்து நிற்கும் கடலில் மேலும்மேலும் வீசுகின்ற திரைகள்போன்ற பிறப்புக்களில் (நான்) அலைச்சல் உறாமலும்

(உனது) திருப்புகழை ஓதுகின்ற பல அடியார்களும் நற்கதி, பெறவும் - நான் உனது திருவடியிணைகளைப் பெறுவேனோ!

இசையின்பமும், உன்புகழைச் சொல்லுகின்ற ஓசையின்பமும் (கலக்க) உள்ளக் கனிவோடு - பக்தியோடு - வேத வாக்கியங்களை நன்கு விளங்கும்படி ஓதுகின்றவர்களுடைய

கேடின்பெருவலி - கேட்டினை விளைக்கும் ஊழ்வினையின் பெருவலி (மாளும்படி) அவர்களைப் பிடிக்காது ஒழியும்படி, அவர்களோடு (எப்போதும்) கெழுமுதல் - பொருந்துதலை - உடனிருந்து காக்கும் தருவருளை உடையவனே!

வேதங்கள் தொழுகின்ற திருமாலும், பிரமனும் விரும்புகின்ற திருவடிகளையுடைய வெற்றி வீரனே!

---

* கீதம் புகலிசை நாதங் கனிவுறு
கீரன் தமிழிசை மொழியாலே
கேடும் பொருவலி மாளும்படி யடல்
கீறுங்கர அயி லுடையோனே"- என்றும் பாடம்

‡ வேதம் தொழு திருமால்:-

'நன்கோதும் நல்ல வேதத்துள்ளான் ... புனல் வண்ணன்'

- இயற்பா. 3 ஆம் - திரு அந்தாதி. 11

மேல்வந் தெதிர்பொரு சூரன் பொடிபட
*வேல்கொண் டமர்செய்த பெருமாளே (46)

## 1041. ஈடேற

தானா தானா தானா தானா
தானா தானத் தனதான

ஊனே தானா யோயா நோயா
லூசா நீசற் குடில்பேணா-
ஓதா மோதா வாதா காதே
லோகா சாரத் துளம்வேறாய்;
†நானே நீயாய் நீயே நானாய்
நானா வேதப் பொருளாலும்-
நாடா வீடா யீடே றாதே
நாயேன் மாயக் கடவேனோ;
வானே காலே தீயே நீரே
பாரே பாருக் குரியோனே-
மாயா மானே கோனே மானார்
வாழ்வே கோழிக் கொடியோனே;
(*)தேனே தேனீக் கானா றாய்வீழ்
தேசார் சாரற் ‡கிரியோனே-
சேயே வேளே பூவே கோவே
தேவே தேவப் பெருமாளே (47)

---

* 'வாள் கொண்டமர் செய்த', 'வேல் கொண்டமர் செய்த' - என்றதனால் - பாடல் 1039, 1040 - வாளாலும் வேலாலும் போர் செய்தார் முருகவேள் என்பது விளங்கும்.

('வாளாலே வேலாலே சேதித்திடும் வீரா' - திருப்புகழ் 1045
'கூர் வேலாலே ஓர் வாளாலே அமராடி'- திருப்புகழ் 1065)

ஆதலால், "வாளோங்கிய வேல் வாங்கவே" என்ற வேல் வாங்கு வகுப்பில் வாள் வாங்கவே, ஓங்கிய வேல் வாங்கவே - எனவும் பொருள் காணலாம்.

† 'நானே நீயாய் நீயே நானாய்'-
'நீ வெறெனாதிருக்க நான் வெறெனாதிருக்க'- திருப். 220
'ஏக போகமாய் நீயு நானுமாய் இறுகும் வகை'- திருப் 862

(*) "தேனாறு" வருதலால் இப்பாடலைக் குன்றக்குடிக்கு உரியதாகவும் கொள்ளலாம்.

‡ 'தேனாறு வீழ் சாரற் கிரி'- குன்றக்குடி. இப்பாடலைக் குன்றக்குடிக்கு உரியதாகவும் கொள்ளலாம் - பாடல் 408, 411 அடி 8- பார்க்க

மேலெழுந்து எதிர்த்துப் போர் செய்த சூரன் பொடி பட்டழியும்படி வேலாயுதம் கொண்டு போர் செய்த பெருமாளே!

(யான் உன் கழலிணை பெறுவேனோ)

## 1041.

(ஊனே) ஊன் பொருந்திய இவ்வுடலே, (தானாய்) (தான்) நான் என நினைத்து, (ஓயா நோயால்) என்றும் ஓயாத (முடிவிலாத) நோயாளனாய், (ஊசாடு) ஊசுதலை (அழிதலை) உடையதும், (ஊசல்) ஊஞ்சலைப் போல அசைவுள்ளதும் - மாறிமாறி வருகின்றதுமான (குடில்பேணா) தேகத்தைப் பேணி (விரும்பி) -

நூல்களை ஓதியும், (மோதா) தாக்கிப் பேசியும், செய்கின்ற (வாதாகாதே) சமய வாதங்களில் ஈடுபடாமலும், உலக ஆசார கட்டுப் பாட்டுக்களில் உள்ளம் பொருந்தாமல் வேறுபட்டும், அல்லது (குடில் பேணா) தேகத்தைப் பேணாமல். வாதங்களில் ஈடுபடாமல், லோக ஆசார நியதிகளில் உள்ளம் பதியாது வேறுபட்டு -

(நானே நீயாய் நீயே நானாய்) எனது ஜீவாத்மாவானது பரமாத்துமாவாகிய உன்னுடன் ஒன்றுபட்டுப் பொருந்தி பலவகையான வேதப் பொருள் கொண்டு

(நாடா) உன்னை நாடி விரும்பி (வீடாய்) வீடு பேற்றை யடைந்தவனாய், ஈடேறுதலில்லாமல், நாயனைய அடியேன் இறந்து படக்கடவேனோ!

விண், காற்று, தீ, நீர், பார் (மண்) ஆகிய இவ்வைம்பூதங்களாய் விளங்கிப் பாருக்கு இவ்வுலகிலுள்ளோருக்கு - உலகிலுள்ள பெரியோர்களுக்கு - உரியவனாய்த் திகழ்பவனே!

மாயா - என்றும் அழிவில்லாத (மானே) பெரியோனே! பெருமானே! சீமானே! (கோனே) தலைவனே! (மானார்) மான் போன்ற வள்ளி தேவசேனைக்கு (வாழ்வே) செல்வக்கணவனே! கோழிக் கொடியோனே!

தேனே - தேன்போலினிப்பவனே! (தேன் நீள் கான் ஆறாய்) தேன்போலும் இனிப்புள்ள நீண்ட காட்டாறாக- (தேனாறு என்னும் நதியாய்) வீழ் - பாய்கின்ற (தேசார் சாரல் கிரி) தேசு † ஆர் - ஒளி பொருந்திய, சாரல் கிரி - மலைப் பக்கங்களை உடைய கிரி - தேனாறு பாய்கின்ற மலையிடம் - அதாவது குன்றக்குடி என்னும் தலத்தில் வீற்றிருப்பவனே!

சேயே! - செவ்வேளே! அழகனே! தலைவனே! தேவனே! தேவர்கள் பெருமாளே - அல்லது தெய்வப் பெருமாளே!

(நாயேன் மாயக் கடவேனோ)

## 1042. நர ஸ்துதி வேண்டாம்

தானா தானா தானா தானா
தானா தானத் தனதான

*சாவா மூவா† வேளே போல்வாய்
தானா வேனுக் கருள்கூருந்-
தாதா வேளா தாவே கோவே
சார்பா னார்கட் குயிர்போல்வாய்.
‡ ஏவால் மாலே போல்வாய் X காரே
போல்வா யீதற் கெனையாள்கொண்-
டேயா பாடா வாழ்வோர் பாலே
யான்வீ ணேகத் திடலாமோ;
பாவா நாவாய் வாணி சார்வார்
பாரா வாரத் O துரகேசப்-
பாய்மீ தேசாய் வார்கா ணாதே
பாதா ளாழத் துருபாதச்,
சேவா மாவூர் கோமான் வாழ்வே
சீமா னேசெச் சையமார்பா.
சேயே வேளே பூவே கோவே
தேவே தேவப் பெருமாளே (48)

---

* 'பெம்மான் முருகன் பிறவான் இறவான்'- கந்தரநுபூதி 12 'மூவா வேளே' - 'என்றும் இளையாய்' திருமுரு - தனிப்பாடல் †வேளே போல்வாய்-

" கை புலாவிய வேலனே என்று கூறினும்
கொடுப்பாரிலை" - சுந்தரர். திருப்புகலூர் - 10

‡ ஏ = அம்பு: 'ஏ வென்ற கண் மடவாய்' - கந்தபுரா. அயிராணி - 20
(திருமால்) ஸ்ரீராமர் 'ஒக பாணமு' - பாடல் 452 - பக்கம் 6
குறிப்பு ஏ - (புகழ்ப) பெருக்கம் "புகழொத் தீயே யிகழுந ரடுநனை"-
'புகழாற் பகைவரைக் கொல்லும் மாயோனை ஒப்பை'
- புறநானூறு 56- உரை

X "மேக நிகரான கொடை" - பாடல் 122 அடி 7

O சேடன் மீது படுக்கை -
'நாக மெத்தையிற் றுயின்ற நாரணன்'- திருப்புகழ் 832

## 1042.

சாதல் இல்லாமலும், மூத்தல் இல்லாமலும் முருகனைப் போல (என்றும் இளையவனாய்) விளங்குவாய்! ( தான் ஆவேனுக்கு) தங்கள் காலின் கீழ்ப்பட்ட எனக்கு - அடி நாயேனுக்கு - (அல்லது - முயற்சியுடன் தங்களிடம் வந்த என்பால் - அருள் சுரக்கும்-

(தாதாவே) கொடையாளியே! (ஞாதாவே) ஞானவானே! (கோவே) தலைவனே! உன்னைச் சார்ந்து நிற்பவர்களுக்கு - நம்பி நிற்பவர்களுக்கு - உயிர்போல் விளங்குபவனே!

(ஏவால்) பாணப்ரயோகத் திறத்தில் (புகழ்ப் பெருக்கில்) திருமாலையே நீ நிகர்ப்பாய்! மேகத்துக்கு ஒப்பாவாய் கொடைத்திறத்தில் என்னை ஆட்கொண்டு, (என்னை ஆட்கொண்டு கொடையால் மேகமே நிகர்ப்பாய்) - எனக்கூறி

(ஏயா) செல்வர்களை ஏய்ந்து - பொருந்தி அடைந்து, (பாடா) - பாடல்களைக் கேட்டு (வாழ்வோர்) வாழ்கின்ற வர்களிடம், அல்லது (பாடா) பாடி (அதைக்கேட்டு வாழ்வோரிடம், நான் வீணாகக் (கத்திடலாமோ) கூச்சலிடுதல் நன்றா? கூச்சலிட்டு (அவர்களைப்) பாடுதல் நன்றன்று.

(பாவா) பாவாக - பாடல்களாக, (நாவாய்) நாவிடத்தே பொருந்தும் (வாணி) சரஸ்வதியைச் (சார்வார்) சார்ந்துள்ள பிரமனும், (பாராவாரம்) கடலிலே (உரகேச) -நாக ராஜனாகிய-

(பாய்மீதே) பாயலின் மேலே (சாய்வார் படுக்கை கொள்ளும் திருமாலும், (காணாதே) தம்மைக்காண முடியாதபடி (பாதாள ஆழத்து உறு) * பாதாள ஆழத்திலே உற்ற - கீழுலகம் தாண்டி நின்ற ஆழத்திலே இருந்த திருவடிகளை உடையவரும்,

(சே ஆம்) ரிஷபமாம் (மா) விலங்கை (இடபத்தை) (ஊர்) செலுத்துபவரும் ஆன (கோமான்) அரசின் - பெருமையிற் சிறந்த சிவனது - (வாழ்வே) செல்வமே! (சீமானே) செல்வப் பிரபுவே! வெட்சிமாலை அணிந்த திருமார்பனே!

சேயே! செவ்வேளே! அழகனே! தலைவா! தேவனே! தேவர் பெருமாளே! (வீணே கத்திடலாமோ)

---

* "பாதாளம் ஏழினுங்கீழ் பாதமலர்" - திருவெம்பாவை மாவலியைப் † பாதாளத்தின்கீழ்ச் செலுத்திய பாதங்கொண்ட (சே) ‡ இடபமாம் திருமால். † பாடல் 268-பக்கம் 166; ‡ பாடல் 389- பக்கம் 481; பாடல் 786 - பக்கம் 333

## 1043. தாள்பாடுந் திறம்பெற

தானா தானா தானா தானா
தானா தானத் தனதான

நீரா லேதோல் நீரா லேயாம்
நானா வாசற் குடிலூடே-
ஞாதா வாயே வாழ்கா *லேகாய்
நாய்பேய் சூழ்கைக் கிடமாமுன்,
தாரா ரார்தோ ளீரா றானே
சார்வா னோர்நற் பெருவாழ்வே-
தாழா தேநா யேனா வாலே
தான்பா டாண்மைத் திறல்தாராய்;
†பாரே ழோர்தா ளாலே யாள்வோர்
‡பாவார் வேதத் தயனாரும்-
பாழு டேவா ரூடே பாகு
டேயூர் பாதத் திணைநாடாச்;
சீரார் மாதோ டேவாழ் வார்நீள்
சேவூர் வார்பொற் சடையீசர்
சேயே வேளே பூவே கோவே
தேவே தேவப் பெருமானே (49)

## 1044. அருள்பெற

தானா தானா தானா தானா
தான்னா தானத் தனதான

மாதா வோடே மாமா னானோர்
மாதோ டேமைத் துனமாரும்-
மாறா னார்போ லீந்தீ யூடே
மாயா மோகக் குடில்போடாப்,

---

* ஏகாய் - ஏகு ஆய் - ஏகுதல் ஆய் - இறந்து போதல் ஏற்பட்டு - இறந்து. ஏகு - முதனிலைத் தொழிற் பெயர்.

† 'ஆள்கின்றான் ஆழியான்' - திருவாய்மொழி 10-4-3

‡ 'வேத நான்கும் ஓதும் அயன்' - சம்பந்தர் 1-65-9

## 1043.

(நாரேலே) நார்போன்ற நரம்புகளாலும், தோலாலும், நீராலும் (ஆம்) ஆகியுள்ள - அமைந்துள்ள - பலவிதப்பட்ட (வாசல்) வாயில்களை உடைய (நவத்துவாரங்கள் முதலிய வாயில்களை உடைய) குடிசையாகிய இந்த உடலினுள்

(ஞாதாவாயே) அறிவு வாய்ந்தவனாய் (வாழ்கால்) வாழ்கின்ற காலத்தில் (ஏகாய் - ஏகு ஆய் - ஏகுதல் ஆய்) போதலுற்று - இறந்துபோய், நாயும், பேயும் (என் உடலைச்) சூழுதற்கு (இட முன்) சமயம் ஏற்படுவதற்கு முன்பாக - காலம் உண்டாவதற்கு முன்பாக -

தாராரார் - (தார் ஆர் ஆர் - ஆர் தார் ஆர் - ) ஆத்திமாலை நிறைந்த - தோள் (சராறானே) பன்னிரண்டு தோள்களை உடையவனே! (சார்வானோர்) உன்னைச் சார்ந்த அடியவர்களுக்கு நல்ல பெருவாழ்வே!

தாழாதே - தாமதிக்காமல் - நாயனைய அடியேன் எனது நாவைக்கொண்டு, (உனது) திருவடியைப் (பாடு ஆண்மைத்திறல்) பாடும் வலிமைத்திறலைத் தந்தருளுக.

பார் ஏழு ஓர் தாளாலே - ஆள்வோர் - ஏழுலோகங்களையும் ஒப்பற்ற தமது முயற்சியால் காத்தாளுகின்ற (திருமாலும்), பாவார் வேதத்து பரப்பு உள்ள (அல்லது பா - தூய்மைப் பாடல் உள்ள) வேதம் ஓதும் பிரமனும் -

(பாழூடே) வெட்டவெளிப் பாழிலும், வானிலும், மண்ணிலும், பரவி நிற்கும் (பாதத்தினை) திருவடியினை நாடமுடியாத -

சிறப்பினை உடையவர், (மாதோடே) தேவி - பார்ப்பதியுடனே வாழ்கின்றவர், (நீள்) பெரிய சே - இடபத்தை ஊர்வார் - வாகனமாகக் கொண்டவர், பொன்னிறச் சடையினை உடையவர் - ஆகிய (ஈசர்) சிவபெருமானுடைய

(சேயே) குமாரனே! செவ்வேளே! (பூவே) அழகே - (பொலிவே) தலைவனே! தேவனே! தேவர் பெருமானே! (தெய்வப் பெருமானே!

(தாள் பாடாண்மைத் திறல்தாராய்)

## 1044.

(மாதாவோடே) தாயுடனே, (மாமான் ஆனோர்) அம்மான்மார்களும், (மாதோடே) மனைவியுடனே, மைத்துனர்களும்

(மாறனார் போல்) (என்னுடன்) பகைமை பூண்டுள்ளவர்கள் போலப் பெரிய நெருப்பிடையே - மாயைக்கும் (மோகத்துக்கும்) ஆசைக்கும் இடம் தந்த - (குடில் போடா) உடலைப்போட்டு உடலையிட்டுப் -

போதா நீரு டேபோய் மூழ்கா
*வீழ்கா வேதைக் குயிர்போமுன்-
போதா காரா பாராய் சீரார்
போதார் பாதந் தருவாராய்;
வேதா வோடே மாலா னார்மேல்
வானோர் மேனிப் †பயமீள-
வேதா னோர்மே லாகா தேயோர்
வேலால் ‡வேதித் திடும்வீரா;
தீதார் தீயார் தீயூ டேமுன்
சேரா சேதித் திடுவோர்தஞ்-
சேயே வேளே பூவே கோவே
தேவே தேவப் பெருமாளே (50)

## 1045. ஆண்டருள

தானா தானா தானா தானா
தானா தானத் தனதான

வீராய் பேதாய் கேளாய் நீ×தாய
மானார் மோகத் துடனாசை-
மாசூ டாடா ○தூடே பாராய்
மாறா ஞானச் சுடர்தா**னின்;
††றாரா யாதே யாராய் பேறாம்
ஆனா வேதப் பொருள்கானென்-
றான்வாய் நீதா னாதா பார்மீ
‡‡தார்வே றான்கைக் குரியார்தாம்;

---

* வீழ்தல் - நீங்குதல் - " திரு வீழ் மார்பிற் றென்னவர் கோவே' - சிலப்பதி - 20-23

நீரில் மூழ்கி நீங்குதல் - பாடல் 162 - பக்கம் 376.

† பயம் மீளவே தானோர் மேலாகாதே எனப் பிரிக்க. தானோர் = தானவர். பயம் மீள வேது ஆனோர் - எனவுமாம்.

‡ வேதித்தல் - நலிதல் -

" வேதித்தார் புரமூன்றும்.. வெந்தவிய"- சம்பந்தர் 2-43-9

" வேதியா நிற்கும் ஐவரால் வினையேனை மோதுவித்து" - திருவாய்மொழி . 7-1-3

X தாய் = தாவி. " கலை தாய வுயர் சிலையத்து" - மதுரைக் காஞ்சி . 332

O ஊடு = உள் ** நின்று = மனம் நிலைத்து (தொடர்.பக். 115)

(போதா) போய், (நீறுபே போய்) நீசின வேரமுறுதி (வீழ்வா) விழகுதல் - வீழ்தல்-நீங்குதல் (என்கின்ற) வேதனைக்கு துன்பத்துக்கு இடம் தந்து, உயிர் போவதற்கு முன்பாக-

(போத ஆகாரா) ஞான உருவத்தனே! (பாராய்) கண் பார்த்தருளுக! (சீரார்) சிறப்பு நிறைந்த (போது ஆர்) தாமரை மலர் போன்ற - பாதத்து - திருவடிகளின் திருவருளைத் தந்தருளுக.

பிரமனுடன், திருமால், (மேல்) விண்ணில் உள்ள தேவர்கள் இவர்தம் உடலிற்கண்ட பயம் (மீளவே) - நீங்குதற்கே,

(தானோர்) தானவர்கள் அசுரர்கள் (அல்லது - வேது ஆனோர் - வேதனை - தந்தவர்களாம் அசுரர்கள்)- மேலாகாதே - மேம்படாதவாறு, ஒப்பற்ற வேலாயுதத்தால் (வேதித்திடும்) அசுரர்களை நலிவு செய்த - துன்புறுத்தின வீரனே!

(தீதார்) தீது ஆர் - கொடுமை வாய்ந்த (தீயார்) கொடியவர்களான திரிபுராதிகள் (தீயூடே மூள) மூள் தீயூடே - மூண்ட தீயின் இடையே - சேரா - சேரும்படிச் (சேதித்திடுவோர் தம்) அழித்தவராம் சிவ பிரானுடைய

குமாரனே! செவ்வேளே! அழகனே! தலைவனே! தேவனே! தேவர் பெருமாளே (தெய்வப் பெருமாளே)! (பாதத் தருள் தாராய்)

## 1045.

'வாராய் பேதாய்! (ஏ! பேதையே வருவாயாக!) (நான் சொல்வதைக்) கேட்பாயாக! நீ தாவி மாதர்கள்மீது கொண்ட மோகத்துடன் காம ஆசை என்கின்ற-

மாசு வடாடாது - குற்றத்திலுட் பட்டு அலையாது, (வடே) உனக்குள்ளே ஆய்ந்து பார்ப்பாயாக; மாறாத ஞான ஒளியில் (நீ) நிலைத்து நின்று

(‡ஆராயாதே ஆராய்) மற்றப் பொருள்களை ஆராய்வது போல ஆராயாது அறிவால் ஆராய்ச்சி செய்வாயாக, (பேறாம்) பெறத் தக்க அரும் பொருளாகியும், (என்றும்) (ஆனா) கேடில்லாதது மான - அழிவிலாததுமான வேதப் பொருளைக் கண்டுகொள், என்று எனக்கு உணர்த்தி - (என்னை),

ஆள்வாயாக நீதான்; நாதனே! (பார்மீது) இந்தப் பூமியில் (†ஆர் வேறு ஆள் கைக்கு) உரியார்தாம் - உன்னை யன்றி வேறு யார் தான் உளர் என்னை ஆளுதற்கு;

---

‡ ஆராயாதே ஆராய் = மற்றப் பொருள்களை ஆராய்வது போல் ஆராயாது அறிவால் ஆராய்.

† 'ஆறுமா முகப்பிரான் அன்றியில் விடை வேறொரு
துணையிலை மெய்ம்மை ஈது"- கந்தபுரா . 4-9-76

*தோரா வானோர் சேனா தாரா
சூரா சாரற் புனமாது-
தோள்தோய் தோளீ ராறா மாசூர்
தூளாய் வீழச் சிறுதாரைச்;
†சீரா வாலே வானா லேவே
லாலே சேதித் திடும்வீரா-
சேயே வேளே பூவே கோவே
தேவே தேவப் பெருமாளே (51)

## 1046. ஞான பூஜை

தனன தான தானான தனன தான தானான
தனன தான தானான தனதான

‡அகல நீளம் யாதாலு மொருவ ராலு மாராய
அரிய மோன மேகோயி லெனமேவி-
அசைய வேக்ரி யாபீட மிசைபு காம காஞான
அறிவி னாத ராமோத மலர்தூவிச்;
சகல ×வேத னாதீத சகல வாச காதீத
சகல மாக்ரி யாதீத சிவரூப-
சகல சாத காதீத சகல வாச னாதீத
தனுவை நாடி மாபூசை புரிவேனோ;
விகட தார சூதான நிகள பாத போதான
Oவிரக ராக போதார சுரர்கால-

* 'தோரா'- 'தோரா வென்றி' - திருப்புகழ். 57
† சீரா - சிறிய கூரிய உடைவாள் -" சீராவினாலுறுத்
தறுத் தொதுக்கிய பெருமாளே" - திருப்புகழ் . 1132
" பாலன் அரையிற் கட்டும் சீராவும்"- கந். அலங் 81.
பாடல் 750-பக்கம் 236 கீழ்க்குறிப்பு.
×'அகல நீள மென்றளவு கூறரும் பொருள்' - பாடல் 295.
‡ வேதனம் = அறிவு, வேதம்.
O விரகர் ராக போதார் அசுரர் எனப் பிரிக்க.

தோரா சேனாதாரா! - தோல்வியே அறியாத சேனாபதியே! வானோர் சேனாதாரா - தேவர் சேனைகளுக்குப் பற்றுக் கோடான வனே! சூரனே! (சாரல்) வள்ளி மலையில் தினைப் புனத்திலிருந்த மாது - வள்ளியின் -

தோளை அணைந்த தோள் பன்னிரண்டு உடையவனே! பெரிய சூரன் தூள்பட்டு விழச் சிறு - சிறியதும் (தாரை) கூர்மை யுடையதுமான -

(சீராவாலே) உடைவாளாலே - வாளாலே - வேலாலே - அழித்த வீரனே!

சேயே! செவ்வேளே! அழகனே! தலைவனே! தேவனே! தேவர் பெருமாளே - தெய்வப் பெருமாளே!

(ஆர் வேறாள்கைக்கு உரியார்)

## 1046.

அகலமும், நீளமும் எதனாலும், எவராலும், ஆராய்வதற்கு அரியதான "மௌன நிலையே" கோயிலாகப் பொருந்தி -

(அசையவே) விளக்கம் தரவே, (க்ரியா பீடம் மிசை புகா) கிரியை மார்க்கம் என்னும் பீடத்தின்மீது புக்கு இருந்து - கிரியை மார்க்கத்தை அநுட்டித்துப் (பின்னர்) (அல்லது - மனம் அசையவே - சலனப்படவே கிரியா பூஜை செய்யப் புகாமல்) - மகா ஞான அறிவுடனே, ஆதர ஆமோத - அன்பு மகிழ்ச்சி எனப்படும் (மலர் தூவி) மலர்களைத் தூவிப் பூசித்து -

(சகல வேதன அதீத) - எவ்வகையான அறிவுக்கும் (அல்லது வேதங்களுக்கும்) மேம்பட்டதான, (சகல வாசக அதீத) எவ்வகையான உரைகளுக்கும் மேம்பட்டதான, (சகல மாக்ரியா தீத) எவ்வகையான சிறந்த கிரியைக்கும் மேம்பட்டதான, சிவ ரூபமான,

(சகல சாதக அதீத) எவ்விதமான தோற்றம் - அல்லது பிறப்புக்கும் மேம்பட்டதான, (சகல வாசன அதீத) - எவ்வித நறுமணத்துக்கும் (அல்லது அறிவுக்கும்) மேம்பட்டதான - (தனுவை) ஓர் உருவை (நாடி) விரும்பிச் சிறந்த பூஜையைச் செய்யு ம் பாக்கியம் எனக்குக் கிடைக்குமோ!

(விகட தார - விகடதர) மாறுபாடுள்ள, (சூதான) வஞ்சக முள்ள, (நிகள பாத) பந்தத்தில் விழ்தலை - பந்தம் உண்டாதலை (போதூள) போகும்படி - அழியும்படித் - தூள்படுத்துபவனே! (விரகர்) தந்திரம் உடையவர்களுக்கும், (ராக போதார்) - ராகத்தில் - ஆசைகளை அனுபவிப்பதிலேயே பொழுதுபோக்குபவர்களுமான - அசுரர் கால - அசுரர்களுக்கு யமனாய் நின்று அழித்தவனே!

விபுத மாலி கா*நீல முகப டாக மாயூர
விமல வ்யாப காசீல கவிநோத;
†ககன கூட பாமர தவள சோபி தாளான
கவன பூத ராரூட சதகோடி
கனப காம ‡வீர் Xவீசு கரமு கார வேல்வீர
கருணை மேரு வேதேவர் பெருமாளே (52)

## 1047. திருவடியைப் பெற

தனன தான தானான தனன தான தானான
தனன தான தானான தனதான

அடைபடாது நாடோறும் ○இடைவிடாது போம்வாயு
அடைய மீளில் வீடாகு மெனநாடி
**அருள்பெ றாவ னாசார கரும யோகி யாகாமல்
அவனி மீதி லோயாது தடுமாறும்;
உடலம் வேறு யான்வேறு கரணம் வேறு வேறாக
உதறி வாச காதீத அடியூடே
உருகி ஆரி யாசார பரம யோகி யாமாறுன்
‡‡உபய பாத ராசீக மருள்வாயே;

---

* நீல முகபட ஆகம் - எனவும் பிரிக்கலாம்; நீல முகபடம் போலும் உடலைக்கொண்ட மயில் - (முகபடம் - யானையின் முகப் போர்வை)

† ககன கூடம் - ஆகாயத்தின் உச்சியளவு உயர்ந்துள்ளனவும், (பாமரம்) சந்தனம் அணிந்துள்ளனவும், (தவள சோபித) வெண்ணீற்று அழகு விளங்குவனவும் (உனக்கு) ஆளானவைகளும், (கவனம்) சேனைகளுமான - பூதர் ஆருட - பூதங்களுடனே (போருக்கு) எழுந்தருளினவனே! எனவும் பொருள் காணலாம்.

" நெடியர்... நீறு... புனைதரும் யாக்கையர்.. சாரதப் படையினர்.... சண்முகன்பால் வந்து கைதொழு தேத்தியே... ஆர்த்தார்" -கந்தபுரா. *1-19-7-8-11* . ‡ வீர் = வீர.

X வீசு கரம் = கரம் வீசு = கிரணம் வீசுகின்ற

○ போகும் வாயுவை அடைய மீளச்செய்யும் யோகம் -

"மூச்சை உள்ளே ஓட்டிப் பிடித்தெங்கும் ஓடாமற் சாதிக்கும் யோகிகளே" - என்ற கந்தரலங்காரத்தில் (85) காண்க.

" வாயுவை உள்ளே அடக்கித் துயரற நாடியே
தூங்க வல்லார்க்குப் பயனிது காயம்"-
" வாயுவை.. சிக்கென மூடி.... பிடித்திட்டு... சாதிக்க
வைக்கும் உயர்நிலை வானவர் கோனே'
திருமந்திரம் 605, 615. (தொடர். பக் . 119.

(விபுத) தேவனே ! (மாலிகா) மாலை அணிந்தவனே! (நீலமுக) நீல நிறத் தோற்றமுள்ள (படாகம்) திரைச் சீலையை - போர்வையைக் கொண்டதான (மாயூர) மயில் வாகனத்தைக் கொண்ட வனே! (விமல) பரிசுத்த மூர்த்தியே! (வ்யாபகா) எங்கும் நிறைந்தவனே! (சீல அக) நற்குண உள்ளத்தவனே! (விநோத) அற்புத மூர்த்தியே!

(ககன கூடம்) விண்ணுலகில் உள்ளதாய் (பாடீரம்) சந்தனம் அணிந்துள்ளதாய், (தவளசோபித) வெண்ணிற அழகை உடையதாய், (உனக்கு) ஆட்செய்வதாய் (உன் ஏவலைப் புரிவதாய்), (கவனம்) வேகத்துடன் செல்லவல்ல (பூதரம்) மலைபோன்ற ஐராவத - யானைமேல் அல்லது பிணிமுகம் என்னும் யானைமீது - (ஆரூட) எழுந்தருளுபவனே! (சத கோடி) நூறு கோடிக் கணக்கான

(களப காம) கலவைச் சாந்தணிந்த மன்மதர்களுக்கு ஒப்பான வீரனே! (வீசு கரம்) கரம் வீசு - கிரணங்களை வீசுகின்ற - (முக) திருமுகங்களை உடையவனே! (ஆர) கடப்ப மாலை அணிந்தவனே! வேல் வீரனே! கருணை மேருவே! தேவர் பெருமானே!

(மா பூசை புரிவேனோ)

## 1047.

உள்ளே அடைபட்டுப் போகாமல் நாள்தோறும் இடை விடாமல் - எப்போதும் - (போம் வாயு) போகின்ற மூச்சு (அடைய மீளில்) முழுமையும் வீணாகாது மீண்டு வந்து அடங்குமாயின் (வீடாகும்) முத்தி வீடு கிடைக்கும் காயசித்தி கிடைக்கும் - உடல், உயிர்நிலைபெறும் - என்று ஆய்ந்து விரும்பி -

(உனது) திருவருளைப் பெறாத (அனாசார) ஆசாரம் அற்ற ஒழுக்கம் இல்லாத - கரும யோகியாய் நான் கெட்டு அலையாமல் (இப்) பூமியிலே எப்போதும் தடுமாறுகின்ற -

(எனது) உடல் வேறு, நான் வேறு, என்னுடைய மனம் - புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் கரணங்கள் வேறு - என்று இவைகளை வேறு வேறு என்று உதறித் தள்ளி - இவை எவைகளுடனும் சம்பந்தப் படாமல் - (வாசக அதீத) உரைகளுக்கு எட்டாததாயுள்ள உனது திருவடியின் மாட்டு -

(உள்ளம்) உருகி, (ஆரிய ஆசார பரம யோகி ஆமாறு) மேலான ஆசார ஒழுக்கம் வாய்ந்த சிறந்த (சிவ) யோகியாகும் பொருட்டு எனக்கு உன் (உபய பாத ராசிகம்) இரண்டு திருவடி களாகிய - ராஜப் பேற்றினைத் - தந்தருளுக.

---

** அனாசார யோகி - பாடல் 212, 497 பார்க்க.

†† " உபய பாத ராசீவம் "- என்பது பாடமாயின்

ராசீவம் - தாமரை - எனப் பொருள்படும்.

வடப ராஜரை மாமேரு கிரியெ டாந டாமோது
மகர வாரி யோரேழு மழுதாக-
மகுட *வான ராநோவ மதிய நோவ வாரீச
வனிதை மேவு தோளாயி ரமுநோவக்;
கடையு மாதி கோபாலன் மருக சூலி காபாலி
புதல்வ கான வேல்வேடர் கொடிகோவே-
கனக லோக பூபால சகல லோக ஆதார
கருணை மேரு வேதேவர் பெருமாளே (53)

## 1048. யான் எனது அற

தனன தான தானான தனன தான தானான
தனன தான தானான தனதான

அமல வாயு வோடாத கமல நாபி மேல்மூல
†அமுத பான மே‡ மூல அனல்மூள-
அசைவு றாது பேராத விதமு மேவி யோவாது
அரிச தான சோபான மதனாலே

---

* கடல் கடைந்த வரலாறு - பாடல் 509 - பக்கம் 162 குறிப்பு
(i) அரா நோவக் கடைந்தது
" வாசுகி உடலம் பயில்வரை உரிஞலிற் பிளர்பட வலியும்
பாறியது" - தணிகைப்புரா. நாக மருள். 4
" கடை போதினில் மந்தரக் கோட்டின் ஓங்குறு கூர்ங்கற்
பிளப்பினில் மாட்டி யீர்ப்ப வகிர்பட் டுரிஞ்சியே.. தோல்
பிளர் பட்டதே அளந்தலும் பெரிது மாழ்கியே உளர்
வழிந் துளவலி பொடுங்கி... இடுக்கண் எய்தினான்"-
தணிகாசல புரா. சேடன். 5,6
(ii) மதி - தூண்:- "மதி தறியென நிறுவி.. சொறு சொறு
என்ன...கடைந்தனர்"- தணிகைப்புரா.. நாகம் -3
(iii) திருமால் ஆயிரம் தோள் கொண்டு கடைந்தது:-
"மாயிருங் குன்றம் ஒன்று மத்தாக மாசுணம் அதனொடும் அளவி
பாயிரம் பௌவம் பகடு விண்டலறப் படுதிரை விசும்பிடைப் படர
சேயிரு விசும்பும் திங்களும் சுடரும் தேவரும் தாமுடன் திசைப்ப
ஆயிரம் தோளால் அலைகடல் கடைந்தான் அரங்கமா நகரமர்ந்தானே"
- பெரிய திருமொழி 5-7-4. (தொடர். பக். 121

வடக்கே உள்ளதும், (பராரை) பருத்த அடிப் பாகத்தை உடையதும், சிறப்புற்றதுமான மேரு மலையை (எடா) எடுத்து, (நடா) (மத்தாக) நட்டு - (மோது) அலை மோதுவதும், மகர மீன்களைக் கொண்டதுமான (வாரி) கடல், ஒரு ஏழினின்றும் (ஏழு கடலினின்றும்) அமுது வரும்படி -

(மகுடங்களை உடைய) மணி முடிகளை உடையதும், ஒளி பொருந்தியதுமான (அரா) வாசுகி (அல்லது ஆதிசேஷன்) என்னும் பாம்பின் உடல் நோவும்படியும், (மதியம் தூணாகச் சாத்தப்பட்ட சந்திரனுடைய (உடல்) நோவவும் (வாரிச வனிதை தாமரையில் வீற்றிருக்கும் தேவி இலக்குமி (மேவு) விரும்பும் (தனது) தோள்கள் ஆயிரமும் நோவுறும் படியும் -

(கடலைக்) கடைந்த ஆதிமூர்த்தி (கோபாலன்)- திருமாலின் மருகனே! சூலாயுதத்தை ஏந்துபவரும், (பிரம) கபாலத்தை ஏந்துபவரும், (ஆன சிவபிரானது) பிள்ளையே! காட்டில் வாசம் செய்பவர்களும், வேல் பிடித்த கையர்களுமான வேடர்களின் பெண் கொடியான வள்ளியின் தலைவனே (கணவனே)!

(கனக லோகம்) பொன்னுலகமாம் தேவர் உலகைப் பரிபாலித்த அரசே! எல்லா லோகங்களுக்கும் ஆதரவாயுள்ளவனே! கருணை மகா மலையே! தேவர் பெருமானே!

(உபய பாதம் அருள்வாயே)

## 1048.

(அமல வாயு) மாசு அற்ற பிராண வாயு (ஓடாது) மேற்கொண்டு செல்லாதபடி (கமல நாபி மேல்) மூலாதார கமலத்தின் மீது ஒடுங்க வைத்து - (மூல) அங்ஙனம் செய்ததின் மூலமாக, (அமுத பானமே) அமுத பானம் பருகும்படி (மூல அனல் மூள) மூலாக்கினி சுடர்விட்டு எழ

(அசைவுறாது பேராத விதம் மேவி) மனம், வாக்கு, காயம் இவை மூன்றும் சலனமில்லாமலும் - அசைதலில்லாமலும் - (அப்படி இப்படி) நெகிழாத படியும் ஒரு நிலையில் இருந்து - (ஓவாது) அங்ஙனம் நின்ற நிலையினின்றும் நீங்காமல் - (அரி சதான) - அரிசு அதான - (தேன் போன்ற) (அல்லது அரிசம் அதான) மகிழ்ச்சி தருவதான, (சோபானம் அதனாலே) - படிப்படியாக மேலேறும் (யோக) (சிவயோக) முறையாலே -

---

† அமுத பானம் - பாடல் 647 அடி 4 பார்க்க.

‡ மூல அனல் மூள - பாடல் 647 அடி 1 பார்க்க.

*எமனை மோதி யாகாச கமனை மாம னோபாவ
மெனிது சால மேலாக வுரையாடும்-
†எனது யாளும் வேறாகி எவரும் யாதும் யானாகும்
இதய பாவ னாதீத மருள்வாயே;
விமலை ‡தோடி மீதோடு யமுனை போல வோரேழு
விபுத மேக மேபோல வுலகேழும்-
விரிவு காணு மாமாயன் முடிய நீளு மாபோல
வெருவி நாமு காகாய பதமோடிக்;
X கமல யோனி வீடான ககன கோள மீதோடு
O கலப நீல மாயூர இளையோனே-
கருணை மேக மேதூய கருணை வாரி யேயீறில்
கருணை மேரு வேதேவர் பெருமாளே (54)

---

* எமனை மோதுதல் - 'எம் படரை மோது மோன ... வாள்'
- திருப்புகழ் 828-பக்கம் 436 பார்க்க.

† 'எனது யாளும் வேறாகி'- "யான் எனது என்னும் செருக்கறுப்பான் வானோர்க் குயர்ந்த உலகம் புகும்" - திருக்குறள் 346

" எவரும் யாதும் யானாகும் இதய பாவனா தீதம்"

"உலகத் தொரு நீயாகித் தோன்ற விழுமிய பெறலரும்
பரிசில்"- திருமுருகா. 293-5

" உலகேழும் யானாக"- திருப்புகழ் 1132

‡ தோடி = தொடி; இங்கு தொடியை அணிந்த கைக்கு ஆகுபெயர். உமாதேவியார் சிவபிரான் திருக்கண் புதைத்து எடுத்த காலத்துக் கைகள் இரண்டிலும் வியர்வை உண்டாகிப் பத்து விரல் வழியாலும் விரிந்த கங்கை முதலிய நதிகளுள் யமுனை ஒன்று; அது கருநிறம் உடையது பாடல் 1095 - பார்க்க - பாடல் 446 - பக்கம் 622; பாடல் 915-பக்கம் 666;

" சங்கரன் விழிகள் மூடும் தனாதுகை திறக்கும் எல்லை
அங்குலி அனைத்தினூடும் அச்சத்தால் வியர்ப்புத் தோன்ற
மங்கையத்தனைமை காணூஉ மற்றவை விதிர்ப்பப் போந்து
கங்கையோர் பத்தா யாண்டும் கடல்களிற் செறிந்த
அன்றே" - கந்தபுரா. 6-13-369

X கமல யோனி - பிரமன் - 'திருமால் உந்தியுள் உலகை மீக்கொள வந்தவன்' - மயூராசல புராணம் 'உந்திமேல் நான்முகனைப் படைத்தான்' - பெரிய திருமொழி. 5-4-1.

O இப்பாடலின் அடிகள் 5-7 மயில் வர்ணனை.

(எமனை மோதி) யமனையும் தாக்குவதுபோல மேலெழுந்து, (ஆகாச கமனமாம்) ஆகாசம் வரைக்கும் பறந்து செல்லும் - உயர உயரப் பறக்கும் வேகம் வாய்ந்த - (மனோபாவம்) மனத்தின் தன்மை (எளிது சால) சால - மிகவும் எளிதான வகையில் (மேலாக உரையாடும்) - மேலெழுந்து அகங்காரத்துடன் பேசுகின்ற -

(எனது) என்னுடையது என்னுடையது என்னும் மமகாரமும், (யானும்) நான் நான் என்னும் அகங்காரமும் (புறப்பற்று அகப்பற்று இரண்டும்) (வேறாகி) நீங்கி, (எவரும் யாதும் யானாகும்) பிறர் யாவரும், பிற பொருள்கள் எவையும், யானாகும் - நானே என்னும் (அருமையுடன்) பாவிக்கும் உயர் நிலையை அடைந்து விளங்குவதான (இதய பாவனா தீதம்) மனோ பாவனா தீத நிலையை - மனோபாவத்துக்கு எட்டாத பெரு நிலையைத் தந்தருளுவாயாக.

(விமலை) பரிசுத்தமான தேவி - பார்வதி தேவியின் (தோடு மீதோடு) தொடி என்னும் கை வளையினின்றும் (கைகளினின்றும்) மேலெழுந்து ஓடி வந்த யமுனை நதி போலவும், ஒப்பற்ற ஏழு - [(விபுத) எங்கும் வியாபிக்கும் தன்மை வாய்ந்த] மேகங்களைப் போலவும், உலகங்கள் ஏழின் - ஏழு உலகங்களின் -

(விரிவு காணும்) பரப்பையும் காணவல்ல (மா) கரு நிறம் வாய்ந்த (மாயன்) திருமால் முடிய நீளு மாறு போல, (அண்டங்கள் முழுமையும் எட்டும்படி) விசுவ ரூபம் எடுத்தது போலவும், (வெகுவித முக ஆகாய பதம் ஓடி) பல திசைகளின் அளவுக்கும், ஆகாய அளவுக்கும் ஓடிச் சென்று -

(கமல யோனி) (திருமாலின்) (உந்தித்) தாமரையில் உதித்த பிரமாவின் (வீடான) இருப்பிடமான (ககன கோளம்) விண்ணில் உள்ள மண்டலத்தின் மீதும் ஓடுகின்ற (கலப நீல மாயூர) (நீல கலப மாயூர) நீலத் தோகை விளங்கும் மயில் வாகனனே! (என்றும்) இளையவனே!

கருணை மேகமே! பரிசுத்தமான கருணைக் கடலே! (சுறில்) முடிவிலாத கருணைப் பெருமலையே! தேவர்களின் - பெருமானே!

(எனது யானும் வேறாகி எவரும் யாதும் யானாகும்
இதய பாவனாதீதம் அருள்வாயே)

## 1049. மாதர் மீதுள மயக்கு அற

தனன தான தானான தனன தான தானான
தனன தான தானான தனதான

அயிலின் வாளி வேல்வாளி அளவு கூரி தா*வீச
ரமுத ணாவு †மாவேச மதுபோல-
அறவு நீளி தாய்மீள அகலி தாய வார்காதி
னளவு மோடி நீடோதி நிழலாறித்,
துயில்கொ ளாத வானோரு மயல்கொ ளாத ‡ஆவேத
துறவ ரான பேர்யாரு மடலேறத்-
துணியு மாறு லாநீல நயன மாத ராரோடு
துவளு வேளை யீடேறு நெறியாராய்;
பயிலு மேக Xநீகார சயில ராசன் வாழ்வான
பவதி யாம ளாவாமை அபிராமி-
பரிபு ரார பாதார சரணி சாம ளாகார
பரம யோகி னீமோகி மகமாயி;
கயிலை யாள ரோர்பாதி கடவு ளாளி லோகாயி
○கனத னாச லாபார அமுதூறல்-
கமழு** மார ளாகீத கவிதை வாண வேல்வீர
கருணை மேரு வேதேவர் பெருமாளே (55)

---

* ஈசர் அமுது = ஆலகால விஷம்.
"நஞ்சு அமுதா வாங்கிப் பருகினார்"
'நஞ்சமுதுண்டவன்'- சம்பந்தர் -3-121-4, 3-7-4
† ஆவேச மது - கள் - பாடல் 362 அடி 3
‡ ஆவேதம் = வேடம். X நீகாரம் = கூட்டம்.
○ தேவியின் பால் மணம் கமழும் பாடல்:-
" மழலையின்ன முதூற்றெழு மாசை வள்ளத்துக்
குழலின் மென்மொழி உமையவள் கொடுத்த பால் கமழப் பழகு செந்தமிழ்ப் பாடல்"- திரு ஆனைக்காப் புராணம்
** சம்பந்தர் தேவாரம் வேத மொழி
"தமிழ் வேதம் விரித்தருளும் கவுணியர்தங் குலதீபம்"
-காஞ்சிப்புராணம்.

## 1049.

(அயிலின் வாளி) வாளியின் அயில் - அம்பின் கூர்மை, (வேல்வாளி) வேலின் கூர்மை (அளவு) இவைகளின் அளவு போலத் - தன்மைபோலக் கூர்மை கொண்டதாய், (ஈசர் அமுது) சிவபிரான் அமுதாக உண்ட விஷத்தின் தன்மையை (அளாவு) கொண்டுள்ளதாய், (ஆவேசம் மது போல) பொங்கி எழும் கள்ளைப் போல -

மிகவும் நீண்டதாய், பின்னும் அகன்றதாய், அந்த நீண்ட காது இருக்கும் இடம் வரையில் ஓடி, நீண்ட கூந்தலின் நிழலில் இளைப்பாறி,

தூக்கம் இல்லாத தேவர்களும், காம இச்சை கொள்ளாத வேடம் பூண்ட துறவிகள் யாவரும் மடல் ஏறும் வகைக்குத்

துணிவு கொள்ளும்படி - உலவுகின்ற, நீலோற்பலம் போன்ற கண்களை உடைய மாதர்களோடு இணக்கம் வைத்து வாடுகின்ற நான் ஈடேறும்படியான வழியைப் (பாராய்) காட்டியருளுவாயாக.

நெருங்கி எழும் மேகங்களின் (நீகாரம்) கூட்டம் படிகின்ற சயிலராசன் - மலை அரசனாம் (இமவானுடைய) செல்வப் புதல்வியான பவதி (தேவி), (யாமளா) சியாமள நிறத்தை - ஒருவகைப் பச்சை நிறத்தை உடையவள், (வாமை) அழகிய (அல்லது இடது பாகத்தில் உள்ள) சிவ சக்தி, (அபிராமி) அழகி -

(பரிபுரம்) சிலம்பும், (ஆரம்) கடம்பும் உள்ள (பாதாரம்) பாதாரவிந்தும்- பாத தாமரையாம் (சரணி) திருவடிகளை உடையவள், (சாமள ஆகார) - பசுமை உருவம் கொண்ட பரதேவதை, (மோகி) அன்பு ஊட்டுபவள் - (மகமாயி) பார்வதி

கயிலையாளர் - சிவனது ஒரு பாதியில் உள்ளவள், (கடவுளாளி) - எல்லாத் தேவர்களையும் ஆள்பவள், (லோகாயி) உலகம்மையார் - ஆகிய தேவியின் (கனம்) கனத்த அல்லது பொன்னிறமான, தன அசல பாரம் - கொங்கை மலைகளாம் பாரங்களினின்றும் (அமுதூறல்) ஊறின பாலமுதின் -

நறுமணம் வீசும் (ஆரணா கீத கவிதைவாண) வேத கீதப் பாக்களான (திரு நெறித்தமிழ் என்னும்) தேவாரத்தைப் பாடின பிரபுவே! வேல்வீரனே! கருணை மேருவே! தேவர் பெருமாளே! (ஈடேறு நெறி பாராய்)

## 1050. காம மயக்கை நிந்தித்தல்

தனன தான தானான தனன தான தானான
தனன தான தானான தனதான

இரத மான வாயூறல் பருகி டாவி டாய்போக
இனிய போக வாராழி யதில்மூழ்கி-
இதயம் வேறு போகாம லுருகி யேக மாய்நாளு
மினிய மாதர் தோள்கூடி விளையாடுஞ்;

*சரச மோக மாவேத சரியை யோக்ரி யாஞான
சமுக மோத ராபூத முதலான-
சகல மோச டாதார முகுள மோநி ராதார
தரணி யோநி ராகார வடிவேயோ;

பரத நீல மாயூர வரத†நாக கேயூர
பரம யோகி மாதேசி மிகுஞான-
பரமர் தேசி கா‡வேட பதிவ்ரு தாக சீபாத
பதும சேக ராXவேலை மறவாத;

கரத லாவி சாகர○ச கலக லாத ராபோத
கமுக முஷி காரூட மததாரைக்-
கடவுள் தாதை சூழ்போதில்**உலகமேழு சூழ்††போது
கருணை மேரு வேதேவர் பெருமாளே (56)

---

*மாதரொடு கூடி விளையாடும் போக நெறி - சரியைபோ, கிரியைபோ, யோகபோ, ஞானபோ எனப் பரிகசிக்கின்றனர் அருணகிரியார்.

† சிவபிரானுக்கு நாகம் (கேயூரம்) தோளணியுமாம்.

'தோளின் மிசை வரியரவம் நஞ்சுமுல வீக்கி'- சம்பந்தர் 3-70-3

‡ வள்ளியின் பாதத்தை முருகவேள் சூடுதல்

'வேடச் சிறுமி பத சேகர'- கந். அந்தாதி. 68.

X வேலை மறவாத கரதலன்:

வேற்பிரியர் - பாடல் 528 - பக்கம் 210 கீழ்க்குறிப்பு, பாடல் 644-பக்கம் 508 கீழ்க்குறிப்பு

○ சகல கலா தரன்:

'கல்வி கரைகண்ட புலவன்'- முருகவேள் பாடல் 320-பக் 296

** விநாயகருடன் போட்டி - பாடல் 184-பக்கம் 430 குறிப்பு

†† போது - மலர், கால அளவு.

# 1050.

(இரதமான) ருசியான - சுவையுள்ள வாயூறல் - இதழூறலை உண்டு, (விடாய்) காமதாகம் நீங்க, இனிமை தரும் (போக வாரி ஆழி) புணர்ச்சி இன்பப் பெருங்கடலில் முழுகி-

மனம் வேறிடத்திற் போகாமல் (காமத்திலேயே) உருகி, (ஏகமாய்) ஒன்றிய மனத்துடன் நாள் தோறும் இன்பம் தரும் மாதர்களுடைய தோள்களை அணைந்து விளையாடுகின்ற

(சரசமோகம்) லீலை ஆசையானது - (மா வேத) சிறந்த வேதத்திற் சொல்லப்பட்ட *சரியையோ - சரியை மார்க்கமோ, (கிரியா) கிரியை மார்க்கமோ, (ஞான) ஞானமார்க்கமோ - (சமூகமோ) சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கின் கூட்டமோ! (தரா பூதம்) மண் முதலான (ஐந்து பூதங்களின் (மண், நீர், தீ, காற்று, விண்) - என்னும் ஐம்பூதங்களின்) -

(சகளமோ) உருவத் திருமேனி விளக்கமோ! (சடாதார முகுளமோ)? மூலாதாரம் முதலான ஆறு ஆதாரங்களும் அரும்புவிட்ட தோற்றமோ! (நிராதார தரணியோ) - சார்பு வேண்டியில்லாத சூரிய ஒளியோ! (நிராகார வடிவேயோ) உருவின்மையான ஒரு (வடிவேயோ) அழகோ!

கூத்தாட வல்லதும் நீலநிற முள்ளதுமான மயில் வாகனனே! வரதமூர்த்தியே! பாம்பை (கேயூரம்) தோளணி வகையாக அணிந்துள்ளவரும் பரமயோகியும், (மா தேசி) மிக்க தேஜஸ் ஒளி அழகு வாய்ந்தவரும், மிக்க ஞானமுள்ள

பரமமூர்த்தியுமான சி[redacted]து (தேசிகா) குருமூர்த்தியே! வேடர் குலத்து வளர்ந்த (பதிவ்ருதா) கற்பு நிறைந்த (சுசி) பரிசுத்தமுள்ள வள்ளியின் (பாத பதுமம்) திருவடித் தாமரையைச் (சேகரா) முடியிற் சூடுபவனே! வேலாயுதத்தை மறவாத-

திருக் கரத்தை உடையவனே! விசாகனே! (சகல கலாதார) சகல கலைகளிலும் வல்லவனே! (போதக முக) யானை முகத்தை உடையவரும் (மூஷிக ஆரூட) பெருச்சாளியின்மேல் ஏறி வருபவரும், மதம் நீரொழுக்குப்போல ஒழுகுதல் உள்ளவருமான

(கடவுள்) கணபதி - தந்தையாம் சிவபிரானை வலம் வந்த நேரத்துக்குள் - உலகம் ஏழையும் சூழ்ந்து வலம் வந்த † (போது) மலர் போன்ற திருவடியை உடைய கருணைப் பெருமலையே! தேவர் பெருமானே! (சரசமோகம் சரியையோ)

---

* சரியையோக்ரியா - சரியையோ, கிரியா - (அல்லது சரியை, யோகம், கிரியை)

† அவர் ஈசனைச் சூழ்ந்தபோது - கால அளவே - இவர் உலகேழையும் சூழ்ந்தபோது - கால அளவு - எனலுமாம்.

## 1051. தான் பாட

தனன தான தானான தனன தான தானான
தனன தான தானான தனதான

குருதி தோலி னால்மேவு குடிலி லேத மாமாவி
குலைய ஏம னாலேவி விடு*காலன்-
கொடிய பாச மோர்சூல படையி னோடு கூசாத
கொடுமை நோய்கொ டேகோலி யெதிராமுன்;

பருதி சோமன் வானாடர் படியு ளோர்கள் † பாலாழி
பயமு றாமல் வேலேவு மிளையோனே-
பழுது றாத பாவாண ‡ரெழுதொ ணாத தோள்வீர
பரிவி னோடு தான் பாட அருள்தாராய்;

Xமருது நீற தாய்வீழ வலிசெய் மாயன் வேயூதி
O மடுவி லானை தான்மூல மெனவோடி-
வரு**முராரி ††கோபாலர் மகளிர் கேள்வன் ‡‡மாதாவின்
வசன மோம றாகேசன் மருகோனே;

கருதொ ணாத ஞானாதி எருதி லேறு காபாலி
XX கடிய பேயி னோடாடி கருதார்வெங்-
கனலில் மூழ்க வேநாடி புதல்வ கார ணாதீத
கருணை மேரு வேதேவர் பெருமானே (57)

---

*காலன் - இயமன் மந்திரி - பாடல் 996-1 - பக்கம் 6- குறிப்பு

†பாலாழி - பாலாழியிற் பள்ளி கொள்வோன் (ஆகுபெயர்)

‡ 'எழுதரிய அறுமுகமும்'- என்றார் 1277-ஆம் பாடலில்
'ஏவணச் சிலையினானை யாவரே எழுதுவாரே' - அப்பர் 4-77-2

X மருத மரத்தை அட்டது - பாடல் 143-பக்கம் 332 கீழ்க்குறிப்பு

O ஆனை மூலமென அழைக்க வந்தது - பாடல் 939-பக்கம் 731 கீழ்க்குறிப்பு

** முராரி - பாடல் 522-பக்கம் 196- கீழ்க்குறிப்பு.

†† 'ஆயனாகி ஆயர் மங்கை வேயதோள் விரும்பினாய்'- திருச்சந்த விருத்தம் 41

‡‡ 'தாயர் வசனம் சிறந்தவன்'- என்றார் 972-ஆம் பாடலில்; பக்கம் 814 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

XX 'பேயுடன் ஆடுவர் பெரியவர் பெருமான்' - சம்பந்தர் 1-78-6.

## 1051.

ரத்தம், தோல் இவைகளால் ஆய (குடிலில்) குடிசையாகிய இவ்வுடலில் (ஏதம் ஆம் ஆவி) துன்பம் - கேடு அடைகின்ற இவ்வுயிர் (குலைய) நிலை கெட்டு நீங்கும்படி, யமதர்மராஜனால் (ஏவ விடு) அனுப்பப்பட்டு வருகின்ற காலன் (கூற்று)

கொடுமை கொண்ட பாசக்கயிறு, ஒப்பற்ற சூலப்படை இவையுடன் வந்து கூச்சமில்லாமல் பொல்லாத - நோய் கொடே - துன்ப நோயைத் தந்து, (கோலி) வளைத்திழுந்து, எதிர்ப்பதன் முன் -

(பருதி) சூரியன், (சோமன்) சந்திரன் (வானாடர்) விண்ணுலகோர், (படி உளோர்கள்) மண்ணுலகோர்கள், (பால் ஆழி) திருப்பாற்கடலிற் பள்ளி கொண்டுள்ள திருமால் - ஆகிய இவர்கள் பயம் நீங்கி இன்புற வேண்டி - வேலாயுதத்தைச் செலுத்தின இளையவனே! -

குற்றம் சிறிதும் இல்லாத பாக்களைப் பாடும் திறமை வாய்ந்த கவிமணிகளாலும் எழுதுதற்கு (வருணிப்பதற்கு) முடியாத (அழகை உடைய) திருத்தோள்களை உடைய வீர மூர்த்தியே! (பரிவினோடு) அன்புடனே நான் உன் திருத்தாள்களைப் பாடும்படியான திருவருட் செல்வத்தைத் தந்தருளுக (அல்லது தாள் பாட (பரிவினோடு) அன்புடனே உனது திருவருளைத் தந்தருளுக)

மருத மரம் வேரற்று சிதறுண்டு விழும்படி (வலி செய்) தன் வலிமையைக் காட்டின மாயன் (மாயவன்), (வேய் ஊதி) புல்லாங்குழல் வாசிப்பவன், (மடுவில்) நீர் நிலையில் நின்ற ஆனையானது ஆதி மூலமே என்று ஓலமிட்டு அழைக்க ஓடி

வந்த (முராரி திருமால், கோபாலர் மகளிர் (இடை மகளிர்களின்) கணவன், (மாதாவின்) தாயாம் கைகேயியின் (வசனமோ - மறா-கேசன்) சொல்லை மறுக்காமல் (காட்டுக்குச் சென்ற கேசவன் - ஆகிய விஷ்ணு மூர்த்தியின் மருமகனே!

எண்ணுதற்கு அரிய ஞான மூர்த்தியாம் ஆதி தேவரும், (எருதில்) இடபத்தில் ஏறுபவரும், பிச்சைக் கபாலத்தைக் கையிற் கொண்டவரும், கடுமை வாய்ந்த பேய்களுடனே ஆடுபவரும், (கருதார்) தன்னை மறந்து (சிவ பூஜையைக் கை விட்ட) திரிபுரத்திலிருந்தோர் யாவரும் (தமது புன் சிரிப்பாம்) கொடிய

நெருப்பில் முழுகும்படி (நாடி) நாடினவருமான சிவனுடைய புதல்வனே! காரணங்களுக்கு மேற்பட்ட நிலையினனே! கருணைப் பெருமலையே! தேவர்தம் பெருமாளே!

(தாள் பாட அருள் தாராய்)

## 1052. ஞான வீடு

தனன தான தானான தனன தான தானான
தனன தான தானான தனதான

*சுருதி யூடு கேளாது † சரியை யாளர் காணாது
‡ துரிய மீது சாராது X எவராலுந்
தொடரொ ணாது 0மாமாயை யிடையு காது
**ஆனாத
சுகம கோத நீயாகி யொழியாது;
†† பருதி காயில் வாடாது ‡‡ வடவை மூளில் வேகாது
பவனம் வீசில் வீழாது சலியாது-
பரவை சூழி லாழாது படைகள் மோதில் மாயாது
பரம ஞான வீடேது புகல்வாயே;
நிருதர் பூமி பாழாக மகர பூமி தீமூள
நிபிட தாரு காபூமி குடியேற-
நிகர பார நீகார சிகர மீது வேலேவு
நிருப வேத ஆசாரி யனுமாலும்;
கருது XX மாக மாசாரி 00 கனக கார்மு காசாரி
கசை சாரி பூசாரி வெகுசாரி-

---

* 'வேதத்திற் கேள்வி யிலாதது'- திருப்புகழ் 980

† 'ஓது சரியை கிரியையும் புணர்ந்தவ ரெவராலும் ஓத அரிய துரியம் கடந்தது' - பாடல் 501

‡ ' துரியங் கடந்த பரநாத மூலத் தலத்து முளைத்த முழு முதலே முத்தந் தருகவே'- மீனாட்சி பிள்ளை.

X 'புரங்கள் செற்ற ஏவலைச் சிலையினாரை யார் தொடர்ந் தெட்ட வல்லார்'- பெரியபுரா. தடுத்தாட் 44

0 ' மாயைக்குச் சூழொணாதது'- பாடல் 343

** 'பரமானந்த சாகரம்'- கந்தரலங். 47

'பரம சுக சிந்து'- திருப்புகழ் 501

†† ' ஆதித்தற் காய வொணாதது'- திருப்புகழ் 980

‡‡ 'வேகத்துந் தீயில் வெவாதது'

XX சிவபிரான் ஆகம ஆசாரி - அவரே சிவாகமங்களைத் தந்தவ ராதலின். 'தொகுத்தவன் அருமறை அங்கம் ஆகமம் வகுத்தவன்'- சம்பந்தர். 3-23-6; "ஆல வாயியற் சொக்கன், பரிவாக முன்னொருநாற் பரபோக முத்திதரும், பொருளாரும் ஆகமங்கள் பொருப்பரையன் தவப் பயனாம், திருவான உமை கேட்பச் செழுந் திருவாய் மலர்ந்தனனால்" - திருவாலவாய், திருவிளை, வலைவீசின. க.

## 1052.

வேத மொழிக்குளே கேட்கப்படாததும் (வேதத்தால் ஆராய்ந்து அறியப்படாததும்), சரியை மார்க்கத்தில் உள்ளவர்களால் காணப்படாததும், (துரிய மீது) யோகியர் தன்மயமாய் நிற்கும் யோக நிலையிலும் கிட்ட அணுகாததும் (துரியாதீதமாயுள்ளதும்), யாராலும்

தொடர்ந்து அணுக முடியாததும், பெரிய மாயைகள்கூட தன்னுள்ளே புகமுடியாததும், மாயை சம்பந்தம் இல்லாததும், (ஆனாத) அழிதலில்லாத (சுக) சுகத்தைத் தரும் (மகா உததி ஆகி) பெருங்கடலாய் (ஆனந்த மாக்கடலாய்), (ஒழியாது) என்றும் அழியாது நிலைத்து நிற்பதாயும்,

சூரியன் காய்ந்தெரித்தாலும் வாடி அழியாததும், வடவா முகாக்கினி (ஊழித்தீ) மூண்டு எரித்தாலும் அதனுள் வெந்து போகாததாயும், காற்று வீசினால் அதனால் தள்ளுண்டு வீழாததாயும், (சலியாது) சோர்ந்து அசைவு உறாததாயும்

கடல் நீர் சூழ்ந்தாலும் ஆழ்ந்து போகாததாயும், எவ்விதமான படைகள் வந்து மோதினாலும் அழிவு படாததாயும், விளங்க வல்ல மேலான ஞான வீடு எது - சொல்லியருளுக.

அசுரர்களின் இருப்பிடங்கள் பாழாகவும், (மகர பூமி) மகர மீன்களின் இருப்பிடமான கடல் தீப்பற்றவும், (நிபிடம்) நெருக்கமாயுள்ள (தாரு) (கற்பக) விருக்ஷ (கா) சோலைகள் உள்ள (பூமி) பொன்னுலகில் (தேவர்கள்) குடியேற

(நிகரம்) குவிந்து கிடப்பதும், (பாரம்) கனமுள்ளதும், (நீகாரம்) பனி மூடி உள்ளதுமான (சிகரமீது) கிரௌஞ்ச மலையின் மீது வேலாயுதத்தைச் செலுத்தின (நிருப) அரசே! (வேத ஆசாரியனும்) வேத முதல்வனாகிய பிரமனும், திருமாலும் -

(கருதும்) தியானிக்கின்ற (ஆகம ஆசாரி) சிவாகமங்களைத் தந்த குருமூர்த்தி, (கனகம்) பொன்மயமான (மலையாம் மேருவாகிய) கார்முகம் - வில்லை ஏந்திய ஆசாரி - பெருமான், (ககன சாரி) ஞானாகாசத்தில் உலவுகின்றவர். (பூசாரி) பூமியிற் சரிப்போர் - சஞ்சரிப்பவர் - தலங்கள் தோறும் வீற்றிருப்பவர் (அல்லது பூசிக்கப்படுபவர்), (வெகு சாரி) பலவிதமான நடையை உடைய (தேக அசைவுகளை உடைய)

---

" எண்ணிலாகமம் இயம்பிய இறைவர்" - பெரியபுரா. திருக் குறிப்பு. 51" ஆகம மாகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க"

- திருவாசகம். சிவபுராணம்

OO பொன் மலை - மேரு வில்லானது - திரிபுரம் எரித்தபோது

- பாடல் 285 -பக்கம் 206 கீழ்க்குறிப்பு

கயிலை நாட காசாரி சகல சாரி வாழ்வான
கருணை மேரு வேதேவர் பெருமாளே (58)

## 1053. உணர்வு பெற

தனன தான தானான தனன தான தானான
தனன தான தானான தனதான

தொடஅ டாது நேராக வடிவு காண வாராது
சுருதி கூறு வாராலு மெதிர்கூறத்-

துறையி லாத தோராசை யிறைவ னாகி யோரேக்
துரிய மாகி வேறாகி யறிவாகி;

நெடிய கால்கை யோடாடு முடலின் மேவி நீநானு
மெனவு நேர்மை நூல்கூறி நிறைமாயம்-

நிகரில் கால னாரேவ முகரி யான தூதாளி
நினைவொ டேகு மோர்நீதி மொழியாதோ;

அடல்கெ டாத சூர்கோடி மடிய வாகை வேலேவி
யமர்செய் வீர ஈராறு புயவேளே-

அழகி னோடு மானினு மரிவை காவ லாவேதன்
அரியும் வாழ வானாளு மதிரேகா;

கடுவி டாக ளாருப நடவி னோத தாடாளர்
கருதி டார்கள் தீமூள முதல்நாடும்-

கடவு ளேறு மீதேறி புதல்வ கார ணாவேத
கருணை மேரு வேதேவர் பெருமாளே (59)

*(கயிலை நாடகாசாரி) நாடக ஆசாரி - கூத்துக்களை நடிக்க வல்ல தலைவர், கயிலையில் இருப்பவர், (அல்லது வெகுசாரி - பலவற்றிலும் சரிப்பவர், கயிலையில் நடிக்கும் தலைவர்) (சகல சாரி) எல்லாவித கூத்துக்களையும் ஆடவல்லவர் ஆகிய சிவனது (வாழ்வான) செல்வமான கருணைப் பெருமலையே! தேவர்கள் பெருமாளே!*

*(பரமஞான வீடேது புகல்வாயே)*

# 1053.

*தொடுதற்கு முடியாததாய், நேராக அதன் உருவத்தைக் காணுதற்குக் கிட்டாததாய், வேதப் பொருளைக் கூறவல்லவராலும் விளக்கமான விடைகூற*

*வழியிலாததாய், ஒப்பற்ற (நமது) விருப்பத்துக்கு உரிய கடவுளாய், ஒப்பற்று ஒரு பொருளாய் நிற்பதாய், (துரியமாகி), தன்மயமாய் நிற்கும் உயர்நிலையதாய், பிறிதாய், அறிவாய் -*

*நீண்ட கால், கை இவைகளுடனே உலவுகின்ற உடலில் இடங்கொண்டு, நீ என்றும் - நான் என்றும் ஒரு (நேர்மை) (துவைதமாகக் கூறுகின்ற) நிலைமை, நூல்களால் கூறப்பட்டு (நிறை மாயம்) அதனால் நிரம்ப ஏற்படுகின்ற மாயமான உணர்ச்சி (யாதோ) யாது என்று - இன்னது என்று - விளங்க இல்லையே - (விளக்கியருளுக என்றபடி)*

*(தனக்கு) நிகரில்லாத எமனார் ஏவ (முகரியான) ஆரவாரத்துடன் வருகின்ற (தூதாளி) தூதர்கள் (நினைவொடு) உயிரைக் கவர வேண்டும் என்ற நினைப்புடன் (ஏகும்) வருகின்ற (ஓர் நீதிமொழி) ஒரு நியதிச் சொல் - ஒரு நீதி வழக்கம் யாதோ? (அதுவும் இன்னது என்று விளங்க இல்லையே - விளக்கியருளுக).*

*தன்வலிமை கெடாத சூரர்கள் கோடிக்கணக்காக இறந்து பட்டு ஒழிய, வெற்றி வேலாயுதத்தைச் செலுத்திப்போர் செய்த வீரனே ! பன்னிரண்டு திருப்புயங்கள் கொண்ட செவ்வேளே!*

*அழகு நிரம்பிய மான் பெற்ற (வள்ளிப்) பெண்ணின் காவலனே! பிரமனும் திருமாலும் வாழ வானுலகை ஆளும் (அதிரேகா) மேம்பாடுடையவனே!*

*விஷம் நீங்காத கண்டத்தை (கழுத்தை) உடைய உருவத் தனும், (நடவிநோத தாடாளர்) கூத்துக்களை அற்புத வகையிற் செய்யும் மேன்மையுடையவனும், (கருதிடார்கள்) பகைவர்களாகிய திரிபுரத்தினர் தீ மூண்டழிய முன்பு நாடிப் பொருத*

*கடவுளும், இடபத்தின்மேல் ஏறி வருபவரும் (ஆன) சிவபெருமானது புதல்வனே! - மூல காரணனே! வேதப் பொருளானவனே! கருணைப் பெருமலையே! தேவர் பெருமாளே*

*(நீதிமொழி யாதோ)*

## 1054. திருவடியை மறவேன்

தனன தான தானான தனன தான தானான
தனன தான தானான தனதான

நிலவில்* மார னேறூதை யசைய வீசு மாராம
நிழலில் மாட மாமாளி கையின்மேலாம்-
நிலையில் வாச மாறாத அணையில் மாத ராரோடு
நியதி யாக வாயார வயிறார;
இலவி லூறு தேனூறல் பருகி யார வாமீறி
யிளகி யேறு பாடீர தனபாரம்-
எனது மார்பி லேமூழ்க இறுக மேவி†மால்கூரு
கினுமு னிப சீர்பாத மறவேனே;
குலஈ‡ வி யோம பாகீர திமிலை நாதர்×மாதேவர்
குழைய மாலி காநாக மொடுதாவிக்-
குடில கோம ளாகார சடில மோலி மீதேறு
குமர வேட மாதோடு பிரியாது;
கலவி கூரு மீராறு கனக வாகு வேசூரர்
கடக வாரி தூளாக அமராடுங்-
கடக போல மால்யானை வனிதை பாக வேல்வீர
கருணை மேரு வேதேவர் பெருமாளே (60)

## 1055. ஆண்டருள

தனன தான தானான தனன தான தானான
தனன தான தானான தனதான

மனக பாட பாடீர தனத ராத ராOரூப
மதன ராச ராசீப சரகோப-

---

* மன்மதன் தேர் தென்றல் - பாடல் 952-பக். 765 குறிப்பு.

† மாதர் மயக்கிற் படும்போதும் உன்னை மறவேன் - இக் கருத்தைக் கொண்ட பாடல்கள் பல - 493, 513, 562, 568, 609, 833, 859, 893, 940, 948, 1010, 1099, 1197, 1275, 1276: - கந்தரலங்காரத்தில் 37

‡ கங்கை சூடிய வரலாறு - பாடல் 446-பக்கம் 622 குறிப்பு

× "ஜடா மவுலி இறை மகிழ... ஒரு திரு மார்பில் ஆடுவதும் ... மனை நாறு சீறடியே"- சீர்பாத வகுப்பு.

O அரூப மதன ராசன் - எனவும் பிரிக்கலாம்.

# 1054.

நிலவின் வெளிச்சத்திலே (மாரன்) மன்மதன் (ஏறு) தனது தேராக ஏறிச் செலுத்தும் (ஊதை) தென்றல் காற்று அசைந்து வீசுகின்ற (ஆராம நிழலில்) பூஞ்சோலை நிழலிலே மாடங்கள் கூடிய சிறந்த மாளிகையின் மேலேயுள்ள

நிலையில் (மாடத்தில்) - (பூஞ்சோலை நிழலிலுள்ள பெரிய மாளிகையின் மேல் மெத்தையில்) வாசம் மாறாத - நறுமணம் நீங்காத படுக்கையில், பெண்களோடு காலந்தவறாத ஒழுக்கத்துடன், வாய் நிரம்பவும் வயிறு நிரம்பவும்

(இலவில்) இலவம் பூப்போன்ற வாயிதழில் ஊறிவருகின்ற தேன்போலினிக்கும் ஊறலை உண்டு (ஆர் அவா மீறி) நிரம்பின எனது ஆசையானது அளவு கடந்து பொங்கி எழ, நெகிழ்ந்து அசைந்து முற்பட்டெழுந்துள்ளதும், சந்தன மணிந்துள்ளதுமான கொங்கைப் பாரம்

என்னுடைய மார்பிலே அழுந்தி முழுகும்படி அழுத்தமாக அணைந்து மோகம் மிகுந்திருப்பினும், உன்னுடைய கடம்பணிந்த அழகிய திருவடிகளை மறக்கமாட்டேன்.

(குல) சிறந்த (வியோம பாகீரதி) ஆகாய கங்கையை (மிலை) சூடியுள்ள (நாதர்) தலைவர், மகாதேவர் ஆகிய சிவபெருமான் மனமகிழ்ச்சியிலே உருக (அவரது) மாலிகா - மாலையாக அணிந்துள்ள பாம்பின் மேல்தாவி

வளைந்துள்ளதும், அழகிய வடிவுள்ளதுமான ஜடாபார முடியின் மீது தவழ்ந்து ஏறும் குழந்தைக் குமரனே! வேடமாது ஆகிய வள்ளியுடன் (என்றும்) பிரியாமல்

புணர்ச்சியின்பம் மிகக் கொள்ளும் பன்னிரண்டு பொற்றோளனே! சூரர்களுடைய (கடகவாரி) சேனைக்கடல் பொடியாம்படிப் போர் செய்த (தேவசேனா பதியே)

மதம் பெருகும் கன்னங்களையுடைய சிறந்த வெள்ளை யானையாம் ஐராவதம் வளர்த்த மாது தேவசேனையின் (பாக) - பங்களே - வேல்வீரனே! கருணைப் பெருமலையே! தேவர் பெருமாளே! (உன் நீப சீர்பாதம் மறவேனே)

# 1055.

மனகபாடம் - கபாட மனம் (அல்லது கபட மனம்) - கதவு கொண்டு அடைபட்டது போன்ற (ரகசிய) (அல்லது கபடமான) மனத்தையும், (பாடீரம்) சந்தனம் அணிந்துள்ள (தனம்) கொங்கையாகிய (தராதரம்) மலையையும் (கொண்ட) ரூப - உருவத்தைக் கொண்டவரும், (மதனராஜன்) மன்மதராஜன் (செலுத்தும்) ராசீப சரம் - தாமரைப் பாணத்தின் - (கோப) கோபத்துக்கு இலக்காய் (இருப்பதால்)

*வருண பாத காலோக தருண சோபி தாகார
மகளி ரோடு சீராடி யிதமாடிக்,
குனகு வேனை நாணாது தனகு வேனை வீணான
குறைய னேனை நாயேனை வினையேனைக்-
கொடிய னேனை யோதாத குதலை யேனை நாடாத
குருட னேனை நீயாள்வ தொருநாளே;
அநகர் வாம னாகார முநிவ ராக ‡மால்தேட
அரிய தாதை தானேவ மதுரேசன்-
அரிய ×சார தாபீட மதனி லேறி ○ வீடேற
**அகில நாலு மாராயு மிளையோனே,

---

* வேசையர் ஜாதி பேதத்தைக் கவனியாதவர்:-

" சாதி பேதம் அறத் தழுவித்திரி மடமாதர்"

" யாவராயினும் நத்தி யழைப்பவர்"

" ஏவராயினும் எத்தி யழைக்கவும்" - திருப்புகழ் 152, 379 956

† வாமனாவதாரம் - பாடல் 268-பக்கம் 166; பாடல் 458 - பக்கம் 24 கீழ்க்குறிப்பு

‡ மால் தேட அரிய தாதை - வரலாறு - பாடல் 319-பக்கம் 292; பாடல் 535-பக்கம் 222 கீழ்க்குறிப்பு

× சாரதா பீடம்:-

நக்கீர ராதிய கடைச் சங்கப் புலவர்கள் வீற்றிருந்த சங்கப் பலகை

சங்கப் பலகையின் வரலாறு:-

மதுரையில் சரஸ்வதி தேவியின் கூறாக உள்ள 'ஆகார முதல் ஹாகாரம் இறுதியாகிய எழுத்து நாற்பத்தெட்டும், பிரம தேவரின் கட்டளைப்படி மனிதர்களாய்ப் பிறந்து தமிழிலே தலைமைப் புலமை கொண்டன. இந்த நாற்பத்தெட்டு புலவர்களும் பாண்டியனது சபையிலிருந்த புலவர்களை வென்று பாண்டியனுடைய ஆதரவில் மதுரைத் திருக் கோயிலுக்கு வட மேற்றிசையில் சங்க மண்டபத்தில் வீற்றிருந்தார்கள். இவர்களுடைய வேண்டுகோளின்படி மதுரைச் சோமசுந்தரக் கடவுள் இவர்களுக்கு ஒரு சங்கப் பலகையைத் தந்தருளினார். அது ஒரு முழச் சதுரம் உடையது. உண்மைப் புலவர்கள் இருப்பதற்கு மாத்திரம் ஒரு முழம் வளர்ந்து இடம் தரும். அப்புலவர்களின் விருப்பத்தின்படி சிவபெருமானும் ஒரு புலவராய் அப்பலகையில் நடு நாயகமாய் வீற்றிருந்தார். அவருடன் சேர்த்து நாற்பத்தொன்பது புலவர்கள் சங்கப் புலவர்கள். (தொடர்ச்சி பக். 137

(வருண பாதகம்) குல வேற்றுமையால் வரும் பாவம் (அலோகம்) (தும்) கண்ணுக்குப் புலப்படாதவரும், இளமை அழகு வாய்ந்த (ஆகாரம்) உடம்பொடு கூடியவருமான மாதர்களுடன் செல்வச்செருக்குடன் விளையாடியும், இன்பம் திளைத்தும்

(குணகுவேனை) கொஞ்சிக் காலம் கழிப்பவனும், (நாணாது தனகுவேனை) கூச்சமில்லாமல் - வெட்கப்படாமல் - சரசஞ் செய்பவனும், வீண்காலம் போக்கும் குறையை உடையவனும், நாய் அனையவனும், வினைக்கு ஈடானவனும்,

பொல்லாதவனும், (உன்னைப்) போற்றி ஓதாத கொச்சைப் பேச்சு உடையவனும, (உன்னை) விரும்பித் தேடாத குருடனுமான என்னை நீ ஆண்டருளும்படியான ஒருநாள் உண்டா!

(அநக) பாபமற்றவனே! (அல்லது) பாவமற்ற - வாமன ஆகாரம் - குறள்வடிவம் கொண்ட (முனிவர் ஆகும்) தவமுநிவரது (உடல்) உருவத்தை - (மாவலிக்காக எடுத்த) திருமால் தேட அவருக்கு (அரியராய்) எட்டாதவராய் நின்ற (தாதை) உன் தந்தையாகிய (தானேவ மதுரேசன்) - (மதுரேசன் தான் ஏவ)- மதுரைச் சொக்கநாதர் (ஏவ) அனுப்ப - (அவர் சொல்லின்படி) - (அல்லது அரியதாதை தான் ஏவ, (மதுரேசன்) அந்த மதுரைச் சொக்கப் பெருமானால் அளிக்கப்பட்ட)

அருமை வாய்ந்த (சாரதா பீடம்) சரஸ்வதியின் இருப்பிடமான சங்கப் பலகையில் ஏறி! ஏறி வீற்றிருந்தவனே! (ஈடேற) உலகத்தார் உய்ய (அகில நாலும்) நாற்றிசையில் உள்ள உயிர்களை எல்லாம் ஆய்ந்து புரக்கும் இளையோனே! அல்லது ஏறி, நாற்றிசை யோரும் அறியப் புலவர்களின் உரையை ஆராய்ந்தவனே!

---

"சதுரமா யளவிரண்டு சாணதிப் பலகை யம்ம. மதியினும்
வாலிதாகும் மந்திர வலிய தாகும். முதியநும் போல்வார்க்
கெல்லாம் முழும் வளர்ந் திருக்கை நல்கும். இது நுமக்களவு
கோலாய் இருக்குமென் றியம்பி யீந்தார்"

- திருவிளை - சங்கப்பலகை தந்த படலம் 25

"புலமை தூக்கி அளப்பதாய்" - இருந்த காரணத்தால் இந்தச் சங்கப் பலகையைச் 'சாரதா பீடம்' என்ற அருமையான சொற்றொடரால் அருண-கிரியார் குறிப்பிடுகின்றார். இந்தச் சாரதா பீடத்தில் முருகவேள் சிவபிரான் திருவுளப்படி - அமர்ந்து - சங்கப் புலவர்களுக்குள் ஏற்பட்ட கலகத்தைத் தீர்த்தருளிய வரலாற்றைப் - பாடல் 350-பக்கம் 378 கீழ்க்குறிப்பிற் காண்க.

O ஈடேற = (உலகத்தார்) உய்ய.

** 'அகில நாலும் ஆராயும்' -என்றும் பாடம். ** புருடார்த்தம் நான்கையும் மறை நான்கையும் எனவுமாம்.

கனக பாவ னாகார *பவள கோம ளாகார
கலப சாம ளாகார மயிலேறுங்-
கடவு ளேக்ரு பாகார †கமல வேத னாகார
கருணை மேரு வேதேவர் பெருமாளே (61)

## 1056. வரவேணும்

தனன தான தானான தனன தான தானான
தனன தான தானான தனதான

‡அதல சேட னாராட அகில மேரு மீதாட
அபின காளி தானாட அவளோடன்-
× றதிர வீசி வாதாடும் விடையி லேறு வாராட
ㅇ அருகு பூத வேதாள மவையாட;
மதுர வாணி தானாட மலரில் வேத னாராட
மருவு வாணு ளோராட மதியாட-

*முருகவேள் பவள நிறத்தினர்.- பாடல் 593-பக்கம் 360 குறிப்பு

† கமல வேதன ஆகாரம் - இதய கமலத்திற் பொருந்திய ஞான சொரூபம்; வேதனம் = அறிவு.

‡ சம்பந்தாண்டான் என்பவனோடு அருணகிரியார் வாது செய்த பொழுது முருக வேளைப் பிரபுட தேவராஜனுடைய சபையில் வரவழைக்க அருணகிரியார் பாடின பாடல் இது.

அருணகிரியார் காலத்தில் திருவண்ணாமலையை ஆட்சி புரிந்திருந்த பிரபுட தேவராஜன் அவரிடம் மிக்க நண்பு பூண்டிருந்தலைக் கண்டு பொறாமை கொண்ட சம்பந்தாண்டான் அரசனிடத்தில் "யாரொருவர் தாம் உபாசிக்கும் மூர்த்தியைச் சபையில் வர வழைக்கின்றனரோ அவர் மாட்டே நீங்கள் அன்பு கொள்ள வேண்டும்" எனக்கூற, அரசன் விரும்பிய வண்ணம் இருவரும் தந்தம் வழிபடு கடவுளை வரவழைக்க முயன்றனர். சம்பந்தாண்டான் தேவியை வரவழைக்க முயன்று முடியாது போய் வாதில் தோல்வியுற்றனன். அருணகிரியார் 'அதல சேட னாராட' என்னும் இப்பாடலைப்பாடி முருகனை வேண்ட, அவர் வேலும் மயிலும் விளங்கச் சபையில் தோன்றித் தரிசனம் தந்தனர். இதன் உண்மை 'சயில மெறிந்த

(கனக பாவனாகார) பொன்போன்ற தூய (உடம்பினனே) மேனியனே! பவளம்போன்ற அழகிய (சிவந்த) மேனியனே! தோகை உடையதும், பச்சை நிறம் கொண்டதுமான உடலினைக் கொண்ட மயில்மீது ஏறும்

கடவுளே! கருணை உருவத்தனே! இதய கமலத்திற் பொருந்திய ஞான சொருபனே! கருணைப் பெருமலையே! தேவர் பெருமாளே!

( நீ ஆள்வ தொருநாளே!)

## 1056

(அதலம்) கீழுலகத்து உள்ள (சேடனார்) ஆதிசேடன் ஆடவும், அகில மேரு மீதாட - அகிலமீது மேரு ஆட - பூமி மீதுள்ள மேரு மலை அசைந்தாடவும், அபின (அபின்னம்) ஒற்றுமையுடன் (சிவனது நடனத்துக்கு வேற்றுமை யில்லாத வகையில் - அவரது நடனத்துக்கு ஒத்தபடியே) காளி தான் ஆடவும், அவளுடனே அன்று -

(அதிர) அவள் நடுங்கும்படி - (அல்லது முழவு முதலிய வாத்தியங்கள் ஒலிக்கக்) காலைவீசித் (தருக்கம் செய்து) போட்டி யிட்டு நடனம் செய்தவரும் இடப வாகனருமான சிவபிரான் ஆடவும், அவருக்குச் சமீபத்தில் அவரைச் சூழ நின்று பூதங்களும் பேய்களும் ஆடவும்,

இனிமை கொண்ட சரஸ்வதி, ஆடவும் தாமரை மலரில் வீற்றிருக்கும் (அவள் கணவன்) பிரமதேவன் ஆடவும், பொருந்தியுள்ள விண்ணவர்கள் ஆடவும், சந்திரன் ஆடவும்,

---

கைவேற்கொடு, மயிலினில் வந்தெனை யாட் கொளல், சகமறியும்படி காட்டிய குரு நாதா' எனவும், 'உலகினில் அனைவர்கள் புகழ்வுற அருணையில் ஒரு நொடிதனில் வரு மயில் வீரா'- எனவும் அருணகிரியாரே கூறியுள்ளனவற்றினின்றும் பெறப்படும் - பாடல் 331 - பக்கம் 330; பாடல் 755-பக்கம் 251 கீழ்க்குறிப்புக்களைப் பார்க்க. (அருணகிரி நாதர் வரலாறு பக்கம் 17-20)

X கூத்தப் பெருமான் 'அதிர வீசி ஆடுதல் ':-

" முழங்கழல் அதிர வீசி ஆடுவாய்" - சம்பந்தர். 3-52-4

O அருகில் பூத வேதாளம் ஆடுதல்:-

" ஊனடைந்த பேய்களோடு பூதம் கூடிந் துடனே . மகிழ்ந்

தெரியாட லென்னே"! - சம்பந்தர் 1-48-3.

வனச மாமி யாராட நெடிய மாம னாராட
மயிலு மாடி *நீபாடி வரவேணும்;
†கதைவி டாத தோள்வீம னெதிர்கொள் வாளி யால்நீடு
கருத லார்கள் மாசேனை பொடியாகக்-
‡கதறு காலி போய்மீள Xவிஜய னேறு தேர்மீது
கனக வேத கோடூதி அலைமோதும்;
O உததி மீதி லேசாயு **முலக மூடு சீர்பாத
உவண மூர்தி மாமாயன் மருகோனே-
உதய தாம மார்பான ப்ரபுட தேவ மாராஜ
னுளமு மாட வாழ்தேவர் பெருமானே (62)

## 1057. ஞான வீடு

தனன தான தானான தனன தான தானான
தனன தான தானான தனதான

குருதி மூளை யூனாறு மலமு றாத தோல்மூடு
குடிசை கோழை மாசூறு குழிநீர்மேற்-
குமிழி போல நேராகி அழியு மாயை யாதார
குறடு ‡‡பாறு நாய்கூளி பலகாகம்;

---

* இறைவன் ஆடினால்தான் சேடனார் முதலானோர் ஆடுவர், பிற ஆடும் - என்னும் கருத்தைத் தழுவி, 'நீ பாடி வரவேணும்' என்றார் " சராசரம் யாவையும் ஆடிடும் எம்பிறை ஆடவே"

- திருமந்திரம் . 2731

" மாயனாடினன் மலர் மகனாடினன் யாரும் ஆடினாரால்,
தூயன் ஆடுறின் ஆடுறார் யாவரே சொல்லின்"

- சூதசங். 5 சாந்தோக. 39

† 'கதை' (கதாயுதம்) கொண்டே வீமன் துரியோதனனை மாள்வித்தான்.

"வீறுகொண்ட கதாயுதம் வீசினன் வீரன் அம்புலி மீதுற
வீழவே"- வில்லி. பார 18-ஆம் போர் 185

‡ 'கோவலனாய் ஆநிரைகள் மேய்த்துக் குழலூதி'

- இயற்பா . மூன்றாம் அந்தாதி . 42

X " விசயன் மணித்திண் தேர் ஊர்ந்தவன்"
" தேரொக்க ஊர்ந்தாய் செழுந்தார் விசயற்காய்"

- பெரியாழ்வார். 1-9-4; 1-8-6

O " பாற்கடல் யோக நித்திரை சிந்தை செய்த எந்தாய்'

- திருவாய்மொழி. 2-6-5

** உலகளந்தது - பாடல் 268-பக். 166 குறிப்பு. தொ. பக். 141

செந்தாமரை மலரில வீற்றிருக்கும் (உனது) மாமியாராகிய இலக்குமி தேவி ஆடவும், விசுவ ரூபம் எடுத்த உனது மாமனாராகிய திருமால் ஆடவும், (நீ ஏறிவரும்) மயிலாடவும், நீ நடனம் புரிந்து வரவேணும்,

கதாயுதத்தை எப்போதும் தோளில் வைத்துள்ள வீமசேனன் எதிர்த்துச் செலுத்தின பாணப்ரயோகத்தில் பெரிய பகைவர்களின் பெருஞ் சேனைகள் பொடிபட (உதவினவரும்)

கதறிச் சென்ற (காலி) பசுக் கூட்டங்கள் போனவை மீண்டுவரப் புல்லாங் குழலை ஊதினவரும், அருச்சுனன் ஏறிச்சென்ற தேர்மேல் பாகனாயிருந்து, பொன் மயமானதும் வேத ஒலியைத் தருவதுமான (கோடு)_சங்கத்தை ஊதினவரும், அலைமோதி வீசும்

(உததி மீதிலே) (பாற்) கடலிலே (சாயும்) பள்ளிகொள்பவரும், (உலகம் மூடு சீர்பாதம்) உலகத்தையே அளந்து மூடின திருவடியை உடையவரும், (உவணம் ஊர்தி) கருடனை வாகனமாகக் கொண்டவரும், ஆன சிறப்புற்ற (மாயன்) திருமாலின் மருமகனே!

அன்றலர்ந்த மலர் மாலையை அணிந்த மார்பினனான பிரபுட தேவ மகாராஜனுடைய உள்ளம் நெகிழ்ந்துருகும் வண்ணம் அவனது உள்ளத்தில் வாழ்கின்ற பெருமாளே! தேவர் பெருமாளே!

(மயிலும் ஆடி நீ ஆடி வரவேணும்)

## 1057.

ரத்தம், மூளை, மாமிசம், நாற்றம் மிக்க மலம் இவை நீங்காததும், தோல் மூடி உள்ளதுமான குடிசை, (சோழை) கபம் முதலிய (மாசு) அழுக்குகள் ஊறியுள்ள ஒரு குழி, நீரின்மேல் (தோன்றும்)

குமிழிக்கு ஒப்பாகி, (உடனே) அழிகின்ற மாயை (ஒரு பொய்த் தோற்றமாய், (ஆதார) (ஒரு பற்றுக் கோடாக நினைக்கப்படும் (குறடு) இறைச்சி கொத்தும் பட்டடை மரமாக வைத்து - பருந்து, நாய், பேய், பல காக்கைகள் (இவை)

---

" இம் மண்ணினை ஓரடியிட்டு இரண்டாம் அடி தன்னிலே
தாவடி யிட்டானால் இன்று முற்றும்"

பெரியாழ்வார் 2-10-7

** " நீரிற் குமிழி யிளமை" - நீதி நெறி விளக்கம் - காப்பு

" நீர்க் குமிழிக்கு நிகரென்பர் யாக்கை'- கந். அலங். 66

†† " ஈயெறும்பு நரி நாய்களெங் கழுகு காகம் உண்ப உடல்"

• திருப்புகழ் . 902

பருகு காய மேபேணி அறிவி லாம லேவீணில்
படியின் மூழ்கி யேபோது தளிர்வீசிப்-
பரவு நாட காசார *கிரியை யாளர் காணாத
பரம ஞான வீடது புகல்வாயே;
எரியின் மேனி நீறாடு பரமர் பாலில் வாழ்வான
இமய மாது மாதுலி தருபாலா-
†எழுமை வீறு காணாதர் முநிவ ரோடு வானாடர்
இசைக ளோடு ‡பாராட மகிழ்வோனே;
அரவி னோடு மாமேரு மகர வாரி பூலோக
மதிர Xநாக மோரேழு பொடியாக-
அலகை பூத மாகாளி சமர பூமி மீதாட
அசுரர் மாள வேலேவு பெருமாளே (63)

## 1058. காமனை வென்றோர்

தனன தனன தாத்தன தனன தனன தாத்தன
தனன தனன தாத்தன தனதான

சரியு மலல யாக்கையு ளெரியு முரிய தீப்பசி
தனிகைOபொருடி ராப்பகல் தடுமாறுஞ்-
சகல சமய தார்க்கிகர் கலக மொழிய நாக்கொடு
சரண கமல மேத்திய வழிபாடுற்
றரிய துரிய மேற்படு கருவி கரண நீத்ததொ
ரறிவின் வடிவ மாய்ப்புன கிதமாகி-
அவச கவச மூச்சற அமரு **மதனன் மேற்சில
ரதிப திவிடு பூக்கணை படுமோதான்;

---

* "சரியை யாளர் காணாது" என்றார் 1052-ஆம் பாடலில்,

† எழுமை ஈறு காண் நாதர் = எழுவகைத் தோற்றத்தின் முடிவையும் கண்டுணர்ந்த அகத்தியாதி நாதாக்கள் என்பர். பாடல் 788-பக்கம் 338 கீழ்க்குறிப்பையும் பார்க்க.

‡ பாராட = பாராட்ட

X மலை ஏழு- பாடல் 676-பக்கம் 56 கீழ்க்குறிப்பு

O பொருடிராப்பகல் = பொருட்டு இராப்பகல்

**1058-ஆம் பாடலில் முதல் நான்கடிகள் - காமனை வெல்லும் ஆற்றலை உடைய பக்திஞானப் பெரியோர்களின் இலக்கண விளக்கமாம்.

உண்பது ஆகிய (இந்து) உடல், இதை விரும்பி, அறிவு இல்லாமல், வீணாக, (இந்தப்) பூமியில் (பிரபஞ்ச விவகாரத்தில்) மூழ்கியே) முழுகினவனே ஆகிய எனக்குப், (போது மலர்களையும், (வில்வத்) தளிர் ஆதிய தளிர்களையு ம் வீசி (இட்டுப்பணிந்து)

போற்றப் படுகின்ற (நாடக ஆசார) ஒரு கூத்துப்போன்ற பணியாம் ஆசார பணியை மேற்கொண்டுள்ள கிரியையாளர்கள் காணாத மேலான ஞான வீடு எது என்பதை உபதேசித் தருளுக.

நெருப்புப் போன்ற திருமேனியில் திருநீறு விளங்கும் பரமரின் (இடது) பாகத்தே வாழ்கின்ற இமயமலைப் பெண், மழுவா (சூலி) சூலாயுதத்தை ஏந்தினவள் ஆகிய பார்வதி பாலனே!

(எழுமை) எழுவகைத் தோற்றத்தின் (ஈறு) முடிவை, (காண்) கண்டுணர்ந்த (நாதர்) (நாதாக்கள்) அகத்தியாதி நாதாக்களாகிய முநிவர்களுடனே, வானில் உள்ள தேவர்களும் இசைபாடிப் பாராட்ட மகிழ்கின்றவனே!

(அரவினொடு) பாதாளத்தில் உள்ள ஆதிசேடனும், மகா மேருவும், மகர மீன்கள் உள்ள கடலும், பூலோகமும் அதிர்ச்சி கொள்ளவும், (நாகம்) மலைகள் ஓர் ஏழும் பொடிபடவும்,

பேய்கள், பூதங்கள், மகாகாளி இன்னோர் (சமரபூமி) போர்க்களத்தே கூத்தாடவும், அசுரர்கள் இறந்துபடவும், வேலாயுதத்தைச் செலுத்தின பெருமாளே! (ஞான வீடேது புகல்வாயே)

# 1058.

கழிந்து குலைந்து, துன்பத்துக்கு ஈடானதான உடலிடத்தே எரிபோல எரிந்து உரிமை கொண்டாடும் கொடிய பசிப்பிணி தணிந்துபோம் பொருட்டு இரவும் பகலும் தடுமாறுகின்ற

எல்லாவித மத சம்பந்த தருக்க வாதிகளின் கலகப் பேச்சுக்களை விட்டு நீங்கி, நாவைக்கொண்டு (உனது) திருவடித் தாமரையைப் போற்றும் வழிபாட்டினை மேற்கொண்டு -

அருமையான துரிய நிலைக்கு (யோகியர் சிவமயமாய் நிற்கும் உயர் நிலைக்கு) மேற்பட்டதாய்க், (கருவி) தொடர்புகளையும் (கரணம்) இந்திரியங்களையும் கடந்ததான அறிவு சொரூபமாய்ப் புளகாங்கிதம் கொண்டு-

(அவசம்) மயக்க அறிவு என்கின்ற (கவசம்) சட்டை (அற) நீங்கவும், (மூச்சு அற) மூச்சு தம்வசப்பட்டு அடங்கி ஒடுங்கவும், (அமரும்) ஆட்சி செய்து வீற்றிருக்கும் (அமலர் மேல்) குற்றமற்ற தவசிகளின்மேல் (பெரியோர்கள் மீது), (சிலரதிபதி விடு பூக்கணை - ரதிபதி விடு சில பூக்கணை - ரதிதேவியின் நாயகனான மன்மதன் ஏவுகின்ற சில மலர்ப் பாணங்கள் படுமோதான் - பட்டு ஊறு செய்ய வல்லன ஆகுமோதான் - (வல்லன் அல்ல என்றபடி)

விரியு முதய பாஸ்கர கிரண மறைய வார்ப்பெழ
மிடையு மலகில் தேர்ப்படை யொடுசூழும்-
விகட மகுட பார்த்திப ரனைவ ருடனு நூற்றுவர்
விசைய னொருவ னாற்பட *வொருதூது;
திரியு மொருப ராக்ரம அரியின் மருக பார்ப்பதி
சிறுவ தருகண் வேட்டுவர் கொடிகோவே-
திமிர வுததி கூப்பிட அவுணர் மடிய வேற்கொடு
சிகரி தகர வீக்கிய பெருமாளே (64)

## 1059. கழல்களைப் போற்ற

தனன தனன தாத்தன, தனன தனன தாத்தன
தனன தனன தாத்தன தனதான

மகளு மனைவி தாய்க்குல மனையு மனைவர் வாக்கினில்
மறுகி புறமு மார்த்திட வுடலூடே-
மருவு முயிரை நோக்கமு மெரியை யுமிழ ஆர்ப்பவ
ருடனு மியமன் மாட்டிட அணுகாமுன்;
உகமு முடிவு மாச்செலு முதய மதியி னோட்டமு
முளது மிலது மாச்சென வுறைவோரும்-
உருகு முரிமை காட்டிய முருக னெனவு நாக்கொடு
உனது கழல்கள் போற்றிட அருள்தாராய்;

---

* பாண்டவர்க்காகத் திருமால் தூது சென்றது:- எங்களுக்காக நீ துரியோதனனிடம் தூதுசென்று நாங்கள் வாழ நாடு ஒன்று கேட்பாயாக; அதைக் கொடுக்க அவன் மறுத்தால், ஐந்து ஊர்களைத் தரச் சொல்; அதையும் அவன் மறுத்தால் ஐந்து வீடுகள் கேள்; அதையும் அவன் மறுத்தால் - போர்தான் முடிவு என்று கூறுவாயாக எனச் சொல்லி அனுப்பினார் தருமராஜர் கிருஷ்ண பகவானை.-

" நாடொன்று நல்கானாகில், ஐந்தூர் வேண்டு; அவை இல்
எனில் ஐந்து இலம் வேண்டு; அவை மறுத்தால் அடுபோர்
வேண்டு.... செங்கண் மாலே"-

அங்ஙனமே பகவான் தூதுசென்று, துரியோதனன் எதையும் கொடுக்க மறுத்துப் போர் புரியத் துணிந்ததைத் தருமனிடம் வந்து சொன்னார்:

" தூதுபோய் அரவத் துவசனோடு உறுதி சொன்னதும்
மறுத்தவன் சினந்து, மோது போர்புரியத் துணிந்ததும்...

ஒளி விரிந்து எழுகின்ற உதய சூரியனுடைய (காலையில் எழும் சூரியனுடைய) (கிரணம்) ஒளி மறையும்படியும், (ஆர்ப்பு எழ) பேரொலி எழும்படியும், (மிடையும்) நெருங்கி வரும் (அலகில்) கணக்கில்லாத - எண்ணிறந்த - தேர்களொடும், சேனைகளொடும் சூழ்ந்து வந்த

(விகட) பரந்த - கிரீடங்கள் அணிந்த - அரசர்கள் யாவரும், துரியோதனாதி நூற்றுவரும் - அருச்சுனன் ஒருவனாலே அழிவுறச் (செய்தவரும்), (பாண்டவர்க்கு) ஒப்பற்ற தூதுவராகச்-

சென்று உழன்ற ஒப்பற்ற பராக்ரமசாலியாகிய (அரியின்) திருமாலின் மருகனே! பார்ப்பதி தேவியின் குழந்தையே! கொடுமை வாய்ந்த வேடர்களின் மகள் வள்ளியின் நாயகனே!

இருண்ட கடல் ஒலிடவும், அசுரர்கள் மடியவும் (வேற்கொடு சிகரி தகர) சிகரி தகர வேற்கொடு (கிரௌஞ்ச) கிரி பொடிபடவும் வேலை எடுத்து, வேகமாய்ச் செலுத்தின பெருமாளே!

(அமலர் மேல் பூக்கணை படுமோதான்)

# 1059

மகள், மனைவி, தாய், இனத்தார் வந்துகூடும் எல்லாருடைய வாக்கிலும் கலக்கம் உண்டாகி, (புறமும்) வெளியாரும் (ஊராரும்) ஆர்த்திட - ஐயோ என்று நிறைந்துகூட - உடலின் உள்ளே -

பொருந்தியுள்ள உயிரைத் - (தனது நோக்கமும்) கண்களும் (எரியை உமிழ) தீயைக் கக்க, (ஆர்ப்பவருடனும்) ஆர்ப்பரித்து வரும் - பேரொலி செய்துவரும் தூதர்களுடன் யமன் என்னைச் சிக்க வைக்க நெருங்குவதற்கு முன்னே -

(உகமும்) (இப்) பூமியில் வாழ்வும் (முடிவுமா) முடிவுறும்படி (செலும்) போய்க்கொண்டிருக்கின்ற (உதயம்) தோன்றிவரும் (மதியின்) இடை கலையின் (இடது) நாசியால் விடும் சுவாசத்தின் ஓட்டமும் (இதோ) இருக்கின்றது - (இதோ) இல்லை (இதோ) முடிவு வந்து விட்டது என்னும்படிச் சொல்லிக்கொண்டு (அருகில்) இருப்பவர்களும் -

(உருகும் உரிமை காட்டிய) - உருகும் உரிமை காட்ட - தங்கள் மனம் உருகும் (அண்ணா, மாமா என்பன ஆதிய) [a]உறவு உரிமைகளை (முறையைக்) காட்டி வருந்த, (அச்சமயத்தில்) நான் "முருகா" என்று எனது நாவைக் கொண்டு உன்னுடைய திருவடிகளைப் போற்றி செய்ய (எனக்கு) அருள் புரிவாயாக.

---

எல்லாம் மைத்துனர்க் குரைத்தான்"

-வில்லி. பாரதம். கிருட்டினன் தூது. 11, 264.

தூதுசென்றது:- பாடல்கள் 258, 356, 1009, 1195 - பார்க்க.

[a]உரிமை காட்டுதலை - பாடல் 70 அடி 3-ல் காண்க.

புகல வரிய போர்ச்சிலை விரக விசைய னாற்புக
முடைய திருத ராட்டிர புதல்வோர்தம்-
புரவி கரிகள் தேர்ப்படை *மடிய அரசை மாய்த்துயர்
புவியின் விதன மாற்றினர் மருகோனே;
மிகவு மலையு மாக்கடல் முழுது மடிய †வேற்றுரு
வெனவு மருவி வேற்கொடு பொருசூரன்;
விரைசெய் நெடிய தோட்கன அடலு முருவ வேற்படை
விசைய முறவும் வீக்கிய பெருமாளே (65)

## 1060. பெரும் பொருள் பெற

தனன தாத்தன தனன தாத்தன
தனன தாத்தன தந்ததான

குடரு நீர்க்‡கொழு மலமு மீத்தொரு
குறைவி லாப்பல என்பினாலுங்-
கொடிய நோய்க்கிட மெனவு நாட்டிய
குடிலி லேற்றுயி ரென்றுகூறும்,
வடிவி லாப்புல மதனை ×நாட்டிடு
மறலி யாட்பொர வந்திடாமுன்;
மதியு முத்துன தடிக ளேத்திட
மறுவிலாப் பொருள் தந்திடாதோ;
கடிய காட்டக முறையும் வேட்டுவர்
கருதொ ணாக்கனி ○வெங்கையாகிக்-

---

* அரசை மாய்த்துப் பூ பாரம் தீர்த்தது :-
" நீ பாரத அமரில் யாவரையும் நீறாக்கிப் பூ பாரம் தீர்க்கப்
புரிந்தாய் புயல் வண்ணா" - வில்லி. பாரதம். கிருட்டிணன் தூது. 34
† சூரன் வெவ்வேறு உருவம் கொண்டு, வேற்கொடு பொருதது:-
முருகவேள் சூரனை நோக்கிக் கூறுவது:-
" இம்பரில் எமது முன்னம் எல்லையில் உருவம் கொண்டாய்"
" செங்கதிர் அயில்வாள் கொண்டு செரு முயன்று.. எதிர்ந்து
சீறுஞ் சூர்'- கந்தபுராணம். 4-13- 421, 490
‡ கொழு - கொழுப்பு - " குடருங் கொழுவும் குருதியும்
என்பும்" - நாலடியார். 46- திருப்புகழ். 1096-ம் பார்க்க.
× நாட்டிடு = நாடிடு. ○ வெங்கை - வேங்கை

சொல்லுதற்கு அரிய போர் வில்லை உடையவனும் (விரகு-அ - விசையனால்) சாமர்த்தியம் உள்ளவனுமான - அந்த அருச்சுனனைக் கொண்டு புகழ் பெற்றிருந்த திருதராட்டிரனுடைய மக்களுடைய (துரியோதனாதியர்களுடைய)

குதிரைகள், யானைகள், தேர்கள், சேனைகள் (யாவும்) இறந்து பட, (அரசை) அவர்களுடைய அரசாட்சியைத் தொலைத்து, சிறந்த இந்தப் பூமியின் (விதனம்) துக்கத்தை - வேதனையை - நீக்கினவராகிய (திருமாலின்) மருகனே!

நன்றாக (மலையும்) மலை ரூபத்தையும், (மாக்கடல்) பெரிய கடல் உருவத்தையும் எடுத்து (எதிர்த்தோர்) யாவரும் இறந்துபட வெவ்வேறு உருவங்கள் என்னும்படியான உருவங்களை ஏற்றுப் பொருந்தி, வேற்படை ஏந்திச் சண்டை செய்த சூரனுடைய

நறுமணமுள்ள பெரிய தோள்களின் பெருத்த வலிமை (உருவ) கழிந்து நீங்க, வேலாயுதத்தை வெற்றிபெற வேகமாகச் செலுத்தின பெருமாளே!

(கழல்கள் போற்றிட அருள் தாராய்)

## 1060.

குடலையும், நீரையும், (கொழு) கொழுப்பையும், மலத்தையும் (ஈத்து - ஈந்து) தந்து, ஒப்பற்றனவும் குறைவுஇலாதனவுமான பல எலும்புகளாலும் -

பொல்லாத நோய்களுக்கு இருப்பிடம் என்னும்படி - ஏற்படுத்தப்பட்ட குடிசையாகிய உடலில் ஏற்றப்பட்டதான ' உயிர்' என்று கூறப்படும் -

(வடிவம்) உருவம் இல்லாததான (புலம் அதனை) ஒரு நுண்மைப் பொருளைக் (கவரும் பொருட்டு) நாடி வருகின்ற யமதூதர்கள் போரிடுவதற்கு வருவதன் முன்பாகவே -

(என்) அறிவும் முதிர்ச்சி அடைந்து, (உனது) திருவடிகளை (நான்) போற்றி செய்யக், குற்றமில்லாத உண்மைப் பொருளை (உனது திருவருள்) எனக்கு தந்து உதவி செய்யாதோ!

கொடிய காட்டினிடையே வாசம் செய்கின்ற வேடர்களுக்கு (இன்ன வகையாக வந்தது இது என்று) எண்ண முடியாத (கனி வேங்கையாகி) "கனி" என்று சொல்லப்படுகின்ற வேங்கை மரமாகி -

கழைசெய் தோட்குற மயிலை வேட்டுயர்
*களவி னாற்புணர் கந்தவேளே;
முடுகி மேற்பொரு மசுர ரார்ப்பெழ
முடிய வேற்கொடு வென்றவீரா-
†முடிவி லாத்திரு வடிவை நோக்கிய
‡முதிய மூர்த்திகள் தம்பிரானே (66)

## 1061. உபதேசப் பெருமை

தனன தாத்தன தனன தாத்தன
தனன தாத்தன தந்ததான

பொதுவ தாய்த்தனி முதல தாய்ப்பகல்
இரவு போய்ப்புகல் கின்றவேதப்-
பொருள தாய்ப்பொருள் முடிவ தாய்ப்பெரு
வெளிய தாய்ப்புதை வின்றியீறில்;
கதிய தாய்க்கரு தரிய தாய்ப்பரு
கமுத மாய்ப்புல னைந்துமாயக்-
xகரண மாய்த்தெனை மரண மாற்றிய
கருணை வார்த்தையி ருந்தவாறென்;
உததி கூப்பிட நிருத ரார்ப்பெழ
உலகு போற்றிட O வெங்கலாப-
ஒருப ராக்ரம துரக மோட்டிய
வுரவ **கோக்கிரி நண்பவானோர்;

* "அக்களவிற் புணர்ச்சியை யுடைமையான் வள்ளி சிறந்த வாறும், அந் தமிழை ஆய்ந்தமையான் முருகன் சிறந்த வாறும் கூறுகின்றார்"- பரிபாடல். 9 உரைப்பகுதி

† 'முடி விலாத் திரு வடிவு'-

"புவனம் - அண்டம் - வானவர் உயிர்கள் யாவும் ஆறுமா
முகத்து வள்ளல் மேனியில் அமைந்த தன்றி வேறிலை
என்ன ஆங்கோர் வியன்பெரு வடிவம் கொண்டான்"
... திருப் பெருந் தடந்தோள் வைப்பிற் செங்கண்மால்
விரிஞ்சன் மேவ... " சென்னியில் பரம ஆன்மா மரபினின்
மேவித்தோன்ற, மாறிலா திருக்குந் தொல்லை ஒருதனி
துருவம் காட்டி" - கந்தபுரா. 4-13-422-427

‡ முதிய மூர்த்திகள் - அயன், அரி, அரன் - பாடல் 1061 அடி 8-பார்க்க.

(தொடர்ச்சி பக்கம் - 149 பார்க்க)

(கழை) மூங்கில் போலும் தோள்களை உடைய குறக்குல மயிலாம் வள்ளியை விரும்பிச் சிறந்த களவியல் வழியாக - அவளை அணைந்த கந்த வேளே!

விரைவில் எதிர் வந்து மேல் விழுந்து சண்டை செய்த அசுரர்களின் பேரொலி எழ, அவர்கள் யாவரையும் வேல்கொண்டு வென்ற வீரனே!

(உனது) முடிவே இல்லாத திருவடியை பெருந் திருவடியை விசுவ ரூபத்தைத் - தரிசித்த - பழம் கடவுளர்களாம் அயன், அரி, அரன் - என்னும் மூவர்க்கும் தம்பிரானே!

(மறுவிலாப் பொருள் தந்திடாதோ)

## 1061.

எவ்வுயிர்க்கும் பொதுவாய்த், தனிப் பொருளாய், முதற் பொருளாய், பகல் - இரவு இவைகளைக் கடந்து மேனிலையிற் சொல்லப்படுகின்ற வேதப்

பொருளாய், அப்பொருளின் முடிவாய், பெரிய வெட்ட வெளியாய், (புதைவு இன்றி) மறைவு யாதொன்றுமின்றி, முடிவு இல்லாததான-

(கதியதாய்) புகலிடமாய், எண்ணுதற்கும் அரியதாய், உண்ணும் அமுதம்போல இனிமை உள்ளதாய் (விளங்கிச்) சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் எனப்படும் ஐவகையான உணர்ச்சிகளும் ஒடுங்கி அழியக்

(கரணம் மாய்த்து) - மெய், வாய், கண், மூக்கு, செவி எனப்படும்) ஐம்பொறிகளின் சேட்டைகளை (மாய்த்து) அழித்து, எனக்கு (மரணம் மாற்றிய) மரண பயத்தை நீக்கின உனது கருணைமொழி உபதேசம் (இருந்தவாறு என்) என்ன உயர் நிலையதாயுள்ளது! அற்புதம் இது:

கடல் ஒலிடவும், அசுரர்கள் பேரொலி எழுப்பவும், உலகோர் போற்றி செய்யவும், விரும்பத்தக்க தோகை மயிலாகிய -

ஒப்பற்றதும் வீரம் உள்ளதுமான, குதிரையை ஓட்டிச் செலுத்தின (உரவு) வலிமை வாய்ந்தவனே! (கோ) பூமியிலுள்ள - மலைகளினிடத்தே விருப்பம் உள்ளவனே! தேவர்களுக்கெல்லாம் -

---

X கரண மாய்த்து... மரண மாற்றியது:-

" கரணமும் ஒழியத் தந்த ஞானம் இருந்தவாறென்"

- பாடல் 960

" மரணப் ப்ரமாதம் நமக் கில்லையாம்"- கந்தரலங். 21

O மெம் = விருப்பத்தைத் தருகின்ற.

** கோ கிரி நன்ப = பூமியிலுள்ள மலைகளினிடத்து விருப்ப முள்ளவனே.

முதல்வ பார்ப்பதி புதல்வ *கார்த்திகை
முலைகள் தேக்கிட வுண்டவாழ்வே -
முளரி பாற்கடல் சயில மேற்பயில்
முதிய மூர்த்திகள் தம்பிரானே (67)

## 1062. மோகூடும் பெற

தனன தாத்தன தனன தாத்தன
தானா தானா தானா தானா தனதான

†கவடு கோத்தெழு முவரி மாத்திறல்
காய்வேல் பாடே னாடேன் வீடா னதுகூடக்-
கருணை கூர்ப்பன கழல்க ளார்ப்பன
கால்மேல் வீழேன் வீழ்வார் கால்மீ
திறும்வீழேன்
‡ தவிடி னார்ப்பத மெனினு மேற்பவர்
தாழா தீயேன் வாழா தேசா வதுசாலத்-
தாமு X மோகூடு மினியெ னாக்கைச
தாயா மாறே நீதா னாதா புரியாயே
சுவடு பார்த்தட வருக ராத்தலை
தூளா மாறே தானா நாரா யணனே நற்-

---

* "தாராகண மெனும் தாய்மார் அறுவர் திருமுலைப்பால் ஆராது உமை முலைப்பா லுண்ட பாலன்" - கந்தரலங். 81

" தாய்மா ரறுவர் திரு முலைப்பா லுண்டான்"

- சிலப்பதி. குன்றக் குரவை

† 'கவடு சாய்த்தெழு' என்றும் பாடம்.

கவடு கோத் தெழும் உவரி மா:- சூரன் கடலிடையே மாமரமாய் நின்றபோது அந்த மாமரத்தின் வடிவம்.

"சூரனும் தொடு கடல் நடுவண் ஆனான்.. துன்னுடல் கவடு போக்கிச் சூதமாய் அவுணன் நின்றான்"- கந்தபுரா. 4-13-468

‡ " தவிடி னாற்பிள வெனினும்" என்றும் பாடம்.

" வழிஞர்க் கென்றும் நொய்யிற் பிளவள வேனும் பகிர் மின்கள்" என்றார் கந்தரலங்காரத்தில். 18

X மோகூடும் என் ஆக்கை சதா ஆமாறு:-

"இந்தச் சடமுடன் உயிர் நிலைபெற" என்றார் 210-ஆம் பாடலில்

தலைவனே! பார்வதியின் புதல்வனே! கார்த்திகை மாதர்களின் கொங்கைகளில் பால் நிரம்பி வர அதை உண்ட செல்வனே!

(முளரி) தாமரை மீதும், (பாற்கடல்) பாற் கடலின் மீதும், (சயிலம்) (கயிலை)' மலையின்மீதும் (முறையே) வீற்றிருக்கும் பழையவர்களாம், அயன், அரி, அரன் எனப்படும் கடவுளர்க்குத் தம்பிரானே!

(கருணை வார்த்தையிருந்த வாறென்)

**1062**

(கவடு) மரக் கிளைகளைக் (கோத்து எழு) நிரம்பக் கொண்டு எழுந்ததும், (உவரி) கடலில் தோன்றி நின்றதுமான (மா) மாமரமாம் சூரனது (திறல்) வலியைக் காய்ந்து அழித்த (உனது) வேலாயுதத்தை நான் பாடுகின்றேன் இல்லை. (ஆடேன்) (அதைத்துதித்து) ஆடுகின்றேன் இல்லை, அல்லது நாடேன் - நாடி விரும்புகின்றேன் இல்லை- வீட்டின்பத்தை அடைய விரும்பி -

கருணை மிக்கதும், கழல்கள் ஒலிப்பதும் ஆன உனது திருவடியின் மீது வீழ்ந்து வணங்குகின்றேன் இல்லை; அப்படி வீழ்ந்து வணங்குபவர்களின் கால்களிலும் வீழ்ந்து வணங்குகின்றேன் இல்லை;

(தவிடின் ஆர்) தவிடளவு (பதம்) சோறுகூட ஏற்பவர்க்குத் (தாழ்க்காது) தடையின்றிக் கொடுக்கமாட்டேன்; (வாழாதே) இங்ஙனம் வாழாமல் (வாழ்வதைவிட) (சாவது) இறந்து படுதலே (சால) மிகவும் -

*(தரம்) மேலானதாம் - தகுதியாம்; (மோக்ஷமும் இனி என் ஆக்கை) - இனியேனும் மோக்ஷத்தை - (பிறப்பிறப்பினின்றும் விடுதலையை அடைந்து) என் உடல் (சதா) எப்போதும் (ஆமாறே) நிலை பெற்றிருக்குமாறே (நீதான் நாதா) நாதா நீ தான் - நாதனே நீதான் அருள் புரிவாயாக.

† (நீரில் யானையின் கால் நிழலைக் கண்டு) அடுதற்பொருட்டு - கொல்லுதற் பொருட்டு வந்து இழுத்த முதலையின் தலை பொடியாகும்படி - (ஆ) 'ஹா! நாராயண மூர்த்தியே! நற்பெருந்

---

* 'தரமும்' - இங்கு 'உம்' அசை நிலை- உதாரணங்கள் -

" காமக் கடல் மன்னும் உண்டே" -"மன்னும், 'உம்'மும் அசை நிலை"

- திருக்குறள். உரை 1164

* சாக்கியம் சமண் என்றிவை சாரேலும்"- சம்பந்தர் 2-77-10

† கஜேந்திரனுக்கு உதவினது - பாடல் 939-பக்கம் 731 கீழ்க்குறிப்பு

றுணைவ பாற்கடல் வனிதை சேர்ப்பது
மூாய்மார் பாகோ பாலா காவா யெனவேகைக்;
குவடு கூப்பிட வுவண மேற்கன
கோடூ தாவா னேபோ தாள்வான் மருகோனே-
குலிச பார்த்திப னுலகு காத்தருள்
கோவே தேவே வேளே வானோர்
-பெருமாளே (68)

## 1063. திருவடி பெற

தனன தாத்தன தனன தாத்தன
தானா தானா தானா தானா தனதான

பருதி யாய்ப்பனி மதிய மாய்ப்படர்
பாராய் வானாய் நீர்தீ காலா யுடுசாலம்-
பலவு மாய்ப்பல கிழமை யாய்ப் † பதி
னாலா றேழா மேனா ளாயே மூலகாகிச்,
சுருதி யாய்ச்சுரு திகளின் மேற்சுட
ராய்வே தாவாய் மாலாய் மேலே சிவமான-
தொலைவி லாப்பொரு ளிருள்பு காக்கழல்
சூடா நாடா ஈடே றாதே சுழல்வேனோ;
திருத ராட்டிர னுதவு நூற்றுவர்
சேனா டாள்வா னாளோர் மூவா றினில்வீழத்-
‡ திலக பார்த்தனு முலகு காத்தருள்
சீரா மாறே ×தேரூர் கோமான் மருகோனே;
○ குருதி வேற்கர நிருத ராக்ஷத
கோபா நீபா †† கூதா ளாமா மயில்வீரா-

* இப் பாடல் - 1062- மனப்பாடஞ் செய்யத் தக்கது.

† பதினால் ஆறு ஏழ் ஆம் மேற் நாள் = 27 - நக்ஷத்திரம்

‡ திலகம் - சிறப்பைக் குறிக்கும் -

" திலக நீள் முடித் தேவர்" - சிந்தாமணி. 246

× தேர் ஊர்ந்தது - பாடல் 934-பக்கம் 721 கீழ்க்குறிப்பு

○ குருதி வேல் - " உதிரம் நிறைத்து விளையாடும்....
குகன் வேலே" - வேல் வகுப்பு

** 'நிருத ராக்ஷத கோபா'- 'நிருதர் கோப'- திருப்புகழ். 1176

†† 'கூதாள' - கந்தரநுபூதி. 38

துணைவனே! பாற் கடலில் தோன்றிய மாது இலக்குமியின் (சேர்ப்ப) தலைவனே! துளசி மாலை (அணிந்த) மார்பனே! கோபாலா! காத்தருளுக, என்று (எனவே) துதிக்கையை உடைய

மலை போன்ற கஜேந்திரன் என்னும் யானை கூச்சலிட்டு அழைக்க, உவண மேல் - கருடன் மேலே, (கன கோடு) தங்க மயமான சங்கத்தை (ஊதா) ஊதி, (வானே போதாள்வான்) ஆகாய வழியாக வந்து (ஆள்வான்) (அந்த யானையை) ரட்சித்து ஆண்ட திருமாலின் மருகனே!

குலிசாயுதத்தை ஏந்திய (அரசன்) இந்திரனுடைய (உலகு) பொன்னுலகைக் காத்தருளின தலைவனே! தேவனே! (செவ்) வேளே! தேவர்தம் பெருமாளே!

(மோக்ஷம் சதா ஆமாறே புரிவாயே)

# 1063.

சூரியனாய், குளிர்ந்த சந்திரனாய், பரந்துள்ள பூமியாய், ஆகாயமாய், நீராய், நெருப்பாய், (காலாய்) காற்றாய், நக்ஷத்திரக் கூட்டமாய், (மற்றும்)

பலவுமாய்ப், பல (கிழமையாய்) உரிமைப் பொருள்களாய் (அல்லது ஞாயிறு முதலிய கிழமைகளாகி - காலங்களாய், 14+6+7 ஆம் மேல் நாள் ஆய்-27 சிறந்த நக்ஷத்திரங்களாய் - ஏழுலகங்களாய் -

(சுருதியாய்) வேதமாய், வேதங்களுக்கு மேற்பட்ட ஒளிப் பொருளாய், வேதாவாய் - பிரமனாய், திருமாலாய், இவர்களுக்கு மேற்பட்ட சிவமானதும் (மங்கலப் பொருளானதும்)

அழிவு என்பதே இல்லாததுமான பரம்பொருளின் - (திருவடியை) - அஞ்ஞான இருள் என்பதே புக முடியாத - அந்தத் திருவடியைச் - சூடியும் (முடிமேற் கொண்டும்), நாடி - தேடி விரும்பியும் (அல்லது சூடாமலும் நாடாமலும்) ஈடேறாமல் (வீணே) திரிவேனோ!

திருதராட்டிரன் பெற்ற துரியோதனாதி நூறு பேரும் (சேண் நாடு ஆள்வான்) வீர சுவர்க்க நாட்டை ஆளும்படி- நாள் ஓர் மூவாறினில் - பதினெட்டு நாள்களில் - போர்க்களத்தில் வீழ - மாண்டு ஒழியவும்

(திலக) சிறப்புற்ற அருச்சுனனும் - உலகை ஆண்டு காத்தருளும் சீருடன் வாழுமாறு அவனுடைய தேரில் சாரதியாயிருந்து தேரைச் செலுத்தின பெருமான் திருமாலின் மருகனே!

(அவுணர்களின்) ரத்தத்தில் தோய்ந்த வேலாயுத கரனே! அரக்கர்களாம் ராக்ஷதர்களின் மீது கோபம் கொண்டவனே! கடப்ப மாலை அணிந்தவனே! கூதளப்பூ மாலை அணிந்தவனே! அழகிய மயில் வீரனே!

குலிச பார்த்திப னுலகு காத்தருள்
கோவே தேவே வேளே வானோர்
பெருமாளே (69)

## 1064. இறப்பு அற

தனன தாத்தன தனன தாத்தன
தானா தானா தானா தானா தனதான

முதலி யாக்கையு மிளமை நீத்தற
மூவா தாரா காவா தாரா எனஞாலம்
முறையி டாப்படு பறைக ளார்த்தெழ
மூடா வீடு டேகேள் கோகோ எனநோவ;
மதலை கூப்பிட மனைவி கூப்பிட
மாதா மோதா வீழா வாழ்வே யெனமாய
மறலி யூர்ப்புகு மரண யாத்திரை
வாரா வானான் போ* நாம் நீமீ ளெனவேனும்;
புதல நாப்புன எயினர் கூக்குரல்
போகா நாடார் ‡பாரா வாரா ரசுரோடப்
பொருது தாக்கிய வயப ராக்ரம
பூபா லாநீ பாபா லாதா தையுமோதுங்;

---

* 'நாம்' - 'நீ' - எனும் பொருளிலும் வரும்-
" தமிழ் மாலைகளால் நாம் படிமக்கலம் செய்து
தொழுதும் மட நெஞ்சமே"- அப்பர். 4-102-3
" நாமிருக்கும் ஊர் பணியீர் அடிகேள்"- அப்பர். 6-45-7
" நாம் அரையாமத்து என்னோ வந்து வைகி நயந்ததுவே"
- திருக்கோவை 164
" நாமேல் நடவீர்"- கந். அநு. 17
" நெருநல் நடந்தவரோ நாம் என்ன" - கம்ப. ராமா. சூர்ப்ப.119
‡ பாராவாரம் - கடல் - " பாராவாரம் பல்வளம் பழுநிய காராளர்
சண்பையில்" - மணிமே. 3-28

அசுரரைக் கடலில் ஓட்டினது "அசுரேசர் குலைய
மாக்கடல் அதனில் ஓட்டிய கோவே" - திருப்புகழ் 1066

குலிசாயுதம் ஏந்திய அரசன் (இந்திரனுடைய) பொன்னுலகைக் காத்தருளின தலைவனே! தேவனே! வேளே! தேவர் பெருமாளே!

(ஈடேறாதே சுழல்வேனோ)

# 1064.

(வாழ்க்கைக்கு) முதலி - முதன்மையை உடைய ஆதாரமாய் இருக்கும் (யாக்கை) தேகமும் அதன் இளமையை (நீத்து) ஒழித்து, (அறவும்) மிகவும் மூத்து, (தாராகா ஆதாரா) தாரக ஆதாரா - (எங்களைக்) காத்தளித்து (எங்களுக்கு) ஆதாரமாய் - பற்றுக் கோடாய் இருந்தவனே என்று (ஞாலம்) பூமியில் உள்ளோர்

முறையிட (ஏங்க)ப், (படு பறைகள்) ஒலிக்கின்ற பறை வாத்தியங்கள் (ஆர்த்து எழ) மிகச் சப்தித்து ஒலி செய்ய, (உடலை - பிணத்தை)த் துணியால் மூடி, வீட்டுக்குள்ளே (கேள்) சுற்றத்தினர் கோகோ என்று கூச்சலிட்டு அழுது மனம் வருந்த -

பிள்ளைகள் கூச்சலிட்டு அழ, மனைவி கூச்சலிட்டு அழ, தாய் (தலையில்) மோதியும், விழுந்தும், (என்) செல்வமே என்று அலறிக் கூச்சலிட்டு அழவும், மாயமாக வந்த -

யமனுடைய பட்டணத்துக்குப் புகும் (மரணம்) சாவு என்னும் பயணம் (வாரா) உனக்கு வராது; வான் ஆள் - வானுலகை ஆளப் (போ நாம்) - போம் நாம் - (போவோம் நாம்), நாம் போவோம் (நீ மீள்) நீ என்னுடன் மீண்டு வா - என்று கூறி என்னை நீ அழைத்து செல்ல வரவேண்டும் (அல்லது மாயமறலியூரிற் புகும் மரணப் பயணம் உனக்கு வராது; (வான்) வானுலகை, (ஆள்) ஆள்வதற்கு (போ) போவாயாக (நாம்) நீ; (ஆதலால்) நீ மீள் - நீ மீண்டு என்னுடன் (வருவாயாக) என்று கூற (நீ) (வர) வேண்டும்.

புதல்கள் (செடி புதர்கள் - தூறுகள்) அறா - நீங்காத - நிரம்ப உள்ள, (புனம்) மலைச் சார்பில் உள்ள கொல்லைகளில் இருக்கும் வேடர்கள் (கூக்குரல்) கூச்சலிடும் குரல் (பேரொலி) நீங்காத பிரதேசத்தில் உள்ளவர்களாகிய (வேடர்களும்), பாரா வார - ஆர் - அசுர் - பாராவார ஆர் அசுரர் - கடல் போலப் பெருகி நிரம்ப வந்த அசுரர்களும் (அல்லது கடலுக்குள் அசுரர்களும்) (ஓட) பயந்து ஓடும்படி -

(அவர்களுடன்) சண்டை செய்து அவர்களைத் தாக்கி எதிர்த்த வெற்றி வீரனே! (பூபாலா) பூமியை ரக்ஷிப்பவனே! (நீபா) கடம்பு அணிந்தவனே! (பாலா) குழந்தையே! (தாதையும் ஓதும்) தந்தை சிவபிரானும் கற்கும்படி -

*குதலை வாய்க்குரு பரச பாகஷர
கோடா ரூபா ரூபா பாரீ †சதவேள்விக்-
குலிச பார்த்திப னுலகு காத்தருள்
கோவே தேவே வேளே வானோர்
பெருமாளே (70)

## 1065. ஈடேற

தனன தாத்தன தனன தாத்தன
தானா தானா தானா தானா தனதான

வருக வீட்டெனும் விரகர் நேத்திரம்
வாளோ வேலோ சேலோ மானோ
எனு ‡ மாதர்-
மனது போற்கரு கினகு வாற்குழல்
வானோ கானோ மாயா மாயோன் வடிவேயோ;
பருகு பாற்கடல் முருகு தேக்கிய
பாலோ தேனோ பாகோ வானோ ரமுதேயோ-
பவள வாய்ப்பனி மொழியெ னாக்கவி
பாடா நாயே னீடே றாதே யொழிவேனோ;
× அருகு பார்ப்பதி யுருகி நோக்கவொ
ரால்கீழ் வாழ்வார் வாழ்வே கோகோ வெனஏகி-
அவுணர் கூப்பிட வுததி தீப்பட
ஆகா சூரா போகா தேமீ ளணவோடிக்;
○ குருகு பேர்க்கிரி யுருவ வோச்சிய
கூர்வே லாலே யோர்வா ளாலே அமராடிக்-
குலிச பார்த்திப னுலகு காத்தருள்
கோவே தேவே வேளே வானோர்
பெருமாளே (71)

---

* தந்தைக்கு உபதேசித்து - பாடல் 327-பக். 314 குறிப்பு.

† சத வேள்விக்குக் குலிசன் - பாடல் 232-பக்கம் 82 குறிப்பு

‡ பொது மகளிரின் மனம் இருளுக்கு உவமை:-
" உள்ளம் புதையவே வைத்த பொது மகளிர் தங்கள்
இதையமே போன்ற திரா'- நளவெண்பா. சுயம்வர. 113

× இந்த அடி - " சோமாஸ் கந்த மூர்த்தியை"- நினைவூட்டுகின்றது.

○ "குருகு பெயர்க்குன்றம் கொன்ற நெடு வேலே"
- சிலப்பதி. குன்றக் குரவை

'குருகு பெயர்பெற்ற கனவட சிகரி'- வேடிச்சி. வகுப்பு
'குருகு பெயர்க் குன்றம் கொன்றோன்' - மணிமே. 5-13

மழலைச் சொற்களை உடைய திருவாயை உடைய குருபர மூர்த்தியே! ஆறெழுத்துக்கு உரியவனே! நேர்மை கொண்ட நெறி தவறாத வடிவத்தனே (அல்லது) அரூபா - வடிவே இல்லாதவனே! (அல்லது) கோடா ரூபா- கோடானு கோடி-பலகோடியான உருவத்தனே! அருவத்தனே! (பார் ஈ) உலகை ஈந்தவனே!' (படைத்தவனே!) (சதம்) நூறு வேள்வி - நூறு அசுவமேத யாகங்களை முடித்தவனும்,

குலிசாயுதத்தை ஏந்தினவனுமாய - அரசன் - இந்திரனுடைய (பொன்) உலகைக் காத்தருளின தலைவனே! தேவனே! (செவ்) வேளே! தேவர் பெருமாளே! (நீ மீள் என வேணும்)

## 1065.

(எங்கள் வீட்டுக்கு) வருவீர்களாக என்று அழைக்கும் (விரகர்) சாமர்த்தியசாலிகள் - தந்திரக்காரிகள், கண்கள் வாளோ, வேலோ, சேல் மீனோ, மான் விழியோ என்னும் படியான மாதர்கள் -

(இவர் தம்) மனம் எவ்வளவு இருள் சூழ்ந்திருக்கின்றதோ அவ்வாறு இருள் சூழ்ந்த - கருநிறம் உள்ள - கூட்டமான கூந்தலானது (வானோ) கரிய மேகமோ, காடோ, அழிதலிலாத திருமாலின் (கரிய) வடிவம் தானோ (என்றும்),

உண்ணத்தக்க பாற்கடலில் உள்ளதும், நறுமணம் நிறைந்தது மான பாலோ, தேனோ, வெல்லமோ, தேவர்களிடம் உள்ள அமுதம் தானோ -

பவளம் போலச் சிவந்த வாயில் நின்று எழும் குளிர்ந்த (மொழி) பேச்சுக்கள் (எனா) என்றும், (கவி பாடா) பாட்டுக்களைப் பாடி அடி நாயாகிய நான் ஈடேறாமலே அழிந்து போவேனோ!

சமீபத்தில் பார்வதி மனமுருகிக் கருதி நோக்க, ஒரு கல்லால மரத்தின் கீழே வீற்றிருப்பவரான சிவபிரானது செல்வனே! கோகோ என்று (அசுரர்கள்) அலறும்படிச் சென்று -

அசுரர்கள் அலறிக் கூச்சலிடவும், கடல் தீப்பட்டு எரியவும், 'ஹா ஹா! சூரா! போகாதே - (மீள்) இப்படி மீண்டு வா' என்று அவன் பின் ஓடிக் -

குருகுபேர் - கிரவுஞ்சம் என்னும் பேரைக் கொண்ட மலையூடுருவச் செலுத்தின *கூரிய வேலாலும், ஒப்பற்ற வாளாலும் போர் செய்து

குலிசாயுதத்தை ஏந்தின (அரசன்) இந்திரனுடைய உலகைக் காத்தருளின தலைவனே! தேவனே! வேளே! தேவர் பெருமாளே!

(ஈடேறாதே ஒழிவேனோ)

---

* வாளாலே வேலாலே பொருதது:-

சீராவாலே வாளாலே வேலாலே சேதித்திடும் வீரா"

- திருப்புகழ் 1045

## 1066. ஆண்டருள

தனன தாத்தன தனன தாத்தன
தானா தானா தானா தானா தனதான

மறலி போற்சில நயன வேற்கொடு
மாயா தோயா வேயார் தோளார் மறையோதும்-
வகையு மார்க்கமு மறமு மாய்த்திட
*வாறா ராயா தேபோ மாறா திடதீர;
விறலு மேற்பொலி அறிவு மாக்கமும்
வேறாய் †நீரே றாதோர் மேடாய் வினையூடே-
விழுவி னாற்கனை யெழும தாற்பெரு
வீரா பாராய் வீணே மேவா தெனையாளாய்;
‡ மறலி சாய்த்தவ ரிறைப ராக்ரம
மால்கா ணாதே மாதோ டேவாழ் பவர்சேயே-
மருவி லாத்திரு வடிக X னாட்டொறும்
வாயார் நாவால் மாறா தேயோ தினர்வாழ்வே;
குறவர் O காற்புன அரிவை தோட்கள
கோடார் மார்பா சூர்வே லாலே அசுரேசர்-
குலைய மாக்கட லதனி லோட்டிய
கோவே தேவே வேளே வானோர்
பெருமாளே (72)

---

* வாறு = வாய்ப்பு: அடையத்தக்க பேறு.

†" ஏறாத பெருந்திடர் ஏறிட நின் தங்கும் கருணைப் பெரு வெள்ளம் இடத் தகுமோ" - பெரியபுரா. திருநாவு 72

‡ மறலி சாய்த்தவர் - பாடல் 399-பக்கம் 510 குறிப்பு

X நாட்டொறும் = நாடோறும்.

O கால் - இடப்பொருள் உருபு

" கண் கால் கடையிடை" - நன்னூல் சூ 302

கால் - வனம் - சூடாமணி - குறவர் வாழ்ந்திருந்த காட்டில் எனவும் பொருள் காணலாம்.

# 1066.

(மறலி போல்) யமனை ஒப்பதான (நயன வேற் கொடு) கண் என்னும் வேலாயுதத்தால், மாயா - காம மயக்கில் - மனம் (தோயா) - (தோய்ந்து) - முழுகி, அல்லது - (மாயா) (மாய்ந்து) - மனம் அழிந்து, (தோயா) - (காமத்தில்) தோய்ந்து, (வேயார்) மூங்கில் போன்ற (தோளார்) பெண்களைப் பற்றிய (மறை ஓதும்) காம சாத்திரத்தை (கொக் கோக சாத்திரத்தை) (ரகசிய நூலைப்) படிக்கும்-

(வகையும்) குணத்தையும், (மார்க்கமும்) மனப் போக்கையும் (மறமும்) அதனால் வரும் பாவத்தையும் (மாய்த்திட) போக்கவல்ல - அழிக்கத் தக்க, (வாறு) வாய்ப்பு - வழி - பேறு (ஆராயாதே) இன்னதென்று ஆராயாமல், போம் ஆறா போகின்ற (பழைய) வழியிலேயே (நான்) போய் - (அதனால்) திடம் தீரம் - மனோதிடமும், தைரியமும் -

(விறலும்) வீரமும் - வலிமையும் (மேல் பொலி அறிவும்) மேம்பட்டு விளங்கும் அறிவும், (ஆக்கமும்) செல்வமும் (எல்லாம்) வேறுபட்டு - என்னை விட்டு விலகி - நீர் ஏற முடியாத மேடு எப்படியோ அப்படி எனது நிலை -நல்வினைக்கு எட்டாத மேடாய் (வினைகளுக்கு இடையே - நான்)

(விழுவினால்) விழுவதால் - (களை எழுமதால்) அதனால் (ஓயாது பிறப்பிறப்பு என்னும்) களைப்பு உண்டாவதால் பெரிய வீரனே! (பாராய்) (என்னைக்) கண் பார்த்தருளுக! நான் வீணாக (மேவாது) இவ்வுலகில் காலம் கழித்து இராமல், என்னை ஆண்டருளுவாயாக;

(யமனை உதைத்து)ச் சாய்த்தவர் - விழச் செய்தவர், இறைவர், வீரம் பொருந்திய திருமாலாலும் காணப் படாதவராய்த், தாய் - பார்வதியுடனே வாழ்பவர் - ஆகிய சிவனது குழந்தையே!

மாசு - குற்றம் இல்லாத (உனது) திருவடிகளை நாள்தோறும் வாயிலுள்ள நாவினால் தவறாமல் ஓதுபவர்களின் செல்வனே!

(குறவர் கால்) குறவர்களிடத்தே (வாழ்ந்த) (புன அரிவை) தினைப்புனம் காத்த மாது - வள்ளியின் தோளும், பருத்த (கோடு) மலை போன்ற கொங்கையும் சேர்ந்துள்ள திருமார்பனே! கூரிய வேலாயுதத்தால் அசுரர்களின் தலைவர்களாம் சூராதியர்-

அழிந்துபட அவர்களைப் பெரிய கடலிடையே ஓட்டி வெருட்டிய தலைவனே! தேவனே! வேளே! தேவர்கள் பெருமாளே! (எனை ஆளாய்)

## 1067. தரிசனம் தர

தனன தனன தனன தனன
தனன தனன தனதான

குருதி யொழுகி யழுகு மவல
குடிலை யினிது புகலாலே-
குலவு மினிய கலவி மகளிர்
கொடிய கடிய விழியாலே;
கருது மெனது விரக முழுது
கலக மறலி அழியாமுன்-
கனக மயிலி னழகு பொழிய
கருணை மருவி வரவேணும்;
*பரிதி சுழல மருவு கிரியை
பகிர எறிசெய் பணிவேலா-
†பணில வுததி யதனி லசுரர்
பதியை முடுக வரும்வீரா,
‡ இரதி பதியை யெரிசெய் தருளு
மிறைவர் குமர முருகோனே-
இலகு கமல முகமு மழகு
மெழுத வரிய பெருமாளே (73)

## 1068. ரசவாத வெறி நீங்க

தனன தனன தனன தனன
தனன தனன தனதான

துயர மறுநின் வறுமை தொலையு
மொழியு மமிர்த சுரபானம்-
சுரபி குளிகை யெளிது பெறுக
துவனு மெமது பசிதீரத்;

---

* கிரவுஞ்சன் என்னும் அசுரன் பல மாயைகள் செய்தான்:
"வெற்பினைப் புணரியாக்கும், பானுவை மதிய மாக்கும்,
மதியினைப் பகலாச் செய்யும்"- கந்தபுரா. 2-24-2

அகத்தியர் தெற்கு நோக்கி வந்தபொழுது இவன் ஒரு மலையாக நின்று அவரை அச்சுறுத்தினன். அவர் இவனை நீ மலையாகவே நின்று முருகன் கை வேலால் மாளக் கடவாய் எனச் சபித்தனர். (தொடர்ச்சி பக்கம் 161 பார்க்க)

## 1067.

ரத்தும் ஒழுகி, அழுகிப்போகும் (அவல குடிலை) துன்பத்துக்கு இடமான குடிசை (இந்த உடலை) இனிமையாகப் பேசும் புகலாலே - சொற்கள் கொண்டு

(குலவி) நெருங்கி உறவாடி இனிய புணர்ச்சியின்பம் தரும் மகளிருடைய கொடிதானதும் கடுமையானதுமான கண்ணாலும் -

(கருதும்) (கலவியே ஞாபகமாக) எண்ணுகின்ற எனது (விரகம்) காம இச்சை எல்லாவற்றையும் - மறலி என்னுடன் போர்க்கு எழும் யமன் அழிப்பதற்கு முன்பாக -

பொன் மயிலின்மேல் (உனது) அழகு பொலிந் தொழுக அல்லது மயிலின் அழகு பொலிய - (நீ) கருணை வைத்து வந்தருள வேண்டும்;

சூரியன் சுழற்சி (கலக்கம்) அடையும்படி யிருந்த கிரவுஞ்ச மலை பிளவு படச் செலுத்தின தொழிலமைந்த வேலனே!

சங்கங்கள் உள்ள (உததி அதனில்) கடலிலே (அசுரர் பதியை) அசுரர்களின் தலைவனாம் சூரனை (முடுக வரும்) ஓட்டி வெருட்ட வந்த வீரனே!

ரதி தேவியின் கணவனாம் மன்மதனை எரித்தருளிய இறைவர் (சிவனது) குமாரனே! முருகனே!

விளங்கும் தாமரையன்ன திருமுகமும், அதன் அழகும் - எழுதுதற்கு (அரிதான) முடியாதவையான - பெருமாளே!

(வரவேணும்)

## 1068.

துன்பமெல்லாம் ஒழியும், உனது தரித்திரமும் நீங்கும், சொல்லப்படுகின்ற அமுதமாகிய தேவர் (பருகும்) உணவும்,

(சுரபி) காமதேனுவும், (குளிகை) உலோகங்களைப் பொன்னாகவல்ல மந்திர சக்தியுள்ள மாத்திரைகளையும் (எளிது பெறுக சுலபமாக நீ பெற முடியு ம்- (துவளும்) வாடுகின், எம்முடைய பசி அடங்கும்படியாக -

---

" நின் தொன்மை நீங்கி நீள் மலையாகி ஈண்டே நின்று.. ..
செவ்வேள் வேற்படை தன்னிற் பின்னாள் விளிகுதி
விரைவின் என்றான்"- கந்தபுரா 2-24-11, 12.

† சூரனைக் கடலில் ஓட்டியது - பாடல் 1066-அடி 7,8 பார்க்க

‡ மன்மதனை எரித்தது - பாடல் 399-பக்கம் 510 குறிப்பு.

தயிரு மமுது மமையு மிடுக
சவடி கடக நெளிகாறை-
தருக தகடொ டுருக *எனுமி
விரகு தவிர்வ தொருநாளே;
உயரு நிகரில் சிகரி மிடறு
முடலு மவுணர் நெடுமார்பும்-
உருவ மகர முகர திமிர
வுததி யுதர மதுபீற,
அயரு மமரர் சரண நிகள
முறிய எறியு மயில்வீரா-
அறிவு முரமு மறமு நிறமு
மழகு முடைய பெருமாளே (74)

---

* இந்தப்பாடலின் முதல் நான்கு அடிகள் - 'சித்து வகுப்பின்' கருத்தைத் தழுவுகின்றன - சித்து வகுப்பில் 'எமக்குப் பச்சிலை முதலியவைகளைக் கொண்டு ரசவாதம் செய்யத் தெரியும்; உன்னிடம் இருக்கும் பழைய நகை வகைகள், பித்தளை சாமான், பணம் முதலிய எல்லாவற்றையும் தருக, நான் என் ரசவாத சக்தியால் வெகுகோடி பொன் உண்டாக்கி உனக்குத் தருவேன். அது கொண்டு ஏழு நிலை மாட வீடு நீ கட்டிக் கொள்ளலாம். நான் பார்வதி கலியாண தினத்தன்றுதான் உணவு கொண்டேன். இப்போது எம் பசி தீர அமுது படை; நல்ல கறிகாய், நிரம்ப நெய், பொரியல், பால், தேன், கறி வகை, பழ வகை, வெற்றிலை பாக்கு - இவையெலாம் எமக்குக் கொடு; அங்ஙனம் கொடுத்து நீ சுகமாய் இரு" - என வருகின்றது. அதே கருத்தில் இந்த 1068 - ஆம் பாடலில் 'எனது பசி தீர தயிரமுது கொடு; பழைய நகைகளைக் கொடு; நான் ஒரு மந்திரத் தகடு. (தாயித்து) தருகிறேன்; அதனால் உன் துயரம், வறுமை எல்லாம் தீரும். தேவாமிர்தம், காமதேனு இவையெலாம் எளிதிற் கிடைக்கும்' என்கின்றார் சித்து வகுப்பில் ரசவாதம் முதலிய சித்து செய்பவர்கள் சித்தர்கள் அல்ல. உண்மையான பிரசித்த சித்தர்கள் முருகனது திருப்புகழைக் கற்பவர்களே என்கின்றார்.

" எருக்கிலை முருக்கிதழ். . அகத்தி தமரத்தை மதமத்தமொடு
பீத்திகை, வகை வகை கொண்டு ஒரு மண்டலம்
மோரொடு ஊறவை; வாத(ம்) நல்வழி அனேகம். .
வளையல் குழை பீலி காவாழி தன்டை... பாட்டி புதைத்த
குடப் பணம்... கொடு வந்து சொரிந்து குவாலிடு. .

தயிர் சோறு (அமையும்) (எனக்குப்) போதுமானது; (இடுக) அதைத் தந்து உதவுக: (அன்னம் இடும் இந்த உன் உதவிக்கு ஈடாக நான் ரசவாதம் செய்து உனக்குத் தரப்போகும் பொன் கொண்டு நீ) சவடி - பொற் சரடுகளிற் கொத்தாக அமைந்த கழுத்தணி வகை, (அல்லது காதணி வகை), கடகம் - (பொன்) கங்கணம் கைவளை, நெளி - ஒருவகை (பொன்) மோதிரம், காறை கழுத்தணி - இவை தமைத்

தரவல்ல (தகடு) தாயித்து மந்திரத் தகட்டினை (நான் தருவேன் நீ) (உறுக) பெற்றுக்கொள் - என்று கூறும் - (இவ்வகையான) (விரகு) தந்திர மொழிகளை விலக்குவதான - மொழிகளினின்றும் விலகுவ-தான-ஒருநாள் எனக்குக் கிட்டுமா! ரசவாதத்தில் மருளா திருக்கும் ஒருநாள் எனக்குக் கிட்டுமா!

உயர்ந்துள்ளதும், தனக்கு ஒப்பில்லாததுமான (சிகரி) கிரவுஞ்சத்தின் (மிடறும்) நெஞ்சும், உடலும், அசுரர்களின் பெரிய மார்புகளும்

ஊடுருவும்படியும், மகர மீன் உலவுவதும், (முகரம்) பேரொலி செய்வதும், (திமிரம்) இருண்டுள்ளதுமான (உததி) கடலின் (உதரம்) வயிறு - உட்பாகம் (பிற) கிழியவும்,

சோர்வடைந்திருந்த தேவர்களின் (சரணம்)காலிலிருந்த (நிகளம்) விலங்கு (முறிய) உடைபட்டு ஒழியவும், செலுத்தின (அயில் வீரா) வேல் வீரனே!

அறிவும், (உரமும்) வலிமையும், (அறமும்) தரும நெறியும், (அல்லது மறமும் - வீரமும்), (திறமும்) ஒளியும், அழகும் உடைய பெருமாளே!

(விரகு தவிர்வ தொரு நாளே)

---

சமும் (பொன்) வெகுகோடி யான் ஈந்திட ஏழு நிலை

மாடம் நீ மேய்ந்து கொள்" - என்றும்,

" இறைவர் குன்ற மாளை மணமகிழ்ந்த நாளில்.. உணவு

கொண்டதாகும் எமது பசி தீர - அமுது படை... ஈக

பாக்குடன் வெற்றிலை .. யாரும் ஏத்த இனிச் சுகமுற்றிரு"

- என்றும்.

" வேலன் வாய்த்த திருப்புகழ் கற்றவர் சீலம் ஏந்திய சித்த

ப்ரசித்தரே" - என்றும் வருவன காண்க. (சித்து வகுப்பு)

இந்த 1068-ஆம் பாடலிலும் ரசவாத சித்து என்கின்ற மருள் ஆசை எனக்கு வேண்டாம் என்கின்றார் அருணகிரியார். இந்தக் கருத்தையே-

" வரதாமணி நீ என ஓரில் வருகா (த) து எதுதான் அதில் வாராது; (இ) ரதாதிகளால் நவலோகம் இடவே கரியாம்; இதில் ஏது" (பயன்) - என்றார் பிறிதொரு பாடலில் (பாடல் 192).

## 1069. திருவடியைத் துதிக்க

தனன தனன தனன தனன
தனன தனன தனதான

பணிகள் பணமு மணிகொள் துகில்கள்
பழைய அடிமை யொடுமாதும்-
பகரி *லொருவர் வருக அரிய
பயண மதனி லுயிர்போகக்,
குணமு மனமு முடைய கிளைஞர்
குறுகி விறகி லுடல்போடாக்-
கொடுமை யிடுமு னடிமை யடிகள்
குளிர மொழிவ தருள்வாயே;
இணையி லருணை பழநி கிழவ
இளைய இறைவ முருகோனே-
எயினர் வயினின் முயலு மயிலை
யிருகை தொழுது புணர்மார்பா;
அணியொ டமரர் பணிய அசுரர்
அடைய மடிய விடும்வேலா-
அறிவு முரமு மறமு நிறமு
மழகு முடைய பெருமாளே (75)

## 1070. கருணை பெற

தந்த தனன தந்த தனன
தந்த தனன தனதான

மைந்த ரினிய தந்தை மனைவி
மண்டி யலறி மதிமாய-
†வஞ்ச விழிகள் விஞ்சு மறலி
வன்கை ந்ணி லுறுபாசந்,
தந்து வளைய ..தி யறிவு
‡தங்கை குலைய உயிர்போமுன்-
தம்ப முனது செம்பொ னடிகள்
தந்து கருணை புரிவாயே

* 'ஒருவர் வருக அரிய பயணம்' - இதை 'மரண யாத்திரை' - என 1064- ஆம் பாடலிற் குறித்தார்.

(தொடர். பக். 165)

## 1069.

ஆபரணங்கள், பணம், அணியும் ஆடைகள், பழைய - பழகி வந்த அடிமை ஆள்கள், மனைவி -

(பகரில்) சொல்லப்போனால் இவர்களில் ஒருவரும் - இவைகளில் ஒன்றும் - கூட வருவதற்கு [a]அருமையான - முடியாததான பயணம் (மரண யாத்திரையில்) உயிர் பிரிய -

நல்ல குணமும் நல்ல மணமும் கொண்ட உறவினர் ஒன்று கூடி அடைந்து, விறகினிடையே (இந்த) உடலைப் போட்டு -

(தீயிடும் கொடிய செயலைச் செய்வதற்கு முன்பாக, அடிமையாகிய நான் உனது திருவடிகளை என் உள்ளம் குளிரத் துதிக்கும் படியான பண்பைத் தந்தருளுக.

(பெருமையில்) தனக்கு நிகரில்லாத திருவண்ணாமலை, பழநி என்னுந் தலங்களுக்கு உரியவனே! (என்றும்) இளையவனே! இறைவனே! முருகனே!

(எயினர் வயினின்) வேடர் இடத்தே (முயலும்) தினை காக்கும் தொழிலில் முயன்றிருந்த மயிலனைய வள்ளியை இரண்டு கை கொண்டும் கும்பிட்டு அணைந்த திருமார்பனே!

வரிசையாக நின்று தேவர்கள் பணிந்து வணங்க, அசுரர்கள் யாவரும் இறக்கும்படிச் செலுத்தின வேலாயுதனே!

அறிவு, வலிமை, தரும நெறி, (வீரம்) ஒளி அழகு - இவைதமை உடைய பெருமாளே! (அடிகள் குளிர மொழிவ தொருநாளே)!

## 1070.

மக்கள் (பிள்ளைகள்), இனிமை தரும் தந்தை, மனைவி இவர்களெல்லாம் கூடி நெருங்கிக் கூச்சலிட்டு அழுது, அறிவு அழியும்படி.

வஞ்சனை எண்ணத்தைக் காட்டும் கண்கள் முன்தோன்றி விளங்கும் யமன் (தனது) வலிய கையில் உள்ள பாசக் கயிற்றை

வீசி எறிந்து (என் உயிரை) வளைக்க, அதனால் என் (புந்தி) மனமும், அறிவும் ஒரு வழியில் தங்காமல் அலைச்சல் கொள்ள, உயிர் பிரியும் முன்பாக -

(தம்பம்) பற்றுக் கோடாகவுள்ள உன்னுடைய செவ்விய (பொன்போல அருமை வாய்ந்த) அழகிய - திருவடிகளை எனக்குத் தந்து நீ கருணை புரிவாயாக;

---

† வஞ்ச விழிகள் கொண்டவன் யமன்:- " வஞ்ச விழி சண்டன்" திருப்பழநி வகுப்பு. ‡ தங்கை = தங்குதல்.

[a]அருமை - இன்மைப் பொருளில் வந்துளது. (திருக்குறள் 7 உரை) "வருக அரிய பயணம்"- திரும்பி வர முடியாத பயணம் - என்பதும் தொனிக்கும்.

*மந்தி குதிகொ ளந்தன் வரையில்
மங்கை மருவு மணவாளா
மண்டு மசுரர் தண்ட முடைய
அண்டர் பரவ மலைவோனே,
இந்து நுதலு மந்த முகமு
மென்று மினிய மடவார்தம்-
இன்பம் விளைய அன்பி னணையு
†மென்று மிளைய பெருமாளே (76)

## 1071. முருகா எனக்கூற

தனனா தனத்த தனனா தனத்த
தனனா தனத்த தனதான

ஒழுகூ னிரத்த மொடுதோ லுடுத்தி
உயர்கால் கரத்தி னுருவாகி-
ஒருதாய் வயிற்றி னிடையே யுதித்து
உழல்மாய மிக்கு வருகாயம்,
பழசா யிரைப்பொ டிளையா விருத்த
பரிதாப முற்று மடியாமுன்-
பரிவா லுளத்தில் முருகா எனச்சொல்
பகர்வாழ் வெனக்கு மருள்வாயே;
எழுவா னகத்தி லிருநாலு திக்கில்
இமையோர் தமக்கு மரசாகி-
எதிரேறு மத்த மதவார ணத்தில்
இனிதேறு கொற்ற முடன்வாழுஞ்
செழுமா மணிப்‡பொ னகர்பாழ் படுத்து
செழுதீ விளைத்து மதில்கோலித்-
திடமோ டரக்கர் கொடுபோ யடைத்த
சிறைமீள விட்ட பெருமாளே (77)

---

* மந்தி குதிகொள் வரை - வள்ளிமலை -

"தேனைப் பருக மர்க்கட் சமூகம் அமை தொட்டு இறால் எட்டு வரை" - பூத வேதாள வகுப்பு.

† 'என்றும் இளையாய் அழகியாய்'- திரு முருகா. தனிப்பாடல்.

‡ அசுரர் பொன்னுலகைப் பாழ் படுத்தினது - பாடல் 1072 கீழ்க் குறிப்பைப் பார்க்க.

குரங்குகள் குதித்து விளையாடும் அழகிய குளிர்ந்த மலையில் (வள்ளிமலையில் இருந்த) மங்கை - வள்ளி சேர்ந்த மணவாளனே!

நெருங்கி வந்த அசுரர்களுடைய தண்டம்) படை உடைந்து சிதறவும். தேவர்கள் போற்றவும் (அசுரர்களை) எதிர்த்துப் பொருதவனே!

பிறைச் சந்திரன் போன்ற நெற்றியையும். (அந்தம் முகமும்) அழகிய முகத்தையும் கொண்டு என்றும் உனக்கு இனியராயுள்ள (தேவ சேனை - வள்ளி என்னும்) இரு மாதர்களுக்கும் -

இன்பம் பெருகி உண்டாக. (அவர்களை) அன்புடனே அணையும் பெருமாளே! என்றும் இளையோனாய் விளங்கும் பெருமாளே!

(கருணை புரிவாயே)

## 1071.

பரந்துள்ள (ஊன்) மாமிசம், ரத்தம், இவைகளுடன் தோல் கொண்டு மேயப்பட்டு, உயரமாயுள்ள கால்கள், கைகள் இவை-களுடன் ஒரு உருவமாகி

ஒரு தாயினுடைய வயிற்றில் தோற்றம் கொண்டு பிறந்து, அலைச்சலைத் தரும் மாய உணர்ச்சி மிகுந்து வருகின்ற (காயம்) இந்த உடல்-

பழமை அடைந்து, (மூப்பு உற்று) இரைப் பொடு - மூச்சு வாங்குதலால் (இளையா) இளைப்பு - சோர்வு அடைந்து, (விருத்த பரிதாபம்) கிழவன் என்னும் பரிதாப நிலையை அடைந்து, இறந்து போவதற்கு முன்பாக -

அன்பு கலந்த உள்ளத்துடனே "முருகா" என்ற (உனது) திருப் பெயரைக் குறிக்கும் சொல்லை (நான்) சொல்லும்படியான வாழ்வை என்னையும் பொருட்படுத்தி (எனக்கு) அருள்வாயாக;

விளங்குகின்ற (வான் அகத்தில் - விண்ணுலகிலும், (இரு நாலு திக்கில்) எட்டுத் திசையிலும் உள்ள தேவர்களுக் செல்லாம் அரசனாகி -

(அத் தேவர்களுக்கு) எதிரே - அவர்கள் முன்னிலையில் (ஏறும்) விளங்கும் (மத்த வாரணத்தில்) செருக்குள்ளதும், மதம் பொழிவது-மான (வாரணத்தில்) வெள்ளை யானையாம் ஐராவதத்தில் இன்பகரமாக ஏறிவரும் வெற்றி நிலையுடன் வாழ்ந்த

செழுமை வாய்ந்த, அழகிய பொன்னுலகைப் பாழ்படுத்திப், பெருந் தீயிட்டுப் பாழ்படுத்தி, அவ்வூரை மதில் போல வளைத்து,

திடத்துடனே (வலிமையுடன் அரக்கர்கள் கொண்டுபோய்ச் (சிறையிட்ட தேவர்களின்) சிறையை நீக்கி அவர்களை வெளியிட்ட பெருமாளே!

(முருகா எனச் சொல் பகர் வாழ்வு அருள்வாயே)

## 1072. உபதேசம் பெற

தனனா தனத்த தனனா தனத்த
தனனா தனத்த தனதான

கருவாய் வயிற்றி லுருவா யுதித்து
முருகாய் மனக்க வலையோடே-
கலைநூல் பிதற்றி நடுவே கறுத்த
தலைபோய் வெளுத்து மரியாதே;
இருபோது மற்றை யொருபோது *மிட்ட
கனல்மூழ்கி †மிக்க புனல்மூழ்கி-
‡இறவாத சுத்த மறையோர் துதிக்கு
மியல்போத கத்தை மொழியாயே;
அருXமாத பத்தOஅமரா பதிக்கு
வழிமூடி விட்ட தனைமீள-
அயிரா வதத்து விழியா யிரத்த
னுடனே பிடித்து முடியாதே;
திருவான கற்ப தருநா டழித்து
விபுதேசர் சுற்ற மலைகோலித்-

---

* இட்ட கனல் = வளர்த்த மூலாக்கினி

† மிக்க புனல் = மதி மண்டலச் சுத்த கங்கை

"அருணாசலத்தின் உடன் மூழ்கி" — "அமுதக் கடல் மூழ்கி" - எனவருவன காண்க- திருப்புகழ். 790, 867

‡ இறவாத சுத்த மறையோர் -நித்தத்துவம் பெற்ற அகஸ்தியராதி நாதாக்கள். இவர்களைப்" பிறந்து இறவாத சுகத்தில் அன்பர்" —என்றார் 1073-ஆம் பாடலில்.

X ஆதபம் = ஒளி.

O இந்தப் பாடலின் பின் நான்கு அடிகளிற் குறித்த வரலாறு பின் வருமாறு.-

சூரன் திக்கு விஜயம் செய்தபோது விண்ணுலகுக்குச் சென்றான் அப்போது இந்திரன் அவனுக்குப் பயந்து தன் மனைவியுடன் குயில் உருவம் கொண்டு ஓடி ஒளித்துக் கொண்டான் தேவர்கள் எல்லாம் சூரனால் துன்புறுத்தப் பட்டனர். அதனால் - 'பொன்னகர் எங்கணும் பொலிவு மாய்ந்ததே" - கந்த புரா. 2-12-109.

விண்ணுலகில் இருந்த தேவர்கள் சூரனது ஏவல்களைச் செய்யும் பணியில் அமர்ந்தனர்; அதனால் விண்ணுலகம் - அமராபதி - வழி

# 1072.

கருவாகி (ஒருத்தி) வயிற்றில் உருவாகிப் பிறந்து (முருகாய்) இளமைப் பருவத்தை அடைந்து, மனக் கவலையுடனே

படிக்க வேண்டிய கலை நூல்களைப் (பிதற்றி) உண்மை அறிவின்றிக் குழறிப் படித்து, (வாழ்நாளின்) நடுவே கறுத்திருந்த தலை மயிர் (மூப்பு வர) வெளுத்து இறந்து போகாமல் -

(இரு போதும்) காலையிலும் மாலையிலும், மற்றுமுள்ள ஒரு போது (உச்சிப் போது எனப்படும்) உச்சி வேளையிலும் (இட்ட கனல்) சிவயோக நெறியால் வளர்த்த மூலாக்கினியும் மூழ்கியும், சிறந்த மதி மண்டலச் சுத்த கங்கையில் முழுகியும் (சிவயோக நிஷ்டையில் முழுகி ஆழ்ந்திருக்கும்)

நித்தத்துவம் பெற்ற (அகஸ்தியராதி நாதாக்கள் போற்றும் தகுதியை உடைய உப தேசத்தை (எனக்கு) உபதேசித்தருளுக.

அருமை வாய்ந்த (ஆதபத்த) ஒளியை உடைய (அமராபதி) தேவர்களின் ஊருக்குச் செல்லும் வழியை முதலில் மூடி விட்டு, (அதனை) அந்தப் பொன்னுலகை (மீள) மறுபடியும் -

ஐராவதம் என்னும் வெள்ளை யானைக்கு இறைவனாம் (விழி ஆயிரத்தன்) கண்ணாயிரத்தனான இந்திரனை உடனே பிடிக்க முயன்று, அங்ஙனம் பிடிக்க முடியாமற்போன காரணத்தாலே -

லக்ஷ்மீகரம் நிறைந்த (கற்ப தரு) கற்பக விருக்ஷங்களைக் கொண்ட (நாடு அழித்து) அந்த - நாட்டைத் (தேவருலகை)த் (தீயிட்டுப்) பாழ் படுத்தி, (விபுதேசர்) தேவ சிரேஷ்டர்களை (அவர்களுடைய) சுற்றம் அவை சுற்றத்தாருடன் (கோலி) வளைத்து ஒருங்கே பிடித்து

---

மூடிக் கிடந்தது அதன் பின் இந்திரன் மனைவி இந்திராணியைச் சூரனது தங்கை அஜமுகி எடுத்துச் செல்ல முயன்ற போது, அஜமுகியின் கரத்தை மகாசாளர் வெட்டி விட - அவள் சூரனிடம் அழுது சென்று முறையிட - சூரன் ஏவலால் அவன் மகன் பானு கோபன் விண்ணுலகுக்கு வந்து படையுடன் அதைச் சூழ்ந்து கொள்ள, இந்திரன் ஒளித்துக் கொண்டமையால் அவனைப் பிடிக்க முடியாமல் அவன் மகன் சயந்தனாதி தேவர்களைப் பிடித்துச் சிறையில் இடுவித்தனன். பொன்னுலகமும் நெருப்பிடப் பட்டுப் பாழ் பட்டது -

"பொன்னந் திரு நகர் எல்லை எங்கும் புத்தழல் கொளுவ

வோடும் பொள்ளெனப் பொடிபட் டன்றே"

"சயந்தன் தன்னை அண்டரைப் பிடர் தொட்டுந்தி .. வல்லி

பூட்டி அருஞ் சிறைக் களத்தில் உய்த்தார்"

- கந்த புரா. 2-43-94,104, 105

திடமோ டரக்கர் கொடுபோ யடைத்த
சிறைமீள விட்ட பெருமாளே (78)

## 1073. பிறவி அற

தனத்த தந்தனம் தனத்த தந்தனம்
தனத்த தந்தனம் தனதான

*புரக்க வந்தநங் குறக்க ரும்பைமென்
புனத்தி லன்றுசென் றுறவாடிப்
புடைத்த லங்க்ருதம் படைத்தெ ழுந்ததின்
புதக்கு ரும்பைமென் புயமீதே;
செருக்க நெஞ்சகங் களிக்க அன்புடன்
† திளைக்கு நின்திறம் புகலாதிந்-
த்ரியக்க டஞ்சுமந் தலக்கண் மண்டிடுந்
தியக்க மென்றொழிந் திடுவேனோ;
குரக்கி னங்கொணர்ந் தரக்கர் தண்டமுங்
குவட்டி லங்கையுந் துகளாகக்
கொதித்த கொண்டலுந் த்ரியக்ஷ ருங்கடங்
கொதித்து மண்டுவெம் பகையோடத்;
துரக்கும் விம்பகிம் புரிப்ர சண்டசிந்
துரத்த னும்பிறந் திறவாத
சுகத்தி லன்பருஞ் செகத்ர யங்களுந்
துதிக்கு மும்பர்தம் பெருமாளே (79)

---

*உலகோர்க்கு - "வள்ளிச் சன்மார்க்கம்" - உய்யும் வழியைக் காட்டுதலால் - "புரக்க வந்த நம் குறக் கரும்பு"- என்றார்,

வள்ளிச் சன்மார்க்கத்தின் விளக்கத்தை - பாடல் 317-பக்கம் 288 கீழ்க் குறிப்பிற் காண்க

† திளைக்கும் நின் திறம் -

வள்ளியை வலிய ஆட்கொண்ட கருணைத் திறம். "யான்" கொட்கு மறு நீங்கிப் பத்தி செய்வோர்க்கு ஏவல் செய்யும் பணியாளன் ஈசன் என்னும் இன்ப நிலை காட்டுதற்கே" முருகன் வள்ளியை விரும்பினதும் வணங்கினதும்; அடியார்க்கு எளியனாம் அத்தன்மையால் முருகன் புகழ் மேலோங்கியது. இதனைத் " திருப்புகழ்க் குயிர்ப் பனித்து எழிற்றினைக் கிரிப்புறத்து உறை வேலா" - என்றார் பாடல் 253-ல் (பக்கம் 133 கீழ்க் குறிப்பைப் பார்க்க); பாடல் 1074 அடி 3-ம் பார்க்க.

வலிமையுடன் அரக்கர்கள் கொண்டுபோய் அடைத்த சிறையினின்றும் (அந்தத் தேவர்களை) மீட்டு வெளிவிட்ட பெருமாளே!

(போதகத்தை மொழிவாயே)

## 1073.

நம்மை ஆண்டு ரக்ஷிக்க வந்த நமது குறவர் குலக் கரும்பாம் வள்ளியை மென் புனத்தில் (மென்மை - அமைதி வாய்ந்த) தினைப் புனத்துக்கு அன்று ஒரு நாள் (நீ) போய் அவளுடன் (உறவாடி) நட்புப் பேச்சுக்களைப் பேசி - (அவளுடைய)

பெருத்துப் பருத்து அலங்காரம் - சிங்காரம் - விளங்க எழுந்துள்ளதும், வலிமை, (புதுமை) அற்புத எழில் வாய்ந்ததுமான - (தென்னங் குரும்பை) இளநீர் போன்ற (கொங்கை மீதும்), மெல்லிய தோள்கள் மீதும்

(செருக்க) (காம) மயக்கம் கொள்ளும்படி (நெஞ்சகம்) உள்ளத்தினுள்ளே (களிக்க) மகிழ்ச்சி கொள்ள, அன்புடனே அவளுடன் (தினைக்கும்) இடைவிடாது பயின்ற உனது (திறம்) மேன்மைக் குணத்தை (பராக்ரமத்தை)ப் புகலாது - சொல்லிப் புகழாமல், (இந்திரிய)

(இந்திரிய - மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்பொறிகளைக் கொண்ட (கடம்) உடம்பைச் சுமந்து (அலக்கண்) துக்கம் நெருங்கி நிரம்பும் (தியக்கம்) கலக்கம் என்று தொலைந்து இருப்பேனோ!

குரங்கின் கூட்டங்களைத் (தன்னுடன்) கொண்டு வந்து அரக்கர்களுடைய (தண்டமும்) படைகளும், மலைகளைக் கொண்ட இலங்கையும் பொடியாகும்படிக்

கோபித்து எழுந்த மேக நிறங்கொண்ட திருமாலும், (த்ரி அக்ஷரும்) மூன்று கண்களைக் கொண்ட சிவனும், (கடம்) மத நீர் கொதிப்புற்று நெருங்கி வந்த கொடிய பகைவர்கள் ஓடும்படித்

(துரக்கும்) வெருட்டும் ஒளிவாய்ந்ததும், தந்தத்திலிடும் பூண் கொண்டதும், (ப்ரசண்ட) வீரம் வாய்ந்ததுமான (சிந்துரத்தனும்) ஐராவதம் என்னும் யானைக்கு அதிபனாகிய இந்திரனும், *பிறந்து இறவாத - நித்தத்துதவம் பெற்றவர்களாய் -

நித்ய சுகத்தில் இருக்கும் அன்பர்களாம் (அகஸ்த்தியராதி) நாதர்களும், (செகத்ரயங்களும்) மூவுலகத்தாரும் துதி செய்து போற்றும் பெருமாளே! தேவர்களின் பெருமாளே!

(தியக்கம் என்றொழிந்திடுவேனோ)

---

* இவர்களை "இறவாத சுத்த மறையோர்"- என்றார் 1072 - ஆம் பாடலில்

## 1074. கோணல் புத்தி ஒழிய

தனத்த தந்தனம் தனத்த தந்தனம்
தனத்த தந்தனம் தனதான

பெருக்க நெஞ்சுவந் *துருக்கு மன்பிலன்
ப்ரபுத்த னங்கள்பண் பெணுநாணும்-

பிழைக்க வொன்றிலன் சிலைக்கை மின்டர்குன்
றமைத்த பெண்தனந் தனையாரத்,

திருக்கை கொண்டணைந் திடச்செல் கின்றநின்
† திறத்தை யன்புடன் தெளியாதே-

சினத்தில் மண்டிமின் டுரைக்கும் வம்பனென்
திருக்கு மென்றொழிந் திடுவேனோ;

தருக்கி யன்றுசென் றருட்க னொன்றரன்
தரித்த குன்றநின் றடியோடுந்-

‡ தடக்கை கொண்டுவந் தெடுத்த வன்சிரந்
தறித்த X கண்டனெண் டிசையோருஞ்;

சுருக்க மின்றிO நின் றருக்க னிந்திரன்
துணைச்செய் கின்றநின் பதமேவும்-

சுகத்தி லன்பருஞ் செகத்ர யங்களுந்
துதிக்கு மும்பர்தம் பெருமாளே (80)

---

* உருக்கு = உருகு. † திறம் - 1073-ஆம் பாடலிற் கூறியதிறம்.
‡ ராவணன் கயிலையை எடுத்தது -
பாடல் 188-பக்கம் 440 கீழ்க்குறிப்பு.
X கண்டன் - வீரன் - " புரங்கள் மூன்றெரித்த கண்டனே
நீல கண்டனே" - திரு இசைப்பா 13-6.
O நின் றருக்கன் = நின்ற அருக்கன்.

# 1074.

(பெருக்கம்) நிரம்ப, நெஞ்சில் மகிழ்ச்சியுற்று, உருகும் அன்பு இல்லாதவன் நான், (ப்ரபுத் தனங்கள்) பெருந் தன்மைக் குணங்கள், (பண்பு) நற்குணங்கள், (எண்ணும்) அறிவு (அல்லது மதிப்பு), (நாணும்) கூச்சம், அல்லது - (எண்ணும் நாணும்) மதிக்கத் தக்க கூச்சம் -

(பிழைக்க) நான் உய்யும் வகைக்கு இவை ஒன்றும் இல்லாதவன் நான், வில் ஏந்திய கையினராய் (மிண்டர்) வலிமை கொண்ட வராய வேடர்களின் (குன்று) மலையாம் வள்ளி மலையில் அமைத்த - தோன்றி வளர்ந்த (பெண்) வள்ளியின் (தனம் தனை) கொங்கையை (ஆர) உள்ளம் ஆர - (உள்ளம்) நிறையக் குளிரத்-

திருக் கைகளைக்கொண்டு (அவளை) அணையச் சென்ற உனது (திறத்தை) மேன்மைக் குணத்தை அன்புடனே (நான்) தெளிந்து உணராமல் -

கோபக் குணமே நிரம்பி, (மிண்டு உரைக்கும்) துடுக்குடனும் செருக்குடனும் பேசும் பேச்சுக்களைப் பேசும் (வம்பன்) பயனற்ற துஷ்டனாகிய நான், எனது (திருக்கும்) கோணலான புத்தி என்று (ஒழிந்திருப்பேனோ) என்று ஒழிந்து நற் புத்தியை அடைவேனோ!

செருக்குடன் அன்று போய் அருட் கண்ணோக்கம் கொண்ட (அரன்) சிவபிரான் (தரித்த) வீற்றிருந்த குன்றும் (கயிலை) மலையை (நின்று) அடி வாரத்தில் நின்று அடியோடு (தனது)

(தடக்கை கொண்டு வந்து) பெரிய கையதனால் எடுத்த-வனாகிய இராவணனுடைய தலையைத் (தறித்த) வெட்டின (கண்டன்) வீரனாகிய திருமாலும், (எண் திசையோரும்) எட்டுத் திக்கில் உள்ளவர்களும்,

(சுருக்கம் இன்றி நின்ற அருக்கன்) சுருக்கம் இல்லாது விரிந்த கிரணங்களை - கொண்டு நின்ற சூரியனும், இந்திரனும், துணையாய் உதவுகின்ற உனது திருவடிகளை விரும்பி நிற்பவர்களான

நித்யசுகவாசிகளான - அன்பர்களும், மூன்று லோகத்தினர்-களும் - போற்றித் துதிக்கும் பெருமாளே! தேவர்களின் பெருமாளே!

(திருக்கு என்றொழிந் திடுவேனோ)

## 1075. வழிபட

தனந்த தானந் தந்தன தனதன தனதான

*இருந்த வீடுங் கொஞ்சிய சிறுவரு முருகேளும்-
இசைந்த வூரும் பெண்டிரு மிளமையும் வளமேவும்,
விரிந்த நாடுங் குன்றமு நிலையென மகிழாதே-
† விளங்கு தீபங் கொண்டுனை வழிபட அருள்வாயே;
‡ குருந்தி லேறுங் கொண்டலின் வடிவினன் மருகோனே-
× குரங்கு லாவுங் குன்றுறை குறமகள் மணவாளா;
○திருந்த வேதந் தண்டமிழ் தெரிதரு புலவோனே-
சிவந்த காலுந் தனடைய மழகிய பெருமாளே (81)

---

* இஃது ஒரு அருமை வாய்ந்த பாடல். ஒரு முருக பக்தன் தனிவழியிற் போய்க்கொண்டிருந்தபோது ஒரு உருவம் தன்னைத் தொடர்ந்து வரக்கண்டு பயந்து செல்லத், தொடர்ந்து வந்த அந்த உருவம் அவன் ஓரிடத்தில் வரும்போது தொடராது நிற்கவும், அந்த இடத்தைத் தாண்டின உடன் அவ்வுருவம் தன்னைப் பின் தொடருவதையும் கண்டு, அவன் சுற்றி வந்து அந்த உருவம் தொடராத இடத்தில் இருந்த மணலை வாரி மடியிற் கட்டிக் கொண்டு செல்ல, அந்த உருவம் பின் தொடராது நின்று விட்டது என்றும், வீடுபோய்ச் சேர்ந்து எடுத்து வந்த அந்த மணலை ஆய்ந்து பார்க்க, அதில் ஒரு ஓலை ஏடு இருக்க, அதில் இந்தப் பாடல் இருக்கக் கண்டு, இப் பாடலை அவன் எப்போதும் சிந்தை செய்து பாராயணம் செய்து வந்தான் என்றும் - தாம் கேள்விப் பட்டதாக என் தந்தையார் கூறக் கேட்டிருக்கின்றேன்.

† தீபம் கொண்டு வழிபடுதலின் சிறப்பை-
" விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஆகும்"
- என்றார் அப்பர். 4-77-3

‡ கண்ண பிரான் குருந்தில் ஏறுவது -
கண்ண பிரான் யமுனையில் நீராடும் மங்கையர்களின் துகிலை எடுத்துக் கொண்டு அதன் கரையிலுள்ள குருந்த மரத்தின் மேலே ஏறுகின்ற வழக்கம் கொண்டிருந்தார்.

ஒரு முறை கம்ஸனால் ஏவப்பட்ட ஒரு அசுரன் கண்ணனை நலிவதற்காக அந்தக் குருந்த மரத்தில் ஆவேசித்திருந்தான். அதை அறிந்த கண்ண பிரான் அந்த மரத்தை முறித்து அசுரனை மாய்த்தனர் என்பது வரலாறு -
" குருந்த மொன் றொசித்தான்" - பெரியாழ்வார். 4-4-7
"குருந்தொசி பெருந்தகையும் நீயும் பிரிந்தனை புணர்ந்தனை"
- சம்பந்தர் 2-30-3.

(தொடர்ச்சி. பக்கம் 175)

# 1075.

நான் வாசம் செய்யும் வீடும், நான் கொஞ்சிப் பழகும் குழந்தைகளும், பொருந்திய சுற்றத்தாரும்

என் மனதுக்கு உகந்த ஊரும், மனைவி முதலிய பெண்டுகளும் எனது இளமையும், செல்வம் நிறைந்த

பரந்துள்ள எனது நாடும், (நாட்டில் உள்ள) மலைகளும் என்றும் (எனக்கு) நிலைத்திருக்கும் என எண்ணி நான் மகிழாமல் -

ஒளி தரும் தீபங்களை ஏற்றி உன்னை வழிபட (எனக்கு) அருள் புரிவாயாக;

குருந்த மரத்தில் ஏறின மேக வண்ணனாம் திருமாலின் மருகனே!

குரங்குகள் உலாவும் குன்றமாகிய (வள்ளி மலையில்) வாசம் செய்த குறப் பெண் வள்ளியின் மணவாளனே!

திருத்தமான முறையில், வேதத்தை இன்பமான தமிழ் மொழியில் (திரு நெறித் தமிழ் எனும் தேவாரமாக) (தெரிதெரு) உலகோர் தெரியத் தந்த (சம்பந்தப் பெருமானாம்) புலவனே!

செம்மை வாய்ந்த திருவடியும் அதில் தண்டையும் அழகு பொலியும் பெருமானே!

(வழிபட அருள்வாயே)

---

" கொல்லையஞ் சாரற் குருந் தொசித்த மாயவன்"

- சிலப்பதி. ஆய்ச். குரவை

" குருந்திடைக் கூறை பணியாய்"- (ஆண்டாள்) திருமொழி. 3-2

"கொங் கலர்ந்த மலர்க் குருந்தம் ஒசித்த கோவலன்"

-(திரு மங்கையார்) 1-8-1

" விரைவினில் வந்தாய்ச்சியர் பொற் கலைகள் வாரி, வெறிய மலர்க் குருந்தேறி நகைத்து நின்றான்" ; "அம்பர மெல்லாம் வாரி, அழகிய குருந்தி னேறும் உம்பர்கள் பெருமான்" - (வரத ராசர் அருளிய பாகவதம் - கூறைகொள் படலம்)

இவ் வரலாற்றின் விரிவை - ஸ்ரீ மு. ராகவையங்கார் அவர்கள் எழுதிய கட்டுரைத் திரட்டு - ஆராய்ச்சித் தொகுதியிற் காண்க; பக்கம் 61-65

X " குரங்குலாவும் குன்று"- வள்ளி மலை -

" மந்தி குதிகொள் அந்தண் வரை" - என்றார் 1070 பாடலில்.

O தமிழ் வேதம் - சம்பந்தர் தேவாரம் - ரிக் வேதம்-

" ருக்கு ஐயம் போக உரைத்தோன்" - கந். அந்தாதி 96

" சுருதித் தமிழ்க் கவி"- பாடல் 280 பக்கம் 196

## 1076. போற்ற

தனந்த தானந் தந்தன தனதல தனதான

கலந்த மாதுங் கன்களி யுறவரு புதல்வோருங்-
கலங்கி டாரென் றின்பமு றுலகிடை கலிமேவி;
உலந்த காயங் கொண்டுள முறுதுய ருடன்மேவா-
உகந்த பாதந் தந்துனை புகழ செய அருள்வாயே;
மலர்ந்த பூவின் மங்கையை மருவரி மருகோனே-
*மறனுசெய் வார்தம் வஞ்சியை மருவிய மணவாளா;
சிலம்பி னோடுங் கிண்கிணி திசைதொறும் ஒலிவீசச்-
சிவந்த காலுந் தண்டையு மழகிய பெருமானே (82)

## 1077. யமன் வரும்போது துயர்கெட வர

தனந்த தானந் தனதன தானன தனதான

இசைந்த †ஏறுங் ‡கரியுரி போர்வையும் எழில்நீறும்
இலங்கு நூலும் X புலியத ளாடையு மழுமானும்,
அசைந்த O தோடுஞ் **சிரமணி மாலையு முடிமீதே-
அணிந்த ஈசன் பரிவுடன் மேவிய குருநாதா;
†† உசந்த சூரன் கிளையுடன் வேரற முனிவோனே;
உகந்த பாசங் கயிறொடு தூதுவர் நலியாதே-
‡‡ அசந்த போதென் துயர்கெட மாமயில் வரவேணும்;
அமைந்த வேலும் புயமிசை மேவிய பெருமானே (83)

---

* மறஞ் செய்பவர்கள் - மறவர் - மலை வேடர்.

† சிவ பிரானுக்கு இடப வாகனமே உகந்த தாதலின்
"இசைந்த ஏறும்" - என்றார்.

"இடபம் உகந் தேறியவா றெனக்கறிய இயம்பேடீ"
- திருவாச. சாழல். 15

"விடையுகந் தேறுதிர்"- சம்பந்தர். 3-124-3

‡ "கரியுரி போர்வை" - பாடல் 286-பக்கம்-210 குறிப்பு.

X" புலித்தோல் ஆடை" - பாடல் 286-பக்கம் 210 குறிப்பு

O" தோடுடைய செவியன்" - சம்பந்தர். 1-1-1

** சிரமணி மாலை -" தலைக்குத் தலை மாலை அணிந்த
தென்னே"- சுந்தரர். 7-4-1

" தலை மாலை தலைக் கணிந்து" - அப்பர். 4-9-1

†† உசந்த = உயர்ந்த. ‡‡ அசந்த - அயர்ந்த.

## 1076.

மனைவியாக நான் கொண்டு கலந்த மாதும், கண்கள் மகிழ்ச்சி யுறப் பெறப்பட்ட குழந்தைகளும் -

கலங்கிடார் (கலக்கம் கொள்ளாது வாழ்வார்கள் என்று எண்ணி இன்பத்துடன் பொருந்தி வாழும் உலகில் - உலக வாழ்க்கையின் (இடை) நடுவே, (கலி மேவி) கஷ்ட நிலையை - வறுமையை (மேவி) அடைந்து -

(உலந்த காயம் கொண்டு) தேய்ந்து அழியும் இந்த உடலுடனும், உள்ளத்தே (மனத்தில்) கொண்ட துயரத்துடனும் (மேவா) மேவி - இருந்து - (உன்னை) விரும்பி (இருக்கும் நாளில்)

(உகந்த) நான் மகிழ்ச்சி கொண்ட (பாதம) உனது திருவடியை எனக்குத் தந்து உன்னை (உரை செய) புகழ்ந்து உரைக்க அருள் புரிவாயாக;

மலர்ந்த (செந்தாமரைப்) பூவில் வாசம் செய்யும் (மங்கையை) மங்கை - இலக்குமியைச் சேர்ந்த (அரி) திருமாலின் மருகனே!

(மறம்) கொலைத் தொழிலாகிய கொடுமைகளைச் செய்பவர் களாகிய வேடர்களுக்கு உரிய (வஞ்சி) வள்ளிப் பெண்ணை அணைந்த மணவாளனே!

சிலம்புடன் கிண்கிணியும் திசைதோறும் ஒலி முழங்கி வீசச் சிவந்த திருவடியும், தண்டையும் அழகு விளங்கும் பெருமாளே! (உனை உரை செய அருள்வாயே)

## 1077.

(தம் மனதுக்கு) உகந்த ரிஷப வாகனமும், யானைத் தோல் போர்வையும், அழகிய திருநீறும் -

விளங்கும் பூணூலும், புலித்தோல் ஆடையும் மழுவும், மானும்,

அசைந்து விளங்கும் தோடும், (சிர மணி மாலையும் - மணி சிர மாலையும்) அழகிய தலை மாலையும் - முடியின் மேலே-

அணிந்துள்ள (ஈசன்) சிவபிரான் (பரிவுடன்) அன்புடன் விரும்பின குரு மூர்த்தியே!

உயர்ந்த சூரன் அவனுடைய சுற்றத்தாருடன் வேரற - அடியோடு தொலையக் - கோபித்தவனே!

தங்களுக்கு (உகந்த) மகிழ்ச்சி தரும் பாசக் கயிற்றுடன் (யம) தூதுவர் (என்னை) வருத்தாமல் -

நான் சோர்வு உற்றிருக்கும் சமயத்தில் என் துயரம் ஒழிய (உனது) அழகிய மயில் வரவேண்டும் - அழகிய மயில் மீது (நீ) வரவேணும்;

அழகாய் அமைந்து விளங்கும் வேலைத் திருப் புயத்தின் மீது வைத்துள்ள பெருமாளே! (துயர்கெட மாமயில் வரவேணும்)

## 1078. அகப்பொருள் - நற்றாயிரங்கல்

தனதன தனன தனதன தனன
தனதன தனன தனதான

*திரிபுர மதனை யொருநொடி யதனி
லெரிசெய்த ருளிய சிவன்வாழ்வே
சினமுடை யசுரர் மனமது வெருவ
மயிலது முடுகி விடுவோனே;
பருவரை யதனை யுருவிட எறியு
மறுமுக முடைய வடிவேலா-
†பசலையொ டணையு மிளமுலை மகளை
மதன் விடு பகழி தொடலாமோ;
கரிதிரு முகமு ‡மிடமுடை வயிறு
முடையவர் பிறகு வருவோனே-
கனதன முடைய குறவர்த மகளை
கருணையொ டணையு மணிமார்பா;
அரவணை துயிலு மரிதிரு மருக
X அவனியு முழுது முடையோனே-
அடியவர் வினையு மமரர்கள் துயரு
மற அரு ளுதவு பெருமாளே (84)

## 1079. ஆண்டருள

தனதன தனன தனதன தனன
தனதன தனன தனதான

புமுககில் களப மொளிவிடு தரள
மணிபல செறிய வடமேருப்-

---

* திரிபுரத்தை ஒரு நொடியில் எரித்தார் -
வரலாறு - பாடல் 285-பக்கம் 206 கீழ்க்குறிப்பு

ஒரு நொடியில் எரித்தார் என்பது - உழுந்து (உளுந்து) கண்ணாடியின் மீது வைத்தால் எவ்வளவு வேகமாய் உருண்டு ஓடுமோ அவ்வளவு வேகத்தில் திரிபுரங்கள் எரிபட்டன என்டார்.

" புர மூன்றும் எழிற் க (ண்) ணாடி உழுந்துருளும்
அளவையின் ஒள்ளெரி கொள",

" மும் மதிலும் நொடி யளவிற் பொடி செய்த முதல்வன்"
- சம்பந்தர். I-132-3; I-131-4

மதனை எரித்தது - பாடல் 399-பக். 510. தொடர்-பக். 179

## 1078.

(திரிபுரம் அதனை) திரிபுரங்களை (அல்லது திரிபுரம் - மதனை திரிபுரத்தையும் மன்மதனையும்) ஒரு நொடிப் பொழுதில் எரித்தருளிய சிவனது செல்வமே!

கோபம் நிறைந்த அசுரர்களின் மனம் அச்சம் உற மயிலை முடுகிச் செலுத்துபவனே!

பெரிய கிரவுஞ்ச மலையில் ஊடுருவும்படிச் செலுத்தின கூரிய வேலனே! ஆறு திரு முகங்களை உடைய வடிவேலனே!

(பசலை) காம நோயால் உண்டாகும் நிற வேற்றுமையுடன் உன்னை அணைகின்ற இள முலை கொண்ட (என்) மகளை மன்மதன் செலுத்தும் பாணங்கள் தொட்டு நலிவு செய்யலாமா? (நலிவு செய்தல் கூடாது - நீ அவளை விட்டுப் பிரியலாகாது - என்றபடி)

யானையின் அழகிய முகமும், விசாலமான பெரிய வயிறும் உடைய கணபதியின் பின்பு தோன்றினவனே! (தம்பியே)!

கனத்த கொங்கைகளை உடைய குறவர் மகள் - வள்ளியைக் கருணையுடன் அணைந்த அழகிய திரு மார்பனே!

பாம்பணையில் துயிலுகின்ற திருமாலின் திரு மருகனே! உலகெலாம் உடையவனே!

அடியார்களின் வினைகளும், தேவர்களின் துயரமும் ஒழியும் படி அருள் பாலித்த பெருமானே!

(மகளை மதன் விடு பகழி தொடலாமோ)

## 1079.

புனுகு சட்டம், அகில், கலவைச் சாந்து, ஒளி வீசும் முத்து மாலை, ரத்ன மாலை பலவும் நெருங்க, வட திசையில் உள்ள மேரு மலையை -

---

† பசலை பாடல் 1006 -பக்கம் 32 கீழ்க்குறிப்பு

‡ கணபதிக்கு இடமுடை வயிறு:

" குறுந் தாளும் பெருந் தொந்தி நிறைவும்"- ஆதிபுரி புரா.

" கய வதனமும்... பெரு வயிறும் குறிய தாளும்"

- வீரவனப் புராணம்

X " அணி செபு மருத மலை யோனே" - என்றும் பாடம் கொள்வர்

கடவுள் உலகு உடையார் - " இப் பாரெலாம் உடையானை", 'எல்லாமாம் எம் பெருமான்" - சம்பந்தர் 2-16-4; 9

பொருமிரு கலச முலையிணை *யரிவை
புனையிடு பொதுவின் மடமாதர்;
அழகிய குவளை விழியினு மமுத
மொழியினு மவச வநுராக;
அமளியின் மிசையி லவர்வச முருகி
அழியுநி னடிமை தனையாள்வாய்;
† குழலிசை யதுகொ டறவெருள் சுரபி
குறுநிரை யருளி யலைமோதுங்-
குரைசெறி யுததி வரைதனில் விறுசு
குமுகுமு குமென வுலகோடு,
‡ முழுமதி சுழல வரைநெறு நெறென
முடுகிய முகிலின் மருகோனே-
மொகுமொகு மொகென ஞிமிறிசை பரவு
× முளரியின் முதல்வர் பெருமாளே(85)

## 1080. புகழ

தனதன தனன தனதன தனன
தனதன தனன தந்ததான

முழுமதி யனைய முகமிரு குழையில்
முனிவிழி முனைகள் கொண்டுமுவா-
முதலறி வதனை வளைபவர் கலவி
முழுகிய வினையை மொண்டுநாயேன்,
வழிவழி யடிமை யெனுமறி ○ வகல
மனமுறு துயர்கள் வெந்துவாட-
மதிதரு மதிக கதிபெறு மடிகள்
மகிழ்வொடு புகழு மன்புதாராய்;

---

* பொது மகளிர் வீட்டில் பெண்கள் பலர் இருத்தல் -
" வாடி பெண்காள் பாவை போடும்"- திருப்புகழ். 761

† குழலிசையால் பசுக்களுக்கு அருளுதல்;
- பாடல் 1012- பக்கம் 49 கீழ்க்குறிப்பு.

‡ நெறு நெறு என்னக் கடைந்த விவரம்-
- பாடல் 1003-பக்கம் 24 கீழ்க்குறிப்பு.

X "முளரியின் முதல்வர்" - பிரமன் - "செறி முளரித் தவி சேறி.... விற்றிருந்தான்"- சம்பந்தர் 1-4-9. தொடர் பக். 181.

நிகர்க்கும் இரண்டு குடம் போன்ற கொங்கைகளை (அரிவை) பணிப் பெண் அலங்கரிக்கும் (பொதுவின் மட மாதர்) இளம் பருவத்துப் பொது மகளிரின் -

அழகிய குவளை மலர் போன்ற கண்களிலும், அமுதம் போன்ற பேச்சினும், (அவச அநுராக) தன் வசம் அழிந்து காமப் பற்றுடன்

படுக்கை மீது அப் பொது மகளிரின் வசப்பட்டு மனம் உருகி அழிந்து போகும் உனது அடிமையாகிய என்னை ஆண்டருளுவாயாக;

குழலின் இசையால், (அற) மிகவும் (வெருள்) மருண்டு அஞ்சின (சுரபி) கபிலை - காராம் பசு முதலிய (குறு நிரை) சிறிய பசுக் கூட்டத்துக்கு உதவி செய்து, அலை வீசுவதும்

ஒலி நிரம்பச் செய்வதுமான கடலானது (வரை தனில்) மலை போல (விறுசு - விசுறு) சுழன்று அலைகளை வீசி, குமு குமு குமு என்று (பொங்கவும்), உலகுடனே -

(தூணாக இருந்த) பூரண சந்திரனும் சுழற்சி யடையவும், மந்தர மலை நெறு நெறு என்று சுழலவும், விரைந்து கடைந்த முகிலின் மேக வர்ணனாம் திருமாலின் மருகனே!

டெ கு மொகு மொகு என்று வண்டு இசை பாடும் தாமரையில் வீற்றிருக்கும் பெரியோன் பிரமனுக்குப் பெருமாளே!

(நின் அடிமை தனை ஆள்வாய்)

## 1080.

பூரண சந்திரன் போன்ற முகம் கொண்டும், இரண்டு குழைகளையும், (முனி) கோபிப்பது போலத் தாக்கும் கண்களின் முனைகளைக் கொண்டும், (மூவா) முற்றாத - முதிர்ச்சி அடையாத

(முதலறிவதனை) ஆரம்ப அறிவையே கொண்டவர்களைத் தம் வசப்படுத்தி வளைப்பவர்களின் புணர்ச்சி யின்பத்தில் முழுகிக் கிடந்த வினையை (மொண்டு) அனுபவிக்கும் நாயனைய அடியேனாகிய எனக்கு உன்

வழி வழி அடிமை நான் என்னும் அறிவு (அகல) விசாலம் உறவும் பெருகவும், மனத்தில் உள்ள துயரங்கள் (யாவும்) வெந்து ஒடுங்கவும்.

(மதி தரும்) நல்லறிவைத் தருவதும் (அதிக, கதி பெறும்) நிரம்பப் (பலர்க்கும்) கதி - புகலிடமாம் தன்மையைப் பெற்றுள்ளதுமான (உனது) திருவடிகளை மகிழ்ச்சியுடனே புகழும் படியான அன்பைத் தந்தருளுக;

---

○ அகல = விசாலிக்க.

*எழுதிட அரிய எழில்மற மகளின்
இருதன கிரிகள் தங்குமார்பா-
எதிர்பொரு மசுரர் பொடிபட முடுகி
இமையவர் சிறையை யன்றுமீள்வாய்;
† அழகிய குமர எழுதல மகிழ
‡ அறுவர்கள் முலையை யுண்டவாழ்வே-
அமருல கிறைவ உமைதரு புதல்வ
அரியர பிரமர் தம்பிரானே.(86)

## 1081. திருவடி சூட்ட

தனதன தனதன தத்தத் தத்தத்
தாந்தாந் தனதான

கொடியன பிணிகொடு விக்கிக் கக்கிக்
கூன்போந் தசடாகுங்-
குடிலுற வருமொரு மிக்கச் சித்ரக்
X கோண்பூண் டமையாதே,
பொடிவன பரசம யத்துத் தப்பிப்
போந்தேன் தலைமேலே-
பொருளது பெறஅடி O நட்புச் சற்றுப்
பூண்டாண் டருள்வாயே;
துடிபட **அலகைகள் கைக்கொட் டிட்டுச்
சூழ்ந்தாங் குடனாடத்-
தொகுதொகு திகுதிகு தொக்குத் திக்குத்
தோந்தாந் தரி†† தாளம்;

---

* "மடலூரிடை எழுத அரியவள்"- பாடல் 825 அடி 3,4.

† "முழுதும் அழகிய குமர"- பாடல் 1277 அடி 8

‡ 'அறுவர் முலை நுகரும் அறுமுக குமர' - சீர்பாத வகுப்பு

X கோண் = மாறு பாடு

O அருண கிரியார் வரலாறு - திருவடி தீக்ஷை விரும்புகின்றார். திருவடி தீக்ஷை கிடைக்கப் பெற்றதைப் பாடல் 934 அடி 4, பாடல் 814 அடி 1-பார்க்க.

** பேய்கள் சூழ ஆடுதல் - "மொய்த்த பேய்கள் முழக்கம் முதுகாட்டிடை நித்தமாக †† நடமாடி" - சம்பந்தர். 3-30-1

(தொடர்ச்சி பக்கம் 183)

எழுதுவதற்கு முடியாததான அழகினைக் கொண்ட வேடர் மகள் வள்ளியின் இரண்டு கொங்கை மலைகளும் தங்குகின்ற திருமார்பனே!

எதிரில் நின்று சண்டை செய்த அசுரர்கள் பொடிபட்டழிய முன் சென்றெதிர்த்துத், தேவர்களின் சிறையை அன்று நீக்கி யருளினாய்;

அழகு வாய்ந்த குமரனே! ஏழுலகோரும் மகிழ்ச்சி கொள்ள கார்த்திகை மாதர் ஆறு பேருடைய கொங்கையை (முலைப் பாலை) உண்ட செல்வமே!

தேவ லோகத்துக்குத் தலைவனே! உமா தேவி பெற்ற பாலகனே! திருமால், (அரன்) சிவன், பிரமர் மூவர்க்கும் தம்பிரானே!

(அடிகள் புகழும் அன்பு தாராய்)

## 1081.

கொடுமையான நோய்களை அடைந்து விக்கல் எடுத்தும், வாந்தி எடுத்தும், கூன் விழுந்தும், அறிவு மழுங்கும்

உடலிற் பொருந்தி வரும் ஒரு மிக வேடிக்கையான மாறுபாட்டு நிலையை அடைந்து இராத படி

நிலைத்து நிற்காது அழிவு பெறும் பர சமயக் (கூச்சல் களினின்றும்) பிழைத்து வந்துள்ள என் தலை மேலே

மெய்ப் பொருளை (யான்) பெற (நீ உனது) திருவடியை (என் மீது) அன்பு சற்று வைத்துச் சூட்டி, என்னை ஆட் கொண்டு - அருள்வாயே - (நட்புச் சற்றுப் பூண்டு ஆண்டு சூடி அருள்வாயே) உன் திருவடியைச் சூட்டி அருளுக - என்றபடி

(துடி) உடுக்கை வாத்தியம் ஒலிக்க, பேய்கள் கைகள் கொட்டிச் சூழ்ந்து அவ்விடத்திலே தம்முடன் கூத்தாடத்,

தொகு நொகு திகு திகு தொக்குத் திக்குத் தோம் தாம் தரி என்று தாளம்

---

†† தாளம் பதிவ்ரதை யொத்தக் காண் தனிவாடும் எனக் கூட்டுக.

தாளம் தேவி ஒத்துதல் -

" தளிரிள வளரென உமை பாடத் தாளமிட - ஓர் கழல் வீசி ஆடும்" - சம்பந்தர். 2-111-1

படிதரு பதிவ்ரதை யொத்தச் சுத்தப்
*பாழ்ங்கான் தனிலாடும்-
† பழயவர் குமரகு ருத்தத் தைக்குப்
பாங்காம் பெருமாளே (87)

## 1082. பிறவியற

தனதன தனதன தத்தத் தத்தத்
தாந்தாந் தனதான

சுடரொளி கதிரவ னூற்றுப் பற்றிச்
சூழ்ந்தோங் கிடுபாரிற்-
றுயரிரு வினைபல சுற்றப் பட்டுச்
சோர்ந்தோய்ந் திடநாளுங்-
கடுகென எடுமெனு டற்பற் றறுக்
காண்போந் துறவோருங்-
கனலிடை விதியிடு ‡ தத்துக் கத்தைக்
காய்ந்தாண் டருளாயோ;
தடமுடை வயிரவர் தற்கித் தொக்கத்
தாந்தோய்ந் திருபாலும்-
தமருக வொலிசவு தத்திற் றத்தத்
தாழ்ந்தூர்ந் திடநாகம்,
படிX நெடி யவர்கர மொத்தக் கொத்துப்
பாய்ந்தாய்ந் துயர்கானம்-
பயில்பவர் புதல்வகு ருத்தத் தைக்குப்
பாங்காம் பெருமாளே (88)

---

* பாழ்ங் கானில் ஆடுதல் -

" படு கானிடை... நடமாடி" - சம்பந்தர்.2-75-4

† பழயவர் -" புராணனார்" - சம்பந்தர். 2-7-1

" முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளே" - திருவெம்பாவை. 9

‡ தத் துக்கம் - தத் - அந்த -

" தத் திருப்பதி" - திருப்புகழ். 135 அடி 6

X சிவபிரானது நடனத்தின் போது திருமால் மத்தளம் அடித்தல்.-

" கண்ணன்... வரம் அடைந்து அவன் புரி நடத்துக்கு ஒன்றவே படகம், மத்தளம் சதியோ டொத்திட முழக்கி

படியப் போடும் பதி விரதை (பார்வதி) ஒத்திட்டு ஒலிக்கத், தூய பாழ்ங் காட்டில் ஆடுகின்ற

பழையவருடைய (சிவ பிரானுடைய) குமரனே! குறக் கிளி வள்ளிக்குப் பாங்கனாம் (துணைவனாம்) பெருமாளே!

(ஆண்டருள்வாயே)

## 1082.

ஜோதி ஒளி வீசும் சூரியன் உதித்துப் புறப்பட்டு வலம் வந்து விளங்குகின்ற (இந்தப்)பூமியிலே

(துயர்) துன்பம், (இரு வினை) நல் வினை - தீ வினை என்னும் இரு வினைகள் (இவை) பலவற்றாலும் சூழப்பட்டு - அதனால் சோர்வடைந்து - அலுத்து மாய்ந்திட, (பிணம்) நாற்றம் எடுக்கும்.

(சுடுசென) விரைவில் எடுங்கோள் என்னப் படுகின்ற உடல் மீதுள்ள பற்று ஒழிந்து, (சுடு) காட்டுக்குப் போய், உறவினரும்

நெருப்பிடையே விதிப் பிரகாரம் இடுகின்ற (தத்), அந்த துக்கத்தை - துக்க நிகழ்ச்சிக்கு இடம் தருகின்ற (பிறப்பைக்) காய்ந்து - கோபித் தொழித்து (என்னை) ஆண்டருள மாட்டாயோ!

(துடம்) பெருமை புடைய (வயிரவர்) துர்க்கையின் படையின ராகிய கணங்கள் (தற்சித்து) செருக்குற்று (ஒக்க) ஒன்று சேர்ந்து (தாம் தோய்ந்து) தாங்கள் கூடிப் பொருந்தி, இரண்டு பக்கங்களிலும் -

(டுமருக ஒலி) உடுக்கையின் ஒலியை (சவுதத்தில்) நடனக் கதி வகைக்கு ஏற்றபடி (தத்த) அடவுடன் ஒலிக்கத் தாழ்ந்து ஊர்ந்திட நாகம் - நாகம் தாழ்ந்து ஊர்ந்திட - அணிந்துள்ள பாம்பு தொங்கி நகர்ந்து செல்ல-

(படி) அக்கூத்தின் போக்கைக் கவனித்துப் படிக்கும் (நெடியவர்) திருமால் - கரம் ஒத்த - கரத்தால் (மத்தளம்) அடிக்கக், கெத்துப் பாய்ந்து - (கெந்து பாய்ந்து) கிட்டிப் புள் பாய்வது போலப் பாய்ந்து ஆய்ந்து - (கூத்தின் இலக்கணத்தை) ஆய்ந்து - பெரிய காட்டினடயே

(பயில்பவர்) நடனம் பயில்பவரின் புதல்வனே! குறக் கிளி வள்ளிக்கு பாங்கன் - தோழனாம் பெருமாளே!

(ஆண்டருளாயோ)

---

உள் மகிழ்ந்தான்" - ஞானவரோ, உபதேச 1945

"மூல நாயகன் திருநட முன்றிலின் முன்னராவிருந்

தொனிதரு முழவு இரட்டுற அடைந்தான் நீலமேனியன்"

- கோனேரி. உபதேச திருமால் சிவார்ச்சனை. 41

## 1083. முத்தி பெற

தனதன தத்த தந்த தனதன தத்த தந்த
தனதன தத்த தந்த தனதான

குடமென வொத்த கொங்கை குயில்மொழி யொத்த இன்சொல்
குறமகள் வைத்த நண்பை நினைவோனே-
வடவரை யுற்று றைந்த மகதெவர் பெற்ற கந்த
மதசல முற்ற தந்தி யினையோனே;
இடமுடன் வைத்த சிந்தை யினைவற முத்தி தந்து
இசையறி வித்து வந்து எனையாள்வாய்-
தட*வரை வெற்பி னின்று சரவண முற்றெ முந்து
சமர்கள வெற்றி கொண்ட பெருமாளே (89)

## 1084. ஆண்டருள

தனதன தத்த தந்த தனதன தத்த தந்த
தனதன தத்த தந்த தனதான

மடவிய ரெச்சி லுண்டு கையில்முத லைக்க ளைந்து
மறுமைத னிற்க ழன்று வடிவான-
சடமிக வற்றி நொந்து கலவிசெ யத்து ணிந்து
தளர்வுறு தற்கு முந்தி யெனையாள்வாய்;
† படவர விற்சி றந்த இடமிதெ னத்து யின்ற
பசுமுகி லுக்கு கந்த மருகோனே-
‡ குடமுனி கற்க வன்று தமிழ்செவி யிற்ப கர்ந்த
குமரகு ருத்தி X நம்பு பெருமாளே (90)

---

*வரை - மலைச் சிகரம் - " மந்தி வரை வரை பாய"-
" மந்தி ஒரு சிகரத்தினின்று ஒரு சிகரத்திர் பாய"
- பரி பாடல். உரை -15-38

† " நாக மெத்தையில் துயின்ற நாரணன்"
- பாடல் 832 அடி 7

‡ அகத்தியருக்குத் தமிழ் போதித்தது -
" தமிழ்..... மாமுநிக்கு காதில் உணார் உணார் விடு"
- பாடல் 441-பக்கம் 609 கீழ்க்குறிப்பு.

X நம்பு = விரும்பு

## 1083.

குடம் என்று உவமை சொல்லும்படியான கொங்கையையும், குயிலின் மொழி என்று உவமை சொல்லும் படியான இனிய சொல்லையும் உடைய குறமகள் - வள்ளி (உன் பால்) வைத்த அன்பை நினைத்தவனே - (நினைத்து உதவினவனே)!

வடக்கில் உள்ள மலை - கைலையில் பொருந்தி வீற்றிருக்கும் மஹாதேவர் பெற்ற கந்த மூர்த்தியே! மத நீர் நிறைந்த விநாயக மூர்த்தியின் தம்பியே!

இட முடன் வைத்த சிந்தை - நீ இடம் பெற வைத்த என் உள்ளம் (நீ வீற்றிருக்கும் படியாக வைத்த எனது சிந்தை)- உன்னை நினைக்கும் என் நெஞ்சம் - அல்லது - இ(ட்)ட முடன் வைத்த சிந்தை - உன்னை அன்போடு நினைக்கும் என் உள்ளம் (இனைவு அற) - இனைதல் - வருந்துதல் - (அற) ஒழிய - (நீ) எனக்கு முத்தி கொடுத்து, (இசை அறிவித்து) இசை ஞானத்தை அறிவித்து ஊட்டி, வந்து எனை ஆண்டருளுக.

தட வரை - விசாலமான (வரை) சிகரங்களை உடைய (வெற்பில் நின்று) கயிலை மலையில் நின்று (தோன்றி), (அல்லது இமய மலையில் நின்று வரும்), (கங்கைச்) சரவண மடுவில் பொருந்தி எழுந்து, போர்க்களத்தில் வெற்றி பெற்ற பெருமாளே!

(முத்தி தந்து எனை ஆள்வாய்)

## 1084.

மாதர்களுடைய எச்சிலை உண்டும், கையில் உள்ள மூலப் பொருள்களை (அவர்கள் பொருட்டு) (களைந்து) நீக்கி ஒழித்து, மறு பிறப்புக்கு (ஏதுவான செயல்களிற்) சுழற்சி அடைந்து - அலைச்சல் உற்று - அழகா யிருந்த

(சடம்) உடலானது (வர வர) மிகவும் உலர்ந்து போய் - காய்ந்து வாடி - மனம் நொந்து போம்படிப் புணர்ச்சிச் செயல்களைச் செய்வதற்குத் துணிந்து, அதனால் சோர்வு அடைவதற்கு முன்பாக என்னை ஆண்டருளுக;

படம் கொண்ட (ஆதி சேடனாம்) பாம்பாகிய (படுக்கையை) மிகத் தக்க இடம் இது என்று கொண்டு அதில் பள்ளி கொண்ட (தூங்கின) கரிய மேகமனைய திருமாலுக்குப் பிரியமான மருமகனே!

(குட முனி) அகத்திய முநிவர் கற்க அன்று தமிழ் ஞானத்தை அவருடைய செவியிற் சொல்லி ஊட்டிய குமரமூர்த்தியே! குறத்தி வள்ளி விரும்பும் பெருமாளே! (எனை ஆள்வாய்)

## 1085. இயலிசைபாட

தனதன தானத் தனதன தானத்
தனதன தானத் தனதான

கருமய லேறிப் பெருகிய காமக்
கடலினில் மூழ்கித் துயராலே-
கயல்விழி யாரைப் பொருளென நாடிக்
கழியும நாளிற் கடைநாளே;
எருமையி லேறித் தருமனும் வாவுற்
றிறுகிய பாசக் கயிறாலே-
எனைவளை யாமற் றுணைநினை வேனுக்
கியலிசை பாடத் தரவேணும்,
திருமயில் சேர்பொற் புயனென வாழத்
தெரியல னோடப் பொரும்வீரா-
செகதல மீதிற் பகர் *தமிழ் பாடற்
செழுமறை சேர்பொற் புயநாதா;
பொருமயி லேறிக் கிரிபொடி யாகப்
புவியது சூழத் திரிவோனே-
புனமக ளாரைக் கனதன மார்பிற்
புணரும்வி நோதப் பெருமாளே (91)

## 1086. திருவடி பெற

தனதன தானத் தனதன தானத்
தனதன தானத் தனதான

† குடலிடை தீதுற் றிடையிடை பீறிக்
குலவிய தோலத் தியினூடே-
‡ குருதியி லேசுக் கிலமது கூடிக்
குவலயம் வானப் பொருகாலாய்;

---

* தமிழ் பாடற் செழு மறை - செழு மறைத் தமிழ் பாடல் - திரு முருகாற்றுப்படை - எனக் கொள்ளலாம்.

- பாடல் 1030-பக்கம் 90 கீழ்க்குறிப்பு

† குடல் வாதம் முதலிய நோய்களால் குடல் தீதுறல்

‡ குருதி-சுரோணிதம்-உதிரம்-இது சுக்கிலத்தோடு கலந்து சிசு உற்பத்திக்குக் காரணமாகும் மகளிர் இரத்தம், பூதங்களாலும், பொறி முதலியவற்றாலும், வாயுக்களாலும் நாடிகளாலும், பரிணமித்துச் -

## 1085.

(கரு மயல்) கொடிய ஆசை மிக வளர்ந்து, பெருகி வந்த காமக் கடலிலே முழுகித் துயர் கொண்டு

கயல்மீன் போன்ற கண்களை உடைய பெண்களை (இவர்களே அடையத் தக்க) பொருளாம் என்று தேடி விரும்பிக் காலம் கழிக்கின்ற அந்த நாள்களில் இறுதி நாள் வர- அந்தக் கடை நாளிலே-

எருமை மாட்டின் மேல் ஏறி யமனும் (வரவுற்று) (வாவுதல் உற்று) தாண்டி வந்து, அழுத்திக் கட்டின பாசக் கயிற்றினாலே -

என்னை வளைத்திழுக்காமல், (உன்னையே) துணையாக நினைக்கின்ற எனக்கு இயற்றமிழ்ப் பாடல், இசைத்தமிழ்ப் பாடல்களைப் பாடவல்ல அருளைத் தந்தருள வேண்டும்;

இலக்குமி யாகிய மயில் (லக்ஷ்மீ கரம்) சேர்ந்த அழகிய புயங்களை உடையவன் என (வாழ்) வாழ்ந்திருந்த (அத் நெரியலன்) அந்தப் பகைவனாம் சூரன் புறமிட்டு ஓடும்படிச் சண்டை செய்த வீரனே!

பூமியிடத்தே (உன்னைப் புகழ்ந்து) சொல்லப் படுகின்ற தமிழ்ப் பாடல் (மாலைகளும், செழுமை வாய்ந்த வேத மொழிகளும் சேரும் படியான அழகிய திருப் புயங்களைக் கொண்ட நாதனே!

சண்டை செய்யவல்ல மயில்மீது ஏறி, மலைகள் எல்லாம் பொடியாகும்படி (அவ்வளவு வேகத்துடனே) பூமியைச் சூழ்ந்து வலம் வந்தவனே!

தினைப் புனத்தே இருந்த (மகளாரை) வள்ளியை அவளது கனத்த கொங்கைகளைக் கொண்ட மார்பிடத்தே தழுவிச் சேர்ந்த திருவிளையாடலைச் செய்த பெருமாளே!

(இயலிசை பாடத் தரவேணும்)

## 1086.

குடலினிடத்தே தீதுற்று - (கெடுதல் அடைந்து), இடையிடையிலே ஊடேஊடே கிழிபட்டு - இத்தகைய கோலத்துடன் விளக்கம் தரும் (தோல் அத்தியின் ஊடே) தோலும் எலும்பும் கூடிய இவ்வுடலினூடே-

(குருதியிலே)சுரோணிதத்திலே (சுக்கிலம் அது கூட)சுக்கிலமானது சேர்ந்து, (குவலயம்) மண், வான் (விண்), (அப்பு) நீர், ஒப்பற்ற (காலாய்) காற்று (இவைகளுடன் தீ) - ஆக பஞ்ச பூதச் சேர்க்கையாய் -

---

சுக்கில சுரோணிதங்களாலே உடம்பு கொண்டு இரு வினையுந்தன்னகத் தடக்கி உயிர் பிறக்கும்" - சிலப்பதி. உரை 3-26.
திருப்புகழ் 565-பக்கம் 288 கீழ்க்குறிப்பு

உடலெழு மாயப் பிறவியி லாவித்
துறு*பிணி நோயுற் றுழலாதே-
உரையடி யேனுக் கொளிமிகு நீபத்
துணதிரு தாளைத் தரவேணும்;
† கடலிடை சூரப் படைபொடி யாகக்
கருதல ரோடப் பொரும்வேலா-
‡ கதிர்விடு வேலைக் கதிரினில் மேவிக்
X கலைபல தேர்முத் தமிழ்நாடா;
O சடையினர் நாடப் படர்மலை யோடித்
தனிவிளை யாடித் திரிவோனே
தனிமட மானைப் பரிவுட னாரத்
தழுவும்வி நோதப் பெருமாளே (92)

---

* "பிணி செய் நோயேன் யான் கிடப்ப" - பிணித்தலைச் செய்யும் நோயேனாய்க் கிடக்க" - சிந்தா. 1589 உரை

† கடலிடை சூரப்படை... ஓட - பாடல் 1064 அடி 5; 1066- அடி 8 பார்க்க

‡ கதிர்விடு வேலைக் கதிரினில் மேவி = சமுத்திரத்தினிடத்துக் கிரணங்கள் வீசும் இளஞ் சூரியனைப்போல் தோன்றி

இளஞ் சூரியனது தோற்றம் - முருகன் தோற்றம்

"காலை விருள் சீக்கும் காய் கதிர் போல்"- இரும்பல் காஞ்சி.

"பலர் புகழ் ஞாயிறு கடற் கண்டா அங்கு" - திரு முருகாற்.

X கலை பல தேர் முத்தமிழ் நாடா -

"நாவாண்ட பல கலையும் நா மகளும் நலஞ் சிறப்ப"

"உவமை யிலாக் கலை ஞானம் தவ முதல்வர்
சம்பந்தர் தா முணர்ந்தார் அந் நிலையில்"

- பெரிய புரா. ஞான சம். 54, 70

O சடையினர் நாட - விரும்ப மகிழ முருகன் விளையாடினது:-

"சிவனுக்கும் அம்மைக்கும் உள்ளமொடு கண்கள் குளிர.....
சேடனொரு சாட்டையாய்... மேரு கிரியாம் சிலம்பு
பம்பர மென்ன ஆட்டினோய் செங்கீரை யாடியருளே"
- க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழ்

"குலகிரி யனைத்தும் ஓர் பாற் கூட்டிடும்" - கந்த புரா. திருவிளை. 23

சடையினர் (நாட - தேட) முருகன் ஓடித் திரிந்தது -

"பழத்துக்காக விநாயகருடன் போட்டி யிட்டதில்
விநாயகருக்குப் பழம் கிடைத்ததைக் கண்ட முருகவேள்

உடல் தோன்றுகின்ற மாயப் பிறவியில் (ஆவித்து) ஆவிர்ப் பவித்து வெளிவந்து - பிறந்து சேர்ந்து பிணித்தலைச் செய்யும் நோயை (உடற் பிணி, மன நோய்) அடைந்து அலைச்சல் உறாமல்

உரை அடியேனுக்கு உன்னைப் புகழ்ந்துரைக்கின்ற அடியவனாகிய எனக்கு ஒளி மிக்கனவும், கடப்ப மலர் சேர்ந்துள்ளனவுமான உனது இரண்டு திருவடிகளை (அல்லது ஒளி மிக்க கடப்பமலர் சேர்ந்த உனது இரண்டு தாள்களைத்) தந்தருள வேண்டும்;

கடலிடையே சூரனுடைய படைகள் பொடிபட்டழியவும், (கருதலர்) பகைவர்களோட்டம் பிடிக்கவும் போர்புரிந்த வேலனே!

வேலைக் கதிர்-விடு கடலினிடத்துக் கிரணங்களை வீசும் (கதிரினில்) இளஞ் சூரியனைப் போலத் திருஞான சம்பந்தராய்த் தோன்றிக் (கலை பல தேர்) பல கலை ஞானங்களையும் உணர்ந்தறிந்தவனாய் முத்தமிழ் நாட்டில் (விளங்கினவனே)!

(சடைப் பெருமான்) சிவனார் (நாட) விரும்ப - பரந்துள்ள (கயிலை) மலையில் ஓடி (அல்லது - சிவனார் (நாட) உன்னைத் தேட பரவி யிருந்த மலை யிடங்களில் ஓடித்) தனியாக விளையாடித் திரிந்தவனே!

ஒப்பற்ற இள மான் - வள்ளியைப் (பரிவுடன்) அன்புடன் - (ஆர) நன்றாக - மனங் குளிரத் - தழுவின (மகத்துவம்) விசித்திரம் (அழகு) கொண்ட பெருமானே!

(உனைதிருதாளைத் தரவேணும்)

---

பிணக்குற்றனர். (பாடல் 184 - பக்கம் 430 கீழ்க்குறிப்பு). பிணக்குற்ற முருகன் கௌபீனதாரியாய்க் கயிலையினின்றும் புறப்பட்டுத் தென் திசை நோக்கிச் சென்று தேவ கிரியை அடைந்து. பின்னர் திருவாவினன்குடி - சிவகிரி பழநியை அடைந்தனர். தண்டபாணியாகத் தமது குமாரர் வெளிப் பட்டதை அறிந்து சிவபிரானும் தேவியும் அவரைத் தேடி வந்து பழநியை அடைந்து. "குழந்தாய்" - " பழம் நீ" என்று முருகனைப் புகழ்ந்து சமாதானப் படுத்தினர்.

"சேய திரு வாவினன் குடியிற் சென்றான் குன்று தொறு நின்றான்" ...."பேச அரிய மறை ஞானப் பிள்ளை பழநீ எனப் புகன்றார்" - பழநிப் புராணம். திருவாவினன். சருக்கம் 48,56 இனி - தேவியுடன் முருகன் முனிந்து மலை வோடித் திரிந்த வரலாற்றையும் இது குறிக்கலாம் - பாடல் 245 பக்கம் 108 கீழ்க்குறிப்பு X

## 1037. ஞானம்பெற

தனதனா தத்த தனதனா தத்த
தனதனா தத்த தனதான

கருதியே மெத்த விடமெலாம் வைத்த
கலகவா ளொத்த விழிமானார்
கடினபோ கத்த புளகவா ருற்ற
களபமார் செப்பு முலைமீதே;
உருகியான் மெத்த அவசமே வுற்ற
வுரைகளே செப்பி யழியாதுன்
உபயபா தத்தி னருளையே செப்பு
முதயஞா னத்தை அருள்வாயே;
பருவரா லுற்று மடுவின்மீ துற்ற
*பகடுவாய் விட்ட மொழியாலே
பரிவினோ டுற்ற திகிரியே விட்ட
பழயமா யற்கு மருகோனே;
† முருகுலா வுற்ற குழலிவே டிச்சி
முலையின் மேவுற்ற க்ருபைவேளே
முருகனே பத்த ரருகனே வெற்பு
முரியவேல் தொட்ட பெருமானே (93)

## 1088. மாதர் மீதுள மயக்கற

தனதனா தத்த தனதனா தத்த
தனதனா தத்த தனதான

கொலையிலே மெத்த விரகிலே கற்ற
குவளையோ் மைக்கண் விழிமானார் -
குழையிலே யெய்த்த நடையிலே நெய்த்த
குழலிலே பற்கள் தனிலேமா;

---

* கஜேந்திரனை மீட்ட வரலாறு

- பாடல் 939-பக்கம் 731- வரலாறு

† முருகு உலாவுற்ற குழலி - இயற்கை மணம் கொண்ட கூந்தலை உடைய - வள்ளி. பதுமினி ஜாதிப் பெண்கள், தெய்வ மங்கையர் இவர்கள் கூந்தல் இயற்கை மணம் கொண்டது.

(தருமிக்குப் பொற்கிழி யளித்த திருவிளையாடல் - பாடல் 104)

## 1087.

யோசனையுடனே நிரம்ப விஷம் எல்லாவற்றையும் தன்னிடத்தே கொண்டுள்ளதும், (கலக வாள்) போருக்கு என்று தீட்டப்பட்ட - (அல்லது கலகத்தை - சச்சரவை விளைக்கத்தக்க, - வாள் போன்றதுமான கண்களை உடைய மாதர்களின் -

(கடின) வன்மை கொண்டதும், (போகத்த) இன்ப அனுபவத்துக்கு உரியதும், (புளக) புளகாங்கிதம் கொண்டதும், (வார்) ரவிக்கை அணிந்ததுமாயுள்ள கலவைச் சாந்து நிறைந்த செப்புக் குடம் போன்ற கொங்கையின் மேலே -

உள்ளம் உருகி, நான் மிகவும் (அவசமே உற்ற) வசமழிந்த நிலையிலே யிருந்த பேச்சுக்களைப் பேசி அழியாமல், உனது

இரண்டு திருவடிகளின் அருட் பெருமையைப் பற்றியே பேசும்படி உதிக்கின்ற ஞானத்தை (எனக்கு நீ) அருள் புரிவாயாக.

(பருவரல் உற்று) மிக்க துன்பத்தை அடைந்து, மடுவிடத்தே இருந்த, (பகடு) யானை (கஜேந்திரன்) வாய்விட்ட மொழியாலே - ஒலிட்டு அழைத்த மொழியைக் கேட்டு -

அன்போடு வந்து அந்த (அல்லது தமதிடத் திருந்த) சக்கரத்தை ஏவின - பழைய திருமாலுக்கு மருமகனே!

(முருகு) இயற்கை மணம் உலவும் கூந்தலைக்கொண்ட வேடப் பெண் (வள்ளியின்) கொங்கையை விரும்பின (அல்லது கொங்கையில் துஞ்சின) கருணை வேளே!

முருக மூர்த்தியே! பக்தர்களுக்கு அருகே நின்று உதவுபவனே! (கிரவுஞ்ச) மலை ஒடிந்தழிய வேலைச் செலுத்தின பெருமாளே!

(ஞானத்தை அருள்வாயே)

## 1088.

கொலைத் தொழிலையும் - நிரம்பத் தந்திரங்களையும் கற்றுள்ளதும், குவளை மலர் போன்றதும், (ஏர்) அழகு கொண்டதும், மை பூசியுள்ளதுமான கண் பார்வையை உடைய மாதர்களின் -

(காதில் உள்ள) குழைகளிலும், இளைப்புற்ற நடையிலும், (நெய்த்த) - வாசனைத் தைலம் பூசியுள்ள - (அல்லது பளபளப்புள்ள) - கூந்தலிலும், பற்களிலும், அழகிய (அல்லது பெரிய)

முலையிலே யற்ப இடையிலே பத்ம
முகநிலா வட்ட மதின்மீதே-
முதுகிலே பொட்டு நுதலிலே தத்தை
மொழியிலே சித்தம் விடலாமோ;
*கலையனே உக்ர முருகனே துட்டர்
கலகனே மெத்த இளையோனே-
கனகனே †பித்தர் புதல்வனே மெச்சு
கடவுளே பச்சை மயிலோனே;
‡ உலகனே X முத்தி முதல்வனே O சித்தி
உடையனே விஷ்ணு மருகோனே-
ஒருவனே ** செச்சை மருவுநேர் சித்ர
வுருவனே மிக்க பெருமானே (94)

## 1089. துதிக்க

தனதனனந் தான தனதனனந் தான
தனதனனந் தான தனதான

†† அகிலநறுஞ் சேறு ம்ருகமதமுந் தோயு
மசலமிரண் டாலு மிடைபோமென்-
‡‡ றடியில்விழுந் தாடு பரிபுரசெஞ் சீர
தபயமிடுங் கீத மமையாதே;
நகமிசைசென் றாடி வனசரர்சந் தான
நவையறநின் றேனல் விளைவாள்தன்-
லளிதவிர்சிங் கார தனமுறுசிந் தூர
நமசரணென் றோத அருள்வாயே

*சகல கலா வல்லபன் - பாடல் 320 பக்கம் 296 குறிப்பு

† பித்தர் - சிவன் - " பித்தா பிறை சூடீ" - சுந்தரர். 7-1-1

‡ உலகன் - இறைவன் -

" பாரொடு விண்ணாய்ப் பரந்த எம் பரனே"

- திருவாசகம். 28-1

X முத்தி முதல்வன் -

" முத்தி விதரண உதாரக் கார" - திருப்புகழ். 1026

O சித்தி உடையவர் - சித்தர் - பாடல் 931 -பக்கம் 712 குறிப்பு.

" சித்தர்கள் தம்பிரான்" என்றார் - பாடல் 866-ல்.

** 'செச்சை மருவு .. உருவன்" - 'செய்யன் சிவந்த ஆடையன்"- திருமுருகாற்.

(தொடர்ச்சி பக்கம் 195

கொங்கையிலும், இளைத்த இடையிலும், தாமரை மலர் போன்ற முகமாம் சந்த்ர பிம்ப வட்ட வடிவிலும்,

முதுகிலும், பொட்டு இட்டுள்ள நெற்றியிலும், கிளிபோன்ற மொழியிலும், (என்) உள்ளத்தை நான் செலுத்தலாமா! செலுத்தலாகாது என்றபடி -

(கலையனே) கலைகளில் வல்லவனே! (அசுரர் மாட்டு) உக்ர மூர்த்தியாம் முருகனே! துஷ்டர்களைக் குழப்பம் செய்து அடக்குபவனே! மிகவும் இளையவனே!

தங்க சொரூபனே! (பித்தர்) சிவனது குமாரனே! (யாவராலும்) மெச்சப் படுகின்ற கடவுளே! பச்சை மயிலோனே!

உலகெலாம் நிறைந்தவனே! முத்தி தரும் முதல்வனே! சித்திகளில் வல்லவனே! திருமாலின் மருகனே!

ஒப்பற்றவனே! செந்நிறம் பொருந்திய செவ்வையான, அழகுள்ள உருவத்தனே! (யாவரினும்) மேம்பட்ட பெருமானே!

(மாணார்.. மொழியிலே சித்தம் விடலாமோ)

## 1089.

முழுமையும் நறுமணக் கலவையும், கஸ்தூரியும் தோய்ந்துள்ள மலைகள் (கொங்கைகள்) இரண்டாலும், இடை (ஒடிந்து) போம் என்று

பாதத்தில் விழுந்து ஒலிக்கின்ற சிலம்பின் (செம் சீர் அது) செவ்விய (சீர் பொருந்திய) சீருடன் (அபயம் இடும் கீதம்) அடைக்கலக் கூச்சலிடும் இசை ஒலி (அமையாதே) போதாதென்று - (அந்தப் பாரம் போதாதென்று

(நக மிசை சென்று) - வள்ளி மலைக்குப் போய், (ஆடி) லீலைப் பேச்சுடன் விளையாடி, (வனசரர் சந்தானம்) வேடர்களின் குழந்தையும், (நவை யற), குற்றமற்ற வகையில் இருந்து தினை விளைவித்தவளும் ஆன வள்ளியின் -

(லளிது) லாவண்யம் உள்ள - ஒளிரும் அழகு, (அவிர்) விளக்கமுள்ள அலங்கார கொங்கையிற் சேரும் (சிந்தூர) - செந்நிறச் செல்வனே! அல்லது - வெட்சி மாலை அணிந்தவனே! (நம சரண்) வணங்குகின்றேன் (உனது) திருவடியில் என்று உன்னைப் போற்ற அருள் புரிய வேண்டும்.

---

†† " அகிலின றுஞ் சேறு" என்றும் பாடம்

‡‡ கொங்கைப் பாரமும் - அதனால் இடை போம் என்று சிலம்பு புலம்புவதும்-பாடல் 1006,1010-பக்கம் 32,42,கீழ்க் குறிப்புக்கள்.

*பகலிரவுன் டான இருவரும்வண் டாடு
பரிமளபங் கேரு கனுமாலும்-
படிகநெடும் பார கடதடகெம் பீர
†பணைமுகசெம் பால மணிமாலை;
முகபடசிந் தூர கரியில்வருந் தேவு
முடிய ‡அரன் தேவி யுடனாட-
முழுதுலகுந் தாவி எழுகடல்மண் டூழி
முடிவினுமஞ் சாத பெருமாளே (95)

## 1090. (அகப் பொருள்) நற்றாயிரங்கல்

தனதனனந் தானம் தனதனனந் தானம்
தனதனனந் தானம் தனதான

கலகமதன் காதுங் கணமலரம் பாலுங்
களிமதுவண் டூதும் பயிலாலும்-
கடலலையங் காலுங் கன Xஇரையொன் றாலும்
கலைமதியங் காயும் வெயிலாலும்,
இலகியசங் காளும் இனியவளன் பீனும்
எனதருமின் தானின் றிளையாதே-
இருள்கெடமுன் தானின் றிணமணிசெந் தார்தங்
கிருதனமுந் தோள் கொண் டணைவாயே;
உலகைவளைந் தோடுங் கதிரவன்வின் பால்நின்
றுனதபயங் காவென் றுணைநாட-

---

* பகலிரவுண்டான இருவர் = சூரிய சந்திரர்

† ஐராவதத்தின் வர்ணனை - பாடல் 951-அடி 1-3 பார்க்க

‡ அரன் தேவியுடன் ஆடுதல்:-

" அனைத்தையும்... நடனொடு துடைத்த பத்தினி... பரத்தின் உச்சியில் நடநவில் உமை"- பாடல் 267.

X இரை = ஒலி; இது முதனிலைத் தொழிற்பெயர்.

பகல் இரவு உண்டான இருவர் - சூரியனும், சந்திரனும், வண்டு விளையாடும் நறு மணம் உள்ள (பங்கேருகனும்) தாமரையில் வீற்றிருக்கும் பிரமனும் (மாலும்)

ஸ்படிகம்போல வெண்ணிறம் உடையதும், மிக்க கனம் கொண்டதும், (கடம்) - மத நீர் கொண்டதும் - (தடம்) பெருமை வாய்ந்ததும், (கெம்பீரம்) (ஆர்ப்பரிப்பு) வீறு கொண்டதும். (பணை முகம்) பருமை கொண்ட முகத்தில் செம் பால மணி மாலை) செவ்விய - அக்கு மணி - (அல்லது - வெள்ளைப் பாசி மணி மாலையையும்) (அல்லது) செவ்விய (பாலம் - நெற்றியில் மணி மாலையையு ம்)

(முக படம்)முகத்தில் இடும் அலங்காரத் துணியையும் கொண்டதும், (சிந்தூரம்) புகர் (புள்ளி) முகத்தைக் கொண்டதுமான (கரியில்) யானைமீது (ஐராவதத்தின் மீது) வரும் (தேவும்) இந்திரனும் - முடிய - இவர் முதலான யாவரும் அழிவுறும் காலத்தில், (அரன்) சிவபிரான் பராசத்தியுடன் நடனம் செய்ய-

(முழுதுலகம்) உலகம் முழுதிலும் (தாவி) பரந்தெழுந்து ஏழு கடல்களும் நெருங்கிப் பொங்கும் (ஊழி முடிவிலும்) முடிவு காலமாம் ஊழிக் காலத்தும் அச்சமின்றி விளங்கி நிற்கும் பெருமாளே!

(நம சரணென்றோத அருள்வாயே)

## 1090.

(கலகம்) போர்க் கெழும் மன்மதன் (காதும்) கொல்லுதல் போலச் செலுத்தும் (கன மலர் அம்பாலும்) பெருமை வாய்ந்த மலர்ப் பாணங்களாலும், களிப்பு மயக்கைத் தரும் தேனை உண்ட வண்டு செய்யும் ரீங்கார ஒலியின் செறிவாலும் -

கடலின் அலைகள் (அங்கு ஆலும்) அங்கு ஒலிக்கும் (கனம்) பெருத்த (இரை யொன்றாலும்) ஒலி ஒன்றினாலும் - பொருந்து வதாலும் (பேரொலியாலும்) கலைகளை உடைய சந்திரன தீப்போலக் காய்கின்ற வெயிலாலும் -

விளக்கமுற்ற (சங்காள்) சங்க வளையல்களை அணிந்தவளும், (இனியவள்) இனிய குணத்தை உடையவளும், அன்பையே (ஈனும்) தரும் என்னுடைய அருமை வாய்ந்த (மின்) மின்னல் போல ஒளி கொண்ட மகள் தான் இன்று (உன்னை நினைத்து) இளைத்துப் போகாமல் -

(இருள் கெட) அவளது மன இருள் (மனதில் உள்ள துன்பம்) நீங்க, (நீ) அவள் முன்பு தோன்றி நின்று, (இனம் மணி) ஒரே வர்க்கமான மணிகளால் ஆய செவ்விய மாலை தங்கும் இரண்டு கொங்கைகளையும் உனது (பன்னிரு) தோளால் அணைந்தருளுக.

உலகை வலம் வந்து ஓடுகின்ற சூரியன், ஆகாயத்திலிருந்து - உனக்கு அடைக்கலம் - என்னைக் காத்தருளுக' என்று முறையிட்டு உன்னை நாடின காரணத்தால்

உரவியவெஞ் சூரன் சிரமுடன்வன் தோளும்
உருவியுடன் போதும் ஒளிவேலா;
*அலகையுடன் பூதம் பலகவிதம் பாடும்
அடைவுட னின் றாடும் பெரியோர்முன்-
அறமுமறந் தோயும் அறிவு † நிரம் போதென்
றழகுடனன் றோதும் பெருமாளே (96)

## 1091. கருணையை ஓத

தனதனனந் தானந் தனதனனந் தானந்
தனதனனந் தானந் தனதான

குருதிசலந் தோலுங் குடலுடனென் பாலுங்
குலவியெழுங் கோலந் தனில்மாயக்-
கொடுமையுடன் கோபங் கடுவிரகஞ் சேருங்
குணவுயிர் கொண் டேகும் படிகாலன்;
கருதிநெடும் பாசங் கொடுவரநின் றாயுங்
கதறமறந் தேனென் றகலாமுன்-
‡ கமலமலர்ந் தேறுங் குகனெனவும் போதுன்
**கருணைமகிழ்ந் தோதுங் கலைதாராய்;**
நிருதர்தளஞ் சூழும் பெரியநெடுஞ் சூரன்
நினைவுமழிந் தோடும் படிவேலால்-
நிகரிலதம் பாரோன் நிமையவர்நெஞ் சால்நின்
நிலைதொழநின் றேமுன் பொருவீரா;

---

* பேய், பூதம் பாட -

" பேய்கள் பல பாட நடமாடி." - "பூதங்கள் பாட நின்றாடும்"- சம்பந்தர். 2-32 -6; 2-38-2.

† நிரம்ப ஓது என்று = நிரம்ப ஓது என்ன. சிவபிரானுக்கு உபதேசித்தது - பாடல் 327 - பக்கம் 314.

‡ " வனச மேல் வரு தேவா" - பாடல் 150 -பக்கம் 350.

(உரவிய) வலிமை உடைய, கொடிய, சூரனுடைய தலையுடன் வலிய தோளையும் ஊடுருவிச் சென்று உடனே வெளிவந்த ஒளி கொண்ட வேலனே!

பேய்களுடன் பூதங்கள் பலவகைத்தான (கவிதம்) கவிதைகளைப் (பாடல்களைப்) பாடுகின்ற (அடைவுடன்) முறையுடனே தாம் நின்று நடனம் புரிகின்ற பெரியோராம் சிவபிரான் முன் பொருகால் -

அறத்தையும், (அறம் தோயும் அறிவும்) அற நெறி அமைந்த ஞானப் பொருளையும் (நிரம்ப) நன்றாக உபதேசிப்பாயாக எனக் கேட்க, அழகாக உடனே அன்று (அவருக்கு) (அவை தனை) உபதேசித்த பெருமாளே! (தோள் கொண் டணைவாயே)

# 1091.

ரத்தம், ஜலம், தோல், குடல் இவைகளுடன் (என்பு) எலும்பும் கொண்டு விளங்கி எழுகின்ற உருவமாகிய (இந்த உடலில்) மாயமாக அமைந்துள்ள

கொடுமை, அதனுடன் கோபம், கடுமையான (விரகம்) காம இச்சை இவை கூடிய குணத்தைக் கொண்ட உயிரைப் பிடித்துக் கொண்டு போகும்படிக் காலன்-

எண்ணம் கொண்டு, நீண்ட பாசக் கயிற்றைக் கொண்டுவரச் சூழ்ந்து நின்று, ஆயும் - தாயும் கதறிப் புலம்ப, (மறந்தேன் என்று) உன்னையும் மறந்து விட்டேன் என்று சொல்வது போல எல்லாவற்றையும் கை விட்டு நீங்குதற்கு முன்பு-

(கமலம் மலர்ந்து ஏறும்) (இதய) தாமரை (பத்தி ரசத்தால்) மலர - அப்போது அதில் - (ஏறும்) ஆரோகணித்து விளங்கும் குக மூர்த்தி என்னும்படி (நீ) போது - போந்து எழுந்தருளி, உன் கருணைத் திறத்தை நான் மகிழ்ச்சியு டன் போற்றும்படியான கலை ஞானத்தைத் தந்தருளுக - அல்லது சரவணப் பொய்கையில் தாமரை மலர் மீது விளங்கின குக மூர்த்தி (எனவும்) என்று சொல்லித் துதிக்கவும், (போது) அப்போதே - உனது கருணையை மகிழ்ச்சியுடன் எடுத்து ஓதவும் - இவை தமக்கு வேண்டிய - கலை ஞானத்தைத் தந்தருளுக.

அசுரர்களுடைய (தளம்) சேனை சூழ்ந்துள்ள பெரிய நெடிய சூரன் தனது நினைவையும் இழந்து ஓட்டம் பிடிக்கும்படி வேலாயுதத்தால்-

(நிகரில்) ஒப்பிலாத வகையில் (அதம்) அந்தச் - சூரன் (அதம்) (ஹதம் ஆதலை) அழிவு உறுதலைப் (பார் ஒன்று) பார்த்தலைப் பொருந்தி யிருந்த - பார்த்திருந்த - (இமையவர்) தேவர்கள் தங்கள் மனத்திலேயே உனது (வீர) நிலையைத் தொழும்படி போர்க்களத்தில் நின்று முன்பு சண்டை செய்த வீரனே!

பருதியுடன் சோமன் *படியையிடந் தானும்
பரவ† விடந் தானுண் டெழுபாரும்-
பயமறநின் றாடும் பரமருளங் கூரும்
பழமறையன் றோதும் பெருமாளே (97)

## 1092. கழல் பெற

தனதனன தாத்த தனதனன தாத்த
தனதனன தாத்த தனதான

இருவினைக ளீட்டு மிழவுபடு கூட்டை
யெடுமெடென வீட்டி லணைவோரும்-
இறுதியிடு காட்டி லழுதுதலை மாட்டில்
எரியளரி மூட்டி யிடுமாறு;

கரியஇரு கோட்டு முரணொருமை மோட்டர்
கயிறிறுக மாட்டி யழையாமுன்-
கனகமணி வாட்டு மருவுகழல் பூட்டு
கழலிணைகள் காட்டி யருள்வாயே;

பருவமலை நாட்டு மருவுகிளி யோட்டு
‡ பழையகுற வாட்டி மணவாளா-
பகைஞர்படை வீட்டில் முதியகன லூட்டு
X பகருநுதல் நாட்ட குமரேசா;

---

* திருமால் படியை (பூமியைத்) தோண்டிச் சென்றது - பாடல் 503 -பக்கம் 146. கீழ்க்குறிப்பு - பாடல் 319-பக்கம் 292 - கீழ்க்குறிப்பு

† சிவன் விஷம் உண்டது - பாடல் 509 -பக்கம் 162 கீழ்க்குறிப்பு. ‡

‡ சுந்தரவல்லியாய் முன்னரே தவஞ் செய்தமையால் 'பழமை யாயினள் வள்ளி, வள்ளியின் வரலாறு பாடல் 624 -பக்கம் 430;பாடல் 435 -பக்கம் 590 கீழ்க் குறிப்புக்கள். பழையவளாயிருந்த காரணத்தால் தான் முருகவேள் வள்ளியைத் தினைப்புனத்திற் கண்டவுடனே-

" பெரும்புனத் திறைவி தன்னைக் கண்டனன் குமரன் அம்மா கருதிய எல்லை தன்னில், பண்டொரு புடையில் வைத்த பழம் பொருள் கிடைத்த வாபோல்" - என்றார் கந்தபுராணத்தில் (6-24-68)

X முருகவேளின் கண் நெருப்பால் அசுரர்கள் எரிபட்டது - பாடல் 263- பக்கம் 155 கீழ்க்குறிப்பு †.

சூரியனும், சந்திரனும், (படியை) பூமியை (இடந்தானும்) தோண்டிச் சென்ற திருமாலும் போற்றிப் பணிய விஷத்தைத் தான் உண்டு, ஏழு உலகமும் -

பயம் நீங்கி விளங்க நின்று ஆடுகின்ற பரமேசுரன் உள்ளம் களிக்கும் பெருமாளே! பழைய வேதங்கள் அந்நாள் முதல் ஓதுகின்ற பெருமாளே!

(உன் கருணை மகிழ்ந்தோதும் கலை நூராய்)

## 1092.

நல்வினை தீவினை எனப்படும் இரு வினைகளால் உண்டாகும் (இழவு படு கூட்டை) கேடுற்ற - இறந்துபோன - கூடாகிய இவ்வுடலை (பிணத்தை) எடுங்கள் எடுங்கள் (என) என்று கூறி - வீட்டில் உள்ள யாவரும் -

கடைசியாகச் சுடு காட்டில் அழுது, தலைப் பக்கம் எரியும்படி நெருப்பை மூட்டி வைக்கும்படி -

கரு நிறம் கொண்டதும், இரண்டு கொம்புகளை உடையதும், (முரண்) வலிமை கொண்டதுமான (எருமையுடன் வந்த) (மோட்டர்) மூர்க்கராம் (யம தூதுவர்) பாசக் கயிற்றை அழுத்தமாக மாட்டி என்னை அழைப்பதற்கு முன்பாக -

பொன்னையும் ரத்னத்தையும்கூடத் (தமது ஒளியால்) வாட்டும் வாட்டமுறும்படிச் செய்வதாய்ப், பொருந்தின கழல் சேர்ந்துள்ள திருவடி இணைகளைக் காட்டி அருள் புரிவாயாக;

(பருவ மலை நாட்டு மருவு கிளி) உயர்ந்த (வள்ளி) மலைப் பிரதேசத்தில் (தினைப் புனத்தில்) இருந்த கிளிகளை - ஓட்டிக் கொண்டிருந்தவளும். அம்மான் திருமாலின் மகளாய்ப் - பழைய உறவைப் பூண்டிருந்தவளுமான - (குற வாட்டி) குறத்தி வள்ளியின் மணவாளனே!

(பகைஞர்) பகைவர்களாம் அசுரர்களின் படை வீட்டில் (தலை நகரில்) (அல்லது பாசறையில்) முற்றின நெருப்பை ஊட்டு வித்ததும் - மூட்டியதும், (பகரும்) ஒளி விடுவதுமான (நுதல்) நெற்றி (நாட்டம்) கண்களைக்கொண்ட குமரேசனே!

*அருமறைகள் கூட்டி யுரைசெய்தமிழ் பாட்டை
அடைவடைவு கேட்ட முருகோனே;
அலைகடலி லீட்ட அவுணர்தமை யோட்டி
அமரர்சிறை மீட்ட பெருமாளே (98)

## 1093. போற்றி செய்ய

தனதனன தாத்த தனதனன தாத்த
தனதனன தாத்த தனதான

உறவின்முறை யோர்க்கு முறுதுயரம் வாய்த்து
உளமுருகு தீர்த்தி †வுடலூடே
உடலை முடிவாக்கு நெடியதொரு காட்டில்
உயர்கனலை மூட்டி விடஆவி;

மறலிமற மார்த்த கயிறுதனை வீக்கி
வலிவினொடு தாக்கி வளையாமுன்
மனமுமுனி வேட்கை மிகவுமுன தாட்கள்
மகிழ்வியல்கொ டேத்த மதிதாராய்;

பிறைநுதலி சேற்க ணமையரிவை வேட்பு
வரையில்மற வோர்க்கு மகவாகி
‡ பிறிதுருவில் வாய்த்து நிறைதினைகள் காத்த
பிடியினடி போற்று மணவாளா

அறுகுபிறை யாத்தி அலைசலமு மார்த்த
அடர்சடையி னார்க்கு மறிவீவாய

---

* மறைகள் கூட்டி உரைசெய் தமிழ் பாட்டு - திருமுருகாற்றுப் படை. திருமுருகாற்றுப் படையை நக்கீர தேவர் பாடின வரலாற்றுப் பாடல் 91-பக்கம் 212-215 கீழ்க்குறிப்பிலும், அந்தப் பாடலை முருகவேள் அன்புடன் கேட்ட விதத்தைப் பாடல் 685-பக்கம் 80-ன் கீழ்க் குறிப்பிலும் காண்க. திருமுருகாற்றுப்படையைத் தமிழ் மறை - தமிழ் வேதம் என்பர்:

" கீத இசை கூட்டி வேதமொழி சூட்டு கீரர்" -திருப்புகழ் 1278
" தமிழ்பாடற் செழுமறை" - திருப்புகழ் 1085.
" வேத மொழி மெத்த ஓதிவரு பத்தர்" திருப்புகழ் 1030.
" எங்கள் கீரன் மொழியும் பசுந்தமிழெனும் சொல்
வேதநிலை தெரியவாம்"- திருவிரிஞ்சைப் பிள்ளைத்தமிழ்
(அம்புலி 10)

(தொடர்ச்சி பக்கம் 203

அருமையான வேத மொழிகளைச் சேர்த்து உரைக்கப் பட்ட தமிழ்ப் பாடலாகிய (திரு முருகாற்றுப் படையை) (அடைவு அடைவு) முற்ற முழுதிலும் கேட்ட முருகனே!

அலை வீசும் கடலிலே கூட்டமா யிருந்த (அல்லது ஒன்று சேரும்படி) அசுரர்களை ஓட்டித் தேவர்களைச் சிறையினின்றும் மீள்வித்த பெருமாளே!

(கழலிணைகள் காட்டி அருள்வாயே )

## 1093.

உறவு முறை கொண்டுள்ள சுற்றத்தாருக்கு உண்டாகும்படித் துக்கத்தை விளைவித்து, (உளம் முருகு தீர்த்து (அவர் தம்) உள்ளத்தின் பண்பை ஒழித்து - அவர்களைக் கவலையாக்கி அல்லது உளம் உருகு தீர்த்து) அவர்தம் மனக் கவலையால் உருகுதலை விட்டு, இவ்வுடலூடே - இந்தப் பிறவியில் (ஏற்பட்ட)

(உடலை) தேகத்தை அழிவு செய்கின்ற பெரிய ஒரு சுடுகாட்டில் மிக்கெழும் நெருப்பை மூட்டிவிட, உயிரை

யமன் தனது வீரம் பொருந்திய பாசக் கயிற்றால் கட்டி, வலிமையுடனே மோதி வளைத்து, இழுப்பதன் முன் -

(எனது) மனமும் (உனி) உன்னி - உன்னை நினைத்து (வேட்கை) காதல் - பக்தி மிக உண்டாக உன்னுடைய திருவடிகளை (மகிழ்வு) மகிழ்ச்சியுடனும், (இயல்) ஒழுக்கத்துடனும், போற்றுதற்குப் புத்தியைத் தந்தருளுக;

(பிறைநுதலி) பிறைபோன்ற நெற்றியையும், சேல் மீன்போன்ற கண்களையும் உடைய (அமை) அம்மை - தாய் (அல்லது சேல் கண் -அ-மை- சேல் போலும் கண்ணில் அந்த மை பூசிய) அரிவை (மாது) வேட்பு வரையில் - மன்றல் மலையில் - கலியாண மலையில் - அல்லது (அந்த மாது) - விருப்பத்துடன் வளர்ந்த மலையில் வள்ளிமலையில் இருந்த வேடர்களுக்குக் - குழந்தையாகப் -

(பிறிதுருவில்) (மாநுடம் அல்லாத) மான்வயிற்றில் தோன்றி, நிறைய இருந்த தினைக் கொல்லையைக் காத்த பிடி - பெண் யானை - ஆகிய வள்ளியின் அடிகளைப் போற்றித் துதித்த மணவாளப் பிள்ளையே!

அறுகம் புல், பிறைச் சந்திரன், ஆத்தி மலர், அலை வீசும் நீர் கொண்ட கங்கை இவைகளைச் சூடியுள்ள நெருங்கின சடை முடியை உடைய சிவ பெருமானுக்கும் உபதேசப் பொருளை ஈந்தாய் - ஈந்தவனே! (ஓதினவனே!)

---

† உடல் - பிறவி; "சடையரல். கை ஏற்றுணவால், சாம்பரால், தோலின் உடையாலும் தீரா துடல்" - சைவசமய நெறி - 403 -

‡ பிறிதுருவில் = மான் வயிற்றில்.

அடரவரு போர்க்கை அசுரர்கிளை மாய்த்து
அமரர்சிறை மீட்ட பெருமானே (99)

## 1094. திருவடியைப் பெற

தனனதன தனனதன தனனதன தனனதன
தனனதன தனனதன தனதான

அளகநிரை குலையவிழி குவியவளை கலகலென
அமுதமொழி பதறியெழ அணியாரம்-
அழகொழுகு புளகமுலை குழையஇடை துவளமிக
அமுதநிலை யதுபரவ அதிமோகம்;
உளமுருக வருகலவி தருமகளிர் கொடுமையெனு
முறுகபட மதனில்மதி யழியாதே-
*உலகடைய மயிலின்மிசை நொடியளவில் வலம்வருமு
னுபயநறு மலரடியை அருள்வாயே;
† வளையமலை கடல்சுவற விடுபகழி வரத‡னிரு,
மருதினொடு பொருதருளு மபிராமன்-
வரியரவின் மிசைதுயிலும் வரதஜய மகள் கொழுநன்
மருகஅமர் முடுகிவரு நிருதேசர்;
தளமுறிய வரைதகர அசுரர்பதி தலைசிதற
தகனமெழ முடுகவிடு வடிவேலா-
தரளமணி வடமிலகு குறவர்திரு மகள்கணவ
X சகலகலை முழுதும்வல பெருமானே (100)

---

* உலகை வலம் வந்தது - பாடல் 184 -பக்கம் 430 கீழ்க்குறிப்பு

† கடல்மீது பாணம் விட்டது:- பாடல் 177-பக்கம் 412
வருண மந்திரம் ஜெபித்தும் வருணன் வந்து வழிவிடாததால்,
ஸ்ரீராமர் கோபித்துக் கடல் சுவறப் பாணத்தை விட்டனர்.-
"எறிகடல் நெறிதனை மறுத்தால் நன்று நன்றென...
சுடு சரம் எய்தான்"- கம்பராமா - வருணனை வழி -9, 18.
" ஆழியிற் புனவற மணிகள் அட்டிய
பேழையிற் பொலிந்தன பரவை' - 52

‡ மருதொடு பொருதது - பாடல் 14 3 பக்கம் - 332-குறிப்பு.

X சகல கலை வல்லவர் - பாடல் 320 -பக்கம் 296 கீழ்க்குறிப்பு.

நெருங்கி வரும் (போர்க்கை) போர்க்களத் திடத்தே அசுரர்களின் சுற்றத்தை மாய்த்தொழித்துத் தேவர்களைச் சிறையினின்றும் மீட்டருளிய பெருமாளே!

(உன தாட்கள்- ஏத்த மதி தாராய்)

# 1094.

கூந்தலின் வரிசை கலைய, கண்கள் குவிய, வளைகள் கலகல என்று ஒலிக்க, அமுதம் போன்ற மொழிகள் (பதறி எழ) பதறுதலுடன் பெருக, அணிந்துள்ள முத்துமாலை -

அழகு ஒழுகுவதும், புளகம் கொண்டதுமான கொங்கையின் மீது துவள, இடை நெகிழ, மிகவும் காம இன்ப ரச நிலைபெருக, அதிக ஆசையுடன் -

உள்ளம் உருக ஏற்படுகின்ற புணர்ச்சியைத் தருகின்ற பெண்களின் கொடுமை என்று சொல்லத் தக்க வஞ்சகச் சூழ்ச்சியிலே (என் புத்தி) அழிந்துபோகாமல் -

உலகம் முழுமையும், மயில்மீதேறி ஒரு நொடிப்பொழுதில், வலம் வந்த உனது இரண்டு - நறுமணம் வீசும் மலர்ப் பாதங்களைத் தந்தருளுக.

வளைந்துதள்ள அலைகடல் வற்றிப் போம்படிச் செலுத்தின அம்பைக் கொண்ட வரதன், இரண்டு மருதமரங்களைத் தாக்கி அருள்பாலித்த (அபிராமன்) அழகன் -

கோடுகளை உடைய பாம்பின் - மேலே துயில்கின்ற வரதன், விஜயலக்ஷ்மியின் கணவன், ஆகிய திருமாலின் மருமகனே! போர்க்கு முடுக்குடன் வந்த அசுரத் தலைவர்களின் -

சேனைகள் சிதற, மலைதூள்பட, அசுரர்தலைவன் சூரனது தலை சிதறிவிழ, (தகனம் எழ) நெருப்பு பெருகி எழ, விரைவிற் செலுத்தின கூரிய வேலனே!

முத்துமாலை, மணிமாலை இவை விளங்கும் குறவர் குலத்து அழகிய மகள் - வள்ளியின் கணவனே! சகல கலைகளிலும் முற்றும் வல்ல பெருமாளே!

(மலரடியை அருள்வாயே)

## 1095. உபதேசம் பெற

தனனதன தனனதன தனனதன தனனதன
தனனதன தனனதன தனதான

அனகனென அதிகனென அமலனென அசலனென
அபயனென அதுலனென அநபாயன்
அடல்மதன னெனவிசைய னெனமுருக னென*நெருடி
யவர்பெயரு மிடைசெருகி யிசைபாடி;
† வனசமணி பணிலமழை சுரபிசுரர் தருநிகர்கை
மகிபனென தினையளவு மளவுமீயா
மனிதர்கடை தொறுமுழலு மிடியொழிய மொழியொழிய
மனமொழிய வொருபொருளை அருள்வாயே;
இனனிலவு தலைமலைய அடியினுகி ‡ரிலைகளென
இருசதுர திசையி×லுர கமும்வீழ
○ இரணியச யிலம்ரசித சயிலமர கதசயில
மென்**விமலை யமுனையென நிழல்வீசிக்,

---

* நெருடி = இணைத்து

† கொடைக்குப் பேர் போனவை - பதும நிதி, சிந்தாமணி, சங்க நிதி, மேகம், காமதேனு, கற்பகதரு.

" உம்பர்தருத் தேனுமணிக் கசிவாகி" - விநா. துதி - 2.

" எவை எவை கருதில் அவை அவை தரு கொடையால், மணி, மேகராசி, சுரபி அவற்றொடு சங்க, கஞ்ச, பஞ்ச சாலத்தை வென்றன... கந்தன் எந்தை இந்த்ர நீலச் சிலம்பினன்... வாகைப் புயங்களே." - புய வகுப்பு.

‡ மயிலின் அடிக்கு - நொச்சி இலை உவமை - பாடல் 784 - பக்கம் 326 - கீழ்க்குறிப்பு.

× அஷ்ட நாகங்கள்: வாசுகி, அனந்தன், தக்கன், சங்கபாலன், குளிகன், பதுமன் , மகாபதுமன், கார்க்கோடகன்.

○ மயிலின் தோற்றம் - பொன்மலை, வெள்ளிமலை மரகத மலை போன்றது - "சிகர தமனிய மேருகிரி, ரசதகிரி, நீலகிரி எனவும்... நீழலிட்டு" - மயில் விருத்தம் 9

" பலநிற மிடைந்த விழுசிறை யலர்ந்த பருமயில்"... திருப்புகழ் 164. 'மரகதத் தமனிய மயில்' - பாடல் 382.

** மயிலின் நிறம் - யமுனை நதியின் நிறம் -

" தெய்வநதி காளிந்தி என நீழலிட்டு - "மயில் விருத்தம் 9.

"விமலையமுனை' - பாடல் 1048-பக்கம் 122 குறிப்பு.

# 1095.

பாபம் அற்றவன் எனவும், (*அதிகன்) யாவரினும் மேம் பட்டவன் எனவும், மலம்மாசு அற்றவன் எனவும், அசலன் (எதற்கும் அசையாதவன்) எனவும், யார்க்கும் அபயம் (அடைக்கலம்) அருள்பவன் (அல்லது அச்சம் அற்றவன் எனவும்), தனக்கு நிகரில்லாதவன் எனவும், அபாயங்கள் இல்லாதவன் (அல்லது அழிவில்லாதவன் எனவும்)

வலிமை வாய்ந்த மன்மதன் எனவும், அருச்சுனன் எனவும், முருகன் எனவும் இணைத்தமைத்து (யாரிடம் பொருள் வேண்டுமோ) அவர் பெயரும் வரும்படிப் பாடிய பாட்டின்) இடையிலே (செருகி)- நுழைத்து அந்தப் பாடலை இசையுடன் பாடி -

(வனசம்) பதுமநிதி, (மணி) சிந்தாமணி என்னும் ரத்னம், (பணிலம்) சங்கநிதி, (மழை) மேகம், (சுரபி) காமதேனு, (சுரர்தரு) சந்தானம் அரிசந்தனம், மந்தாரம், பாரிஜாதம், கற்பகம் எனப்படும் ஐவகைத் தெய்வ விருக்ஷங்கள் - இவைகளுக்குக் கொடையில் ஒப்பான கையை உடைய அரசனே நீ - என்று தினை அளவு உள்ள பொருளையும் கொடுக்காத -

மனிதர்களின் வீட்டு வாசல்தோறும் (சென்று புகழ்ந்து) திரிகின்ற தரித்திர நிலை நீங்கவும், வாக்கு அடங்கவும், மனம் ஒடுங்கவும், ஓர் உபதேசப் பொருளை (எனக்கு) அருள்புரிவாயாக.

(இனன்) சூரியன், நிலவு (சந்திரன்) இவைகளின் ஒளியைத் தலை - தலைப்பாகம் (மலைய) நிகர்க்க, (அல்லது இனன் - சூரியன் நிலவுதலை - ஒளிவிடுதலை - மலைய - நிகர்க்கக்), கால் அடிகளின் நகங்கள் (நொச்சி) இலையை நிகர்க்க, இருசதுர திசையில் - (இருநான்கு) - எட்டுத் திசைகளில் உள்ள - அஷ்ட நாகங்களும் (தன்னைக் கண்டதும்) அச்சம் உற்றுக் கீழே விழ -

(இரணிய சயிலம்) பொன்மலை - (மேரு போலவும்). (ரசித சயிலம்) வெள்ளிமலை - (கயிலைமலை போலவும்), மரகத மலை - பச்சைமலைபோலவும் (சங்கோய்மலை போலவும்) விளங்குவதாய், (விமலை) (தேவி திருக்கையினின்று வந்த) நதிகளுள் ஒன்றாகிய யமுனையின் (நீல) ஒளியை வீசி -

---

*அதிகன் அதியமான் என்னும் வள்ளலைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். ஒளவைக்கு நெல்லிக்கனி கொடுத்துப் பெயர் பெற்ற வள்ளல் இவன்.

"கமழ் பூஞ் சாரற் கவினிய நெல்லி அமிழ்து விளைதீங்கனி ஒளவைக் கீந்த..... அரவக் கடற்றானை அதிகன்"- சிறு பாண். 100

*ககனமழை யுகைகடவு ளுடலமென முதியவிழி
கதுவியெழில் பொதியமிசை படர்கோலக்-
† கலபகத மயில்கடவு நிருதர்கஜ ரததுரக
கடகமுட னமர்பொருத பெருமாளே (101)

## 1096. அறிவுபெற

தனனதன தனனதன தனனதன தனனதன
தனனதன தனனதன தனதான

‡ குடருமல சலமுமிடை யிடைதடியு முடையளவு
கொழுவுமுதி ரமும்வெளிற ளறுமாகக்-
கொளகொளென அளவில்புழு நெளுநெளென
விளைகுருதி
குமுகுமென இடைவழியில் வரநாறும்;

*இந்திரன் ஆயிரம்கண் பெற்றது - கௌதம முநிவரின் மனைவி அகலிகையைக் கூட எண்ணின இந்திரன் - சாபம் பெற்ற வரலாற்றை -பாடல் 379 - பக்கம் 458 - கீழ்க்குறிப்பிற் காண்க.

" ஆயிர மாதர்க் குள்ள அறிகுறி உனக்குண் டாகென்
றேயின னவை எலாம்வந் தியைந்தன இமைப்பின் முன்னம்
அந்த இந் திரனைக் கண்ட அமரர்கள் பிரமன் முன்னா
வந் து கோதமனை வேண்ட மற்றவை தவிர்த்து மாறாச்
சிந்தையின் முனிவு தீர்ந்து சிறந்த ஆயிரங்கண்ணாக்க"-

- கம்பராமா. அகலிகை - 78, 81.

" பாக சாதன! நிற்கவைபெலாம் கண்களாயிர மாகெனப்
பகர்ந்தான்" - கழியல் புரா - கௌதம - 7.

" கரவுதீர் யோனிமுற் றும் கண்களாப் பொலியச் செய்தாம்
... ஆயிரங் கண்ணனானான் - நாகைப்புரா - காகதீர்த்தம் 56.

சாபம் தீர்ந்து இந்திரன் ஆயிரங் கண்பெற்ற தலம்-திருக்கண்ணார் கோயில். இது வைத்திசுரன் கோயிலுக்குத் தென் கிழக்கு 1 1/2 மைல் தூரத்தில் உள்ளது.

" முன்னொரு காலத் திந்திரன் உற்ற முனிசாபம்
பின்னொரு நாளவ் விண்ணவ ரேத்தப் பெயர் வெய்தித்
தன்னரு ளாற்கண் ணாயிரம் ஈந்தோன் சார்பென்பர்
கன்னியர் நாளுந் துன்னமர் கண்ணார் கோயிலே" -

- சம்பந்தர் - 1-101-7.

ஆகாயத்தில் உள்ள மேகங்களை வாகனமாகக் கொண்ட (கடவுள்) இந்திரனுடைய (உடலம் என) தேகம் என்று சொல்லும்படி. - உடல் முழுமையும் - (முதிய விழி கதுவி) முற்றின கண்களைக் கொண்டதாய், அழகு நிரம்பி மேலே படர்ந்துள்ள கோலத்தைக் கொண்ட

தோகையை உடைய (மயில் கசும்) மயில் பட்சியை நடத்தி, அசுரர்களின் யானை, தேர், குதிரை, காலாட்படை என்னும் நாற் படைகளுடனும் போர் செய்த பெருமானே!

(ஒரு பொருளை அருள்வாயே)

## 1096.

குடல், மலம், ஜலம் நெருங்கியதாய், இடையிடையே (துடியும்) மாமிசமும் உடையதாய், அளவு (கொழுவும்), அளவுக்கு ஏற்ற கொழுப்பும், (உதிரமும்) ரத்தமும், வெளிறு அளறுமாக - நிறம் கெட்டு வெளுத்து - குழைசேறு - குழம்புபோலாக -

கொள கொள என ஆகி, கணக்கற்ற புழுக்கள் நெளு நெளு என்று நெளிய உண்டாகும் ரத்தம் குமு குமு என்று பரவ, வழியின் மத்தியிலே வரும்போதே துர் நாற்றம் வீசும் -

---

† 1095 பாடல் முதல் - 1099 பாடல் முடிய ஐந்து பாடல்கள் - மயில் பாடல்கள். மயிலின் ஆற்றல், அழகு, வண்ணம் - இவை அருமையான வகைகளில் ஓதப்பட்டுள. 1095-ஆம் பாடலில் மயிலின் பலவிதநிறம், நொச்சியிலை போன்ற அடி யமுனை நதிபோன்ற நீல நிறம், இந்திரனைப் போல ஆயிரங்கண்கள் கொண்ட பீலி - கூறப்பட்டுள. 1096-ஆம் பாடலில் திருமாலுக்கு எவ்வகையில் மயில் ஒக்கும் என்பது கூறப்பட்டுளது: அவருடைய சக்கரம் - சங்கு இவைகளின் ஆற்றல் போல ஆற்றல், அவரது உலகளந்த விசுவரூபம் போன்ற நெடிய உருவம் - மயிலுக்கு உண்டு என்பது புலப்படுத்தப்பட்டுளது. 1097- ஆம் பாடலில் யுகாந்த காலத்து ஊழித்தீயின் புகைக்கு மயிலின் ஓட்டமும் ஆற்றலும் ஒப்பிடப்பட்டுள 1098-ஆம் பாடலில் மயிலின் வேகம் கணபதியாம் களிற்றையும் பிளிறும்படிச் செய்ததென்பர். 1099-ஆம் பாடலில் நடராஜப் பெருமானும் மகிழும்படி நடனம் செய்ய வல்லது மயில் எனப் புகழப்பட்டுள்ளது.

‡ "குடரும் கொழுவும் குருதியும் என்பும்
தொடரு நரம்பொடு தோலும் - இடையிடையே
வைத்த தடியும் வழும்புமாம் மற்றிவற்றுள்
எத்திறத்தாள் ஈர்ங் கோதை யாள்" - நாலடி. -5-6.

- திருப்புகழ் 1060-ம் பார்க்க.

உடலின்மண மலிபுழுகு நடலியணி கலமிலக
வுலகமரு ளுறவருமரி லைவயாரன்-
பொழியவினை யொழியமன மொழியஇருளொழிய *என
தொழிவிலக லறிவையருள் புரிவாயே;
வடகனக சயிலமுத லியசயில மெனநெடிய
வடிவுமொரு நெடியவிறல் மருவாரை-
வகிருமொரு திகிரியென மதிமுதிய †பணிலமென
மகரசல நிதிமுழுகி விளையாடிக்;
கட‡லுலகை யளவுசெய வளருமுகி லெனஅகில
×ககனமுக டுறநிமிரு முழுநீலக்-
கலபகக மயில்கடவி நிருதர்கஜ ரததுரக
கடகமுட னமர்பொருத பெருமாளே (102)

## 1097. திருவடியை உணர

தனதனன தனதனன தனதனன தனதனன
தனதனன தனதனன தனதான

குதறுமுனை யறிவுகொடு பதறியெதிர் கதறிமிகு
○குமுதமிடு பரசமய மொருகோடி-
குருடர்தெரி வரியதொரு பொருள்தெரிய நிகழ்மனது
கொடியஇரு வினையெனும ளறுபோக;

---

* எனது ஒழிவு = தற்போத ஒழிவு.

† திருமாலின் பணிலம் - (பாஞ்ச சன்னியம் என்னும்) சங்க நாதமும் பகைவரை வாட்ட வல்லது - பாடல் 889 - அடி 5- கீழ்க்குறிப்பு பக்கம் 596, 597.

" பற்றார் நடுங்க முன் பாஞ்ச சன்னியத்தை
வாய்வைத்த போரேறே" - பெரியாழ்வார் 3-3-5

‡ உலகளந்தது - பாடல் 268 -பக்கம் 166- கீழ்க்குறிப்பு.

× " ககன மெனுமுகடும் அதிர நடனமிடு கலப மயிலிறைவ
வருகவே"- திருவிரிஞ்சைப் பிள்ளைத் தமிழ்.

" ககன கூடமுமேலை முகடு மூடிய பசுங்
கற்றைக் கலாப மயிலாம்"- மயில் விருத்தம் 6.

○ குமுதம் = பேரொலி. சமயக் கூச்சல் - 'கொந்துகா என மொழிதர வருசமயவிரோதத் தந்த்ர வாதிகள்"-

"சங்கைக் கத்தோடு சிலுகிடு" - திருப்புகழ் 289, 945.

" சலசல மிழற்றும் சமய விகற்பமும்"- பெருங்கதை 1-32-4.

தேகத்தில் நறுமணம் நிறைந்த புனுகுசட்டம் ஆதிய வாசனைப் பொருள்களைப் பூசி, அதன்மேல் ஆபரணங்கள் விளங்க, உலகமக்கள் (காம) மயக்கம் கொள்ளும்படி வருகின்ற (அரிவையார்) மாதர்களின் மீதுள்ள (அன்பு) மோகம் -

(ஒழிய) நீங்க, வினை ஒழிய - கர்மவினையெல்லாம் விட்டு நீங்க, (மனம் ஒழிய) மனம் ஒடுங்க, (இருள் ஒழிய) அஞ்ஞான இருள் நீங்க, (எனது ஒழிவில்) - தற்போத ஒழிவினால் - யான் எனது - எனப்படும் அகங்கார மமகாரங்கள் நீங்குவதால் - அகல் - விசாலப்படும் பெருகி எழும் - (அறிவை) ஞானத்தை அருள்புரிவாயாக.

வடக்கே உள்ள (கனகசயிலம்) மேரு முதலிய (சயிலம் என) மலைகள் என்னும்படியும், பெருத்தவடிவைக் கொண்டு மிக்க வலிமை கொண்ட (மருவாரை) பகைவர்களை

(வகிரும் ஒரு திகிரி என) பிளந்து எறியும் (திருமாலின்) ஒப்பற்ற (சுதர்சனம் என்னும்) சக்ராயுதம் என்னும் படியும், (மதி முதிய பணிலம் என) - சந்திரன் போல முற்றின வெண்மை நிறம் கொண்ட (பாஞ்ச சன்னியமாம்) சங்கு என்னும்படியும் விளங்கி, மச்சாவதாரத்தில் மகர மீன்கள் உள்ள கடலிலே முழுகி விளையாடிக்-

கடல் சூழ்ந்த இந்த உலகை அளவிட வளர்ந்த - நீண்ட ரூபம் கொண்ட மேக நிறத்திருமால் என்னும்படி ஓங்கி, (அகில ககன முகடு உற) ஆகாய உச்சி முழுமையும் பொருந்தும்படி நிமிர்ந்தெழுந்த - முழு நீல நிறமுள்ள

தோகையைக் கொண்ட மயில் ககம்) மயில் எனும் பறவை யைச் செலுத்தி அசுரர்களின் யானை - தேர் - குதிரை - காலாட் படை ஆகிய நால்வகைச் சேனைகளுடன் போர்புரிந்த பெருமாளே!

(அறிவை அருள் புரிவாயே)

## 1097.

(சுதறும்) சிதறுண்டு நெறிதவறினதும், (முனை) ஆழமில்லாதது - நுனிப்புல் மேய்ந்தது போன்றதுமான - (அறிவுகொடு) சிற்றறிவைக் கொண்டு பதறி -கொதிப்புற்றுப் பேசியும். எதிர்க் கூச்சலிட்டும், மிக்க பேரொலியை எழுப்புகின்ற பரசமயங்களைப் பற்றின ஒருகோடி-

குருடர்களுக்கும் தெரிவதற்கு அரிதான ஒப்பற்ற ஒரு பொருளை (நான்) அறிந்து கொள்ளுமாறு , (நிகழ் மனது) ஓடிக் கொண்டே இருக்கும் மனம், பொல்லாத (நல்வினை - தீவினை எனப்படும், இரண்டு வினைகள் எனப்படும் (அளறு) சேறு இவை போகும்படி -

உதறிவித நியகரண மரணமற விரணமற
வுருகியுரை பருகியநு தினஞான-

உணர்வுவிழி பெறவுனது மிருகமத நளினபத
யுகளமினி யுணர **அருள் புரிவாயே**

சிதறவெளி முழுதுமொளி திகழுமுடு படலமவை
சிறுபொறிக ளெனவுரக பிலமேழுஞ்-

செகதலமு நிகர்சிகரி பலவுநல கெசபுயக
திசையுமுட னுருகவரு *கடைநாளிற்,

கதறுமெழு கடல்பருகி வடவைவிடு கரியபுகை
யெனமுடிவில் ககனமுக டதிலோடுங்-

கலபகக மயில்கடவி நிருதர்கஜ ரததுரக
கடகமுட னமர்பொருத பெருமாளே (103)

## 1098. கண்பார்த்தருள

தனதனன தனதனன தனதனன தனதனன
தனதனன தனதனன தனதான

வதைபழக மறலிவிறல் மதனன்வழி படுதுமென
வயிரமர கதமகர மளவாக-

---

* கடைநாள் வர்ணனை -
" இருநிலனது புனலிடை மடிதர எரிபுக
எரியது மிகு பெருவளியினில் அவிதர
வளிகெட வியனிடை முடிவது கெட." சம்பந்தர் 1-22-7

உதறித்தள்ளி, (விதறிய) பதறுகின்ற (கரணம்) (மனம், புத்தி, அகங்காரம், சித்தம் எனப்படும்) கரணங்கள் நான்கும், (மரணம்) இறப்பும் (அற) நீங்கவும், (இங்ஙனம்) விரணம் அற - எனக்குள் பகைமைகள் நீங்க, (அல்லது இரணம் அற-இவைகளின் போர் ஒழிய), உருகி - நெஞ்சம் கரைந்து, உரை பருகி- (உனது) புகழைப் பாடி நுகர்ந்து - அனுபவித்து, நாள்தோறும் ஞான

உணர்ச்சி கொண்ட கண்ணைப் பெற -ஞானக்கண்ணைப் பெற - உன்னுடைய கஸ்தூரி மணம் கமழுவதும் தாமரை மலர் போன்றதுமான (பதயுகளம்) திருவடி இணையை இனி நான் உணர்ந்து உய்ய அருள் புரிவாயாக.

(கிரணங்கள்) விரிய, (வெளிமுழுதும்) ஆகாயம் முழுமையும் விளக்கங் கொள்ளும் (உடுபடலம் அவை) நட்சத்திரக் கூட்டங்கள் சிறிய (பொறிகளென) தீப்பொறிகள் போல (உருக) , (உரகபிலம்) நாகலோகம் - பாதாள லோகம் ஆதிய ஏழு

(செகதலமும்) உலகங்களும் (நிகர்) ஒளிவீசும் பலமலைகளும், நல்ல (கெஜ புயக திசையும்) அஷ்ட கஜங்களும், அஷ்ட நாகங்களும் உள்ள அஷ்ட திசைகளும் (உடன் உருக) ஒன்றுபட்டு கூடவே உருகித்தோன்றுகின்ற (கடைநாளில்) யுக முடிவாம் அந்த நாளில் -

ஒலித்து எழுகின்ற (கடலை) அல்லது ஒலிக்கும் ஏழு கடல் களையும் (பருகி) உண்டு, (வடவை) வடவா முகாக்கினி (விடு கரிய புகை) எழுப்புகின்ற கரிய நிறப் புகை என்று சொல்லும்படி (முடிவில்) முடிவு இல்லாத பரந்த (ககன முகடு அதில்) ஆகாய உச்சியில் ஓடுகின்ற-

தோகைப் பட்சியாம் மயிலைச் செலுத்தி, அசுரர்களுடைய யானை, தேர், குதிரை காலாட்படை என்னும் நால் வகைச் சேனைகளுடன் போர் செய்த பெருமாளே!

(பதயுகளம் உணர அருள் புரிவாயே)

## 1098.

வதைக்குந் தொழிலில் பழகின அந்த (மறலி) யமனும் (விறல் மதனன்) வலிமை - வெற்றி வாய்ந்த மன்மதனும் (நாங்கள் உனது கொடுமையைக் கற்றறிய உன்னை) வழிபடுவோம் என்று சொல்லும் வகையில், வயிரத்தாலும், மரகதத்தாலும் ஆன மகரமீன் போன்ற குழைகளையு டைய காதின் (அளவாக) அளவு க்கு நீண்டு,

வரிசிதறி விடமனைவி வளருமிரு கலகவிழி
வளையிளைஞ ருயிர்கவர வருமாய;
இதையமள விடஅரிய அறிவையர்கள் நெறியொழுகி
எழுபிறவி நெறியொழிய வழிகாணா-
இடர்கள்படு குருடனெனை அடிமைகொள மகிழ்வொடுன
திருநயன கருணைசிறி தருள்வாயே;
*பதயுகள மலர்தொழுது பழுதில்பொரி அவல்துவரை
பயறுபெரு வயிறு † நிறை யவிடாமுப்-
பழமுமினி துதவிமுனி பகரவட சிகரிமிசை
பரியதனி யெயிறுகொடு குருநாடர்;
கதைமுழுது மெழுது மொரு ‡களிறுபிளி றிடநெடிய
கடலுலகு நொடியில் வரு மதிவேகக்-
கலபகக மயில்கடவி நிருதர்கஜ ரததுரக
கடகமுட னமர்பொருத பெருமாளே (104)

## 1099. திருவடியை மறவேன் என்றது

தனதனன தனதனன தனதனன தனதனன
தனதனன தனதனன தனதான

விடமனவி யரிபரவு விழிகுவிய மொழிபதற
விதறிவளை கலகலென அநுராகம்-

---

* விநாயகர் பாரதம் எழுதின வரலாறு ; - பாடல் 441-பக்கம் 608 கீழ்க்குறிப்பு

" வேதவி யாச னன்பு கெடாதே பாரதம், வாளிலங்கிய ஏடா மேருவின், வாய் வரைந்த பிரானே வாழிய"- திருவையாற்றுப் புராணம்.

" மாளுமயம் பொற்றை ஏடா, வைந்நுதி யாணி கோடா, ஆழி சூழ் உலக வேந்தர் ஐவர் சீர் வரைந்த பிள்ளை"- வீர சிங்காதன புராணம்.

" மருப்ப தாம் எழுத் தாணியால் ஆயிர மாற்றுப்
பொருப்ப தாந்தனி ஏட்டிலே பாரதப் பொருளை
விருப்ப தாம்படி எழுதிய கரிமுக விமலன்
திருப்ப தாம்புய மலரினை யிறைஞ்சுவாம் சிரத்தால்"
- செவ்வந்திப் புராணம்.

"நீண்ட வரை வரைமீது நிறை குணத்தோன் சொல் பனுவல்
பூண்டதனி மருப்பாரப் புனைந் தெழுதி"-
- சீகாழிப் புராணம். தொடர்ச்சி பக்கம் 215.

ரேகைகள் பரவ, விஷத்தைக் கொண்டதாய்ப் பரந்து வளர்ந்துள்ள இரண்டு விழிகளை (காமப்) போருக்கு ஏற்ற விழிகளைக் கொண்டு, (வளையிளைஞர்) தங்கட்கு இணங்கிய இளைஞர்களுடைய அல்லது) கலக விழிகள் கொண்டு வளைத்த (அகப்படுவித்து) இளைஞர்களுடைய உயிரைக் (கவர வரும்) கொள்ளை கொள்ளவரும் மாயம் வல்லவரும் -

(தங்கள்) இதயத்தின் எண்ணத்தை (பிறர்) அளவிட்டு அறிதற்கு அரியவர்களுமான (அரிவையர்கள்) மாதர்களின் வழியிலே பட்டு நடந்து, எடுத்த பிறவிக்கு உள்ள நன்னெறியை விட்டு (அல்லது எழு வகை பிறவியெனப்படும் பிறவியின் நன்னெறியை விட்டு உண்மை வழியை (மெய்ந் நெறியைக்) காணாமல்

வேதனைகள் படுகின்ற குருடனாகிய என்னை அடிமை கொள்ளும் பொருட்டு மகிழ்ச்சியுடனே உனது இரண்டு கண்கொண்டு (கடாக்ஷித்து) கருணை சிறிது அருள் புரிவாயாக.

திருவடிகள் இரண்டையும் மலர்கொண்டு பூசித்துத்தொழுது, மாசு இல்லாத பொரி, அவல், துவரை, பயறு இவை தமைப் பெரு வயிற்றில் (நிறைய இடா) நிறைய இட்டு (அளித்து) மூவகைப்-

பழங்களாகிய (வாழை, மா, பலா) இவைகளை இனிய மனத்துடன் நிவேதித்து, ((முனி) வியாச முநிவர் (பகர) சொல்லி வர, (வட சிகரிமிசை) வடக்கேயுள்ள மேரு மலையின்மீது, பரிய) பருத்த (தனி எயிறு கொடு) ஒற்றைக் கொம்பைக் கொண்டு (அல்லது) ஒப்பற்ற தனது தந்தத்தைக் கொண்டு, (குரு நாடர்) குரு நாடர்களாகிய பாண்டவர்களின் -

சரித்திரம் முழுதும் எழுதின ஒப்பற்ற யானை (கணபதி; பிளிறிடும்படி நீண்ட கடலால் சூழப்பட்ட உலகத்தை ஒரு நொடிப் பொழுதில் வலம் வந்த அதிக வேகத்தைக் கொண்ட

தோகைப் பட்சியாம் மயிலைச் செலுத்தி அசுரர்களுடைய யானை, தேர், குதிரை, காலாட்படை ஆகிய நாற்படைகளுடன் போர் புரிந்த பெருமாளே!

(இரு நயன கருணை சிறிது அருள்வாயே)

## 1099.

விஷத்தைக் கலந்ததாய், ரேகைகள் பரவினதாய் உள்ள கண்கள் குவிய, மொழிகள் பதற, அசைவுற்று வளைகள் கலகல என்று ஒலிக்கக், காம ஆசை

---

† நிறைய இடா = நிறைய இட்டு.

‡ உலகெலாம் சுற்றி வரும் (முருகரின்) மயிலின் வேகத்தைக் கண்டு (விநாயக) யானை அஞ்சிப் பிளிறினது - கூறப்பட்டுளது.

விளையம்ருக மதமுகுள முலைபுளக மெழநுதலில்
வியர்வுவர அணிசிதற மதுமாலை;
அடரளக மவிழஅணி துகிலகல அமுதுபொதி
யிதழ்பருகி யுருகியரி வையரோடே-
*அமளிமிசை யமளிபட விரகசல தியில்முழுகி
யவசமுறு கினுமடிகள் மறவேனே;
† உடலுமுய லகன்முதுகு நெறுநெறென எழுதிமிர
வுரகர்பில முடியவொரு பதமோடி-
உருவமுது ‡ககனமுக டிடியமதி முடிபெயர
வுயரவகி லபுவனம திரவீசிக்;
கடககர தலமிலக நடனமிடு மிறைவர்மகிழ்
கருதரிய விதமொடழ குடனாடுங்-
கலபகக மயில்கடவி நிருதர்கஜ ரததுரக
கடகமுட னமர்பொருத பெருமாளே (105)

## 1100. உபதேச மொழிபெற

தனதனன தான தத்த தனதனன தான தத்த
தனதனன தான தத்த தனதான

எழுபிறவி நீர்நிலத்தி லிருவினைகள் வேர்பிடித்து
இடர்முளைக ளேமுளைத்து வளர்மாயை-
எனுமுலவை யேபணைத்து விரககுழை யேகுழைத்து
இருளிலைக ளேதழைத்து மிகநீளும்;

---

* அமளிமிசை அமளிபட - பாடல் 189, 510, 906 - பார்க்க.

† முயலகன் வரலாறு; தமது பத்தினிகளின் கற்பைக் கலைத்தனர் சிவபிரான் என்று கோபித்த தாருகா வனத்து முனிவர்கள் ஒரு வேள்வி செய்து அவ் வேள்வியில் எழுந்த புலி, மழு, மான், பூதங்கள் முதலியவற்றை அவர்மேல் ஏவினர். (பாடல் 286 - பக்கம் 210 கீழ்க் குறிப்பைப் பார்க்க.) பின்னும், அந்த வேள்வியில் எழுந்த முயலகன் என்னும் பூதத்தைச் சிவபிரான்மீது ஏவினர். இறைவன் முயலகனை வீழ்த்தள்ளி அதன் முதுகின்மீது திருவடியை ஊன்றி நின்றாடினர்.

"முயலகன் தன்னை மெல்லத் தன்னடி அதனால் வீழ்த்தள்ளி அக்கமலத் தாளை,வென்னிடை அருளால் ஊன்றி விண்ணவர் போற்ற நின்றான்"- கந்தபுரா 6-13-115. 'பங்கய லைத்தாள் பண்பின் முயலகன் முதுகிலூன்றித் துங்கநூ புரங்க ளார்ப்பத் துலங்கிடத் தாள் குஞ்சித்தே, செங்கையான் மழுவோன் தூய சிங்கார நடனஞ்செய்தான் - கடம்ப புரா. 5-13. தொ.பக். 217.

உண்டாகக், கஸ்தூரி அணிந்ததும், அரும்பு போன்ற கொங்கையில் புளகம் உண்டாக, நெற்றியில் வேர்வை வர, அணிகலன்கள் சிதற, தேனிறை மலர் மாலை

நெருங்கியுள்ள கூந்தல் அவிழ, அணிந்துள்ள ஆடை விலக, அமுதம் பொதிந்துள்ள வாயிதழ் ஊறலை உண்டு, உள்ளம் உருகி, (அரிவையரோடே) மாதர்களுடனே -

(அமளிமிசை அமளிபட) படுக்கையின்மீது ஆரவாரங்கள் உண்டாகக், காமக் கடலிலே முழுகி (மயக்கம்) பரவசம் அடையினும், (உனது) திருவடிகளை மறக்க மாட்டேன் நான்;

உடலும் பகைத்துக் கோபத்துடன் வந்த முயலகன் என்னும் பூதத்தின் முதுகு நெறு நெறு என்று முறிய, (எழு திமிர வுரகர் பிலம்) திமிரம் எழு உரகர் பிலம் - இருள் பரந்த நாகலோகம் (பாதாள லோகம்) முழுதும் ஒப்பற்ற அடி ஒடி

உருவவும் (செல்லவும்), பழமையான (சகன முகடு) ஆகாயத்தின் உச்சி இடியவும், சந்திரனுடைய முடி பெயரவும் (நகரவும்), உயரும் போது சகல உலகங்களும் அதிர்ச்சி உறவும் வீசி-

கடகம் - (உரக) கங்கணம் அணிந்த திருக்கை விளங்க நடனம் இடுகின்ற (இறைவர்) கூத்தப் பிரான் (நடராஜப் பெருமான்) மகிழும்படியான அழகுடன், மதித்தற்கு அரிய வகையில் அழகுடன் ஆடுகின்ற

தோகைப் பட்சியாம் மயிலை நடத்தி அசுரர்களுடைய யானை தேர், குதிரை, காலாட்படை என்னும் நால்வகைப் படைகளுடன் போர் செய்த பெருமாளே.

(அடிகள் மறவேனே)

## 1100.

ஏழு பிறப்புக்கள் எனப்படும் நீர் கொண்ட நிலத்திலே, (நல்வினை - தீவினை எனப்படும் இருவினைகள் என்கின்ற வேர்கள் ஊன்றக் கொண்டு, இடர்) துன்பம் என்கின்ற முளைகள் முளைக்க-வளர்ந்து மாயை (பொய்த் தோற்ற உணர்ச்சிகள்)

எனப்படும் (உலகையே) கொம்புகள் (பணைத்து) செழிப்புற்று பெருத்து (விரகம்), காமம் என்கின்ற தளிர்கள் தளிர்விட்டு, (இருள்) அஞ்ஞானம் என்கின்ற இலைகள் செழிப்புடன் தழைந்து மிகவும் பெரிதாகி -

---

'கொடிய தொரு முயலகனின் மீதாடுவார்' - திருப்புகழ். 1143

‡ நடன விசேடம்:

"கதிருதிரும்படி, பகிரண்டமும் உடையும்படி இலகும்படி அதிரும்படி நடனம் புரி அதிருங் கழல் அதிருங் கழல்"- அருணாசல புராணம் - பாயிரம்.

இழவுநனை யேபிடித்து மரணபழ மேபழுத்து
இடியுமுடல் *மாமரத்தி னருநீழல்-
இசையில்விழ † ஆதபத்தி யழியுமுன மேயெனக்கு
இனியதொரு போதகத்தை யருள்வாயே,
‡வழுவுநெறி பேசுதக்க னிசையுமக சாலையுற்ற
மதியிரவி தேவர்வஜ்ர படையாளி-
மலர்கமல யோனிசக்ர வளைமருவு பாணிவிக்ர
மறையாதிர் ×வீரவுக்ரர் புதல்வோனே,
அழகியக லாபகற்றை விகடமயி லேறியெட்டு
அசலமிசை வாகையிட்டு வரும்வேலா-
அடலசுரர் சேனைகெட்டு முறியமிக மோதிவெட்டி
அமரர்சிறை மீளவிட்ட பெருமாளே (106)

---

* ஒரு மரத்துக்கு உடலை ஒப்பிட்டு - அந்த மரம் தோன்றும் நீர் நிலம் - பிறவி என்றும், அதன் வேர் - வினை என்றும் அதன் முளை இடர்கள் என்றும், அதன் கொம்பு - (மாயை) பொய்த்தோற்றங்கள் என்றும், அதன் தளிர்கள் - காமம் - ஆசை என்றும், அதன் இலைகள் அஞ்ஞானம் என்றும், அதன் பூமொட்டுக்கள் - சூழ்வுறும் கேடுகள் என்றும், அதன் பழம் தான் - மரணம் - சாவு என்றும் உருவகப் படுத்தியுள்ளார். இத்தகைய உருவகத்தை -

" யானெனப் பெரிய நச்சு மாமரம் நனிமிக முளைத்துப்
பொய்யெனு கவடுகள் போக்கிச் செய்யும், பாவப் பஃறழை
பரப்பிப், பூவெனக் கொடுமை அரும்பிக், கடுமை மலர்ந்து,
துன்பப் பல்காய் தூக்கிப், பின்பு மரணம் பழுத்து,
நரகிடை வீழ்ந்து தமக்கும் பிறர்க்கும் உதவாது,
இமைப்பிற் கழியும் இயற்கையோ ருடைத்தே"

எனவரும் பட்டினத்தடிகளின் திருவிடைமருதூர் மும்மணிக் கோவை (10) காண்க.

"அரிது அரிது மாநுடராதல் அரிது" - என்றதனால் உடலை (மா) சிறந்த மரம் என்றார் எனினுமாம்

† ஆத பத்தி - (ஆத பத்திரம் - என்பதன் கடைக்குறை) - குடை

" வெயில் படா வகை விரித்துப் போது புக்கதென்று.. சுருக்கிய பூம்பட் டாதபத்திரம் போன்றன தாமரை
யடவி"- வில்லி. பாரதம் கிருட் 88

‡ தக்கன் யாகம் செய்தது - யாகத்தில் தண்டனை அடைந்தோர் - இவ் வரலாற்றைப் பாடல்கள் 390, 399-பக்கம் 484, 510 கீழ்க்குறிப்பிற் காண்க. - தொடர்ச்சி -பக்கம் 219.

*(இழவு) கேடு என்னும் (நனை) பூ மொட்டுக்கள் அரும்பிவிட, (மரணம்) இறப்பு என்கின்ற பழம் பழுத்து (ஈற்றில்) (இடியும்) முறிந்து அழிந்து போகின்ற - உடல் எனப்படும் மாமரத்தின் (அல்லது பெரிய மரத்தின்) - அரிய நிழலாகிய -*

*(ஆதபத்தி - ஆதபத்திரம்) குடையானது (உடல் எனப்படும் நிழல் தரும் மாமரக் குடை) (இசையில் விழ) அதன் பயன்பு இழந்துபட - அழியு முன்னரே எனக்கு (நீ) இனிமை தரும் ஒரு உபதேச மொழியை அருள் புரிவாயாக.*

*தவறான வழியைப் பேசின தக்கன் அமைத்த யாகசாலைக்குச் சென்றிருந்த சந்திரன், சூரியன், தேவர்கள், குலிசாயுதப் படையைக் கொண்ட இந்திரன் -*

*(திருமாலின் உந்தித்) தாமரை மலரில் தோன்றிய பிரமன், சக்கரம் சங்கு இவைகளை ஏந்தின திருக்கைகளை உடைய திருமால்- இவர்களின் விக்ரம் (விக்ரமம்) - பராக்கிரமம் மறைந்தொடுங்க அவர்களை எதிர்த் துடக்கின வீர உக்ர மூர்த்தியாம் (சிவபிரானது) புதல்வனே!*

*அழகுள்ள தோகைக் கூட்டத்தைக் கொண்ட (விகட மயில்) அழகிய மயிலில் ஏறி, எட்டு மலைகளையும் வெற்றி கொண்டு (திக் அந்தத்தில் உள்ள அஷ்ட கிரிகளும் நடுங்கவைத்து) வெற்றி கொண்டு) (வலம்) வந்த வேலனே!*

*வலிமை வாய்ந்த அசுரர்களின் சேனை அழிபட்டு முறியும்படி மிகவும் பலமாகத் தாக்க அவர்களை வெட்டி அழித்துத் தேவர்கள் சிறையினின்றும் மீண்டு வரும்படிச் செய்த பெருமாளே!*

*(இனியதொரு போதகத்தை அருள்வாயே)*

---

*சிவபிரானை இழித்துப் பேசி யாகத்து அவி கொடுக்க மாட்டேன் எனத் ததீசி முநிவரிடம் தக்கன் பேச அவர் என்ன புத்திமதி சொல்லியும் தக்கன் கேளாததால் - இந்த யாகம் அழிக. தேவர் யாவரும் கேடு உற - என அவர் சபித்தார்*

*"உங்கள் ஈசனோர் குணமிலன் அவனுக், கீதலின்றி யாம்*
*புரிகின்ற மகத்தவி எனலும் நாதனைக் கொலோ பழிக்கு*
*வன் இவனென ... முநிவரன் அழலெனக் கொதித்தான்"*
*" சங்கரனை விலக்கி யின்று புரிகின்ற மகம் சிதைக, தக்க!*
*நின்னோ டிங் குறையும் அமர ரெலாம் அழியுற இன்னே*
*யென்னா இசைத்து... ததீசி முனி. . சென்றான்"*

*- கந்தபுரா. 6-13-6, 6-15-36-38*

*Xவீர பத்திரர் சிவபிரானது ஏவலால் யாகத்தைச் சிதைத்தனராதலின் - யாகத்தை அழித்த மூல புருஷர் சிவனே ஆதலின் - 'வீர உக்ரர் புதல்வோனே' - எனக் கூறினார். "தக்கன் வேள்வி தகர்த்தருள் ஆலவாய்ச் சொக்கன்" - சம்பந்தர் 3-51-3*

## 1101. மாதர் மீதுள ஆசை அற

தனதனன தானதத்த தனதனன தானதத்த
தனதனன தானதத்த தனதான

நடையுடையி லேயருக்கி நெடியதெரு வீதியிற்குள்
நயனமத னால்மருட்டி வருவாரை-
நணுகிமய லேவிளைத்து முலையைவிலை கூறிவிற்று
லளிதமுட னேபசப்பி யுறவாடி,
வடிவதிக வீடுபுக்கு மலரணையின் மீதிருத்தி
மதனனுடை யாகமத்தி ரனைவாக
மருவியுள மேயுருக்கி நிதியமுள தேபறிக்கும்
வனிதையர்க ளாசைபற்றி யுழல்வேனோ;
*இடையர்மனை தோறுநித்த முறிதயிர்நெய் பால்குடிக்க
இருகையுற வேபிடித்து உரலோடே-
இறுகிடஅ சோதைகட்ட அழுதிடுகொ பாலக்ருஷ்ண
னியல்மருக னேகுறத்தி மணவாளா;
அடலெழுது மேடுமெத்த †வருபுனலி லேறவிட்டு
அரியதமிழ் வாதுவெற்றி கொளும்வேலா-
அவுணர்குலம் வேரறுத்து அபயமென வோலமிட்ட
அமரர்சிறை மீளவிட்ட பெருமாளே (107)

## 1102. உபதேச மொழி பெற

தனதனன தானதத்த தனதனன தானதத்த
தனதனன தானதத்த தனதான

மடலவிழ்ச ரோருகத்து முகிழ்நகையி லேவளைத்து
மதசுகப்ர தாபசித்ர முலையாலே-

---

* தயிர், பால் திருடி அடிபட்டுக் கண்ணன் அழுதது-
- பாடல் 362-பக்கம் 416 கீழ்க்குறிப்பு

† வைகை நீரில் ஏடு எதிரேறினது - பாடல் 181 - பக்கம் 420 422 கீழ்க்குறிப்பு

## 1101.

நடையாலும், உடையாலும் தமது அருமையைக் காட்டி, நீண்ட ஒரு தெரு வீதியிலே (நின்று), கண்ணால் (மருட்டி மயக்கி வருபவர்களை

அணுகி, காம ஆசையை ஊட்டி - தோன்றச் செய்து, (தமது) கொங்கையை விலை பேசி விற்று. (லளிதமுடனே) மாதுர்யமாக - இனிமையான வகையில் இன்முகம் காட்டி நடித்து, ஏய்த்து, உறவு கொண்டாடி -

அழகு மிக்க (தமது) வீட்டிலே அழைத்துச் சென்று) புகுந்து மலர்ப் படுக்கையின்மீது இருக்கச் செய்து, (மதனன் உடை) மன்மதனுடைய (ஆகமத்தின்) சாத்திரத்தின் - (கொக்கோக சாத்திரத்தின்) (அடைவாக)- வழித்துணையின் படியே -

பொருந்திக் கலந்து - உள்ளத்தை உருக்கி, (நிதியம் உளதே) உள்ள பொருள்களை எல்லாம் பறிக்கின்ற மாதர்களின்மீது ஆசை பிடித்துத் திரிவேனோ!

இடையர்களின் வீடுகள்தோறும், தினந்தோறும், உறியில் உள்ள தயிரையும், நெய்யையும், பாலையும் குடிக்கக், கண்ணனுடைய இரண்டு கைகளையும் பற்றிப் பிடித்து (அல்லது கண்ணனைத் தனது இரண்டு கைகளாலும் பற்றிப் பிடித்து) உரலுடனே -

அழுத்தமான வகையில் (முடிச்சு நெகிழாத வகையில்) அசோதை (கண்ணன் தாய்) கட்ட, அப்போது அழுத கோபால கிருஷ்ணனாம் திருமாலின் உழுவலன்புக்கு உரிய மருகனே! குறத்தி வள்ளியின் மணவாளனே!

(அடல்) வலிமை மிக்க (மந்திர மொழி) எழுதப்பட்ட ஏட்டினை நன்றாக ஓடுகின்ற (வைகை யாற்று) நீரிலே எதிரேறச்செய்து, அருமை மிக்க தமிழ்ப் பாசுரத்தால் (சமணரோடு செய்தவாதிலே) வெற்றி கொண்ட வேலனே!

அசுரர்களின் குலத்தை வேரறும்படி ஒழித்து, அடைக்கலம் என ஓலமிட்ட தேவர்களை அவர்கள் அடைபட்டிருந்த சிறையினின்றும் மீண்டு வெளிவரச் செய்த பெருமாளே!

(வனிதையர்கள் ஆசை பற்றி உழல்வேனோ)

## 1102.

இதழ்கள் அவிழ்கின்ற (சரோருகத்து) தாமரை போன்ற வாயினின்றும் (முகிழ்) (அரும்புகின்ற) வெளிப்படுகின்ற புன் சிரிப்பால் (மனத்தை) வளைத்து - கவர்ந்து, (மத - சுக - ப்ரதாப) மன்மதன் எழுப்பும் இன்ப நிலைக்குப் பேர்பெற்ற - (சித்ர) அழகிய கொங்கையாலே-

மலரமளி மீதணைத்து விளையுமமு தாதரத்தை
மனமகிழ வேயளித்து மறவாதே;
உடலுயிர தாயிருக்க உனதெனதெ னாமறிக்கை
ஒருபொழுதொ ணாதுசற்று மெனவேதான்-
உரைசெய்மட வாரளித்த கலவிதரு தோதகத்தை
யொழியவொரு போதகத்தை யருள்வாயே;
*தடமகுட நாகரத்ந படநெளிய ஆடுபத்ம
சரணயுக மாயனுக்கு மருகோனே-
†சரவணமி லேயுதித்த குமரமுரு கேச‡ சக்ர
சயிலம்வல மாய்நடத்து மயில்வீரா,
அடல்மருவு வேல்கரத்தி லழகுபெற வேயிருத்தும்
அறுமுகவ ஞானதத்வ நெறிவாழ்வே
அசுரர்குல வேரைவெட்டி அபயமென வோலமிட்ட
அமரர்சிறை மீளவிட்ட பெருமாளே (108)

## 1103. புகழ்ந்து துதிக்க

தந்தனந் தந்தனந் தந்தனந் தந்தனந்
தந்தனந் தந்தனந் தனதான

x அங்கதன் கண்டகன் பெங்கிலன் பொங்குநெஞ்
சன்பிலன் துன்பவன் புகழ்வாரா

*காளிங்கன் மீது நிர்த்தம் - பாடல் 245 -2 - பாடல் 402 - பக்கம் 114, 518 கீழ்க்குறிப்புகள் - பாடல் 868-பக்கம் 544 குறிப்பு.

† சரவணமிலே - சரவணத்திலே - அத்து - சாரியை தொக்கது: "கூவிளவின் தளிரும் சடைமேல் உடையான்" - என்புழிப்போல - சம்பந்தர். 2-17-6

‡ சக்ர வாள கிரியை வலமாய் வந்த மயில்:-

" தடக் கொற்ற வேள் மயிலே ... கனக சக்ரத் திடர்க்கப் புறத்துத் திரிகுவையே" - கந். அலங். 96

"சக்ரப் ப்ரசண்டகிரி முட்ட... ஆடல்புரி மயில்" - மயில் விருத்தம்.2

" பரி. திக் அந்தத்தைச் சுற்றி நடத்தும்... சிறுவன்" - திருப்புகழ். 455

X அங்கதன் - பழிப்பவன் - வசை கூறுபவன்,

தொடர்ச்சி - பக்கம் 223.

மலர்கள் விரித்த (அமளி) படுக்கையின் மேலே அணைத்து, (அச் சமயத்து) உண்டாகும் (அமுத ஆதரத்தை) அமுதன்ன அன்பை (அல்லது அமுத அதரத்தை - அமுதம் போன்ற வாயிதழ் ஊறலை) மன மகிழ்ச்சியுடனே (அளித்து மறவாதே - மறவாதே அளித்து) மறவாமல் தந்து-

உடலும் உயிரும் ஒன்றுபட்ட தன்மைபோல ஒன்றுபட்டிருக்க - (உனது எனது எனா மறிக்கை) - உன்னுடையது - என்னுடையது என்று பிரித்துப் பேசுதல் - உனது எனது என்னும் வேற்றுமை - (ஒரு பொழுது ஒணாது சற்றும்) ஒரு பொழுது - சற்றும் - ஒணாது - ஒரு பொழுதும் - கொஞ்சமேனும் - கூடாது - (எனவேதான்) என்று அழுத்தமாக -

(உரை செய்) பேசும் மாதர்கள் தரும் புணர்ச்சியால் வரும் (தேதகத்தை) வருத்தங்களை ஒழிக்கவல்ல ஒரு உபதேசமொழியை அருளுவாயாக.

விசாலமான மகுடங்களை - முடிகளைக் கொண்ட - நாகரத்னம் உள்ள - (காளிங்கன் என்னும் பாம்பின்) படம் நெகிழ்வு உற நடனமாடின தாமரையன்ன (யுக சரணம்) இரண்டு திருவடிகளைக் கொண்ட திருமாலுக்கு மருமகனே!

சரவண மடுவிலே அவதரித்த குமரனே! முருகேசனே! சக்ரவாள கிரியை வலஞ்செயும்படிச் செலுத்தின மயில் வீரனே!

வெற்றி பொருந்திய வேலாயுதத்தைத் திருக்கரத்தில் அழகு விளங்க வைத்திருக்கும் ஆறுமுகப் பெருமானே! மெய்ஞ் ஞான உண்மை வழியிற் செல்பவர்களின் செல்வமே! அல்லது தத்வ ஞான நெறி - உண்மை ஞான வழியிற் காணக் கிடைக்கும் செல்வமே!)

அசுரர் குலத்தவர்களை வேருடன் வெட்டி அழித்து, அடைக்கலம் (நீயே) என்று (ஓலமிட்டுக் கூவி உன்னிடம் சரண் புகுந்த) தேவர்களைச் சிறையினின்றும் மீள்வித்த பெருமாளே!

(போதகத்தை அருள்வாயே)

## 1103.

(அங்கதன் வசை கூறுபவன் - வைதற்சொற்களைப் பேசுபவன், (கண்டகன்) கொடியோன், ( பங்கிலன்) பாங்கில்லாதவன் - தகுதி - நற்பண்பு - இல்லாதவன் - (பொங்கு நெஞ்சு அன்பிலன் - அன்பு பொங்கு நெஞ்சிலன் - அன்பு எழுகின்ற உள்ளம் இல்லாதவன், துன்பவன் - துன்பத்துக்கு ஈடானவன் - புகழைத் தராத

---

"புலவோர்களைப் பழிக்கும் அங்கதர்க்கு எளியேனலேன்" - சம்பந்தர் 3-39-10

O பங்கிலன் = பாங்கில்லாதவன்.

அஞ்சொடுங் கும் *பொதும் பொன்றையென் றுஞ்சுமந்
தங்குமிங் குந்திரிந் திரைதேடுஞ்;
சங்கடங் கொண்டவெஞ் சண்டிபண் டன்பெருஞ்
சஞ்சலன் கிஞ்சுகந் தருவாயார்
தந்தொழும் பன்தழும் பன்பணிந் தென்றுநின்
தண்டையம் பங்கயம் புகழ்வேனோ;
கங்கையும் பொங்குநஞ் சம்பொருந் தும்புயங்
கங்களுங் திங்களுங் கழுநீருங்
கஞ்சமுந் தும்பையுங் கொன்றையுஞ் சந்ததங்
கந்தமுந் துன்றுசெஞ் சடையாளர்;
பங்குதங் கும்பசுங் கொம்புதந் தின்புறும்
†பந்தவெங் ‡குண்டர்தங் Xகுலகாலா
○பண்டிதன் கந்தனென் றண்டரண் டந்தொழும்
பண்புநன் பும்பெறும் பெருமாளே (109)

---

* பொதும்பு - குகை, குழி -

" மேருவின் பொதும்பிற் புக்கதோர் மின்னொளி மேகம்" - கம்பரா. மீட்சி. 325

" புண்டரீகப் பொதும்பு" - அப்பர் 5-76-2

" கொங்கைச் சிறுவரை யென்னும் பொதும்பினில் வீழ்ந்து" - பெரியாழ்வார். 5-2-7

X பந்தன்-சம்பந்த மூர்த்தி-'பெருமானைப் பந்தனுரை செந்தமிழ்கள்'- சம்பந்தர் 2-29-11. சம்பந்தர் தேவாரம் 384 பதிகங்களுள் 18 பதிகங்களில் தம் பெயரைப் பந்தன்'எனவே குறுக்கிக் கூறியுள்ளார் சம்பந்தப் பெருமான். அப்பதிகங்களின் எண் . 9, 18, 96, 119, 165, 169, 170, 188, 216, 219, 222, 223, 224, 271, 298, 326, 334, 372. (தேவார ஒளிநெறி - தொகுதி 2-பக்கம் 561).

‡ குண்டர் - சமணரைக் குண்டர் எனவே தேவாரத்திற் கூறப்பட்டுள்ளது.

" அமண் குண்டர்" - சம்பந்தர் 1-28-10; 1-39-10;

'குண்ட மிண்ட எத்தர்' திருவிசைப்பா - 4-8; " பாயுடுத்

துழல் குண்டர் கந்த புராணம் - (கடவுள் வாழ்த்து - 20).

X" அமண் சேனை உபாதி கழு மலங்கற்கு உரைத்தோன்"

- கந்தரந்தாதி - 29 - தொடர்ச்சி பக்கம் 225

ஐம்புலன்கள் தங்கி ஒடுங்கியுள்ள (பொதும்பு)- குகையாகிய (ஒன்றை) ஓர் உடலை - எந்நாளும் சுமந்து (அங்கும் இங்கும்) எங்கும் திரிதலுற்று உணவு தேடுகின்ற

வேதனைத் தொழிலை மேற்கொண்ட - கொடிய (சண்டி) இடக்கன் - முரடன் - (பண்டன்) ஆண் தன்மையில்லாதவன் -மிக்க (சஞ்சலம்) மனக் கவலை கொள்பவன், (கிஞ்சுகம் தரு வாயார்) - முருக்கி தழ்வாயார் - சிவந்த வாயிதழினர் - (ஆகிய மாதர்)

அவர்களின் (தொழும்பன்) பணியாளன் - (அடியாள், (தழும்பன்) குற்றம் உள்ளவன் - இத்தகைய நான் -(உன்னைப்) பணிந்து, என்று உனது தண்டை யணிந்த அழகிய தாமரைப் பதங்களைப் புகழ்வேனோ!

கங்கை நதியும், பொங்கி எழுகின்ற விஷம் பொருந்திய (புயங்கங்களும்) பாம்புகளும், சந்திரனும், செங்கழு நீர் மலரும் -

தாமரை மலரும், தும்பை மலரும், கொன்றை மலரும், எப்போதும் நறு மணமும் பொருந்தும் செஞ்சடையராம் சிவனுடைய

(பங்கு) இடதுபாகத்திலே வீற்றிருக்கும் பசிய பூங்கொம்பு போன்ற தேவி பார்ப்பதி (தந்து) பாலைத் தந்ததனால் இன்ப நிலை கொண்ட (பந்த) சம்பந்த மூர்த்தியே! கொடிய (குண்டர்) இழிந்தோராம் சமணர்களுடைய கூட்டத்துக்கு யமனாய்த் திகழ்ந்தவனே (சமணர்களை அழித்தவனே!)

(பண்டிதன்) கலை வல்லவன் - புலவன், கந்த பிரான் என்று தேவர்களும் அண்டத்தவர்களும் (சகல உலகில் உள்ளவர்களும் தொழுகின்ற (பண்பையும்) தகுதியையும் - குணத்தையும் (நண்பு) அன்பையும் கொண்டுள்ள பெருமாளே! (அல்லது - அண்டத்தவர் தொழும் பெருமாளே! பண்பும் நண்பும் கொண்ட (பெரியோர்) பெற்றுக் களிக்கும் - தம் உள்ளத்துள்ளே கண்டு களிக்கும் பெருமாளே!)

(தண்டையம் பங்கயம் புகழ்வேனோ)

---

" வாதிடுஞ் சமண் வேரோ டேயற வாழ்க அந்தணர்
வானோ ரானென ஓது பண்டித ஞானா சாரியன்"

- திருவையாற்றுப் புராணம்.

O பண்டிதன் - புலவன் " பண்டித ராய் வாழ்வார் பயின்று"
ஏலாதி 9. "ஐந்துகர பண்டிதன்" என்றார் விநாயகரை

(திருப்புகழ் 14)

## 1104. திரிதல் அற

தந்தனந் தந்தனந் தந்தனந் தந்தனந்
தந்ததனந் தந்தனந் தனதான

*தந்தமுந் துன்பவெஞ் சிந்தைகொள் டந்தகன்
தண்டவொன் றன்றொடுங் கிடுமாவி-

தஞ்சமென் றும்பரிந் தின்சொல்வஞ் சந்தெரிந்
தன்றுமென் றுந்தனந் தனைநாடி;

நின்தனன் பெண்பதொன் நின்றிநன் றென்றுநெஞ்
சின்கணன் பொன்றில்மங் கையர்நேசம்-

நின்றளந் துஞ்சளங் கொண்டிடும் † புன்கணந்
தின்பமொன் றின்றியிங் குழல்வேனோ;

‡சுந்தரன் பந்தமுஞ் சிந்தவந் தன்புடன்
தொண்டனென் றன்றுகொண் டிடுமாதி-

தும்பைசெம் பொன்சொரிந் துந்தருங் கொன்றைதுன்
பங்கடிந் தென்பொடுந் தொலையாநீர்,

அந்தமுந் திந்துவுங் கெந்தமிஞ் சுங்கொழுந்
தன்றுமின் றும்புனைந் திடும்வேணி-

---

* யமனுடைய பல் - பயங்கரமானது - " திங்கட் பகலின் ஒளிர் வெளிறெயிறு" திருப்புகழ் 17

† புன்கண் நந்த எனப் பிரிக்க; நந்த = விருத்தியாக.

‡ சுந்தர மூர்த்தி சுவாமிகளின் உலக பந்தத்தைச் சிதைத்துச் சிவ பிரான் அவரைத் தடுத்தாட் கொண்டது - பாடல் 545 - பக்கம் 242 கீழ்க்குறிப்பு.

# 1104.

(தந்தமும்) பயங்கரமான பற்களையும் துன்பத்தை ஊட்டும் - துயரத்தைத் தரும் கொடிய மனத்தையும் கொண்டவனாய், (அந்தகன்) யமன் (தண்ட) சினம் மூண்டு எழுதல் (ஒன்ற) பொருந்த சினமூண்டு எழ, அன்று ஒடுங்கிடும் ஆவி - அப்போது ஒடுங்கி நீங்கிவிடும் எனது உயிர்;

(யாக்கையின் தன்மை இவ்வாறு நிலையாமையைக் கொண்டிருக்கும் நானோ - பொது மகளிரிடம் சென்று) (தஞ்சம் என்றும்) அடைக்கலம் நீயே என்றும், (பரிந்து) அன்புப் பேச்சுக்கள் பேசியும், (அம் மகளிரின்) இனிய சொற்களின் உட்கிடக்கும் வஞ்சம் (சூது) தெரிந்தன்றும் - தெரிந்த அன்றும் - தெரிந்திருந்த அந்நாளினும், (பின்னும்) என்றும் - எத்தினத்தும் - (எப்போதும் - தனந் தனை - பொருளை - அல்லது மகளிர் கொங்கையை நாடி - விரும்பி (அல்லது) நாடி - நாடினவனாகிய நான் - விரும்பினவனாகிய நான்

நின் தன் அன்பு என்பது ஒன்று இன்றி - உன்மீது அன்பு என்பதே (ஒன்றுதல்) பொருந்துதல் இல்லாமல் அல்லது சிறிதளவும் (இல்லாமல்) (இதுதான்) நன்றென்று - நல்லதென்று நினைத்து - (நெஞ்சின்கண்) நெஞ்சிலே நண்பு - நட்பு - ஒன்று இல் - ஒன்றுதல் - பொருந்துதல் இல்லாத - அல்லது ஒன்றுமே இல்லாத மாதர்களின் மீது (நேசம்) - நட்பை

(நின்று அளந்தும்) - பொருந்த வைத்துக் கருத்திலே கொண்டும் - அதையே கருதியும், (சளம் கொண்டிடும்) - துன்பப்படுகின்ற (புன்கண் நந்த) - மனநோய் அதிகரிக்க, இன்பம் ஒன்று இன்றி ) - சுகம் என்பதே சிறிதும் இல்லாமல் - இங்கு (நான்) அலைச்சல் உறுவேனோ!

சுந்தரமூர்த்தியின் (பந்தமும்) உலக பாசம் (சிந்த) நீங்க, வந்து அன்புடனே, (தொண்டன்) என்று, நீ எனக்கு அடிமை என்று (அன்று) அன்றொரு நாள் (கொண்டிடும்) அவரைத் தடுத்தாட்கொண்ட (ஆதி) - முதல்வர்,

தும்பைமலர், செம்பொன் போன்ற மலர்களைச் சொரிந்து விளங்கும் கொன்றை, (துன்பம் கடிந்து) உயிர்களின் வினைத்துயரைத் தொலைந்து (என்பொடும்) எலும்பு மாலையுடன், (தொலையா நீர்) வற்றாத நீராகிய - கங்கை,

(அந்தம் - முந்து - உந்து - இந்துவும்) அழகு மிக்குவிளங்கும் சந்திரன், கெந்தம் மிஞ்சும் கொழுந்து - நறுமணம் மிக்குள்ள மருக்கொழுந்து, இவைதனை (அன்றும் இன்றும்) அன்றுமுதல் இன்றுவரை - பழங்காலமுதல் இன்றளவும் (புனைந்திடும்) சூடிக்கொள்ளும் (வேணி) சடையை யுடைய -

அன்பர்நெஞ் சின்புறுஞ் செஞ்சொலன் கந்தனென்
றண்டரண் டந்தொழும் பெருமாளே (110)

## 1105. கரைசேர

தந்தனா தனதனந் தந்தனா தனதனந்
தந்தனா தனதனந் தனதான

உம்பரா ரமுதெனுந் தொண்டைவா யமுதமுண்
டுண்டுமே கலைகழன் றயலாக-

உந்திவா வியில்விழுந் தின்பமா முழுகியன்
பொன்றிலா ரொடுதுவண் டணைமீதே

செம்பொனார் குடமெனுங் கொங்கையா பரணமுஞ்
சிந்தவாள் விழிசிவந் தமராடத்-

*திங்கள்வேர் வுறவணைந் தின்பவா ரியில்விழுஞ்
சிந்தையே †னெனவிதங் கரைசேர்வேன்;

‡கொம்புநா லுடையவெண் கம்பமால் கிரிவருங்
கொண்டல்ப்லோ மசையள்சங் ரமபாரக்-

கும்பமால் வரைபொருந் திந்த்ரபூ பதிதருங்
Xகொண்டலா னையைமணஞ் செயும்வீரா

---

* திங்கள் = திங்கள் போன்ற முகம். † எனவிதம் = என்ன விதம்.

‡ "கொம்பு நாலு" - ஐராவதம் - என்னும் வெள்ளை யானைக்கு. "ஈரிரு மருப்புடைய... மத வெற்பு" - வேளைக்காரன் வகுப்பு.

" வெண்கம்ப மால்கிரி" - ஐராவதம் - "சிகரவெண்கரி அயிராவதம்" - பாடல் 1128,

X கொண்டல் ஆனை - மேகத்தை வாகனமாகக் கொண்டு செல்லும் தேவசேனை - "தெய்வயின் ஊர் செல் (மேகம்)" என்றார் - கந்தரந்தாதியில் (100); ஆனை - தேவசேனை - "ஆனை தன் நாயக" - பாடல் 235.

(அன்பர்) அன்பு நிறைந்த பெருமான் - சிவபிரானுடைய, நெஞ்சம் இன்புற்றுக் குளிரும்படி செவ்விய சொற்களைப் பேசுபவன் (அல்லது) சிவபிரானது நெஞ்சம் இன்புறும்படி செவ்விய உபதேசச் சொல்லைச் சொன்னவன்), கந்த சுவாமி - என்று (போற்றி) அண்டரும் - தேவர்களும், அண்டமும் - உலகமும் - (உயர்ந்த பெரியோரும்) தொழுகின்ற பெருமானே!

(இங்கு உழல்வேனோ)

# 1105.

(உம்பரார்) தேவர்கள் உண்ணும் அமுதம் போன்றதும், (தொண்டை) கொவ்வைப் பழம் போலச் சிவந்ததுமான (வாய் அமுதம்) வாயிதழ் ஊறலாம் அமுதத்தை (உண்டு உண்டு) மேலும் மேலும் பருகி - (நிரம்ப உண்டு) அணிந்துள்ள மேகலை - இடையணி கழன்று போய், அயலாக - வேறுபட்டு ஒதுங்க - பக்கத்திலே விலகி விழ -

(உந்தி) கொப்பூழ் என்கின்ற (வாவியில்) - குளத்தில் விழுந்து (இன்பமாக முழுகி) சுகமாக முழுகி, அன்பு என்பதே இல்லாத (பொது மகளிரோடு) துவண்டு - கலந்து, துவட்சி - சோர்வு - உற்றுப், படுக்கையின் மேலே -

செம்பொன்னாலாய குடம் போன்ற கொங்கை மீதுள்ள ஆபரணங்கள் சிந்த - இடம் பெயர்ந்து விழ, வாள் போன்ற (அல்லது ஒளி நிறைந்த) கண்கள் செந்நிறம் கொண்டு (அமர் ஆட) - பொலிதலைச் செய்ய - (அல்லது கலக்கமுற)

(திங்கள்) சந்திரன் போன்ற முகம் வேர்வை கொள்ள, அணைந்து இன்பக் கடலிலே விழுந்து அமிழும் (சிந்தையேன்) எண்ணமுடைய நான், என்னவிதமாகக் கரையேறுவேன் (எப்படி நற்கதி பெறுவேன் - என்றபடி)

தந்தங்கள் நான்கினைக்கொண்டதும், வெண்ணிறமுள்ளதும், கம்பம் - தூண் போன்றதும் (அல்லது அசைந்து கொண்டே இருப்பதும்) மால் கிரி - பெரியமலை போன்றதுமான (ஐராவதத்தின்) மீது வரும் (கொண்டல்) மேகவாகனன் (அல்லது கிழக்குத்திசைப் பாலகன்), (புலோமசையள்) இந்திராணியுடைய சக்கரம் - போர்க்கெழுந்தது போன்றதும் கனத்த -

குடம் போன்றதுமான பெரிய மலைபோன்ற கொங்கையை அணையும் இந்திரப் பேர் அரசன் (தேவேந்திரன்) பெற்று வளர்த்த - கொண்டல் ஆனையை - மேகத்தை வாகனமாகக் கொண்ட ஆனையை - தேவசேனையைத் திருமணஞ் செய்து கொண்ட வீரனே!

அம்புரா சியுநெடுங் குன்றுமா மரமுமன்
றஞ்சவா னவருறுஞ் சிறைமீள;
*அங்கநான் மறைசொலும் †பங்கயா சனமிருந்
தங்கைவே லுறவிடும் பெருமாளே (111)

## 1106. உள்ளம் உருக

தந்தனா தனதனந் தந்தனா தனதனந்
தந்தனா தனதனந் தனதான

வண்டுதான் மிகவிடங் கொண்டகா ரளகமென்
பந்திமா மலர்சொரிந் துடைசோர-
வம்புசேர் கனிபொருந் தின்பவா யமுதருந்
தந்தமா மதனலம் விதமாக;
விண்டுமே னிகள்துவண் ‡ டன்றில்போ லுளமிரண்
டொன்றுமா யுறவழிந் தநுபோகம்-
விஞ்சவே தருமிளங் கொங்கையார் வினைகடந்
× துன்றன்மே லுருகஎன் றருள்வாயே

---

*அங்க நான் மறை சொலும் பெருமான் -

"நாலங்க வேதத்தின் பொருளோனே" - 1295 -பாட பேதம்.

† பதுமாசனத்தில் (மயில்மேலிருந்து) வேலைச் செலுத்தினது - "வேதனிட்ட மலர்போல் மேவ மந்துமயில் மீதேறி" - பாடல் 1112.

‡ அன்றில் போல் உளம் இரண்டொன்று மாயுற:-

அன்றில் - இது நெய்தல் நிலத்துக்கு உரிய பறவை - பனை மரத்தில் சிறு கோலாற் கூடு கட்டிக் கொண்டு வதிவது. தலை சிவந்திருக்கும்; கரியகால்; நள்ளிரவில் அகவும்; ஆணும் பெண்ணும் எப்பொழுதும் சேர்ந்து வாழும்; காதற் சிறப்பைக் காட்ட இப்பறவையை உவமானமாக எடுத்துக் காட்டுவர். தன் துணைப் பறவையைப் பிரிய நேரிடின் தான் துயிலாது நடுங்கி வருந்தும் தன்மையது. ஊதுகொம்பு போன்ற ஓசையை உடைய வளைந்த வாயை உடையது;

"நீண்ட பெண்ணை (பனைமரம்) மேல் அன்றில் வந்தணையும்",

" மடற் பெண்ணைக் குரம்பை வாழ் முயங்கு சிறை அன்றில்காள்! பிரிவுறு நோய் அறியாதீர் மிகவல்லீர்"! பொன்னமரும் கழிக்கானற் புணர் துணையோடுடன் வாழும் அன்றில்காள் அகன்றும் போய் வருவீர்காள்!"

(அம்புராசியும்) கடலும், (நெடுங்குன்றும்) பெரிய கிரவுஞ்ச கிரியும், (மாமரமும்) மாமரமாய் நின்ற சூரனும், அன்று அஞ்சி நடுங்கவும், தேவர்கள் அடைபட்டிருந்த சிறையிலிருந்தும் வெளியேறவும்

(அங்கநான்மறை) வேதாங்கங்களாலும், நான்கு வேதங்களாலும் போற்றப்படுகின்ற (பெருமாளே), (பங்கயாசனம் இருந்து) பதுமாசனத்தில் வீற்றிருந்தபடியே அழகிய திருக்கையிலிருந்த வேலாயுதத்தைப் பொருந்தச் செலுத்தின பெருமாளே!

(எனவிதும் கரை சேர்வேன்)

## 1106.

வண்டுகள் (மிக இடம் கொண்ட) நிரம்ப இடம் பெற்ற, மொய்க்கும் - கார் அளகம் - கரிய கூந்தலில் உள்ள - மென்பந்தி மெல்லிதாய் - (பந்தி) ஒழுங்காக வைக்கப்பட்ட நல்ல மலர்கள் சிதறுண்டு விழ, அணிந்துள்ள ஆடை நெகிழ - தளர -

(வம்புசேர்) புதுமை வாய்ந்ததும், கனியின் சுவை கொண்டதும் (அல்லது) கொவ்வைக் கனி போன்றதுமான (வாய் அமுது) வாயூறலைப் பருகும் அந்த (மா) சிறந்த (மதன் நலம்) மன்மதலீலை இன்பம் பலவிதத்திலும்

(விண்டு) வெளிவர, (மேனிகள்) - இருவர் உடல்களும் துவட்சியுற்று - சோர்ந்து, அன்றில் பறவை போல (இருவர்) உள்ளம் இரண்டும் (ஒன்றுமாயுற) நன்றாகப் பொருந்த, (அழிந்து) காமலீலையில் உருகி (அநுபோகம்) இன்ப நுகர்ச்சியை

நிரம்பத் தருகின்ற இளமை வாய்ந்த கொங்கைகளை உடைய மாதர்களுடன், (வினை கடந்து) விளையாடும் தொழிலை விட்டு, உன்னை நினைந்து உருக, என்று (எனக்கு) அருள் புரிவாய்!

---

(சம்பந்தர் - 2-50-1; 1-60-7; 3-63-2.): " இரும் பெண்ணை மடல் சேர் அன்றில்! எம் போல இன் துணைப் பிரிந்தாரை யுடையையோ நீ" - (கலித்தொகை - நெய்தல் - 12); "ஏங்கு வயிர் இசைய கொடுவாய் அன்றில் ஓங்கிரும் பெண்ணை மகமடல் அகவ - "குறிஞ்சிப் பாட்டு 219 - 220-; "அன்றிற் பேடை யரிக்குர லழை இச் சென்றுவீழ் பொழுது சேவற் கிளைப்ப" - மணிமேகலை 5-127.; "நெருப்பின் அன்ன செந்தலை அன்றில்... பெடையொடு... நரலும் நள்ளென்யாமத்து" - " சிறுகோற் குடம்பைக் கருங்கால் அன்றில்.... பெடை அகவும் பாணாட்கங்குல்"- குறுந்தொகை - 160, 301 "சேவலோடுறை செந்தலை அன்றிலின்.. நடுங்குவாள்" = கம்ப. ராமா - சூர்ப்ப - 76.

பண்டு*பா ரினையளந் †துண்டமால் மருகசெம்
பைம்பொன்மா நகரிலிந் திரன்வாழ்வு-
பண்பெலா மிகுதிபொங் கின்பயா னையைமணந்
‡தன்பினோ ரகமமர்ந் திடுவோனே;

அண்டர்தா மதிபயங் கொண்டுவா டிடநெடுந்
தண்டுவாள் கொடுநடந் திடுசூரன்-
அங்கமா னதுபிளந் தெங்கும்வீ ரிடவெகுண்
டங்கைவே லுறவிடும் பெருமாளே (112)

## 1107. 'ஓம் நமோ கந்த' - என உரைக்க.

தானனா தந்தனந் தானனா தந்தனந்
தானனா தந்தனந் தனதான

காதல்மோ கந்தருங் கோதைமார் கொங்கைசிங்
காரXநா கஞ்செழுங் கனிவாய்கள்-
காளகூ டங்கொடுங் காலரூ பம்பொருங்
காமபா ணஞ்சுரும் பினம்வாழும்;

ஓதிகார் செஞ்சொல்மென் பாகுதே னென்றயர்ந்
O தோநமோ கந்தஎன் றுரையாதே-

---

* பார் அளந்தது: பாடல் 268 - பக்கம் 166

† பார் உண்டது - பாடல் 267 -பக்கம் 164.

‡ " காதலால் நினைவார்தம் அகத்தனே" - சம்பந்தர் 3-115-3

X நாகம் = மலை.

O " ஓம் நமோ கந்த" .- முருகவேளின் அஷ்டோத்தர சத நாமங்களுள் முதலாவது "ஓம் ஸ்கந்தாய நம" என்பது. வட மொழியைத் தேவபாஷை என்பர் - (உ-ம்) தேவபாஷையின் இக்கதை செய்தவர் மூவரானவர் (கம்பராமா - சிறப்பு 7) தேவர்கள் முருகவேளைப் போற்றும் போது 'ஸ்கந்தாய நம" எனத் தவறாது போற்றுவர். முருகவேளின் குழந்தைப் பருவத்துத் திருவிளையாடலின் போது அவரை இன்னார் என்று அறியாது அவரொடு பொருத தேவர்களை எல்லாம் அவர் மடிவித்தனர். பின்பு, தேவகுருவின் வேண்டுகோளின்படி இறந்தவர்களை எழுப்பினர். அங்ஙனம் எழுந்த தேவர்கள் குழந்தை "முருகவேள்" என உணர்ந்து துதிக்கும்போது முதல் துதி வார்த்தை "கந்த நம" என்பதே. (தொடர்ச்சி பக்கம் 233

முன்பு பூமியை அளந்தவரும், (பூமியை உண்டவருமான திருமாலின் மருகனே! செவ்விய பசிய (பொன் மாநகரில்) மா பொன் நகரில் - சிறந்த பொன்னுலகத்தில் இந்திரனுடைய செல்வமும் -

அழகுச் சிறப்புக்கள் எல்லாமும் நிரம்ப மேலெழுந்து விளங்கும் இன்பநிலையைக் கொண்ட (யானையை) தேவசேனையை (மணந்து) திருக்கலியாணம் செய்து கொண்டு அன்புடனே (தேவியுடன்) ஒன்றுபட்ட மனத்தினனாய் அமர்ந்து வீற்றிருப்பவனே!

தேவர்கள் மிக்க பயம் கொண்டு வாட்டம் அடையும்படி பெரிய தண்டாயுதம், வாள் இவைகளுடன் எதிர்த்து வந்த சூரனுடைய

(அங்கம்) உடலைப் பிளந்து, எங்கும் (வீரிட) கூச்சல் எழும்படிக் கோபித்து, அழகிய திருக்கையிலிருந்த வேல் சென்று படியும்படிச் செலுத்தின பெருமாளே!

(உன்றன் மேல் உருக என்று அருள்வாய்)

## 1107.

ஆசை மோகத்தை எழுப்பும் மாதர்களின் கொங்கை - ஓர் அலங்கார மலை என்றும், செவ்விய கொவ்வைக்கனி வாய் என்றும், கண்ணானது -

காள கூடம் (ஆலகால விஷம்), கொடிய காலனுடைய உருவம், போர் செய்யும் மன்மத பாணம், வண்டின் கூட்டங்கள் மொய்த்து சூழும்.

(ஓதி) கூந்தல் - மேகம் என்றும், செவ்விய சொற்கள் - வெல்லம் (அல்லது பால்). தேன் என்றும், உவமை கூறிச் சோர்வுபட்டு, "ஓம் நமோ கந்த" என்று (உனது திருநாமத்தைக்) கூறாமல் -

---

" கந்த நம ஜந்து முகர் தந்த முருகேச நம... குமார நம" - என்று தொழுதார்" - கந்த புரா 11-4-82 முருகவேளைத் துதி செய்யும்போது அவர் திருநாமங்களுள் வடமொழித் திருநாமங்களையே தேவர்கள் பெரிதும் உபயோகிப்பார்கள் போலும்.

" வால குமர குக கந்த குன்றெறி

வேல மயில என வந்துகும்பிடு வான விபுதர்பதி இந்த்ரன்" என்றார் திருப்புகழில் (501): தமிழ் வடமொழி இரண்டினும் ஈடுபாடுள்ள அருணகிரியார் முருகன், குமரன், குகன், கந்தன், - சேந்தன், கடம்பன் என்னும் ஆறு திருநாமங்களில் அதிக ஈடுபாடு காட்டியுள்ளார்; அவைகளுள், " கந்தன்" என்னும் திருநாமத்தை

(தொடர்ச்சி 234-ம் பக்கம் பார்க்க)

ஊசலா டும்புலன் *தாரியே சென்றுநின்
றோயுமா றொன்றையுங் கருதாதோ;
தாதகீ சண்பகம் பூகமார் கந்தமந்
தாரம் †வா சந்திசந் தனநீடு
‡சாமவே தண்டவெங் கோபகோ தண்டசந்
தானமா தெங்கள்பைம் புனமேவும்;
×நீதிலா வஞ்சியஞ் சீதபா தம்படுஞ்
சேகரா தன்டையங் கழல்பேணித்-
தேவிபா கம்பொருந் தாதிநா தன்தொழுந்
தேசிகா வும்பர்தம் பெருமானே (113)

(233-ஆம் பக்கத் தொடர்ச்சி)

அருமையான இடங்களிற் பிரயோகித்து உள்ளார் - உதாரணம் -

"சென்றே இடங்கள் கந்தா எனும்பொ செஞ்சேவல் கொண்டு வரவேணும்"

"கந்தா என் றேத்தும்படியென சந்தாபந் தீர்த்தென் றடியிணை தருவாயே"

"துன்பநோய் சிந்த நற் கந்தவேள் என்றுனைத் தொண்டினா லொன்றுரைக் கருள்வாயே - திருப்புகழ் 367, 1183, 37.

" சிவகரண நீ வர கந்த" - (கந்தரந்தாதி - 39)

" தந்தைக்கு முன்னந் தனிஞானவாளொன்று சாதித்தருள் கந்தச் சுவாமி" - 'மைவரும் கண்டத்தர் மைந்த கந்தா என்று வாழ்த்தும் - இந்தக் கைவரும் தொண்டு' கந் அலங் 69, 84 "சிந்தா குலமானவை தீர்த் தெனையாள் கந்தா" கந் - அநுபூதி 46; தமது நூல்களுக்கும் " கந்தரலங்காரம்" - "கந்தர் அநுபூதி" "கந்தர் அந்தாதி" என்றே பெயர் சூட்டியுள்ளார்

* தாரி = வழி. †வாசந்தி = குருக்கத்தி.

‡ சாம வேதண்டம் = கரிய நிறத்தை யுடைய மலை.

× ஏழாவது எட்டாவது அடிகளில் ஓர் அழகு: "முருகா! உன் திருவடியைச் சிவபிரான் பேணித் தொழுது நிற்க - நீ வள்ளி பாதத்தைப் பேணிப் பணிகின்றாய்" - என அடியார் பெருமையையும், இறைவன் "அடியார்க்கு எளியவன்" என்பதையும் விளக்குகின்றார் அருணகிரியார். இக் கருத்தையே 'வேதா முதல் விண்ணவர் சூடுமலர்ப் பாதா குறமின்பதசேகரனே" எனவரும் அநுபூதியிலும் (36) காண்க. பிரமனாதியோர் உன் மலர்ப் பாதத்தைப் பணிந்து சூடிக் கொள்ள, நீ வள்ளி பாதமலரைப் பணிந்து சூடிக் கொள்கின்றாய்" என்கின்றார்.

(ஊசலாடும் அலைந்து கொண்டே இருக்கும் ஐம்புலன்கள் செல்லும் (தாரியே) வழியே போய், (நின்று) - அவ்வழியையே கடைப்பிடித்து - (ஓயும் ஆறு) இத்தகைய அலைச்சல் ஓய்வுறும் படியான - வழி - ஒன்றையும் என் உள்ளம் (கருதாதோ) எண்ணாதோ!

(தாதகி) ஆத்தி, சண்பகம், (பூகம்) கமுகமரம், (ஆர்) சரக்கொன்றை, (கந்தம்) நறுமணமுள்ள (மந்தாரம்) (முன் முருக்கு அல்லது) செம்பரத்தை, (வாசந்தி) குருக்கத்தி, சந்தனமரம் இவைகள் நீடு விளங்கும் -

(சாம வேதண்டம்) கரிய நிறத்தையுடைய வள்ளி மலையில் வாசஞ் செய்பவர்களும், (வெம் கோப) கொடிய கோபத்தைக் கொண்டவர்களும், (கோதண்டம்) வில்லை ஏந்தினவர்களுமான வேடர்களின் சந்தானம்) வமிசத்தில் வளர்ந்த (மாது) பெண், (அல்லது சாமவேதண்டம் - பொன்மலையாகிய மேருவின் மீது அல்லது கிரவுஞ்சகிரியின் மீது - (வெங்கோப) மிக்க கோபங் கொண்டவனே! (கோதண்ட) வில்லை ஏந்தின வேடர்களின் வமிசத்தில் வளர்ந்தமாது; அல்லது கோதண்டம் என்னும் பேரை உடைய வில்லை ஏந்தின ஸ்ரீராமரின் - திருமாலின் சந்ததியாகிய மாது), எங்கள் - எங்களுக்கு உகந்தவளாய் - பசிய தினைப்பு ( .றதில் வாசம் செய்த -

குற்றமே இல்லாத வஞ்சிக்கொடி போன்றவள் - ஆகிய வள்ளியின் குளிர்ந்த திருவடிகள் படுகின்ற (சேகரா) சிரசை உடையவனே! தண்டையணிந்த உனது அழகிய கழலணிந்த திருவடியை விரும்பிப்

பார்வதி தேவியின் பாகத்திற் பொருந்தியுள்ள ஆதிநாதன் - சிவபிரான் தொழுத (தேசிகா) குருமூர்த்தியே! தேவர்களின் பெருமாளே!

(ஓயுமா றொன்றையும் (என் உள்ளம்) கருதாதோ)

## 1108. நரஸ்துதி தவிர

தானனா தத்தனத் தானனா தத்தனத்
தானனா தத்தனத் தனதான

கோலகா லத்தைவிட் *டாசுபா டக்†கொடிக்
கோவைபா டக்கொடிக் கொடிவாதிற்-
கோடிகூ ளக்கவிச் சேனைசா டக்‡கெடிக்
கூறுகா ளக்கவிப் புலவோன்யான்;
○சீலகா லப்புயற் பாரிசா தத்தருத்
த்யாகமே ருப்பொருப் பெனவோதுஞ்-
**சீதரா ††சித்ரவித் தாரமே செப்பிடக்
கேளெனா திற்பதைத் தவிர்வேனோ;
ஆலகா லப்பணிப் பாயல்நீ ளப்படுத்
தாரவா ரக்கடற் கிடைசாயும்-

*"ஆசுபாடுதல்" - கொடுத்த பொருளை அடுத்த பொழுதிற் பாடும் பாட்டு - ஆசுகவி - திருப்புகழ் 273 -பக்கம் 180 குறிப்பு.

† "கொடிக்கவி" - கொடியைச் சிறப்பித்துப் பாடும் கவி;

உமாபதி சிவாசாரியார் தில்லையில் உள்ள கோயிலிற் கொடி ஏறும்படிக் "கொடிக்கவி" பாடியுள்ளார்.

"கோவை" அகப்பொருளிற் பாடப்படும் - "திருக்கோவையார்" போன்ற நூல்கள் - இது தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்று. இனி "கொடிக் கோவை" என்பதில் "கொடி" என்பதைக் "கோடி" என்பதன் குறுக்கம் எனக் கொண்டு, கோடிக் கணக்காகக் "கோவை" பாட எனலுமாம்.

‡ கெடி கூறுதல் - தனது கீர்த்தியை எடுத்துக் கூறுதல்.

X 'காளக்கவிப் புலவோன்' - என்பது காளமேகப் புலவரையும் குறிப்பிடலாம். காளமேகப் புலவர் போன்ற பெரும் புலமையை உடையவன் எனப்பொருள் தரும். காளமேகப் புலவர் அருணகிரியாருடன் சம காலத்தில் அல்லது சற்றுமுன்பு (15-ஆம் நூற்றாண்டில்) இருந்த தெய்வீகப் புலவர். திரு ஆனைக்கா அகிலாண்டேசுரியின் திருவருளைப் பெற்று "ஆசுக்குக் காளமுகில் ஆவனே" என்று ஆசுகவிபாடுவதில் மகா நிபுணராய்த் திகழ்ந்த புலவர் பெருமான்; பாடல் 464 -பக்கம் 46 குறிப்பு -

காளம் - முதலியன அக்காலத்துப் புலவர்களின் விருது - சின்னம் -பாடல் 80 அடி 4 பார்க்க; ஆகவே "காளக்கவி" ஒரு பட்டம் ஆகும்.
(தொடர்ச்சி பக்கம் 237)

# 1108.

(கோல காலத்தை விட்டு) (கோலாகலத்தை) - வீண் ஆடம்பரங்கள் செய்யாமல், (ஆசுபாட) ஆசுகவிகள் பாடவும், (கொடி) கொடிக்கவி பாடவும், கோவை என்னும் பிரபந்த வகைக்கவி பாடவும், கொடிக் கொடி - காக்கைக் கூட்டங்கள் போலக் கூச்சலிடும் வாதத்தில் - தருக்கத்தில் (சண்டையில்)-

கோடிக் கணக்கான (கூளம்) குப்பைபோன்ற - பயனற்ற (கவிச்சேனை) கவிஞர்களின் கூட்டத்தைச் (சாட) துகைத்து வெல்வேனென்று (கெடிக்கூறு) கீர்த்தியைக் கூறும் (காளக்கவிப் புலவோன்) பெருமழைபோலக் கவிகளைப் பாடவல்ல புலவன் நான்,

ஒழுக்கத்துடன் உரிய காலத்தில் பெய்யும் மேகம் என்றும், பாரிஜாத தெய்வவிருக்ஷம் என்றும், கொடையில் மேரு மலையே என்றும், (ஓதும்) (பரிசுபெறுவோர்கள்) போற்றுகின்ற

(சீதரா) திருமால் அனையவனே! (உன்மீது நான் ) சித்ரகவி வித்தாரகவி பாட - நீ கேட்பாயாக - என்று நான் (செல்வர்களிடம்) சொல்லி நின்று காத்திருத்தலை ஒழியேனோ-

ஆலகால விஷத்தைக் கொண்டு பாம்பாகிய ஆதிசேடன் என்னும் படுக்கையில் நீண்டு படுத்து, (ஆரவாரம்) பேரொலி செய்யும் கடலின் மத்தியிலே (சாயும்) பள்ளி கொண்டிருக்கும் -

---

O புயல், பாரிசாதம் என்னும் தெய்வதரு, மேரு - இவை கொடைக்கும், கருணைக்கும் பேர்போனவை. (புய வகுப்பு)

** சீதரன் - திருவைத் தரிப்பவன்; லக்ஷ்மீகரம் நிரம்பியவன்; அரசர்களுக்கு லக்ஷ்மீகரம் இருப்பதனால் தான் "திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே" என்னும் திருவாக்கு எழுந்தது (திருவாய்மொழி 4-4-8).

†† சித்ரகவி - இது எழுகூற்றிருக்கை, ஏகபாதம், கரந்துறை, கூடசதுக்கம், கோமூத்திரி, மாலைமாற்று முதலிய விசித்திர மிறைக்கவிகள் இவற்றுள் சித்திரத்தில் அமைத்துச் செய்யப் பாடும் வகையன உள.

வித்தார கவி - இது - ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம், எனப்படும் கவிநான்கினுள் விரிவாகப் பாடும் பிரபந்தவகை; இயல், இசை, நாடகம் முதலிய விரித்துப் பாடுங்கவி.

ஆழிமா லுக்குநற் *சாமவே தற்கு†மெட்
டாதரு பத்தினிற் சுடராய;
‡காலகா லப்ரபுச் சாலுமா லூற்றுமைக்
காகவே ளைப்புகக் கழுநீராற்-
Xகாதும்வே ழச்சிலைப் பாரமீ னக்கொடிக்
காமவேள் மைத்துனப் பெருமாளே (114)

## 1109. நீதிப்பொருள் தருக

தானனா தத்தனத் தானனா தத்தனத்
தானனா தத்தனத் தனதான

ஞாலமோ டொப்பமக் காளெனா நற்சொலைத்
தீதெனா நற்றவத் தனைவோர்தம்-
நாதமோ டுட்கருத் தோடவே தர்க்கமிட்
டோயுநா யொப்பவர்க் கிளையாதே;

நீலமே னிக்குலத் தோகைமே லுற்றுநிட்
டூரசூர் கெட்டுகப் பொரும்வேலா
நேசமாய் நித்தநிற் றாளைநீ ளச்சமற்
றோதநீ திப்பொருட் டரவேணும்;

கோலவா ரிக்கிடைக் கோபரா விற்படுத்
தானும்வே தக்குலத் தயனாரும்-

---

* சாமவேதன் - சாமம் - பொன். பிரமன் பொன்னிறத்தவன் - "செம்பொனின் மேனியனாம் பிரமன்". சம்பந்தர் 1-107-9.பிரமனைச் "சாமவெண் தாமரைமேலயன்" என்றார் சம்பந்தர் - 3-60-9. (சாமவேதம் முதலிய) வேத தாமரையில் வீற்றிருப்பவன்." வேதக் கிளர்தாமரை மலர் மேலுறை வேடில் புகழோன்" - சம்பந்தர் 1-10-9.

† எட்டாத ரூபம் - அண்ணாமலை; 'கடல் வண்ணனும்.... மலர் மேலுறை வேடில் புகழோனும் அளவாவணம் அழலாகிய அண்ணாமலை அண்ணல்... சம்பந்தர் 1-10-9' பாடல் 319 - பக்கம் 292- கீழ்க்குறிப்பு.

‡ காலகாலன் - காலனை அட்டவன் - பாடல் 399 - பக்கம் 510 குறிப்பு.

X மன்மதன் சிவபிரான்மீது பாணம் எய்தது - பாடல் 399 -பக்கம் 510 குறிப்பு.

சக்ராயுதனாம் திருமாலுக்கும், நல்ல (சாமவேதன்) சாமவெண் தாமரைமேல் வீற்றிருக்கும் (அல்லது சாமம் -பொன்னிறத்தனான) பிரமனுக்கும் எட்டாத உருவில் ஜோதி சொரூபனான

காலகாலனாகிய பிரபு - சிவன் - (சாலும்) - மிகுதியான - நிரம்ப - (மாலுற்று) ஆசை அடைந்து, (உமைக்காக) பார்வதியை மணக்கும் பொருட்டு, வேளைபுக - சமயம் வர, (கழுநீரால்) செங்கழுநீர்ப் பாணம் -ஐந்தாவது பாணமாகிய - நீலோற்பலம் எனும் பாணங்கொண்டு - (அவரை)

(காதும்) வாட்டின (வேழச்சிலை) கரும்பு ஏந்தினவனும், (பாரம்) பெருமை பொருந்திய மீன் கொடியைக் கொண்டவனும் ஆன (காமவேள்) மன்மதனுடைய மைத்துனராகிய பெருமாளே!

(சேலோனா நிற்பதைத் தவிரேனோ)

# 1109.

(ஞாலமோடு ஒப்ப மக்காள் எனா) உலகத்துடனே ஒத்து வாழுங்கள், மக்களே! என்னும் நல்ல உபதேசச் சொல்லைத் (தீதெனா) தீயது என்று - கெட்டது என்று கருதி, நல்ல தவநிலையிற் பொருந்திய பெரியோர்களின் -

பேச்சின் ஒலியும், (உட்கருத்தும்) அவர்கள் சொன்ன புத்திமதியின் உண்மைக் கருத்தும், (ஓடவே) பின்னிட்டு ஓடும்படித் தங்கள் கூச்சலில் அடக்கும்படித் (தர்க்கமிட்டு) அவர்களுடன்வாது பேசி, ஓய்ந்துபோகும் (நாய் ஒப்பவர்க்கு) - நாய் போன்ற (அறிவிலிகளிடம்) நான் (இளையாதே) சோர்வு அடையாமல், அவர்களுக்கு வாதில் தோற்றுப் போகாதவாறு

நீல உருவம் விளங்கும் கூட்டமான பீலிகளை உடைய மயில் மேல் ஏறிக், கொடுமையாளனான சூரன் அழிந்து சிதறும்படிச் சண்டை செய்த வேலனே!

அன்புடனே தினந்தோறும் (நின்தாளை) உனது திருவடியை நீள் - நெடுநேரம் (அச்சம் அற்று) அஞ்சுதல் இல்லாமல் - தைரியத்துடன் (ஓது) போற்றுதற்கு உரிய, நீதிப் பொருளை (தரும சாத்திரப் பொருளை) (எனக்குத்) தந்தருள வேண்டுகின்றேன்.

அழகிய(வாரிக்கு இடை) *கடலின் மத்தியிலே (கோப அராவில்) கோபிக்க வல்ல ஆதிசேடன் என்னும் பாம்பின் மீது படுத்துள்ள திருமாலும், † வேதம் ஓதும் உயர் குலத்துப் பிரமனும்,

---

* கடலிடை அரவிற் படுக்கை:- "கரை கடல் அரவணைக் கடவுள்" - சம்பந்தர் 3-90-9.

† "மறை வாணர்க் காதியாம் திசை முகன்"

- சம்பந்தர். 2 -81 -9

கூறும் *வானப்புவிக் கூறுதீ ரக்குறிப்
போதுறா நிற்பஅக் கொடிதான;
†காலன்மார் புற்றுதைத் தானுமோர் கற்புடைக்
கோதைகா மக்கடற் கிடைமுழ்கக்-
காவிசேர் கொத்தலர்ப் பாண‡மேய் வித்தகக்
காமவேள் மைத்துனப் பெருமாளே (115)

## 1110. மனோலய சுகம் பெற

தனதனா தனதனந் தனதனா தனதனந்
தனதனா தனதனந் தனதான

இரவுசேர் மகளிர்குங் குமபயோ தரதனங்
களிலறா துயில்வதுஞ் சரிபேசுங்-
கரசரோ ருகநகம் படவிடாய் தணிவதுங்
கமலநா பியின்முயங் கியவாழ்வும்;
Xஅரவுபோ லிடைபடிந் திரவெலா முழுகுமின்
பநல்மகோ ததிநலம் பெறுமாறும்-

---

* வானப் புவிக்கு = வானத்துக்கும் புவிக்கும்.

† காலனை அட்டது - பாடல் 399 பக்கம் 510 குறிப்பு.

‡ ஏய் = எய்; மன்மதன் பாணம் எய்தது - பாடல் 399 பக்கம் 510 குறிப்பு.

X அரவுபோல் இடைபடிந்து - இடையை அரவுக்கு உவமை கூறுவர்.

"அர இடை மாது" "ஏந்தரா எதிர்வாய்ந்த நுண்ணிடை" சம்பந்தர் 3-7-6, 3-110-6

"அராப்படியில் நுண்ணிடையார்" - திருக்கோவையார் 362 இனி, அரவு போல்படிந்து - என்பது காமநுகர்ச்சியில் பாம்புக்கு மகிழ்ச்சி அதிகம் என்பதைக் குறிக்கும் "மாதரும் களிறனாலும் மாகனை மகிழ்ச்சி மன்றல்" சிந்தாமணி 189.

போகத்திற் சிறந்தவர் நாகர் என்ப:

" நலத்தகு நாகத் துறைவோர் போல இன்ப மகிழ்ச்சி யொடு" - பெருங்கதை 4 -4-100

" எரிமாமணி மார்பனும் ஏந்திழையும் அருமாமணி நாகரின் ஆயினரே" -

" வாளும் வேலும் மலைந்தரி யார்ந்த கண்
ணாளும் வார்கழல் மைந்தனும் ஆயிடைத்

(கூறும்) சொல்லப்படுகின்ற (வானப் புவிக்கு) வானத்துக்கும், பூமிக்கும் (ஊறு தீரக்) கெடுதல் வரா வழிக்கு, ஒரு குறிப்பு நீதியை (ஓதுறா நிற்ப) போதித்துக் காட்ட வேண்டி அந்தக் கொடியவனான

காலனுடைய மார்பிற் படும்படி உதைத்த சிவபிரானும் - ஆக இம்மூவரும், (முறையே) ஒவ்வொரு கற்புவாய்ந்த (கோதை) பெண்மீது - முறையே (லக்ஷ்மி, சரஸ்வதி, பார்வதி) எனப்படும் பெண்களுடன் கூடிக் காமக் கடற்கு இடைமூழ்க - காம ஆசைக் கடலின் இடையே முழுகும்படிக்

(காவி) நீலோற்பலத்தின் (கொத்தலர்ப்பாணம்) கொத்தான மலர்ப்பாணத்தை (ஏய்) எய்த - பிரயோகித்த (வித்தகம்) சாமர்த்தியம் வாய்ந்த மன்மதவேளின் மைத்துனப் பெருமாளே!

(நீதிப் பொருள் தரவேணும்)

## 1110.

(சுரவு) வஞ்சக எண்ணம் கொண்ட பெண்களின் குங்குமம் செஞ்சாந்து அணிந்துள்ள (பயோதர தனங்களின் - பாலைத் தரிப்பதான கொங்கைகளின் மீது - (அல்லது கொங்கையாகிய செல்வத்தின் மீது) (அறா) நீங்காமல் - எப்போதும் தூங்கும் (இன்ப மும்), (சரிபேசும்) வளையல்கள் ஒலிக்கும்

கர சரோருகம் - சரோருக கரம் - தாமரைக் கையில் உள்ள நகம் பட - நகத்தின் கீறலால் (காம) (விடாய்) தாகத்தை தீர்த்துக் கொள்ளும் (இன்பமும்), தாமரையன்ன உந்தியில் அணையும் வாழ்வாம் இன்பமும்-

அரவு (பாம்பு) போன்ற நுண்ணிய இடையில் படிந்து (அல்லது பாம்புபோல இடையிற் படிந்து) - காம இன்பத்தை அனுபவித்து - இரவு முழுமையும் (காமத்தில்) மூழ்குகின்ற மகிழ்ச்சியைத்தரும், இனிய பெருங்கடலின் சுகநலத்தைப் பெறுகின்ற (ஆறும்) வழியாம் இன்பமும் -

---

தோளும் தாளும் பிணைந்துருவொன் றெய்தி
நாளும் நாகர் நுகர்ச்சி நலத்தரோ" - சிந்தாமணி 217, 1347.

அதரபா னமுதமுந் தவிரவே *மவுனபஞ்
சரமனோ லயசுகந் தருவாயே;
†பரவுமா யிரமுகங் கொடுதிசா முகதலம்
படர்பகீ ரதிவிதம் பெறஆடல்
பயில்பணா வனமுகந் தருணமா மணிகணம்
பனிநிலா வுமிழுமம் புலி‡தாளி;
குரவுகூ விளமருந் தழிதா தகிநெடுங்
குடிலவே ணியிலணிந் தவராகங்
Xகுழையஆ தரவுடன் தழுவுநா யகிதருங்
குமரனே யமரர்தம் பெருமாளே (116)

## 1111. திருவடியைத் தொழ

தனதனா தனதனந் தனதனா தனதனந்
தனதனா தனதனந் தனதான

வடிவவேல் தனைவெகுண் டிளைஞரா விழையவனைந்
தமர்செய்வான் விழியர்நெஞ் சினில்மாயம்
வளரமால் தனைமிகுந் தவர்கள்போ லளவிலந்
தனுகுமா நிதிகவர்ந் திடுமாதர்;

---

* மவுன பஞ்சர மனோலய சுகம்:
" உனை உணர்ந்தொரு மவுன பஞ்சரம் பயில்தருஞ்சுக பதம்
அடைந்திருந் தருள் பொருந்துமதொருநாளே"
- திருப்புகழ் 1151.

" மௌனத்தை யுற்று நின்னையுணர்ந் துணர்ந்தெல்லாம்
ஒருங்கிய நிர்க்குணம் பூண்டு என்னை மறந்திருந்தேன் -
இறந்தே விட்டதிவ் வுடம்பே" கந் - அலங் 19.

" மோனந் தருஞான மூட்டி எனக்குவட்டா ஆனந்த
வாழ்க்கை அருளாய் பராபரமே" - தாயுமா - பராபர -345.

" சிவானந்த மோனம்" - ஒழுவிலொடுக்கம் 1-8.

" நானென்னும் போத நழுவப் பிறங்குகத்த மோனமே
ஞான முடிபு" - குருவாசகக் கோவை 796.

"சும்மா இருக்கச் சுகமுதய மாகுமே" - தாயுமா - உடல் பொய் - 52

† " ஆயிர முகத்து நதி" - வேளைவகுப்பு (தொ.பக். 243)

வாயிதழைப் பருகி அதிற் கிடைத்து அநுபவிக்கும் அமுத (இன்பமும்) இவ்வின்பங்களெல்லாம் என்னை விட்டு ஒழிய - மவுன பஞ்சர மனோலய சுகம் - மவுனம் என்னும் கூட்டில் இருப்பதாற் சித்திக்கும் மனஒடுக்கம் என்னும் சுகநிலையைத் தந்தருளுக.

பரந்து செல்லும் ஆயிரக்கணக்கான கிளைகளாய்த் திசைகள் நோக்கும் இடமெலாம் படர்ந்து செல்லும் (பகீரதி) கங்கை, விதம் விதமான ஆட்டங்களை ஆடிப்

பயிலும் (பணா) படங்களை உடையதும், (வனம்உகந்த) காட்டு வாழ்க்கையில் மகிழும் குணத்தை உடையதுமான பாம்பின் கூட்டம், குளிர்ந்த ஒளிக்கிரணங்களை வீசும் (அம்பு லி) - சந்திரன், (தாளி) அறுகின் தாளி - கொடிப்புல் -

குராமலர், கூவிளம், வில்வம், பூ அரும்புகள், (இதழி) கொன்றை, (தாதகி) ஆத்தி இவைகளைத் (தமது) நீண்ட, வளைந்துள்ள சடையில் அணிந்துள்ளவரான சிவனது உடலம் -

குழையும்படி அன்புடனே தழுவின நாயகி ஏலவார் குழலி (காமாட்சி) தந்த குமரனே! தேவர்களின் பெருமாளே!

(மனோலய சுகம் தருவாயே)

## 1111.

(வடிவ வேல்) காந்தியுள்ள வேலாயுதத்தைக் கோபித்து எழுந்தது போல எழுந்து, இளைஞர்களுடைய உயிரை வளைந்து - சூழ்ந்துபோர் செய்யும் வாள்போன்ற கண்களை உடையவர்களாய், உள்ளத்தில் (மாயம்) வஞ்சனை எண்ணம்

(வளர) உண்டாகிப் பெருக, ஆசை மிக்கவர்கள் போல நடித்து, (அளவி வந்து) கலந்து பேசிவந்து, நெருங்கி, மிக்க - பெருந் தொகையான - (நிதி) பணத்தைக் (கவர்ந்து) வசப்படுத்திக் கொள்ளையிடுகின்ற மாதர்கள் -

---

" ஆயிர முகமதாகி. . வந்திழி கங்கை" - அப்பர். 4-65-7

"ஆயிர நூறுகோடி அணிமுகம் படைத்தி யாண்டும் பாயிரு நீத்தமாகிப் பரவலும்" - கந்தபுரா. 6-13-370

‡ தாளி - தாளி அறுகு - இறைவனுக்கு உகந்தது-

" நாயேனை ஆளுடையான் தாளி அறுகாம் உவந்த தார்"

- திருவாச. தசாங்கம். 9

X தழுவக் குழைந்தது- வரலாறு - பாடல் 463, 494, 653-பக்கம் 44, 120, 540,- பார்க்க. இந்த 1110, 1111 - பாடல்களைக் காஞ்சீபுரம் திருப்புகழாகக் கொள்ளலாம்.

துடியைநே ரிடைதனந் துவளவே துயில்பொருந்
தமளிதோய் பவர்வசஞ் சுழலாதே
தொலைவிலா இயல்தெரிந் தவலமா னதுகடந்
துனதுதாள் தொழுமனந் தருவாயே
*படியெலா முடியநின் றருளுமா லுதவுபங்
கயனுநான் மறையுமும் பரும்வாழப்
†பரவையூ டெழுவிடம் பருகிநீள் பவுரிகொண்
டலகையோ டெரிபயின் றெருதேறிக்
கொடியவா ளரவிளம் பிறையினோ டலைசலங்
குவளைசேர் சடையர்தந் திருமேனி
‡குழையஆ தரவுடன் தழுவுநா யகிதருங்
குமரனே யமரர்தம் பெருமாளே (117)

## 1112. ஓத

தத்ததன தானான தத்ததன தானான
தத்ததன தானான தனதான

கிட்டமுறு நோய்தீமை யிட்டகுடில் மாமாய
கட்டுவிடு மோர்கால X மளவாவே
கத்தவுற வோர்பாலர் தத்தைசெறி வார்வாழ்வு
கற்புநெறி தான்மாய வுயர்காலன்;
இட்டவொரு தூதாளு முட்டவினை யால்முடி
யிட்ட O விதி யேயாவி யிழவாமுன்

---

* திருமால் உலகுக்கு அருளுவது -

" புவியிடை மறைதரு வழிமலி மனிதர்கள் நிலைமலி சுரர் முதல் உலகுகள் நிலைபெறு வகை நினைவொடு மிகும்அலைகடல் நடுவறி துயில் அமர் அரி"- சம்பந்தர். 1-21-2

† நஞ்சை உண்டு சிவபிரான் நடம் புரிந்தது -

" கடலில் நஞ்சமுதுண்டு இமையோர் தொழுதேத்த
நடமாடி", 'விடத்தார் திகழும் மிடறன் நடமாடி" - சம்பந்தர். 1-3-8, 1-33-8

‡ பாடல் 1110 அடி 8 - குறிப்பைப் பார்க்க

X அளவா = அளந்து; ஏ - அசை

O விதியே (விதியின்படியே) ஆவி இழத்தல் -

" காலன் ஆதி விதியோடு பிறழாத வகை தேடி எனதாவி தனையே குறுகி வருபோது" - திருப்புகழ். 1242

(துடி) உடுக்கை போன்ற இடை, (தனம்) கொங்கையின் பருமையால் - நெகிழ்ச்சி உறவே, தளரவே - தூங்குவதற்குப் பொருந்தியுள்ள படுக்கையிற் புணர்ச்சி கூடுபவர் - ஆகிய - பொதுமகளிரின் வசத்தில் அகப்பட்டு (சுழற்சி) மனக் கலக்கம் உறாமல் -

அழிதல் இல்லாத (இயல்) ஒழுக்க நெறியைத் தெரிந்து, (அவலமானது) வீணானது- பயனற்றது - இன்னதெனத் தெரிந்து அதை ஒழித்து, உனது திருவடியைத் தொழ (மனம்)- விருப்பங் கொள்ளும் எண்ணத்தைத் தந்தருளுவாயாக.

உலகம் முழுமையும் வியாபித்து நின்று அருள் புரிகின்ற திருமால், அவர் பெற்ற (பங்கயன்) பிரமா, நான்கு வேதங்கள், (உம்பர்) தேவர்கள் - இவர்கள் யாவரும் வாழக்-

கடலினின்றும் எழுந்த விஷத்தை உண்டு - பெரிய நடனத்துடன் பேய்களுடன் எரியாடி, ரிஷப வாகனத்தைக் கொண்ட வரும் -

கொடுமை வாய்ந்து ஒளிவிடும் பாம்பு, இளம்பிறை இவைகளுடன் அலைவீசும் கங்கை நீர், குவளை மலர் - இவை சேர்ந்துள்ள சடையராம் சிவபிரானது அழகிய மேனி -

குழையும்படி அன்புடனே தழுவின நாயகி (காமாட்சி) பெற்ற குமரனே! தேவர்களின் பெருமாளே!

*(உனது தாள் தொழ மனம் தருவாயே)*

## 1112.

கஷ்டத்தைத் தருகின்ற நோய்களும், (தீமை) பிற கெடுதிகளும் (அல்லது நோயாகிய கெடுதி) அமைந்துள்ள குடிசையாகிய இவ்வுடல், மகாமாயையாகிய - பிரபஞ்ச மாயையின் பந்தத்தை விடுகின்ற காலத்தை - (உயிர் போகும் சமயத்தை) அளவா - அளந்து தெரிந்துகொண்டு -

(சுத்த உறவோர் பாலர்) உறவோர் - பாலர் - சுத்த - சுற்றத் தாரும் - குழந்தைகளும் கூச்சலிட்டு அழத் - தத்தை செறிவார் வாழ்வு) ஆபத்துகளுடன் நிறைந்து நீண்ட வாழ்க்கையும், அந்த வாழ்க்கையில் - (கற்பு நெறி) ஒழுக்கத்துடன் சென்ற வழியும் (மாய) அழியும்படி - பெரிய காலன் - (யமன்)

அனுப்பின ஒரு தூதர்களும் வந்து (முட்ட) தாக்க வினைகளாலே மூடப்பட்டு அதன்படி ஏற்பட்ட (விதியே) விதியின்படியே - (ஆவி) உயிரை இழப்பதன் முன்பாக.

*எத்தியுனை நாடோறு முத்தமிழி னாலோத
இட்ட மினி தோடார நினைவாயே;
துட்டரென ஏழ்பாரு முட்டவினை யாள்சூரர்
தொக்கில்நெடு மாமார்பு தொளையாகத்-
தொட்ட வடி வேல்வீர நட்டமிடு வார்பால;
சுத்ததமி ழார்ஞான முருகோனே;
மட்டுமரை † நால்வேத விட்டமலர் போல்மேவு
மத்தமயில் மீதேறி வருநாளை-
‡வைத்தநிதி போல்நாடி நித்தமடி யார்வாழ
வைத்தபடி மாறாத பெருமானே (118)

## 1113. பக்கமுற

தத்ததன தானான தத்ததன தானான
தத்ததன தானான தனதான

பக்கமுற நேரான மக்களுட னேமாதர்
பத்தியுடன் மேல்மூடி யினிதான-
பட்டினுட னேமாலை யிட்டுநெடி தோர்பாடை
பற்றியனை வோர்கூடி ×யலைநீரிற்;
புக்குமுழு காநீடு துக்கமது போய் ○வேறு
பொற்றியிட வேயாவி பிரியாமுன்-

---

* எத்தி = ஏத்தி.

† நால் வேதன் இட்ட (இஷ்ட) மலர் - தாமரை-

" வெறிகொள் தாமரை மேலே விரும்பிய மெய்த் தவத்தோன்" - சம்பந்தர். 2-95-9

‡ வைத்த நிதி - இது 'எய்ப்பில் வைப்பு' எனப்படும்;

" என்றன் வாழ்முதலே எனக்கு எய்ப்பில் வைப்பே"

- திருவாச. நீத்தல் 39

× அலை நீரில் முழுகி - துக்கம் விடுதல் - பாடல் 162-பக்கம் 376 கீழ்க்குறிப்பு

○ வேறுபோல் நீவிடுதல் - அயலார் - பகைவர் போலச் சுற்றத்தார் இவ்வுடலை எரியூட்டுதல் -

" மாதாவொடே மாமா னானோர் மாதோடே மைத்துனர்
மாறும் மாறானார்போல் நீள் நீறூடே... சூடல் போடா...
நீறூடே போய் மூழ்க" - திருப்புகழ் 1044

ஏத்தி உனை - உன்னை ஏத்திப் போற்றி, தினந் தோறும், இயல், இசை நாடகம் எனப்பட்ட மூன்று தமிழ் -நூல் வகைகளாலும் உன்னை (ஓத போற்றித் துதிக்க - *இட்டம் இனிது ஓடு இஷ்டத்துடனும் மகிழ்ச்சியுடனும் - (ஆர) நன்றாக நீ நினைந்தருளுவாயாக.

துஷ்டர்கள் - பொல்லாதவர்கள் என்று ஏழு உலகத்தவர்களும் (மூட்ட) வேதனையுற்றுக் கூறும்படி, வினையாள் - தங்கள் தொழிலை நடத்தின (அல்லது ஏழ்பாரும் துட்டரென - ஏழுலகத்தவர்களும் இவர்கள் துஷ்டர்கள் என்று கூறும்படியாக, வினைமூட்ட ஆள் எல்லாத் தொழில்களையும் செய்துவந்த) சூரர் - (அசுரர்) படை வீரர்களின் (தொக்கில்) உடல் தோல் கொண்ட அகன்ற மார்பிடம் தொளைபடும்படிச்

செலுத்தின கூரிய வேலேந்திய வீரனே! நடனம் புரியும் நடராஜப் பெருமானது குழந்தையே! வடிகட்டின சுத்த தமிழ் நிரம்பத் தெரிந்த ஞானனே! முருகனே! (அல்லது ஞானமுள்ள முருகனே! அல்லது - ஞான சம்பந்த இளையோய்!)

(மட்டு) நறு மணம் கொண்ட (மரை)தாமரையில் வீற்றிருப்பவனும், நால் வேதங்கள் இருக்கு, யசுர், சாமம், அதர்வணம், எனப்படும் நான்கு வேதங்களை ஓதும் (வேதன்) பிரமனுக்கு இஷ்டமான மலராகிய தாமரைபோல் (மேவு) அமையும்படி - பதுமாசனம் பொருந்தும்படி - பதுமாசனத்தில் - (மத்த மயில்மீது) செருக்குற்ற - களிப்புற்ற - மயில்மேல் நீ ஏறிவரும் நாளை - அந்த நாளைத் -

தாங்கள் சேமித்து வைத்துள்ள பொக்கிஷம் - இதுவே என்று (நாடி) விரும்பி நின்று - நாள்தோறும் அடியார்கள் (வாழவைத்தபடி) வாழும்படி வைத்த - (படி - தன்மை) - கருணைத்திறம் நீங்காத பெருமானே! (ஓத — நினைவாயே)

## 1113.

(பக்கம் உற நேரான மக்களுடனே மாதர்) நேரான மக்களுடனே மாதர் பக்கம் உற - நேர்மையுள்ள - நல்லொழுக்கமுள்ள பிள்ளைகளும் மாதர்களும் பக்கத்திற் சூழ்ந்து நிற்க - (பத்தியுடன்) அன்புடனே (உடலின் மேலே) மூடி - மேன்மையான

பட்டாடையால் மூடி - மாலை அணிவித்து - நீண்ட ஒரு பாடையைப் பற்றி அனைவர்கள் கூவி அழ, அலைவீசும் நீரிலே -

படிந்து, முழுகி - மிக்கிருந்த துக்கமும் நீங்கி விலக, (வேறு பொற்றியிடவே) மாற்றார் போலத் தீ இடவே - நெருப்பு மூட்ட) ஆவி பிரியாமுன் - உயிர் நீங்கும் முன்பே-

---

* இட்டம் இனிதோடு (நான் ஓத) நீ ஆர நினைவாயே எனலுமாம்

பொற்கழலை நாடோறு முட்பரிவி னாலோது
புத்திநெடி தாம்வாழ்வு புரிவாயே;
*இக்கனுக வேநாடு முக்கணர்ம காதேவர்
†எப்பொருளு மாமீசர் பெருவாழ்வே-
எட்டவரி தோர்வேலை வற்றமுது சூர்மாள
எட்டியெதி ரேயேறு மிகல்வேலா,
மக்களொடு வானாடர் திக்கில்முனி வோர்சூழ
மத்தமயில் மீதேறி வருவோனே-
வைத்தநிதி போல்நாடி நித்தமடி யார்வாழ
வைத்தபடி மாறாத பெருமாளே (119)

## 1114. யோகநிலை

தானதன தந்தான தானதன தந்தான
தானதன தந்தான தனதான

நீருநில மண்டாத தாமரைப டர்ந்தோடி
நீளமக லஞ்சோதி வடிவான-
நேசமல ரும்பூவை ‡ மாதின்மண மும்போல
நேர்மருவி யுண்காத லுடன்மேவிச்;
X சூரியனு டன்சோம னீழலிவை யண்டாத
சோதிமரு வும்பூமி யவையூடே-
Oதோகைமயி லின்பாக னாமெனம கிழ்ந்தாட
சோதி அயி லுந்தாரு மருள்வாயே;

---

* மன்மதனை எரித்தது - பாடல் 399-பக்கம் 510 குறிப்பு

† "எப் பொருளுமாம் ஈசர்" "எல்லாமாம் எம்பெருமான்" - சம்பந்தர். 2-16-9

‡ பூவை மாதின் மணம்-
"சிவ சுடரதனைப் பாவை மணமென மருவி" - என்றார்
238-ஆம் பாடலில்

X "இருள் கதிர் இலி பொற் பூமி"
"வானிந்து கதிரிலாத நாடு"
"ஓர் கதிர் அணு கொணாத பொன் இடம்" - திருப்புகழ் 238, 179, 637

O "ஓர் இளையோன் எனவே மறையோத... இயல் வேலுடன் மா அருள்வாயே" "உனது மயில்மேல் இருந்தி ஒளிர் இயல்வேல் அளித்து" - திருப்புகழ் 563, 1218 (தொ. பக். 249

உனது அழகிய (கழலை)த் திருவடியைத் தினந்தோறும் உள்ளத்து அன்புடனே ஓதுகின்ற அறிவு நீளும் படியான வாழ்க்கையைத் தந்தருளுக.

(இக்கன்) கரும்பு வில்லை யேந்திய மன்மதன் (உகவே) அழிந்துபோம்படி (நாடின) திருவுள்ளங் கொண்ட முக்கண்ணர் - மகாதேவர் எல்லாப்பொருளும் தாமாய் நிற்கும் ஈசர் - ஆகிய சிவபிரானது பெருஞ் செல்வமே!

எட்டுதற்கு அரிதான - மிகப் பரந்துள்ள ஒப்பற்ற கடல் வற்றவும், பழைய சூரன் இறந்துபடவும், (எட்டி எதிரே ஏறும்) மேற்சென்று எதிரெழுந்த வலிமைவாய்ந்த வேலனே!

மக்களும், தேவர்களும் (மண்ணவரும், விண்ணவரும்) பல திசைகளிலுமுள்ள முனிவர்களும் சூழ்ந்து நிற்க, (செருக்கு -) களிப்பு கொண்ட மயில்மேலேறி வருபவனே!

சேமித்துவைத்த நிதிபோல, உன்னை விரும்பித் தினந்தோறும் அடியார்கள் வாழும்படி (வைத்தபடி) வைத்த (தன்மை) கருணைத்திறம் நீங்காத பெருமாளே!

(ஓது புத்தி நெடிதாம் வாழ்வு புரிவாயே)

## 1114.

நீரும் பூமியு ம் சம்பந்தப்படாது தழைந்து விளங்கும் (தாமரை - நாலிதழ்த் தாமரை ஆகிய மூலாதாரம், ஆறிதழ்த் தாமரையாகிய சுவாதிஷ்டானம், பத்து இதழ்த் தாமரையாகிய மணிபூரகம், பன்னிரண்டிதழ்த் தாமரையாகிய அனாகதம், பதினாறிதழ்த் தாமரையாகிய விசுத்தி, இரண்டு (அல்லது) மூன்றிதழ்த் தாமரையாகிய ஆஞ்ஞை - ஆகிய ஆறாதாரங்களின் வழியாகச் (சிவயோக நெறியிற்) படர்ந்து சென்று, நீளம் - அகலம் இவை எல்லையற்று விளங்குகின்ற ஜோதி ரூபமாம் -

(நேச மலரும் பூவை) (சிவசுடரின்) சிவநேசத்தாற் பெறப்படும் பூவைமாதின் - சிவமாதினை - (மணமும் போல) மணஞ்செய்து கொண்டதுபோல - அவ்வகைய உரிமையு டன் - அந்த சிவசுடருடன் நேராகிப் பொருந்தி (உண்) அனுபவிக்கும் (காதலுடன்) ஆசையுடன் இருந்து -

சூரியன், சந்திரன், இவர் தம் நிழல் - ஒளி எட்டமுடியாத பேரொளி பொருந்தும் (அந்த) தேஜோமண்டல பூமியிலே -

கலாபமயிலின் (பாகன்) - கலாப மயிலைச் செலுத்துவோனாகிய (இளையோன்) முருகனே இவன் என்று சொல்லி (அன்பர்கள்) மகிழ்ந்து கூத்தாட, உமது ஒளிவீசும் வேலையும் (கடப்ப) மாலையையும் தந்தருளுக.

---

இது "அவனே தானே ஆகிய அந்நெறி ஏகனாகி" - என்னும் நிலை - சிவஞான போதம் 10

வாரியகி லங்கூச *ஆயிரப ணஞ்சேடன்
 வாய்விட †வொ டெண்பாலு முடுபோல-
வார்மணியு திர்ந்தோட வேகவினி றைந்தாட
 மாமயில்வி டுஞ்சேவல் கொடியோனே;
‡ஆரியன வன்தாதை தேடியின மும்பாடு
 மாடலரு ணஞ்சோதி யருள்பாலா-
× ஆனைமுக வன்தேடி யோடியெய ணங்காத
 லாசைமரு வுஞ்சோதி பெருமாளே (120)

## 1115. மோனநிலை அடைய.

தத்ததனா தான தத்ததனா தான
 தத்ததனா தான தனதான

○சுட்டதுபோ லாசை விட்டுலகா சார
 துக்கமிலா ஞான சுகமேவிச்-

---

* 'ஆயிரம் பகுவாய்கள் தீ விஷம் கொப்புளிப்ப" - மயில் விருத்தம்.8

† ஒடெண்பாலும் = ஒடு எண்பாலும்.

‡ அரி அயன் தேட நின்றது - பாடல் 319 பக்கம் 292 குறிப்பு

× வள்ளியை அச்சுறுத்த விநாயகர் ஓடி வந்தது - பாடல் 587-பக்கம் 348- பாடல் 606-பக்கம் 400 குறிப்பு

கணபதி யானை முருகவேள் அழைக்க வந்த தன்மையை
" தந்திக் கடவுள் தனி வாரணப் பொருப்பு.
வந்துற்ற தம்மா மறி கடலேபோல் முழங்கி"
- என்றார் கந்த புராணத்தில் 6-24-111

"கொம் மெனத் தருக்கள் சாய்த்துக் குவட்டின முருட்டிச்
சேய்க்கண் கைம்மலை முழங்கி நேரே கடுகி ட்டது" -
தணிகைப்புரா. களவு 175

இனி " ஆனை முகவன் தேடி ஓடியே அணங்காதல்"- என்பதற்கு ஆனை முகவன் - தாரகாசுரன் (போரைத்) தேடி ஓடி (அணங்கு) வருத்தத்தை அடைதலில் காதல் கூர்ந்த ஜோதி எனவும் "தோகை மயிலின் பாகன்" - என்பதற்குத் தோகை மயில் போன்ற பார்வதி பாகனான நடராஜ மூர்த்தியைப் போல - எனவும் ஆசிரியர்குக ஸ்ரீ கிருபானந்தவாரி அவர்கள் உரை காண்பர் - திருப்புகழ் அமிர்தம் - (மலர் 18 இதழ் 9) தேடி வந்து போர் புரிதலை - (தொ. பக். 251)

கடலின் எல்லாப் பாகங்களும் (கூச நிலைகுலையவும் ஆயிரம் (பணா மகுடங்களை) படங்களை உடைய ஆதிசேடன் (வாய்விட) வாய் பிளக்க ஓட - வெளிப்பட்டு ஓட அது அங்ஙனம் ஓடும் எட்டுத் திசையிலும் நக்ஷத்திரங்கள் (உதிர்வன) போல -

(அப்பாம்பின்) வார் - உயர்ந்த - (மணிகள்) ரத்னங்கள் உதிர்ந்து சிதறவும் (கவின் நிறைந்து ஆட) அழகு ததும்பி ஆடும் படி சிறப்பு ற்ற மயிலைச் செலுத்தும் சேவற் கொடியனே!

(ஆரியன்) பிரமனும் (அவன் தாதை) அவன் தந்தையாம் திருமாலும் தேடி நின்று (காணாது) (இனமும்) இன்னமும் - இன்றளவு ம், பாடும் - பாடிப் போற்றும் (ஆடல்) திருவிளையாடலைப் புரிந்த (அருணஞ் சோதி) செஞ்சோதியாகிய அருணாசலேசர் (அண்ணாமலையார்) அருளிய குழந்தையே!

ஆனைமுகவன் - கணபதி - தேடி ஓடியே - (நீ இருக்கும் இடத்தை தேடி ஓடி (அண) அண்ண - அணுகும்படி (அவரை வரவழைத்த) அம் காதலாசை மருவும் - அழகிய காதலாசையை (வள்ளிபாற்) கொண்ட ஜோதிப் பெருமாளே! (அல்லது கணபதி தேடி ஓடி வந்து உதவும் அளவுக்கு - (அணங்கு காதலாசை) தெய்வப் பெண் வள்ளிமீது காதலாசை (காம ஆசை) கொண்ட ஜோதிப் பெருமாளே! அல்லது கணபதி தேடி ஓடிவந்து உதவும் அளவுக்கு (அணங்கு ஆதல்) - (காம நோய் அடைதலாம் ஆசை பொருந்திய ஜோதிப் பெருமாளே!

(சோதி அயிலும் தாரும் அருள்வாயே)

## 1115.

(கையில் உள்ள ஒரு பொருள்) சுட்டால் எப்படி அப்பொருளை உடனே கைவிட்டு விடுவோமோ அதுபோல ஆசைகளைச் சட்டென்று விட்டு ஒழித்து, (உலக ஆசாரத்தால்) உலக வாழ்க்கையால் ஏற்படும் துக்கங்களில்லாத ஞான சுக நிலையை அடைந்து

---

'எங்கே யக்கிரி எங்கே யக்கிரி என்றே திக்கென வருகுரை'

- எனவருமிடத்துக் காணலாம் (திருப்புகழ் 861)

O" சட்டி சுட்டது கை விட்டது" - என்பது பழமொழி- ஆசையை விட்டால்தான் வீடு சுகம் ஆனந்தம் எல்லாம் -

" அற்றது பற்றெனில் உற்றது வீடு" - திருவாய்மொழி. 1-2-5

'அவா இல்லார்க் கில்லாகும் துன்பம்' - திருக்குறள் 368

'ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்... ஆசை விடவிட

ஆனந்தம் ஆமே' - திருமந்திரம் 2615

சொற்கரணா தீத நிற்குணமு டாடு
சுத்த *நிரா தார வெளிகாண;
மொட்டலர்வா ரீச சக்ரசடா தார
முட்டவுமீ தேறி †மதிமீதாய்-
‡ முப்பதுமா றாறு முப்பதும்வே றான
முத்திரையா மோன மடைவேனோ;
எட்டவொணா வேத னத்தொடுகோ கோவெ
னப் Xபிரமா வோட வரைசாய-
எற்றியசூ ராழி வற்றிடமா றாய
எத்தனையோ கோடி யசுரேசர்;
பட்டொருசூர் மாள விக்ரமவே லேவு
பத்திருதோள் வீர Oதினைகாவல்-
பத்தினிதோள் தோயு முத்தமமா றாறு
**பத்திசெய்வா ணாடர் பெருமானே (121)

---

* "ஆதாரத்தாலே நிராதாரத்தே சென்று மீதானத்தே
செல வுந்தீ பற விமலற், கிடமதென் றுந்தீ பற"

-திருவுந்தியார். 8

† பாடல் 439 முதல் நாலடியின் பொருளொடு ஒப்புமை காண்க.

‡ "ஆறு மாறு மஞ்சு மஞ்சும் ஆறு மாறு மஞ்சு மஞ்சும்
ஆறு மாறு மஞ்சு மஞ்சும் அறு நாலும் ஆறு மாய
சஞ்சலங்கள் வேறதா விளங்குகின்ற" - என்றார் 739- ஆம் பாடலில்; 96 தத்துவங்கள் - பாடல் 157- பக்கம் 366 கீழ்க்குறிப்பு

" ஆறாறையும் நீத்ததன் மேல்நிலையைப் பேறா அடியேன்
பெறுமா றுளதோ" - கந். அநுபூதி .47

" தத்துவ மெல் லாமகன்ற தன்மையர்க்குச் சின்மயமாம்
நித்த முத்த சுத்த நிறைவே பராபரமே"
" தத்துவப் பேயோடே தலை யடித்துக் கொள்ளாமல்
வைத்த அருள் மௌன வள்ளலையே"

- தாயுமா பராபர 367; உடல்பொய். 29

X பிரமா ஓட - வேலால் விலங்கிட்டபோது பிரமன் அஞ்சினதைக் குறிக்கின்றது - பாடல் 757-பக்கம் 256 கீழ்க்குறிப்பு. இந்தப் பாடலின் 5-7 அடி வேல்வாங்கு வகுப்பின் கருத்தது.

O தினை காவல் பத்தினி - வள்ளியைப் பத்தினி என்றே

(தொடர்ச்சி பக்கம் 253)

சொற்களுக்கும், (கரணம்) மனதுக்கும் மேற்பட்ட நிலையதாய், குணமிலாத - குணங் கடந்த நிலையில் (ஊடாடும்) விளங்குகின்றதும், பரிசுத்தமானதும், சார்பற்றதுமான பரவெளியைக் காண -

மொட்டுக்கள் மலர்ந்துள்ள தாமரைகளாகிய சக்கரங்களாம் ஆறாதாரங்கள் அனைத்திலும் - எல்லாவற்றின் மீதும் கடந்து சென்று - மதிக்கலாமிர்தம் பொங்கும் நிலைக்கு மேலானதும்,

முப்பதும், (ஆறாறும்) முப்பத்தாறும், முப்பதும் - (30 + 36 + 30 = 96) ஆக தொண்ணூற்றாறு தத்துவங்களுக்கும் வேறானதுமான- (முத்திரையாம்) அடையாள அறிகுறியான - மோன நிலையை அடையும் பாக்கியம் எனக்குக் கிடைக்குமா!

இவ்வளவினது என்று மனத்தால் அளத்தற்கரிய (வேதனம்) வேதனையோடு, கோ கோ என்று அலறிக்கொண்டே பிரம தேவன் ஓடவும், (கிரவுஞ்சகிரி) சாய்ந்து மடிந்து விழவும்,

(எற்றிய) (அலை) வீசுகின்ற எழுகடலும் வற்றிப் போகவும், பகைவர்களாயிருந்த எத்தனையோ கோடிக்கணக்கான அசுரத் தலைவர்கள் -

அழிபட்டு, ஒப்பற்ற சூரன் இறந்து படவும் பராக்ரமம் பொருந்திய வேலாயுதத்தைச் செலுத்தின - பன்னிருதோள் - வீரனே! தினைப்புனம் காவல் காத்திருந்த

பத்தினி - கற்புடையநாயகி - வள்ளியின் தோளை அணைந்த (அல்லது - வள்ளி உனது தோளை அணையப் பெற்ற) உத்தமனே! (மாறாது நிலைத்த புத்தியுடன் பத்திசெய்த தேவ லோகத்தினருடைய பெருமாளே!

(மோனம் அடைவேனோ)

---

அருணகிரியார் குறிப்பார் - 'பத்தினி', 'ஞான பத்தினி' - பாடல் 649, 1218

** பத்தி செய் வானாடர் -

சூர சம்மாரம் ஆனவுடன் தேவர்கள் கொண்ட மகிழ்ச்சிக்கு அளவே கிடையாது; அவர் பத்தி செய்து முருகவேளைப் போற்றி வாழ்த்தின துதிகட்கும் அளவு இல்லை.

"சுடர் வேல் கொண்ட தீர்த்தனை எய்திச் சூழ்ந்து சிறந்து வாழ்த் தெடுக்க லுற்றார்"

1. சூர் தடிந்தாய் அன்றே தொழு மடியேம் வல்வினையின்
வேர் தடிந்தாய் மற்றெமக்கு வேறோர் குறை யுண்டோ!
2. தேறு முக மின்றித் திரிந்தேமை ஆளவன்றோ
ஆறுமுகங் கொண்டே அவதரித்தாய் எம்பெருமான்.

(தொடர்ச்சி 254-ஆம் பக்கம் பார்க்க)

## 1116. தாளை ஓத

தத்ததனா தான தத்ததனா தான
தத்ததனா தான தனதான

மைமச்சுனமார் மாம னைச்சியுமா தாவு
மக்களுமா றாத் துயர்கூர-

மட்டிலதோர் தீயி லிக்குடில்தான் வேவ
வைத்தவர்தா மேக மதிமாய;

நிச்சயமாய் நாளு மிட்டொருதூ தேவு
நெட்டனவாம் வாதை யணுகாமுன்-

நெக்குருகா ஞான முற்றுனதா ளோதி
நித்தலும்வாழ் மாறு தருவாயே;

நச்சணைமேல் வாழு மச்சுதனால் வேத
னற்றவர்தா நாட விடையேறி

நற்புதல்வா சூரர் பட்டிடவே லேவு
நற்றுணைவா ஞால மிகவாழப்;

பச்செனுநீள் தோகை மெய்ப்பரியூர் பாக
*பத்தியதா மாறு முகநாளும்-

பக்ஷமுமே லாய்ஷ டக்ஷரசூழ் பாத
பத்திசெய்வா னாடர் பெருமாளே (122)

---

(253- ஆம் பக்கம் தொடர்ச்சி)

3. வேதநெறி தொல்லை வெறுக்கையொடு பெற்றனமால்
ஏதும் இலையால் எமக்கோர் குறை எந்தாய்!

4. இன்று பகை மாற்றி எமக்கருள் நீ செய்கையினால்
சென்றவுயிர் மீண்ட திரும்பெற் றனம் ஐயா!

5. வேண்டேம் இனியாதும் மேலாய நின்கழற்கே
பூண்டேம் தொழும்பு; புகழேம் பிறர் தமையே!

- கந்த புரா. 4-14-(2-8)

---

* "பத்தித் திருமுகம் ஆறு" - கந்தரலங். 47

# 1116.

மைத்துனமார், (மாமனைச்சி) சிறந்த இல்லாள் மனைவி, (மாதா) தாய், (மக்கள்) குழந்தைகள் ஆகிய இவர்கள் (மாறாத) நீங்காத - ஆறாத - துன்பம் மிக அடைய -

குறைவில்லாத (நன்கு எரியும்) ஒரு நெருப்பில் இந்த உடலையே வேகும்படி வைத்துவிட்டு, (அவர் தாம்) ஏக, அவரவர்கள் செல்ல, அறிவு கலங்கும்படி -

நிச்சயமாக, குறிப்பிட்ட நாள் தவறாத வண்ணம் (நாளும் இட்டு) ஒரு நாளைக் குறிவைத்து அந்த நாளில் (யமன்) தனது தூதர்களை ஏவும் - முடிவு (சாவுநாள்) (ஏற்படும்) நீண்ட அளவான நீண்டநாள் படவேண்டிய (நோய் பிணி முதலான) வேதனைகள் என்னைக் குறுகுதற்கு முன்பு -

உள்ளம் நெகிழ்ந்து உருகி, ஞான நிலையை யடைந்து, உனது தாளைப் புகழ்ந்து போற்றி நாள்தோறும் வாழும் வண்ணம் (எனக்கு) அருளுவாயாக!

(நச்சணைமேல்) விஷங்கொண்ட பாம்பணையின் மேல் வாழ்கின்ற (அச்சுதன்) திருமால், (நால் வேதன்) நான்கு வேதங்களிலும் வல்ல பிரமன், (நற்றவர்) சிறந்த தவசிகள் (தாம்நாட) இவர்கள் தேடிநிற்க (அல்லது இவர்கள் விரும்பிப் போற்ற) ரிஷப வாகனத்தில் ஏறி விளங்குபவராம் சிவனது

சிறப்புற்ற புதல்வனே! சூரர்கள் அழியும்படி வேலாயுதத்தைச் செலுத்தின நல்ல துணைவனே! உலகோர் மிக வாழும்படி,

பச்சையான (ஒளி) நீண்ட - ஒளிவீசும் கலாபத்தையுடைய (மெய்) உடலைக் கொண்ட (பரி) வாகனமாம் (அல்லது குதிரையாம்) மயிலை (ஊர் பாக) செலுத்துகின்ற பாகனே! (செலுத்தி யோட்டுபவனே!) வரிசையாயுள்ள ஆறு திருமுகங்களைக் கொண்டவனே! நாள்தோறும் -

(பசூழும் மேலாய்) அன்பை மேற் கொண்டவனே! (ஷடக்ஷர) ஆறெழுத்துக் குரியவனே! (சூழ்பாத) உலகெலாம் வலம் வந்த திருவடிகளையுடையவனே! உன்னைப் பத்தியுடன் போற்றிப் பணியும் தேவர் தம் பெருமாளே! (அல்லது) (பசூழும் மேலாய்) அன்பு மேற்கொண்டு - அன்பு நிரம்பி - (ஷடக்ஷர) ஆறெழுத்தால் (சூழ்) தியானிக்கப்படும் (பாத) திருவடியை உடையவனே! *பக்திசெய்யும் தேவர்களின் பெருமாளே! (அல்லது) ஆறெழுத்தால் (சூழ்) தியானிக்கப்படும் (பாதம்) திருவடியில் பத்திபுரிகின்ற தேவலோகத்தவரின் பெருமாளே. (தாளோதி வாழ்மாறு தருவாயே)

---

* பாடல் 1115 பக்கம் 253 குறிப்பு** காண்க.

## 1117. சுவாமி வர

தத்தனத் தத்ததன தத்தனத் தத்ததன
தத்தனத் தத்ததன தனதான

*தத்துவத் துச்செயலொ †டொட்டில்பட் டக்குருகு
சத்துவிட் டப்படிபொ லடியேனுஞ்-
சச்சிலுற் றுப்படியில் விட்டுவிட் டுக்குளறி
சத்துவத் தைப்பிரிய விடும்வேளை;
சுத்தமுத் தப்பதவி பெற்றநற் பத்தரொடு
தொக்குசற் றுக்கடையன் மிடிதீரத்-
துப்புமுத் துச்சரண பச்சைவெற் றிப்புரவி
சுற்றவிட் டுக்கடுகி வரவேணும்;
‡வித்தகத் திப்Xபவள தொப்பையப் பற்கிளைய
வெற்றிசத் திக் Oகரக முருகோனே-
வெற்புமெட் டுத்திசையும் வட்டமிட் டுச்சுழல
விட்டபச் சைச்**சரண மயில்வீரா;

---

* தத்துவத்துச் செயல்கள் வேதனைப் படுத்தும்
"தத்துவப் பேயோடே தலையடித்துக் கொள்ளாமல்"
- என்றார் தாயுமானவர். (உடல்பொய் 29)

† ஒட்டு = பறவை பிடிப்போர் அது வந்து படப் பசை தடவி வஞ்சித்து வைத்திருக்கும் கருவி: கண்ணி;
பறவை அகப்படும்படிக் கண்ணி (வலை) வைப்பர் -
"திண்ணிய நெஞ்சப் பறவை சிக்கக் குழற் காட்டில் கண்ணி வைப்போர் - தாயுமானவர். மாதரை. 2
"புதல் மறைந்து வேட்டுவன்புட் சிமிழ்த்தற்று" குறள். 274
வலையிற் பட்ட (பறவை) மயில் வருந்துவது -
" வலைப்படு... மஞ்ஞையென அலைத்த வயிற்றினராய் அழுதிட்டார்"
- சிந்தா, 424 " வலைப்படு மஞ்ஞையின் நலஞ்செலச் சாஅய் நினைத்தொறுங் கலுழுமால் இவளே"
- குறிஞ்சி. 250,
" வலையுறு மயிலின் வருந்தினை பெரிது" - கலித்தொகை 128

‡ வித்த கத்தி = வித்தக + அத்தி.
Xவிநாயகர் பவள நிறம்-"பவளக் குன்று""சிவந்த பவள மத யானை" - திருப்புகழ், 1019 'தொப்பை யொரு பெரு வயிற்றுப் பிள்ளை' தக்க யாக. 229.
O கரக - கர + அக.
** சரணம் = மயில் தோகை.

# 1117.

(தத்துவத்துச் செயலொடு ஒட்டில் பட்ட குருகு - ஒட்டில்பட்டு அக்குருகு சத்துவிட்ட அப்படி போல அடியேனும்) - ஒட்டில் பறவையைப் பிடிக்க வைக்கப்பட்ட கண்ணியிலே (பட்ட) அகப்பட்டுக் கொண்ட (குருகு) பறவையானது தன் (சத்தை) அறிவின் சத்தியை - (விட்டப் படிபோல) - விட்ட அத்தன்மைபோல இழந்து எப்படி மயங்குமோ அதுபோல - அடியவனாகிய நானும் தத்துவத்துச் செயலொடு - தத்துவ சேஷ்டைகளால் (ஒடுங்கி) -

(சச்சில் உற்றுப் படியில்) படியில் (இந்தப்) பூமியில் (சச்சில்) பதர்போல பயனற்றவனாய் (உற்று) இருந்து வாழ்ந்து, (விட்டு விட்டு) அப்போதைக் கப்போது - இருந்திருந்து - (குளறி) தடுமாற்ற முள்ள பேச்சுக்களைப் பேசிச், (சத்துவத்தை) உண்மைப் பொருளைப் (பிரிய விடும் வேளை) விட்டு விலகிப் பேசும் பொழுதெல்லாம் - (நான் உண்மை நெறியை விட்டு விலகிப் பொய்ந்நெறியிற் படரும் போது) - (நீ)

பரிசுத்தமான (முத்தப் பதவி) மோட்சப் பதவியை அடைந்துள்ள சிறந்த பக்தர்களுடனே (தொக்கு) (என்னை) ஒன்று கூட்டிச் சேர்த்து (அல்லது பக்தரோடு கூடி) பக்தர்கள் உன்னுடன் வரச் (சற்று) தயைசெய்து (கடையன்) கடையவனாகிய - இழிந்தோனாகிய எனது (மிடிதீர) வறுமை தொலையத் -

(துப்பு) பவளம் முத்து - இவைகளின் நிறம் கொண்ட (சரணம்) கால்களை உடைய பச்சைநிறம் கொண்டதும், ஜெயமே கொண்டதுமான (புரவி) குதிரையாம் மயிலை (சுற்றவிட்டு) சுழலுவது போல வேகமாகச் செலுத்தி - வந்தருள வேண்டும்.

(வித்தக அத்தி) பெருமை (ஞானம்) பொருந்திய யானை, பவள நிறம் கொண்டவன் தொப்பை பெருவயிற்றை உடைய (அப்பன்), அண்ணல் - ஆகிய கணபதிக்கு இளையவனே - தம்பியே! ஜெயம் பொருந்திய (சத்தி) சத்திவேலைக் (கரக - கர அக)! திருக்கரமாம் இடத்தில் - திருக்கையில் - உடையவனே! முருகனே!

கிரவுஞ்ச மலையும் எட்டுத் திக்குகளும் வட்ட மிட்டுச் சுழல விட்ட வட்டமாகச் சுற்றிச் சுற்றிச் சுழலும்படிச் செய்த பச்சை நிறமுள்ள (சரணம்) தோகையைக் கொண்ட மயில் வீரனே!

கத்தர் நெட்டுச் சடையர் *முக்க†ணக் கக்கடவுள்
‡கச்சியப் பர்க்கருள்செய் குருநாதா-
Xகற்பதத் தைக்குருகி யுற்பதத் துக்குறவர்
Oகற்பினுக் குற்றுபுணர் பெருமாளே (123)

## 1118. பூசை செய்ய

தத்தனத் தத்ததன தத்தனத் தத்ததன
தத்தனத் தத்ததன தனதான

மக்களொக் கற்றெரிவை பக்கமிக் கத்துணைவர்
மற்றுமுற் றக்குரவ ரனைவோரும்-
வைத்தசெப் பிற்பணமும் ரத்நமுத் திற்பணியு
மட்டுமற் றுப்பெருகு மடியாரும்;

புக்குதுக் கித்தெரிகள் தத்தவைக் கப்புகுது
பொய்க்குமெய்க் குச்செயலு முருகாதே-
**புஷ்பமிட் டுக்கருணை நற்பதத் தைப்பரவு
புத்திமெத் தத்தருவ தொருநாளே;

†செக்கர்கற் றைச்சடையில் மிக்க‡‡கொக் கிற்சிறகு
XXசெக்கமுற் றச்சலமு மதிசூடி-

---

* முக்கண் - சூரியன், சந்திரன், அக்கினி - "நற்றாற் சோமன், எரிதரு நாட்டத்தன்" - திருக்கோவை. 168

† ருத்ராக்ஷ மாலை - "வெள்ளை எலும்பினொடக்கு வடங்கள் தரித்திலர் போலும்" - 2-65-1

‡ இந்தப் பாடலைக் காஞ்சிப் பாடலாகக் கொள்ளலாம்.

Xகற்ப தத்தை = கற்பக நாட்டுத் தெய்வயானை.

O கற்பினுக்கு = கற்பினை யுடைய வள்ளி நாயகியை.

** மலரிட்டுப் பூசித்தல் -
"மலரிட் டுன தாள் சேர ஒட்டார்" - கந்தரலங். 4
"இட்டுக் கொள்வன பூவுள நீருள" - அப்பர். 5-91-6.

†† "செஞ்சடைக் கற்றை முற்றம்" - அப்பர். 4-22-1

‡‡ கொக்கிறகு - சிவபிராற்கு - பாடல் 180-பக்கம் 418 குறிப்பு

XX செக்கம்: செகம் = ஜகம்.

(கர்த்தர்) தலைவர், நீண்ட சடையை உடையவர், முக்கண் மூன்று கண்களை உடையவர், நக்கக் கடவுள் திகம்பரராம் பெருமான் (அல்லது) அக்கக் கடவுள் - ருத்ராக்ஷமாலை அணிந்த கடவுள் (கச்சி அப்பர்) காஞ்சியில் வீற்றிருக்கும் அப்பர் - ஆகிய சிவபிரானுக்கு (உபதேசப் பொருளை) அருளிய குரு மூர்த்தியே! கடவுளுக்கும், கச்சியப்பனார்க்கும் (கந்தபுராண ஆசிரியர்) அருள் செய்த குருநாதனே எனலுமாம்.

(கற்ப தந்தை - கற்பக தந்தை) கற்பக நாட்டுக்கினி தேவ சேனைக்கு உள்ளம் உருகினவனே! உன்பதந்து - உன் பதத்தில் ஈடுபட்ட - உன் திருவடியையே போற்றுகின்ற - உன்னைக் குலதெய்வமாகக் கொண்டுள்ள - குறவர் - குறவர் வளர்த்த (கற்பினுக்கு) - கற்பினை உடைய வள்ளியை (உற்று) அடைந்து, புணர் - அவளை அணைந்த பெருமானே! (வரவேணும்)

## 1118.

(மக்கள்) குழந்தைகள், (ஒக்கல்) சுற்றத்தார், (தெரிவை) (பெண்) மனைவி, பக்கத்திலே நிறைந்துள்ள துணைவர்கள் - சகோதரர்கள், நண்பர்கள் மற்றும் (உற்ற) உள்ள (குரவர்) குரு முதலிய பெரியோர்கள் எல்லாருடனும் -

(வைத்த செப்பிற் பணமும்) நான் சேமித்து வைத்திருந்த செப்புக் காசுகளும், ரத்னம் - முத்து இவைகளால் ஆய (பணியும்) ஆபரணங்களும், (மட்டும் அற்று) இவை அளவு நீங்கலாக - (என்னுடன் வராது ஒழிய) - என் பிணம் செல்லும்போது - (பெருகும் அடியாரும்) திரண்டு கூடுகின்ற அன்பர்களும் -

(புக்கு) ஒன்று புகுந்து - (துக்கித்து, துக்கம் கொண்டாடி - எரிகள் தத்த வைக்க - நெருப்பு கொழுந்துவிட்டு எரியும்படி (என் உடலைச் சுடுகாட்டில்) வைக்கப் (புகுது) போகின்ற (பொய்க்கு) பொய்யான - நிலையாத - இந்த (மெய்க்கு உடலின் பொருட்டு, (செயலும்) என் செய்கைகள் ஈடுபட்டு உருகாமல் -

(புஷ்பம் இட்டு) மலர் கொண்டு பூசித்துக், கருணைக்கு இருப்பிடமான உனது சிறப்புற்ற திருவடிகளை நான் போற்றும் படியான புத்தியை (மெத்தத் தருவது) நீ எனக்கு நிரம்பக் கொடுப்பதான ஒரு பாக்கிய நாள் உண்டோ!

(செக்கர்) செந்நிறமுள்ள (கற்றைச் சடையில்) திரண்ட சடையில் நிரம்பக் கொக்கின் இறகையும், (செக்கம் உற்ற) - ஜெகத்தில் - பூமியல் வரும் கங்கை, என்னும் பேருடன் உள்ள ஜலமும் - கங்கை நீரையும், மதி - சந்திரனையுஞ் (சூடி) அணிந்துள்ள சிவபிரானுக்கு -

சித்தமுற் றுத்தெளிய மெத்தமெத் தத்திகழு
சித்தமுத் திச்சிவமு மருள்வோனே;

கொக்குறுப் புக்கொடு*மை நிற்கும்வட் டத்தசுரை
கொத்தினொக் கக்கொலைசெய் வடிவேலா-

கொற்றவெற் றிப்பரிசை யொட்டி யெட் டிச்சிறிது
குத்திவெட் டிப்பொருத பெருமாளே (124)

## 1119. அறிவு உற

தத்தா தத்தா தத்தா தத்தா
தத்தா தத்தத் தனதான

உற்பா தப்†பூ தக்கா யத்தே
யொத்தோ டித்தத் தியல்காலை-

உட்பூ ரித்தே சற்றே சற்றே
யுக்கா ரித்‡தற் புதனேரும்;

x அற்பா யிற்றாய் நிற்பா ரைப்போ
லப்பா வித்துத் திரிவேனுக்-

கப்பா சத்தா லெட்டா அப்பா
லைப்போ தந்தைப் புரிவாயே;

o பொற்பார் பொற்பார் புத்தே ளிர்க்கா
கப்போய் முட்டிக் கிரிசாடிப்-

*மை வட்டத்து நிற்கும் அகரை என அந்வயப் படுத்துக; மை வட்டம் = கறுத்த வட்டமாகிய கடல்,

† "ஊம் பூதத்தான் ஆகியதோர் ஆக்கை" - வேல் பத்து 9

‡ அற்புதன் = கடவுள். X அற்பா யிற் றாய் = அன்பாய் இல் தாய் = அன்பாய் இல்லறத்தைத் தழுவி.

o பொற்பு ஆர் பொன் பார் = அழகு நிறைந்த பொன்னுலகம்.

சித்தம் உற்று (அல்லது முற்று)- (அவருடைய உள்ளத்தில் நன்கு பொருந்தி (முற்றும்) தெளிவுறுமாறு (மெத்த மெத்தத் திகழும்) மிக மிக நன்றாக விளங்கும், (சித்த முத்தி) திடமான முத்தி நிலையாம் (சிவம்) நன்மைப் பொருளை (அருள்வோனே) உபதேசித்தவனே! (அல்லது - மதிசூடியாகிய சிவன், அடியார்களுடைய உள்ளத்தில் நன்கு பொருந்தி அவர்களுடைய உள்ளம் தெளிய மிக மிக நன்றாக விளங்கும் (சித்த முத்திச்) திடமான முத்தியை அளிக்கும் (சிவம்) - சிவன் - அருளிய புதல்வனே!

(கொக்கு உறுப்பு கொடு) மாமரத்தின் உறுப்புக்களை - (அங்கங்களை கொம்பு கிளை முதலியன) கொண்டு, (மை நிற்கும் வட்டத்து அசுரை) மை வட்டத்து நிற்கும் அசுரனை - கறுத்த வட்டமாகிய கடலிற் புக்கிருந்த அசுரனைச் சூரனைக் - கொத்தின் ஒக்க - ஒரு கொத்துப் போல - ஒரே கொத்தாக - ஒரே தரத்தில் கொலை செய்து அழித்த கூரிய வேலனே!

(கொற்றம் வெற்றிப் பரிசை) வீரமும் ஜெயமும் கொண்ட (பரிசை) கேடகத்துடன் - ஒட்டி எட்டி - ஒட்டி நின்றும் எட்டி நின்றும் - அணுகியும் தூரத்தில் நின்றும் - சிலரை (வேலாற்) குத்தியும், சிலரை வாளால் வெட்டியும் போர்புரிந்த பெருமாளே!

(புத்தி மெத்தத் தருவ தொருநாளே)

# 1119.

(உற்பாதம்) துர்க்குறி - கெட்ட சகுனம் கொண்ட (பூதக் காயத்தே) (ஐம்பூதங்களால் ஆய இந்த உடலுக்கு - உடலைப் போற்றுதற்கு ஒத்து ஓடி - உடன்பட்டு ஓடி, தத்து இயல் காலை - ஆபத்துக்கள் நேரும்போது -

உள் பூரித்து - உள்ளம் (கவலையால்) நிரம்பப்பட்டு - சற்றே சற்றே -சற்றளவு சற்றளவு - கொஞ்சம் கொஞ்சம் -(உக்காரித்து)(ஐயோ என்று) சத்த மிட்டு வேதனைப்பட்டு - (அற்புதன் நேரும்) கடவுளித்தே உண்டாகும் -

(அற்பாய்) அன்பு பூண்டவராய் - இல்தாய் - இல்லறத்தைத் தழுவி நிற்பாரைப் போல - நிற்கின்ற மக்களைப் போலப் (பாவித்து) நடித்துத் திரிகின்ற எனக்கு -

அப்பாசத்தால் - அந்தப் பாசங்களால் எட்ட முடியாமல் (அப்பாலைப் போதத்தை) அப்பாற்பட்டு நிற்கும் ஞான அறிவை உபதேசித் தருளுக.

(பொற்பு ஆர்) அழகு நிறைந்த (பொன்பார்) பொன்னுலகத்தில் உள்ள (புத்தேளிர்க்காக) தேவர்களுக்காக - தேவர்களுக்கு நன்மை தர வேண்டி - (போய்) போர்க்களத்திற் புக்கு - (முட்டி) அசுரர்களை எதிர்த்து, (கிரிசாடி) கிரவுஞ்சமலையை அழித்து -

புக்கா ழிச்சூழ் கிட்டா கிச்*சூர்
பொட்டா கக்குத் தியவேலா-
†முற்பா டப்பா டற்றா ருக்கோர்
முட்கா டற்கப் பொருளீவாய்
முத்தா ‡முத்தீ யத்தா சுத்தா
×முத்தா முத்திப் பெருமானே. (125)

## 1120. உண்மை உறவு ஆர்?

தத்தா தத்தா தத்தா தத்தா
தத்தா தத்தத் தனதான

ஏற்றா வற்றா மட்டா கத்○தீ
யிற்காய் செக்கட் பிறைவாளே-
யிற்றார் கைப்**பா சத்தே கட்டா
டிக்கோ பித்துக் கொடுபோமுன்;

---

*" சூராதிபனுடல் பொட்டெழ முடுகி வை வேலால்
எதிருரு" - திருப்புகழ் 1146

† இங்கே பொய்யா மொழிப்புலவருக்கு அநுக்கிரகித்ததைக் குறிப்பிட்டது. இவ் வரலாற்றைப் பாடல் 422-பக்கம் 562-565 - பாடல் 1022-பக்கம் 72 - கீழ்க்குறிப்பிற் பார்க்க.

‡ முத்தீ - ஆகவனீயம் - வேதத்தை வழங்கச் செய்வது; தக்கிணாக்கினி - தேவர்கட்குத் தக்கணை கொடுக்கச் செய்வது; காருக பத்தியம் - பூலோகத்தை ரட்சிக்கச் செய்வது இவைகளே யாகாக்கினிகளாம்-

" காருக பத்திய மாதி மூன்றழலும்" - தணிகைப்புரா அகத்தி. 490

" நாற் சதுரமும், முச் சதுரமும், வில் வடிவுமாகிய... ஆக வனீயம், தக்கிணாக்கினி, காருக பத்தியம் என்னும் மூன்று தீ " - திரு முருகா 181 உரை.

முத்தீ அத்தன் - முருகவேள் -

" அந்தண் மறை வேள்வி காவற்கார" - திருப்புகழ் 41

" யாக முநிவர்க்குரிய காவற்காரன்" - வேளைக்காரன் வகுப்பு.

" விப்ர குல யாகச் சபாபதி" - வேடிச்சி காவலன் வகுப்பு.

" ஒரு முகம். .. அந்தணர் வேள்வி ஓர்க்குமே"- திருமுரு.

× "முத்தா முத்தி தரவல்ல முகிழ்மென் முலையாள்
உமைபங்கா" - சுந்தரர். 7-52-1

○ யமனுடைய கண்ணும் பற்களும் - (தொ.பக். 263)

(புக்காழி) ஆழிபுக்கு - கடலிடையேபுக்கு - சூழ்கிட்டாகி - (சூரனது) சூழ்ச்சி நிலையைச் சமீபித்து - அந்தச் சூரன் (பொட்டாக) பொடியாகும்படி அவனை வேலாற் குத்தின வேலனே!

முன்பாட - (பொய்யா மொழிப்புலவர்) முன்னதாகப் பாட, (பாடு அற்றாருக்கு) - (பாடுதல் அற்றாருக்கு) அப்பாட்டைக் குற்ற மின்றிப் பாடும் திறமை அற்ற அப்புலவற்கு - ஓர் முள் காடு அற்க - ஒரு முள் தைக்கும் காடு - என்று அப்புலவர் குறித்த இடத்தில் பிழை (அற்குதலை) நிலை பெற்றிருத்தலைக் காட்டிப் - பொருள் - சரியான வழியிற்பாடும் பொருள் முறையை காட்டும் பாடலை (அப்புலவர்க்கு) (ஈவாய்) அளித்தவனே!

(முத்தனே) எல்லாம் விட்டவனே! முத்தீ - காருகபத்தியம். ஆகவனீயம், தக்கிணாக்கினி என்ற மூவகை வேதாக்கினிக்கு உரிய (அத்தா) தலைவனே! பரிசுத்த மூர்த்தியே! முத்தா - முத்துப் போன்ற அருமையனே! முத்திப் பெருமாளே - அடியார்க்கு முத்தி அளிக்கும் பெருமாளே!

(போதத்தைப் புரிவாயே)

## 1120.

எற்றா வற்றா மட்டாகத் தீயிற்காய் செங்கண் பிறைவாள் (எயிற்றார் - எயிற்றார்) - தீ வற்றா மட்டாக - தீயிற்காய் செங்கண், பிறைவாள் எயிற்றார் - எற்றா - கைப்பாசத்தே கட்டா - (ஆடி) ஆட்டி - கோபித்துக் கொடுபோமுன் - தீயும் (தமதுகண்களின் தீ முன்பு) வள்ளி மட்டாகும்படியாகப் பெருந்தீப் போலக் காய்ந்து எரி உமிழும் சிவந்த கண்களையும், பிறைபோல்வளைந்தும், வாள்போலக் கூரியதாயும் ஒளி உள்ளதாயும் உள்ள -

(எயிற்றார்) பற்களை உடைய (யமதூதர்கள்) - (எற்றா) எற்றி அடித்து உதைத்து மோதி - தமது கையில் உள்ள பாசக் கயிற்றால் கட்டி - (ஆட்டி) அலைத்துக் கோபித்து (என்னைக்) கொண்டு போவதற்கு முன்பாக -

---

" விடம் உமிழு செங்கண், திங்கள் பகலின்ஒளிர் வெளி றெயிறு", " செங்கண் கனல் பொங்கும்", 'தழலே பொழி கோர விலோசனம்', " இரு விழி அனலது கக்க"

- திருப்புகழ். 17, 32, 813, 1017

** " காலனார்.. தூதர் பாசங் கொடேன் காலின் ஆர் தந்து"

- திருப்புகழ். 35

உற்றார் பெற்றார் சுற்றா நிற்பா
ரொட்டோம் விட்டுக் கழியீரென்-
றுற்றோ துற்றே பற்றா நிற்பா
*ரக்கா லத்துக் குறவார்தான்;
பற்றார் மற்றா டைக்கே குத்தா
பற்றா னப்பிற் களைவோனே-
பச்சே னற்கா னத்தே நிற்பாள்
பொற்பா தத்திற் பணிவோனே;
முற்றா வற்றா மெய்ப்போ தத்தே
யுற்றார் சித்தத் துறைவோனே-
முத்தா முத்தீ யத்தா சுத்தா
முத்தா முத்திப் பெருமானே (126)

## 1121. திருவடியை ஓத

தத்தா தத்தா தத்தா தத்தா
தத்தா தத்தத் தனதான

செட்டா கத்தே னைப்போ லச்சீ
ரைத்தே டித்திட் பமதாகத்-
திக்கா மற்பா டுற்றா ரிற்சீ
ருற்றா ருக்குச் சிலபாடல்;
பெட்டா கக்கூ றிப்போ தத்தா
ரைப்போல் வப்புற் றுழலாதே-
†பெற்றா ரிற்சார் வுற்றாய் நற்றாள்
சற்றா தப்பெற் றிடுவேனோ;

* அக்காலம் - முடிவு நாள் - " அக்காலத்தில் புரக்கும் வேந்தன்" - சம்பந்தர். 1-97-8

"உற்றா ஆர் உளரோ உயிர் கொண்டு போம் பொழுது குற்றாலத்துறை கூத்தனல்லால் நமக்கு உற்றார் ஆர் உளரோ" - அப்பர். 4-9-10

† "பெற்றாரில் சார்வுற்றாய்"-

"அன்னை ஒப்பாய் எனக்கு அத்தன் ஒப்பாய் என் அரும் பொருளே" திருவாசகம். நீத்தல் 16

" அன்னையும் அத்தனும் ஆவாய் அழல்வணா நீ யலையோ"
- அப்பர். 4-112-3

(உற்றார்) சுற்றத்தாரும் நண்பர்களும், பெற்றோர்களும், சூழ்ந்து நிற்பவர்களும் (உம்மை விட்டுப் பிரிய) ஒட்டோம் - துணியோம் அல்லது எம்மை விட்டுப் பிரிய விடோம் - எங்களை விட்டுக் (கழியீர்) போகாதீர் என்று -

(உற்று) சமீபத்தே இருந்துகொண்டு (ஓதுற்றே) கூறிக்கூறி பற்றா நிற்பார் - பற்றாக - அன்புகாட்டி நிற்பார்கள் (ஆனால்) அக்காலத்துக்கு - அந்த உயிர் போகும் அந்தச் சமயத்தில் உறவு ஆர் தான்) யார்தான் உறவினராய்க் கூட வந்து துணையாவார்கள்! இறைவன் ஒழிய வேறு ஒருவரும் துணையாகார் என்றபடி.

(பற்றார்) பகைவர்களுடைய (மல்) வலிமை மிக்க - பருத்த (தாடைக்கே) - தாடையில் - குத்தா) குத்தி, (பற்றான்) பல்தான் அவர்களது பற்களை (அப்பிற் - அம்பில்) அம்பினால் (களைவோனே) தகர்த்து எறிவோனே!

பச்சேனல் கானத்தே - பசிய தினைவனத்தே (காவல் கொண்டு நிற்கும்) வள்ளியின் அழகிய பாதங்களில் பணிந்து வணங்குபவனே!

(முற்றா வற்றா) முற்றி வற்றாததான (மெய்ப் போதத்தே) மெய்ஞ்ஞான நிலையில் உள்ளவர்களின் நெஞ்சகத்தே வீற்றிருப்பவனே!

முத்தனே! முத்தமுதல் நாயகனே! பரிசுத்தனே! முத்தாம் முத்தி மேலானதாகிய முத்தியை அளிக்கும் பெருமானே!

(அக்காலத்துக்கு உறவார்தான்)

## 1121.

(செட்டாக) பொறுக்கி எடுத்தாற் போலச் சிக்கனமான சுருக்கமான வகையில், தேன் போல இனிப்பனவாய்ச், (சீரை)- சிறப்புற்றனவாயுள்ள (சொற்களையும் கருத்தையும்) நாடி அமைத்துத் (திட்பமதான) - உறுதியான - திண்மையான வாக்கினால் -

(திக்காமல்) தடைபாடு ஒன்றுமில்லாத வகையில் - (பாடு உற்றாரில் - பாடுதலைக் கொண்டவர்கள் போலப் - பாடுகின்ற புலவர்களைப்போல (நானும்), சீர் உற்றாருக்கு - செல்வம் படைத்தவர்களிடத்தே சென்று, சில பாடல்களைப் -

(பெட்டாக) மயக்கவல்ல பொய்ம் மொழி கொண்டு பாடிப் - (போதத்தாரைப் போல) ஞான அறிவு கொண்டவரைப் போல (வப்புற்று) வம்பு - வீண் வேலைகளில் காலம் போக்கித் திரியாமல் -

(பெற்றாரில்) என்னைப் பெற்ற தாய் தந்தையர் போலச் (சார்வுற்றாய்) அன்பு காட்டித் துணை நிற்பவனே! (உனது) நற்றாளை - சிறந்த திருவடிகளைச் (சற்று) சிறிதளவாவது - (ஓதப் பெற்றிடுவேனோ!) ஓதும் - போற்றும் பாக்கியத்தைப் பெறுவேனோ!

எட்டா நெட்டா கத்தோ கைக்கே
புக்*கோ லத்திட் டிமையோர்வா-
னிற்பா ரிற்சூ ழச்சூ ரைத்தா
னெட்டா வெட்டிப் பொரும்வேலா,
†முட்டா மற்றா னைச்சே விப்பார்
முற்பா வத்தைக் களைவோனே-
முத்தா முத்தீ யத்தா சுத்தா
முத்தா முத்திப் பெருமானே (127)

## 1122. திருவடியை அணுக

தத்தா தத்தா தத்தா தத்தா
தத்தா தத்தத் தனதான

பட்டா டைக்கே பச்சோ லைக்கா
துக்கே பத்தித் தனமா‡கும்
பக்கே நிட்டூ ரப்பார் வைக்கே
பட்டா சைப்பட் டுறவாடி;
ஒட்டார் நட்டார் ×வட்டா ரத்தே
சுற்றே முற்றத் தடுமாறும்-
ஒட்டா ரப்பா விக்கே மிக்கா
○முற்றான் கிட்டத் தகுமோதான்;

*ஓலத்திட்டு இமையோர் - சூழ - ஓலமிட்டு வானோர் சூழ - சூரனொடு முருகவேள் போரிட்ட போது - சூரன் பல தலை, பல கைகள் கொண்ட பெரிய உருவ மெடுத்துத் தேவர்கள் யாவரையும் உண்ண விண்ணிடை எழுந்தபோது தேவர்கள் ஓல மிட்டுக் "கூற்றை நேர்ந்த உயிரென இரங்கல் உற்றார்" - அவர்கள் ஓலமிட்ட வகை-

" நண்ணினோர்க் கினியாய் ஓலம், ஞான நாயகனே ஓலம்
பண்ணவர்க் கிறையே ஓலம், பரஞ்சுடர் முதலே ஓலம்
எண்ணுதற் கரியாய் ஓலம், யாவையும் படைத்தாய் ஓலம்,
கண்ணுதற் பெருமான் நல்கும் கடவுளே ஓலம் ஓலம்,
தேவர்கள் தேவே ஓலம், சிறந்த சிற் பரனே ஓலம்
மேவலர்க் கிடியே ஓலம், வேற்படை விமலா ஓலம்
பாவலர்க் கெளியாய் ஓலம், பன்னிரு புயத்தாய் ஓலம்
மூவரு மாகி நின்ற மூர்த்தியே ஓலம் ஓலம்.
. ஆங்கவன் உயிரை உண்டெம் ஆவியை அருளு கென்றார்"
- கந்தபுரா. 4-13-460-462 (தொ. பக்; 267)

(எட்டா) பாய்ந்து (நெட்டாக) பெருமையுடனே (தோகைக்கே) மயில் மீதே (புக்கு) பாய்ந்து ஏறி (ஓலத்திட்டு) எங்களைக் காத்தருளுக அபயம் அபயம் என்று கூச்சலிட்டு (இமையோர்) தேவர்கள் வான் - இல் வானில் - விண்ணிலும்,

(பாரில்) பூமியிலும் (சூழ) உன்னைச் சூழ்ந்து நிற்கச், (சூரைத்தான்) சூரனை (எட்டா) எட்டி அணுகி (அவனை வெட்டிச் சண்டை செய்த வேலனே!

(முட்டாமல்) தங்கள் வழிபாட்டில் இடையின்றி - குறைவு தடை ஒன்றும் ஏற்படாத வழியில், (உனது) (தாளை) திருவடியைச் (சேவிப்பார்) வழிபட்டு வணங்குபவர்களின் (முற்பாவத்தை) பழைய பாப வினையை - தீவினையை ஒழிப்பவனே - நீக்கியருள்பவனே!

முத்துபோல அருமை வாய்ந்தவனே! (முத்தீ) மூவகையான அக்கினி வேள்விக்குத் தலைவனே! பரிசுத்த மூர்த்தியே! (முத்தா) பற்றற்றவனே! முத்தி அளிக்கும் பெருமாளே!

(நற்றாள் சற்றோதப் பெற்றிடுவேனோ)

## 1122.

பட்டுப் புடைவைக்கும், பசுமைவாய்ந்த ஓலையை அணிந்துள்ள காதுக்கும், (பத்தி) ஒழுங்காக உள்ள (தனம்) கொங்கையாகிய அழகிய (கும்பக்கே) குடத்துக்கும் -

(நீட்டுரப் பார்வைக்கே) கொடுமையைக் காட்டும் கண்பார்வைக்கும் (பட்டு) அகப்பட்டு ஆசைப்பட்டு (உறவாடி) உறவு பூண்டு கலந்து களித்துப்பேசி -

(ஒட்டார்) ஆகாதவர்கள் (நட்டார்) ஆனவர்கள் (பகைவர் நண்பர்) ஆகிய எல்லாருடைய (வட்டாரத்து) - சூழலிலும் (ஏசுற்றே) பழிப்பு மொழியை அடைந்து (யாவரும் என்னைப் பழிக்க) - அடியோடு - (முழுதும்) தடுமாறுகின்ற - கலங்குகின்ற

(ஒட்டாரப் பாவிக்கே) பிடிவாதமுள்ள பாவியாகிய எனக்கு - (மிக்காம்) மேலானதாகிய (உற்றாள்) உனது (தாள்) திருவடி (கிட்டத் தகுமோதான்) கிடைக்கும் படியான தகுதியுண்டோதான்! (திருவடியைக் கிட்டும் தகுதி உளதெனில் மிகவும் மகிழ்வேன் நான் என்றபடி)

---

† "தப்பாமற் பாடிச் சேவிப்பார் தத்தாம் வினையைக் களைவோனே" - திருப்புகழ். 292

‡ கும்பக்கே = கும்பத்துக்கே X வட்டாரத்து ஏசு உற்றே எனப் பிரிக்க. O உற்றாள் = உன் தாள்.

கட்டா விப்போ துட்டா விப்*பூ
கக்கா விற்புக் களிபாடுங்-
கற்பூர் நற்சா ரக்கா ழித்தோய்
கத்தா †சத்தித் தகவோடே;
முட்டா கக்கூ ரிட்‡டே னற்றாள்
முற்றா மற்கொட் குமரேசா-
முத்தா முத்தீ யத்தா சுத்தா
முத்தா முத்திப் பெருமாளே (128)

## 1123. திரிதல் அற

தத்தா தத்தா தத்தா தத்தா
தத்தா தத்தத் தனதான

× பத்தே ழெட்டீ ரெட்டேழ் ரட்டால்
வைத்தே பத்திப் படவேயும்-
பைப்பீ றற்கூ ரைப்பா சத்தோ
சற்கா ரத்துக் கிரைதேடி;

* பூகக் காவில் - அளிபாடும் - காழி -

" கமுகு பவளம் பழுக்கும் கலிக்காழி", " கமுகின் வயல் சூழ் தரு காழி"! "கமுகின் விரையார் பொழில் சூழ் வேணு புரம்" "புடைப் பாளையின் கமுகின் னொடு புன்னை மலர் நாற்றம் விடைத் தேவரு தென்றல் மிகு வேணு புரம்" சம்பந்தர். 1-102-4; 3-55-11, 2-17-5; 1-9-2

† வள்ளி - " இச்சா சத்தி":

" செட்டி யென்று வனமேவி யின்பரச சத்தியின் செயலினாளை அன்புருக தெட்டி வந்து" - திருப்புகழ். 612

‡ தினை முதிர்வது முன் - வள்ளி தினைவனம் காவல் செய்த போது தான் - முருகவேள் வள்ளியோடு விளைகள் புரிந்தனர் - தினை முதிர்ந்து விளைந்ததும் வேடர்கள் வள்ளியைக் காவலினின்றும் நீக்கி அவளது சிறு குடியில் இருக்கச் செய்தனர்.

" ஏனல்கள் விளைந்தன. இன்று காறிது போற்றியே
வருந்தினை, இனி நீ சென்றிடு அம்ம உன் சிறு குடிக்கு
என உரை செய்தார்" - கந்தபுரா . 6-24-148

X பத்து ஏழு எட்டு பதினாறு ஏழு = 48; இதன் இரட்டை 96. இவை தத்துவங்கள் - பாடல் 1115 அடி 4 பார்க்க

" ஒன்பதும் ஒன்பதும் ஒன்றும் - மற்றை (9 + 9 + 1) 19
ஒன்பதும் முப்பதும் ஒன்பதும் ஒன்றும் (9 + 30 + 9 + 1) 49

(கள் தாவி, மதுவை நாடி அலைந்து - (போதுள் தாவி) மலர்களின் உள்ளே பாய்ந்து, பூகக் காவிற் புக்கு, கமுகமரச் சோலையிற் புகுந்து, (அளி பாடும்) வண்டுகள் பாடுகின்ற -

(கற்பு ஊர் நல்சார்) சிறந்த முறைமை வாய்ந்துள்ள - நன்மைகள் பொருந்தியுள்ள - (அக்காழி) அந்தச் சீகாழித் தலத்தில்தோய் - கலந்து வீற்றிருக்கும் (கத்தா) (கர்த்தனே) சத்தித் தவோடு - (இச்சா) சத்தியாம் தகைமை கொண்ட வள்ளியின் முன்பு

(முட்டாக ) எதிர்ப்படுதல் வேண்டும் என்கின்ற எண்ணம் (வள்ளியைச் சந்திக்க வேண்டும் என்கின்ற கருத்து உண்டாகிக் (கூரிட்டு) மிகுதிப் பட்டு, (ஏனல் தாள்) திணைப் பயிரின் தாள் அடித்தண்டுகள் முதிர்ச்சி அடைவதற்கு முன்பாகவே கொள் (அந்த வள்ளியைக்) களவிற் கொண்ட - வசப்படுத்தின குமரேசனே!

முத்துப்போன்ற அருமை வாய்ந்தவனே! மூன்றுவகையான யாக அக்கினிகளுக்கு (அத்தா) உரிய நாயகனே! பரிசுத்தனே! பற்றற்றவனே! முத்தியைத் தரவல்ல பெருமாளே!

(உன் தாள் கிட்டத் தகுமோதான்)

## 1123.

பத்து, ஏழெட்டு (ஐம்பத்தாறு), ஈரெட்ட (பதினாறு), ஏழ்ரட்டு (இரட்டை ஏழு - பதினான்கு) ஆக 10 + 56 + 16 + 14 - தொண்ணூற்றாறு (அல்லது பத்து, ஏழு, எட்டு, ஈரெட்டு, ஏழு - 10 + 7 + 8 + 16 + 7 = 48 (இதன்) ரட்டால் - இரட்டால் 2 × 48 - (தொண்ணூற்றாறு) தத்துவங்களால், (வைத்தே) அமைக்கப் பட்டே (பத்திப்பட) ஒரு ஒழுங்குபட, (வேயும்) - மூடப்பட்டுள்ள (அல்லது ஏயும்) பொருந்தியுள்ள

பை (தோற்பை), பீறல் கூரை - கிழிபட்டு அழியும் (கூரை) ஒரு சிறு குடில் - குடிசையாகிய இந்த உடலின் மீதுள்ள (பாசத் தா) பாசத்தின் வலிமையால் - ஆசையின் பலத்தால் - (சற்காரத்துக்கு) அந்த உடலுக்கு உபசாரம் பண்ண வேண்டி - (இரைதேடி-) உணவுக்கு வேண்டிய வழியைத் தேடி -

---

ஒன்பதும் ஒன்பதும் ஒன்றும் - பின்னும் (9 + 9 + 1 ) 19
ஒன்பதும் ஆனவைக் கப்புறத் தாராம் (9) = 9
ஆனந்தும் ஆனந்தும் தோழி - கம்பர் 96
ஆடுந் திருவிளையாட்டினைப் பார்க்கில்
ஆனந்தும் ஆனந்தும் தோழி" -
திரு ஏகம்பர் ஆனந்தக் களிப்பு

O தா - வலிமை - " தாவே வலியும் வருத்தமும் ஆகும்"
- தொல். சொல். 344

*எத்தே சத்தோ டித்தே சத்தோ
டொத்தேய் †சப்தத் திலுமோடி-
எய்த்தே நத்தா பற்றா மற்றா
திற்றே முக்கக் கடவேனோ;

சத்தே‡முற்றா யத்தா னைச்சூர்
கற்சா டிக்கற் பணிதேசா-
Xசட்சோ திப்பூ திப்பா லத்தா
அக்O கோ டற்செச் சையமார்பா;

**முத்தா பத்தா ரெட்டா வைப்பா
††வித்தா முத்தர்க் கிறையோனே-
‡‡முத்தா முத்தீ யத்தா சுத்தா
முத்தா XXமுத்திப் பெருமானே (129)

## 1124. பொருளாசை அற

தத்தா தத்தா தத்தா தத்தா
தத்தா தத்தத் தனதான

பொற்கோ வைக்கே பற்கோ வைக்கே
பொய்ப்போ கத்தைப் பகர்வார்தம்-

---

*(வேசையர்க்குத் தரவேண்டி) இங்ஙனம் பல தேசங்களுக்குப் போய்ப் பொருள் தேடுதலை 43. 1124 என்னுள்ள பாடல்களிலும் காண்க. † சப்தத்திலும் = சப்த தீவிலும்

‡ முற்றாய் - " என்றும் இளையாய்" - திரு முரு - தனிப்பாடல்

X முருகவேள் திரு நீறுடன் விளங்குவது -

"நீறு படு மாழை பொரு மேனியவ" - திருப்புகழ் 161

O கோடல் = காந்தள் மலர். ** முத் தாபத்தார் = தாபத்திரய முடையவர்கள் = மூவாசை யுள்ளோர்-

†† " முத்திக் கொரு வித்து" - திருப்புகழ். 1

‡‡ முருகவேளை "முத்து" என்று அருமையாக அழைப்பார்கள் புலவர்கள்- 'முத்துக் குமாரசாமி' - என்பர். " திருவாலங் காட்டில், தேவர் வணங்க நடம்புரியும் மூங்கில் அளித்த முத்த மருள், முத்தே முத்தம் தருகவே" தனிகைப் பிள்ளைத்தமிழ்

XX முருகவேள் முத்தி அளிப்பார் - "கழல் சேர்ந்தார்க் கருத்தி கொள் முத்தியும் ஆக்கமும் ஈவோன்" - கந்தபுரா. 5-2-246

எத்தேசத்து ஓடி - எந்த எந்த தேசங்களுக்கோ ஓடிச்சென்று, (தேசத்தோடு ஒத்து) அவ்வத்தேசங்களுடனே ஒன்றுபட்டு இருந்து, ஏய்பொருந்தியுள்ள (சப்தத்திலும்) சப்ததீவுகளுக்கும் ஓடிச்சென்று

(எய்த்தே) இளைத்துப்போய், (நத்தா) நத்தி - விரும்பிநின்று, (பற்றா) ஆசையுடன் பற்றி யிருந்து, மல் தாது இற்றே வளப்பத்துடன் இருந்த (தாது) வாத - பித்த - சிலேட்டும நிலைகள், அல்லது நாடியின் நிலை, அல்லது சத்த தாதுக்கள் எனப்படும் இரதம், இரத்தம், எலும்பு, சுக்கிலம். தசை, தோல், மூளை - (இற்றே) ஒடுங்கி அழிய, (முக்கக் கடவேனோ) வேதனைப் படுதலா என் தலை எழுத்து!

(சத்தே) சத்தான பொருளே! (உண்மைப் பொருளே! என்றும் அழியாப் பொருளே!) (முற்றாய்) முற்றுதலில்லாதவனே (என்றும் இளையோனே! (அத்தானைச்சூர்) அந்தச் சேனைகளோடு கூடி வந்த சூரனையும், (கல்) கிரவுஞ்சகிரியையும், சாடி - அழிவு செய்து, கற்பு - அணி - தேசா - நீதிநெறியை மேற்கொண்ட - (தேசா) ஒளி பொருந்தியவனே!

சட்சோதிப் பூதிப் பாலத்தா - சோதிப்பூ ஷட் பாலத்தா - ஒளிவிளங்கும் - பூதி - திரு நீற்றையணிந்த ஷட்பாலத்தா - ஆறு திருநெற்றிகளையுடையவனே; அந்தக் காந்தள் மாலையையும் (வெட்சி) மாலையையும் அணிந்த மார்பனே!

(மூத் - தாபத்தார்) - மண், பெண் பொன் என்னும் மூவாசையுடையவர்களுக்கு (எட்டா) எட்டுதற்கரிதான (வைப்பா) சேமப்பொருளே! (வித்தா) முத்திக்கு வித்தே! (முத்தர்க்கு) பற்றற்றவர்களுக்கு (இறையோனே)! தலைவனே! கடவுளே!

முத்துப் போன்ற அருமையானா! மூன்றுவகையான யாக அக்கினிகளுக்குரிய நாயகனே! பரிசுத்த மூர்த்தியே! முத்தனே! முத்தியைத்தரவல்ல பெருமாளே! (முக்கக் கடவேனோ)

## 1124.

(பொற்கோவைக்கே) - பொன்வரிசைக்காக - பொற்காசு வரிசைகளுக்காகவும் (பல்கோவைக்கே) வேறு பலவிதமான (திரவிய) வரிசைகளுக்காகவும், (பொய்போகத்தை) பொய்யான நிலையற்ற சிற்றின்ப சுகத்தைப் (பகர்வார்தம்) விற்பவர்களுடைய - (அல்லது - பொற்கோவைபெறவே தாம் அணிந்துள்ள பொன்மாலைகளின் அழகைக் காட்டியும் பொய்யான சிற்றின்பசுகத்தை விற்பவர்-களுடைய) அல்லது - (பொற்கோவைக்கே) பொன் வரிசை பெறும்-பொருட்டே (பற்கோவைக்கே) பற்கோவையைக் காட்டுபவர்களாய் - சிரிப்பமைந்த பல்வரிசையைக் காட்டுபவர்களாய்ப் பொய்யான சிற்றின்ப போகத்தை விற்பவர்களுடைய

பொய்க்கே மெய்க்கே பித்தா கிப்போ
கித்தே கைக்குப் பொருள்தேடித்;

*தெற்கோ டிக்கா சிக்கோ டிக்கீழ்
திக்கோ டிப்பச் சிமமான-

திக்கோ டிப்†பா ணிக்கோ டித்தீ
வுக்கோ டிக்கெட் டிடலாமோ;

‡தற்கோ லிப்பா லிப்பார் நற்சீ
ரைச்சா ரத்தற் பரமானாய்-

Xதப்பா முப்பா லைத்தே டித்தே
சந்தோர் நிற்கத் தகையோடே;

முற்கா ணப்பே தைக்கா கப்போய்
Oமுற்பால் வெற்பிற் **கனியானாய்

முத்தா முத்தீ யத்தா சுத்தா
முத்தா முத்திப் பெருமானே (130)

---

* பாடல் 1123 குறிப்பு * பார்க்க. † பாணி = நீர்: கடல்.

‡ தற்கோலிப் பாலிப்பார்

" தற்கோல நாடோறுஞ் சாற்றினால்" - திருமுரு. தனிப்பாடல்.

X அறம், பொருள், இன்பம் எனப்படும் முப்பாலைத் தேடுவார் பலர்; அவர் தமைப் புறக்கணித்து, நாலாவது பால் - வீட்டைத் தேடிய வள்ளியைத் தாமே தேடிவந்து திருமணத்துக்கும் முயற்சி செய்தார் முருகவேள் - என்கின்றனர் "முன்னங் குறிச்சியிற் சென்று கல்யாணம் முயன்றவனே" - கந். அலங். 24

O முற்பால் வெற்பு - மலைகளுள் (முன்பால் - முதலிடம் சிறப்பிடம்) பெற்ற மலை எனலுமாம்.

" வள்ளியைத் தன்பால் வைத்து வள்ளிவெற் பென்று நாமம், உள்ள அக் கிரியின் மேன்மை உரைத்திடும் அளவிற் றாமோ" - கந்தபுரா. 6-24-7

** கனி = வேங்கை மரம். முருகவேள் வேங்கை மரமானது

- பாடல் 287-பக்கம் 214 குறிப்பு.

(பொய்க்கே) பொய்மொழிகளுக்கும், (மெய்க்கே) உடலழகுக்கும், (பித்தாகி) காமவெறிகொண்டு (போகித்தே) காம இன்பத்தை அநுபவித்து (அவ்விலை மாதர்களுக்குக் கொடுப்பதற்காக) கைக்கு வேண்டிய பொருளைத் தேடுவதற்குத்

(தெற்கு ஓடி) தென்திசையிலுள்ள ஊர்களுக்கு ஓடியும், (வடக்கிலுள்ள) காசி முதலிய தலங்களுக்கு ஓடியும், (கீழ்திக்கு ஓடி) கிழக்குத் திசையில் உள்ள பிரதேசங்களுக்கு ஓடியும், பச்சிமமான - மேற்குத் திசையாகின்ற -

(திக்கோடி) திசையிலுள்ள ஊர்களுக்கு ஓடியும், (பாணிக்கு ஓடி) (கப்பலேறித்) திரைகடலோடியும், தீவுக்கு ஓடி- அக்கடலிலுள்ள பலதீவுகளுக்கு ஓடிச்சென்றும் (கெட்டிடலாமோ) நான் வீணே அழிந்து போகலாமா!

(தற்கோலி) உன்னைக் கோலித்துத் தியானித்துப் பாவிப்பார் (தமது சிந்தனையில் வைப்பவர்கள்) - அல்லது தற்கோலி - நான் யாரெனும் விசாரணையைச் செய்து தியான நிலையில் நிற்பவர்கள் (நற்சீரை) மேலான நற்கதியைச் (சார) அடைவதற்குத் (தற்பரம் ஆனாய்) அவர்கள் வழிபடும் பரம் பொருளானவனே!

(தப்பா) தவறுதலில்லாது (அதாவது எப்போதும்) முப்பாலைத் தேடி - அறம், பொருள், இன்பம் எனும் மூன்று புருஷார்த்தங்களைத் தேடுபவர்களாகிய (தேசத்தோர்) மக்கள் (நிற்க) ஒருபால் நிற்க (அவர்களை விட்டு விலகி)த் (தனையோடே) அருளுடனே - (கடமையாகக் கருதி)

முன்பு, கானப் பேதைக்காக - காட்டிலிருந்த பெண் வள்ளியின் பொருட்டு, (போய்) நீயே சென்று (முற்பால் வெற்பில்) வெற்பில் - வள்ளிமலையில் - (முற்பால்) வள்ளியின் முன்னிலையில் - வள்ளி எதிரில் - (கணியானாய்) வேங்கைமரமாக நின்றவனே!

முத்துப் போன்ற அருமையனே! மூன்று வகையான அக்கினிகளுக்கு உரிய நாயகனே! பரிகத்தமூர்த்தியே! முத்தனே (பற்றற்றவனே)! முத்தியைத் தரவல்ல பெருமானே!

(கெட்டிடலாமோ)

## 1125. ஆசை அற

தந்தா தந்தா தந்தா தந்தா
தந்தா தந்தந் தனதான

பொற்*பூ வைச்சீ ரைப்போ லப்போ
தப்பே சிப்பொற் கனிவாயின்-

பொய்க்கா மத்தே மெய்க்கா மப்பூ
ணைப்பூண் வெற்பிற் றுகில்சாயக்;

கற்பா லெக்கா வுக்கோ லிக்கா
சுக்கே கைக்குத் திடுமாதர்-

கட்கே பட்டே நெட்டா சைப்பா
டுற்றே கட்டப் படுவேனோ;

† சொற்கோ லத்தே நற்கா லைச்சே
விப்பார் சித்தத் துறைவோனே-

தொக்கே கொக்கா கிச்சூ ழச்சூர்
விக்கா முக்கத் தொடும்வேலா;

---

* பூவை - நாகண வாய்ப்புள் (திவாகரம்); பெண்களின் பேச்சின் இனிமைக்கு உவமை கூறப்படும். இதைப் "பிள்ளை" என்றும் கூறுவர்.

"பூவையோ கின்னரங்கள் பலவுமே", "தேவி கீதப் பிரியை யாதலால் பாடுவன தேவியால் வளர்க்கப்பட்ட பூவைப் பட்சி சாதிகளேயோ?" - தக்கயாகப் பரணி. 114 உரை

"பிள்ளைபோற் பேச்சினாளைப் பெற்றபின் பிழைக்க லாற்றாய்" - கம்பராமா. மாரீசன். 77

"மன்னன் பாவாய் பூவாய் பிணை மானே"

"சேடியர் கற்பித்த கட்டளை தப்பாமற் கூறலின் பூவை" -சிந்தா. 2453 உரை

† பாடியாடிப் பரவுவார் உள்ளத் தாடி - சம்பந்தர். I-28-7

## 1125.

(பொற்பூவை, சீரை, போலப் போதப் பேசிப் பொற்கனி வாயின்) பொற்கனிவாயின் - அழகிய கொவ்வைக்கனி போன்ற வாயினால், (பொற்பூவை) அழகிய நாகணவாய்ப்புள்ளின் (சீரைப் போல) - சீரான - நேர்த்தியான குரல் போன்ற அழகிய குரல் (போதப்பேசி - பொருந்தும்படிச் செவ்வையாகப் பேசி -

(பொய்க் காமத்தே) பொய்யான - நிலையற்ற சிற்றின்பத்தின் பொருட்டு, (மெய்க்கு ஆ ) தங்கள் உடலுக்குப் பொருந்தின தக்கதான (அப் பூணைப்பூண்) அந்த ஆபரணங்களை அணிந்துள்ள (வெற்பில்) மலைபோன்ற கொங்கைமீது (துகில் சாய) ஆடையானது சாய்ந்து நெகிழ -

(கற்பால்) - கட்டளையிட்டு (ஆணையிட்டுப்) பேசும் பேச்சால் (எக்கா) எக்கி - தாக்கி, (உட்கோலி) மனத்திலுள்ளே எண்ணங்களை வைத்துக் கொண்டு - (காசுக்கே) பொருள் வேண்டியே (கைக்குத்து இடும்) கை கலந்து குத்துச் சண்டை செய்யும் (மாதர்) பெண்களின் -

(கட்கே) கண்களுக்குப் (பட்டே) வசப்பட்டே, (நெட்டாசைப் பாடு) - பேராசைத் தொழில்களில் (உற்றே) ஈடுபட்டுக் கஷ்டப் படுவேனோ!

(சொற்கோலத்தே) சொல் அலங்காரத்துடனே - (அழகிய சொற்களைக் கொண்டு) (அழகிய சொற்கள் அமைந்த பாடல்களால்) உனது சிறப்புற்ற திருவடிகளைத் தொழுபவர்களுடைய உள்ளத்தில் வீற்றிருப்பவனே!

(தொக்கே) தனது உடலே (கொக்காகி) மாமரமாகிச் (சூழ்) சூழ்ச்சி செய்த (அச்சூர்) அந்தச் சூரன், விக்கா முக்க திண்டாட்டத்தால் (விக்கவும் முக்கவும்) மிக வேதனைப்படச் செலுத்தின வேலாயுதனே!

முற்கா லத்தே வெற்பேய் வுற்றார்
*முத்தாள் முத்தச் சிறியோனே
முத்தா முத்தீ யத்தா சுத்தா
முத்தா முத்திப் பெருமாளே (131)

## 1126. பாட

தத்தா தத்தா தத்தா தத்தா
தத்தா தத்தத் தனதான

மெய்க்கூ ணைத்தே டிப்†பூ மிக்கே
வித்தா ரத்திற் பலகாலும்
வெட்கா மற்சே ரிச்சோ ரர்க்கே
வித்தா சைச்சொற் களையோதிக்;
‡கைக்கா ணிக்கோ ணற்போ தத்தா
ரைப்போ லக்கற் பழியாதுன்
கற்பூ டுற்றே ×நற்றா ளைப்பா
டற்கே நற்சொற் றருவாயே;

---

* முத்தாள் முத்தம் - திரு ஆமாத்தூர் தேவி பெயர் "முத்தாம்பிகை"

தேவி முருகவேளின் உடலெங்கும் முத்தமிடுதலை -

" தொழுது புலவர் புகழ்ந்த தண்டைத்
துணைத் தாமரையில் இரு முத்தம்,
தூய கணைக்கால் முழந்தாள் செந்
தொடையில் இடையில் எழு முத்தம்,
எழுத அரிய தொந்தி யுந்தி
இலங்கு மார்பில் மூன்று முத்தம்
ஏய்ந்த கரங் சுந்தரம் புயத்தில்
இருபத் தைந்து திரு முத்தம்;
அழுது சிரித்து மழலை சொல்லும்
அருமைத் துகிரில் ஆறு முத்தம்,
அழகு கதுப்புக் கண் குடுமி
அனைத்தும் அந்தப் படியுடலம்
முழுதும் உமையாள் முத்தமிடும்
முத்தே முத்தம் தருகவே,
முத்துக் குமரா திருமலையின்
முருகா முத்தம் தருகவே"

- எனவரும் திருமலை முருகன் பிள்ளைத் தமிழ் அருமைப் பாடலிற் காண்க.

(தொ. பக். 277)

(முற்காலத்தே) ஆதிகாலமுதற் கொண்டு (வெற்பு) (கயிலை மலை யில்) (ஏய்வுற்றார்) பொருந்தி வீற்றிருப்பவரான சிவபிரானும் (முத்தாள்) முத்துப்போன்ற - முத்தாம்பிகை - எனப்படும் - தேவி பார்ப்பதியும் - ஆக இருவரும் முத்தச் சிறியோனே - முத்தமிட்டு மகிழும் குழந்தையே!

முத்துப்போல அருமை வாய்ந்தவனே! மூன்று வித யாகாக்கினிகளுக்கு உரிய நாயகனே! பரிசுத்த மூர்த்தியே! பற்றற்றவனே! முத்தியைத் தரும் பெருமாளே!

(ஆசைப்பாடுற்றே கட்டப்படுவேனோ)

## 1126.

(மெய்க்கு) இந்த உடலுக்கு, (ஊணைத்தேடி) உணவைநாடிப் பூமியினிடத்தில் (வித்தாரத்தில்) விரிவாக - அதிகமாகப் - பல முறையும் -

வெட்கம் (நாணம்) என்பதே இல்லாமல், (சேரி) பரத்தையர் சேரியில் உள்ள (சோரர்க்கே) கள்ள நெஞ்சினராம் வேசையரிடத்தில் (வித்தாசைச் சொல்) - ஆசை வித்துச் சொல் ஆசையை அடிப்படையாக - மூலகாரணமாகக் கொண்ட பேச்சுக்களைப் பேசி (அந்தப் பரத்தையர்களுக்குக்)

(கைக்காணி) கையுறை - காணிக்கைப் பொருளைச் சமர்ப்பிக்கும் (கோணல் போதத்தாரை) நேர்வழியை விட்ட அறிவினரை - தவறான புத்தியை உடையவர்களைப் போலக்) கற்பு அழியாது) (நான்) நீதிநெறியை (ஒழுக்கத்தைக்) கைவிடாமல் உன்னை (உன் பெருங்கருணைக் குணங்களைக்)

(கற்பூடுற்றே) கற்கும் நெறியில் நின்று, (நல்தாளை) (உனது) சிறந்த திருவடிகளைப் பாடுதற்கு வேண்டிய (நல் சொல்) சிறந்த செஞ் சொற்களைத் தந்தருளுக.

---

முத்தத்தின் கணக்கு - இரண்டு திருவடி (2), 2 கணைக்கால் (2), 2 முழந்தாள் (2) தொடை (2), இடை 1 ஆக (7);

தொந்தி (1), உந்தி (1), மார்பு (1), ஆக (3),

கரம் (12), (கந்தரம்) கழுத்து (1), புயம் 12; ஆக 25;

துகிர் - வாய் 6க்கு 6, கதுப்பு, கன்னம், கண், குடுமி - இப்படியே கணக்கிடுக என்றார்.

† பூமிக்கே = பூமியி னிடத்தில்

‡ கைக்காணி - கையுறை - காணிக்கை (கலித்தொகை 82-12 உரை)

X"இணையடிகள் பாடி வாழ என் நெஞ்சிற் செஞ்சொற்றருவாயே" - திருப்புகழ், 48

பொய்க்கோ ணத்தாழ் *மெய்க்கோ ணிப்போய்
†முற்பால் வெற்பிற் புனமானைப்-
பொற்றோ ளிற்சேர் கைக்கா கப்பா
தத்தாள் பற்றிப் புகல்வோனே,
‡முக்கோ ணத்தா னத்தா ளைப்பால்
வைத்தார் முத்தச் சிறியோனே.

---

* மெய்க் கோணிப் போய் -

இரத்தலின் போது உடல் கோணிக் குறுகும்; அதனால்தான் மாவலியிடம் திருமால் இரக்க வேண்டியவழி (வாமனராய்)க் குறுகின உடலினராய்ச் சென்றனர் என்று நயம்படக் கூறுவர் அறிஞர். இங்கு வள்ளியிடம் இரக்கச் சென்று முருகவேளின் (மெய்) உடலும் கோணிக் குறுகிற்று.

"ஒருத்தி காதல் வலைப்படு கின்றான் போல வருந்தியே இரங்கா நின்றான்" - முருகன் என்றார் கந்த புராணத்தில் 6-24-73

இரத்தலின் போதுள்ள மெய்ப் பாட்டியலைப் -

"பல்லெலாந் தெரியக் காட்டிப், பருவரல் முகத்திற் கூட்டிச் சொல்லெலாஞ் சொல்லி நாட்டித், துணைக்கரம் விரித்து நீட்டி மல்லெலாம் அகல ஒட்டி மானமென் பதனை வீட்டி இல்லெலாம்

இரத்தல் அந்தோ இழிவிழி வெந்த ஞான்றும்"

- எனவரும் குசேலோ பாக்கியானப் பாடல் நன்கு விளக்கும்.

† முற்பால் வெற்பு - பாடல் 1124 உரைக் குறிப்பைப்பார்க்க.

‡ முக்கோணத் தானத்தாள் - தேவி - முக்கோணத்தாள், நவ கோணத்தாள்

" ஓங்காரத் துட்பொருளே! உற்ற நவ கோணத்தில்
ஈங்காரந் தன்னில் இருப்பவளே! - பாங்கான
முக்கோணத் துள்ளிருக்கும் மூர்த்தியே" - மீனாட்சியம்மை. கலிவெண்பா. 11, 12

"த்ரி கோணாந்த்ர தீபிகாயை நம" - லலிதா ஸஹஸ்ரநாமம். 597

" ஒளி நின்ற கோணங்கள் ஒன்பதும் மேவி உறைபவளே" - அபிராமி அந்தாதி. 19

" வீற்றிருப்பாள் நவ கோணத்திலே" - வராகி மாலை, 31

தேவியைப் பாகத்தில் வைத்தவர் முத்தமிடும் சிறியோனே என்றார், 1125-ஆம் பாடலிலும் இந்தப் பாடலிலும் சிவன் - தேவி இருவரையும் உடன் கூறியே முருகனை முத்தமிடுதல் கூறப்பட்டுள்ளது; 1125ஆம் பாடலில் சிவனை முற்கூறித் தேவி முத்தமிடுதல் கூறப்பட்டுள்ளது.

(பொய்) வேடன், வேங்கைமரம், வளையல் செட்டி, கிழவன் ஆகிய சில பொய்யான வேடங்களைக் (கோள்) கொள்ளுதலை நத்து ஆம் - விரும்பி (ஆசைப்பட்டு) ஆழ்ந்து - (மெய் கோணி) நாணத்தால் உடலும் கோணலுற்று வளையப், (போய்) சென்று (முற்பால் வெற்பில் - தமக்குப் பழம் பொருளாம் (வள்ளி யிருந்த) மலையில் - அல்லது (சிறப்பில்) முதலிடம் பெறத்தக்க (வள்ளி) மலையில் - தினைப்புனத்தில் இருந்த மான் போன்ற - வள்ளியின்

அழகிய தோள்களிற் (சேர்கைக்காக) சேரும் பொருட்டு (பாதத்தாள்) அவள் பாதமாகிய திருவடியைப் (பற்றி)ப் பிடித்து வணங்கிப் (புகல்வோனே) ஆசை மொழிகளைச் சொன்னவனே!

(முக்கோணத் தானத்தாளை) மூன்று மூலை வடிவமான யந்த்ரத்தில் (மந்திர சக்கரத்தில்) அமைந்து விளங்கும் தேவி பார்வதியைத் (தமது இடது) பாகத்தே வைத்தவராகிய சிவபிரான் முத்தமிடுதற்கு உரிய குழந்தையே!

---

1126-ஆம் பாடலில் தேவியை முற்கூறிச் சிவன் முத்தமிடுதல் கூறப்பட்டுள்ளது.

தாய் தந்தையர் முன் முருகவேள் சென்று "அப்பா! ஊரார் சிரிக்க நடுப் பாதையிலே நின்று அண்ணன் கடலை, பொரி எல்லாம் உண்டான்" என்று கோள் சொல்ல, சிவபிரான் இது உண்மைதானோ என்று கணபதியைக் கேட்க, அவர் "அப்பா! இவன் குறத்தி கொடுத்த தினைமாவை உண்டான்" என்று எதிர்க் கோள் உரைக்க உமையம்மை இதைக் கேட்டுச்சிரித்து முருகனை குப்பென்றெடுத்து முத்தமிட்டதாக ஒரு பாடல் உளது. அது படித்து இன்புறத் தக்கது.

" அப்பா! அண்ணன் தம்பிதங்கள்
அதிகம் என்னக், கயிலை வளர்
ஐயன் கேட்கக் கடலை பொரி
அப்பம் முறுக்கு தோசை வடை
ஒப்பும் போளி எள்ளுண்டைக்(கு)
ஊரார் சிரிக்கப் பாதையில் நின்(று)
உண்டான் என்ற போ(து) அரனார்
உண்மை தானோ கணபதி நீ
செப்பாய் என்ன இவன் குறத்தி
தினைமா உண்டான் என்ன. உமை
சிரிக்க நறும்பூங் கொம்ப ரெனச்
செழிக்குஞ் செழியன் பொற்பாவை

(தொடர்ச்சி 280 ஆம் பக்கம் பார்க்க)

முந்தா முந்தீ யந்தா கந்தா
முந்தா முந்திப் பெருமாளே (132)

## 1127. உபதேசம் பெற

தனதனன தனதனன தந்தந்த தத்ததன
தனதனன தனதனன தந்தந்த தத்ததன
தனதனன தனதனன தந்தந்த தத்ததன
தத்ததன தான

அகரமுத லெனவுரைசெய் *ஐம்பந்தொ ரக்ஷரமும்
†அகிலகலை களும்வெகுவி தங்கொண்ட தத்துவமும்
அபரிமித சுருதியும டங்குந்த னிப்பொருளை
எப்பொருளு மாய-

(279-ஆம் பக்க தொடர்ச்சி)

குப்பென் றெடுத்து முத்தாடும்
குமரா முத்தம் தருகவே
கொற்றக் கலிகை செழிந்த கழுக்
குன்றே முத்தந் தருகவே"
(கழுகுமலைப் பிள்ளைத்தமிழ்)

சிவபிரான் முருகனை முத்தமிடுதலை -
" சிவபிரான் முத்தாடும் அருமை மகனே"-
என்ற இடத்தும் (தெய்வ மணிமாலை. 30)
" உன்மத்த ரான கயிலாசபதி முத்தமிட்டுன்னை வாழ்த்தொலிகள் கொட்ட" - (பழநிப் பிள்ளைத்தமிழ். 4) என்ற இடத்தும் காண்க.

* ஐம்பந்தொரக்ஷரம் = ஐம்பத்தொரக்ஷரம்.

அகரம் முதலான 51 அக்ஷரங்கள் - வடமொழி உயிரும் மெய்யும் ஆகிய ஐம்பத்தொரு அக்ஷரங்கள்;

" அகாராதி க்ஷகாராந்தம் ஐம்பத் தொன்றாகும்" - பாடல் 989-பக்கம் 860; பாடல் 966-பக்கம்800 கீழ்க்குறிப்புக்கள் பார்க்க.

" இணையார் கழலிணை ஐம்பத் தொன்றாகும்" - திருமந்திரம். 898

† சகல கலைகள் - 64 கலைகள் - அவைதாம்;-

அக்கர இலக்கணம். இலிகிதம் கணிதம், வேதம், புராணம், வியா கரணம், நீதி சாஸ்திரம், சோதிட சாஸ்திரம், தரும சாஸ்திரம் யோக சாஸ்திரம், மந்திர சாஸ்திரம், சகுன சாஸ்திரம், சிற்ப சாஸ்திரம்,

முத்துப்போல அருமை வாய்ந்தவனே! மூவகை யாகாக்கினிகளுக்கும் நாயகனே! பரிசுத்த மூர்த்தியே! பற்றற்றவனே! முத்தியளிக்கும் பெருமானே!

(நற்றாளைப் பாடற்கே நற்சொற் றருவாயே)

# 1127.

அகரம் முதலெழுத்தாகக் கூறப்படும் ஐம்பத்தொரு அக்ஷரங்களையும் (அகில கலைகளும்) - சகல கலைகளையும் (அறுபத்து நான்கு கலைகளையும்), பல வகைய உண்மைப் பொருள்களையும், எண்ணரிய மறைப் பொருள்களையும், தனக்குள் அடக்கிக் கொண்டிருக்கும் ஒப்பற்ற பொருளை, எல்லாப் பொருள்களுமாய் விளங்கும் -

---

வைத்திய சாஸ்திரம், உருவ சாஸ்திரம், இதிகாசம், காவியம், அலங்காரம், மதுரா பாடணம், நாடகம், நிருத்தம், சத்தப் பிரமம், வீணை, வேணு, மிருதங்கம், தாளம், அத்திர பரீட்சை, கனக பரீட்சை, இரத பரீட்சை, கஜ பரீட்சை, அசுவ பரீட்சை, இரத்தின பரீட்சை, பூமி பரீட்சை, சங்கிராம இலக்கணம், மல்யுத்தம், ஆகருடணம் உச்சாடணம், வித்துவேடணம், மதன சாத்திரம், மோகனம், வசீகரணம், இரச வாதம், காந்தருவ வாதம், பைபீல வாதம், கவுத்துக வாதம், தாது வாதம், காருடம், நட்டம், முட்டி, ஆகாயப் ப்ரவேசம், ஆகாய கமனம், பரகாயப்ரவேசம், அதிருசியம், இந்திரசாலம், மகேந்திரசாலம், அக்கினித் தம்பம், சலத் தம்பம், வாயுத் தம்பம், திட்டித் தம்பம், வாக்குத் தம்பம்,சுக்கிலத் தம்பம், கன்னத் தம்பம், கட்கத் தம்பம், அவத்தை ப்ரயோகம்.

இனி திருப்புகழ் 907 கீழ்க்குறிப்பிற் குறிப்பிட்ட மகளிர்க் குரிய 64 கலைகளாவன:-

கீதம், வாத்தியம், நிருத்தம், சித்திரம், பத்திர திலகம் கஸ்தூரிக்கை, பல்வகை அரிசி பூக்களால் கோலம் வைத்தல், பூ அமளி அமைக்கை, ஆடை-உடை-பற்களுக்கு வர்ணம் அமைக்கை, பள்ளியறையிலும் பான அறையிலும் மணி பதிக்கை, படுக்கை அமைக்கை, ஜலதரங்கம், நீர் வாரி அடிக்கை, வேடங் கொள்கை, மாலை தொடுக்கை, மாலை முதலியன அணிகை, ஆடையாபரணாதிகளால் அலங்கரிக்கை, சங்கு முதலியவற்றால் காதணி அமைக்கை, வாசனை கூட்டுகை, ஆபரணம் இயற்றுகை, இந்திரஜாலம், கௌசு மாரம், ஹஸ்த லாகவம், பாக சாஸ்திர உணர்ச்சி, தையல் வேலை, நூல்கொண்டு காட்டும் வேடிக்கை, வீணை டமருகப்

(தொடர்ச்சி 282- ஆம் பக்கம் பார்க்க)

அறிவையறி பவரறியும் இன்பந்த னைத்துரிய
முடிவை அடி நடுமுடிவில் துங்கந்த னைச்சிறிய
*அணுவையணு வினின்மலமு நெஞ்சுங்கு ணத்ரயமு
மற்றதொரு காலம்;
நிகழும்வடி வினைமுடிவி லொன்றென்றி ருப்பதனை
நிறைவுகுறை வொழிவறநி றைந்தெங்கு நிற்பதனை
நிகர்பகர அரியதைவி சும்பின்பு †தத்ரயமெ
ரித்தபெரு மானும்-
நிருபகுரு பரகுமர என்றென்று பத்திகொடு
பரவஅரு ளியமவுன மந்த்ரந்த னைப்பழைய
‡நினதுவழி யடிமையும்வி ளங்கும்ப டிக்கினிது
ணர்த்தியருள் வாயே

---

(281 ஆம் பக்கத் தொடர்ச்சி)

பயிற்சி, பிரேளிகை, சற்றெழுத்துக் கவி கூறுகை. நெருட்டுச் சொற்றொடரமைக்கை. கலை தோன்றப் பண்ணுடன் வாசிக்கை, நாடகம் வசனம் இவற்றின் உணர்ச்சி, ஸமஸ்யா பூரணம், பிரம்பாதிகளாற் கட்டில் முதலியன அமைக்கை, கதிரில் நூல் கற்றுகை, மரவேலை, வாஸ்து வித்தை. நாணய ரத்னங்களின் சோதனை, தாது வாதம், மணிக்கு நிறம் அமைக்கையும் மணியினுற்பத்தி ஸ்தானம் அறிகையும், தோட்ட வேலை, ஆடு கோழி முதலியவற்றின் போர் முறை, கிளி நாகண வாய்களைப் பயிற்றுகை, உடம்பு பிடிக்கையும் எண்ணெய் தேய்க்கையும், சங்கே தாக்ஷரங்கள் அமைத்துப் பேசுகை, இரகசிய பாஷை, தேச பாஷை உணர்ச்சி, புஷ்ப ரதம் அமைக்கை, நிமித்தம் அறிகை, பொறி அமைக்கை, ஏக சந்தக் கிராகித்வம், துவி சந்தக் கிராகித்வம், பிதிர்க்கவி விடுக்கை, காவியம் இயற்றுகை, நிகண்டுணர்ச்சி, யாப்புணர்ச்சி, அலங்கார உணர்ச்சி, சால வித்தை, ஆடை உடுத்தலிற் சாமார்த்தியம், சூதாட்டம், சொக்கட்டான், பொம்மை பந்து முதலியன வைத்தாடுகை, யானை முதலியவற்றின் பயிற்சி, படைக்கலப் பயிற்சி, தேகப் பயிற்சி.

(இவை காம சூத்திரத்தில் மகளிர்க்கு எனக் கூறப்பட்டவை)

---

* அணுவினின் அணுவு - இறைவனுடைய அணுவாந்தன்மை ஓர் அணுவை ஒரு பேரண்டமாகக் காட்டும். (தொ பக். 283)

(அறிவை) ஞான நிலையை அறிந்தவர்கள் அறிந்து அனுபவிக்கும் இன்பப் பொருளை (துரிய முடிவை), யோகியர் தன் மயமாய் நிற்கும் உயர் நிலையில் விளங்கும் முடிவுப் பொருளை, அடி - நடு - முடிவு இம்மூன்றும் இல்லாத (துங்கம் தனை) உயர் பொருளை, (சிறிய அணுவை அணுவினின் - சிறிய அணுவினின் அணுவை) சிறிய அணுவுக்கும் அணுவாய் விளங்கும் பொருளை, (மலமும், நெஞ்சம், குணத்ரயமும் அற்றதொரு காலம்) - ஆணவம், கன்மம், மாயை - எனப்படும் மும்மலங்கள், மனம், புத்தி, அகங்காரம், சித்தமாகிய கரணங்கள், சத்துவம், இராசதம், தாமதம் எனப்படும் முக்குணங்கள் இவைகள் பலவும் (அற்ற) - நீங்கின ஒரு காலத்தில் ஒரு கால நிலையில் -

(நிகழும்) விளங்குவதான (வடிவினை) சொருபத்தை, முடிவில் யுகாந்த காலத்தில் முடிவுப் பொருளாய் "ஒன்று" என்று (இருப்பதனை) திகழும் பொருளை, நிறைவு - குறைவு - நிறைந்தது - குறைந்தது - நீங்கும் தன்மையது - என்னும் சப்தமே இல்லாது நிறை பொருளாய் எங்கும் நிற்கும் பொருளை, நிகர் - அதற்கு இணை இஃதென்று (பகர அரியதை) சொல்லுதற்கு அரிதாய் - (சொல்லுதற்கு இல்லையெனத் திகழும் பொருளை, (விசும்பின்) ஆகாயத்திலே (பறந்து திரிந்த புரத்ரயம்) - முப்புரங்களை எரித்த பெருமானும் - சிரித்தெரித்த பெருமான் - சிவனார் உன்னை )

"நிருப - அரசே! குருமூர்த்தியே! குமர மூர்த்தியே" என்றென்றெல்லாம் பக்தியுடனே போற்றின பொழுது, நீ (அருளிய) அவருக்கு நீ உபதேசித் தருளின (மவுன மந்த்ரந்தனை) மௌனோப தேச மந்திரத்தை, (பழைய நினது) நினது பழைய உன்னுடைய பழைய வழியடிமை யாகிய அடியேனுக்கும் விளக்கந்தரும் வகையில், இனிமை தரும் வகையில், (உணர்த்தி அருள்வாயே) உபதேசித்து அருள் புரிவாயாக.

---

'அண்டமோர் அணுவாம் பெருமை கொண்டு, அணுவோர் அண்டமாம் சிறுமை கொண்டு" - திருவிசைப்பா. 13-6
" அண்டங்க ளெல்லாம் அணுவாக அணுக்க ளெல்லாம் அண்டங்க ளாகப் பெரிதாய்ச் சிறிதா யினானும்"

- திருவிளையாடல் பாயிரம் . 6

† திரிபுரம் எரித்த வரலாறு - பாடல் 285 - பக்கம் 206 குறிப்பு

‡ " நாதா குமரா நம என்றரனார். ஓதாய் என ஓதிய தெப் பொருள்தான்" - என்றார் கந்தரநுபூதியிலும் (36); இவ்வுபதேசப் பொருள் அருணகிரியார்க்குக் கிடைத்தது என்பதைப் பாடல் 1187-ல் விரிவான குறிப்புரையிற் காண்க.

(தொடர்ச்சி 284 -ஆம் பக்கம் பார்க்க)

தகுதகுகு தகுதகுகு தந்தந்த குத்தகுகு
டிகுடிகுகு டிகுடிகுகு டிண்டிண்டி குக்குடிகு
தகுதகெண கெணசெகுத தந்தந்த ரித்தகுத
தத்ததகு தீதோ-
தனதனன தனதனன தந்தந்த னத்ததன
டுடுடுடுடு டுடுடுடுடு டுண்டுண்டு டுட்டுடுடு
டாரரர ரிரிரிரிரி யென்றென்*றி டக்கையுமு
டுக்கையுமி யாவும்,
மொகுமொகென அதிரமுதி ரண்டம்பி ளக்கநிமிர்
அலகைகர ணமிடவுல கெங்கும்ப்ர மிக்க†நட
முடுகுபயி ரவர்பவுரி கொண்டின்பு றப்படுக
ளத்திலொரு கோடி
முதுகழுகு கொடிகருட னங்கம்பொ ரக்குருதி
நதிபெருக வெகுமுகஃக வந்தங்கள் நிர்த்தமிட
முரசதிர நிசிசரரை வென்றிந்தி ரற்கரச
ளித்த பெருமாளே (133)

## 1128. இரத்தல் ஒழிய

தனன தந்தன தனனா தனதன
தனன தந்தன தனனா தனதன
தனன தந்தன தனனா தனதன தனதான

அரிய வஞ்சக ரறவே கொடியவர்
அவலர் வன்கண ரினியா ரவகுணர்
அசட ரன்பில ரவமே திரிபவர் அதிமோக

---

(283- ஆம் பக்க தொடர்ச்சி )

அருணகிரியார் முருகவேளின் வழியடிமை -
" முடிய வழி வழியடிமை யெனும் உரிமை அடிமை"
- சீர்பாத வகுப்பு
" என்றனை வழிவழி அன்புசெய் தொண்டு கொண்டருள்
பெருமாளே" - திருப்புகழ் 358
"எழுமையும் எனைத் தனது கழல் பரவு பக்த னென
இனிது கவி அப்படி ப்ரசாதித்த பாவலனும்"
(வேடிச்சி காவலன் வகுப்பு)

---

* இடக்கை - பாடல் 404 அடி 7 உரை.

† பயிரவர் - நடமிடும் அட்ட பயிரவர் - திருப்புகழ் 1 பக்கம் 20 கீழ்க்குறிப்பு (தொ. பக். 285)

தகுத குகு தகுத குகு தந்தந்த குத்த குகு - தந்தந்த ரித்த குத தத்ததகு தீதோ -

தனதனன தனதனன தந்தந்த னத்தனன- தர ரரர ரிரிரி ரிரி என்று பலமுறை இடக்கை என்னும் வாத்தியமும் உடுக்கை வாத்தியமும் பிற எல்லா வாத்தியங்களும்

மொகு மொகு என்னும் பேரொலியுடன் அதிர்ச்சியுற முழங்க, பழமையாயுள்ள அண்டங்களெல்லாம் அந்த அதிர்ச்சியால் பிளவுபட்டு வெடிக்க, நிமிர்ந்து நின்று (அலகை) பேய் கூட்டங்கள் (கரணம் இட) கூத்து வகைகளை ஆட, (உலகு எங்கும் பிரமிக்க) உலகத்தில் எங்கு உள்ளாரும் திகைத்து மயங்க, (நடம் முடுகு பயிரவர்) நடனம் வேகத்திற் புரியும் பயிரவ மூர்த்திகள் (பரிவு கொண்டு) மண்டலமிட்டுக் கூத்தாடி மகிழ, அசுரர்கள் (படு) இறந்துபடும் போர்க் களத்தில் ஒரு கோடிக் கணக்கான -

வயது முதிர்ந்த கழுகுகளும், (கொடி) காக்கைகளும், கருடன் - கருடன் - பருந்தாகிய பறவைகளும், (அங்கம்) பிணங்களின் அங்கங்களைக் கொத்தித் தாக்க, (குருதி நதி பெருக) ரத்த ஆறு வெள்ளம் பெருக, (வெகு முக கவந்தங்கள்) பல வகையான தலையற்ற உடல்கள் கூத்தாட, முரச வாத்தியம் பேரொலி எழுப்ப, (நிசிசரரை வென்று) அசுரர்களை ஜெயித்து, தேவேந்திரனுக்கு (விண்ணுலக) ஆட்சியைத் தந்த பெருமாளே!

(மவுன மந்த்ரம்தனை உணர்த்தி அருள்வாயே)

## 1128.

அரிய வஞ்சகர் - வஞ்சக எண்ணத்திலும் செயலிலும் மிக அருமையாகத் தேர்ந்த, (அறவே) மிகவும் பொல்லாதவர், (அவலர்), வீண்பொழுது போக்குபவர், (வன்கணர்) இரக்கம் இல்லாதவர் (மனக் கொடுமை உள்ளவர்) - இனியார் - இன்பம் தரும் வகையில் பேச வல்லவர், (அவகுணர்) துர்க் குணத்தவர், (அசடர்) மூடர், அன்பு இல்லாதவர், (அவமே திரிபவர்) கேடுதரும் வழியில் திரிபவர், மிகவும் காமம் என்னும்

---

‡ கவந்தங்கள் நிர்த்தும் இடுதல் -

" மா கவந்தங்கள் (கூளி வாய்ப்பறை) மிழற்ற ஆடும்

ஆகவம்"- கந்தபுரா. 1-21-1

கவந்தங்கள் - தலையற்ற உடற் குறைகள், "அனேக மாயிரம் பேர்படக் கவந்தம் ஒன்றாடும்" - போரில் மிகப் பல உயிர் இறந்து பட்டால் ஒரு கவந்தம் எழுந்து நின்று கூத்தாடும் என்பது மரபு. கோபா வேசத்தோடு பொருத உடல் துணிக்கப்பட்டால் அந்த உடற்குறை முந்தின தொடர்ச்சியால் சிறிது பொழுது பலவாறு துடித்துத் துள்ளும்.

அலையில் மண்டிய வழியே யொழுகியர்
வினைநி ரம்பிடு பவமே செறிபவர்
அருள்து றந்தவ ரிடம்வாழ் சவலைகள் நரகேற;
உரிய சஞ்சல மதியா னதுபெறு
மனஇ டும்பர்க ளிடமே தெனஅவர்
*உபய அங்கமு நிலையா கிடவொரு கவியாலே-
†உலக முண்டவர் மதனா ரிமையவர்
தருவெ னும்படி மொழியா வவர்தர
ஊது கொண்டுயி ரவமே விடுவது தவிராதோ;
கரிய கொந்தள ‡மலையா ளிருதன
அமுது ணுங்குரு பரனே திரைபடு
Xகடல டும்படி கணையே வியஅரி மருகோனே-
கருணை கொண்டொரு குறமா மகளிடை
கலவி தங்கிய குமரா Oமயில்மிசை
கடுகி யெண்டிசை நொடியே வலம்வரு மிளையோனே-
**திரிபு ரங்கனல் நகையா லெரிசெய்து
பொதுந டம்புரி யரனா ரிடமுறை
சிலைச வுந்தரி யுமையா ளருளிய புதல்வோனே-
††சிகர வெண்கரி அயிரா வதமிசை
வருபு ரந்தர னமரா பதியவர்
சிறைவி டும்படி வடிவேல் விடவல பெருமாளே (134)

---

* உபயம் அங்கம் - சாங்கமும் உபாங்கமும்; சாங்கம் - கர சரணாதி அவயவம்; அங்கங்கள் அனைத்தும் உபாங்கம் சார்புறுப்பு -

† இந்த அடியின் கருத்தைப் பாடல் 304 முதல் மூன்றடிகளிற் காண்க.

‡ "உமை முலைப் பாலுண்ட பாலன்" - கந். அலங். 81

X கடல் மீது பாணம் விட்டது - பாடல் 177-பக்கம் 412; பாடல் 754-பக்கம் 248 கீழ்க்குறிப்பு

O உலகை வலம் வந்தது - பாடல் 184 -பக்கம் 430 குறிப்பு.

** திரிபுரத்தை எரித்தது - பாடல் 285-பக்கம் 206 குறிப்பு

திரிபுரம் எரித்தபோது - சிவபிரான் நடனம் ஆடினது - பாடல் 491-பக்கம் 112 கீழ்க்குறிப்பு (தொ. பக். 287)

கடலலையில் விரைந்துபடுகின்ற வழியையே பின்பற்றுபவர், தீவினை மிக்கு நிரம்பும் (பவமே) பாடமே பொருந்தியவர், கருணையை அடியோடு விட்டவரிடத்தையே (வாழ்) தமது இருப்பிடமாகக் கொண்டு வாழும் (சவலைகள்) அறிவு மெலிந்தவர்கள் - அறிவீனர்கள் நரகத்தில் வீழுதற்கே

உரித்தான - தக்கதான குழப்பம் கொண்ட அறிவைப் பெற்றுள்ள மனங்கொண்ட (இடும்பர்கள்) அகந்தை நெஞ்சினர்கள் - (இத்தகையோர்) இருக்கும் இடம் எங்கே என்று வினவிச் சென்று, அவருடைய (உபய அங்கமும்) சாங்கமும் உபாங்கமும் என்றும் நிலைத்திருக்கும் படியாக ஒரு (கவி) பாடல் அமைத்து - (அதில் அவரை)

(உலகம் உண்டவர் திருமால் (இவரே என்றும்), (மதனார்) மன்மதப் ப்ரபு (இவரே என்றும், (இமையவர் தரு) தேவலோகத்துக் கற்பக விருக்ஷம் (இவரே என்றும்), (எனும்படி மொழியா) இவ்வாறு வர்ணித்து அவர் தரக் கிடைத்த பொருளைப் பெற்று, (என் அருமை) உயிரை வீணாக இழக்கின்ற இத்தொழில் என்னை விட்டு நீங்காதோ!

கரு நிறம் கொண்ட (கொந்தளம்) கூந்தலையுடைய (மலையாள்) மலை மகளாம் பார்வதியின் இரு கொங்கைகளின் பாலமுதத்தை உண்ட குரு மூர்த்தியே! அலை வீசும் கடல் வெந்தழியும்படி அம்பைச் செலுத்தின திருமாலின் மருகனே!

அருள் நிரம்பி ஒப்பற்ற அந்த (குறமா மகளிடை) சிறந்த குறப்பெண் வள்ளியிடத்தே புணர்ச்சி லீலையிற் பொருந்தின குமரனே! மயில்மீது வேகமாக எட்டுத் திசைகளையும் ஒரு நொடிப் பொழுதில் வலம் வந்த இளையோனே!

திரிபுரத்தை நெருப்புச் சிரிப்பால் எரித்து, அம்பலத்தில் நடனம் செய்யும் சிவபிரானது இடது பாகத்தில் வீற்றிருக்கும் சிவாம்பிகை, (சவுந்தரி) அழகி, உமா தேவி அருளிய குழந்தையே!

மலைபோன்ற வெள்ளை யானை ஐராவதத்தின்மீது ஏறிவரும் (புரந்தரன்) இந்திரனும், (அமராபதியவர்) தேவர் ஊரில் வாழ்ந்திருந்த தேவர்களும் சிறையினின்று மீளும்படி கூரிய வேலைச் செலுத்த வல்ல பெருமாளே!

(உயிர் அவமே விடுவது தவிராதோ)

---

"ஏறமர் கடவுள் மூ எயில் எய்வுழி.. தேர்முன் நின்று திசைதலை பனிப்ப... அவ்வழி ஆடினன்.. பாண்டரங்கமே"

- கலித்தொகை கடவுள் வாழ்த்து, உரைப்பகுதி

† † "வெண் கும்ப மால் கிரி" - என்றார் 1105- ஆம் பாடலில்

## 1129. ஆசுகவி பாட

தானான தான தான தானன
தானான தான தான தானன
தானான தான தான தானன தந்ததான

ஆராத காத லாகி மாதர்த
*மாபாத சூட மீதி லேவிழி
யாலோல னாய்வி கார மாகி†யி
லஞ்சியாலே-
ஆசாப சாக முடி மேலிட
ஆசார வீன னாகி யேமிக
ஆபாச னாகி யோடி நாளும ழிந்திடாதே;
ஈராறு தோளு மாறு மாமுக
மோடாரு நீப வாச மாலையு
மேறான தோகை நீல வாசியு மன்பினாலே-
‡ஏனோரு மோது மாறு நீதற
நானாக பாடி யாடி நாடொறு
மீடேறு மாறு ஞான போதக மன்புறாதோ;
Xவாராகி நீலக பாலி மாலினி
மாமாயி யாயி தேவி யாமளை
வாசாம கோச ராப ராபரை யிங்குளாயி-
வாதாடி மோடி காடு காளுமை
மாஞால லீலி யால போசனி
மாகாளி சூலி வாலை யோகினி யம்பவாணி;

---

*ஆபாத சூடம் = உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரைக்கும்.

† இலஞ்சி - குணம் (சூடா)

‡ " ஏனோரும் ஓது மாறு" - இது அருணகிரியாரின் கருணையைக் காட்டுகின்றது. " நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம், என்னும் கருணை" - இதுபற்றி எழுந்தது "கருணைக்கு அருணகிரி" என்னும் முதுமொழி - பாடல் 962 -பக்கம் 789 குறிப்பு

Xதேவி துதி -

வாராகி - விஷ்ணு சக்தி வகையில் ஒன்று. " பரா சக்தி வராஹானந்த நாதர் என்பவருக்கு வராஹத் திருமுகத்துடன் தரிசனந் தந்தமையின் வாராகி என்னும் பெயர்" (த்ரிபுரா சித்தாந்தம், அபிராமி அந். உரை 50) (தொ. பக். 289)

# 1129.

அடங்காத மோகம் கொண்டு, பெண்களுடைய (ஆபாத குடமீதிலே) உள்ளங்கால் முதல் உச்சந்தலை வரைக்கும் உள்ள அங்கங்களின் அழகில் (விழி ஆலோலனாய்) கண்ணால் கலக்குதல் கொண்டவனாய் - சுடுபட்டவனாய் - (அல்லது விழியால் - லோலனாய் - கண்கள் சுடுபடுவதால் காமுகனாகி, (விகாரமாகி) மனம் கலக்கம் அடைந்தவனான (இலஞ்சியாலே) குண விசேடத்தால்-

ஆசா பசாசு மூடி மேலிட - ஆசை என்கின்ற பேயின் தன்மை என்னைக் கவர்ந்து ஆட்கொள்ள, (நான்) ஆசாரம் குறைவு பட்டவனாய், மிகவும் அசுத்தனாகி, (அங்கும் இங்கும்) ஓடி நாளுக்குநாள் கெட்டழியாதவாறு-

(உனது) ஈராறுதோளும் - பன்னிரு தோள்களையும், ஆறு மாமுகமோடு - ஆறு திருமுகங்களுடனே, (ஆரும்) நிறைந்துள்ள (நீபவாச மாலையும்) - வாச நீப மாலையும் - நறுமணமுள்ள கடப்ப மாலையையும் (அல்லது ஆர் - ஆத்தியுடன் கடப்ப மாலையையும்) ஏறான - ஆணான - (தோகை நீல வாசியும்) மயிலாகிய நீலக் குதிரையையும், அன்பு பூண்டு -

பிற மக்களும் போற்றிப் புகழுமாறு, (அவர்தம்) (தீதற) கேடுகள் ஒழிய, நான் ஆசுகவிகளைப் பாடியும், ஆடியும், நான் தோறும் முன்னுக்கு வருவதற்காக (நீ எனக்கு) ஞான உபதேசம் செய்ய என்மீது அன்பு கொள்ள மாட்டாயோ!

வாராகி, பெரிய கபாலத்தை ஏந்தினவள், (மாலினி) மாலையை அணிந்தவள், மகமாயி, ஆயி, தேவி, யாமளை, (வாசா மகோசரா) வாக்குக்கு எட்டாதவள், பராபரை, இங்குளாயி - உள் இங்கு ஆயி - உள்ளத்திலே (இங்கு) தங்குகின்ற தாய்,

(இறைவனுடன் காளியாய்) வாதாடினவள், (மோடி) துர்க்கை (காடுகாள்) வன தேவதை, உமை, பெரிய பூமியிலே லீலைகள் புரிபவள், விஷத்தை உண்டவள், மஹா காளி, சூலாயுதத்தை ஏந்தியவள், பாலாம்பிகை, யோகினி, (அம் - பவானி) அழகிய பவானி -

---

மாலினி - மாலையை அணிந்தவள் (லலிதா. 455); அக்ஷரங்களின் தெய்வமாக இருப்பவள் (அபிராமி. உரை 77); யாமளை - சியாமள நிறத்தை உடையவள்.

O இங்குதல் - தங்குதல், "இங்கு கவை இன்னமுதும்"

- சிந்தா. 2025

சூராரி மாபு ராரி கோமளை
*தூளாய பூதி பூசு நாரணி
சோணாச லாதி லோக நாயகி தந்தவாழ்வே-
தோளாலும் வாளி னாலு மாறிடு
தோலாத வான நாடு சூறைகொள்
சூராரி யேவி சாக னேசுரர் தம்பிரானே (135)

## 1130. முத்தி பெற

தானாதன தானந் தனத்த தானாதன தானந் தனத்த
தானாதன தானந் தனத்த தனதான

†ஆராதன ராடம் பரத்து மாறாதுச வாலம் பனத்து
மாவாகன மா‡மந் திரத்து மடலாலும்-
ஆறார் தெச மாமண் டபத்தும் வேதாகம
மோதுந் தலத்து
மாமா றெரி தாமிந் தனத்து மருளாதே;
×நீராளக நீர்மஞ் சனத்த நீடாரக ○வேதண்ட மத்த
**நீநானற வேறின்றி நிற்க நியமாக-

* நாரணி - நாராயணி - " நாராயணன் தங்கை; திருமாலிடத்திருந்து திதியாகிய தொழிலை நடத்துதலின் நாராயணி" திருமால் திருநீறு பூசுதல்:-

" நீற்றினை நிறையப் பூசி" - அப்பர் 4-64-8

"கரிய மேனி மிசை வெளிய நீறு சிறிதேயிடும் பெரிய
கோலத் தடங் கண்ணன்"-திருவாய்மொழி 4-5-6

"நீறு செவ்வே யிடக் காணில் நெடுமால் அடியார்
என்றோடும்"- திருவாய்மொழி 4-4-7

† முதல் இரண்டு அடிகளால் - "ஆடம்பர பூஜை, ஜெபம், முதலிய ஆடம்பரங்களில் மருளுதல் கூடாது"-
என்பதைத் தெரிவிக்கின்றார்.

‡ மந்திரத்து மடல் - மந்த்ரங்கள் எழுதியுள்ள தாயித்து, சக்ரந் தகடு முதலிய.

× நீராளக நீர் மஞ்சனம் - அன்பர்களின் ஆனந்தக் கண்ணீரே இறைவன் திருமஞ்சனம் ஆகும் (முழுக் காட்டுக்கு உரிய) நீர்.

" அன்பர் வார்ந்த கண்ணருவி மஞ்சன சாலை"
- திருவிசைப்பா. 15-2

" அழுது தொழுதுருகு மவர் விழி யருவி முழுகுவதும்
.. மண நாறு சீரடியே" - சீர்பாத வகுப்பு.

" நீராள மாயுருக உள்ளன்பு தந்தது நின்னதருள்" - தாயுமா. பரிபூ. 8

(தொடர்ச்சி 292 ஆம் பக்கம் பார்க்க)

(மகிடா) சூரனுக்கு அரி - பகையானவள், பெரிய திரிபுரத்தை எரித்தவள், (கோமளை) அழகி, திருநீறாகிய விபூதியைப் பூசும் நாரணி, (சோணாசலம்) திருவண்ணா மலையில் ஆதி தேவதையாய் இருப்பவள், உலக நாயகி, பெற்ற செல்வமே!

தோள் கொண்டும், வாள் கொண்டும், பகைமை பூண்டவனும், தோல்வியே இலாதவனும், பொன்னுலகைச் சூறையாடினவனும் (கொள்ளையிட்ட வனுமான - சூரனுக்குப் பகைவனே! விசாகனே! தேவர்களின் தம்பிரானே!

(ஞான போதகம் அன்புறாதோ)

## 1130.

(ஆராதனர்) பூஜை செய்வோர்களின் (ஆடம்பரத்தும்) டம்பத் தோற்றங்களைத் கண்டும், (மாறாது) இடைவிடாது செய்யும் . (சவாலம்பனத்தும்) - சப - ஆலம்பனத்தும் - சபம் - ஜெபத்தில் உள்ள (பற்றுக் கோடு) - ஆசையினாலும், (அல்லது - சபா - ஆலம் பனத்தும் - சபைகளில் உள்ள (பற்றுக் கோடு - ஆசையாலும், (ஆவாகன மாமந்திரத்து மடலாலும்) தெய்வம் எழுந்தருள வேண்டி எழுதப்படும் சிறந்த மந்திரத்தைக் கொண்ட தகட்டை - தாயித்து வகைகளைக் கண்டும் -

ஆறார் தெசமா மண்டபத்தும் (ஆறும் பத்தும் கூடிய - பதினாறு கால்கொண்ட - சிறந்த மண்டபக் காட்சியாலும், வேதம் ஆகமம் இவை முழங்கும் இடத்தைக் கண்டும், ஆமாறு எரிதாம் இந்தனத்தும் - ஆமாறு எரி (தாவும்) இந்தனத்தும் - (ஓமாதிகளுக்கு) - யாகாதிகளுக்கு ஆகும்படி எரி பாயும் சமித்து - (யாகத்துக்கு உரிய ஆல், அரசு, அத்தி, இத்தி (கல்லால்), மா, பலாசு, வன்னி, நாயுருவி, கருங்காலி என்பவற்றின் சுள்ளி) ஆகிய ஓம விறகைக் கண்டும் - பிரமித்து அவைகளில் மருட்சி கொள்ளாமல் மயங்காமல் -

(நீராளகம்) நீராளம் - நீர் மிகுதி - பெருகும் (நீர்) (அடியார்களின்) கண்ணீரிலே (மஞ்சனத்த) அபிஷேகம் கொள்பவனே! கண்ணீர் முழுக்காட்டில் மகிழ்பவனே! நீள் தாரக - சிறப்பு மிக்க தாரக மந்திரத்துக்கு - 'ஓம்' என்னும் பிரணவ மந்திரத்துக்கு உரியவனே! (வேதண்ட) மலைகளுக்கு உரியவனே! (குறிஞ்சி வேந்தனே) ! (மத்த) - அதிகம் உற்சாகம் உள்ளவனே! (நீ நான் அற - நீ என்றும் நான் என்றும் உள்ள துவைத பாவம் நீங்க அத்துவித நிலையைப் பெற - (வேறின்றி) நீ வேறு நான் வேறு என்னும் வேற்றுமை யில்லாது நிற்பதற்கு, (நியமாக) - அன்னியம் இன்மையாக - உறவுடனே - சொந்தமாக - (அல்லது நியமமாக நிச்சயமாக - முறைமைப்படி -

நீவாவென நீயிங் கழைத்து பாரா...பர வாநந்த சித்தி
நேரேபர மாநந்த முத்தி தரவேணும்;
வீராகர சாமுண்டி சக்ர பாராகண பூதங் களிக்க
*வேதாளச மூகம் பிழைக்க அமராடி-
வேதாமுறை யோவென் றரற்ற ஆகாசக பாலம் பிளக்க
வேர்மாமர மூலந் தறித்து வடவாலும்,
வாராகர மேழுங் குடித்து மாசூரொடு போரம் பறுத்து
வாணாசன மேலுந் துணித்த கதிர்வேலா-
வானாடர சாளும் படிக்கு வாவாவென வாவென்
றழைத்து
வ..னோர் பரி தாபந் தவிர்த்த பெருமாளே. (136)

## 1131. மாதர் மீதுள மயக்கு அற

தானா தத்தன தத்தன தானா தத்தன தத்தன
தானா தத்தன தத்தன தனதான

ஆலா லத்தைய முத்திய *வல்போல் நற்குடை
யைப்பொரு
தாகா ரைத்தொடர் கைக்கெணும் விழியாலே-
ஆளா மற்றவர் சுற்றிட மீளா மற்றவை யிட்†டறி
வார்போ கச்செயல் விச்சைகள் விலைகூறிக்;

(290- ஆம் பக்கம் தொடர்ச்சி,

○ வேதண்டம் அந்த - மலைகளுக்கு உரிய தலைவனே!- எனலுமாம்.
** "நீ வேறெ னாதிருக்க நான் வேறெ னாதிருக்க"
- திருப்புகழ். 220
"நீ யான ஞான வினோதம்"- கந். அலங். 46
"ஏக போகமாய் நீயு நானுமாய் இறுகும் வகை" - திருப்புகழ் 862

* வேதாள சமூகம் பிழைக்க (முருகவேள்) அமராடினர் -
ஏனெனில் அப்போது பேய்களுக்கு உண்பதற்கு அசுரப் பிணங்கள் நிரம்பக் கிடைத்தன.

"சூரொடும் பொர வஞ்சி சூடிய பிள்ளையார்படை தொட்ட நாள்
சருடம்பு மிசைந்திரண்டு திரப்பரப்பு மிறைத்தனம்;
அசும்பு தூர் வயிறார முன்பவர் செற்ற தானவர் அற்ற நாள்
விசும்பு தூர விழும் பிணங்கள் நிணங்களூற மிசைந்தனம்"
- தக்க. பரணி. 231, 232

† அறிவார் - அறிவு; ஆர் - மரியாதை விகுதி; " சிந்தை யார்
தொழ", "உடம்பினார் படுவதோர் நடலை"-
என்பழிப் போல. சம்பந்தர். 3-6-1; 2-79-7

நீவா என்று என்னை நீ (இங்கு) இவ்விடத்திலேயே அழைத்து, (பாரா வரம்) - பாரா வாரம் - கடல் போன்ற ஆனந்த சித்தி - ஆனந்த நிலையைக் கூட்டுவித்து, நேரே - உடனே - பரமானந்த நிலையதாம் முத்தி நிலையையும் தந்தருள வேண்டுகின்றேன்.

(வீராகர) வீரத்துக்கு இருப்பிட மானவனே! (சாமுண்டி) துர்க்கை, * சக்ர யூகமாக வகுக்கப்பட்டு நிற்கும் (பாரா கணம்) காவல் கணங்களான பூதங்கள் மகிழ்ச்சி கொள்ளவும், (வேதாள சமூகம்) பேய்க் கூட்டங்கள் (பிணங்களை உண்டு) பிழைக்கும் படியு ம், போர் புரிந்து -

வேதா முறையோ என்று அரற்ற - பிரமன் (ஓலம்) என்று முறையிட்டுக் கூச்சலிட, (ஆகாச கபாலம் பிளக்க) அண்டகூடம் பிளவுபட, வேர்மா மூலம் - (மா - வேர் - மூலம்) மாமரத்தின் மூல வேர் - அடி வேரையே, தறித்து - வெட்டி (வடவா லும்) வடவா ஆலும் - (வடவா) வடவா முகாக்கினி - (ஆலும்) தங்கியுள்ள -

(வாராகரம் எழும்) கடல் ஏழையும் குடித்து, (மா சூரொடு) பெரிய சூரனுடனே - போர் - அவன் போரிலே செலுத்தின (அம்பு அறுத்து) அம்புகளை அறுத்து, (வாணாசனம்) பாணாசனம் பாணங்களுக்கு (ஆசனமான) - தங்கும் இடமான வில்லையும் (மேலும்) கூடவே (துணித்த) வெட்டித் தள்ளின ஒளி வேலனே!

வானாடு (தேவருலகாம்) பொன்னுலகை (அரசாளும்படிக்கு) (வாவா என வா என்றழைத்து) வாருங்கள், வாருங்கள், வாருங்கள் என்று அழைத்து, (வானோர்) தேவர்களுடைய (பரிதாபம்) பரிதபிக்கத்தக்க நிலையைத் - துக்கத்தை - நீக்கின பெருமாளே!

(பரமானந்த முத்தி தரவேணும்)

## 1131.

ஆலகால விஷத்தை அடக்கம் செய்து வைத்துள்ள வேலாயுதத்தை நிகர்த்து, அழகிய குழையொடும், பொருது - பொருவது போல நீண்டு, தங்களுக்கு ஆகாதவரைத் (தொடர் கைக்கு) - பின் சென்று பற்றுதற்கு, எ (ண்) ணும் - கருதி நிற்பதுபோல விளங்கும் ண்களுக்கு (ஈடுபட்டு)-

(ஆளா) அடிமையாக வசப்பட்டு, (மற்றவர்சுற்றிட) அங்ஙனம் அடிமை பட்டவர் தம்மைச் சுற்றிச் சூழ, (மீளாமல்) தங்கள் சூழ்ச்சியினின்று (அவர்கள்) மீண்டுபோக முடியாதவாறு (தலையிட்டு) நுழைந்து ஏற்பாடுகள் செய்து (அறிவார் போக) அவர்களது நல்லறிவு போமாறும், (செயல் விச்சைகள்) தங்களுடைய தொழிற் சாமர்த்தியங்களை விலை பேசிக் -

* சக்ர யூகம் - பாடல் 997-பக்கம் 8 கீழ்க்குறிப்பு

கோலா லக்கண மிட்டுவ ராதார் நெக்குரு கப்பொருள்
 கூறா கப்பெறில் நிற்கவு மிலதானார்-

*கூடா நட்புமு ரைத்திடு கேடா விட்டகல் மட்டைகள்
 கோமா னத்துய ருட்பய முறலாமோ;

பாலா மக்கட லிற்றுயில் †மாலோ ரெட்டுத லைக்கிரி
 பால்பார் வைக்கள விட்டுமை யுறுபோதிற்-

பார்மே ‡லிக்கனு டற்பொறி யாய்வி ழச்சுடும் வித்தகர்
 பாலா X பத்தரி டத்தியல் பயில்வோனே;

மேலா யத்தொடு திக்கடை மேவார் வெற்பொட ரக்கரை
 வேர்மா ளப்பொரு திட்டொளி விடும்வேலா-

மேனா டர்ச்சிறை விட்டருள் மீளா விக்கிர மத்தொடு
 OவேதாＶவைச்சிறை யிட்டருள்
 பெருமானே (137)

---

* கூடா நட்பு - "பகைமையான் அகத்தாற் கூடாதிருந்தே தமக்கு வாய்க்குமிடம் பெறுந் துணையும் புறத்தாற் கூடி ஒழுகுவார் நட்பு. (திருக்குறள் உரை. அதி. 83)

† பிரமன் முதலியோர் மன்மதனைச் சிவபிரானிடம் அம்பெய்த அனுப்பி விட்டு அவன் என்ன கதி ஆனானோ என்று பயத்துடன் துயமுற்று கயிலையில் ஒரு சார் போய் நின்றனர்.

"தன் மலர்க் கடவுள் நேராக் கருமென எழுந்து வானோர் கணத்துடன் . கயிலை யந்தண் பொருப்பின் மேல் ஒருசார் போகி, மதனியல் தெரிந்து முக்கண் வள்ளலை வழுத்தி நின்றார்" கந்தபுரா. 1-4-87

‡ மன்மதனை எரித்தது - பாடல் 399 - பக்கம் 510 குறிப்பு

X பத்தரிடத்துப் பயிலுதல் - ஸ்ரீ நப்புகழ். 93 அடி 8 பார்க்க

O பிரமனைச் சிறையிட்டது - பாடல் 212-பக்கம் 42;

அருளியது - பாடல் 609-பக்கம் 408

(கோலாலம்) தமது - ஆடம்பரங்களைக் (கணம்) ஒரு நொடிப் பொழுதில் - (இட்டு) காட்டி, (வராதார்) தங்கள்கூறிய விலைக்கு ஒத்து வராதவர்கள் (நெக்குருக) - மனம் உடைந்து உள்ளம் நெகிழவும், பொருள் கூறாகப் பெறில் - தாங்கள் கேட்ட பொருள் ஒரு கூறே - ஒரு பகுதியே பெற்றால் - (நிற்கவும் இலதானார்) எதிரில் நின்று பேசுதற்குக்கூட அரிதானவர் கிட்டாதவர்கள் -

(கூடா நட்பும் உரைத்திடு மட்டைகள்) அகத்தாற் கூடாதே புறத்தாற் கூடினவர்கள்போல (அக நட்பு இலாது முக நட்புச் செய்யும்) மட்டைகள் - பயனிலிகள், (கேடா விட்டகல் மட்டைகள் கேடு ஆக - அழிவுறும் வகைக்கு விட்டுவிட்டு நீங்கும் பயனிலிகள் ஆகிய வேசையர்களால் - ஏற்படும் (கோமளத் துயருட் பயம்) கொண்டாட்டத்தால் வரும் (வேதனைப்) பயத்தை - (உறலாமோ) அடைதல் நன்றா? நன்றன்று என்றபடி; (அல்லது - துயரால் - பயம் உறலாமோ - பயன் ஏதாவது பெற முடியுமோ - பெற முடியாது என்றபடி -

(பாலாம் அக்கடலில்) - பாலாகிய அந்தக் கடலில் - திருப்பாற் கடலில் - (துயில்) அறி துயில் அமரும், (மாலோர்) திருமால் முதலான தேவர்கள் - (எட்டு) சென்று சேர்ந்த (தலைக்கிரி பால்) சிறப்புற்ற (கயிலை) மலையிடத்தே (பார்வைக்கு அளவிட்டும்) (காமனைச் சிவன்மேற் பாணம் எய்ய அனுப்பினோமே - என்ன நிகழ்கின்றதென்று) கண்கொண்டு பார்த்து அளவிட்டும் - கருத்தில் எண்ணியும் விளங்காது - என்ன ஆயிற்றோ என்று - (ஜயுறு போதில்) (பயந்து) அவர்கள் சந்தேகித்திருந்த சமயத்தில் -

(பார்மேல்) பூமியிடத்தே (இக்கன்) கரும்பு வில் ஏந்திய மன்மதனுடைய (உடல்) தேகம் (பொறியாய் விழ) தீப்பொறியாய் வெந்து விழும்படிச் சுட்டெரித்த (வித்தகர்) ஞானியின், (பாலா) குழந்தையே! பக்தர்களிடத்தே (இயல் பயில்வோனே) உழுவல் அன்பு காட்டிப் பழகுபவனே!

மேல் ஆயத்தொடு - முன்பு கூட்டமாகத், திக்கு - நாலா திசைகளிலும் (அடை) சென்று (நிரம்பியிருந்த (மேவார்) பகைவராம் அசுரர் கூட்டங்கள் இருந்த வெற்பு - கிரவுஞ்சம், எழுகிரி (ஆகிய மலைகளையும்), அரக்கரை - அசுரர்களையும், (வேர்மாள) அடியோடு மாண்டு ஒழியும்படிச் சண்டை செய்து ஒளி வீசின வேலாயுதத்தை உடையவனே!

மேனாடர் (மேல் நாடர்) விண்ணோர்களைத் - (தேவர்களைச்) சிறையினின்றும் விடுவித்து அவர்களுக்கு அருளிய பெருமாளே! (மீளா) நீங்காத பராக்ரமத்தோடு (வேதாவை) பிரமனைச் சிறையிலிட்டுப் பின்னர் அவனுக்கு அருளிய பெருமாளே!

(மட்டைகள் - கோமளத் துயருட் படலாமோ)

## 1132. அநுக்கிரகத்தைமறவேன்

தானான தான தத்த தத்த தத்தன
தானான தான தத்த தத்த தத்தன
தானான தான தத்த தத்த தத்தன தனதான

*ஆனாத ஞான புத்தி யைக்கொடுத்ததும்
ஆராயு நூல்க ளிற்க ருத்த ளித்ததும்
ஆதேச வாழ்வி லிற்ப்ர மித்தி னைத்துயி ரழியாதே-
ஆசாப யோதி யைக்க டக்க விட்டதும்
வாசாம கோச ரத்தி ருத்து வித்ததும்
ஆபாத னேன்மி கப்ர சித்தி பெற்றினி
துலகேழும்;
யானாக நாம அற்பு தத்தி ருப்புகழ்
தேனூற வோதி யெத்தி சைப்பு றத்தினும்
†ஏடேவு ராஜ தத்தி னைப்ப ணித்ததும் இடராழி-
ஏறாத மாம லத்ர யக்கு ணத்ரய
நானாவி கார புற்பு தப்பி றப்பற
ஏதேம மாயெ னக்க நுக்ர கித்ததும் மறவேனே;
‡மாநாக நாண்வ லுப்பு றத்து வக்கியொர்
மாமேரு பூத ரத்த னுப்பி டித்தொரு
மாலாய வாளி யைத்தொ டுத்த ரக்கரி
Xலொருமூவர்-

---

* இது அருணகிரியாரின் வரலாற்றையும் நன்றி மறவாக் குணத்தையும் வெளிப்படுத்துகின்றது. தாம் ஞானம் பெற்றது, (தேவாரம்போன்ற) ஞான நூல்களை ஆராயும் கருத்தைப் பெற்றது, ஆசைகளை வென்று இந்த மாயை வாழ்க்கையில் மருளாது பெரிய ஞான நிலையையும் மிகக் கீர்த்தியையும் அத்து வித ஞானத்தையும் பெற்றது, தேன்போன்ற திருப்புகழைப் பாடி எங்கும் தமது வார்த்தை மதிக்கப் பெற்றது, மும்மலம் முக்குணம் இவைகளுக்கு ஈடான பிறப்பு அறும்படிப்பெற்றது- ஆகிய அருட் ப்ரசாதங்களை மறவேன் என்கின்றார்.

† தமது காலத்திலேயே மிகக்கீர்த்தி பெற்றிருந்தனர் அருணகிரியார் - பாடல் 343-பக்கம் 358 கீழ்க்குறிப்பு.

‡ திரிபுரத்தை எரித்த வரலாறு - பாடல் 285-பக்கம் 206 கீழ்க்குறிப்பு - பாடல் 577, 984-ம் பார்க்க.

திருமால் அம்பாக அமைந்தது சீவக சிந்தாமணியிலும் கூறப்பட்டுள்ளது. "போகம் ஈன்ற புண்ணியன் எய்த கணை" (362)

X ஒரு மூவர் உய்ந்தது - பாடல் 469-பக்கம் 62 குறிப்பு.

# 1132.

என்றும் கெடாத ஞான அறிவைக் கொடுத்ததையும், ஆராய்ந்து அறிய வேண்டிய நூல்களில் (ஆராயும்) கருத்தைக் கொடுத்ததையும், (ஆதேச வாழ்வில்) ஒரு வழியாக நிலைத்திராத - திரிபு உள்ள வாழ்க்கையில் (பிரமித்து) மயங்கித் திகைத்து (இளைத்து) தளர்ச்சியுற்று உயிர் அழிந்து போகாமல் -

ஆசா - ஆசை என்கின்ற, (பயோதியை) கடலைக் கடக்கும் படியான (தாண்ட விட்ட) ஆற்றலைத் தந்ததையும், (வாசா மகோசரத்து) வாக்குக்கு எட்டாத ஒரு நிலையில் என்னை இருக்கும்படி வைத்து அருளியதையும், (ஆபாதனேன்) மிகவும் கீழ்ப்பட்டவனான நான் மிக்க கீர்த்தியைப் பெற்று இனிமையுடன் உலகு ஏழும் - (ஏழுலகில் உள்ளவரும் உள்ளவையும்)

நானே எனும் அத்துவித நிலையைப் பெற்று, (நாமம்) கீர்த்தி கொண்டதும் அற்புதவகையில் அமைந்துள்ளதுமான திருப்புகழ்ப் பாவைத் தேன் ஊறின இனிமையுடன் (ஓதிப்) பாடி, எல்லாத் திசைகளிலும் (திசைகளில் உள்ள ஊர்களிலும்) ஏடு ஏவு ராஜ தந்திரனை நான் எழுதி அனுப்பும் ஏடு - சுடிநமோ பாடலோ (மரியாதையுடனும் அன்புடனும் போற்றப் படத்தக்க) - ராஜ தந்திரனை பெருமிதத்தை - மேன்மையைப் (பணித்ததும்) எனக்கு அருளிச் செய்ததையும் - தந்தருளியதையும், இடராழி துன்பக் கடலினின்றும்-

(ஏறாது) கரையேற முடியாத (மாமலத்ரய) பெரிய (ஆணவம், கன்மம், மாயை, எனப்படும்) மும்மலங்களும், (குணத்ரயம்) தத்துவம், இராசதம், தாமதம் என்ற மூவகைக் குணங்களும், (நானா விகாரம்) பலவிதமான (விகாரம்) கலக்கங்களும் (காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம், இடும்பு, அசூயை - எனப்படும் எண் வகைப்பட்ட துர்க்குணங்களும்) கூடியதும், (புற்புதம்) நீர்மொக்குள் - நீர்க்குமிழிபோல் தோன்றி மறையும் தன்மையுள்ளதுமான - பிறப்பு நீங்கும் வகைக்கு - (ஏது ஏமமாய்) - ஏம ஏதுவாய் -இன்பமான நிகழ்ச்சியாய் இன்பந்தருவதான வரமதாக - எனக்கு அனுக்கிரகித்ததையும் நான் மறக்க மாட்டேன்;

மாநாகம் - பெரிய வாசுகி என்னும் பாம்பாகிய (நாண்) கயிற்றை (வலுப்புறத் துவக்கி) பலமாகக் கட்டியுள்ள ஒப்பற்ற மகாமேரு (பூதரத்தனு) மலையாகிய வில்லைப்பிடித்து, ஒப்பற்ற (மாலாய) திருமாலாகிய (வாளியை) அம்பைத் (தொடுத்து) செலுத்தி, அரக்கரில் - (திரிபுரத்தில் இருந்த) அசுரர்களில் ஒரு மூன்று பேர் மாத்திரம் -

மாளாது பாத கப்பு ரத்ர யத்தவர்
தூளாக வேமு தற்சி ரித்த வித்தகர்
வாழ்வே*வ லாரி பெற்றெ டுத்த கற்பக
வனமேவும்;

†தேநாய காள னத்து தித்த வுத்தம
வானாடர் வாழ விக்ர மத்தி ருக்கழல்
‡சேராத சூர னைத்து ணித்த டக்கிய
வரைமோதிச்-

சேறாய சோரி புக்க ளக்கர் திட்டெழ
மாறாநி சாச ரக்கு லத்தை யிப்படி
×சீராவி னால றுத்த றுத்தொ துக்கிய
பெருமாளே (138)

## 1133. மாதர் மீதுள மயக்கு அற

தனதன்னந் தாத்த தான தத்த
தனதனனந் தாத்த தான தத்த
தனதனனந் தாத்த தான தத்த தனதான

இடமருவுஞ் சீற்ற வேலெ டுத்து
விடமுழுதுந் தேக்கி யேநி றைத்து
இருகுழையுந் தாக்கி மீள்க யற்கண் வலையாலே-
இனிமையுடன் பார்த்து னேய ழைத்து
முகபடமுஞ் சேர்த்து வார முத்தும்
இருவரையுங் காட்டி மாலெ ழுப்பி விலைபேசி;
மடலவிழும் பூக்க ளால்நி றைத்த
சுருளளகந் தூற்றி யேமு டித்து
மறுகிடைநின் றார்க்க வேந கைத்து நிலையாக-
வருபொருள்கண் டேற்க வேப றிக்கும்
அரிவையர்தம் பேச்சி லேமு ழுக்க
மனமுருகுந் தூர்த்த னாயி ளைத்து விடலாமோ;

---

* வலாரி பெற்றெடுத்த தே நாயகா - என்பதில் - இந்திரன் வளர்த்த தேவசேனைக்கு நாயகனே - என்னும் பொருளும் தொனிக்கும். இங்கு இத்துதி தேவசேனை திருமணத்துக்கு முந்திய நிகழ்ச்சி. † தேம் நாயகா; தேம் - தேசம்

‡ சேர்தல் - சிந்தித்தல் - திருக்குறள் 3 உரை.

× சீரா - பாடல் 750- பக்கம் 235 கீழ்க்குறிப்பு பாடல் 1045.

"சீற்றம் இடம் மருவும் வேல்" - சினம் கொண்ட வேல் எனலுமாம்; 'வெஞ்சினவேல்' - திருப்புகழ். 873.

(மாளாது) இறந்து போகாமல், (பாதகம்) - பாபச் செயலில் ஈடுபட்டிருந்த (புரத்ரயத்தவர்) முப்புரத்து அசுரர்கள், (தூளாகவே) எரிபட்டுப் - பொடியாய் விழ - முதல் - முன்பு (சிரித்த வித்தகர்) புன்சிரிப்புச் சிரித்த பேரறிஞராம் சிவபிரானது செல்வமே! (வலாரி) தேவேந்திரன் (பெற்றெடுத்து) - அடைந்து வளர்த்த கற்பகத் தோப்பு (மேவும்) [redacted]

(தேம் நாயகா) - தேசத்துக்கு - பொன்னுலகுக்கு (நாயகா) தலைவனே! என்று போற்றி நின்ற (உத்தம) மேலானவர்களான (வானாடர்) தேவர்கள் வாழ, பராக்ரமம் பொருந்திய உனது திருவடியைச் (சேராத) சிந்தித்துப் போற்றாத சூரனை வெட்டி அடக்கி, அந்த கிரவுஞ்ச மலையை மோதிச்

சேறுபோன்ற (சோரி) ரத்தம் (புக்கு) பாய்வதால் (அளக்கர்) கடலும் (அல்லது பூமியும்) திட்டு எழ - திடர் - மலைமேடுபோல எழ - (மாறா) மாறாகநின்று - பகைத்து நின்று - (நிசாசரக் குலத்தை) அசுரர் கூட்டத்தை - இப்படி - இவ்வாறாக (சீராவினால் -) உடைவாளால் - அறுத்து அறுத்து - துண்டு துண்டாக அறுத்து (ஒதுக்கிய) தள்ளின பெருமாளே!

(எனக்கு அநுக்கிரகித்ததும் மறவேனே)

## 1133.

உனது இடத்திலுள்ள சினம் தங்கிய வேலாயுதத்தை எடுத்து, அதில் விஷம் முழுமையும் (தேக்கியே நிறைத்து) நிரம்பும் படி நிறைவு (செய்து) இரு குழைகளையும் மோதி, மீள்கின்றதும், கயல்மீன் போன்றதுமான கண் என்னும் வலையாலே -

இன்பகரமாகப் பார்த்து (உள்ளே அழைத்து)த் தமது வீட்டுக்குள் அழைத்துச் சென்று , (முகபடாம் சேர்த்து) முகத்தைத் துணியால் மூடியும், (வார் அழுத்தும்) ரவிக்கையால் அழுத்தமாக மூடப்பட்ட (இரு வரையும்) இரண்டு கொங்கைகளையும் காட்டி, (மால்) காம ஆசையை (எழுப்பி) உண்டாக்கி, (விலைபேசி) தங்களுக்குக் கொடுக்க வேண்டிய பொருள் எவ்வளவு என்று பேசி முடித்து -

இதழ்கள் அவிழும் மலர்களால் நிறையப்பெற்ற சுருண்ட கூந்தலைத் (தூற்றியே முடித்து) விரித்து உதறி முடித்து - (மறுகிடை நின்று) தெருவிடையே நின்று, நிரம்பச் சிரித்து, நிலையாக மாறுதலின்று என்றும் -

வருவதான பொருள் (உள்ளவர்களைத்) தேர்ந்து - அல்லது பொருள்களைக் கண்டதும் - (ஏற்கவே) முன்னதாகவே பறிக்கின்ற - பிடுங்குகின்ற மாதர்களின் பேச்சிலே முற்றிலும் மனம் உருகுகின்ற (தூர்த்தனாய்) - காமுகனாய்ச் சோர்வு அடையலாமோ!

*படி முழுதுங் கூர்த்த மாகு லத்தி
†முதுமறையின் பேச்சி நாலி டைச்சி
‡பகிர்மதியம் பூத்த தாழ்ச டைச்சி Xயிருநாழி-
படிகொடறங் காத்த மாப ரைச்சி
மணிவயிரங் கோத்த தோள்வ ளைச்சி
○பலதிசையும் போய்க்கு லாவி ருப்பி நெடுநீலி,
அடுபுலியின் தோற்ப டாமு டைச்சி
சமரமுகங் காட்டு மால்வி டைச்சி
**அகிலமுமுண் டார்க்கு நேரி ளைச்சி பெருவாழ்வே-
அரியயனின் றேத்த வேமி குத்த
விபுதர்குலம் பேர்க்க வாளெ டுத்த
அசுரர்குலம் பாழ்க்க வேலெ டுத்த பெருமாளே (139)

## 1134. புய வகுப்புப் பாட

தனதத்தத் தானதத்தத் தனதத்தத் தனதத்தத்
தனதத்தத் தனதத்தத் தனதான

இடர்மொய்த்துத் தொடரிற்பொய்க் குடிலக்கிக்
கிடையிட்டிட்
டினிமைச்சுற் றமுமற்றைப் புதல்வோரும்-
இனமொப்பித் திசையச்சொற் பலகத்திட் டழியப்பிற்
கிடையத்துக் கழும்விட்டிட் டவரேக;

---

*"உலகமொ ரேழும் ஆகிநின்ற உமை" - திருப்புகழ் 221

"மாதேவி அகில லோக மாதாவே"- தக்கயாக. 103

"படி முழுதும் காத்த மால் குலத்தி" - என்றும் பாடம்

† முது மறையின் பேச்சி - "உமை உரை செயுமவை மறை மொலியே" - சம்பந்தர் 3-98-3 என்ற இடத்தும் இப்பொருள் தொனிக்கும். (உமை - உமாதேவி)

"மறையின் பரிமளமே" - அபிராமி. அந்தாதி. 22

‡ "பனி மதியம்" என்றும் பாடம்.

மதியம் பூத்த சடைச்சி -"ஆரணாகாரி தருண வாள் நிலா வீசு சடில மோலி மாகாளி"- தக்க. யாகப். 107

X இரு நாழி நெல்லால் அறம் - பாடல் 460 - பக்கம் 34 கீழ்க்குறிப்பு - பாடல் 812 அடி 4

" படி கொடறங் காத்தமா மறைச்சி, மணி வயிரம் கோத்த தோள் வலைச்சி"- என்றும் பாடம்.

O " பல கலையும் போற்று வேல் விழிச்சி"- என்றும் பாடம்

** பார்வதி - திருமாலுக்குத் தங்கை - (தொ.பக். 301)

(படி முழுதும்) உலகம் முழுவதும் (கூர்த்த) நிறைந்து நிற்கும் சிறந்த (குலத்தி) அழகி, பழமறையின் - வேதப் பொருள்களையே பேசுபவள் (அல்லதுமறையாற் பேசப்படுபவள்) நூல்போன்ற நுண்ணிய இடையினை உடையவள், (பகிர்மதியம்) பிறைச்சந்திரன் விளங்குவதும், தாழ்ந்து தொங்குவதுமான சடையினை உடையவள், இரண்டு (நாழி) நாழி எனப்படும்

படிகொண்டு - படி (நெல்) கொண்டு - அறம் (முப்பத் திரண்டு) அறங்களையும் (காத்த) நடத்திப் போற்றின சிறப்பு வாய்ந்த பரதேவதை, ரத்னங்களும், வயிரங்களும் கோத்த வளையலைக் கொண்ட தோளை உடையவள், பலதிசைகளிலும் சென்று விளங்கும் விருப்பத்தை உடையவள், பெருமை மிக்க நீலி (நீலநிறம் உடையவள்),

கொல்ல வரும் புலியின் தோலை (படாம்) சேலையாக உடுத்துள்ளவள், போர் செய்யும் முகத்தை காட்டும் பெரிய இடபத்தை வாகனமாக உடையவள், (உலகு முழுமையும் உண்ட) (திருமாலுக்கு) நேர் தங்கை - பார்வதியின் பெருஞ் செல்வமே!

(அரி, திருமாலும்) (அயன்) பிரமனும் நின்று துதிசெய்யவும், (மிகுத்த விபுதர் குலம்) சிறந்த தேவர் கூட்டம் (பேர்க்க) சிறையினின்றும் மீட்சி பெறவும் - வாளாயுதத்தை எடுத்த பெருமாளே! அசுரர் கூட்டம் பாழாக வேலாயுதத்தை எடுத்த பெருமாளே!

(தூர்த்தனாய் இளைத்து விடலாமோ)

## 1134.

(இடர்) துன்பங்கள் மொய்த்துத், தொடர் - இல் - குடில் நெருங்கித் தொடரும் -இல் - இடமாகிய - குடில் - உடல், பொய்க்குடில் - நிலைத்து இராத உடல் - (இவ்வுடலை) அக்கிக்கு அக்கினிக்கு - தீக்கு - இடையே போட்டு, (இனிமைச் சுற்றமும்) இனிய சுற்றத்தினரும், பின்னும் புதல்வர்களும் -

இனம் ஒப்பித்து - தங்கள் தங்கள் உறவைச் சொல்லி ஒப்பித்து (அப்பா, அண்ணா, மாமா, அத்தான்) என உறவு முறை கூறி, (இசைய) அச்சமயத்திற்கு ஏற்ற (சொல் பல) - சொற்கள் பலவற்றைக் (*கத்திட்டு) சொல்லிக் கதறியழுது (இழிய) பிரிந்து நீங்கப் (பிற்கு) பின்பு, இடைய - மனம் தளர்ந்து இருந்து, துக்கத்தையும் விட்டுவிட்டு, அவர்கள் (சுற்றத்தினர்) போக -

---

"கங்கைக்கும் நெடியவன் தங்கைக்கும் ஒருமகன்
கனிவாயின் முத்தம் அருளே" - முத்து. பிள்ளை.

அகிலமும் உண்டார் - பாடல் 267-பக்கம் 164 கீழ்க்குறிப்பு:
"அகிலமு முண்டார்க்கு நேர் கடைச்சி அருள்வோனே" - என்றும் பாடம்

*விடமெத்தச் சொரிசெக்கட் சமன்†வெட்டத் தனமுற்றிட்
டுயிர்வித்துத் தனையெற்றிக் கொடுபோமுன்-
வினைபற்றற் றறநித்தப் புதுமைச்சொற் கொடுவெட்சிப்
‡புயவெற்றிப் புகழ்செப்பப் பெறுவேனோ;
X அடர் செக்கர்ச் சடையிற்பொற் பிறையப்புப் புனையப்பர்க்
கறிவொக்கப் பொருள்கற்பித் திடுவோனே-
Oஅலகைக்குட் பசிதித்தப் பலகைக்கொத் ததுபட்டிட்
டலறக்குத் துறமுட்டிப் பொரும்வேலா;
கடதுக்குட் **படுசர்ப் பத்தினில்மெச்சத் துயில் ††பச்சைக்
கிரிகைக்குட் டிகிரிக்கொற் றவன்மாயன்-

---

* "விடம் உமிழும் செங்கண்"- திருப்புகழ். 17

† வெட்டத் தனம் உற்றிட்டு - தனம் - பண்பு உணர்ந்தற்கு வரும் சொல் - துஷ்டத்தனம், கள்ளத்தனம் - என்பது போல, வெட்டுகின்ற அந்தக் குணம்.

‡ "வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்" என்னும் அப்பர் பெருமான் திருவாக்கின் உண்மையை இதிற் காணலாம்.

"புய வெற்றிப் புகழ் செப்பப் பெற வேண்டும்" என இங்கு ஸ்ரீ அருணகிரியார் வேண்டினர். இந்த வேண்டுகோளாகிய வித்தின் பலனே" - திருவகுப்பில் அவர் பாடிய "புய வகுப்பு" என்க - பாடல் 962-பக்கம் 788 குறிப்பு. ‡ பார்க்க

X சிவபிரானுக்கு உபதேசித்தது - பாடல் 327-பக்கம் 314.

O பேய்கள் பிணங்களைத் தின்ன ஒன்றோ டொன்று போட்டி யிடுதலும் பொருதலும்:

"பிணங்கள் பாரிலை கிடக்க, நம்முடைய
 பேயலாத சில பேய்கள் பார்
என்ற போதிலிலை மெய்யெனா வுடன்
 இருந்த பேய் பதறி ஒன்றன் மேல்
ஒன்று கால் முறிய மேல் விழுந் துடிசில்
 உன்னை என்னிவரும் மன்னின் மேல்"
"சானக சொன்ன பேய்களைத் தகர்த்த பற்கள் என்னுமே"

- கலிங்கத். இந்திரசாலம். 15,16, அவதாரம்.77

பேய்கள் கூட்டமாய் உண்ணும் என்பதும் ஒன்றின் கையில் உள்ளதனை மற்றொரு பேய் பிடுங்கச் சண்டை வரும் என்பதும் - (தொ.பக். 303)

விஷத்தை அதிகமாகச் சொரிகின்ற சிவந்த கண்களை உடைய யமன் (வெட்டத்தனம் உற்றிட்டு) - அழிக்க வேண்டும் என்கிற தன்மையைக் கொண்டு அடைந்து, உயிராகிய (வித்துத்தனை) வித்தை - விதையை நீக்கிக் கொண்டு போவதற்கு முன்பாக -

(எனது) வினையும், பற்றும் அற்று (அற) ஒழிந்து நீங்க, நாள் (தோறும் புதிய புதிய சொற்களைக் கொண்டு வெட்சிமாலை அணிந்த (உனது) திருப் புயங்களின் வெற்றிப் புகழை உரைக்கும் (பாக்கியத்தைப்) பெறுவேனோ!

நெருங்கியுள்ள சிறந்த சடையில் அழகிய பிறைச் சந்திரன், (அப்பு) கங்கைநீர், இவைதமைப் புனைந்துள்ள - அணிந்துள்ள (அப்பர்க்கு) தந்தையாம் சிவ பிராற்கு, ஞானம் கூடிய பொருளை உபதேசித்தவனே!

(அலகைக்குள்) பேய்க் கூட்டங்களுள் பசி தித்த - பசி திருந்த அடங்க வேண்டிப், பலகை - பலபேய்களின் கைகளும் (கொத்தது பட்டிட்டு அலற) - ஒன்றோ டொன்று உனக்கு எனக்கு என்று பிணங்களின் மீது கையால் அப்பிணங்களைக் கொத்தும்போது ஒன்றின் கை ஒன்றின் மேல் கொத்துப்பட, அதனால் நோயுண்ட பேய்கள் அலற - வேதனையாற் கூச்சலிடவும், (ஒன்றை ஒன்று) குத்திடவும், (அசுரர்களை) எதிர்தாக்கிச் சண்டை செய்த வேலனே!

கடலுக்குள்ளே அமைந்த ஆதிசேடன் என்னும் பாம்பின் மேலே மெச்ச - (அடியார்கள்) போற்றித் துதிக்க - (அறி) துயில் கொண்டுள்ள (பச்சைக்கிரி) பச்சை மலைபோன்ற வடிவை உடையவனும், (கைக்குள்) திருக்கரத்திலே (திகிரிக் கொற்றவன்) சக்கரம் கொண்ட அரசனுமான (மாயன்) திருமாலுக்கும்

---

"சதையைச் சில கைக் கொள, மற்றதனைச்
சருவிச் சருவிப் பறிக்கு(ம்) ஒரு திரள்"
"தெறித்த தலைகளை இது எனக்கு அது உனக்கு
அது மற்றதனுக்கு என மொய்த்துலவிப் பொறுக்கும்
ஒரு திரள்' - செருக்களத் தலகை வகுப்பு.

பலகைக் கொத்தது பட்டிட்டலற - முட்டிப் பொருதது - 2000 கைகளைக் கொண்ட சிங்க முகா சுரனுடைய பல கைகள் கொத்து கொத்தாய் அறுபட்டு விழ அவன் வேதனைப் பட, முருக வேள் பொருததையும் இது குறிக்கலாம்.

"சென்னியில் ஒன்றும் கையில் இரண்டுமே நிறுவிப் பின்னர்
யாவையுந் தடிந்தான் அன்றே" - கந்தபுரா. 4-12-444

** " நாக மெத்தையிற் றுயின்ற நாரணன்"- திருப்புகழ் 832

† † " பச்சைமா மலைபோல் மேனி" - தொண்டரடி. திருமாலை.2

கமலத்திற் பயில்நெட்டைக் *குயவற்கெட் டிசையர்க்குக்
கடவுட்சக் கிரவர்த்திப் பெருமானே (140)

## 1135. மாதர் மீது மயக்கு அற

தனதனன தான தத்த தந்த
தனதனன தான தத்த தந்த
தனதனன தான தத்த தந்த தனதான

இரவினிடை வேள்தொ டுத்து டன்று
முறுகுமலர் வாளி யைப்பி ணங்கி
யிருகுழையு மோதி யப்ப டங்கு கடலோடே-
எதிர்பொருது மானி னைத்து ரந்து
[illegible]லதிகிழி வேல்த னைப்பொ ருந்தி
†யினியமுத ஆல முற்ற கண்கள் வலையாலே;
முரணிளைஞ ராவி யைத்தொ டர்ந்து
விசிறிவளை மாத ரைக்க லந்து
மொழியதர கோவை யிக்க ருந்தி யமுதாகு-
முகிழ்முகுளி தார வெற்ப ணைந்து
சுழிமிதுன வாவி யிற்பு குந்து
முழுகியழி யாம ளற்ப தங்கள் தரவேணும்;
திரையுலவு சாக ரத்தி லங்கை
நகரிலுறை ராவ ணற்கி யைந்த
தெசமுடியு மீரு பத்தொ ழுங்கு திணிதோளுஞ்-
சிதைய‡வொரு வாளி யைத்து ரந்த
அரிமருக தீத றக்க டந்து
தெளிமருவு கார ணத்த மர்ந்த முருகோனே;

*"வேதக் குயவன்" - திருப்புகழ். 1208
† கண்களில் - அமுது - ஆலம் - இரண்டும் உள -
"ஒரு நோக்கு நோய் நோக்கு; ஒன் று அந்நோய் மருந்து"
- திருக்குறள். 1091
"விடமு மமுதமு மினிர் வள இணை விழி"- திருப்புகழ். 516
‡ ஒரு வாளி - பாடல் 452 - பக்கம் 6 கீழ்க்குறிப்பு.

தாமரை ஆசனத்தில் (பயில்) வீற்றிருக்கும் (நெட்டைக் குயவற்கு) நெடிய பிரமனுக்கும், எட்டுத் திசையில் உள்ளவர்களுக்கும் கடவுட் சக்ரவர்த்தியாய் விளங்குகின்ற பெருமாளே!

(புய வெற்றிப் புகழ் செப்பப் பெறுவேனோ)

## 1135.

இராப் பொழுதிலே மன்மதவேள் எடுத்துக் கோபித்துக் கடுமையாகச் செலுத்தும் மலர்ப் பாணங்களுடன் (பிணங்கி) மாறுபட்டு (அந்த பாணங்களுக்கு எதிர்ப் பாணங்களாய் விளங்கி)க் காதில் உள்ள இரண்டு குழைகளையுந் தாக்கி, (அப்பு அடங்கு)நீர் பொருந்தியுள்ள கடலுடனே -

எதிர்த்து, மாறுபட்டு (அதனினும் பெரிதாய் விளங்கி), (மானினைத் துரந்து) (தமது பார்வை அழகால்) மான்கள் எல்லாம் (வெட்கிக்) காட்டிற் புகும்படி ஓட்டி, சலதி) கடலை (கிழி) அன்று கிழித்த - வற்றச் செய்த வேலுக்கு இணையாகி, (இனி) பின்னும், அமுதத்தையும் (அல்லது இனிய அமுதத்தையும்) (ஆலம்) விஷத்தையும் இரண்டையும் கொண்ட கண்கள் எனப்படும் வலை கொண்டு -

முரண் இளைஞர் - வலிமை மிக்க இளைஞர்களுடைய உயிர் மீது (தொடர்ந்து) - கண் வைத்துப் பற்றி - (விசிறி) வீசி (கண் வலையை வீசி) வளை - வளைத்துத் தம் வசப் படுத்தும் - மாதர்களுடன் கூடி, அவர்களுடைய பேச்சு புறப்படும் - கோவை அதரம் கொவ்வைப் பழம்போன்ற வாயிதழ்களிற் கிடைக்கும் (இக்கு) கரும்பன்ன சுவையை (அருந்தி) உண்டு, (பால்) அமுதம் பொதிந்துள்ள -

முகுளி முகிழ் - அரும்பும் மொட்டுப் போன்ற (தாரம்) முத்து மாலையை அணிந்து) (அல்லது அரும் பண்டமாகிய) மலையாம் கொங்கையை அணைந்து, சுழி (உந்திச் சுழி - கொப்பூழ்) என்னும் - (மிதுன வாவியில்) - புணர்ச்சிக் குளத்திற் படிந்து (அதிலே) முழுகி அழிந்து போகாமல் நன்மை தரும் (உனது) திருவடிகளைத் தந்தருள வேண்டும்;

அலைகள் வீசுகின்ற கடல் சூழ்ந்த இலங்கை நகரில் இருந்த ராவணனுக்குப் பொருந்தி இருந்த பத்துத் தலைகளும், (ஈருபத்து) இருபது ஒழுங்கான, வலிய தோள்களும்

அழிவுபட, ஒரு பாணத்தைச் செலுத்தின திருமாலின் மருகனே! (தீதறக் கடந்து) தீமைகள் யாவையும் கடந்து தாண்டி தெளிவான அறிவுபொருந்திய - அறிவு சொருபமான - (காரணத்து) மூலப் பொருளில் அமைந்து விளங்கும் முருகனே!

அரணமதின் சூழ்பு ரத்தி ருந்து
*கருதுமொரு மூவ ருக்கி ரங்கி
†யருளுமொரு நாய கற்ப ணிந்த குருநாதா-
‡அகல்முடிவை யாதி யைத்தெ ளிந்து
இரவுபக லாக நெக்க விழ்ந்த
அடியவர்கள் பாட லுக்கி சைந்த
பெருமானே (141)

## 1136. திருவடியைக் கூட

தனன தந்தன தானா தானா
தனன தந்தன தானா தானா
தனன தந்தன தானா தானா தனதான

×இரவொ டும்பக லேமா றாதே
அநுதி னந்துய ரோயா தேயே
யெரியு முந்தியி னாலே மாலே பெரிதாகி-
இரைகொ ளும்படி யூடே பாடே
மிகுதி கொண்டொழி யாதே வாதே
யிடைக ளின்சில நாளே போயே வயதாகி;
நரைக ளும்பெரி தாயே போயே
கிழவ னென்றொரு பேரே சார்வே
நடைக ளும்பல தாறே மாறே விழலாகி-

---

*மூவருக்கு இரங்கினது - பாடல் 1132- பக்கம் 296 குறிப்பு
"என்னுடை மூவர் இராக்கதர்கள் எரி பிழைத்துக்
கண்ணுதல் எந்தை கடைத்தலை முன் நின்றதன்பின்"
- திருவாசகம். தோணோக்கம். 9

† நாயகனைப் பணிந்த எனவும் பொருள் தொனிக்கும்படி " நாயகற் பணிந்த குரு நாதா" - என்றதனால் சிவபிரானை முருகவேள் கச்சிக்குமர கோட்டம், திரு முருகன் பூண்டி, செய்நலூர், கீழ் வேளூர், புள்ளிருக்கு வேளூர் (வைத்தீசுரன் கோயில்), வட திருமுல்லை வாயில் ஆகிய தலங்களில் வழி பட்டதும் தொனிக்கும்.

‡ " தெரிந்த அடியார் சிவனே என்று... இரவும் பகலும்
ஏத்தும் சீர்"- சம்பந்தர். 2-64-4 (தொ பக். 307)

காவல்கொண்ட மதில்கள் சூழ்ந்திருந்த திரிபுரத்தில் இருந்து, (கருதும்) தம்மைத் தியானித்து வணங்கி யிருந்த ஒப்பற்ற (பக்தர்களாம்) மூவர்மீது இரக்கம் கொண்டு அவர்களுக்கு அருள் பாலித்த நாயகன் (சிவபிரான்) வணங்கின குருமூர்த்தியே!

(அகல்) பரந்துள்ள (முடிவை - ஆதியை) முடிவுக்கு முடிவாய் ஆதிக்கு ஆதியாய் உள்ள பொருள் இன்னதெனத் தெளிந்து, இரவும், பகலுமாக - எப்போதும் - நெக்கு அவிழ்ந்த - உள்ளம் (பக்தியால்) நெகிழ்ந்து உருகும் அடியார்களுடைய பாடல்களை (இசைந்த) உடன் பாட்டுடன் கேட்டு மகிழும் பெருமாளே!

(நற் பதங்கள் தரவேணும்)

## 1136.

இரவொடும் பகலே - இரவும் பகலுமாக - (மாறாதே) நீங்குதலின்றி - எப்போதும்; (அநுதினம்) நாள்தோறும், துக்கம் (ஓயாதே) ஓய்தலின்றி - இடைவிடாமல் பீடிக்க - (எரியும் உந்தியினாலே) தீப்போல எரிகின்ற வயிற்றால் - பசி என்னும் அக்கினியால் - மாலே பெரிதாகி - ஆசைகளே பெரிதாய் வளர்ந்து - (அதனால்)

(இரை கொளும்படி) உணவு வேண்டி, (ஊடே) வாழ்க்கையினூடே - வாழ்விலே, (பாடே) உழைப்பே - வருத்தமே அதிகமாக அடைந்து, ஒழியாதே - வாதே - வாதே ஒழியாதே - வாது பேசுதலிலேயே - தருக்கம் பேசுதலிலேயே நீங்குதல் இல்லாமல் - எப்போதும் காலம் கழித்து, (இடைகளின் சில நாளே போயே) - (இவ்வாறு வாழ்க்கையின்) மத்தியிலே சிலகாலம் கழியப், (பின்பு) வயது மூத்து-

நரைகளும் பெரிதாயே போயே - நரைகள் அதிகமாகிப் போய்க் - கிழவன் என்று ஒரு பேரே, (சார்வே) - சாரவே வந்து கூடிட, நடையும் நேரின்றிக் கோணலாய்ப், பலவித தாறுமாறுதலாகக் - கீழே விழுந்து விடுவதாய் -

---

X ஏமாறாதே நடனகுஞ்சித விட கூட முயல வேண்டும்;

அங்ஙனம் கூடாது அழிவேனோ - எனவும் பொருள் தொனிக்கப் பார்க்கலாம்.

நயன முந்தெரி யாதே போனால்
"விடிவ தென்றடி யேனே தானே
†நடன குஞ்சித வீடே கூடா தழிவேனோ,
‡திருந டம்புரி தாளீ தூளீ
மகர குண்டலி மாரீ சூரீ
×திரிபு ரந்தழ லேவீ சார்வீ யபிராமி-
சிவனி டந்தரி நீலி சூலீ
கவுரி ○பஞ்சவி யாயீ மாயீ
சிவைபெ ணம்பிகை வாலா சீலா அருள்பாலா,
அரவ கிங்கிணி வீரா தீரா
கிரிபு ரந்தொளிர் நாதா பாதா
அழகி னங்குற மானார் தேனார் மணவாளா-
அரிய ரன்பிர மாவோ டேமு
வகைய ரிந்திர கோமா னிவ்வா
னமரர் கந்தரு வானோ ரேனோர்
பெருமாளே (142)

## 1137. ஞானோபதேசம் பெற

தனதன தானான தானன
தனதன தானான தானன
தனதன தானான தானன தனதான

** இருகுழை மீதோடி மீளவும்
கயல்களு மாலால காலமும்
††ரதிபதி கோலாடு பூசலு மெனவேநின்-

---

*விடிவது - துன்பம் நீங்கி இன்பமாதல் - "நிற் பயம்பாடி விடிவுற்று ஏமாக்க" - பரிபாடல் 7-85

† குஞ்சிதம் - வளைந்த திருவடி; குஞ்சித பதமே வீட்டின்பம் தருமாதலின் "குஞ்சித வீடு" என்றார்.
"அடுத்த இன்னுயிர்கட் களவில்பே ரின்பம், கொடுப்பது முதல்வ நின் குஞ்சித பதமே"- சிதம்பர மும்மணி. 2-11

‡ தேவியின் திரு நடம் -
" பரத்தின் உச்சியில் நடநவில் உமை"
"பொ துற்று திமித்திமி நடமிடு பகிரதி" - திருப்புகழ். 267, 303

X தேவி திரிபுரத்தை எரித்தது -
"புரம் நொடியினில் எரி செய்த அபிராமி"- திருப்புகழ். 304

O பஞ்சவி - பாடல் 732 அடி 5. (தொ. பக். 309)

(நயனமும் தெரியாதே போனால்) கண்களும் தெரியாமல் குருடா னால், (விடிவதென்றடி யேனே தானே) - விடிவது என்று அடியேன் தான்) - அடியவனாகிய நான் எப்போது தான் விடிவது - துன்பம் நீங்கி இன்பம் பெறுவது? நடன குஞ்சித - குஞ்சித நடன! - காலை வளைத்துத் தூக்கின நடனத்தை செய்பவனே! (வீடேகூடாது) மோக்ஷவீட்டை அடையாமலே - அல்லது நடன குஞ்சித பதமாம் வீட்டை அடையாமலே - அழிந்து போவேனோ!

திரு நடனம் செய்கின்ற (தாளி) - திருவடிகளை உடையவள், (தூளி) திருநீற்றுத் தூளை அணிந்துள்ளவள் - உத்தூளனம் செய்துள்ளவள், மகரமீன் போன்ற குண்டலங்களை அணிந்துள்ளவள், (மாரி) துர்க்கை , (சூரி) மாகாளி, திரிபுரங்களில் (தழல் ஏவி) நெருப்பை ஏவினவள் (செலுத்தியவள்), (சார்வீ) புகலிடமாயுள்ளவள்! (அபிராமி) அழகி!

(சிவன் இடம் தரி) சிவனது இடது பாகத்தில் தரித்து இருப்பவள், (நிலி) நீல நிறத்தவள், சூலாயுதத்தை ஏந்தியவள், கௌரி, (பஞ்சவி) - ஐந்தாவது சக்தியாகிய அநுக்கிரக சக்தி, ஆயி (தாய்), (மாயீ) மகமாயி, (சிவை பெண்) சிவாம்பிகை, (வாலா) பாலாம்பிகை, (சீலா) பரிசுத்த தேவதை ஆகிய பார்வதி அருளிய குழந்தையே!

(அரவம்) ஒலி செய்கின்ற கிண்கிணியை அணிந்துள்ள வீரனே! தீரனே ! கிரி புரந்து ஒளிர் - மலைகளைக் காத்து - மலைகளில் வீற்றிருந்தருளி விளங்கும் நாதனே! (பாதா) சத்தினி பாதா - ஞான பக்குவம் அடைந்தவர்க்கு அநுக்கிரக சக்தியாய்ப் பதிகின்றவனே! (அல்லது - திருவடிச் செல்வத்தை உடையவனே!) அழகும், இளமையும் பொலியும் (குறமானார்) குறமான் - வள்ளியின் (தேன் ஆர்) - இனிமை நிறைந்த மணவாளனே!

திருமால், சிவன், பிரமா - எனப்படும் (மூவகையர்) மூவகைத் தேவர்கள், இந்திரன் என்னும் அரசன், பெரிய விண்ணுலகத்துத் தேவர்கள், கந்தருவானோர்- கந்தருவர் ஆனோர் - கந்தருவர் எனப்படு வோர், (ஏனோர்) பிற எல்லா வகையர்க்கும் பெருமாளே!

(வீடே கூடாது அழிவேனோ)

# 1137.

இரண்டு குழைகளின் மீது (தாக்கி) ஓடி மீள்வனவும், கயல் மீன்கள்,ஆலகால விஷம், (ரதிபதி) இரதியின் கணவன் மன்மதனு-டைய (கோல்) மலர்ப் பாணங்கள் (தாமரை - நீலோற்பலம்)- இவை செய்ய வல்ல (பூசல்) போர் - கலகம் - என்றுகூறும்படி நின்று -

---

** 'இரு குழை மீதோடி மீள்வன" - என்றும் பாடம்.

†† "ரதிபதி போராடு வாளியும் எனவே நீள் இலகிய" - என்றும் பாடம்

நிலவிய கூர்வேல் விலோசன
ம்ருகமத பாடீர பூஷித
*இளமுலை மாமாத ரார்வச முருகாதே;
முருகவிழ் கூதாள மாலிகை
தழுவிய சீர்பாத தூளியின்
முழுகி†வி டாய்போ மனோலயம் வரவோது-
முழுமதி மாயாவி காரமு
மொழிவது வாசாம கோசர
முகுளித ஞானோப தேசமு மருள்வேளும்;
அருமறை நாலோதும் வேதியன்
இரணிய ரூபாந மோவென
அரிகரி நாராய ணாவென ஒருபாலன்-
அவனெவ னாதார மேதென
‡இதனுள னோவோது நீயென
அகிலமும் வாழ்வான நாயக னெனவேகி;
ஒருகணை தூணோடு மோதிட
விசைகொடு Xதோள்போரு வாளரி
யுகிர்கொடு வாரா நிசாசர Oனுடல்பீறும்-

---

*"இளமுலை மாமாதரால்மன முருகாதே"-என்றும் பாடம்
† "விடாய் போய் மனோலயம் வரவேதான்"என்றும் பாடம்
‡ "எதிலுளன் ஓதாயடா என" - என்றும் பாடம்
X "தூணூடு வாளரி"- என்றும் பாடம்
O நரசிம்மமாய் வந்து இரணியன் உடலைக் கிழித்தது -
பாடல் 327-1-பக்கம் 317; பாடல் 653-பக்கம் 538;
பாடல் 656-பக்கம் 6; பாடல் 874, 876.
" ஆதியில் இரணிய னாம ஆரம்பம்
வேதியன் எடுத்தலும் வெறுத்து மைந்தனும்
சோதி நாராயணன் பெயரைச் சொல்லினான்
போதியா தந்தணன் விரைந்து போயினான்"
ஆண்டு தானவன் மைந்தனை விளித்துநின் னகத்துட்
பூண்ட வானவன் எங்குளான் என்றலும் புதல்வன்
யாண்டும் எம்பிரான் இராத்தலை இல்லையென் றிறுத்தான்
மாண்ட இத்தறி யுளன்கொலென் றறைந்தனன் மறவோன்.

விளங்குகின்ற கூரிய வேல் போன்ற (விலோசனம்) கண்கள், கஸ்தூரி, சந்தனம் இவை அலங்கரிக்கும் இள முலைகள் - இவை தமை உடைய அழகிய மகளிரின் வசத்திற்பட்டு மனம் உருகாமல்

முருகு அவிழ் - நறு மணம் வீசுகின்ற கூதள மலர்மாலை அணையும் சிறப்பு வாய்ந்த (உனது) பாத தூளியில் (திருவடிப் பொடிகளில்) நான் முழுகி, (விடாய் போம்) - சென்மவிடாய், காமவிடாய் இவைகளை ஒழிக்க வல்ல மன ஒடுக்கம் வரும்படிக் கற்பிக்க வல்ல -

முற்றின (மதி) அறிவையும், (பிரபஞ்ச) மாயையின் விகாரங்களை துர்க்குணங்களை நீக்கவல்லதும், வாக்குக்கு எட்டாததாய் அரும்புவிட்டு விளங்குவதுமான - ஞானோபதேசத்தையும் (தந்து) அருள் புரிய வேண்டும்;

அருமை வாய்ந்த (மறை நூல்) வேத நூல்களில் வல்ல வேதியன் - "இரணிய ரூபா நமோ" என்று பாடம் சொல்லிக் கொடுத்தபோது "ஹரிஹரி நாராயணா" என்று ஒப்பற்ற குழந்தை (பிரகலாதன்) ஓத - (அதை அறிந்து கோபித்த தந்தை இரணியன் - பிரகலாதனை (நோக்கி)

அவன் எவன் - நீ சொல்லும் " நாராயணன்" யார் (அவனை நீ வணங்குதற்கு) என்ன ஆதாரம் அறிந்துள்ளாய் என்றும், (இதன் உளனோ) இதோ இருக்கின்றதே இந்தத் தூணில்- (அந்த நாராயணன்) உள்ளானோ, சொல்லுக நீ என்றும் கேட்கப் (பிரகலாதன்)- எங்கள் நாயகன் அகிலத்திலும் எல்லாப் பொருள்களிலும் வாழ்கின்ற நாயகன் என்பதை நீ தெரிந்துகொள் (என)- என்று விடைகூற, (இரணியன்) ஏசி - சென்று

ஒரு - எதிரிலிருந்த ஒரு (கனை தூணோடு) - திரண்ட தூணை மோதி அறைய, (அப்போது) விசைகொடு - அதி வேகத்துடன் - (தோள் போறு வாளரி யுகிர் கொடு) - தோள் பொறு வாள் அரி உகிர் கொண்டு - வாள் அரி தோள் பொறு உகிர் கொடு - ஒளி பொருந்திய நரசிங்கமாய் - கையில் உள்ள நகங்களுடன் - வந்து (நிசாசரன்) அரக்கன் - இரணியனுடைய உடலைக் கிழித்த - (மாமன்)-

---

" அறைந்த தூணில்நின் றண்டங்கள் வெடிபட ஆர்த்து
நிறைந்தமானிடமடங்கலாய்த் தோன்றினன் நெடியோன்;
கங்குல் வெம்பகல் நடுப்படும் காலையிற் கனகன்
தங்கு கோயில்வாய்ப் படியிடைத் தன்மடிக் கிடத்திப்
பொங்கு வள்ளுகிர் மடுத்தவன் புயத்தொடு மார்பும்
சிங்க மேனியன் பிளந்துயிர் பருகினான் தெழித்து"
- வில்லைப்புராணம். 210,221,229

*உலகொரு தானான மாமனும்
உமையொரு கூறான தாதையும்
உரைதரு தேவாசு ராதிபர் பெருமானே (143)

## 1138. உழலுதல் அற

தனதன தனதன தத்தத் தானன
தனதன தனதன தத்தத் தானன
தனதன தனதன தத்தத் தானன தனதான

இருமுலை மலையென ஒப்பிட் டேயவர்
இருவிழி யதனில கப்பட் டேமன
மிசைபட வசனமு ரைத்திட் டேபல மினிதோடே-
இடையது துவளகு லுக்கிக் காலணி
பரிபுர வொலிகள் தொனிக்கப் பூதர
இளமுலை குழைய அணைத்துக் கேயுர
மணியோடே,

மரகத பவள மழுத்திப் பூஷண
மணிபல சிதறி நெறித்துத் தானுக
மருமலர் புனுகு தரித்துப் பூவணை மதராஜன்-
மருவிய கலவி தனக்கொப் பாமென
மகிழ்வொடு ரசிது மிகுத்துக் கோதையை
மருவியு முருகி களைத்துப் பூமியி லுழல்வேனோ.

† திரிபுர மெரிய நகைத்துக் ‡காலனை
யுதைபட Xமதனை யழித்தச் சாகர
Oதிரைவரு கடுவை மிடற்றிற் றானணி சிவனார்தந்-
திருவருள் முருக பெருத்துப் பாரினில்
சியொதனன் மடிய மிகுத்துப் **பாரத
செயமுறு மரிதன் ††மனத்துக் காகிய மருகோனே.

---

* உலகளந்தது - பாடல் 268-பக்கம் 166 கீழ்க்குறிப்பு
† திரிபுரம் எரித்தது - பாடல் 285-பக்கம் 206 கீழ்க்குறிப்பு
‡ காலனை உதைத்தது - பாடல் 399-பக்கம் 510 கீழ்க்குறிப்பு
X மன்மதனை எரித்தது - பாடல் 399-பக்கம் 510 கீழ்க்குறிப்பு
O நஞ்சு உண்டது - பாடல் 509-பக்கம் 162 கீழ்க்குறிப்பு
** பாரத செயமுறும் அரி -
"நீ பாரத அமரில் யாவரையும் நீறாக்கிப்
பூபாரம் தீர்க்கப் புரிந்தாய் புயல் வண்ணா"-
- வில்லி கிருஷ்ணன் தூது. 34

(தொ.பக். 313)

(உலகொரு தாள் ஆன) உலகை மெல்லாம் ஒரு அடியால் (மூடின) அளந்த - (மாமன்) - மாமனாகிய - திருமாலும், உமை (தன்னுடலின்) ஒரு பாகமாக அமைந்த தந்தை சிவபிரானும், (உரை தரு) போற்றிப் புகழும் தேவனே! தேவர் தலைவர்களின் பெருமாளே!

(ஞானோபதேசமும் அருள்வேணும்)

## 1138.

இரண்டு (அல்லது பெரிய) கொங்கைகள் மலைகளுக்கு நிகராகும் என்று ஒப்பிட்டு, (அவ் வேசையர்களின்) (இரண்டு அல்லது) பெரிய கண் (வலையதனில்) அகப்பட்டு, மனம் பொருந்தும் வகையில், (பலம் இனிதோடே) (வசனம் உரைத்திட்டு) பலத்துடனும் இனிமையுடனும் - நன்றாகவும் ஒழுங்குடனும் பேச்சுக்களைப் பேசி -

இடை நெகிழும்படி குலுக்கியும், காலில் அணிந்துள்ள சிலம்பின் ஒலிகள் சப்திக்கவும், (பூதரம்) மலைபோன்ற இளங்கொங்கை குழையும் படியும் அணைத்துக், (கேயூர மணியோடே) - தோளணியில் உள்ள ரத்னங்களுடன் -

மரகதம், பவளம் இவைகள் பதிக்கப் பெற்ற அலங்காரமான (அணி பல) ஆபரணங்கள் பலவும் கலைந்து நெறிப்புண்டு (முரிப் புண்டு) உக - கூழல, வாசனை மலர்களையும் புனுகு சட்டத்தையும் அணிந்து, மலரணையில், மன்மத ராஜனுடைய சாத்திரப்படி -

பொருந்திய புணர்ச்சிக்கே இப் புணர்ச்சி ஒப்பாகும் என்று மகிழ்ச்சியுடன் (ரசிது மிகுத்து) மிகுத்து ரசிது - மிகவும் ரசித்து - அனுபவித்து, (கோதையை) பெண்களை (மருவி) கூடிப் பொருந்தி, (உருகி) அதனால் உடலும் மனமும் உருகிக் களைத்துப்போய் (இந்தப்) பூமியில் அலைச்சல் உறுவேனோ!

திரிபுரங்கள் எரியும்படி சிரித்துக், காலனை உதைத்து, மன்மதனை எரித்தழித்து, சாகரம்) கடலின் அலையில் வந்த விஷத்தைக் கண்ட த்தில் அணிந்த சிவபிரானுடைய

திருவருளால் வந்த முருகனே! விளக்கமுற் றிருந்து இப் பூமியில துரியோதனன் இறந்துபட, மிகநன்றாகப் பாரதப்போரில் வெற்றி கண்ட (அரி) திருமாலின் மனத்துக்கு உகந்த (இஷ்டமான) மருமகனே!

---

†† திருமாலுக்கு உகந்தவர் முருகவேள் -

"சகஸ்ர நாம கோபால சுதற்கு நேச மாறாத மருகோனே"

- பாடல் 497 அடி 5

"உந்தியாமை ஆனவர்க் கினியானே நமோ நம"

- பாடல் 996-1 அடி 5

நரிகழு வதுகள் களிக்கச் சோரிகள்
ஏணகள முழுதுமி குத்துக் கூளிகள்
நடமிட அசுரர் குலத்துக் காவலை நிகராகி-
நனிகடல் கதற பொருப்புத் தூளெழ
நணுகிய இமையவ ருக்குச் சீருற
நணுகலர் மடியதொ லைத்துப் பேர்பெறு
பெருமாளே. (144)

## 1139. உய்ய

தனதன தானா தானா, தனதன தானா தானா
தனதன தானா தானா தனதான

இலகிய வேலோ சேலோ ஒளிவிடு வாளோ போதோ
எமன்விடு தூதோ மானோ விடமீதோ
எனவிழி கூறா வாரா அரிவையர் தோளூ டாடா
இறுதியில் வேறாய் மாறா நினைவாலே
பலபல *கோளாய் மாலா யுழலும தானால் வீணே
படிறுசொ லாகா †லோகா யதனாகிப்
பரிவுட னாடாய் வீடா யடிமையு மீடே றாதே
பணிதியில் மூழ்கா மாயா விடுவேனோ;
அலைகடல் ‡கோகோ கோகோ எனவுரை கூறா வோடா
x அவுணரை வாடா போடா எனலாகி-

---

*கோள் - இடையூறு. தீமை (திவாகரம்)

† லோகாயதன் - "உலோகாயதன் எனும் ஒண்டிறற்
பாம்பு" - திருவாச 4-56

உலகாயத மதத்தைத் தாபித்தவன் - சார்வாகன் காட்சியே அளவையாவ தென்றும், நிலம், நீர், தீ, காற்று எனப் பூதம் நான்கே என்றும் அவற்றது புணர்ச்சி விசேஷத்தால் தோன்றிப், பிரிவால் மாய்வதாம், உடம்பின் கண்ணே அறிவு மதுவின் கண் களிப்புப்போல வெளிப் பட்டழியும் என்றும் மறுமை இல்லை என்றும், சரீரமே ஆன்மா என்றும், கடவுள் இல்லை என்றும், இன்பமும் பொருளுமே புருஷார்த்தங்கள் என்றும் சொல்லும் உலகாயத மதம். (பிரபோத)

"நாற்றம் இரதம் உருவம் நற்பரிச மாகும்
போற்றுமிவை நித்த இயல்பாமிவை புணர்ப்பே
ஒத்துறு புணர்ச்சியின் உருக்கள் பல ஆகும்
வைத்துறு கடாதிபல மண்ணின்வரு மாபோல்
புத்தி குணம் நற்பொறி புலன்களிவை எல்லாம் (தொ ப. 315,

நரி கழு அதுகள் - நரி கழுகு ஆகிய அவை மகிழ்ச்சியுற, (சோரிகள்) - ரத்தங்கள் - போர்க்களம் முழுமையும் நிறைந்து, (கூளிகள்) பேய்கள் நடனமிட, அசுரர் குலத்துக்கு ஓர் யமன் போலாகி-

(நனி) மிகவும் கடல் கதறவும், மலை (கிரவுஞ்சம் எழுகிரி) பொடியாகவும், (நணுகிய) அண்டிச்சரண் புகுந்த தேவர்களுக்குச் (சீர்) செல்வம் - நல் வாழ்வு வரவும், (நணு கலர்) பகைவர்கள் இறந்துபட அவர்களை அழித்துக் கீர்த்தி பெற்ற பெருமாளே!

(களைத்துப் பூமியில் உழல்வேனோ)

# 1139.

விளங்குகின்ற வேலாயுதமோ சேல்மீனோ!, பிரகாசிக்கும் வாளாயுதமோ (தாமரை) மலரோ! எமன் அனுப்பியுள்ள தூதோ! மானோ! விஷந்தானோ இது

என்றெல்லாம் (தங்கள்) கண்களைக் கூறும்படி வருகின்ற மாதர்களின் தோள்களில் ஈடுபட்டுத் திளைத்து, சற்றில் மனம் வேறுபட்டு, மாறுபட்ட எண்ணத்தால் -

பலபல (கோளாய்) இடையூறுகள் - தீமைகள் உண்டாக, மோகத்துடன் அலைச்சல் உறுவதே (என்) அநுபவமானால், வீணான வஞ்சனைச் சொற்களைப் பேசி, (யாருக்கும்) ஆகாத லோகாயதனாகி

பரிவுடன் நாடாய் வீடாய் - நாட்டிலும் வீட்டிலும் (பரிவு) - ஆசை கொண்டவனாகி, அடியேன் ஈடேறாமல், (பணிதியில்) செல்வச் செருக்கில் மூழ்கி மாய்ந்து விடுவேனோ (இறந்து) படுவேனோ‡

அலை வீசும் கடலில் கோ கோ கோ கோ என்று (உரை கூற) கூச்சலிட்டு ஓடும் அசுரர்களை "வாடா போடா" என்று அறை கூறிப் (போருக்கு) அழைப்பதாகி -

---

இத்தின் வரும் நீரினில் எழுங் குமிழி ஒத்தே
பூதமதில் ஒன்று பிரியப் புலன் இறக்கும்"

- சித்தியார். பரபக்கம். 1-1-14-16

"உலகாயத மேலிடவே"- திருப்புகழ். 834

‡ கோ - இரங்கற் குறிப்பு - (கூடா) - பாடல் 940 அடி 7, பாடல் 826 அடி 6 ; பாடல் 154 அடி 7; பாடல் 171 அடி 6.

பூத வேதாள வகுப்பு - "வாரி கோ கோ என வாய் விட"

X சூரனை வெருட்டுதல் - பாடல் 118 அடி 6 பார்க்க.

அழகிய வேலால் வாளால் நிலவிய *சீரா வாலே
யவருடல் வாணா ளீரா எதிராகி;
†மலைமிகு தோளா போதா அழகிய‡வாலா பாலா
மகபதி வாழ்வே சேயே மயில்வீரா
மறைதொழு கோவே தேவேXநறை செறி பூவே நீரே
வளவிய வேளே O மேலோர் பெருமாளே (145)

## 1140. முத்தி பெற

தனதன தனதத்த தனனா தனனா
தனதன தனதத்த தனனா தனனா
தனதன தனதத்த தனனா தனனா தனதான

உமையெனு **மயில்பெற்ற மயில்வா கனனே
வனிதைய ரறுவர்க்கு மொருபா லகனே
உளமுரு கியபத்த ருறவே மறவே னெனவோதி-
உருகுத லொருசற்று மறியேன் வறியேன்
இருவினை யிடை யிட்ட கொடியே னடியேன்
உணர்வலி பெறமுத்தி யுருவாய் துகிர்வாய்
மடமாதர்;

---

* சீராவாலே உடல் ஈரா - என்றதனாலும் சீரா என்பது வாள் எனப் பொருள்படும் என்பது தெளிவாம் - பாடல் 1132 அடி 8 பார்க்க.

† மலைமிகு தோள் - "வரைப்புயன்"- திருக்கையில் வழக்க வகுப்பு.

‡ வாலா - பாலாம்பிகை - பாடல் 1136 அடி 6

X நறை செறி பூவே நீரே - "வாச மலரெலாம் ஆனாய் நீயே"
"நீரானே" - அப்பர். 6-38-1. சம்பந்தர். 2-15-1

O மேலோர் பெருமானே - "மேலோர்க்கு மேலோர்க்கும் மேலாய் போற்றி" - அப்பர். 6-32-8

** மயில் பெற்ற மயில் வாகனனே - சொல்லழகு -
"குலகிரி தரும் அபிராம மயூரம்"- திருப்புகழ். 1153
மேலும் மயிலாப்பூரிலும் மாயூரத்திலும் உமாதேவி மயில் உருவுடன் சிவபிரானைப் பூசித்தது இங்கு நினைவுறற் பாலது -
"புன்னையங் கானல் மடமயிலைக் கட்டிட்டங் கொண்டான் கபாலீச்சரம் அமர்ந்தான்"- சம்பந்தர். 2-47-1 (தொ. பக். 317)

அழகிய வேலாலும் வாளாலும், (நிலவிய) ஒளிவிடுகின்ற (சீராவாலே) உடை வாளாலும் (அவர் உடல்) அந்த அசுரர்களுடைய உடலையும் வாழ் நாளையும் (ஈரா) ஈர்ந்து எதிராகி எதிர்த்துப் பிளந்தறுத்து -

மலைபோல மிக்கெழுந்து விளங்கும் தோளனே! (போதா) ஞான சொரூபனே! அழகிய (வாலா) பாலாம்பிகையின் (பாலா) குழந்தையே! இந்திரனுடைய செல்வமே! சேயே! மயில் வீரா!

வேதங்கள் தொழுகின்ற நாயகனே! தேவனே! நறுமணம் வீசும் மலரே! (நீரே) (உயிர்களுக்கு ஆதாரமான) தண்ணீரே! செழுமை வாய்ந்த (செவ்) வேளே! (மேலோர்) தேவர்களின் (அல்லது பெரியோர்களின்) பெருமாளே!

(பணிதியில் மாயா விடுவேனோ)

## 1140.

உமா தேவி என்கின்ற மயில் பெற்ற மயில் வாகன மூர்த்தியே!a(கார்த்திகை) மாதர் ஆறு பேருக்கும் ஒப்பற்ற ஒரு குழந்தையே! உள்ளம் உருகுகின்ற பக்தர்களின் (உறவே) நட்பாளனே! சுற்றமே! உன்னை நான் மறக்க மாட்டேன் என்று உன்னைப் போற்றி செய்து

மனம் உருகுதல் என்பதே ஒரு சிறிதும் அறியாதவன் நான், தரித்திரம் பிடித்தவன் நான், நல்வினை தீவினை - என்னும் இரண்டு வினைகளின் இடையே சிக்கிக் கொண்டிருக்கும் கொடியவன் அடியவன் நான், (உணர்விலி) அறிவு இல்லாதவன் நான் - அத்தகைய நான் - பெற்று உய்ய முத்தியைத் தந்தருளுக; பவளம்போன்ற வாயை உடைய இளம் பெண்களின் -

---

"கன்னியும் நின்று நின்றன் கழல்தனக் கன்பு வேண்டும்
மன்னிய மயிலாப் பூசை வருத்தலால் மயிலை யென்றே
துன்னுமித் தலத்தை மேலோர் சொற்றிட வேண்டும்; எம்மை
முன்னினோ ரெல்லாம் ஏத்தும் முத்தியை அடைதல்
வேண்டும்"- மயிலைப்புராணம். பார்வதி அர்ச்சனை. 66
"இமயச் செல்வி மஞ்ஞையாய் வழிபட்டேத்தும் இது
துலாப் பொன்னித் தானம்"
(துலாப் பொன்னித் தானம் = ஐப்பசி மாதத்தில் காவேரி
ஸ்நான ஸ்தலம் - மாயூரம்) - திருவிளை. அருச்சனை. 19
a கிர்த்திகையர் அறுவரும் எடுக்க.. ஓர் புத்ரன் -
- வேடிச்சி வகுப்பு

அமையென வளர்சித்ர இருதோள் தழுவா
அமுதென மதுரித்த கனிவா யனுகா
அமளியி லணைவுற்ற அநுரா கமகோ ததிமூழ்கி
அநவர தமுமுற்ற மணிமா முலைதோய்
கலவியி னலமற்ப சுகமா கினு*மா
அநுபவ மிதுஃற்றும் விடவோ இயலா தியலாதே;
தமனிய குலசக்ர கிரியோ கடலோ
விடமென முடிவைத்த முதுபே ரிருளோ
தனுவென முனையிட்ட கொலைமு விலைவேல்
கொடுபார்வை
தழலெழ வருமுக்ர எமபா தகனோ
யுகஇறு தியில்மிக்க வடவா னலமோ
தனியிவ னெனமிக்க பிசிதா சனபூ பதியாகி;
இமையவ ரனைவர்க்கும் †அறையோ அறையோ
அரியயன் முழுதுக்கும் அறையோ அறையோ
எழுபுவி யுலகுக்கும் அறையோ அறையோ
பொரவாரும்

---

* மா அநுபவம் - விட இயலாது பெண்ணாசையை
வெல்வது மிகு அரிது என்க.

"தொடிக்கை மட வாரிடத்துக் காமத்தை விழையாத
கருத்தினர் ஆர்?"

"அறிவு பொத்திய மெய் புளத்தினரும் பொறியைந்தும்
நிலை கலங்கப் பித்தின ராகுவர்"- விநாயகபுர நகரம். 72.75;
"துறந்தவர்க்கும், உடல் முழுதும் தோல் திரைந்த முதுமை யர்க்கும்,
அறந்தலை நின்றாக்குநர்க்கும், அழிபிணியில் உழக்குநர்க்கும்,
சிறந்த பரத்தையர் கலவி செய்யாமை உறுமேனும்
மறந்தழையும் ;வர் விழிக்கு வாடாத மனமில்லை ௸ 82
"முனிவர்கள் மனவலி கரைய" "ஒரு பொழுதும் விடவரிது எனும்
அநுபவம்" - திருப்புகழ் 921

† அறையோ அறையோ - அறை கூவுதல் - போருக்கு அழைத்தல் - "அரு முனையான் அறை கூவினபின் செரு முனை மேல் வாள் சென்றன்று" - புறப் வெண்பா. 67

வலிய அழைத்தல் - "அங்கணன் அந்தணனாய் அறைகூவி வீட்டருளும்"- திருவாசகம். 8-1

(அமை என) மூங்கில் போன்று செழித்து வளர்ந்துள்ள (சித்ர) அழகிய இரண்டு புயங்களையும் தழுவி அமுது என்று சொல்லும்படிக்கு இனிப்பைக் கொண்டதும், (கொவ்வைக்) கனி போன்றதுமான வாயை நெருங்கி அனுபவித்து, (அமளியில்) படுக்கையில் சேர்ந்து (களிக்கும்) காம இச்சை என்ற பெருங் கடலில் முழுகி -

(அனவரதமும்) எப்போதும் பொருந்தியுள்ள ரத்ன மணி மாலையை அணிந்துள்ள அழகிய கொங்கைகளிற் படியும் (கலவியின்) புணர்ச்சியின் (நலம்) இன்பம் (அற்ப சுகமாகினும்) (அற்ப சுகம்) நீடித்திராது கொஞ்ச நேரமே சுகம் தருவதா யிருந்த போதினும் - (அது) மா அனுபவம் - பெரிதும் இயற்கையாகவே விரும்பப்படும் ஒரு நுகர்ச்சி யின்பமாம்; இதைச் (சற்றும்) கொஞ்சம்கூட விட்டொழிக்க முடியாது, முடியாது;

தமனிய குல கிரியோ சக்ர கிரியோ - பொன் மலையாம் சிறந்த மேரு மலைதானோ! சக்ரவாள கிரியோ, (அல்லது) கடல்தானோ, (அல்லது) விஷத்தை உச்சியிற் கொண்டதும், முற்றினதுமான பெரிய இருளுருவமோ! (அல்லது) தனு என வில்லைப்போல (முனை இட்ட) போர்க்கென்றே அமைந்துள்ளதும் அல்லது வில் அம்பின் நுனிக்கூர்மை கொண்டதும், கொலைசெய்ய வல்லதுமான மூன்று இதழ்களை உடைய வேல் (சூலம் போன்றதுமான கண்களின் கொடிய பார்வை)

தழல் எழ நெருப்பைக் கக்க வருகின்ற கொடுமை காட்டும் எமன் என்ற பாதகன்தானோ! (அல்லது) யுகாந்த காலத்தில் - யுக முடிவில் மிக்கு எழுகின்ற (வடவா அனலமோ) வடவா முகாக்கினியோ! ஒப்பற்ற இவன் - என்று (யாவரும் அஞ்சும்படி) (பிசித அசனர்) (மாமிசத்தை உண்பவர்) அரக்கர்களின் (பூபதியாகி) அரசனாகி -

தேவர்கள் யாவரும் (அறையோ அறையோ) என்னுடன் போருக்கு வாருங்கள், போருக்கு வாருங்கள்; (அரி - அயன் முழுதுக்கும்) திருமால் பிரமன் முதலானோர் யாவரும் போருக்கு வாருங்கள், போருக்கு வாருங்கள்; எழு புவி எனப்பட்ட மூவேழு உலகத்தினரும் - போருக்கு வாருங்கள், போருக்கு வாருங்கள் - (பொர வாரும்) என்னுடன் சண்டை செய்ய வாருங்கள்

எனவரு மொருதுட்டன் *முறையோ முறையோ
வடகுல கிரியெட்டும் †அபிதா அபிதா
எனவொரு அயில்தொட்ட அரசே யிமையோர்
பெருமானே (146)

## 1141. மாதர் மீதுள்ள மயக்கு அற

தனத்த தத்தன தனதன தந்தத்
தனத்த தத்தன தனதன தந்தத்
தனத்த தத்தன தனதன தந்தத் தனதான

உரைத்த பற்றுட னடிகள்ப ணிந்திட்
டிருத்தி மெத்தென இளநகை யுஞ்சற்
றுமிழ்த்த டைக்கல மென எதிர் கும்பிட்
டணைமேல்வீழ்ந்-

துடுத்த பொற்றுகி லகலல்கு லுந்தொட்
டெடுத்த ணைத்திகழ் பெருகமு தந்துய்த்
துனக்கெ னக்கென வுருகிமு யங்கிட்
டுளம்வேறாய்;

அருக்கி யத்தனை யெனுமவ சம்பட்
டறுத்தொ துக்கிய நகநுதி யுந்தைத்
தறப்பி தற்றிட அமளிக லங்கித் தடுமாறி-

அணைத்து ழைத்திரு விழிகள்சி வந்திட்
டயர்த்தி தத்தொடு மொழிபவ ருந்திக்
கடுத்த கப்படு கலவியில் நொந்தெய்த்
திடலாமோ;

---

* "நாத முறையோ.. நடமாடும் பாத முறையோ... போத முறையோ புராண வேத முறையோ.. எனவிளித்து முறை யிட்டார்"- திருவிளை. மாயப்பசு. 11

† அபிதா அபிதா - அவிதா என்பது அபிதா, இது ஆபத்தில் முறையிட்டுக் கூறும் சொல்; இறைவனை நினைத்து
ஓலமிடும் ஒரு ஓலச்சொல். "நஞ்சம் அஞ்சி ஆவ எந்தாய்
என்று அவிதா இடும் நம்மவரவரே"- திருவாச. சதகம். 4
இதுபோலச் "சிவதா சிவதா"- எனவும் வரும்.
"மறலிக் கிறை நின் செஞ்சே வடியாய் சிவதா சிவதா"
- பெரியபுரா. எறிபத்த. 18

என்று கூச்சலிட்டு வருகின்றானே அந்த ஒப்பற்ற துஷ்டனாம் (சூரன்); (முறையோமுறையோ) எங்களைக் காத்தருள வேண்டும், காத்தருள வேண்டும் - என்று வடகுல கிரி எட்டும் - வடக்கில் உள்ள இமயம், மந்தரம், கைலாசம், விந்தியம், நிடதம், ஏமகூடம், நீலம், கந்த மாதனம் எனப்படும் அஷ்டகுல பர்வத வாசிகளும் (அபிதா அபிதா என) அடைக்கலம் - புரந்தருளுக, அடைக்கலம் புரந்தருளுக என்று முறையிட, (அம்முறையீட்டுக்கு இரங்கி) ஒப்பற்ற வேலாயுதத்தைச் செலுத்தின அரசே! தேவர்கள் பெருமாளே! (முத்தி தருவாய்)

## 1141.

உரைத்த - சொற்களால் வெளிப்படுத்தப் பட்ட (பற்றுடன்) ஆசையுடன், அடிகளில் (பணிந்திட்டு) வணங்கி, (இருத்தி மெத்தென பக்குவமாக இருத்தி - மெத்தென்ற அணையில் இருக்கச் செய்து, இள நகையும் சற்று உமிழ்ந்த - புன்சிரிப்பும் கொஞ்சம் வெளிக்காட்ட உனக்கு அடைக்கலம் என்று (அப்பொதுமகளை) எதிர் வணங்கிப், படுக்கையிலே அவள் மேல் வீழ்ந்து -

அணிந்துள்ள அழகிய (துகில்) ஆடை (அகல) நீங்கின அல்குலைப் பரிசித்துத் தீண்டி, எடுத்து, அணைத்து வாயிதழிற் பெருகி ஊறும் அமுதத்தைத் (துய்த்து) - அநுபவித்து உண்டு, உனக்கு எனக்கு (உனக்கு என்ன வேண்டும், எனக்கு இன்னதைக் கொடு) என்று மனம் ஒன்று பட்டுக் கலந்து பேசி, மனம் உருகி ((முயங்கிட்டு) தழுவிப் புணர்ந்து, (உளம் வேறாய்) உள்ளமே வேறுபட்டு - அறிவு கலங்கி -

அருக்கியத்தனை - அருக்கியத்து அனை - (அருக்கியத்துக்கு அனையது) தேவர்கள் - அதிதிகள் - இவர்களுக்குத் தீர்த்தத்தால் செய்யும் உபசாரத்தை நிகர்க்கும் (எனும்) என்று சொல்லும்படி அவ்வளவு மரியாதை மதிப்புடன் - அல்லது (அருக்கி அத்தனை - அத்தனை அருக்கி) அவ்வளவு அருமையினது (இவ்வின்ப நுகர்ச்சி) (எனும்) என்று சொல்லும்படி, (அவசம் பட்டு) தன்வசம் இழந்து, அழுத்து, ஒதுக்கப்பட்ட நகங்களின் (நுதியும் தைத்து) நுனியும் தைக்கக் - நக நுனியாற் கீறுபட்டு, (அறப் பிதற்றிட) மிகவும் பிதற்றலான பேச்சுக்களைப் பேச, (அமளி கலங்கி) படுக்கையும் கலைந்து போகத் - தடுமாற்றம் அடைந்து

(அணைத்து) அநுபவித்து, (உழைத்து) திளைத்து, இரண்டு கண்களும் சிவக்க - அயர்ந்து தளர்ந்து, (இதத்தொடு) இன்பகரமாக (மொழிபவர்) பேசும் (அவ்வேசையர்களின்) உந்திக்கு - வயிற்றுக்கு - உடலின்பத்துக்கு (அடுத்து) ஈடுபட்டு, அகப்படு - சிக்கிக்கொள்ளும் புணர்ச்சியினால் (மனமும் உடலும்) நொந்து (எய்த்திடலாமோ) இளைப்புறலாமோ - (கூடாது என்றபடி)

தரைக்க டற்புகு நிருதர்த லங்கச்
சளப்ப டத்தட முடிகள்பி டுங்கித்
தகர்த்தொ லித்தெழுமலையொடு துண்டப் பிறைசூடி
தனுக்கி ரித்திரி தராதி ருங்கொக்
கிளைப்ப தைத்துட லலறிட வஞ்சத்
தருக்க டக்கிய சமர்பொரு துங்கத் தனிவேலா;
*பருப்ப தப்ரிய †குறுமுனி வந்தித்
திருக்கு முத்தம நிருதர்க லங்கப்
படைப்பெ லத்தொடு பழயக்ர வுஞ்சக் கிரிசாடிப்
படர்ப்ப றைக்‡ குரு குடஞூதி ரங்குக்
குடக்கொ டிக்கிடு குமரகொ டுங்கற்
பதத்தி றுத்துகு பசியசி கண்டிப்
பெருமானே (147)

## 1142. தொழ

தனதத்தன தானன தந்தன
தனதத்தன தானன தந்தன
தனதத்தன தானன தந்தன தனதான

உலகத்தினில் மாதரு மைந்தரும்
உறுசுற்றமும் வாழ்வொடு றுங்கிளை
உயர்துக்கமு மோடுற வென்றுற வருகாலன்
உதிரத்துட னேசல மென்பொடு
உறுதிப்பட வேவள ருங்குடில்
உதிரக்கனல் மீதுற என்றனை யொழியாமுன்;

*(கல்) இடங்களில் (மலைகளில்) தனக்கு ஆசை என்ற காரணத்தாலோ முருகன் என் நெஞ்சக் கனகல்லிலும் நீங்காது வீற்றிருக்கின்றான் என வியக்கின்றார் ஒரு புலவர்;

"களி மகிழ் சிறந்து தான்வாழ் கற்களின் ஒருகல் என்றோ
அளிய என் மனத்திலுள்ளும் அகன்றிலன் இருக்கும் மன்னோ"
- சீகாளத்திப் புரா.

† "குறுமுனி தேற நெடுமறை விரித்தோய்"
- கல்லாடம். (முருகர் துதி)

"வேலிறைவன் இயம்பிய ஞானமுற் றுணர்ந்து
நன்றுலீ றன்பிற் பன்முறை தாழ்ந்து
நனிவ மொத் தலர்ந்த தாள் நீழல்
ஒன்றியாங் கடித்தொண் டுஞற்றினன் பன்னாள்"
- தணிகைப்புரா. அகத்திய. 512 (தொ.பக்கம். 323)

தரையிலும் கடலிலும் புக்கிருந்த அசுரர்கள் கலக்கமுற்றும் (சளப்பட) துன்பப்பட, (அவர்களுடைய) பெரிய முடிகளைத் தலைகளைப் பறித்து நொறுக்கி, (ஒலித்து எழு மலையோடு) கூச்சலிட்டு எழுந்த ஏழுமலை (அசுரர்)களுடன், துண்டப்பிறை சூடி துண்டமான பிறைச் சந்திரனைச் சூடியுள்ள சிவபிரானுக்கு அவர் (திரிபுரம் எரித்தபோது)

(தனுக்கிரி) வில்லாயிருந்த மேரு மலையும் சுழற்சியுற, எதிர்த்துவந்த (கொக்கினை) மாமரமாகிய சூரன் (பதைத்து உடல்) உடல் பதைப்புற்று (அலறிட) கூச்சலிட, (அவனுடைய) (வஞ்சத் தருக்கு) வஞ்ச எண்ணத்தையும் செருக்கையும் அடக்கின போரைப் புரிந்த பரிசுத்தமான ஒப்பற்ற வேலனே!

மலைகள்மீது பிரியம் கொண்டவனே! (குறுமுனி) அகத்தியர் (வந்தித்திருக்கும்) வணங்கிப் போற்றுகின்ற உத்தமனே! அசுரர்கள் கலக்கம் கொள்ள, படையின் பலத்துடன், பழையதாய் நின்ற, கிரவுஞ்ச மலையைத் தகர்த்துப் -

படர்ந்துள்ள (அல்லது துன்பத்துக்கு ஆளான) பறை - இறகுகளை உடைய (குருகு) குருகு பெயர் பெற்ற அந்த கிரவுஞ்-சனுடைய உடலில் உள்ள (உதிரம்) ரத்தத்தை, (குக்குடக் கொடிக்கு) கொடியாம் கோழிக்கு (இடு) தந்த குமர மூர்த்தியே! (கொடுங்கல் பதத்து) முரட்டுத் தன்மையுள்ள மலை இடத்தே (இருந்து உகு) தங்கிப் பறக்கும் பச்சை நிற மயில் (வாகனப்) பெருமானே!

(கலவியில் நொந்து எய்த்திடலாமோ)

## 1142.

உலகில் மனைவி முதலிய பெண்களும், புதல்வர்களும், நெருங்கின சுற்றத்தாரும், நல் வாழ்வுடன் வாழும் பிற சுற்றத் தினரும், (உயர் துக்கமு மோடு) மிக்க துக்கத்துடன், உறவு என்று உற-பந்துக்களென்று வந்து சேரும்படி - வருகின்ற காலன் எமன் -

(உதிரத்துடனே) ரத்தத்துடனே, மலம், (என்பு) - எலும்பு இவையுடன் (உறுதிப்படவே) நல்ல திடத்துடனே வளர்ந்துள்ள (குடில்) தேகம் - (உதிர) அழியக், கனல் மீதுற - நெருப்பில் அந்த உடல் சேரும்படி (என்றனை ஒழியாமுன்) என்னை இவ்வாழ்க்கையை விட்டு நீக்குதற்கு முன்பாக -

---

‡ கிரவுஞ்ச கிரி - " குருகு பெயர்க் குன்றம் கொன்ற
நெடுவேலே"- சிலப்பதி. 24

கிரவுஞ்ச கிரியில் வேல் பாய்ந்ததும் உதிரம் பெருகிற்று:-
"சீரிய கிரவுஞ் சத்திற் சேர்ந்து பட்டுருவிச் சென்று...
அங்கட் சோரியுந் துகளும் ஆடித்
துன்னொளி மீண்ட தன்றே" - கந்தபுரா. 1-20-185

*கலகக்கலை நூல்பல கொண்டெதிர்
 கதறிப்பத றாவுரை வென்றுயர்
 கயவர்க்குள னாய்வினை நெஞ்சொடு களிகூருங்-

கவலைப்புல மோடுற என்துயர்
 கழிவித்துன தாளிணை யன்பொடு
 கருதித்தொழும் வாழ்வது தந்திட நினைவாயே
இலகப்பதி னாலுல கங்களும்
 இருளைக்கடி வாளொழு †மம்புலி
 யெழில்மிக்கிட வேணியில் வந்துற எருதேறி-
இருகைத்தல ‡மான்மழு வும்புனை
 யிறை Xயப்பதி யாகிய இன்சொலன்
 இசையப்பரி வோடினி தன்றரு ளிளையோனே;

மலைபட்டிரு கூறெழ வன்கடல்
 நிலைகெட் Oடபி தாவென **அஞ்சகர்
 வலியற்றகு ரேசரு மங்கிட வடிவேலால்-
மலைவித்தகர் வானவ ரிந்திரர்
 மலர் கைக்கொடு மாதவ ருந்தொழ
 வடிவுற்றொரு தோகையில் வந்தருள்
 பெருமானே (148)

---

* சமயக்கலை ஆதிய கலைகளே அருணகிரியார்க்கு ஆகாது -
" கலையே பதறிக் கதறித் தலையூடலையே படுமா றதுவாய்"
- என்றார் அநுபூதியிலும். (32)
" கதற்று மநேகங் கலைக் கடலூடுஞ் சுழலாதே"
" கதறிய கலை கொடு" - (திருப்புகழ். 257, 1152) என வருவன காண்க.

† பிறை சூடிய வரலாறு - பாடல் 415-பக்கம் 548 குறிப்பு.
‡ மான் மழு தரித்தது - பாடல் 286-பக்கம் 210 கீழ்க்குறிப்பு † பார்க்க.
X அப்பதி - "மாபதி" - என்றார் 1144- ஆம் பாடலில்.
O அபிதா - பாடல் 1140 அடி 8 பார்க்க.
** அம் சகர் = அழகிய ஜகத்தோர். "வஞ்சக வலிவுற் றசுரேசரு மங்கிட" - என்றும் பாடம்.

(கலகக்) கலகத்துக்கு இடம் தரும் (கலை நூல் பல கொண்டு) (சமய) கலை நூல்கள் பலவற்றைக் கற்று (தருக்கித்து), எதிர் பேசிக் கதறியும், பதறியும், (உரைவென்று உயர்) பேச்சில் வல்லவனாய் வென்று, மேம்பட்டு, (சுயவர்க்கு உளனாய்) - கீழ் மக்களுக்கு உள்ள புத்தியைக் கொண்டவனாய், வினை நெஞ்சொடு - தீவினைக்கு உரிய எண்ணத்துடனே, செருக்கு மிகும் -

(கவலைப் புலமோடு) சஞ்சலம் உறும் அறிவுடனே நான் இருக்க, (நீ) என்னுடைய துக்கத்தைக் (கழிவித்து) நீக்கி, உன்னுடைய திருவடியிணையை அன்புடன்நான் தியானித்துவணங்கும் (நல்) வாழ்வைத் தந்து உதவ நினைத்தருள வேண்டுகின்றேன்

விளங்கும்படியாகப் பதினாலு உலகங்களிலும் உள்ள இருட்டினை (கடி) விலக்கி ஒழித்து, (வான் எழும் அம்புலி) ஆகாயத்தில் எழுகின்ற சந்திரன் (எழில் மிக்கிட) அழகு மிக்குப் பொலிய (வேணியில்) தனது சடா பாரத்தில் வந்து பொருந்த, இடப வாகனத்தில் ஏறி -

இரண்டு திருக்கரங்களிலும் மானும், மழுவும், விளங்கும்படி அணிந்துள்ள இறை - கடவுள், அப்பதியாகிய - அந்தத் தலைவராகியவர், இனிய சொற்களைக் கொண்டவர் - ஆகிய சிவபிரானுடைய - (இசைய) மனத்துக்குப் பொருந்தும்படி, (பரிவோடு) அன்புடனே இன்பகரமாக, (அன்று) முன்பு (அருள்) உபதேசப் பொருளை அருளிய இளையோனே!

மலைபட்டு - கிரவுஞ்சம் பிளவுபட்டு இரண்டு பிளவு உண்டாக, வலிய கடல் நிலை குலைய, (அஞ்சகர் அபிதா என) (அபிதா என) அடைக்கலம் என்று (அஞ்சகர்) அழகிய ஜகத்தோர் முறையிட தமது வலிமையை இழந்து அசுரத் தலைவர்கள் (மங்கிட) பொலிவு இழந்து நிலை குலையக், கூரிய வேலாயுதத்தால் -

மலை - மலைந்த - போர் செய்த (வித்தக) ஞானனே! (வானவர்) தேவர்களும், இந்திரர்களும், மலரைக் கைக் கொண்டு மகா தவசிகளும் (முநிவர்களும்) தொழுது நிற்க, வடிவுற்ற ஒரு - அழகு பொருந்திய ஒப்பற்ற - மயில் மீது வந்தருளும் பெருமாளே!

(தொழும் வாழ்வது தந்திட நினைவாயே)

## 1143. இறுதிநாளில் வந்து உதவ

தனதனன தனதனன தானான தானதன
தனதனன தனதனன தானான தானதன
தனதனன தனதனன தானான தானதன தந்ததான

**உ**றவின்முறை கதறியழ ஊராரு மாசைபெற
பறைதிமிலை முழவினிசை பாகாச மீதுமுற
உலகிலுள பல *ரிசி வாய்மீதி லேசொரியு
மந்தநாளில்-

உனதுமுக கருணைமல ரோராறு மாதிருகை
திரள்புயமு மெழில்பணிகொள் வார்காது நீள்விழியும்
உபயபத மிசைகுலவு சீரேறு நூபுரமும் அந்தமார்பும்,
மறையமறைய அமரர்தரு பூமாரி யேசொரிய
மதுவொழுகு † தரவில்மணி மீதே‡ மு நூலொளிர
மயிலின் மிசை யழகுபொலி X யாளாம்மு னாரடியர்
வந்துகூட-

○ மறலிபடை யமபுரமு மீதோட வேபொருது
விருதுபல முறை முறையி லேயூதி வாதுசெய்து
மதலையொரு குதலையடி **நாயேனை யாள இயல்
வந்திடாயோ;**

பிறையெயிறு முரணசுரர் பேராது பாரில்விழ
அதிர **எழு புவியுலக மீதேழு மோலமிட
பிடிகளிறு கடல்திரைகள் பாழாக வேதிசையில் நின்ற
†† நாகம்-

---

* சுடுகாட்டில் வாக்கரிசி யிடுதல்.

† தரவில் - (தரம்-அத்து-இல்) அத்துச் சாரியை தொக்கு நிற்கின்றது.

உதரவில் மணிமீதே - உதர பந்தனமாகிய ஒளியைக்கொண்ட மணி வடத்தின் மேலே (முப்புரி நூல் விளங்க) - உதரம் - வயிறு; வில் - ஒளி - எனப்பொருள் காண்பர் ஆசிரியர் திருவிளங்கனார்.

இப்பொருளில் - மது ஒழுகு பூமாரி - என இயைக்க வேண்டும்.

மது ஒழுகுதர - ஒழுகுதலைச் செய்ய; வில் மணி - ஒளி பொருந்திய மணி - எனலுமாம்.

‡ முந்நூல் ஒளிருதல் - இது "செம்பொனூல்" - பாடல் *1277* அடி *6*; பாடல் *993* அடி *3*.

X ஆள் - ஆண் சிறப்புப் பெயர்; வீரன் -
"அடுத்தூன்று நல்லாள் இலாத குடி"
"இடத்துதவும் நல்லாள் உடைய தரண்"
- திருக்குறள். *1030, 746*

(தொ.பக்கம். 327)

# 1143.

உறவு முறை - உறவு முறை கொண்ட சுற்றத்தினர் கதறி அழ, ஊரில் உள்ளவர்களும், (போய்விட்டார் - இனி என் செய்வது) என்று ஆசையற்றுக் கைவிட, பறை, (திமிலை) ஒருவகைப் பறை, (முழவு) முரசு ஆகிய வாத்தியங்களின் இசை - (ஒலி) ஆகாச முகடுவரை எழ, உலகில் உள்ள பலரும் அரிசி வாய்மேற் சொரியும் (வாக்கரிசியிடும்) அந்தக் கடைநாளில் -

உன்னுடைய கருணைத் திருமுகக்கமல மலர்களும் ஒரு ஆறும், (ஆறிருகை) பன்னிரண்டு திருக்கரங்களும், திரண்ட புயங்களும், அழகிய (பணி) (ஆபரணம்) குண்டலங்களைக் கொண்ட வரிசையான காதுகளும், நீண்ட கண்களும், (உபய பதம்) இரண்டு திருவடிகளின்மீது விளங்கும் சிறப்பு மிக்க (நூபுரமும்) சிலம்பும், அழகிய (அந்த) திருமார்பும்-

வேதங்கள் ஒலிக்க, (அமரர் தரு) கற்பக மாதிய தேவலோக விருக்ஷங்கள் பூமழை சொரிய, தேன் ஒழுகும் தன்மையில் மணி மாலையின்மேல் முந்நூல் முப்புரிநூலும் - பூணூலும் - விளங்க, மயில்மீது அழகு விளங்கும் (ஆளாய்) நம்பியாக, (முன்) என் முன்பு, (ஆர் அடியர்) நிறைந்த அடியார்கள் உடன் வந்து கூட -

யமனுடைய படைகள் (தூதராதியோர்) யமபுரத்தை நோக்கி ஓட்டம் பிடிக்கும்படி அவர்களுடன் போர்புரிந்து, வெற்றிச் சின்னங்கள் பலவும் வரிசை வரிசையாக ஊதித் தர்க்கித்து, (மதலை) குழந்தை அன்பு கொண்டவனான (ஒரு குதலை அடி நாயேனை)- ஒரு மழலைச் சொல்போலப் பேச்சுள்ள அடி நாயேன் ஆகிய என்னை ஆள்வதற்கு இவ்வாறு வந்து உதவ மாட்டாயோ!

பிறைச் சந்திரன் போன்ற (எயறு) பற்களும், (முரண் வலிமையும் கொண்ட அசுரர்கள் (பேராது வேறு இடங்களுக்கு ஓடிப்போக முடியாமல் பூமியில் மாண்டு விழ, அதிர எழு புவி - ஏழுலகத்தினரும் நடுங்க - (உலகம் ஈரேழும்) பதினாலு உலகத்தினரும் ஓலமிட அபயக் கூச்சலிட, பிடி) பெண்யானை (களிறு) ஆண்யானை இவைகளின் (அடல் நிரைகள்) வலிமை மிக்க வரிசைகள் பாழ்பட்டழிய, அஷ்டதிக்குகளில் உள்ள (பாம்புகள்)

---

○ இங்கு எமனது படையைக் குக கணங்கள் பொருது வெருட்டி ஓட்டுவதைக் கூறினார் - பாடல் 387-ல் யமனை - முருகவேள் முன்னிலையில் - தாமே பொருது வீழ்த்துவதைக் கூறினார்.

** உலகம் ஈரேழு - பாடல் 1031- பக்கம் 91 கீழ்க்குறிப்பு.

†† அஷ்ட நாகம் - பாடல் 1095 - பக்கம் 206 குறிப்பு.

பிரியநெடு மலையிடிய மாவாரி தூளியெழ
பெரியதொரு வயிறுடைய மா*காளி கூளியொடு
பிணநிணமு முணவுசெய்து பேயோடு மாடல்செய
வென்றதீரா!

† குறமறவர் கொடியடிகள் கூசாது போய்வருட
கரடிபுலி திரிகடிய வாரான கானில்மிகு
‡ குளிர்கனியி னினமரம தேயாகி நீடியுயர் குன்றுலாவி-
கொடியதொரு X முயலகனின் மீதாடு வாருடைய
வொருபுரம துறவளரு மாதாபெ றாவருள்செய்
குமரகுரு பரஅமரர் வானாடர் பேண அருள்
தம்பிரானே (149)

## 1144. வேசையர் உறவு அற

தனன தந்தன தானா தானன
தனன தந்தன தானா தானன
தனன தந்தன தானா தானன தனதான

உறவு சிங்கிகள் காமா காரிகள்
முறைம சங்கிக ளாசா வேசிகள்
உதடு கன்றிகள் நாணா வீனிகள் நகரேகை-
உடைய கொங்கையின் மீதே தூசிகள்
பிணமெ னும்படி O பேய்நீ ராகிய
உணவை யுண்டுடை சோர்கோ மாளிகள்கடல்ஞாலத்:

* காளி - கூளி - "கூளிகள் காளிகள்"- மீனாட்சி - பிள்ளைத் தமிழ். சப்பாணி 8 "கூளிகள் தொகையும், மோட்டுக் குணங்களின் தொகையும், சீற்றக் காளிகள் தொகையும், சூழ்போய்க் காப்புற நிறுவி விட்டான்"- கந்தபுரா. அசுரர் யாகம். 40

† வள்ளியின் காலை வருடியது - பாடல் 994- பக்கம் 878 கீழ்க்குறிப்பு; பாடம் 768 அடி 7; பாடல் 790 அடி 6-ம் பார்க்க.

அடிவருடுதல் - "பர ஞானம் அடைதற்குத் தீவிரதர பக்குவமா யிருந்த வள்ளி நாயகியாரைத் தடையின்று ஆட்கொண்டு" - என்பது கருத்து - என்பர் ஆசிரியர் திருவிளங்கனார்.

‡ வேங்கை மரமானது - பாடல் 287-பக்கம் 214 குறிப்பு O.

X முயலகன் மீது நடனம் - பாடல் 1099-பக்கம் 216 குறிப்பு. முயலகன் - ஆணவ மலத்தைக் குறிக்கும் -

O பேய் நீர் - ஆவேச நீர்; கள் - வேசையர் கள் உண்பது - பாடல் 603-பக்கம் 392 குறிப்பு.

இடம் விட்டு ஓட்டம் கொள்ள, நெடுமலை) மேரு ஆதிய பெரிய மலைகள் இடிபட்டுத் தூளாக, (மாவாரி) பெரிய கடல் (தூளி எழ) வற்றிப் புழுதி கிளம்ப, பெரியதான ஒரு வயிற்றை உடைய மகாகாளியானவள் (கூளியொடு) பேய்களுடன் பிணத்தின் கொழுப்பையும் மாமிசத்தையும் உண்டு, அந்தப் பேய்களுடன் கூத்தாடும் வண்ணம் (போர்) வென்ற தீரனே!

குறக்குல மலைவேடர்களின் (கொடி) பெண்ணான வள்ளியின் (அடிகள்) திருவடிகளைக் (கூசாது) கூச்சமின்றி - நாணம் கொள்ளாமல், (நீ) சென்று வருட - நீ (கால்பிடிக்க)க் கரடி, புலி, இவை திரியும் (கடிய வாரான) கடுமையான நீண்ட (கானில்) காட்டில் (மிகு) மிக்குஎழுந்த - விளங்கி எழுந்த, குளிர்ந்த (கனியின்) வேங்கையின் இளமரமதாக உரு எடுத்து நின்று, (நீடி உயர் குன்று) நீண்டு உயர்ந்திருந்த குன்று வள்ளிமலையில் (உலாவி) உலவினவனே!

பொல்லாததான ஒப்பற்ற முயலகன் என்னும் பூதத்தின்மீது நின்று நடனம் புரிகின்றவரான சிவனது (ஒருபுறம துற வளரும் மாதா) ஒருபாகத்தில் - இடது பாகத்திற் பொருந்தி விளங்கும் தாய் பார்வதி பெற்றருளிய குமரகுருபர மூர்த்தியே! அமரர் வானுளோர் (பேண) விரும்பிப் போற்ற அவர்களுக்கு அருளின - அருளும் - தம்பிரானே!

(நாயேனை ஆள இங்ஙன் வந்திடாயோ)

## 1144.

உறவு மொழி பேசும் (சிங்கிகள்) விஷமிகள், (காம ஆகாரிகள்) காமத்துக்கு இருப்பிடமானவர்கள், முறை - மாமா, அத்தான் என உறவு கூறி (மசங்கிகள் - மசக்கிகள்) மயங்கச்செய்பவர்கள், ஆசை நிறைந்த வேசிகள், உதடுகள் (நகக்குறியால்) கன்றிகள் - கருகிப் போனவர்கள் - நோவுற்றவர்கள், (நாணா) கூசுதல் இல்லாத வீணர்கள் (பயன் அற்றவர்கள்) - நகக்குறிகளைக்

கொண்ட கொங்கையின்மேல் ஆடை அணிந்தவர்கள், பிணம் என்று சொல்லும்படி (பேய் நீராகிய உணவை) பேயின் நீர்மையை பேய்த் தன்மையைத் தரும் ஆவேச நீராகிய கள் உணவை உண்டு, ஆடை நெகிழக் (கோமாளிகள்) கொண்டாட்டம் கொண்டவர் (ஆடை நெகிழும் கோணங்கிகள்) - கடலாற் சூழப் பட்ட - உலகில்-

தறவு நெஞ்சுபொ லாமா பாவிகள்
வறுமை தந்திடு பாழ்மூ தேவிகள்
*அணிநெ ருங்கிக ளாசா பாஷண மடமாதர்-
அழகு யர்ந்தபொய் மாயா ரூபிகள்
கலவி யின்பமெ னாவே சோருதல்
அலம லந்தடு மாறா தோர்கதி யருள்வாயே;
† பறவை யென்கிற கூடார் மூவரண்
முறையி டுந்தமர் வானோர் தேரரி
பகழி குன்றவி லாலே நீறெழ வொருமூவர்-
பதநி னைந்துவி டாதே தாள் பெற
அருள்பு ரிந்தபி ரானார் ‡ மாபதி
பரவு கந்தசு வாமீ கானக மதின்மேவுங்;
குறவர் தங்கள்பி ரானே மாமரம்
நெறுநெ றென்றடி வேரோ டேநிலை
X குலைய வென்றிகொள் வேலே யேவிய புயவீரா;
குயில்க ளன்றில்கள் கூகூ கூவென
மலர்கள் பொங்கிய தேன்வீழ் ○ காமிசை
குறவர் சுந்தரி யோடே கூடிய பெருமாளே (150)

---

* "அளி நெருங்கிய வாசா வார்குழல்"- என்றும் பாடம்.

† பறவை யென்கிற மூவரண் = பறக்குந் தன்மையுள்ள திரிபுரங்கள் - வரலாறு பாடல் 285-பக்கம் 206, பாடல் 510 பக்கம் 166; பாடல் 1132-பக்கம் 296; குறிப்பு; இரும்பு வெள்ளி பொன் என்னும் மும்மதில் களைக் கொண்ட புரங்கள்; இவற்றுள் -

"மண்ணில் தோய்வது முந்திய புரிசை, வான் இயங்கி
விண்ணில் தோய்வது வெள்ளியம் கொடி மதில், துறக்கம்
நண்ணித் தோய்வது பொன்எயில், ஈங்கிவை நாடி
எண்ணிச் சென்றுழி எம்மொடும் இயங்குதல் வேண்டும்"
என்று கேட்டு வரம் பெற்றிருந்தனர் திரிபுராதிகள். இப்புரங்கள்
அவர்கள் நினைத்த இடங்களுக்குப் பறந்து செல்வன.
(கோனேரி - உபதேச - திரிபுர விசயம். 18)

‡ "இறையப் பதி"- பாடல் 1142 அடி 6.

X "குலை குலைந்திட வேலே யேவிய மயில் வீரா"
- என்றும் பாடம். (தொ. பக்கம். 331)

மிகவும் உள்ளம் பொல்லாதவர்களான மகாபாவிகள், தரித்திர நிலையைச் சேர்ப்பிக்கும் பாழான மூதேவிகள், (அணி நெருங்கிகள்) ஆபாரணங்களை (நெருங்க) நிறைய அணிந்துள்ளவர்கள் (அல்லது ஆபரணம் வேண்டி அதற்காக நெருங்குபவர்கள் கிட்டுபவர்கள்)- (ஆசாபாஷணம்) ஆசைப் பேச்சுக்களைப் பேசும் இளமாதர்கள் -

அழகில் மேம்பட்டுப் பொய்யான - மாயை சம்பந்தப்பட்ட உருவத்தினர் - (ஆகிய வேசையர்களின்) புணர்ச்சி இன்பமே - வேண்டும் என்று கூறியே - நான் தளர்ச்சி அடைதல் (அலம் அலம்) போதும், போதும், (இனியான்) (இந்தவகைய) (தடுமாறாது) தடுமாற்றத்தை அடையாதபடி ஒப்பற்ற நற்கதியைத் தந்தருளுக.

பறக்குந் தன்மையுள்ள (கூடார்) பகைவர்களின் மூன்று மதில்கள் (திரிபுரங்கள்) - அவற்றின் கொடுமையைக் குறித்து முறையிட்ட (தமர்) தமக்கு வேண்டியவர்களான (வானோர்) தேவர்கள் எல்லாம் ஒரு தேராகவும் (அரி) திருமால் (பகழி) அம்பாகவும் அமைய (குன்றம்) மலையாகிய மேருவை வில்லாகவும் கொண்டு - (அந்த மூஅரண்) திரிபுரங்கள், நீறெழ - சாம்பலாகும்படியும், அதிலிருந்த ஒப்பற்ற மூவர் மாத்திரம் -

தமது திருவடித் தியானத்தை விடாதிருந்த காரணத்தால், தமது (தாள்பெற) திருவடி நிழலைப் பெறவும் அருள் பாலித்த (பிரானார் முதல்வர், மாபதி - சிறந்த தலைவர் - ஆகிய சிவபிரான் (பரவு) போற்றித் துதித்த கந்த சுவாமியே! (கானகம் அதில் மேவும்) காட்டினடையே இருந்த

குறவர்களின் (பிரானே) தலைவனே! மாமரம் நெறு நெறு என்று (முறிந்து அடிவேருடன் நிலைகுலைந் தழியும்படி வெற்றி பெறும் வேலைச் செலுத்தின திருக்கரத்தை உடைய வீரனே!

குயில்களும், அன்றில் பறவைகளும் கூகூகூ என்று ஒலி எழுப்ப, மலர்களினின்றும் பொங்கி எழுந்த (தேன்) மது (வீழ் சொட்டும்) (காமிசை) சோலையிலே (அல்லது மலர்களில் நிரம்பச்சேரும் (தேன்) வண்டுகள் (வீழ்) விரும்பும் (காமிசை) (சோலையிலே) குறவர் குலத்து அழகிய வள்ளியுடன் கூடின பெருமாளே!

(தடுமாறாதோர் கதி அருள்வாயே)

---

கோமிசை கூடியது - "கன்னி தனை ஓர் கடி காவினிற் கலந்து துன்னு கருணை செய்து தொல்லுருவங் காட்டினனே"

- கந்தபுரா. 6-24-115

## 1145. திருவடியை உணர

தானான தானன தனத்த தத்தன
தானான தானன தனத்த தத்தன
தானான தானன தனத்த தத்தன தந்ததான

ஊனோடு *வாதுயிர் தரித்து மட்டற
வூசாடு பாழ்குடி லெடுத்த திற்படி
ஓயாத மாமய லுழற்றி னிற்படு வம்பனேனை-
ஊதாரி யாய்விடு சமத்தில் நிற்பது
மாராத காதலை மனத்தில் வைப்பது
மூரோடு போயெதிர் பிணக்கி னிற்பது முந்திடாதே.
தேனூறு வாய்மொழி பரத்தை யர்க்கொரு
நாய்போல வேயவர் வசத்தில் நிற்பது
சீர்கேட தாய்விடு சிறுப்பி னைத்தன மென்றுநீபச;
† சீதாள மாமலர் தொடுத்த பத்தர்கள்
சீராடி நாண்மல ரெனப்ரி யப்படு
சீர்பாத போதக மதுக்ர கிப்பது மெந்தநாளோ;
‡ மானாக பாயலில் படுக்கை யிட்டவர்
X மாமேரு வாரியில் திரித்து விட்டவர்
O மாடோடு போய்வரு மிடைக்குலத்தவ ரன்றுவாவி-

---

* வாதுயிர் = வாத உயிர். பிராண வாயு.

† சீதாள = சீதள

‡ "நாக மெத்தையிற் றுயின்ற நாரணன்"- பாடல் 832 அடி 7

X கடல் கடைந்தபோது மத்தாக நிறுவப் பட்டது
மந்தரம். மேரு. இமயம் எனப் பேதமின்றி உரைக்கப்படும் -
இங்கு "மேரு" எனக் கூறப்பட்டுளது - பாடல் 1015
பக்கம் 54,55 கீழ்க்குறிப்பைப் பார்க்க.
'வடவரையை மத்தாக்கி" - சிலப். 17 முன்னிலைப்பரவல்.
"மேருவரை மத்தத்தில்சுற்றுங் கயிறு வாசுகி"
- சிலப். 17-பாட்டு - உரை.
" இமிழ் திரை முற்றத்து மேருமத் தார்த்து"
மீனாட்சிப்பிள்ளை. 4
" வாசுகி வளைய மேருவில்"- தக்க யாகப். 30 உரை.
விசேடக் குறிப்பு
O மாடுடன் செலும் இடைக்குலத்தவர் - (தொ.பக். 333)

## 1145.

ஊன் உடலுடன் (வாத உயிர்) பிராணவாயுவைத் தரிப்பதாகி, (மட்டற) குறைவின்றி - நிரம்ப - ஊசாடு - ஊசலாடுகின்ற கூத்தாடுகின்ற - அல்லது ஊசாடு - ஊசுதல் ஆடு - அழுகிப் போன தன்மையை உடைய பாழான இந்தக் (குடில்) குடிசை - உடலை எடுத்து, அதில் - அந்த உடலில் இருந்தபடியே, (படி) இப்பூமியில் (ஓயாத) ஓய்விலாத - நீங்குதலில்லாத மாமயல் உழற்றினில் நிறைந்த (மயல்) காம இச்சை என்கின்ற (உழற்றினில்)- சுழற்சியிற் (படு) அகப்பட்டுள்ள (வம்பனேனை) துஷ்டனாகிய எனக்கு -

(ஊதாரியாய் விடு) வீண்செலவு செய்வதில் சாமர்த்தியத்துடன் இருப்பதும், (ஆராத காதலை) - தெவிட்டாத - ஆசை அடங்காத காமத்தை மனத்தில் வைத்திருப்பதும், ஊரார்களுடன் (எதிர்போய்) எதிர்த்துப் (பிணக்கில் நிற்பதும்) மாறுபாட்டுடன் ஊடி நிற்பதும் - ஆகிய இக்குணங்கள் (முந்திடாதே) மேம்பட்டு என்னை அழுத்தாமல் - (அல்லது) உந்திடாதே என்னை தள்ளிச்செலுத்தாமல் -

தேன் - இனிமை ஊறுகின்ற வாய்ப்பேச்சை உடைய வேசையர்பால் நான் ஒரு நாய் போல அவர் வசப்பட்டு நிற்பது சீர்கேடான ஒழுங்கீனத்திற் கொண்டு விடும் சிறுப்பிள்ளைத் தனமாம் என்று அறியாமையாம் என்று மூடத்தனமாமென்று உணர்த்திக், கடம்பின் -

சீதற் - குளிர்ந்த நல்ல மலர் கொண்டு மாலை தொடுக்கும் பக்தர்கள் (சீராடி) போற்றித் துதித்து, (நாள்மலர் என) அன்று மலர்ந்த மலர் என்று பாராட்டிப் பிரியப்படும் உனது திருவடியை உணரும் (போதகம்) ஞானோபதேசத்தை எனக்கு நீ அருள் செய்வது எந்த நாளோ! அநுக்கிரகிக்கும் நாள் எனக்கு என்று கிடைக்கும்!

மால்நாக பாயலில் - பெரிய பாம்பாகிய ஆதிசேடனாகிய படுக்கையிற் படுக்கை கொண்டவர், மகாமேரு மலையை (மத்தாகும்படி) கடல்கடைந்த போது) கடலில் (திரித்துவிட்டவர்) - சுழல விட்டவர், மாடுகளுடன் மேய்க்கப் போய்வரும் இடையர் குலத்தவர், அன்றொரு நாள் வாவிவாய் - மடு இடத்தே - மடுவில் -

---

"கூட்டிக் கன்று மேய்த்திட்டவர்" - திருப்புகழ். 373

"ஆயர் குலத்தினில் வந்து தோன்றிய அஞ்சன வண்ணன்" - பெரியாழ்வார். 1-7-11

"மாட்டுக் கோன் தங்கை மதுரை விட்டுத் தில்லைநகர் ஆட்டுக் கோனுக்குப் பெண் டாயினாள்"- காளமேகம்.

வாய்நாக மோலிட பிடித்த சக்கிர
வாளேவி யே*கர விளைத்த நித்தவர்
மாமாய னாயுல களித்த வித்தகர் தங்கைவாழ்வே;
கானாரு மாமலை தினைப்பு னத்தினில்
கால்மேல்வி ழாவொரு குறச்சி ருக்கியை
கானாறு போயியல் புணர்ச்சி யிட்டருள் கந்தவேளே-
† காரேழு மாமலை யிடித்து ருக்கெட
காராழி யேழவை கலக்கி விட்டுயர்
காவான நாடர்கள் பகைச்‡ச வட்டிய
தம்பிரானே (151)

## 1146. ஆணவம் கெட அருளுக

தத்தன தனதன தானா தனதன
தத்தன தனதன தானா தனதன
தத்தன தனதன தானா தனதன தனதான

Xஎட்டுட னொருதொளை வாயா யதுபசு
O மட்கல மிருவினை தோயா மிகுபிணி
**யிட்டிடை செயவொரு போதா கிலுமுயிர்
நிலையாக-
எப்படி யுயர்கதி நாமே றுவதென
எட்பகி ரினுமிது வோரார் தமதம
திச்சையி னிடருறு பேரா சைகொள்கட
லதிலேவீழ்;
முட்டர்க ளெறியினில் வீழா தடலொடு
†† முப்பதி னறுபதின் மேலா மறுவரு
முற்றுத லறிவரு ஞானோ தயவொளி வெளியாக-

---

* முதலையை விட்டது - யானையைப் புரந்தது - பாடல் 939 பக்கம் 731 கீழ்க்குறிப்பு.

† எழுகிரியை அட்டது - பாடல் 257-பக்கம் 140 குறிப்பு.

‡ சவட்டுதல் - அழித்தல் - "பந்தித் தடர்க்கும் மலம் சவட்டிப் பரமானந்தம் எனக்களித்தான்" - தணிகைப்பதிற்றுப்பத்தந்தாதி.

X "ஒன்பது வாய்த் தோற்பை"- பட்டினத். வெண்பா. 17
"ஒன்பது வாய்தலார் குரம்பை" - சம்பந்தர். 2-79-8

O "மட்குலப் பதார்த்தும்"- என்றார் 651-ஆம் பாடலில்.

** இட்டிடை = தடை.

†† 96 தத்துவங்கள் கடந்த நிலை - பாடல் 739 அடி 1-4 பார்க்க.

நாகம் ஓலிட - கஜேந்திரன் என்னும் யானை கூச்சலிட - ஓல மிட்டு அழைக்க - (பிடித்து) தன்கையிற் பிடித்திருந்த சக்கிரவாள் சுதர்சனம் என்கின்ற சக்ரமாம் (வாள்) ஈர்வாளை - ஏவியே செலுத்தி, கரவினை முதலையைத் (தறித்தவர் பிளந்தவர், மகா மாயையில் வல்லவனாய் உலகங்களைக் காத்தளிக்கும் பேரறி வாளர் - ஆகிய திருமாலின் தங்கை பார்வதியின் வாழ்வே!

காடுகள் (ஆரும்) நிறைந்த (மலை) வள்ளிமலைத் தினைப்புனத்தில் (காலின்மேலே விழுந்து ஒப்பற்ற குறப்பெண் - வள்ளியிடம், (காணாதுபோய்) வேடர்கள் யாவருக்கும் தெரியாத வகையிற் சென்று, (இயல்) உழுவலன்புடன் (புணர்ச்சி யிட்டருள்) அவளைப் புணர்ந்த - மணம் செய்து அருளிய கந்தவேளே!

மேகங்கள் தங்கும் (அல்லது கரிய) ஏழு மா மலை-சிறந்த ஏழு மலைகளைச் (சூரனுக்கு அரணாயிருந்த ஏழுகிரிகளைப் பொடி செய்து அதன் உருவம் அழிய வைத்தும், (காராழி) கரிய கடல் ஏழையும் கலக்கி விட்டும், மேலான (காவான) (கற்பகச்) சோலைஉள்ள நாடர்கள் - தேவர்களின் - (பகை) -பகைவர்களான - அசுரர்களைச் (சவட்டிய) அழித்தொழித்த தம்பிரானே! (அநுக்ரகிப்பதும் எந்தநாளோ)

## 1146.

எட்டுடன் ஒரு தொளை வாயாயது (8+1) ஒன்பது தொளை வாயில்களை உடையது, (பசு மட்கலம்) பச்சை மண்ணாலாய பாத்திரம், ஆய இந்த உடல் நல்வினை - தீவினை என்னும் இரு வினைகளிலும் (தோயா) தோய்ந்து, (மிகுபிணி ஒரு போதாகிலும் உயிர் நிலையாக இட்டிடை செய) - மிக்குவரும் பிணிகள் ஒரு பொழுதிலேனும் (இந்த உடலில்) உயிர் நிலைத்திருப்பதற்குத் தடைகள் செய்ய, (எப்போதும் நிலைத்திராதபடி செய்ய)-

எப்படி (உயர்கதி) மேலான நற்கதியை நாம் (ஏறுவதென) கரை ஏறி அடைவதென (எள் பகிரினும்) எள் (பகிர்ந்து) பிளவு பட்ட அளவு கூட (இது ஓரார்) இதன் உண்மையை அறியாதவர்களாய்த், தமதமது - தங்கள் தங்களுடைய (இச்சையின்) ஆசை போன வழியே (இடர் உறு) துன்பத்தைத் தருகின்ற பேராசை என்கின்ற கடலிலே வீழ்கின்ற

(முட்டர்கள்) மூடர்களின் (நெறியினில்) - வழியில் (நான்) விழாமல், வலிமை கொண்டதாய் ((முப்பதின் அறுபதின் மேலாம் அறுவரும்)- (30 + 60 + அதன்மேல் 6) ஆக 96 தத்துவங்களை (முற்றுதல் அறிவரு) முற்றிக் கடந்த அறிவுக்கும் அருமையான (எட்டாததான) (ஞானோதய ஒளி) ஞானம் உதயமாகும்படியான (ஒளி) விளக்கமானது வெளிப்பட்டு விளங்கச்

முக்குண ¸ மதுகெட *நானா வெனவரு
முத்திரை யழிதர ஆரா வமுதன
முத்தமிழ் தெரிகனி வாயா வருளுவ
தொருநாளே;
திட்டென எதிர்வரு †மாகா ளியினோடு
திக்கிட தரிகிட தீதோ மெனவொரு
சித்திர வெகுவித வாதா டியபத மலராளன்.

---

*நானா எனவரு முத்திரை -"நான்" என்பது ஜீவபோதம். இது முனைந்து நிற்கும்போது சிவபோதம் மறையும். சிவபோதம் முனைந்து நிற்கையில் ஜீவபோதம் ஒழியும்.

1. "நானான தன்மை நழுவியே எவ்வுயிர்க்கும்
தானான உண்மைதனைச் சாருநாள் எந்நாளோ"
2. 'நான் நான் இங்கெனும் அகந்தை எனக்கேன் வைத்தாய்'
3. "நான் நான் எனக் குளறும் நாட்டம்"
4. "நான் தலை நானை என்னும் தான் என்றொரு முதல்
பூரணமாகத் தலைப்பட்டு, ஒப்பில் ஆனந்தம் தந்து,
என் அறிவை எல்லாம் உண்டு, அவசம் நல்கி,
மோனந் தனை விளைத்தாள் இனியாது மொழிகுவதே"
5. நான் என்னும் ஓர் அகந்தை எவர்க்கும் வந்து
நலிந்தவுடன் சகமாயை நானாவாகித்
தான்வந்து தொடரு மித்தால் வளரும் துன்பச்
சாகரத்தின் பெருமை எவர் சாற்ற வல்லார்.
6. "நான்றானெனு மயக்கம்" - "நான் நான் எனக் குளறு
படை புடை பெயர்த்திடவும்" - என்றெல்லாம்

தாயுமானவர் "நான்" என்பதன் தன்மையை எடுத்து ஓதி உள்ளார் (எந்நாள் பொருள் -7; பன்மாலை 5: பராபரம் 256; பாயப்புலி 14, ஆகார 15; உடல்பொய் 81; மௌன. 5)

" நான் எனும் மட ஆண்மை"- என்றார் 930-ஆம்
திருப்புகழில் - பக்கம் 708 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

"ஒன்ப தாமவை தீத்தொழி லின்னுரை
ஒன்ப தொத்துநின் றென்னுள் ஒடுங்குமே"- அப்பர். 5-89-9

"என் பேச்சுக்கள் முதலிய எல்லாம் எவ்வளவு விரிந்து சூழினும் முடிவில்" - நான், என்ற அகங்கார நிலையினவாய் வந்து என்னையே சுற்றி என்னகத் தடங்கும்; அது "ஒன்பது" என்னும் எண்ணினைப்போல; இஃதெவ்வா றெனின், ஒன்பதை எதனால் எத்தனை பெருக்கினும், பெருக்கி வந்த எண்ணில் உள்ள இலக்கங்களைக் கூட்டினால் ஒன்பதே வருவது போல. 9 x 2 = 18 =

சத்துவம், இராசதம், தாமதம் என்ற மூவகைக் குணங்களும் அழிய, (நானா எனவரு) நானா நானா என்று முளைக்கின்ற - நான் நான் என எழுகின்ற ஆணவ உணர்ச்சியாம் அந்த அடையாள முத்திரையானது அழிந்து ஒழிய, (ஆரா அமுது அன்ன) தெவிட்டாத அமிர்தம் போன்ற முத்தமிழைத் (தெரி) தெரிந்து போதிக்க வல்ல (கனி வாயால்) (உன்னுடைய) இனிய வாக்கினால் உபதேசித் தருளும் ஒருநாள் (எனக்குத்) கிடைக்குமா!

திட்டென - திடீரென்று (வாதித்து) எதிர்த்து நின்ற மகாகாளியுடன் (திக்கிட தரிகிட தீதோம்) என்று ஒப்பற்ற, விசித்திரமான, பலவகையதான, (வாது ஆடிய) தருக்கித்து ஆடினதான கூத்துக்களை நடித்த திருவடி மலர்களைக் கொண்ட பெருமான்-

---

1 + 8 = 9 , . 9 x 9 = 81 = 8 + 1 = 9 , ... 9 x 144 = 1296 = 1 + 2 + 9 + 6 = 18 = 1 + 8 = 9 என்றிவ்வாறு கண்டு கொள்க - பெரிய புராண விரிவுரை (சிவக்கவி மணி C. K. S. அவர்கள்) - திருநாவுக்கரசு புராணம் பக்கம் 663, 664.

முத்திரை - என்பது ஆங்கிலத்தில் Seal எனப்படுவது. இது இன்னாருடைய உண்மை அடையாளம் என்பதைக் குறிக்கும். இலாஞ்சனை, இலச்சினை, குறி எனப்படும் - 'முத்திரை யாமோனம்' - 1115- ஆம் பாடல். முத்திரை யிட்ட அரசாங்க உத்திரவு போல -"நான்" என்னும் ஆணவ முத்திரையிடப் பட்டே இவ்வுலகிற் பிறந்து வளர்கின்றோம்.

"ஆணவத்தோ டத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோ டத்துவிதஞ் சாருநாள் எந்நாளோ"

- தாயுமானவர். நிற்கு நிலை. 28

இந்த முத்திரை அழிதர வேண்டும்; அது இறைவன் திருவருள் கூடினால்தான் அழியும் -"அவன் கால்பட் டழிந்ததிங் கென்தலை மேலயன் கையெழுத்தே"- என்பதுபோல - கந். அலங். 40

† காளியுடன் நடம் -

" காளி கதம் ஓவ நின்று நடமாடி"

" காளியைக் குணஞ்செய் கூத்துடையோன்"

- சம்பந்தர். 2-32-5; 3-119-1

செப்புக வெனமுன மோதா துணர்வது
சிற்சுக பரவெளி யீதே யென அவர்
* தெக்ஷிண செவிதனி லேபோ தனையருள் குருநாதா;
மட்டற அமர்பொரு சூரா திபனுடல்
† பொட்டெழ முடுகிவை வேலா லெறிதரு
மற்புய மரகத மாதோ கையில்நட மிடுவோனே
வச்சிர கரதர வானோ ரதிபதி
பொற்புறு கரிபரி தேரோ டழகுற
வைத்திடு மருமக னேவா ழமரர்கள்
பெருமாளே (152)

## 1147. வேசையர் மீதுள மயக்கு அற

தத்த தனதனன தான தானதன
தத்த தனதனன தான தானதன
தத்த தனதனன தான தானதன தனதன

‡ எத்தி யிருகுழையை மோதி மீனமதின்
முட்டி யிடறியம தூதர் போலX முகி
லெட்டி வயவர்கர வாளை வேல்முனையை யெதிர்சீறி
எத்தி சையினுமொரு காம ராஜன்மிக
வெற்றி யரசுதனை யாள வீசியட
வெற்றி யிளைஞருயிர் கோலு நீலவிழி மடமாதர்,

---

* தெக்ஷிண செவி = வலக் காது.

சிவனுக்கு உபதேசித்தது - பாடல் 327 -பக்கம் 314 குறிப்பு

உபதேசம் பெறுபவர் கிழக்குநோக்கி இருக்க உபதேசிப்பவர் வடக்கு நோக்குவர். அப்போது உபதேசம் பெறுபவருடைய வலது காதில் உபதேசம் செய்யப்படும். அந்த வலது காது தெக்ஷணம் (தெற்குப் பக்கம்) இருக்குமாதலின் "தெக்ஷிண செவிதனில்" போதனை என்றார் - "அரியணை மீதில் தன்மகவான அறுமுகன் தனையினி திருத்திப், பரசிவன் தாழ்ந்து வலச்செவி கொடுப்பப் பரிந்துப தேசமே புரிந்தான்" - தணிகாசல புரா 171

† பொட்டு எழ - பொட்டு - தொளை - "சாடு குன்றது பொட்டெழ", "சூர் பொட்டாக"- திருப்புகழ். 105, 1119

‡ எத்துதல் - வீசித் தள்ளுதல் - "முத்துமா மணிகளும் முழுமலர்த் திரள்களும் எத்துமா முகலி"- சம்பந்தர். 3-36-8

X முகில் - கருநிறத்துக்கு உவமை - "கருநிறஞ் சிறந் தகல்வன புகல்வன"- திருப்புகழ். 552

(செப்புக என) உபதேச மொழியைச் சொல்வாயாக என்று கேட்க, (முனம்) முன்பு - ஓதாமலே உணர வேண்டியதும், (சிற் சுகம்) ஞானானந்தமானதும், (பரவெளி) மேலான ஞானாகாச மானதுமான பொருள் இதுதான் என்று அவருடைய (தெக்ஷிண செவிதனில்) வலது காதிலே (போதனை அருள்) உபதேசப் பொருளை அறிவித் தருளிய குரு நாதனே!

மட்டற - குறைவற்ற வழியில் - மிகப் பல வழியில் - சண்டை செய்த சூரனாம் தலைவனுடைய உடலானது (பொட்டெழ) பொடி பட்டு அழிய, (அவனை) வேகமாய் எதிர்த்து (வை வேலால்) கூரிய வேல்கொண்டு எறிந்த, வனப்பம் பொருந்திய புயங்களைக் கொண்டவனே! (மரகத) பச்சை நிறம் கொண்ட அழகிய மயில்மீது நடனம் செய்பவனே!

வச்சிராயுதத்தைக் (குலிசாயுதத்தைக்) கையிற் கொண்ட தேவர் தலைவனாம் இந்திரன் - அவனுடைய (பொற் புறு) அழகு கொண்ட கரி - ஐராவதம் என்னும் வெள்ளை யானை, (பரி) உச்சைச் சிரவம் என்னும் குதிரை, தேர் முதலியவற்றுடன் அழகு பெற்று விளங்கும்படி அவனை வாழவைத்த மருமகனே! வாழ்ந்து விளங்கும் தேவர்களின் பெருமாளே!

(அருளுவ தொருநாளே)

## 1147.

எத்தி இரு குழையை - இரண்டு குழைகளையும் (எத்தி) வீசி எறிதல் போலத் தாக்கி, மோதி, (மீனம் அதில்) மீன்போன்று சென்று முட்டித்தாக்கி, யமதூதர் போல (முகில்) மேகத்தின் கருநிறத்துடன் (எட்டி) எட்டித்தாவி, (வயவர்) போர் வீரர்களின் கையில் உள்ள வாளையும் வேல் முனையையும் எதிர்த்துச் சீறுவது போலக் கூர்மை கொண்டதாய்

எல்லாத் திசைகளிலும் (நாலா பக்கத்திலும்) ஒப்பற்ற மன்மத ராஜன் மிகவும் தனது ஜய அரசாட்சியை எங்கும் ஆளவிட்டது போலப் பரந்து, (அடல்) தனது வலிமையை (எற்றி) செலுத்தி, இளைஞர்களுடைய உயிரைக் (கோலும்) வளைத்து இழுக்கும் (நீலவிழி) கரிய கண்ணை உடைய அழகிய மாதர்களின் -

வித்தை தனிலுருகி யாசை யாகியவர்
*கைக்குள் மருவுபொரு ளான ஆகும்வரை
மெத்தை தனிலுருகி மோக மாகிவிட
அதன்மேலே-

வெட்க மிலைநடவு மேகு மேகுமினி
†மற்ற வரையழையு மாத ரேயெனமுன்
விட்ட படிறிகன்றும் நேச ஆசைகெட
அருள்வாயே;

ஒத்த வரிகமுகு வாளை தாவுபுனல்
‡ அத்தி நகரமர சான வான்நிருபன்
X ஒக்கு நினைவுமுனி லாமல் வாகுபெல நிலைகூற-
உற்ற தருமனடல் வீமன் வேல்விசையன்
வெற்றி நகுலசக தேவர் தேர் தனிலும்
ஒத்து முடுகிவிடு பாகன் வானமரி
லசுரேசன்,

---

* கைப்பொருள் உள்ள வரையில்தான் வேசையர் அன்பு செய்வார்-
"விளக்கொளியும் வேசையர் நட்பும் இரண்டும்
துளக்கற நாடின் வேறல்ல - விளக்கொளியும்
நெய்யற்ற கண்ணே யறுமே அவரன்பும்
கையற்ற கண்ணே அறும்"- நாலடி. 38-1.

† வேசையர் வீட்டிற் பணிப்பெண்கள் இருப்பது - பாடல் 1079-பக்கம் 180 கீழ்க்குறிப்பு.

‡ அத்தி நகரம் = அஸ்தினாபுரம். கௌரவர் இராசதானி. துரியோதனன் இருந்த ஊர், அங்கு கமுகு, புனல் நிரம்பி யிருந்தன -

" -காவணங்களிற் றோன்றின பச்சிளங் கமுகம்..
அணிகொள் அத்தினா புரியெனும் அணங்கு செந்திருவின்
கணவனுக் கெதிர் காட்டு நீ ராசனங் கடுப்ப
மணமிகுத்த செந் தாமரை மலருடன் சிறந்த
புணரியிற் பெரும் புனலையுங் கொள்வன பொய்கை"
- வில்லி. கிருட்டிணன். 56, 58

X "ஈ இருக்கும் இடம் எனினும் இப்புவியில் யாவர்க் கரசினிக் கொடேன்"- என்று துரியோதனன் தருமனா தியர்க்கு அரசு கொடுக்க மறுத்தனன்; மறுத்து, "பார் வீரரானவர தல்லவோ" - என்றும் உரைத்து, "மோது போர் புரியத் துணிந்தான்"- வில்லி. கிருட்டிணன்.114, 119, 264

துரியோதனன், அருச்சுனன் இருவரும் கண்ணன் பால் அணுகிப்

சாமர்த்தியச் செயல்களால் உருக்கம் கொண்டு ஆசைப்பட்டு, அவர்கள் என் கைக்குள்ளே, (மருவு) உள்ள (பொருளான) பொருள்வகைகள் - திரவிய வகைகள் (ஆகும்வரை) செலவழிந்து போகும் வரைக்கும், மெத்தைதனில் உருகி - படுக்கையில் உள்ளம் உருகி, (மோகமாகி விட) பொருள் தீர்ந்துவிட்ட காரணத்தால், ஆசை முடிவுபெற, (அதன்மேலே) அதன் பிறகு -

'உமக்கு (வெறுங்கையுடன் வருவது) வெட்கமாக இல்லையா? நடவும் - வெளியேறும், (ஏகும் ஏகும்) - போம், போம்; இனி வேறு பேர்வழிகளை அழைத்து வாருங்கள், பெண்களே, என்று சேடியர்களுக்குக் கட்டளை யிட்டு - முன்னதாக இங்ஙனம் வெருட்டிவிடும் (படிறிகள்) வஞ்சனை எண்ணத்தினராம் வேசையர்களின் மீதுள்ள (நேச ஆசை) அன்பும் ஆசையும் அற்றுத் தொலைய அருள் புரிவாயாக.

ஒழுங்காக அமைந்த வரிகளை - கோடுகளைக் கொண்ட கமுக மரத்தின்மீது வாளை மீன்கள் தாவிக்குதிக்கும் நீர்நிலைகளை உடைய அஸ்தினா புரத்தை ஆண்டுவந்த வாளேந்திய (நிருபன்) அரசனாம் துரியோதனன் (ஒக்கும் நினைவு முன் இலாமல் வாகுபெலம்) - ஒத்து உடனிருக்கும் நினைவே முன்பு இல்லாமல், தனது (வாகு பெலம்) தோள் பலத்தின் திடத்தையே எடுத்துரைக்க-

(போருக்கு) உற்ற - ஒருப்பட்ட தருமர், பலம் நிறைந்த பீமன், வேலேந்திய அருச்சுனன், வெற்றியே பெறும் நகுலன், சகதேவன் இவர்களுடைய தேர்களை மனமொத்து முடுகிவிட்ட (பாகன்) சாரதி, வாட்போர் நடந்த போரில் அசுரர் தலைவனாம் இராவணனுடைய

---

"போரில் துணை செய்ய வேண்டும்" என்று கேட்ட பொழுது - கண்ணபிரான் பாண்டவர்க்குத் தேர்ச் சாரதியாயிருப்பதன்றிப் படை ஒன்றும் எடுத்துப் போர் செய்வதில்லை என்று துரியோதனனுக்கு வாக்கு அளித்தார்.

"நடையுடைப் புரவித் திண்டேர் தானிவற் கூர்வதன்றி
மிடைபடை ஏவி நும்போ டமர்செயேன் வேந்த என்றான்"

- வில்லி. வாசுதேவன், 16

பத்து முடிகள்துக ளாக வாகுஇரு
பத்து *மொருகணையில் வீழ நேரவுணர்
பட்டு மடிய அமர் மோது காளமுகில் மருகோனே-
பச்சை மயிலில்வரு வீர வேல்முருக
துட்ட திருதர்குல கால வானவர்கள்
பத்தி யுடனடியில் வீழ † வாழ்வுதவு
பெருமானே (153)

## 1148. திருவடி பெற

தத்த தந்தன தந்தன தந்தன
தத்த தந்தன தந்தன தந்தன
தத்த தந்தன தந்தன தந்தன தந்ததான

ஒக்க வண்டெழு கொண்டைகு லைந்திட
வெற்பெ னுங்கன கொங்கைகு ழைந்திட
‡ உற்ப லங்கள்சி வந்துகு விந்திட X இந்த்ரகோபம்-
ஒத்த ○தொண்டைது வண்டமு தந்தர
** மெச்சு தும்பிக ருங்குயில் மென்புற
வொக்க மென்தொனி வந்துபி றந்திட அன்புகூர,
மிக்க †† சந்திர னொன்றுநி லங்களில்
விக்ர மஞ்செய்தி லங்குந கம்பட
மெத்த மென்பொரு ளன்பள வுந்‡‡துவ
ளின்பமாதர்-

---

* ஒரு கணை - பாடல் 452-பக்கம் 6 கீழ்க்குறிப்பு.

√ † "வாழ்வுதரு"- என் றும்பாடம்.

‡ உற்பலம் - குவளை - "கரும் குவளை, வேலை மாவின் வடுவகிர், மான் .. விழிக்கொப்பவை யாமே" - உசிதசூடாமணி

X இந்த்ர கோபம் - பாடல் 289 அடி 8. இது வாய் - வாயிதழுக்கு உவமை "பவழம் சிதறியவை போலக் கோபம் தவழும்" - கார். நாற்பது -5.

"பவளமும் கிடையும் கொவ்வைப் பழனும் பைங் குமுதப்போதும் துவளில வங்கம் கோபம் முருக்கென்றித் தொடக்கம்.. சிவந்து தேன் ததும்பும்... வன்ன வாயது குறி' - கம்பராமா. நாடவிட்ட. 49

"கொண்ட பவழம் முருக்கின் இதழ் கோபம். இலவு செவ்வரத்தம், தொண்டை, வீழி யமுதகுண்டம், சொற்சுபாடம் மாதுளம்பூ.. செங்க மலம் ஒப்புக் கண்டு மொழிந்தார் ஈரிதழ்க்கும்'- உசித சூடாமணி

○ தொண்டை = கொவ்வைக்கனி யொத்த இதழ்.

(தொடர் பக்கம் 343.)

பத்து முடிகளும் பொடிபட (அவனுடைய) வாகு தோள் இருபதும் ஒரே பாணத்தில் அற்று விழ, போருக்கு நேர்ந்து வந்த அசுரர்கள் யாவரும் அழிந்து இறக்கப், போரைத் தாக்கிச் செய்த கரிய மேகம் போன்ற திருமாலின் மருகனே!

பச்சை மயிலில் எழுந்தருளும் வீரவேல் ஏந்தும் முருகனே! பொல்லாத (நிருதர் குல கால) அசுரர் கூட்டத்தை அழிக்கும் காலனாகத் தோன்றினவனே! தேவர்கள் பக்தியுடனே திருவடியில் விழ அவர்களுக்கு வாழ்வு உதவின பெருமானே!

(படிறிகள் தம் நேச ஆசைகெட அருள்வாயே)

## 1148.

ஒன்றுகூடி வண்டுகள் எழுந்து மொய்க்கும் கொண்டை கலைந்தலைய, மலை என்று கூறத்தக்க கனத்த கொங்கைகள் குழைச்சி கொள்ள, நீலோற்பலம் போன்ற கண்கள் சிவந்து குவிய, (இந்த்ரகோபம்) தம்பலப் பூச்சி -

போலச் (சிவந்ததும்) கொவ்வைக் கனி ஒத்ததுமான வாயிதழ் துவட்சியுற்று அமுத ஊறலைத் தர, மெச்சும்படியான (தும்பி) வண்டு, கரிய குயில், மெல்லிய புறா இவைகளின் ஒலிக்கு நிகரான (மென் தொனி) மெல்லிய (புட் குரல்) (கண்டத்தில்) தோன்றி எழ, அன்பு மிக்கெழ -

நன்றாகப் பிரகாசிக்கும் (சந்திரன் ஒன்று நிலங்களில்) சந்த்ரகாந்தக்கல் வேய்ந்துள்ள தளத்திலே (விக்ரமஞ் செய்து) (லீலா) பராக்ரமங்களை நிகழ்த்தி, (இலங்கு) விளக்கந்தரும் நகரேகை படும்படி, பக்குவமாக நல்ல பொருள் கிடைத்த அளவுக்குத் தங்கள் அன்பை அளந்து தந்து, (துவள்) புணரும் (சிற்றின்ப) மாதர்களின்

---

** தும்பி, குயில், புறவு - தொனி - இவை புட்குரல் - பாடல் 323-பக்கம் 300 குறிப்பு

†† சந்திரன் ஒன்று நிலம் - சந்த்ர காந்தக் கல் வேய்ந்த நிலம்

"சந்திர காந்தம் என்னும் தண்மணி நிலம்"- சிந்தா 585

சந்திர கிரணத்தால் நீர் காலும் கல் -

"கலாவதி நிலாமணிச், சிலாதலந், துலாவுவாம்"

- கலாவதி நாடகம் (வி. கோ. சூ)

‡‡ பொருள் அன்பளவும் துவள் இன்ப மாதர் -

பாடல் 1147 அடி 3 பார்க்க.

துவளுதல் - புணர்தல் - "கரத நாடகமாடும் துடியிடையார் கணவருடன் துவளும்போது" - அருணாசலபுரா. திருக்கன் 14

வித்த கந்தரு விந்துத புங்குழி
பட்ட ழிந்துந லங்குகு ரம்பையை
விட்ட கன்றுநி னம்புய மென்பத மென்று
சேர்வேன்;

மைக்*க ருங்கட லன்றெரி மண்டிட
மெய்க்ர வுஞ்சசி லம்புடல் வெம்பிட
மற்று நன்பதி குன்றிய ழிந்திட வும்பர் நாடன்-
வச்சி ரங்கைய ணிந்துப தம்பெற
மெச்சு குஞ்சரி கொங்கைபு யம்பெற
மத்த வெஞ்சின வஞ்சகர் தங்களை துங்கும்வேலா;
குக்கு டங்கொடி கொண்டப ரம்பர
சக்ர மண்டல மெண்டிசை யும்புகழ்
† கொட்க கொன்றைய ணிந்தசி ரஞ்சர ணங்கிசாரா-
கொத்த விழ்ந்தக டம்பலர் தங்கிய
மிக்க வங்கண கங்கண திண்புய
கொற்ற வங்குற மங்கைவி ரும்பிய தம்பிரானே (154)

## 1149. நரகில் உழல்வோர்

தான தத்தன தானன தானன
தான தத்தன தானன தானன
தான தத்தன தானன தானன தனதான

ஓது வித்தவர் கூலிகொ டாதவர்
மாத வர்க்கதி பாதக மானவர்
Xஊச லிற்கன லாயெரி காளையர் மறையோர்கள்-

---

*கடல் தீப்பட கிரவுஞ்சம் வெம்பிட வேல்விட்டது-
"வாரி பொட்டெழ கிரவுஞ்சம் வீழ நெட்டயில் துரந்த"
திருப்புகழ். 832
"வேலை கவற வெற்றிவேலை உருவவிட்ட பெருமானே"
- திருப்புகழ் 1236
கடல் கவற வேல்விட்ட திருவிளையாடலைக் குறிக்கலாம் - பாடல் 905-பக்கம் 640 கீழ்க்குறிப்பு
† சிவபிரான் தலை வணங்கினது -
"கொன்றையும் கமழ் சடில சம்புவும் கும்பிடும் பண்புடைக் குருநாதா"
- திருப்புகழ். 926
'சந்த்ர சேகரனும்... நின்று தாழும் முதல்வ' - திருப்புகழ். 55
"சடில முடிமீது வைத்த கடிய மலரா தரித்த கழல் வீரா" திருப்புகழ். 521

(வித்தகம் தரு) சாமர்த்தியம் (தரு) தருகின்ற (விந்து நடும் குழி) சுக்கிலத்துக்குக் கேடுண்டாக்கும் (குழிபட்டு) அல்குலிற் பட்டு (அழிந்து) அழிவுற்று, (நலங்கு) நொந்து போகின்ற (குரம்பையை) சிறு குடிலாகிய இவ்வுடலை விட்டு நீங்கி, உனது தாமரை போன்ற மென்மை வாய்ந்த திருவடியை என்று கூடுவேன்.

(மைக்கருங் கடல்) மிகக் கரிய கடல் அன்று தீப்பட்டு மிக எரிய, (மெய் க்ரவுஞ்ச சிலம்பு) (அசுர) உணர்ச்சி கொண்டிருந்த கிரவுஞ்ச மலையின், உடல் வெம்பிட - உடலம் தீப்பட்டழிய, மற்று மேலும், நன்பதி - சூரனுடைய சிறப்பான நகரமாம் மகேந்திர பட்டணம் (குன்றி) வளங்குன்றிப் பாழ்பட, தேவர் நாட்டு அரசன் (இந்திரன்)

வஜ்ராயுதத்தைக் (குலிசாயுதத்தைக்) கையில் தரித்துத் தனது (இந்த்ர) பதவியில் வாழ்வுற, நீ வியந்த (அல்லது உன்னை வியந்த) குஞ்சரி - தேவசேனையின் கொங்கை உனது திருப்புயங்களைப் பெற, அல்லது கொங்கையை உன் திருப்புயம் பெற, மத்த மத்தம் - செருக்கையும், கொடிய கோபத்தையும் கொண்ட வஞ்சக எண்ணத்தினராம் அசுரர்களைக் கொன்று விழுங்கின வேலாயுதனே!

கோழியைக் கொடியாகக் கொண்ட பராபர மூர்த்தியே! சக்ரவாளகிரியாற் சூழப்பட்ட (மண்டலம்) பிரதேசங்களிலும் எட்டுத் திசையிலும் (உன்) புகழ் (கொட்க) வெளிவரக், கொன்றைமாலை அணிந்த (தந்தையாம் சிவபிரானது) சிரத்தைச் (சரன் அங்கிகார) உனது திருவடியில் (அங்கீகரித்தவனே) ஏற்றுக் கொண்டவனே!

பூங்கொத்துக்கள் அவிழும் கடப்ப மலரில் (தங்கிய) நிலைத்துள்ளதான (மிக்க வங்கண)- மிகுந்த காதலை உடையவனே! அல்லது மிக்க அங்கண - சிறந்த கடவுளே! (கங்கண திண்புய!) வாகு வலயம் தோளணி கொண்ட வலிய திருப்புயங்களை உடையவனே! (கொற்றம்) வெற்றியையும் (அம்) அழகையும் கொண்ட (குறமங்கை) வள்ளி விரும்பின (அல்லது) வள்ளியை விரும்பின) தம்பிரானே! (அம்புய மென்பதம் என்று சேர்வேன்)

## 1149.

ஓது வித்தவர் - கல்விகற்பித்த ஆசிரியருக்குக் கூலி கொடாதவர்; சிறந்த தவசிகளுக்கு அதிக இடையூறுகள் விளைவித்த) பாதகத் தொழிலினர் - பெரும்பாவிகள்; ஊசலிற் கனலாய் எரி கானையர் (காமாதிகளால்) மனந்தடுமாற்றம் உறும் வேளையில் (கனலாய் எரி) தீப் போலக் கனன்று வேதனையுறும் இளமைப் பருவத்தினர்; அந்தணர்கள் (வாழும்)-

ஊர்த னக்கிட ரேசெயு மேழைகள்
ஆர்த னக்குமு தாசின நாரிகள்
ஒடி யுத்தம குதிய நாடின ரிரவோருக்;
கேது மித்தனை தானமி டாதவர்
பூத லத்தினி லோரம தானவர்
ஈசர் விஷ்ணுவை சேவைசெய் வோர்தமை
யிகழ்வோர்கள்
ஏக சித்ததி யானமி லாதவர்
மோக முற்றிடு போகித மூறினர்
ஈன ரித்தனை பேர்களு *மேழ்நர
குழல்வாரே;
தாத தத்தத தாதத தாதத
தூது துத்துது தூதுது தூதுது
சாச சச்சச சாசச சாசச சசசாச-
தாட டட்டட டாடட டாடட
டீடு டுட்டுடு டீடுடு டீடுடு
தாடி டிட்டிடி டீடிடி டீடிடி டிடிடீடி;
தீதி தித்திதி தீதிதி தீதிதி
தோதி குத்திகு தோதிகு தோதிகு
சேகு செக்குகு சேகுகு சேகுகு செகுசேகு

---

* நரகில் வீழ்வோர் - பாடல் 428, 711, 769, 1031 - ஆம் பார்க்க.

* மன்னரைச் சமரில்விட் டோடினவர், குருமொழி
மறந்தவர், கொலைப் பாதகர்,
மாதா பிதாவை நிந்தித் தவர்கள், பரதார
மருவித் திரிந்த பேர்கள்,
அன்னங் கொடுத்தபே ருக்கழிவை எண்ணினோர்,
அரசடக்கிய அமைச்சர்,
ஆலயம் இகழ்ந்தவர்கள், விசுவாச பாதகர்,
அருந்தவர் தமைப் பழித்தோர்,
முன்னுதவி யாய்ச் செய்த நன்றியை மறந்தவர்,
முகஸ்துதி வழக்குரைப்போர்,
முற்றுசிவ பத்தரை நடுங்கச் சினத்தவர்கள்,
முழுதும்பொய் யுரை சொல்லுவோர்,

ஊர்களுக்குத் துன்பம் விளைக்கின்ற (ஏழைகள்) அறிவீனர்கள், யாரிடத்தும் (உதாசினதாரிகள்) அலட்சியமான வார்த்தைகளைப் பேசுபவர்கள், (ஓடி) ஓடின எண்ணத்துடன் - வேகமாய் எண்ணி (அல்லது சென்று) (உத்தமர்) உத்தம புருஷர்களிடத்தே (ஊதியம்) லாபம் வரும்வழியை நாடினர் - தேடுபவர்கள்; இரந்து கேட்போருக்கு -

(ஏதும் இத்தனை) கொஞ்சம்கூட இம்மி அளவு கூடத் தானம் செய்யாதவர்கள் (கொடாதவர்கள்); பூமியில் (ஓரமதானவர்) பக்ஷபாதமாகப் பேசுபவர்கள்; சிவபிரானையும், திருமாலையும் சேவிப்பவர்களை இகழ்ந்து பேசுபவர்கள்;

(ஏகசித்தம்) ஒரு நிலைப்பட்ட மனத்துடன் தியானம் செய்யாதவர்கள்; மோகம் உற்றிடு (அல்லது முற்றிடு) காம மயக்கம் கொண்டுள்ள (அல்லது மிக்குள்ள) (போகிதம்) இன்ப அநுபவத்தில் ஊறினவர்கள்; (ஈனர்) இழிகுணத்தோர்; இத்தனை பேர்களும் ஏழ்நரகில் அலைச்சல் உறுவார்கள்.

தாத தத்தத தாதத தாதத- சாகச சாகச- சசசாச -

தாட டட்டட டாடட டாடட- மடிடி மடிடி டிடி மடி -

தீதி தித்திதி தீதிதி தீதிதி - செகுகு செகுகு செகுசெகு -

---

மன்னொருவர் வைத்தபொருள் அபகரித் தோரிவர்கள்,
மாநரகில் வீழ்வரன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே"

- குமரேச சதகம் 18.

சேயெ னப்பல ராடிட மாகலை
ஆயு முத்தமர் கூறிடும் வாசக
*சேகு சித்திர மாக† நி னாடிய
பெருமாளே (155)

## 1150. உண்மைப் பொருள் உணர

தானன தத்தன தத்த தத்தன
தானன தத்தன தத்த தத்தன
தானன தத்தன தத்த தத்தன தந்ததான

ஓலைத ரித்தகுழைக்கு மப்புற
மோடிநி றத்தும தர்த்து நெய்த்தற
லோதிநி ழற்குன கிக்கு லத்துட
னொன்றிஞானம்

---

* முருகவேள் விசித்ரமாக நின்று ஆடின சமயங்கள் சில உள. குடைக்கூத்து, துடிக்கூத்து முன்னரே கூறினோம். (பாடல் 595, 354, 833-பக்கம் 366; 396; 448 குறிப்பு).

(i) சித்திரசேனன் என்னும் அரசன் "குமார சிலாசலம்" என்னும் ஞானகிரியில் தவஞ் செய்யக், குமாரக் கடவுள் எதிர் தோன்றி என்ன வரம் வேண்டு மென, அரசன் "முருகா! நின் தந்தை விளையாடின அறுபத்து நான்கு திருவிளையாடல்களையும் தரிசிக்க விரும்புகின்றேன்" எனக்கூற, அவ்வாறே முருகப் பெருமானும் அத்திரு விளையாடல்களை அவனுக்குக் காட்டி அருளினார்:

"கூறரும் அறுபால் நான்காம் கோலத்தின் செய்கை எல்லாம்
வேறுவே றாகக் கந்த வேள்திரு நடனக் காட்டி
ஊறுதேன் அருவி சால உயர்ந்தவான் பரங்குன்றத்தில்
வேறு நீர் நடன நாதன் என ஒரு பெயர்பெற்றானால்"
திருச்செந்தூர்ப் புராணம் - சுப்ரமண்ய பராக்ரமம் பக்க. 313.

(ii) திரிபுரம் எரித்த வரலாற்றைப் பாடல் 285 பக்கம் 206; பாடல் 496-பக்கம் 62; பாடல் 510-பக்கம் 166 கீழ்க்குறிப்பிற் காணலாகும்.

திரிபுராதிகள் சிவ பூஜை செய்யும் நெறியில் இருந்த காரணத்தால் அவர்களை வெல்ல முடியாதென உணர்ந்து, திருமால்தாம் புத்த ஆசாரியராகவும், நாரதர் தமது மாணாக்கராகவும் வேடம் பூண்டு பலவித அற்புதங்களைக் காட்டி அங்கிருந்த அசுரர்களைச் சிவ பூஜையைக் கைவிடும்படிச் செய்தனர். திரிபுரத் தலைவர்களாகிய மூவர்தவிர - பிறர் யாவரும் தவ நெறியைக் கைவிட்டனர் (பாடல் 1132-ம் பார்க்க). கயிலைக்குச் சென்று சிவபிரானிடம் முறையிடலாம் என்று திருமால் செல்ல, முப்புரத்தவரை நன்னெறியில் நின்றும் வழுவச் செய்த தீவினை

(சே என) ஜே! என்று பலரும் கூத்தாடச், சிறந்த கலைகளை ஆய்ந்துள்ள உத்தமர்கள் (கூறிடும்) போற்றித் துதிக்கும் (வாசக) திருவாக்கை உடையவனே! (கலைவல்லவர் புகழ்ந்து போற்றும்) தேவாரப் பாக்களை அருளியவனே! சேகு - செந்நிறத்துடன், திண்மையுடன், (சித்திரமாக) அழகாக - நின்று, ஆடிய - (துடிக்கூத்து, குடைக்கூத்து) என்ற ஆடல்களை ஆடின பெருமானே!

(ஏழ்நர குழல்வார் இன்னார் இன்னார்)

## 1150.

காதோலை அணிந்த குழையைத் தாண்டி அப்புறம் ஓடி, (நிறத்து) ஒளிவிட்டு, (மதர்த்து) செழிப்புற்று, நெய்த்த - வாசனை எண்ணெய் தடவப் பெற்று அதனால் பளபளப்புள்ளதும், (அறல்) கருமணல் போன்றதுமான (ஓதி) கூந்தலின் நிழலில் (அளிக்குலத்துடன்) (சூடிய மலரில் மொய்க்கும்) வண்டுகளின் கூட்டத்துடன் பொருந்தி, ஞான நூல்களை

---

யால் அவரால் கயிலைமலையில் ஏறமுடியவில்லை. இறைவன் உரைத்த அசரீரி மொழிப்படி மானதவாவிக் கரையில் திருமால் ஆதிய தேவர்கள் தவஞ் செய்யச், சிவபிரான் எதிர் தோன்றி 'நீங்கள் பாசுபத விரதம் நோற்றால் உங்கள் எண்ணம் சித்திக்கும்' என்றனர். அச்சமயத்தில் சிவனுடனிருந்த குழந்தை முருகன் *கொட்டித் திருக்கூத்து ஆடினர். முருகன் ஆடல்புரிய திருமாலாதிய சராசரங்கள் ஆடின; ஆடல் முடிந்ததும் சிவபிரான்உமையுடனும் முருக வேளுடனும் மறைந்தனர்; பின்னர்த் தேவர்கள் பாசுபதவிரதத்தை நோற்றனர் - இறைவன் அருள் சுரந்து, தேவர்கள் தேர் முதலியன சமைத்து வரச், சிவநெறியைக் கைவிடாத மூவர் தவிர ஏனையோரைச் சிரித்தெரித்தனர்.

* "எமது குலக்கோமான் சரவணோற்பவன் விமலாங்கத்தினயல் நின்று நடித்தான்"; அப்போது சிவபிரான் குழந்தை முருகனை தன் மார்மீது இருத்தி - நீநடித்தி என அவர் நடித்தனர் -

"கண்ணே! மணியே! உயிர்க்குயிரே! கனியே! கனியின் நறுஞ்சுவையே!"; "பண்ணே! ஒலியே! எமதுருவும் பனிமால் வரையாள் உருவுமொன்றாய்; என்னே ஒருமித் தாறுமுகம் என ஆன் குமரா! உனது கொட்டு; விண்ணோ பரவ நடித்தி என வேலன் நடனம் மிகப்புரிந்தான்;" "மழலை மொழிக் கிண் கிணிச் சிறுதாள மதலை நடிக்கக் கண்டு பகவ், குழலி தனைமார் பணைத்து மூக்கட் குழகன் இமைய வல்லியுடன், அழகு அலால் நோக்கி உச்சி அனைத்தும் மோந்தவ் கைபிலெடுத்து, பழகு வயிரத் தூணுறையுள் படர்ந்து கொடுபோய் இருந்து கந்தான்"

- ஞானவிரோ. உபதேச. 2110, 2112, 2114

† தி ணாடிய = நின் றாடிய.

ஒதிமி குத்தநத வத்த வர்க்கிட
ரோகைசெ லுத்திவ டுப்ப டுத்தகி
யூடுவி டத்தையி ருத்தி வைத்தக ணம்பினாலே;

மாலைம யக்கைவி ளைத்து நற்பொருள்
வாசமு லைக்குள கப்ப டுத்தியில்
வாவென முற்றிந டத்தி யுட்புகு மந்தமாதர்-

மாயம யக்கையொ ழித்து மெத்தென
*வானவ ருக்கரு ளுற்ற அம்பர
வாய்மை யெனக்குமி னித்த னித்தருள் தந்திடாதோ;

† வேலைய டைக்க அரிக்கு லத்தொடு
வேணுமெ னச்சொலு மக்க ணத்தினில்
வேகமொ டப்பும லைக்கு லத்தை‡ந ளன்கைமேலே-

வீசஅ வற்றினை யொப்ப மிட்டணை
மேவிய ரக்கர்ப திக்குள் முற்பட
Xவீடண னுக்கருள் வைத்த வற்றமை யன்கள்மானக்;

---

* வானவருக்கு உபதேசித்தது - பாடல் 1028-பக்கம் 86 கீழ்க் குறிப்பில் "அகத்தியர், புலவோர், மாதரர்கள்" - என்ற இடத்துப் புலவோர் - தேவர்களைக் குறிக்கும்; பாடல் 609 அடி 6ம் பார்க்க.

† சேது பந்தனம் - பாடல் 659-பக்கம் 12; பாடல் 754- பக்கம் 248; பாடல் 177-பக்கம் 412; பாடல் 844-பக் 472 குறிப்புக்கள்.

‡ நளன் வானரத் தச்சன்: மயன்குமரன்; சேது கட்டினவன்.
"நளன் வருகென்றனன் கவிக்கு நாயகன்; வந்தனன்
வானரத் தச்சன்"- கம்ப ராமா. சேது 1

X விடணனுக்கு அருளியது - பாடல் 565-பக்கம் 288 கீழ்க்குறிப்பு; பாடல்கள் 141, 844-ம் பார்க்க.

(ஓதி) கற்று, மிக்க (தவத்தவர்க்கு) மிகுந்த தவநெறியில் நிற்கும் பெரியோர்களுக்கும் (இடர் ஓகை) துன்பத்தையும் இன்பத்தையும் (வருத்தத்தையும் மகிழ்ச்சியையும்) கொடுத்து, (வடுப்படுத்து) தனது அடையாளத்தை அவர்கள் மனத்தில் தழும்பு படும்படி நன்குபதியும்படிச் செய்து, (அகியூடு) பாம்பினிடத்துள்ள, விஷம் போன்ற விஷத்தை (இருத்தி வைத்த) தங்கும்படிச் செய்த கண் என்கின்ற அம்பு கொண்டு -

(மாலை மயக்கை) காம மயக்கத்தை விளைவித்து, (தம்மிடம் வந்தவர்களுடைய) நல்ல செல்வப் பொருள்களை எல்லாம் நறு மணம் கொண்ட தமது கொங்கையின் சத்தியால் கவர்ந்து அகப்படச் செய்து, (இல் வா என) எங்கள் வீட்டுக்கு வருக என (முற்றி நடத்தி) முழுதும் வசப் படுத்தி அழைத்துக் கொண்டு போய் (உள்புகும் அந்த மாதர்) வீட்டுக்குள் செல்லும் அந்த விலை மாதர்களின் -

மாயவித்தையாம் காம மயக்கத்தை ஒழித்து, (மெத்தென) பக்குவமாகத் தேவர்களுக்கு அருள்பாலித்த (அக்ஷரவாய்மை) எழுத்துண்மையை (ஐந்தெழுத்து - அல்லது - ஆறெழுத்து பஞ்சாக்ஷரம் அல்லது சடாக்ஷரத்தின் உண்மைப் பொருளை) (எனக்கும்) அடியேனுக்கும் (இனித்து) மகிழ்ச்சியுடன் உபதேசித்து (அங்ஙனம்) உனது திருவருள் பாலிக்கப்படாதோ!

(வேலை அடைக்க அரிக்குலத்தொடு வேணும் எனச் சொல்லும் அக்கணத்தினில்) வேலை அடைக்க வேணுமென - கடலை அணையிட்டு - அடைக்க வேண்டும் என்று (அரிக்குலத்தோடு) வானரக் கூட்டங்களுடன் - சொன்ன அந்த க்ஷணத்திலேயே, வேகமொடு - அதிக வேகத்துடன் (அப்பு) அந்தக் கடல் நீரில் மலைகளின் குவியல்களை நளன் என்னும் வானரத் தச்சன் தன் கை கொண்டு மேலும் மேலும்

வீசி எறிய, அந்தக் - குன்றுகளைப் பொருந்தும்படி இணைத்து அணைத்து, அணையாகச் செய்து, அந்த அணை மேல் (மேவி) நடந்து சென்று, (அரக்கர் பதிக்குள்) அரக்கர்கள் வாசம் செய்திருந்த இலங்கைப் பதியில் முற்பட்டுச் சேர்ந்து, (அங்கு) (வீடணனுக்கு) விபீஷணனுக்கு (அருள் வைத்து) அபயம் தந்து அருள் புரிந்து (அவற்றமையன்கள் - அவன் தமையன்கள்) அவனுடைய அண்ணன் மார்களாகிய கும்பகர்ணனும், இராவணனும் இறந்தொழியும்படி -

காலயி லக்கனை தொட்ட ருட்கன
மாலமை திக்கரை யிற்ற ரித்துல
கானஅ ளித்தப்ர புத்வ ருட்கடல் நந்தீ*காமன்-
காயமொ ழித்தவர் பெற்ற கொற்றவ
நானில வித்ததி னைப்பு னத்தொரு
காதல்மி குத்துமி கப்ர மித்தருள்
தம்பிரானே (156)

## 1151. சுகபதம்

தனன தந்தனந் தனன தந்தன
தனன தந்தனந் தனன தந்தன
தனன தந்தனந் தனன தந்தன தனதான

கடைசி வந்தகன் றுரைபு கன்றிரு
குழையை யுந்துரந் தரிப ரந்தொளிர்
கரிய கண் †துறந் தவர்நி றந்தொளை
படவோடக்
கலைநெ கிழ்ந்திருங் குழல்ச ரிந்திட
‡முலைசு மந்தசைந் திடையொ சிந்துயிர்
கவர இங்கிதங் கெறுவி தம்பெற விளையாடும்,
Xபடைம தன்பெருங் கிளைதி ருந்திய
அதர கிஞ்சுகந் தனையு ணர்ந்தனி
பனிநி தம்பஇன் பசுக முந்தர முதிர்காம
பரவ சந்தனிந் துணையு ணர்ந்தொரு
Oமவுன பஞ்சரம் பயில்த ருஞ்சுக
பதம டைந்திருந் தருள்பொ ருந்தும தொருநாளே;

---

*மன்மதனை எரித்தது - பாடல் 399-பக்கம் 510 கீழ்க்குறிப்பு

† துறந்தவரும் காமத்தாற் படுவது -

" துறந்தோருளத்தை வளைத்துப் பிடித்துப் பதைக்கப் பதைக்க வதைக்கும் கண்ணார்" - கந்தரலங். 32

‡ கொங்கைப் பாரத்தால் இடை ஒடிதல் - பாடல் 1089 - பக்கம் 195 கீழ்க்குறிப்பு.

X மன்மதன் படை - மகளிர் - பாடல் 952-பக்கம் 765 குறிப்பு.

O மவுன பஞ்சரம் - பாடல் 1110 -பக்கம் 242 கீழ்க்குறிப்பு.

சுகபதம் அடைதல்- அருணகிரியார் வரலாற்றைக் குறிக்கும் பாடல் 425 -பக்கம். 570 கீழ்க்குறிப்பு † பார்க்க.

அருணகிரியார் வரலாற்று நூல்: - பக்கம் 146 - 147 பார்க்க.

வேண்டுவார் வேண்டுவதே ஈவான் எனப்பேர் பெற்ற இறைவன் "நீ சுகபதம் தானே விரும்பினாய் - சுகம் என்பதற்கு உள்ள கிளி - பேரின்பம்

(கால் அயில் அக்கணை தொட்ட) அயில்கால் - கூர்மையை வெளிக் காட்டும் அந்தப் பாணத்தைப் பிரயோகித்த (அருட்கனமால்) திருவருட் பெருமை நிறைந்த திருமால் - (அமைதிக் கரையில் தரித்து) பொறுமைக் (கடலின்) கரையில் நிலையாக நின்று, (இலங்கை) உலகை - (இலங்கை)ப் பிரதேசத்தைக் காத்து ஆள (வீபீஷணருக்கு) அளித்த (பிரபுத்வ) பெருந்தன்மை வாய்ந்த அருட்கடலாகிய (திருமால்) பெற்ற மன்மதனுடைய -

(காயம்) உடலை (ஒழித்தவர்) எரித்து அழித்தவராகிய சிவபிரான் பெற்ற வீரனே! (நானிலத்தில்) - பூமியில் விதைக்கப்பட்ட தினைப்புனத்தே (வள்ளியின் பொருட்டு) ஒப்பற்ற ஆசை மிகுந்து (பிரமித்து) மயங்கி (அந்த வள்ளிக்கு) அருள்பாலித்த தம்பிரானே! (அசுரவாய்மை அளித்தருள் தந்திடாதோ)

## 1151.

ஓரங்கள் சிவந்து, (அகன்று) அகலமாய் விளங்கி, உரை புகன்று பேச்சைப் பேசுவதுபோல விளக்கம் காட்டி - இரண்டு குழைகளையும் (துரந்து) வீசித்தாக்கி, (அரிபரந்து) பரந்த ரேகைகளைக் கொண்டு (ஒளிர்) விளங்குகின்ற கரிய கண்களானவை - துறவிகளுடைய (நிறம்) மார்பையும் தொளை செய்வது போல நீண்டு ஓட -

ஆடை தளர்ந்து, (இருங்குழல்) கரிய கூந்தலானது கரிய கொங்கைகளைச் சுமந்து அதனால் அசைவுற்று இடைஒடிவது போலத் துவள, உயிரையே கவரும்படி (இங்கிதம்) (இங்கிதம் செருவிதம்பெற) இனிமையுடனும் (செருவிதம்) செருக்குடனும் விளையாடுகின்ற (காமவிளையாடலைச் செய்யும்)

(படை மதன் பெருங்கிளை - மதன் பெருங்கிளைப் படை) (மன்மதனது பெரிய சுற்றமாகிய படை -) மகளிருடைய (திருந்திய) - சுத்தமான (அதர கிஞ்சுகம்) - கிஞ்சுக அதரம் - முருக்கிதழ் சிவந்த இதழின் (சுவையை) அறிந்து, அணி பணி நிதம்படம் - அழகிய (பாம்பின்) படம் போன்ற அல்குல் இன்பசுகத்தைத் தரப்பெறும் முற்றின காம -

மயக்கம் தணிந்து - ஒழிந்து - உன்னை - ஒப்பற்ற மௌனம் என்னும் (பஞ்சரம்) கூட்டில் (பயில தரும்) விளையாடும் - (சுகபதம்) கிளி நிலையை - பேரின்ப நிலையை - அடைந்து இருந்து (உன்னுடைய) திரு அருளைப் பொருந்தி மகிழும் அந்த ஒரு பாக்கிய நாள் எனக்குக் கிடைக்குமா!

---

என்றும் இவ்விரு பொருளையும் நீ அடைந்து அனுபவிப்பாயாக" என்று அருணகிரி நாதருக்கு கிளி உருவத்தையும் பேரின்ப நிலையையும் தந்து உதவினர் போலும்.

வடநெ டுஞ்சிலம் புகள் புலம்பிட
மகித லம்ப்ரியங் கொடும கிழ்ந்திட
வருபு ரந்தரன் தனபு ரம்பெற முதுகோப-
மகர வெங்கருங் கடலொ டுங்கிட
நிசிச ரன்பெருங் குலமொ ருங்கிற
* வனச னின்றமும் படிநெ ருங்கிய வொருசூதம்;
அடியொ டும்பிடுங் கியத டங்கர
வடிவ அஞ்சுரும் புறவி ரும்பிய
† அடவி யுந்தொழும் பொடுதொ ழும்படி யநுராக-
அவச மும்புனைந் தறமு னைந்தெழு
பருவ தஞ்சிறந் தகன தந்தியின்
அமுத மென்குயங் களின்மு யங்கிய
பெருமாளே (157)

## 1152. ஞானம் பெற

தனதன தனதன தத்தாத் தானன
தனதன தனதன தத்தாத் தானன
தனதன தனதன தத்தாத் தானன தந்ததான

‡ கதறிய கலைகொடு சுட்டாத் தீர்பொருள்
X பதறிய சமயிக ளெட்டாப் பேரொளி
O கருவற இருவினை கெட்டாற் காண்வரு மென்றரகங்-

---

* பிரமன் பயந்து கலங்குதல் -
"வேதா முறையோ என்றரற்ற"- திருப்புகழ். 1130

† வள்ளியிருந்த காட்டையும் கும்பிட்டுத் தளர்ந்தார் முருக வேள். தினைகள் விளைந்தன - இனிக் காவல் வேண்டாம் என்று வள்ளியைச் சிறுகுடிலுக்கு வேடர்கள் அழைத்துச் சென்ற பின்பு, முருகவேள் வள்ளியைத் தினைப் புனத்திற் காணாதவராய்ப் புலம்பிப் புனத்தில் இருந்த மயிலையும், பூவையையும், கிளிகளையும், யானையையும், மானையும், அந்தப் புனத்தையும், அந்த வனத்தையும் வள்ளி எங்கே, வள்ளி எங்கே என்று வினவி வாடித் தளர்ந்து வருந்தினராம்-

" புனையிழை தன்னைக் காணான் புலம்பியே திரிதலுற்றான்; மஞ்ஞைக் கணந்தனை வினவும், ஏனற் புனந்தனை வினவும்... பூவையை வினவும், கிள்ளை இனந்தனை வினவும், யானை இரலையை வினவும், தண் கா வனந்தனை வினவும் மற்றை வரைகளை வினவும், வாடினான் - தளர்ந்தான் - நெஞ்சம் வருந்தினான், மையற் கெல்லை கூடினான் - வெய்துயிர்த்தான் "

- கந்தபுரா. 6-24-158-60 (தொ பக். 355)

வடக்கே உள்ள பெரிய (சிலம்புகள்) கிரௌஞ்சம் ஆதிய மலைகள் (புலம்பிட) கலக்குண்டு ஒலிக்கவும், (மகிதலம்) பூமியிலுள்ளோர் (ப்ரியங்கொடு) அன்பு பூண்டு மகிழ்ச்சியுறவும், வந்து அடைக்கலம் புகுந்த (புரந்தரன்) இந்திரன் (தன) தன்னுடைய (புரம் பெற) பொன்னுலகைப் பெறவும், மிக்க கோபங் கொண்டது போலப் பொங்கினதும் -

மகரமீன்கள் உள்ளதுமான (வெங் கருங் கடல்) வெப்பமுள்ள கரிய கடல் ஒடுங்கி அடங்கவும், (நிசிசரன்) அவுணன் சூரனுடைய பெரிய சுற்றங்கள் முழுது அழிவுபடவும், (வனசன்) பிரமதேவன் (பயந்து) நின்று அழுது ஒலிடும்படி நெருங்கி வந்த ஒப்பற்ற (சூதம்) மாமரத்தை -

அடியோடு பிடுங்கிப் பிளந்தெறிந்த (தடம்) பெருமை வாய்ந்த திருக்கரத்தை உடையவனே! (வடிவ) அழகனே! (அம்) அழகிய (சுரும்பு) வண்டுகள் சேர விரும்பின (அடவியும்) காட்டையும் (தொழும்பொடு) அடிமை பூண்ட மனத்தோடு வணங்கும்படி (அநுராக) காமப்பற்றுள்ள

(அவசமும்) மயக்கத்தைப் (புனைந்து) கொண்டு, (அற) மிகவும் (முனைந்து எழு) முற்பட்டு எழுகின்றதும், (பருவதம் சிறந்த) மலைபோலச் சிறப்புற்றதும் (கனதந்தியின்) பெருமை பொருந்திய யானை போன்றதும், அமுதமயமானதும், மென்மை கொண்டதுமான (குயங்களில்) - (வள்ளியின்) கொங்கைகளைத் (முயங்கிய) தழுவின பெருமாளே! அல்லது, அறமுனைந்தெழு - மிகவும் ஊக்கம் கொண்டு எழுந்த - பெருமாளே! மலைபோலச் சிறப்புற்ற (கனதந்தியின்) பெருமை வாய்ந்த யானை - தேவசேனையின் அமுதம் கொண்ட மென்மை பூண்ட கொங்கைகளைத் தழுவின பெருமாளே! (அருள் பொருந்தும தொருநாளே)

## 1152.

கதறிக் கதறிப் படிக்கின்ற கலைகளைக் கொண்டு சுட்டிக் காட்ட முடியாத ஒரு முடிவுப் பொருள்; பதைபதைத்துப் பேசும் சமயவாதிகளால் எட்ட முடியாத ஒரு பெரிய ஜோதிப் பொருள்; (கரு அற) பிறப்பு ஒழியும்படி (நல்வினை தீவினை) என்னும் இரண்டு வினைகளும் (கெட்டார்க்கு) ஒழிந்த பெரியோரால் காணக்கூடும் என்றிருக்கின்ற ஒரு தனிப் பொருள்;

---

‡ "வாசித்துக் காணொணாதது"- பாடல் 343 அடி 1

"சகலகலை நூல்களும்.. அறியாத அறிவு" - திரு பாடல் 1019

X "பரசமயம் ஒருகோடி குருடர் தெரிவரிய தொருபொருள்

O "உயிர்புணர் இருவினை அளறது போக உதறில்... எளிது பெறல்"- திருப்புகழ் 1097 அடி 1,2; 511 அடி 3

*கருகிய வினைமன துட்டாக் காதது
†சுருதிக ளுருகியொர் வட்டாய்த் தோய்வது
‡கசடற முழுதையும் விட்டாற் சேர்வது
ணர்ந்திடாதே;

விதமது கரமுரல் மொட்டாற் சாடிய
Xரதிபதி யெனவரு துட்டாத் மாவுடன்
வினைபுரி பவரிடு முற்றாச் சாலிரு
புண்டரீக-

ம்ருகமத முகுளித மொட்டாற் கார்முக
நுதலெழு தியசிறு பொட்டாற் சாயக
விரகுடை விழிவலை பட்டாற் றாதுற
லங்கலாமோ-

O பதமலர் மிசைகழல் கட்டாப் பாலக
**சுருதிக ளடிதொழ எட்டாத் தேசிக
பருகென வளமுலை கிட்டாத் தாரகை
தந்துநாளும்-

---

* வினை மன துன் தாக்காதது - "விரகொழியில்... எளிது பெறல்" - திருப்புகழ் 511 அடி 3

" மன து - இருவினை எனும் அள றுபோக உதறி" - திருப்புகழ் 1097

† "அபரிமித சுருதியும் அடங்கும் தனிப்பொருளை" - திருப்புகழ்1127

‡ முழுதையும் விட்டாற் சேர்வது - "அற்றது பற்றெனில் உற்றது வீடு" - திருவாய்மொழி -1-2-5-

X மன்மதன் - துஷ்டாத்மா -

"கூற்ற மென்னக் கொலைபுரி வேனிலான்"- (வேனிலான் - மன்மதன்) - நைடதம் - மன்மதோ - 6

O கழல் கட்டாப் பாலக - என்றார் இங்கு - " இமையோர் சிறைவிடச் சிற்றடிக்கே பூங்கழல் கட்டும் பெருமான்" என்றார் -கந்தரலங்காரம் 83 ஆம் பாடலில்; திருப்புகழ் 1058, 1059 பாடலிலும் வீக்கிய பெருமானே - என்பதற்குக் (கழல்) வீக்கியபெருமானே - கழல் கட்டின பெருமானே - எனவும் பொருள் காணலாம். இது ஒன்றுக்கு ஒன்று முரண் ஆகாதோ எனின் ஆகாது; ஏனெனில் பெருமான் கழல் கட்டாமலே எந்தப் போரையும் இருந்த இடத்திலேயே - நினைத்த மாத்திரையில் வெல்ல வல்லவர்; ஆகவே - கழல்கட்டினார் - என்பது உபசார மொழியேயாம். சூரனை அழிக்க எழுந்தார் - எண்ணங் கொண்டார் என்னும் பொருளைக் குறிக்க எழுந்த உபசார மொழிகளாம் என்க. (தொ. பக். 357)

சுருதிய வினை மனதுள் - தாக்காதது - இருண்ட - அஞ்ஞான முள்ள வினை - தீச்செயல் எண்ணங்களைக் கொண்ட மனத்தைத் தீண்டாததான (பொருள்); வேதங்கள் எல்லாம் ஒன்றுபட்டு உருகி ஒரு (வட்டாய்) திரண்ட பொருளாய்த் தோய்ந்து (விளங்கும் பொருள்); கசடு அற குற்றங்கள் எல்லாம் நீங்கச் சகலபற்றையும் விட்டொழித்தால் வந்து கூடுகின்ற (அரிய பொருள்) - அத்தகைய பொருளை (நான்) உணராமல் -

விதம்விதமான (மதுகரம்) வண்டுகள் (முரல்) ஒலிக்கும் (மொட்டால்) மலர் அரும்பாகிய பாணங்களால் (சாடிய) தாக்குகின்ற, (ரதிபதி) ரதியின் கணவனாம் மன்மதன் எனும் பேருடன் வரும் (துட்டாத்மா) துஷ்ட ஆத்மா - துஷ்ட புருஷனுடன் (வினைபுரிபவர்) தொழில் புரிபவர்களாகிய - (வேசையர்) இடும் - தருகின்ற, முற்றா - முற்றாத இளமை (சால்) நிரம்பி விளங்கும், இரண்டு (புண்டரீக) தாமரையின்

கஸ்தூரி யணிந்து குவிந்துள்ள மொட்டால் - மொட்டுப் போன்ற(கொங்கைகளால்), (கார்முகம்) வில்லைப் போன்ற (நுதல்) நெற்றியில் (எழுதிய) தீட்டப்பட்டுள்ள சிறிய பொட்டினால், (சாயகம்) அம்பைப் போலக் கூரியதாய், (விரகு உடை) தந்திரம் நிறைந்த கண் வலையிற் (பட்டால்) படுதலால் - (தாது) (என் உடலில் உள்ள இரதம், இரத்தம், எலும்பு, சுக்கிலம், தசை, தோல், மூளை ஆகிய சத்த தாதுக்களும் (நலங்கலாமோ) நொந்து வருந்தலாமோ (வருந்தலாகாது என்றபடி)

பாதமலர் மீது வீரக் கழலைக் கட்டா (கட்டுதற்கு அவசிய மில்லாத (பாலக) குழந்தையே! (கழல் கட்டாமலே எவற்றையும் வெல்லவல்லவனே - என்றபடி); வேதங்கள் அடிதொழுதும் (உன்னை) எட்ட முடியாத (தேசிக) குரு மூர்த்தியே! (பருகு என) உண்பாயாக என்று (வளமுலை) அழகிய கொங்கையை - (கிட்டா கிட்டி) உன்னை அணுகித் (தாரகை) கார்த்திகை மாதர் அறுவரும் தந்து நாள்தோறும் -

---

** "சுருதியூடு கேளாது"- "சுருதி வெகுமுக புராண கோடிகள் .. தொடர உணர அரிதாய தூரிய பொருளை"

- திருப்புகழ் 1052, 1159

பரிவுற வெகுமுக நெட்டாற் றூடொரு
படுகையி னிடைபுழு வெட்டாப் பாசடை
படர்வன பரிமள முட்டாட் டாமரை தங்கிவாழுஞ்
*சததள அமளியை விட்டாற் றேறிய
சலநிதி குறுகிட வொட்டாச் சூரொடு
† தமனிய குலகிரி பொட்டாய்த் தூளெழ
வென்றகோவே
‡ தழைதரு குழைதரு பட்டாட் சாலவு
மழகிய கலவிதெ விட்டாக் காதலி
தலைமக X நிலமடி தட்டாத் தேவர்கள்
தம்பிரானே (158)

---

* "தள அமளி -'வெறிகமழ் கமலப்போதின் வீற்றிருந் தருளினானே"- "சரவண மஞ்சமீதில். . வீற்றிருந்தான்" கந்தபுரா. 1-11-96-98

† தமனிய குலகிரி - கிரௌஞ்சம் - "பொன்னஞ் சிலம்பு புலம்பவரும் எங்கோன்"- " சொன்ன கிரௌஞ்ச கிரி"
- கந்தரலங் 89, 19

‡ தலைவன் தலைவிக்குத் - "தழை கொண்டு சேறல்"- என்று அகப்பொருள் துறை ஒன்று உண்டு - பாடல் 389 -பக்கம் 482, பாடல் 296 -பக்கம் 236- கீழ்க்குறிப்புக்கள் பார்க்க.

தழை பெற்று வள்ளி மனம் குழைதல்:-

வள்ளியின் தோழி 'வள்ளி! விண்ணில் உள்ள சிவபுரத்துப் பொழிலிலும்இதற்கு இணையான வேங்கைத் தழை இல்லை - இது தலைவன் தந்தது ஏற்றுக்கொள் என்கின்றாள், வள்ளி அதைப் பெறுகின்றாள்: தலைவன் (முருகவேள்) தோழியைக்கண்டு "தலைவி (வள்ளி) ஏற்றுக் கொண்டாளா தழையை" எனவினவத், தோழி கூறுகின்றாள் "ஐய! நீ தந்த தழையைத் தனது அங்கமெல்லாம் அணைத்துக் கொண்டாள் வள்ளி; அவள் நிறமும் தளிர் நிறம் பெற்றுச் செழிப்புற்றது. அவள் ஆவியும் அதனால் நிலைபெற்றது; நீ தந்த தழை தேவாமிருதந்தானோ" என்கின்றாள்.

"விண்ணத் துயர்ந்த சிவபுரத் தெல்லை விரிபொழிலும்
வண்ணத் துயர்ந்த இதற்கிணை யில்லா வறிய என
எண்ணத் துயர்ந்த இறைவரிவ்வேங்கல் எழுந்தநெய்வத்
தண்ணத் துயர்ந்த கனித்தளி ரித்தனர் தாழ்குழலே"
"மடவாள்... அங்கமெலாம் வருடிக் கொண்ட வீழ்தளிரால்
தளிரிய வண்ணம் பெற்றாள், செல்லும் ஆவியும் தாங்கி
னனால், வளரிய வான் மருந்தோ ஐய! நீ தந்த வண்
தளிரே"- தணிகைப்புராணம். களவுப்படலம். 298, 299
இனி "தழைதரு குழைதரு பட்டாள்"- என்பதற்கு

பரிவுற - அன்பு கொள்ள, வெகுமுக நெட்டாற்றாடு (பலமுகமாய்) ஆயிரமுகமாய்ப் பரந்து செல்லும் நெடிய - நீண்ட (ஆற்றாடு) கங்கையாற்றின் இடையே இருந்த (ஒரு) ஒப்பற்ற ஒரு (படுகையின் இடை) நீர் நிலையின் மத்தியிலே, புழு - புழு முதலிய ஜெந்துக்கள் (எட்டா) அணுக முடியாத (பாசடை) - (பசுமை அடை) பசிய இலைகள் படர்ந்துள்ளதும், நறுமணம் கொண்டதும், முள் உள்ள தண்டை உடையதுமான தாமரை மலரில் தங்கி நீ வாழ்கின்ற -

(சததள அமளியை) நூறு இதழ்களால் அமைந்த படுக்கையை விட்டு, ஆற்று ஏறிய - (ஆறு ஏறிய) கங்கை ஆற்றை விட்டு நீங்கிச், (சலநிதி) கடல் வற்றிக் குறுகவும், (ஒட்டாச் சூரொடு) - வந்து இணங்காத சூரனும், (தமனிய குலகிரி) பொன்மயமான சிறந்த கிரவுஞ்ச மலையும் தொளைபட்டு நீறாக வென்ற தலைவனே!

தழைதரு குழைதரு - நீ கொடுத்த தழையால் குழைவுற்ற (மனங்குழைந்த) (பட்டாள்) பட்டுப்போன்றவளும், பட்டாடை அணியத் தக்கவளும், (சாலவும் அழகிய) - மிகவும் அழகுகொண்ட (கலவி) புணர்ச்சி யின்பத்தில் தெவிட்டா - வெறுப்பிலாத (காதலியு மாகிய) ஆசைத்தலைவியுமாகிய வள்ளியின் (தலைமகனே) நாயகனே! (நிலம்) பூமியில் பாதம் தோயாத தேவர்களின் தம்பிரானே!

(விழிவலைபட்டால் தாது நலங்கலாமோ)

---

(வள்ளிக்குத்) தழை தந்து மனங் குழைவு உற்ற (பட்டு + ஆள்) பரிசுத்தனே! எனலுமாம்:

பட்டாள் என்பது பட்டுப்போன்ற பரிசுத்தமான ஆள் (நம்பி) எனவும் பொருள்படும். பட்டு - ஆள் என்பதற்கு குழை வுற்றுத் தழை தந்து - (மாகதர்போல) வள்ளியைப் புகழ்ந்து நின்ற ஆள் எனவும் பொருள்படும்.

பட்டுக்கள் என்னும் சொல்லுக்கு "இருந்தேத்தும் மாகதர்" எனவும் பொருள் உண்டு - மாகதர் - (அரசன்) புகழ் பாடும் ஒரு சாதியார் (சிலப் அரும்பத - 5-48)

X தேவர்களின் கால் நிலத்தில் தோயாது:-

தமயந்தி சுயம் வரத்தின் போது தேவர்களும் நளன் உருவோடு வந்திருந்தார்கள். தேவர்களுக்குக் கண் இமைத்தல் இல்லை, கால் பூமியில் தோயாது, மாலை வாடாது. இவ்விலக்கணங்களை அறிந்த தமயந்தி நளனுடைய கண் இமைத்தலைக் கண்டும், கால் பூமியில் தோய்தலைக் கண்டும், மாலை வாடுதலைக் கண்டும் உண்மை நளன் இன்னான் என்று அறிந்து மாலை சூட்டினாள் -

(தொடர்ச்சி 360-ஆம் பக்கம் பார்க்க)

## 1153. காத்தருள

தனதன தனதன தானன தானந்
தனத் தனந்தன தனன தான தனதன
தானான தான தனனந் தானந்
தனன தாத்தன தானத் தானத் தானத்
தாத்தன தனதான

கலவியி னலமுறை யாமட வார்சந்
தனத் தனங்களில் வசம தாகி யவரவர்
பாதாதி கேச மளவும் பாடுங்
கவிஞ னாய்த்திரி வேனைக் காமக் ரோதத்
தூர்த்தனை யபராதக்-

கபடனை வெகுபரி தாபனை நாளும்
ப்ரமிக்கு நெஞ்சனை உருவ மாறி முறை முறை
ஆசார வீன சமயந் தோறுங்
களவு சாத்திர மோதிச் சாதித் தேனைச்
சாத்திர நெறிபோயையம்,

புலன்வழி யொழுகிய மோகனை *மூகந்
தனிற் பிறந் தொரு நொடியின் மீள அழிதரு
மாதேச வாழ்வை நிலையென் றேயம்
புவியின் மேற்பசு பாசத் தேபட் டேனைப்
பூக்கழ லிணைசேரப்-

---

(359- ஆம் பக்கம் தொடர்ச்சி)

"கண்ணிமைத்த லானடிகள் காசினியில் தோய்தலான்
வண்ண மலர்மாலை வாடுதலான் .. அறிந்தாள்
நளன் தன்னை ஆங்கு" - நளவெண்பா. சுயம்வர 153
"கால் நிலம் தோயாக் கடவுளை"- நாலடி - கடவுள் வாழ்த்து.
"இதற்கு, இறைவனது உயர்வு கால் நிலம் தோயாமை
யாலும், அடியார்களை திழிவு தலை நிலமுற வணங்கலாலும்,
பெற்றாம்"- என்பது ஆசிரியர் வி.கோ சூரியநாராயண
சாஸ்திரியாரின் குறிப்புரை.

---

*மூகம் = ஊமை; இங்கே ஊமையின் கனவு
"தக்கனார் வேள்வியை... ஊமனார் தங்கனா ஆக்கினான்"
- சம்பந்தர். 3-33-3

" ஆரிய ஊமன் கனவென ஆக்கிய" - கல்லாடம். 4

# 1153.

(கலவியின் நலம்) புணர்ச்சியின் இன்பங்களை (உரையா) எடுத்துப் பேசி, (மடவார்) பெண்களுடைய (சந்தனத் தனங்களில்) சந்தனம் அணிந்துள்ள கொங்கைகளில், (வசமதாகி) வசப்பட்டு, (அவரவர்) அந்த அந்தப் பெண்களின் (பாதாதி கேசம் அளவும்) பாதம் முதல் கூந்தல் வரையும் (பாடும்) வர்ணித்துப் பாடுகின்ற, (கவிஞனாய்) பாவலனாகத் திரிகின்ற என்னைக் - (காமம்) ஆசை, (குரோதம்) கோபம் இவை கொண்ட (தூர்த்தனை) காமுகன் - கொடியோன் ஆகிய என்னை - (அபராதம்) பிழைபடுகின்ற - குற்றம் செய்கின்ற -

(கபடனை) வஞ்சகனாகிய என்னை - (வெகு பரிதாபனை) மிகவும் பரிதபிக்கத்தக்க - வருந்தத் தக்கவனாகிய என்னை, (நாளும்) தினந்தோறும் (ப்ரமிக்கும்) திகைத்து நிற்கும் உள்ளம் கொண்டவனாகிய என்னை, (உருவம் மாறி) - வடிவமும் அழகும் அப்போதைக்கப்போது மாறுதல் அடைந்து, (முறை முறை) ஒன்றன்பின் ஒன்றாக, ஆசாரக் குறைவு உள்ள - ஒழுக்கக் குறைவு உள்ள சமயம் ஒவ்வொன்றையும் ஆய்ந்து, அதில் உள்ள (களவு சாத்திரம் ஓதி) களவு நூல்களைக் கற்று - வஞ்சனைக்கு இடமான வழிகளைக் கற்று - (அவைகளின் துணை கொண்டு) நான் பேசுவதே சரியெனச் சாதித்துப் பேசும் என்னை - (சாத்திர நெறிபோய்) நன்னடையைக் கூறும் வேத நூல்களிற் கூறப்பட்ட வழிகளை விட்டு விலகி, ஐந்து

(புலன் வழி ஒழுகிய) புலன்கள் இழுத்துக் கொண்டு போகும் வழியிலேயே நடந்து வந்த (மோகனை) - காமுகனாகிய என்னை, (மூகம் தனில்) ஊமையின் கனவுக்கு ஒப்பாகப் பிறந்து (தோன்றி), தோன்றின ஒரு நொடிப் பொழுதில் மீண்டும் அழிவுறும், (ஆதேச வாழ்வை) திரிபு உடைய இந்த வாழ்க்கையை நிலைத்திருக்கும் என்றே (நினைத்து), (அம்புவியின் மேல்) இந்த அழகிய பூமியில் (பசு பாசத்தே பட்டேனை) - பதிஞானம் இல்லாது - இறைவனைப் பற்றிய ஞானம் இல்லாமல், ஜீவான்மா சம்பந்தப்பட்ட பந்தங்களிற் கட்டுண்டவனாகிய என்னை, உனது மலர்நிறைந்த திருவடி-யிணைகளிற் (சேர் அப்) சேரவேண்டும் என்கின்ற அந்த-

பொறியிலி தனையதி பாவியை நீடுங்
குணத் ரயங்களும் வரும நேக வினைகளு
*மாயா விகார முழுதுஞ் சாடும்
பொருளின் மேற்சிறி தாசைப் பாடற் றேனைக்
காப்பது மொருநாளே;

குலகிரி தருமபி ராம †மயூரம்
ப்ரியப் படும்படி ‡குவளை வாச மலர்கொடு
வாரா வுலாவி யுணரும் யோகங்
குலைய வீக்கிய Xவேளைக் கோபித் தேறப்
பார்த்தரு ளியபார்வைக்-

குரிசிலு Oமொருசுரர் பூசுர னோமென்
றதற் கநந்தர மிரணி யாய நமவென
நாராய ணாய நமவென் றோதுங்
குதலை வாய்ச்சிறி யோனுக் காகத் தூணிற்
றோற்றிய வசபாணிப்;

பலநக நுதியி னிசாசர னாகங்
கிழித் தளைந்தணி துளசி யோடு சிறுகுடல்
**தோண்மாலை யாக அணியுங் கோவும்
பரவி வாழ்த்திட வே††கற் றாரச் சோதிப்
பாற்பணி யிறைவாகைப்-

---

* மாயா விகாரம் முழுதும் சாடும் பொருள் -

"மாமாயை இடையுளாது" "மாயைக்குச் சூழொணாதது"

- திருப்புகழ் 1052. 343

† அபிராம மயூரம் - "உமைபெறுமயில் (பாடல் 1140)

‡ குவளை மலர் - நீலமலர் - காமனுடைய பாணங்களில் ஐந்தாவது பாணம். இதற்குச் சொல்லும் குணம் - பாடல் 19 பக்கம் - 60 கீழ்க்குறிப்பு

X காமனை எரித்தது - பாடல் 399-பக்கம் 510 கீழ்க்குறிப்பு.

O இரணியன்வதை - பாடல் 1137-பக்கம் 310 குறிப்பு

** தோர்மாலை எனவும் பாடம்; தோர்மாலை = தோண்மாலை

†† கற்று ஆரச் சோதிப்பான்: ஆர = நிறைய; சோதிப்பான் = பிரகஸ்பதி; இனி, கற்று ஆர் அ சோதி பால் எனப் பிரித்துக் கற்று விளங்கும் அந்தப் பொன்னிறத்தனான பிரகஸ்பதியின் பால் எனப் பொருள் கொள்ளலுமாம். சோதி - பொன்னொளி கொண்ட

(பொறியிலிதனை) அறிவில்லாத என்னை, (அதி பாவியை) மகா பாபியாகிய என்னை, (நீடும்) நெடிதாய் இருக்கும் (குணத்ரயங்களும்) சத்துவம், இராசதம், தாமதம் எனப்படும் மூவகைக் குணங்களையும் (வரும் அனேக வினைகளும்) என்னைப் பீடிக்கவரும் பலவினைகளையும், மாயா விகார (முழுதும்) பிரபஞ்ச மாயையால் ஏற்படும் - காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம், இடும்பு ஆகுமை ஆகிய துர்க்குணங்கள் யாவற்றையும் (சாடும் துகைத்து அழிக்கவல்ல பொருளின்மேல் - மெய்ப்பொருளாம் - முத்திப் பொருளின்மேல் (சிறிதாசைப்பாடு) (ஆசைப்பாடு) ஆசை (சிறிது) சிறிதளவுகூட (அற்றேனை) இல்லாத என்னை (நீ) காத்தருளும் ஒருநாள் உண்டோ! எனக்குக் கிடைக்குமா!

(குலகிரி) இமயமலை (தரும்) ஈன்ற (அபிராம) அழகுள்ள (மயூரம்) மயிலனையவளாகிய பார்வதி ஆசைப்படும்படி (ஆசை நிறைவேறும்படி) ஐந்தாவது பாணமாகிய குவளை மலராம் நறுமணமுள்ள பாணத்தை எடுத்துக்கொண்டு வந்து உலவி, உணரும் யோகம் சகலத்தையும் உணரவல்ல (தனது) ஞான யோகநிலை (குலைய) தடுமாறி அழியும்படி (வீக்கிய) அந்தப் பாணத்தை (தன்மீது) செலுத்தின (வேளை) மன்மதனைக் கோபித்து, ஏறப்பார்த்தருளிய - கோபத்துடன் (புருவங்கள்) மேலே நெரித்து நோக்கின பார்வையைக் கொண்ட

(குரிசிலும்) பெருமையிற் சிறந்த சிவபிரானும், (ஒரு சுரர் பூசுரன்) ஒரு தெய்வ வேதியன் - 'ஓம்' என்றதன் (அனந்தரம்) பின்னர் "இரணியாய நம" என்று பாடம் தொடங்க, அதற்குப் பதிலாக "நாராயணாய நம" என்று ஓதின (குதலைவாய்) மழலைமொழி-கொண்ட சிறுபிள்ளையாகிய (பிரகலாதனுக்காக)த் தூணில்-வெளிப்பட்ட, (வசபாணி) (நர) சிம்மரூபவசத்திற் கொண்டிருந்த கைகளில் இருந்த

பல நகங்களின் நுனிகொண்டு (நிசாசரன்) அந்த அரக்கனுடைய இரணியனுடைய (ஆகம்) தேகத்தைக் கிழித்து (அளைந்து) துழாவிக் கலக்கித், தாம் அணிந்திருந்த துளசி மாலையோடு அந்த அரக்கனுடைய சிறு குடலையும் தோளில் மாலையாக அணிந்து விளங்கின தலைவனாம் திருமாலும் - போற்றி வாழ்த்தவும், (கற்று ஆரச் சோதிப்பான்) கற்று நிரம்ப ஆராய்ச்சி உடையவனாகிய பிரகஸ்பதியைப் பணிகின்ற (தேவ) அரசனும், (வாகை) வெற்றி கொண்டதும்,

---

தேவகுரு கற்றாரச்சோதி - "வாக்கின் வல்ல குரவன்"
"பனுவற் கெல்லாம் நாதன்" - கந்தபுரா. 1-26-13; 2-43-136

*படமுக வடவயி ராபத மேறும்
ப்ரபுப் பயங்கெட வடப ராரை வரைகெட
வேலேவி வாவி மகரஞ் சீறும்
† பரவை கூப்பிட மோதிச் சூர்கெட் டோடத்
தாக்கிய பெருமாளே. (159)

## 1154. துணைபெற

தனத்த தானன தானான தந்தன
தனத்த தானன தானான தந்தன
தனத்த தானன தானான தந்தன தந்ததான

‡ கறுத்து நீவிடு கூர்வேலி னுங்கடை
சிவத்து நீடிய வாய்மீன வொண்குழை
கடக்க வோடிய ஆலால நஞ்சன வஞ்சநீடு
கயற்க ணார்கனி வாயூற லுண்டணி
கழுத்து மாகமு மேகீப வங்கொடு
கலக்க மார்பக பாமர குங்கும கொங்கைமீதே
உறுத்து மாரமு மோகாவ டங்களு
மறுத்து நேரிய கூர்வாள்ந கம்பட
உடுத்த ஆடையும் வேறாயு ழன்றுக ழன்றுவீழ
உருக்கு நாபியின் மூழ்காம ருங்கிடை
செருக்கு மோகன வாராத ரங்களை
யொழிக்க வோர்வகை காணேனு நுந்துணை யொன்றுகாணேன்;

---

* படர்முக வடரவிராபதம் எனவும் பாடம்

† பரவை கூப்பிட - "அலைகடல் கோகோ கோகோ என"- பாடல் 1139- அடி 5.

‡ பெண்களின் கண்ணை வர்ணிக்கும் போதும் - இறைவன் சிந்தனையே அருணகிரியார்க்கு என்பதற்குச் சான்று -

"கறுத்து நீ விடு கூர்வேலினும் கடைசிவத்து" என்று

முருகன் வேலையே கண்ணுக்கு உவமையாகக் கூறினது.

'நீவிடு வடிவேல்' , 'ஈசர் அமுது' - எனவருவனவும் காண்க. - பாடல் 880, 1049. (தொ. பக். 365)

படமுக - முகபடாம் அணிந்துள்ளதும், (அடல்) வலிமை வாய்ந்ததுமான ஐராவதம் என்னும் யானைமீது ஏறுகின்ற பிரபுவுமான இந்திரனுடைய பயம் நீங்கவும், வடக்கிலுள்ள பருத்த அடிப்பாகத்தை உடைய, (வரை) கிரௌஞ்சகிரி அழியவும் வேலாயுதத்தைச் செலுத்தி, (வாவி) தாண்டிப் பாய்ந்து, மகர மீன்கள் சீறுகின்ற(பரவை) கடல் (கூப்பிட) கோகோ எனக் கூச்சலிட, அதை (மோதி) தாக்கியும் சூரன் (கேடு உற்று) அழிவு அடைந்து ஓட்டம் பிடிக்கும்படி அவனைத் தாக்கின பெருமாளே!

(காப்பதும் ஒரு நாளே)

## 1154.

கோபித்து நீ விடுகின்ற கூரிய வேலாயுதத்தைக்காட்டிலும் அதிகமாக (கடை) நுனிப்பாகம் (சிவத்து) செந்நிறம் உற்று, நீடியவாய் - நீண்டுள்ளதாய், (மீன ஒண் குழை) மகரமீன் உருவத்தில் உள்ள ஒள்ளிய குழைகளையும் (கடக்க ஓடிய) தாண்டி ஓடியுள்ளதாய், ஆலால நஞ்சு அ (ன்) ன - ஆலகால விஷம் போன்றதாய், வஞ்சனை எண்ணங்கள் நீண்ட தூரம் அமைந்துள்ளதாய்க்,

கயல் மீன் போன்றதான கண்ணை உடைய மாதர்களின் கொவ்வைக் கனிபோன்ற வாயிதழ் ஊறலைப்பருகி, அவர்களின் அணி - அழகிய அல்லது ஆபரணங்கள் பூண்ட - கழுத்தும் (ஆகமும்) உடலும் ஏகி பவம் கொடு ஒன்றுபடும் தன்மையில் (கலக்க) சம்பந்தப்பட, (மார்பகம்) மார்பிடத்தே உள்ள (பாடீர) சந்தனம், குங்குமம் அணிந்த கொங்கைகளின் மேல் -

அழுத்தும் (ஆரமும்) முத்து மாலையும், (மோகாவடங்களும்) காமமயக்கத்தைத் தரும் (பிற) மாலைகளும், அறுக்கப்பட்டு ஒழுங்குள்ள கூரிய வாள்போன்ற நகமும் மேலே பட, அணிந்துள்ள ஆடை வேறாக - விலகி - அலைப்புண்டு நழுவி விழ - இப்படி

மனத்தை உருக்கவல்ல (நாபியின்) கொப்பூழில் - தொப்புளில் - (மூழ்கா) முழுகி, (மருங்கு இடை) இடையின் கண் - (அம்மாதர்களின் இடையிலே (செருக்கும்) களிப்புறும் (மோகன மனமயக்கம் (வார் அல்லது ஆர்) மிகுந்த அல்லது நிறைந்த (ஆதுரங்களை) ஆசைகளை ஒழித்துத் தொலைக்க, ஒரு வழியும் (காணேன்) எனக்குத் தெரியவில்லை; உற்ற ஒரு துணையும் கூட காண்கின்றேன் இல்லை.

---

இது மாணிக்க வாசகர் வர்ணித்த கண் வர்ணனையில்
"ஈசற்கு யான் வைத்த அன்பின் அகன்று"
- என வருவதுபோல - (பாடல் 926-பக்கம் 698 குறிப்பு)

நிறத்த நூபுர பாதார விந்தமு
*முடுத்த பீலியும் வாரார்த னங்களும்
நிறத்தி லேபடு வேலான கண்களும் வண்டுபாட-
நெறித்த வோதியு மாயான்† ம னம்பர
தவிக்க மால்தர லாமோ கலந்திட
நினைக்க லாமென வேல்வேடர் கொம்புட
னன்புகூர்வாய்,
மறித்த ‡வாரிதி கோகோவெ னும்படி
வெறுத்த Xராவணன் வானாளை யம்பினில்
வதைத்த மாமனு மேலார்O பு ரங்கனல் மண்டமேரு-
வளைத்த தாதையு மாறான குன்றமு
மனைத்து லோகமும் வேதாக மங்களும்
மதித்த சேவக வானாளு மும்பர்கள்
தம்பிரானே (160)

## 1155. உபதேசம் பெற

தனத்ததன தனத்ததன தனத்ததன தனத்ததன
தனத்ததன தனத்ததன தனதான

குறிப்பரிய குழற்குமதி நுதற்புருவ விலுக்குமிரு
குழைக்கும்வடு விழிக்கு மெழு குமிழாலுங்-
கொடிப்பவள இதழ்க்குமிகு சுடர்த்தரள நகைக்குமமு
தினுக்குமிக வுறத்தழுவு குறியாலும்;
அறப்பெரிய **தனக்குமன நடைக்குமினி னிடைக்குமல
ரடிக்குமிள நகைக்குமுள மயராதே-

---

* உடுத்த பீலி - வேட்டுவ மகளிர் மயிற்பீலியை ஆடையாக உடுப்பர் இடையிற் கட்டிய மரவுரி ஆடையின்மேல் தழைகளை - மயில் தோகையை - மேலே தொங்க விடுவர். "பீலியும் இலையும் உடுத்திட்டு"- திருப்புகழ் 1199. "தழைப் பீலி மரவுரிமேற்சார" பெரியபுரா - கண்ணப்பர் 48.

† மனம் பரதவிக்கலாமோ - இந்தப் பரிதாப நிலையைப் பாடல் 209 - அடி 7-8-ல் பார்க்க.

‡ கடல் அலறினது - பாடல் 177, 754

X ராவணனை அட்டது - பாடல் 452, 507 முதலியன.

O புரம் எரித்தது - பாடல் 285-பக்கம் -206 கீழ்க் குறிப்பு

** தனக்கும் = தனத்துக்கும் - "அத்து" - சாரியை தொக்கு நிற்கின்றது.

ஒளி பொருந்திய சிலம்பணிந்த (பாதாரவிந்தமும்) திருவடித் தாமரையும், உடுத்துள்ள மயில்பீலியும், (வாரார் தனங்களும்) கச்சு (ரவிக்கை) அணிந்த கொங்கைகளும், (நிறத்திலே) மார்பிலே (படு) வந்து தாக்குகின்ற வேல்போன்ற கண்களும், வண்டுகள் பாடி ஒலிக்க -

(நெறித்த) சுருள்கொண்ட (ஓதியுமாய்) கூந்தலுமாய் (என் முன் நின்று), (யான் மனம் பரதவிக்க) யான் மனம் வேதனைப் படும்படி (மால்) மோகத்தை எனக்கு நீ தருதல் நன்றா? (கலந்திட நினைக்கலாம்) என்னை அணைய நீ நினைப்பாயாக என்று வேல் ஏந்தும் வேடர்களின் பெண் (வள்ளியுடன்) (நண்பு கூர்வாய்) நட்புமிக்குப் பேசினவனே!

(இலங்கைக்குப் போக வழிவிடாது தடைசெய்த) கடல் கோகோ என்று கத்தும்படிப் பாணத்தை விட்டவனும், தன்னால் வெறுக்கப்பட்ட ராவணனுடைய வாழ்நாளை அம்பு கொண்டு வதைத்தவனுமான, (மாமனும்) மாமனாம் திருமாலும், (மேவார்) பகைவர்களது (புரம்) திரிபுரத்தில் (கனல்) தீ (மண்ட) நெருங்கி எழும்படி, மேருமலையை -

(வில்லாக) வளைத்த (தாதை) தந்தையாம் சிவபிரானும், (மாறான) பகைமை பூண்டிருந்த (குன்றமும்) கிரௌஞ்ச கிரியும், (அனைத்து லோகமும்) உலகம் எல்லாமும், வேதங்களும், ஆகமங்களும் - மதித்து நின்ற (சேவக) பராக்ரமம் உடையவனே! வானுலகை ஆட்சி செய்யும் தேவர்களின் தம்பிரானே!

(துணை ஒன்று காணேன்)

## 1155.

உவமையாகக் குறிப்பிடக்கூடிய பொருள் இதுதான் என்று குறிப்பிடுதற்கு அரிதான கூந்தலுக்கும், பிறைச்சந்திரன் போன்ற நெற்றிக்கும், (புருவ வில்லுக்கும்), வில் அனைய புருவத்துக்கும், இரண்டு குழைகளுக்கும், மாவடுபோன்ற கண்களுக்கும், மேலெழுந்து விளங்கும் குமிழம்பூ அனைய மூக்குக்கும் -

கொடிப் பவளம்போலச் சிவந்த வாயிதழுக்கும் மிக்க ஒளி வீசும் முத்துப்போன்ற (நகைக்கும்) பல்லுக்கும், (அமுதினுக்கும்) அமுதம்போன்ற பேச்சுக்கும் (அல்லது வாயிதழ் ஊறலுக்கும்), நன்கு பொருந்தத் தழுவிச் சேரும் (குறியாலும்)- அல்குலுக்கும் -

மிகப்பெரியதாய் விளங்கும் (தனக்கும் - தனத்துக்கும்) கொங்கைக்கும், அ(ன்)ன நடைக்கும்- அன்னம்போன்ற நடையழகுக்கும், மி(ன்)னின் இடைக்கும் - மின்னல் போன்ற இடைக்கும், (தாமரை) மலர் போன்ற அடிகளுக்கும், (இள நகைக்கும்) புன் சிரிப்புக்கும் (என்) உள்ளம் (சுடுபட்டு) சோர்வு உறாமல் - (நீ)

*அகத்தியனொ டுரைத்தபொரு ளளித்தருளி அரிப்பிரமர்
அளப்பரிய பதக்கமல மருள்வாயே
கறுத்தடரு மரக்கரணி கருக்குலைய நெருக்கியொரு
கணத்திலவர் நிணத்தகுடல் கதிர்வேலாற்-
கறுத்தருளி யலக்கணுறு சுரர்க்கவர்கள் பதிக்குரிமை
யளித்திடரை யறுத்தருளு மயில்வீரா;
செறுத்துவரு †கரித்திரள்கள் திடுக்கிடவல் மருப்பையரி
சினத்தினொடு பறித்தமர்செய் பெருகானிற்-
செலக்கருதி யறக்கொடிய சிலைக்குறவர் கொடித்தனது
சிமிழ்த்தனமு னுறத்தழுவு பெருமாளே. (161)

## 1156. ஈடேற

தனதனன தனதான தானான தானான
தனதனன தனதான தானான தானான
தனதனன தனதான தானான தானான தனதான

குனகியொரு மயில்போல வாராம னோலீலை
விளையவினை நினையாம லேயேகி மீளாத
கொடியமன தநியாய மாபாத காபோதி
யெனஆசை-

---

* சிவபிரானுக்கு உபதேசித்த பொருளை எனக்கு அருளுக எனப் பாடல் 1127 - அடி 4-ல் கேட்ட அருணகிரியார் இப் பாடலில் அகத்தியருக்கு உரைத்த பொருளை எனக்கு அருளுக என வேண்டுகின்றனர். திருத்தணிகையில் முருகவேள் அகத்தியருக்கு உபதேசித்தார். "வேல் இறைவன் இயம்பிய ஞான முற்றுணர்ந்து... பன்முறை தாழ்ந்து... அடித் தொண்டு உஞற்றினன் பன்னாள்.. பின்னர்... பொதியம் அடுத்து முத்தமிழை வளர்த்து வாழ்ந்திருந்தனன் முனிவன்" - பாடல் 1141-பக். 322 குறிப்பு

† யானையின் தந்தங்களைச் சிங்கங்கள் பறிப்பது.-
"வேழத்தின் வெண்மருப்பினைக் கீழ்ந்து சிங்கம் குருகுண்ண"
"பருக்கை யானை மத்தகத்து அரிக்குலத்து உகிர்ப்புக"
- சம்பந்தர். 2-114-9; 2-101-1
"மத்தக் கரி முகத்தை வாளரிகள் பீற"- சங்கோப். 63
" ஆளி நன்மான் வேழத்து வெண்கோடு வாங்கிக்
குருக்கருந்ததும்" - அகநா. 381
"கரிக்குருகு உண்ணு மடங்கல்"- கந்தபுரா. திருவிளை. 117
"கரிக்குருகு தேராரி... உண்டுவிட்டி"- கந்தபுரா. ஆற்று. 14

(தொடர்ச்சி பக்கம் 369)

அகத்திய முநிவருக்கு உபதேசித்த பொருளை (அளித்தருளி) எனக்கு உபதேசித்தருளி, திருமாலும், பிரமனும் கண்டு அளத்தற்கு அரிதான திருவடித் தாமரையை தந்து அருள் புரிவாயாக.

(கறுத்து) கோபித்து (அடரும்) எதிர்த்துத் தாக்கின அரக்கர்களுடைய (அணி) படை வகுப்புக்கள் (கருக்குலைய) அடியோடு நிலைகுலைய அவர்களை நெருக்கி ஒரு கூஷண நேரத்தில் அவர்களுடைய கொழுப்பு நிறைந்த குடலை - மாமிசக்குடலை ஒளிவீசும் வேல் கொண்டு -

(கறுத்தருளி) கோபித்து (அழித்து), அலக்கண் உறு - துக்கத்தில் ஆழ்ந்திருந்த (சுரர்க்கு) தேவர்களுக்கு அவர்களுடைய ஊர் பொன்னுலகின் உரிமையைத்தந்து (அவர்களுடைய) இடரை வருத்தத்தை நீக்கியருளின மயில் வீரனே!

(செறுத்து) கோபித்துவந்த யானைக்கூட்டங்கள் திடுக்கிடும் படி அவைகளின் வலிமையுள்ள தந்தங்களை (அரி) சிங்கங்கள் கோபத்துடன் பறித்துப் போர் புரியும் பெருத்த காட்டிலே -

போதற்குக் (கருதி) எண்ணி (சென்று) மிகப் பொல்லாதவர்-களான வில்லேந்தும் (குறவர்கொடித் தனது) குறவர்களின் மகள் - வள்ளியுடைய (சிமிழ்) செப்பு (கரகம்) போன்ற கொங்கையைத் தழுவின பெருமாளே!

(பொருள் அளித்தருளி பதக்கமலம் அருள்வாயே)

## 1156.

கொஞ்சிக் குலவி ஒப்பற்ற ஒரு மயில்போல வந்து (மனோலீலை) மனத்தில் காமலீலைகள் போன்ற, (அதனால் வரும்) வினைப்பயனை யோசியாது, அந்தத் தீய வழியிலேயே சென்றும், அந்த வழியினின்றும் மீண்டு வராமலும் காலங்கழித்து தீய மனதுடனே, நியாயமற்று, (மாபாத காபோதி என) மகா பாதக கபோதி என - மிக்க பாதக நெறியிற் செல்லும் குருடன் இவன் என்று சொல்லும்படி (அல்லது ஆபாத கபோதியென) அடி வேரூன்றின கபோதி குருடன் என்று சொல்லும்படி) - ஆசை - மண், பெண், பொன் என்னும் மூவாசைகளும் -

---

"சிங்க வல்லேறு பொங்கு சினந்தருகி, எழுந்து தாய்த்
தும்பிப இருங்கடா யானை, மத்தகம் பிளந்து மாயிருங்
குன்றத்து.. சலசல வுக்க தரளக் குவால்"

- தணிகை ஆற்றுப்படை 386, 390

கொளுவ அதில் மயலாகி வீறோடு போய்நீள
மலரமளி தனிலேறி யாமாறு போமாறு
குலவிநல மொழிகூறி வாரேறு பூணார
முலைமுழ்கி;

மனமுருக மதராஜ கோலாடு மாபூசல்
விளையவிழி சுழலாடி மேலோதி போய்மீள
மதிவதன மொளிவீச *நீரான மாய்மேவி யநுராக

வகைவகையி லதிமோக வாராழி யூடான
†பொருளளவ தளவாக யாரோடு மாலான
வனிதையர்கள் வசமாய நாயேனு மீடேற
அருள்வாயே;

‡எனதுமொழி வழுவாமல் நீயேகு கான்மீதி
லெனவிரகு குலையாத மாதாவு நேரோத
இசையுமொழி தவறாம லேயேகி மாமாது
மிளையோனும்;

இனிமையொடு வருமாய மாரீச மானாவி
குலையவரு கரதூஷ ணாவீரர் போர்மாள
இறுகிநெடு மரமேழு தூளாக வேவாலி
யுயிர்சீறி;

அநுமனொடு கவிகூட Xவாராக நீராழி
யடைசெய்தணை தனிலேறி மாபாவி யூர்மேவி
அவுணர்கிளை கெடநூறி யாலால மாகோப
நிருதேசன்-

---

* நீரானம் - நீர் மிகுதி -"நீரான வாவி செறிநாடு"
அரிச்சந்திர - புரா - மயா - 25.

† பொருள் அளவு - மால் - 'கைக்காசுக் களவு அருள்பவர்'-
திருப்புகழ் 156.

‡ 4-8 அடிகள்: அயோத்யா காண்ட முதல் யுத்தகாண்டம் முடிய இராமாயண சாரம் ஆகும். விவரங்களைப் பாடல் 972, 965, 844, 880, 754, பார்க்க.

X வாராகம் - வாராகரம் - கடல்; பாடல் 1130. அடி 7.

(கொளுவ) கொழுந்துவிட்டு எரிய, அவைதனில் (மேவிக்) கொண்டவனாய், (வீறோடு போய்) வீறாப்புடன் - பெருமையுடன் நடந்தவனாய், நீண்டகாலம் மலர்ப்படுக்கையில் ஏறி, (ஆமாறு) மேலான நிலைக்கு வரும் வழிகள் எல்லாம் - (போமாறு) கெட்டழியும்படி (அல்லது - செல்வம்கூடி வரும் வழிகள் எல்லாம் தொலைந்து போம்படி), (அந்த வேசையர்களுடன்) கூடிக் குலவி, இன்பகரமான பேச்சுக்களைப் பேசி, ரவிக்கை அணிந்துள்ளதும், அணிந்துள்ள முத்துமாலையைக் கொண்டதுமான கொங்கையில் முழுகி -

மனம் உருக, மன்மத ராஜனுடைய (கோலாடு) பாணங்கள் இயற்றும் (மாபூசல்) பெரிய காமப் போர் உண்டாக, கண்கள் சுழற்சி உற்று - சுழன்று மேலே உள்ள கூந்தலை எட்டிப் பார்ப்பது போல அணுகி மீள, நிலவொளியைக் கொண்ட முகம் ஒளி வீச (நீராளமாய் மேவி) (வேர்வை) நீர் மிகவும் பெருகப் பொருந்தி, காமப் பற்றாறியே -

விதம் விதமாக மிக்க மோகம் என்னும் (வாராழியூடான) பெரிய கடலினிடையே கிடைக்கின்ற (பொருள் அளவது அளவாக) பொருளின் அளவே தாம் தரப்போகும் போகத்தின் அளவாக, எல்லாருடனும் (மாலான) காம இச்சையைக் காட்டும் (வனிதையர்கள்) மாதர்களின் வசப்பட்டவனான அடியேனும் ஈடேறும் படி அருள் புரிவாயாக,

என்னுடைய பேச்சு தவறாமல் நீ போவாயாக காட்டுக்கு என்று (விரகு) உபாயம் குறைவு படாத (மாதாவும்) கைகேயியும் நேரே தம்பிடம் விஷயங்களை எடுத்து ஓதச், சொன்ன சொல் தவறாமலே, (மாமாதும்) இலக்குமி அனைய (மனைவி) மாது சீதேவியும், தம்பி இலக்குமணனும் (கூட வர) (ஏகி) காட்டுக்குப் போய்-

கண்ணுக்கு இனிய உருவத்துடன் வந்த மாயம் வல்ல மாரீசனாம் மானின் உயிர் மாள, எதிர்த்து வந்த கர தூஷணாதிய வீரர்கள் போரில் மாள, நெருங்கி நீண்டிருந்த மராமரங்கள் ஏழும் பொடிபட்டழிய, வாலியினுடைய உயிரைக் கோபித்தழித்து -

அநுமானொடு பிற குரங்குகளும் கூடிவர, (வாராகம்) கடலாகிய நீராழி - நீர் வட்டத்தை - (அணையிட்டு) அடைத்து, அந்த அணைமீது ஏறிச்சென்று, மகா பாவியாகிய ராவணனுடைய (ஊர்) இலங்கை நகரை அடைந்து, அரக்கர்களுடைய கூட்டம் எல்லாம் மாளப் பொடி செய்து, (ஆலாலம்) ஆலகால விஷம் போல மகா கோபத்துடன் வந்த அரக்கர் தலைவன் - ராவணனுடைய -

அருணமணி திகழ்பார வீராக ராமோலி
யொருபதுமோர் கணைவீழ வேமோது போராளி
அடல்மருக குமரேச மேலாய வானோர்கள்
பெருமாளே (162)

## 1157. நல்வழி பற்ற

தனதன தனனத் தனனத் தனதன தனனத் தனனத்
தனதன தனனத் தனனத் தனதான

கொலைவிழி சுழலச் சுழலச் சிலைநுதல் குவியக் குவியக்
கொடியிடை துவளத் துவளத் தனபாரக்

குறியணி சிதறச் சிதறக் கரவளை கதறக் கதறக்
குயில்மொழி பதறப் பதறப் ப்ரியமோகக்

கலவியி லொருமித் தொருமித் திலவிதழ் பருகிப் பருகிக்
கரமொடு தழுவித் தழுவிச் சிலநாளிற்

கையிலுள பொருள்கெட் டருள்கெட் டணைவரும்
விடுசிச் சியெனக்

கடிபொரு செயலுற் றுலகிற் றிரிவேனோ;

சலநிதி சுவறச் சுவறத் திசைநிலை பெயரப் பெயரத்
தடவரை பிதிரப் பிதிரத் திடமேருத்

தமனிய நெடுவெற் பதிரப் பணிமணி சிரம்விட் டகலச்
சமனுடல் கிழியக் கிழியப் பொருசூரன்

சிவந்த ரத்னங்கள் விளங்குவனவும், (பார) கனத்ததும் (வீராகரா) - வீர - ஆகர - வீரத்துக்கு இருப்பிட மானதுமான - (மோலி) கிரீடம் ஒரு பத்தும் ஒரே (கணை) அம்பால் அற்று விழும் படித் தாக்கின போர் வீரனாம் (ஸ்ரீ ராமரின்) திருமாலின் (அடல் மருக) வலிமை நிரம்பிய மருகனே! குமரேசனே! மேம்பாடுடைய தேவர்களின் பெருமாளே.

(ஈடேற அருள்வாயே)

# 1157.

கொலை செய்வது போன்ற கொடுமையைக் காட்டும் கண் (சுழலச் சுழல) மேலும் மேலும் சுழல, வில்லைப்போல வளைந்த புருவம் (குவியக் குவிய மேலும் மேலும் குவிந்து நெருங்க, கொடி போன்ற இடை (துவளத் துவள) மேலும் மேலும் துவட்சியுற நெளிய, கொங்கைப் பாரங்களாகக்,

(குறி) குறிக்கப்படும் இடத்தில் உள்ள (அணி) ஆபரணங்கள் (சிதறச் சிதற) மேலும் மேலும் சிதற (சிதறுண்டு நழுவக்) கரவளை கையில் உள்ள வளைகள் (கதறக் கதற) மேலும் மேலும் ஒலிக்க, குயில் போலும் மொழி - பேச்சு (பதறப் பதற) மேலும் மேலும் கலக்கம் உற, ஆசை மோகத்தால் ஏற்பட்ட -

புணர்ச்சியில் (ஒருமித்து) மேலும் மேலும் ஒன்றுபட்டு, (இலவுஇதழ்) இலவம் பூப்போலும் சிவந்த வாயிதழ் ஊறல்களை மேலும் மேலும் பருகி - உண்டு, கரங்கொண்டு (தழுவித் தழுவி) மேலும் மேலும் தழுவி - அணைத்துச் சில தினங்களில் -

கையில் உள்ள பொருள்கள் அழிந்துபோய், (அருள் கெட்டு) நல்ல அருட் குணமும் கெட்டு, (அனைவரும்) யாவரும் (விடு சிச்சி என) சீ சீ விலகு என்று சுடிகின்ற ஒரு (செயல் உற்று) நடவடிக்கையை மேற்கொண்டு இந்த உலகிலே திரிவேனோ!

(சலநிதி) கடல் (சுவறச் சுவற) மேலும் மேலும் வற்றிப் போம்படியும், (திசை நிலை) எட்டுத் திக்குகளின் நிலையும் (பெயரப் பெயர) மேலும் மேலும் சலிப்புற்று அலையத், (தடவரை) பெரிய கிரவுஞ்சகிரி (பிதிரப் பிதிர) மேலும் மேலும் சிதறுண்டு விழ, வலிமை பொருந்திய மேரு என்கின்ற,

(தமனிய நெடு வெற்பு) பொன் மலையாம் நீண்ட மலை அதிர்ச்சி உற, (பணி மணி) (பாம்பு) ஆதிசேஷனுடைய சிரத்தில் உள்ள மணி சிரத்தை விட்டுச் சிதறி விழ (சமனுடல்) யமனுடைய தேகம் (கிழியக்கிழிய) மேலும் (மேலும் போரில் அடிபட்டு விழும் அசுரர் கூட்டங்களின் உயிர்களை ஓடிஓடிக் கவர்தலால் அலுப்புண்டு, பீறுண்டு) குலைய, எதிர்த்துச் சண்டைசெய்யும் சூரனுடைய -

பெலமது குறையக்குறையக் கருவிகள் *பறையப் பறையப்
† பிறநரி தொடரத் தொடரத் திரள்கூகை-
பெடையொடு ‡குழறக் குழறச் சுரபதி பரவப் பரவப்
ப்ரபையயில் தொடுநற் குமரப் பெருமாளே (163)

## 1157-1. கலியுக நெறி

தானனா தனன தத்த தானனா தனன தத்த
தானனா தனன தத்த தனதான

கோழையா ணவமி குத்த வீரமே புகல்வர் அற்பர்
கோதுசே ரிழிகு லத்தர் குலமேன்மை-
கூறியே நடுவி ருப்பர் சோதிடார் தரும புத்ர
கோவுநா னென இசைப்பர் மிடியூடே,
ஆழுவார் நிதியு டைக்கு பேரனா மெனஇ சைப்பர்
ஆகுசேர் Xகலியு கத்தி னெறியீதே-

---

* பறைதல் = ஒழிதல்

† நரியும் கூகையும் -

'வேறுபடு குரல வெவ்வாய்க் கூகையொடு பிணந்தின்
குறு நரி' - புறநானூறு 359

‡ கூகை குழறுதல் - கோட்டான் குழறுதல்:

'வளைவாய்க் கூகை நன்பகற் குழற' பட்டினப். 268.

'வெருவக் குழறிய விழிகட் கூகைக் கடுங்குரல்' - பெருங்கதை 3-22-151

" கூகை குழறினும்"- குறுந்தொகை. 153

'வெருவர மன்ற மரா அத்த கூகை குழறினும்' அகநா 158.

X கலியுக இயல்பு -

கோழை ஒருவன் - ஒருவீரன் நான் என்பான்; இழிகுலத்தவன் உயர் குலத்தவன் நான் என்பான்; பசித்து வந்து ஏற்பவருக்கு ஒன்றும் கொடுக்காதவன் - நான் தருமராஜா தெரியுமா என்பான்; தரித்திரன் ஒருவன் - நான் குபேரன் என்று டம்பம் பேசி, ஏமாற்றுவான் - இங்ஙனம் உண்மை நிலை ஒன்றிருக்க உண்மையற்ற நிலையே மேலோங்கி விளங்கும் கலியுகத்தில் என்பர் - உதாரணமாக.

" தாலமர நிழலினல் லோரமுதம் உண்கினும்
தப்பாது குடிய ரென்பர்
தவமிகுத் துளபேர்கள் பித்தளை அணிந்திடில்
தங்க மென்றே மொழிகுவார்
வாலிபந் தன்னிலே அதிசீல ராகவே
வைகினும் விடனென்பர் காண் (தொ.பக். 375)

பலமானது மேலும் மேலும் குறைவுபட்டு ஒடுங்கக், (கருவிகள்) பகைவருடைய ஆயுதங்கள் (அல்லது கூட்டங்கள்) மேலும் மேலும் அழிபட்டு ஒழிய, (பிற நரி) நரி பிற - நரியும் (பிறவும்) கழுகு முதலிய பிறவும் (தொடரத் தொடர) மேலும் மேலும் (பிணங்களைத் தின்ன) நெருங்கிவர, கூட்டமாய்க்கூடும் (கூகை) கோட்டான்கள்,

(பெடையொடு) பெண் கோட்டான்களுடன் (குழறக் குழற) மேலும் மேலும் கூவச், (சுரபதி) தேவர் தலைவனாம் இந்திரன் மேலும் மேலும் போற்றித் துதிக்கப், (ப்ரபை அயில்) ஒளி வீசும் வேலாயுதத்தைத் (தொடு) செலுத்தின நல்ல குமரப் பெருமானே!

(கடியொரு செயலுற்று- திரிவேனோ)

# 1157 -1

கோழையாய் (பயந்தவராய்) இருப்பவர் (ஆணவம் மிகுத்த வீரமே புகல்வர்) ஆங்காரம் மிக்க வீரப் பேச்சைப் பேசுவார்; (அற்பர்) கீழ் மக்களாயும் (கோது சேர்) குற்றம் உள்ள இழிகுலத்தவராயும் இருப்பவர் தங்கள் குலத்தின் மேன்மையைப்

பேசிச் சபை நடுவே வீற்றிருப்பார்; தருமமாகச் சோறே (பசித்தவருக்கு) இடாத பேர்வழி - தரும புத்ர ராஜனே நான் என்று தும்மைப் புகழ்ந்து பேசுவார்; (மிடிபூடே) தரித்திர நிலையிலே.

ஆழ்ந்து கிடப்பவர் செல்வம் மிக்க குபேரனாம் நான் எனத்தம்மைப் புகழ்வர்; குற்றம் நிறைந்த கலியுகத்தின் போக்கு இப்படித்தான் இருக்கிறது.

---

வறுமைசேர் எளியவர்கள் வயிரமது பூண்கினும்
வளையற்கல் என உரைப்பார்
சீலம் புறத்திலும் அகத்தின் அக் கிரமமும்
செயும் ஈன ரைப்புகழுவார்
சித்த சுத் தியதாகி ஞானநெறி தேர்ந்திடும்
திவ்யபெரி யோரை இகழ்வார்
காலகலி யுகதருமம் ஈதென உரைத்திடுவர்
கற்பக விராச மேவு
கங்கைபுனை ஈசனே மங்கை மகிழ் நேசனே
கயிலையங் கிரிவாசனே." (கயிலாசநாதர் சதகம் 28)

- எனவரும் பாடலையும் காண்க.

கலியின் கொடுமையை அருணகிரியார் அஞ்சுவதை -

"பொய்க்கலி போமாறு"- எனவரும் திருப்புகழ்ப் பாடலிற் காண்க (950).

ஆயுநூ லறிவு கெட்ட நானும் வேறல அதற்கு
ளாகையா லலையடக்க வுரையீதே;
ஏழைவா னவர ழைக்க ஆணைவா சவனு ருத்ர
ஈசன்மேல் வெயிலெ றிக்க மதிவேணி-
ஈசனார் தமதி டுக்க மாறியே கயிலை வெற்பில்
ஏறியே யினிதி ருக்க வருவோனே,
வேழமீ துறையும் வஜ்ர தேவர்கோ சிறைவி டுத்து
வேதனா ரையும் விடுத்து முடிசூடி-
வீரசூ ரவன் முடிக்கு ளேறியே கழுகு கொத்த
வீறுசேர் சிலை யெடுத்த பெருமாளே (164)

## 1158. கழல் சேர

தந்தனந் தனந்த தந்த தந்தனந் தனந்த தந்த
தந்தனந் தனந்த தந்த தனதான

சந்தனங் கலந்த குங்கு மம்புனைந் தளிர்ந்த கொங்கை
சந்திரந் ததும்ப சைந்து தெருவூடே-
சங்கினங் குலுங்க செங்கை யெங்கிலும் பணிந்து டம்பு
*சந்தனந் துவண்ட சைந்து வருமாபோல்;
கொந்தளங் குலுங்க வஞ்சி லம்புபொங்க இங்கு கங்கள்
கொஞ்சிபொன் தொடர்ந்தி டும்பொன் மடவார்தோள்-

*சந்து அ(ன்)னம் - தூதுக்கு உரிய பறவைகளுள் அன்னமும் ஒன்று. இதுவே நளனுக்கும் தமயந்திக்கும் இடைய தூது சென்றது - தூதுக்கு உரிய பறவைகள். நாரை; வண்டு, அன்னம், கிளி, அன்றில், குயில், புறா -

"எகினமயில் கிள்ளை எழிலியொடு பூவை
சகி குயில் நெஞ் சந்தென்றல் வண்டு - தொகைபத்தை
வேறு வே றாய்ப் பிரித்து வித்தரித்து மாலை கொண்டன்
பூறிவா என்றல் தூது"
- பிரபந்தத்திரட்டு - இலக்கண விளக்கம் - சூ 874- உரை

ஆய வேண்டிய நூலறிவு இல்லாத நானும் மேற்சொன்ன வழிக்கு வேறுபட்டவனல்ல அந்த வழியில்; ஆசையால் அவையடக்கப் பேச்சுப்போல நான் சொன்ன உரையாகும் இது.

கஷ்ட திசையில் இருந்த தேவர்கள் அழைக்க, (ஐராவதம் என்னும்) ஆனையை உடைய (வாசவன்) இந்திரன், ருத்ரன், (ஈசன்) பிரமன் (அல்லது) திருமால், (அல்லது ருத்ர ஈசன் - ருத்ர தேவன்) இவர்கள் மீது (வெயில் எறிக்க) சூரனுடைய வெயில் போன்ற கொடுமை தாக்க (மதி வேணி) நிலவு அணிந்த சடையை உடைய,

(ஈசனார்) சிவபிரான் (தமது) தங்களுடைய (இடுக்கம் துன்பத்தை (உன்னைக் கொண்டு) (மாறியே) மாற்றியே - நீக்கின பின், கயிலை வெற்பில் இனிதிருக்க - கயிலை மலையில் (கந்த மாதனத்தில்) இன்புற்றிருக்கத் தோன்றிய பெருமாளே!

(வேழம் மீது) ஐராவதத்தின்மீது வீற்றிருக்கும் (வஜ்ர தேவர்) வஜ்ராயுதத்தை - குலிசாயுதத்தை ஏந்திய (கோ) தலைவனாகிய இந்திரனுடைய சிறையை நீக்கியும், (வேதனாரையும்) பிரமனையும் (விடுத்து) சிறையினின்றும் விடுவித்தும், (முடிசூடி) இந்திரனுக்கு வானுலக அரசாட்சியைத் தந்து -

வீரமுள்ள சூரனுடைய (முடிக்குள்) தலையில் ஏறி கழுகுகள் கொத்தும்படி - (அவன் உடலை அழிக்கவல்ல) பெருமை வாய்ந்த வில்லை எடுத்த பெருமாளே!

## 1158.

சந்தனத்தையும் அதனுடன் கலந்த குங்குமத்தையும் (புனைந்து அணிந்த) பூசி அணிந்துள்ள கொங்கை (சந்திரம் ததும்ப அசைந்து) பொன்னொளி (பொன் ஆபரணங்களின் ஒளி மிக்கு வீச அசைந்து) தெருவிலே -

(சங்கு இனம் குலுங்க செங்கை எங்கிலும்) - செங்கை எங்கிலும் செவ்விய கை நிறைய (சங்கு) சங்கினாற் செய்த கை வளையல்களின் கூட்டம் ஒலி செய்ய, (பணிந்து உடம்பு) பணிந்து உடம்பு - பணிவு காட்டும் தேகம் சந்தனத்துடன் துவட்சியுற்று அசைந்து வருவதுபோல (வந்து), அல்லது - சந்து அ(ன்னம்) - சந்து - தூதுக்கு அமைந்த - அன்னப் பட்சி துவட்சியுடன் அசைந்து வருவதுபோல் நடந்து வந்து)-

(கொந்தளம்) கூந்தலின் முடி அசைய, (காலில்) நல்ல சிலம்பின் ஒலி நிறைந்து எழ, இனிமையான (சுகங்கள்) சுகத்தைத் தரும் பேச்சுக்களைக் கொஞ்சிப் பேசிப், (பொன் தொடர்ந்திடும்) பொற்காசு பெறுதற்கு வேண்டிய வழிகளைப் பின்பற்றி முயலுகின்ற (பொன் மடவார்) அழகிய மாதர்களின் தோள்களையும்,

கொங்கைபைங் கரம்புணர்ந் தழிந்துணங்க ளுந்தவிர்ந்து
கொஞ்சுநின் சரண்க ளண்ட அருள்தாராய்;

தந்தனந்த செஞ்சி லம்பு கிண்கிணிங்கு லங்கள் கொஞ்ச
தண்டையம்ப தம்பு லம்ப வருவோனே-

சந்தனம் புனைந்த கொங்கை கண்களுஞ் சிவந்து பொங்க
சண்பகம் புனங்கு றம்பொன் அணைமார்பா,

வந்தநஞ் சுகந்* தமைந்த கந்தரன் புணர்ந்த வஞ்சி
மந்தரம் பொதிந்த கொங்கை யுமையீனும்-

மைந்தனென் றுகந்து விஞ்சு மண்பணிந்த சிந்தை யன்பர்
மங்கலின் றுளம்பு குந்த பெருமாளே (165)

## 1159. பாட

தனன தனதனன தான தானன
தனன தனதனன தான தானன
தனன தனதனன தான தானன தந்ததான

† சுருதி வெகுமுகபு ராண கோடிகள்
சரியை கிரியைமக யோக மோகிகள்
துரித பரசமய பேத வாதிகள் என்றுமோடித்-

தொடர வுணரஅரி தாய‡ தூரிய
பொருளை யனுகியநு போக மானவை
தொலைய இனியவொரு ஸ்வாமி யாகிய நின்ப்ரகாசங்,

---

* அமைந்த = அமைத்த.

† "சுருதியூடு கேளாது சரியை யாளர் காணாது
தூரியமீது சாராது எவராலும் தொடரொணாது"
-திருப்புகழ். 1052

‡ தூரிய = துரிய.

கொங்கைகளையும் அழகிய கரங்களையும் அணைந்து (உடல் நலம்) அழிந்து (உணங்கல்) சிந்தை வாடி மெலிதல் (தவிர்ந்து) நீங்கி ஒழிந்து, (சிலம்பு தண்டை முதலியன) கொஞ்சும் - ஒலிக்கும் உன் சரணங்கள்) திருவடிகளை (அண்ட) நெருங்கிச் சேர அருள் பாலிப்பாயாக.

தந்தனந்த என்ற ஒலியுடன் செவ்விய சிலம்பும், (கிண்கிணின்) கிண்கிணியின் (பாதசதங்கையின்) (குலங்கள்) கூட்டங்களும் (கொஞ்ச) ஒலிக்கத், தண்டைகள் (அம்பதம்) அழகிய திருவடியில் (புலம்ப) ஒலிக்க வருபவனே!

சந்தனம் அணிந்துள்ள கொங்கைகளும், கண்களும் செந்நிற முற்று எழுச்சி காட்டச், சண்பக மரங்களுள்ள (புனத்தில்) மலைச்சார்புக் கொல்லையில் இருந்த (அல்லது சண்பக மலர் சூடிக் கொண்டு தினைப்புனத்தில் இருந்த (குறம்பொன்) குறத்தியாகிய பொன் அனைய வள்ளியை அணைந்த மார்பனே!

(கடலில் தோன்றி) வந்த (நஞ்சு) விஷத்தை (உகந்து) மகிழ்ச்சியுடன் (உண்டு) அமைந்த (அமைத்து) தங்கவைத்த (கந்தரன்) திருக்கழுத்தை உடையவனாகிய சிவபிரான் கலந்து சேர்ந்த வஞ்சிக்கொடி போன்றவளும், மந்தர மலைபோலப் (பொதிந்த) நிறைந்த கொங்கையை உடையவளுமான உமையம்மை பெற்ற

மைந்தன் என்று மகிழ்ச்சியுடன், விஞ்சு - மேலான வகையில், மன் - நன்றாக - மிகவும், (பணிந்த) தொழுகின்ற (அல்லது) விஞ்சும் மேன்மேலெழும் அன்பு அணிந்த அன்பைக் கொண்டுள்ள) சிந்தையை - உள்ளத்தைக் கொண்டுள்ள அன்பர்களின் - அடியார்களின், மங்கலின்றுளம் புகுந்த - உளம் மங்கலின்று புகுந்த, உள்ளத்தில் மங்குதல் இன்றி - ஒளிமழுங்குதல் இல்லாமல் - விளக்கமாகப் புகுந்து விளங்கும் பெருமாளே.

(சரணங்கள் அண்ட அருள்தாராய்)

## 1159.

(சுருதி) வேதமும், (வெகுமுக) பலவிதப்பட்ட கோடிக்கணக்கான புராணங்களும், சரியை மார்க்கத்தில் இருப்பவர்களும், கிரியை மார்க்கத்தில் நடப்பவர்களும், மகாயோக மார்க்கத்தில் ஆசை பூண்டு உள்ளவர்களும், (துரிதம்) கலக்கத்தைத்தரும் பரசமய பேதங்களை மேற்கொண்டு வாதிப்பவர்களும், என்றும் ஓடி (வேகத்தில் ஆய்ந்து)

தொடர்ந்து பற்றுதற்கும், உணர்தற்கும் அருமையானதான (துரிய பொருளை) சுத்தநிலைப் பரம்பொருளை அண்டி நெருங்கி, (உலக) அநுபோகங்கள் தொலைந் தொழிய - ப்ரபஞ்ச ஆசைகள் அற்றுப் போக - இன்பம் தரும் ஒப்பற்ற சுவாமியாகிய (உனது) திவ்ய பேரொளியைத்-

கருதி யுருகியவி ரோதி யாயருள்
பெருகு பரமசுக மாம கோததி
கருணை யடியரொடு கூடி யாடிம கிழ்ந்துநீபக்

கனக மணிவயிர நூபு ராரிய
கிரண சரண அபி ராம கோமள
கமல யுகளமற வாது பாடநி னைந்திடாதோ;

*மருது நெறுநெறென மோதி வேரோடு
† கருது மலகைமுலை கோதி வீதியில்
‡ மதுகை யொடுதறுக ணானை வீரிட
வென்றுதாளால்-

X வலிய சகடிடறி மாய மாய்மடி
படிய நடைபழகி யாயர் பாடியில்
வளரு முகில்மருக வேல்வி நோதசி கண்டிவீரா;

O விருதர் நிருதர்குல சேனை சாடிய
விஜய கடதடக போல வாரண
விபுதை புளகதன பார பூஷண அங்கிராத-

விமலை நகிலருண வாகு பூதர
விபுத கடககிரி **மேரு பூதர
விகட சமரசத கோடி வானவர்
தம்பிரானே (166)

---

* மருத மரத்தை மோதியது - பாடல் 143-பக்கம் 332 குறிப்பு

† பேய்முலை உண்டது - பாடல் 115-பக்கம் 274; பாடல் 408 பக்கம் 534 கீழ்க்குறிப்பு

‡ குவலயா பீடம் என்னும் யானையை அட்டது -
பாடல் 120-பக்கம் 286; பாடல் 882-பக்கம் 580 கீழ்க்குறிப்பு

X சகடு உதைத்தது - பாடல் 111-பக்கம் 264 கீழ்க்குறிப்பு

O விருதர் - வீரர் -"வாளி கொண்ட விருதர்"
- வில்லி. பாரதம். வாரணா. 76

** மேரு பூதர சமர - "வேலுக் கணிகலம் வேலையும் சூரனும்
மேருவுமே"- கந்தரலங். 62

தியானித்து, உள்ளம் உருகி, அவிரோத ஞானம் கொண்டவனாய் (எல்லா உயிரும் எகதுயிர் என்னும் இதயபாவனை உடையவனாய்), அருள் பெருகும் பரம சுகமாம் மகோததி - பெரிய கடலில், கருணை நிறைந்த உன் அடியார்களுடன் கூடித்திளைத்து மகிழ்ந்து, (நீ பம்) கடம்பும் -

(கனகமணி வயிரம்) பொன், ரத்னம், வயிரம் இவை விளங்கும் (நூபுரம்) சிலம்பு அணிந்ததும், (ஆரிய) மேலான (கிரண) ஒளிவீசுவதும், (சரணம்) அடைக்கலத்தானமாய், (அபிராம) அழகுள்ளதாய், (கோமளம்) இளமை விளங்குவதான (கமலயுகளம்) உன் திருவடித்தாமரைகளாம் இரண்டையும் நான் மறவாமல் பாடத் தங்கள் திருவுள்ளம் நினைவு கொள்ளாதோ!

மருதமரங்களை நெறுநெறென வேருடன் முறியும்படி மோதியும், (தன்னைக் கொல்லக் கருதிவந்த) அலகைப் பேயின் கொங்கையைக் (கோதி) குடைந்து தோண்டியும், தெருவிலே (மதுகையோடு) வலிமையுடனும் (தறுகண்) கொடுமையுடனும் கொல்லவந்த (ஆனை) குவலயா பீடம் என்னும் யானை (வீரிட) அலறிக் கூச்சலிட அதை வென்றும், காலால்

வலிமை வாய்ந்த (சகடு) வண்டியை (இடறி) எற்றி உதைத்து (மாயமாய்) தந்திரமாய் - மடிபடிய - மடிதல் படிய - (தன்னைக் கொல்லவந்த அசுரன் மறுபடியும் - (நடைபழகி) தவழ்ந்து நடந்தும், ஆயர்பாடியில் - இடைச் சேரியில் வளர்ந்த (முகில்) மேக-வண்ணனாம் திருமாலின் மருகனே! வேலாயுதத்தை ஏந்தும் அற்புத மூர்த்தியே! மயில் வீரனே!

(விருதர்) வீரர்களாம் அசுரர் குலச் சேனைகளைத் துகைத்தழித்த (விஜய) வெற்றியாளனே! (கடம்) மதத்தைக்கொண்ட விசாலமான, (கபோலம்) கன்னத்தை உடைய (வாரணம்) ஐராவதம் வளர்த்த (விபுதை) தேவமாது - தேவசேனையின் புளகம் கொண்ட (தனபாரம்) கொங்கைப் பாரங்களைப் (பூஷண) அலங்காரமாகத் தரித்துள்ளவனே! (அம்) அழகிய (கிராத) வேடர் குலத்து

(விமலை) பரிசுத்ததேவி - வள்ளியின் (நகில்) கொங்கையை (அணையும்) (அருண) - சிவந்த (வாகுபூதர) தோள்மலையை உடையவனே! (விபுத கடக) தேவர்களாம் சேனைக்கு நாயகனே! கிரிமேரு பூதர விகட சமர! மலைகளுள் மேருமலையுடன் மாறு பட்டுப் பொருதவனே! (சதகோடி) நூறு கோடிக்கணக்கான - எண்ணரிய - (வானவர்) தேவர்களுக்குத் தம்பிரானே!

(மறவாதுபாட நினைந்திடதோ)

## 1160. கழல் பெற

தத்தத் தனதன தத்தன தனதன
தத்தத் தனதன தத்தன தனதன
தத்தத் தனதன தத்தன தனதன தனதானத்

சுற்றத் தவர்களு மக்களு *மிதமுள
சொற்குற் றரிவையும் விட்டது சலமிது
சுத்தச் சலமினி சற்றிது கிடைபடு மெனமாழ்கித்-
துக்கத் தொடுகொடி தொட்டியெ யழுதழல்
சுட்டக் குடமொடு சுட்டெரி கனலொடு
தொக்குத் தொகுதொகு தொக்கென
இடுபறை பிணமுடச்,
சற்றொப் புளதொரு சச்சையு மெழுமுடல்
சட்டப் படவுயிர் சற்றுடன் விசியது
தப்பிற் றவறுறு மத்திப நடையென உரையாடிச்-
சத்திப் பொடுகரம் வைத்திடர் தலைமிசை
தப்பிற் றிதுபிழை யெப்படி யெனுமொழி
தத்தச் சடம்விடு மப்பொழு திருசர
ணருள்வாயே

சிற்றிற் கிரிமகள் கொத்தலர் புரிகுழல்
சித்ரப் ப்ரபைபுனை பொற்பின ளிளமயில்
† செற்கட் ‡ சிவகதி யுத்தமி களிதர முதுபேய்கள்-

* இதமுள சொற்கு உற்ற அரிவை எனப் பிரிக்க.

† செற்கண் = மேகம்போன்ற கண்; செல் - மேகம். மழைக் கண் என்பது வழக்கு. குளிர்ந்த கண். 'பேதை பெருமழைக் கண்" - திருக்குறள் 1239 -"வாள்கெழு மழைக்கண் வாசவ
தத்தை" - பெருங்கதை. 2-7-107. சேல்கண் - எனலுமாம்.

‡ சிவ கதி உத்தமி களிதர - பேய்கள் தத்தரி தரியென -
நடமாடும் அரன்.

1. சிவ கதி - முத்தி வீட்டுலகு - " சிவ கதி நாயகன்"
- சிலப். 10 -180. தேவி முத்தியைத் தருவாள் -
"பெறுவார். . அழியா முத்தி வீடுமன்றோ. பாமனைப்
டைங்கிளியே"- அபிராமி. அந். 15

2. தேவி களிக்க - அரன் ஆடுதல் - " மாமலை வேந்தன் மகள் மகிழ
ஆடி" - "உமையவள் மகிழ் நடம் நவில்பவன்"
- சம்பந்தர். 1-39-7, 1-125-5.

(தொ. பக். 383)

## 1160.

சுற்றத்தார்களும், மக்களும், இன்பம் தருவதான சொல்லுக்கு உரிய அரிவை - மனைவியும் - (நோயாளியின் படுக்கையின் அருகில் ஈரம் இருக்கக் கண்டு) விட்டது சலம் (அது விட்ட சலம் -) அது நோயாளி விட்ட மூத்திரம்; இது சுத்த சலம் - இது நல்ல நீர் - எனப்பேசி, இனி (சற்று) கொஞ்ச நேரத்தில் (இது) இந்நோய் (கிடைபடும்) படுக்க வைக்கும் என்று (மாழ்கி) மயங்கி வருந்தி -

துக்கத்துடனும் (கொடிது ஒட்டியே) கஷ்டத்துடனும் அணுகியிருந்தே, அழுது, (அழல் சுட்ட) தீயாற் சுட்டெரிக்க, (குடமொடு), நெருப்புச் சட்டியில் - சுடுதற்கு வேண்டிய தீயுடன் (செல்லத்), தொக்குத் தொகுதொகு தொக்கென்று அடிபடும் பறை தொடங்கி ஒலிசெய, பிணத்தை மூடுவதற்கு -

சற்று - கொஞ்ச நேரம், ஒப்புளதொரு - ஏற்புடையதான சமயத்தில் பொருந்தியதான (சச்சையும்) ஆராயச்சிப் பேச்சும் - (என்ன என்ன ஏற்பாடு செய்யவேண்டும் என்கின்ற ஆராய்ச்சிப் பேச்சும்) (எழும்) பிறக்கும்; உடல் சட்டப்பட - நன்றாகக் கெட்டுப்போக, (உயிர்) - உயிரானது, சற்று உடன் - கொஞ்ச நேரத்துக்குள் விசியது - உயிருக்கு உடலுடன் உள்ள கட்டு, (தப்பில்) தவறிப்போனால் (தவறு உறும்) பிழை - (ஆபத்து) உண்டாகும் (மத்திப நடை என) இப்போது (நாடி) மட்டமான நிலையில் உள்ளது என்றெல்லாம் (உரையாடி) பேசிக்கொண்டிருக்கக்,

கூச்சலிட்டு - இடர் - வருத்தத்துடன் தலைமீது கரம் வைத்து ஐயோ என்று (ஏங்கி) தலைமேல் கையை வைத்து, (தப்பிற்று) நாடி தவறுகின்றது - (இது - இச்சமயம் இவ்வுயிர் பிழைத்தல் எப்படி முடியும் என்கின்ற (மொழி) பேச்சு - (தத்த) எழ - பரவ, (சடம் விடும் அப்பொழுது) உடலை உயிர் விடும்போது (உனது) இரண்டு திருவடிகளைத் தந்தருளுக.

சிற்றிலை - சிறுவீடு கட்டி விளையாடும் - (கிரிமகள்) - மலை மகள், கொத்தான மலர்கள் வைத்துள, கடை குழன்று சுருண்ட கூந்தலை உடைய (சித்ர) விசித்ரமான (பிரபை புனை) ஒளி வாய்ந்த (பொற்பினள்) அழகை உடையவள், இளமயில் போன்றவள், செல்-கண் - மழைபோலும் குளிர்ந்த கண்ணை உடையவள் (அல்லது சேல்மீன்போலும் கண்ணை உடையவள்), (சிவகதி) முத்தியைத் தரும் உத்தமி, - ஆகிய தேவி கண்டு களிக்க)ப் பழமையான பேய்க்கூட்டங்கள் -

---

3. பேய்கள் தத்தரி தரியென (அரனார்) நடமாடுதல் -
"பேய்கள் கையடித் தோடிடு காடரங்கா.. ஆடும் எங்கள் அப்பன்"- காரைக்கால் அம்மை - மூத்த திருப்பதிகம். 4

திக்குச் செகசெண தித்தரி திகுதிகு
செச்செச் செணக்ருத டொட்டரி செணக்ருத
டெட்டெட் டுடுடுடு தத்தரி தரியென நடமாடுங்,
கொற்றப் புலியதள் சுற்றிய அரனருள்
குட்டிக் கரிமுக னிக்கவ லமுதுசெய்
*கொச்சைக் கணபதி முக்கண னிளையவ களமீதே-
குப்புற் றுடனெழு சச்சரி முழவியல்
கொட்டச் சுரர்பதி மெய்த்திட நிசிசரர்
கொத்துக் கிளையுடல் பட்டுக அமர்செய்த
பெருமாளே (167)

## 1161. கழல் பெற

தந்த தத்தன தானாதன தந்த தத்தன தானாதன
தந்த தத்தன தானாதன தனதான

செங்க னற்புகை யோமாதிகள் குண்ட மிட்டெழு
† சோமாசிகள்
தெண்டெ னத்துணை தாள் மேல்விழ அமராடிச்-
சிந்த லைப்படி மோகாதியி லிந்த்ரி யத்தினி லோடாசில
தின்டி றற்றவ வாள்வீரரொ டிகலாநின்;
றங்கம் வெட்டிய கூர்வாள்விழி மங்கை யர்க்கற
மாலாய்மன
‡ மந்தி பட்டிருள் மூடாவகை Xயவிரோத-
அந்த நிர்குண ஞானோதய சுந்த ரச்சுட ராராயந
லன்பு வைத்தரு ளாமோர்கழ லருளாதோ;

---

*கொச்சைக் கணபதி - கணபதியின் தோற்றம் இளப்பமானது ஆதலின் கொச்சைக் கணபதி என்றார் - அவரது இளப்பமான தோற்றம்-

"பொழி கரட மதகய வதனமும், அதில் ஒரு கோடும்,
புழைக்கை வீச்சும்; குழி விழியும், நால் வாயும்,
படு புகரும், பெரு வயிறும், குறிய தாளும்;
ஒழிவில் கரு மூஷிகமும், படைத்தழகு விநாயகனென்
றொருபேர் பூண்டு, பழிதப வாழ் வித்தகனை நினைந்து
துதி புரிந்து பதம் பணிந்து வாழ்வாம்"

- என வர்ணிக்கப்பட்டுளது - வீரவனப் புராணம்

† சோமம் - யாகங்களில் தேவதைகளுக்கு நிவேதித்துப் பின்பு யாகம் செய்பவர் பருகுதற்குரிய இரசம் சித்தம் செய்யும் கொடி; சோமயாஜி - சோமயாகம் செய்தோன்; சோம யாகம் - தேவர் பொருட்டுச் சோமரசம் அளிக்கும் வேள்வி வகை. (பிங்கலம்). சோமயாஜிகளும், தவ வீரர்களும்கூடப்

திக்குச் செகசெண திந்தரி திகுதிகு தந்தரி தரியென்று ஆடிச் சூழ்தர, நடனம் ஆடுகின்ற

வீரமுள்ள புலியின் தோலை (ஆடையாகச்) சுற்றியுள்ள சிவபிரான் அருளிய குட்டிக்கரிமுகன் - குழந்தை யானைமுகக் கணபதி, (இக்கு) கரும்பு, அவல், இவை தளம அமுது செய்யும் (கொச்சைக் கணபதி) பார்ப்பதற்கு இளப்பமான தோற்றத்தை உடைய கணபதி, மூன்று கண்களை உடையவன் - ஆகிய விநாயகமூர்த்திக்கு இளையவனே (தம்பியே)! போர்க்களத்தில் -

(குப்புற்றுடன் எழு) மேற்கிளம்பி ஒலிக்கும் (சச்சரி) வாத்திய வகை, (முழவு) முரசு இவை (இயல் கொட்ட) தகுதியுடன் முழங்க, (சுரர்பதி) தேவர் தலைவன் - தேவேந்திரன் (மெய்த்திட) நிலைபெற்று உண்மையாய் வாழ, அசுரர் கூட்டமும் சுற்றமும் உடல் அழிபட்டுச் சிதறப் போர்செய்த பெருமாளே!

(இரு சரண் அருள்வாயே)

## 1161.

செவ்விய தீயின் புகை எழும் ஓமாதிகளில், (குண்டமிட்டு) ஓமகுண்டங்கள் அமைத்து , மேலான (சோமரசம் அளிக்கும்) வேள்வி - யாகங்களைச் செய்த சோமயாஜிகளும், தண்டம் என்று (தங்கள்) இரண்டு திருவடிகளில் விழும்படிப் போர் செய்ய வல்லதும் -

சிந்தனையில் அழுந்திய மோகம் ஆதிய - மோகம், மதம், மாற்சரியம், இடும்பு, அசூயை, காமம், குரோதம், உலோபம் எனப்படும் எண்வகைப்பட்ட துர்க்குணங்களும், இந்திரிய சபலங்களும், ஐம்பொறிகளால் வரும் சேஷ்டைகளும் (ஒடா) தாக்கித் தம்மை ஆட்டாத சில பலத்த வன்மையை உடைய தவ ஒளிகொண்ட வீரருடன் மாறுபட்டு நின்று, அவர்களுடைய

(அங்கம்) உடலை வெட்டும்படியான கூர்மை கொண்டது மான விழிகளை உடைய மங்கையர்மீது மிகவும் காமமயக்கம் கொண்டவனாய், அந்த (காமத்திலே) மனம் (அந்தி பட்டு) பொருந்தி, அஞ்ஞான இருள் வந்து மூடாத வகையில், அவிரோதம் (பகைமையின்மை) (எனப்படும்)

அந்த குணம் கடந்த ஞானோதய அழகொளியை நான் ஆராய நல்ல அன்பை என்மீது வைத்துத் திருவருளுக்கு இடமான ஒப்பற்ற உனது திருவடி எனக்கு அருள் பாலிக்காதோ!

---

பெண்களால் மதிமயங்குவர் - இக்கருத்தைப் பாடல்கள் 158, 362, 921, 943, 1277 - ல் பார்க்க.

‡ அந்தித்தல் - பொருந்துதல் - கந்தரந்தாதி. 4,6

X "அவிரோத ஞானச் சுடர் வடிவாள்" - கந்தரலங். 25

கொங்க டுத்தகு சாமாலிகை தண்க டுக்கைது ழாய்தாதகி
கும்பி டத்தகு பாகீரதி மதிமீது-
கொண்ட சித்ரக லாசூடிகை யின்டெ ருக்கணி *காகோதர
குண்ட லத்தர்†பி னாகாயுத ருடனேயச்;
சங்கு சக்ரக தாபாணியு மெங்க ளுக்கொரு வாழ்வேசுரர்
தங்க ளைசசிறை மீளாயென அசுரேசன்-
தஞ்ச மற்றிட வேதாகர ஞஞ்ச வெற்புக வீராகர
சண்ட விக்ரம வேலேவிய பெருமாளே (168)

## 1162. தாள் சேர

தானதனத் தானதனத் தானதனத் தானதனத்
தானதனத் தானதனத் தனதான

சேலையடர்த் தாலமிகுத் தேயுழையைச் சீறுவிதித்
தூறுசிவப் பேறுவிழிக் கணையாலே-
தேனிரதத் தேமுழுகிப் பாகுநிகர்த் தாரமுதத்
தேறலெனக் கூறுமொழிச் செயலாலே;
ஆலிலையைப் போலும்வயிற் றாலளகத் தாலதரத்
தாலுமிதத் தாலும்வளைப் பிடுவோர்மேல்-
ஆசையினைத் தூரவிடுத் தேபுகழ்வுற் றேப்ரியநற்
றாளிணையைச் சேர எனக் கருள்வாயே
‡காலனைமெய்ப் பாதமெடுத் தேயுதையிட் டேXமதனைக்
காயஎரித் தேவிதியிற்O றலையூடே-

* காகோதரம் = பாம்பு. பாம்பு குழைகள். "படந்தாங்கிய அரவக் குழைப் பரமேட்டி"- சம்பந்தர். 1-9-3

† பினாகம் - சிவனது வில்

‡ மன்மதனைக் கண் விழித்து எரித்தார்; திரிபுரத்தைச் சிரித்து எரித்தார், பிரமன் தலையை நகத்தாற் கிள்ளிக் கொய்தார்; யமனைக் காலால் உதைத்து மாய்த்தார். ஆகவே, சிவனது பராக்ரமச் செயல்கள் எல்லாம் ஆயுதமின்றி நிகழ்ந்தன; அங்ஙனம் இருக்க அவர் ஏன் பரசும் - மழுவும், பினாகமும் சூலமும் கை சிவக்கச் சுமக்கின்றார் எனவரும் ஒரு அருமைப் பாடல் வருமாறு -

"வின்மதனை வென்ற தலர் விழியே, ஒன்னார் தம்
பொன்னெயில் தீமடுத்த தின்னகையே பூமியை யோன்
தார்முடி கொய்தது கூருகிரே; ஆருயிருண்

வாசனை கொண்ட குரா மலர் மாலை, குளிர்ந்த கொன்றை, துளசி, ஆத்தி, வணங்கத்தக்க கங்கை, சந்திரனிடத்தே

கொண்டுள்ள அழகிய கலை - இவைகள் விளங்கும் (சூடிகை) மணிமுடியில் (இன்டு) ஈகைக் கொடிப்பூ, எருக்கமலர் இவைகளை (அணி) அணிந்துள்ளவர், (காகோதரம்) பாம்பைக் குண்டலமாக அணிந்துள்ள தலைவர், பினாகம் என்னும் வில்லை ஆயுதத்தை ஏந்தின வர் ஆகிய சிவபிரானும், உடன் நேய - அல்லது உடன் ஏய (உன்) மீது பிரியமுள்ள அல்லது உடன் பொருந்திய.

சங்கு, சக்ரம், கதை இவைகளைக் கையில் ஏந்தியவரான திருமாலும் "எங்களுடைய ஒப்பற்ற செல்வமே! தேவர்களைச் சிறையினின்றும் மீட்டருளுக" என்று வேண்ட, அசுரர் தலைவனான சூரன் -

(தஞ்சம் அற்றிட) பற்றுக்கோடின்றி (வேதனைப்பட அல்லது பெருமை அற்று நிற்க), வேதாகரன் - வேதத்துக்கு இருப்பிட-மானவனான பிரமன் பயந்து நிற்க, கிரவுஞ்சகிரி பிளப்புண்டு சிதறி விழ, வீரத்துக்கு இருப்பிடமாய், (சண்ட) வேகமும் பராக்ரமும் கொண்ட, வேலைச் செலுத்தின பெருமாளே!

(அருளாயோ? கழல் அருளாதோ)

## 1162.

சேல்மீனைத் தாக்கிக் கீழ்ப்படுத்தி, விஷம் மிகக் கொண்டதாய், மானைச் (சீறுவிதித்து) சிறுதலைக்கொண்டு, (ஊறு சிவப்பு) செந்-நிறம் ஊறி (ஏறும்) மேற்காட்டும் கண் என்னும் அம்பு கொண்டும்,

தேன் சுவையில் தோய்ந்து, (பாகு) வெல்லத்துக்கு ஒப்பாகி நிறையமுதம், தேன் என்று சொல்லத்தக்கதான மொழிகளின் திறத்தாலும்,

ஆலிலை போன்ற வயிற்றாலும், (அளகத்தால்) கூந்தலழ-காலும், (அதரத்தாலும்) வாயிதழாலும், இன்பகரமான நடையாலும், (ஆடவர்களின்) மனத்தை வளைத்து இழுப்பவர் மீதுள்ள

ஆசையைத் தூர எறிந்து, புகழ் பெற்று, அன்புக்கு இடமான உனது நல்ல திருவடியிணைகளைச்சேர எனக்கு அருள் புரிவாயாக.

காலனை - உண்மைக்கு இருப்பிடமான தனது திருவடியைத் தூக்கி உதை தந்தும், மன்மதனைச் சுட்டு எரித்தும், விதியின் தலையூடே பிரமனுடைய தலையிலே (கபாலம் கொண்டு)

---

கூற்றுயிர் உண்ட தடித்தலமே; ஏற்றான்
பரகம் பினாகமும் சூலமும், என்னே

(தொடர்ச்சி 388- ஆம் பக்கம் பார்க்க)

காசினியிற் காணஇரப் போர்* மதியைச் சூடியெருத்
தேறிவகித் தூருதிரைக் கடல்மீதில்;
†ஆலமிடற் ‡றானையுரித் தோலையுடுத் Xதீமமதுற்
றாடி Oயிடத் தேயுமைபெற் றருள்வாழ்வே-
**ஆழியிலைச் சூரனைவெற் பேழிணையுற்
றேயயில்விட்
டாதுலருக் காறுமுகப் பெருமாளே (169)

## 1163. இறைவனைப் பற்ற

தத்தத்தத் தத்தத் தத்தன
தத்தத்தத் தத்தத் தத்தன
தத்தத்தத் தத்தத் தத்தன தனதான

சொக்குப் ††பொட் டெத்திக் கைப்பொரு
ளைக் ‡‡கெத்திற் பற்றிச் சிக்கொடு
சுற்றுப்பட் டெற்றித் தெட்டிகள் முலைமீதே-
சுற்றுப்பொற் பட்டுக் கச்சினர்
XXமுற்றிக்குத் தத்தைக் கொப்பென
சொற்பித்துக் கற்பிற் செப்பிய துயராலே;

---

(387- ஆம் பக்கம் தொடர்ச்சி)

"கரமலர் சேப்பக் கொளல்" - சிதம்பர. செய்யுட். 21

(அருணைக் கலம்பகம் 22, வெங்கைக் கலம்பகம் 35-ம் பார்க்க)

‡ காலனை உதைத்தது - பாடல் 399-பக்கம் 510 கீழ்க்குறிப்பு

X மன்மதனை எரித்தது -

O பிரமனது சிரத்தைக் கொய்ததும் பலி ஏற்றதும் -

பாடல் 286-பக்கம் 209 குறிப்பு, பாடல் 706-பக்கம் 130 குறிப்பு.

---

* சந்திரனைச் சூடினது - பாடல் 415-பக்கம் 548 கீழ்க்குறிப்பு

† ஆலம் மிடற்று வகித்து எனக் கூட்டுக -

நஞ்சைக் கண்டத்தில் அடக்கியது - பாடல் 286-பக்கம் 211 குறிப்பு

‡ ஆனையை உரித்தது - பாடல் 286-பக்கம் 210 குறிப்பு

X சுடுகாட்டில் ஆடல் - "ஈமவனத் தெரியாட்டுகந்த எம்பெருமான்" - சம்பந்தர். 1-4-7

O இடத்தே உமை - பாடல் 301 -பக்கம் 246 குறிப்பு பாடல் 548 -பக்கம் 248 குறிப்பு

** "வேல்பட் டழிந்தது வேலையும், சூரனும், வெற்பும்" -கந்தரலங் 40

எழுகிரி - பாடல் 43- பக்கம் 117 (தொ. பக். 389)

பூமியில் உள்ளோர் காணும்படி இரந்து, ஒப்பற்ற நிலவைச் சடையில் தரித்து, இடபத்தில் ஏறி அமர்ந்து, அசைந்துவரும் அலைவீசும் கடல் மீது எழுந்த

விஷத்தைக் கண்டத்தில் தரித்து, எதிர்த்துவந்த ஆனையைச் (சங்கரித்து) அதன் தோலை உரித்து உடுத்து, (ஈமம் அது உற்று ஆடி) சுடுகாட்டை அடைந்து அங்கே நடனம் புரிபவரான - சிவபிரானது இடது பாகத்தில் இருக்கும் உமையம்மை பெற்றருளிய செல்வமே!

கடல், சூரன், எழுகிரிகள் இவைகளின்மீது பட்டு அவை அழிந்துபோம்படி வேலாயுதத்தைச் செலுத்தின பெருமாளே! ஆதுலருக்கு - ஏழைகளின் பெருமாளே! ஆறுமுகப் பெருமாளே!

(தாளிணையைச் சேர எனக்கு அருள்வாயே)

## 1163.

சொக்குப்பொடி (பொட்டு) போட்டு, (எத்தி) ஏமாற்றிக் கையில் உள்ள பொருளைக், (கெத்தில்) தந்திர வழியில் (பற்றி) கைப்பற்றி, (சிக்கொடு) உறுதியுடன் (சுற்றுப்பட்டு) சுற்றி வளைத்து, எற்றி (பேச்சினால்) தாக்கி வஞ்சிப்பவர்கள், கொங்கை மேலே

சுற்றப்பட்டுள்ள அழகிய பட்டு ரவிக்கையைக் கொண்டவர்கள் ஆகிய வேசையர்களின் (முற்றிக்கு முதிர்ந்த) கரும்பு , (தத்தை, கிளி - இவைகளுக்கு ஒப்பு என்று சொல்லும்படியான (சொல்)-மொழி என்கிற (பித்துக் கற்பில்) மயக்கைத்தரும் ஆணைச் சொல்லால் (செப்பிய) ஏற்படும் ( துயராலே) துன்பத்திலே,

---

ஆதுலருக்குப் பெருமாள் - "ஏழைக் கிரங்கும் பெருமாளே" - என்றார்; பாடல்கள் 422, 1262

" ஆழியினைச் சூரனைவெற் பேயயில்தொட் டாவி துணித் தாதிதிருச் சோலைமலைப் பெருமாளே"- என்றும் பாடம்.

†† பொட்டு = போட்டு. ‡‡ கெத்தில் = தந்திரமாய்.
XX முற்று இக்கு = முதிர்ந்த கரும்பு.

சிக்குப்பட் டுட்கிப் *பற்கொடு
வெற்றிக்கைக் குத்துப் பட்டிதழ்
தித்திப்பிற் கொத்துப் பித்துயர் கொடுநாயேன்-

திக்குக்கெட் †டொட்டுச் சிட்டென
பட்டத்துற் புத்திக் கட்டற
‡செப்பத்துற் பற்றற் கற்புத மருள்வாயே

தக்குத்தக் குக்குக் குக்குட
தட்டுட்டுட் டுட்டுட் டுட்டென
தக்குத்திக் கெட்டுப் பொட்டெழ விருதோதை-

தத்தித்தித் தித்தித் தித்தென
தெற்றுத்துட் டக் Xகட் டர்ப்படை
சத்திக்கொற் றத்திற் குத்திய முருகோனே;

Oதுக்கித்திட் டத்தித் துக்கக
நெக்குப்பட் டெக்கித் துட்டறு
சுத்தப்பொற் பத்தர்க் குப்பொரு ளருள்வேலா-

துற்றப்பொற் பச்சைக் கட்கல
பச்சித்ரப் பக்ஷிக் கொற்றவ
**சொக்கர்க்கர்த் தத்தைச் சுட்டிய
பெருமாளே (170)

---

* பல் கொடு = பல கொடுமையான † ஒட்டு - கண்ணி,

‡ செப்பத்து உன் பற்றற்கு = செம்மையாக உன்னைப் பற்றுதற்கு.

X கட்டர் - கஷ்டப் படுவோர் - "கட்டராய் நின்று நீங்கள் காலத்தைக் கழிக்க வேண்டா" - அப்பர். 4-41-2

O துக்கித்திட்ட அத்தி துக்க அகம் = சமுத்திரம் போன்ற துன்ப வீடு.

** தந்தைக்கு உபதேசித்து - பாடல் 327பக்கம் 314

(சிக்குப்பட்டு) மாட்டிக்கொண்டு, (உட்கி) நாணமும் அச்சமும் அடைந்து, (பல்கொடு) - பல கொடுமையான (எற்றிக் கைக்குத்து) அடிகளையும், கைக் குத்துகளையும் அடைந்து (அடி பட்டு, குத்துண்டு), இதழ் தித்திப்பில் - வாயிதழ் ஊறலின் தித்திப்புக்கு (ஒத்து) மனமொப்பி - அதில் ஏற்படும் பித்து - மயக்கம் மிகக் கொண்ட கொடிய நாயனைய நான் -

(திக்குக் கெட்டு), திசை தடுமாறி - மயக்கம் பூண்டு ஓட்டுச் சிட்டென - கண்ணியில் - வலையிலே - அகப்பட்ட சிட்டுக் குருவி போல - பட்ட - அவத்தைப் பட்ட அந்த துற்புத்திக் கட்டு அற - கெட்ட புத்திகளின் இணைப்பு (சம்பந்தம்) நீங்கச், (செப்பத்து) நல்ல வழியில் (உன்) உன்னைப் (பற்றற்கு) பற்றுவதற்கு (அற்புதம்) ஒரு அற்புத வரத்தை அருள் புரிவாயாக.

தக்குத்தக் குக்குக் குக்குட டுட்டெனத் (தக்கு) நிலை பெற்றுள்ள (திக்கு எட்டு) எட்டுத் திசைகளும் (பொட்டெழ) பொடிபட, (விருது ஓதை) வெற்றிச் சின்னங்களின் ஓசை -

தத் தித்தித் தித்தித் தித்தென (தெற்று) செறிவுற - நிரம்ப துட்டக் கட்டர் - துஷ்டர்களாய்க் கஷ்டப் பட்டவர்களின் (படை) சேனையைச் (சத்திக் கொற்றத்தில்) வேலாயுதத்தின் வெற்றி வீரத்தால் குத்திய முருகோனே!

துக்கித்திட்ட - அத்தித் துக்க - அகம் - (துக்கித்திட்ட) அகம் - (உலக மாயையால்) துக்கப்பட்ட நெஞ்சம், (அத்தி துக்க அகம்) கடல்போன்ற துன்ப வீடாகிய நெஞ்சம், (நெக்குப் பட்டு) நெகிழ்ந்து, (எக்கி) மேலான நிலையை எட்டித், (துட்டு அறு) துஷ்ட குணங்கள் (தீய குணங்கள்) நீங்கப் பெற்ற, பரிசுத்த நிலையரான, அழகிய, பக்தர்களுக்கு உபதேசப் பொருளை பாலிக்கும் வேலனே!

(துற்ற) நெருங்கியுள்ள (பொன்) அழகிய, பச்சை நிறமுள்ளதும், (கண் கலபம்) பீலிக் கண்களை உடையதுமான தோகையை உடைய (சித்ரப் பக்ஷி) விசித்திரமான மயிற் பறவையை உடைய அரசே! சொக்கர்க்கு (மதுரைச் சொக்கருக்கு) சிவபிரானுக்கு (அர்த்தத்தை) பிரணவப் பொருளைச் சுட்டிக் குறித்து அறிவித்த பெருமானே!

(பற்றற்கு அற்புதம் அருள்வாயே)

## 1163 -1. ஓதிப் போற்ற

தானான தானன தானன தானன
தானான தானன தானன தானன
தானான தானன தானன தானன தனதான

ஞானாவி பூஷணி காரணி காரணி
காமாவி மோகினி *வாகினி யாமளை
மாமாயி பார்வதி தேவிகு ணாதரி உமையாள்தன்-
நாதாக்ரு பாகர தேசிகர் தேசிக
† வேதாக மேயருள் தேவர்கள் தேவந
லீசா சடாபர மேசர் சர்வேசுரி முருகோனே;
தேனார் மொழிவளி நாயகி நாயக
வானாடுளோர் தொழு மாமயில் வாகன
சேனாளு மானின் மனோகர மாகிய மணவாளா-
சீர்பாத சேகர னாகவு நாயினன்
மோகா விகார விடாய் கெட ஓடவெ
சீராக வேகலை யாலுனை ஓதவும் அருள்வாயே
‡ பேனார்கள் நீறதி டா அம ணோர்களை
சூராடி யேகழு மீதினி லேறிட
கூனான மீனனி டேறிட கூடலில் வருவோனே-
பேராண்மை யாள னிசா சரர் கோனிரு
கூறாக வாளி தொடூ ரகு நாயகன்
பூவாய னாரணன் மாயனி ராகவன் மருகோனே;
வானாள் படாவரு சூரர்கள் மாளவெ
சேனா டுளோர்வர் வீடதி டேறிட
கோனாக வேவரு நாதகுரு பர குமரேசா-

---

* வாகினி - பாதிரி. திருப்பாதிரிப் புலியூர் என்னும் தலத்தில் தேவி பார்ப்பதி சிவபிரானது திருவருளைப் பெறப் பாதிரி விருக்ஷத்தின் நிழலில் தவஞ் செய்தனள்.
"பாடலேசன் பருமணிக் கோயிலுள்...
ஏட விழ்ந்தலர் பாதிரி யின்னிழல்...
என்னருந் தவஞ் செய்தனள் யாவரும்
கன்னருஞ் சிவன் தன்னருள் காணவே"
- திருப் பாதிரிப் புலியூர்ப் புராணம். தேவி தவம். -1,2
† வேதாகம் - வேதம் - ஆகமம். வேத வரம்பைச் சிவனுக்கு

# 1163 -1.

ஞானத்தை விசேட ஆபரணமாகக் கொண்டவள் (கார் அணி) கரிய நிறம் கொண்ட (காரணி) சகலத்துக்கும் காரணமாயிருக்கும் தேவி, (காமா - விமோகினி)- காமத்தை உயிர்களுக்கு ஊட்டும் சிறந்த மோகினி, (வாகினி) பாதிரி நீழலிற் சிவபிரானைப் பூசித்த உமா தேவி, யாமளை - பச்சை நிறத்தி, மாயையில் வல்லவள், பார்வதி, தேவி, நற்குணங்களை உடையவள் ஆகிய உமையின்,

நாதா (தலைவரும்) கிருபா மூர்த்தியும் ஆகிய தேசிகர் - குருமூர்த்தியாகிய சிவபிரானுக்குக் குருமூர்த்தியே! வேதம் ஆகமங்கள் இவைதனைச் (சிவனுக்கு) அருளிய தேவதேவனே! (நல் ஈசா)- நல்ல ஈசனே, சடா முடியை உடைய பரமேசுரர் - சர்வேசுரி ஆகிய இருவர்தம் குழந்தையே!

தேன் போலும் இனிய மொழிகளைப் பேசும் வள்ளி நாயகியின் கணவனே! வானாடுளோர் - தேவலோகத்தில் உள்ளோர்கள் தொழுது வணங்கும் - அழகிய மயில் வாகனனே! (சேண்) விண்ணுலகத்தை ஆளும் (மான்) இந்திரன் புதல்வியாகிய தேவ சேனையின் மனதுக்கு இனியவனான மணவாளப் பிள்ளையே!

உனது திருவடியை என் தலைமேற் சூடினவனாகி, அடியேனுடைய காம விகார தாகம் கெட்டு ஓட்டம் பிடிக்க, நன்றாகக் (கலையால்) கலை ஞானத்துடன் உன்னை (நான்) ஓத எனக்கு அருள் புரிவாயாக.

மதியாது இருந்தவர்களும், திருநீறு இடாதவர்களுமான சமணர்களைச் (சூராடியே) அச்சத்துடன் சுழற்சி கொள்ளுமாறு செய்து, கழுவின்மேல் ஏறும்படிச் செய்து கூனனாயிருந்த (மீனன்) மீன் கொடி கொண்ட பாண்டியன் ஈடேறுமாறு (கூடலின் வருவோனே) மதுரைக்குப் போந்தவனே!

மிக்க வீரம் கொண்டவனான அரக்கர் கோமான் - ராவணன் இரு கூறாய் விழ அம்பு தொடுத்த ரகுராமன், தாமரை மலரிதழ் ஒத்த திருவாயை உடையவன், நாராயண மூர்த்தி, மாயவன், ராகவனாகிய திருமாலின் மருகனே!

வாழ்நாள் அழியும்படி வந்த சூரர்கள் இறந்துபட (சேணாடு- ளோரவர்) விண்ணுலகத்தவராம் தேவர்களின் வீடாகிய பொன்னுலகம் ஈடேறி வாழ - அந்தத் தேவர்களுக்குக் (கோனாகவே) தலைவனாகவே வந்த நாதனே! குருபரனே! குமரேசனே!

---

முருகவேள் உபதேசித்தனர் - "வேத ஞான வரம்பெது
சொல் என அரன் கேட்ப உரைத்த பர ஞான போதன்"
- தக்ஷிண கைலாச புராணம்.

‡ சம்பந்தப் பெருமானுடைய லீலைகள் - பாடல் 181.

* பக்கம் 420 கீழ்க்குறிப்பு

வாசாம கோசர மாகிய வாசக
தேசாதி யோரவர் பாத மதே தொழ
பாசா விநாசக னாகவு மேவிய
பெருமாளே (171)

## 1164. பிறவி யற

தனதனன தனதனன தந்தனந் தந்தனந்
தனதனன தனதனன தந்தனந் தந்தனந்
தனதனன தனதனன தந்தனந் தந்தனந் தனதான

†தரணிமிசை அனையினிட வுந்தியின் வந்துகுந்
துளிபயறு கழலினிய அண்டமுங் கொண்டதின்
தசையுதிர நிணநிறைய அங்கமுந் தங்கவொன்
பதுவாயுந்

தருகரமொ டினியபத முங்கொடங் கொன்பதும்
பெருகியொரு பதினவனி வந்துகண் டன்புடன்
தநயனென நடை பழகி மங்கைதன் சிங்கியின்
வசமாகித்,

திரிகியுடல் வளையநடை தண்டுடன் சென்றுபின்
கிடையெனவு மருவிமனை முந்திவந் தந்தகன்
சிதறவுயிர் பிணமெனவெ மைந்தரும் பந்துவும்
அயர்வாகிச்-

செடமிதனை யெடுமெடுமி னென்றுகொண் டன்புடன்
சுடலைமிசை யெரியினிட வெந்துபின் சிந்திடுஞ்
செனனமிது தவிரஇரு தண்டையுங் கொண்டபைங்
கழல்தாராய்;

செருவெதிரு மசுரர்கிளை மங்களங் கெங்கணுங்
கழுகருட னயனமிது கண்டுகொண் டம்பரந்
திரியமிகு அலகையுடன் வெங்கணந் தங்களின்
மகிழ்வாகிச்-

---

†பிறப்பு - வாழ்க்கை - இறப்பு - வர்ணனை -
பாடல் 162, 241, 565, 862 பார்க்க.

வாக்குக்கு எட்டாததாகிய (வாசக) திருவாக்கை உடையவனே! தேசங்கள் பலவற்றிலும் உள்ளவர் (பாதமதே தொழ) திருவடிகளைத் தொழுது நிற்கப் பாச நாசனாய் விளங்கி வீற்றிருக்கும் பெருமாளே!

(கலையால் உனை ஓதவும் அருள்வாயே)

## 1164.

இப்பூமியில் அ(ன்)னையினிட) தாயுடைய வயிற்றில் (கர்ப்பப் பையி ல்) வந்து சேரும் ஒரு துளி பயறு அளவு (கழல்) கழலுதல் - விழுதலாகி , (இனிய அண்டமும் கொண்டு) இன்பகரமான ஒரு விதையாகி, (முட்டை வடிவாகி) அதில் சதை, ரத்தம், கொழுப்பு இவை நிறைவு பெறப், பின்னர் (அங்கமும் அவயவங்களும் (தங்க) வந்துகூட, ஒன்பது துவாரங்களும் -

ஏற்பட்ட கைகளுடன், அழகிய கால்களும் (கொடு - கொண்டு அங்கே (கண் 2, காது 2, மூக்குத் தொளை 2, வாய் 1, மலத்துவாரம் 1, ஜலத்துவாரம் 1 ஆக ஒன்பது துவாரங்களும் ஏற்பட்டு வளர்ந்து, (ஒரு பதின்) ஒரு பத்தாவது மாதத்தில் (அவனி வந்து) பூமியிற் பிறந்து, (தாய் தந்தையர் அக் குழந்தையைக்) கண்டு அன்பு பூண்டு, மகன் என வளர்ந்து, நடை பழகிப் (பின்னர் வயது ஏற) மாதர்களின் (சிங்கியில்) விஷச் செயல்களிலே வசப் பட்டு -

(திரிகி) சலிப்புற்று நிலை மாறி, தேகம் வளைய - (நிமிர்ந்த உடல் குனிய), நடை தடியுடன் பழகுவதாகி, பின்பு (கிடை எனவும் மருவி) படுக்கையிற் கிடக்கை யுற்றுக் கிடக்க, (அல்லது வற்றின தக்கைபோற் கிடக்க), கிடக்கும் வீட்டில் முந்தி வந்து யமனானவன் உயிரை உடலினின்றும்) சிதறும்படிச் செய்ய உயிர் நீங்கப் பிணமென்று மக்களும், சுற்றத்தாரும் சோர்வடைந்து,

(செடம் இதனை) இந்தக் கட்டையாகிய உடலை எடுமின் எடுமின் என்று எடுத்துக் கொண்டு போய் அன்புடனே சுடுகாட்டில் நெருப்பில் இட, வெந்துபோய் இங்ஙனம் அழிகின்ற பிறப்பாகும் இது - இனி வராதிருக்க - தண்டைகள் பொருந்திய அழகிய இரண்டு திருவடிகளைத் தந்தருளுக.

போரில் எதிர்த்து வரும் அசுரர்களுடைய கூட்டம் எல்லாம் வாட்டம் உற, (எங்கெங்களும்) எல்லா இடத்தும் கழுகு, கருடன் இவைகளின் (நயனம்) கண்கள், (இது கண்டு) (அசுரர் பலர் இறந்துபடும் இந்நிலையைக்) கண்டு கொண்டு, (அம்பரம்) ஆகாயத்தில் (திரிய) வட்டமிட, (பிக்கு வரும்) பேய் வகைகளைச் சேர்ந்த கொடிய கூட்டங்கள் தங்களுக்குள் மகிழ்ச்சி பூண்டு,

சினவசுர ருடலமது தின்றுதின் றின்புடன்
டுமுடுமுட டுமுடுமுட டுண்டுடுண் டுண்டுடுண்
டிமிலைபறை முழவுதுடி பம்மையுஞ் சங்கமுந்
தவமோதச்,

சரவரிசை விடுகுமர அண்டர்தம் பண்டுறுஞ்
சிறையைவிட வருமுருக என்றுவந் திந்திரன்
சதுமுகனு மடிபரவ மண்டுவெஞ் சம்பொருங்
கதிர்வேலா-

*சகமுழுது மடையஅமு துண்டிடுங் கொண்டலுந்
தெரிவரிய முடியினர வங்களுந் திங்களுஞ்
சலமிதழி யணியுமொரு சங்கரன் தந்திடும்
பெருமாளே (172)

## 1165. தவம் பற்ற

தனந்தத்தத் தனந்தத்தத் தனந்தத்தத் தனந்தத்தத்
தனந்தத்தத் தனந்தத்தத் தனதான

**த**னஞ்சற்றுக் குலுங்கப்பொற் கலன்கட்பட் டிலங்கப் பொற்
சதங்கைக்கற் சிலம்பொத்திக் கையில்வீணை-

ததும்பக்கைக் குழந்தைச்சொற் பரிந்தற்புக் கிதங்கப்பொற்
சரஞ்சுற்றிட் டிணங்கக்கட் சரவேலால்;

தினம்பித்திட் டிணங்கிச்சொற் கரங்கட்டிப் புணர்ந்திட்டுத்
தினந்தெட்டிக் கடன்பற்றிக் கொளுமாதர்-

* திருமால் உலகு உண்டது - பாடல் 267 -பக்கம் 164;
பாடல் 984-பக்கம் 846 குறிப்பு.

கோபத்துடன் (இறந்து பட்ட) அசுரர்களின் உடலைத் தின்று தின்று (இன்புடன்) மகிழ்ச்சியுடனே, டுமுடுமுடடு முடுமுட டுண்டுடுண் டுண்டுடுண் என ஒலிக்கும் (திமிலை) ஒரு வகைப் பறை, பறை, (முழவு) முரசு, (துடி) உடுக்கை, (பம்பை) பறை வகை, சங்கு - ஆதிய வாத்தியங்கள் (தவ) மிகவும் (மோத) அடிபட்டு ஒலிக்க,

(சர வரிசை) அம்புகளை வரிசை வரிசையாகச் செலுத்தின குமரனே! தேவர்கள் முன்பு அடை பட்டிருந்த சிறையினின்றும் வெளியேறுவதற்கே அவதரித்த முருகனே! என்று கூறி வந்து இந்திரனும் நான் முகனும் (பிரமனும்) திருவடியைப் போற்றி செய்ய, (மண்டு) நிறைந்து எழுந்த (வெஞ்சம்) கோபத்துடன் சண்டை செய்த (அல்லது) வெஞ்ச(ம)ம் - கொடிய போரைச் செய்த ஒளி வேலனே!

உலகம் எல்லாவற்றையும் முழுசாக அமுதாக உண்ட மேக மனையவனாம் திருமாலும் காணுதற்கு முடியாத திருமுடியை உடையவர், (அரவங்களும்) பாம்புகளையும், சந்திரனையும், (சலம்) கங்கையையும், (இதழி) கொன்றையையும் அணிகின்ற ஒப்பற்ற (சங்கரன்) சிவன் அளித்த பெருமாளே!

(செனனம் இது தவிர பைங் கழல் தாராய்)

## 1165.

கொங்கை சற்று குலுங்க, (பொற் கலன்கள்) பொன்னாலாய ஆபரணங்களும், (பட்டு இலங்க) பட்டாடையும் விளங்க, அழகிய (சதங்கை) சலங்கையும், (கல்) ரத்னங்கள் இழைக்கப் பெற்ற சிலம்பும் (ஒத்தி) தாளமிடுதல் போல ஒலிக்கக், கையில் ஏந்தியுள்ள வீணை,

(ததும்ப) மேன்மேலும் ஒலி எழுப்ப, (கைக் குழந்தைச் சொல் பரிந்து) கைக் குழந்தையின் மழலைச் சொல் போலச் சொற்களைப் பேசுவதாகி, (அற்புக்கு இதங்க) அன்புக்கு இதமான - இன்பமான வழியில் (பொன் சரம்) பொன்னாலாய மாலையைச் (சுற்றிட்டு) கழுத்தைச் சுற்றி அணிந்து, (இணங்க) மனம் ஒத்து வரக், (கண் சர வேலால்) கண்ணாகிய அம்பாலும் வேலாலும்,

நாள்தோறும் (பித்த மருந்தைத் தந்து) காம மயக்கத்தை ஊட்டி, (இணங்கி) இணங்கினவர்களாய்ச் சொல்லும் கட்டி, கரமும் கட்டி - சொல்லுக்குக் கட்டுப் பட்டவர்களாய் கைகட்டி நடந்து, கலவியிற் கூடி (தினம் தெட்டி) நாள்தோறும் (தெட்டி) வஞ்சிப்பவராய்க் (கடன் பற்றி) தங்களுக்கு உரிய பொருளைப் பற்றிக் கொள்ளுகின்ற மாதர்களின்,

*சிலம்பத்திற் றிரிந்துற்றிட் டவம்புக்கக் குளாஞ்செற்றுச்
சிவம்பெற்றுத் தவம்பற்றக் கழல்தாராய்;
தனந்தத்தத் தனந்தத்தத் தடுண்டுட்டுட் டிடிண்டிட்டிட்
டடண்டட்டட் டிமிண்டுட்டுட் டியல்தாளந்-
தகுந்தொத்தித் திமிந்தித்தித் † தவண்டைக்குட் கயர்ந்துக்கத்
தகண்டத்தர்க் குடன்பட்டுற் றசுரரைச்,
சினந்தத்திக் கொளுந்தக்கைச் சரந்தொட்டுச் சதம்பொர்ப்பைச்
சிரந்தத்தப் பிளந்துட்கக் கிரிதூளாச்-
செகந்திக்குச் சுபம்பெற்றுத் துலங்கப்பொர்க் களம்புக்குச்
செயம்பற்றிக் கொளுஞ்சொக்கப் பெருமாளே (173)

## 1165 -1

தனனதன தான தான தனனதன தான தான
தனனதன தான தான தனதான

‡ நகரமிரு பாத மாகி மகரவயி றாகி மார்பு
நடுசிகர மாகி வாய்வ கரமாகி-
நதிமுடியு சார மாகி உதயதிரு மேனி யாகி
நவ்சிவய மாமை யாகி எழுதான;

---

* சிலம்பம் = தந்திரோபாயம். † தவண்டை = பேருடுக்கை.

‡ நடராஜ மூர்த்தியின் திருவுருவில் ந காரம் திருவடியாகவும், ம காரம் திருவுந்தி (வயிறு) ஆகவும், சி காரம் திருத் தோளாகவும், வ காரம் திரு முகமாகவும், ய காரம் திரு முடியாகவும் விளங்கும்.

"ஆடும் படிகேள் நல் அம்பலத்தான் ஐயனே
நாடும் திருவடியி லே "ந" கரம் - கூடும்
"ம" கரம் உதரம், வளர் தோள் "சி" கரம்
பகருமுகம் "வ", முடி "ய" "ப், பார்" - உண்மை விளக்கம் 32

இரு தோளுக்கும் இடைநின்று இணைப்பதாதலின் மார்பைச் சிகாரம் என்றார்.

(சிலம்பத்தில்) தந்திரோபாயத்தில் (திரிந்து உற்றிட்டு) அகப்பட்டுத் திரிந்தவனாய், (அவம் புக்க) பயனற்ற வழியிற் (கேடுண்டாம் வழியில்) புகுகின்ற (என்) குணம் - எனது இழி குணத்தைச் (செற்று) வெறுத்துத் தொலைத்து, (சிவம் பெற்று) மங்களகரமான உயர் நிலையை அடைந்து, தவநிலையை நான் பற்றுதற்கு உனது திருவடியைத் தந்தருளுக;

தனந் தத்தத் தனந் தத்தத் டடன் டட்டட் டிமின் டுட்டுட் என்று ஒலிக்கும் தாளங்களுக்கும் -

தகுந் தொத்தித் திமிந் தித்தித் என ஒலி செயும் பேருடுக்கைகளுக்கும் - இவ்விரண்டின் ஒலிக்கும் - உட்கு அயர்ந்து உக்க - பயந்து, சோர்ந்து, (அசுரர்கள்) உக - சிதற, (தகண்டத்தர்க்கு) தகு அண்டத்தர்க்கு - தக்கவர்களான தேவர்களுக்கு - தேவர்களின் வேண்டுகோளுக்கு - உடன் பட்டு - இரங்கிச் சம்மதித்து - (உற்ற அசுராரை) போர்க்கென வந்த அசுரர்களைக்-

(சினம் தத்தி) கோபம் மேலெழுந்து (கொளுந்த) பொங்கி எரியக், (கைச் சரம்) கையில் இருந்த அம்பைத் (தொட்டு) பிரயோகித்துச் (சதம் பொர்ப்பை) நூற்றுக் கணக்கான பக்க மலைகள் எல்லாம், தத்தும் சிகரங்கள் (தத்த), நடுக்கம் உறப்- (பிளந்து உட்க கிரி தூளா) கிரி உட்கப் பிளந்து தூளா - கிரவுஞ்ச கிரி அஞ்ச அதைப் பிளந்து அது பொடியாகச் செய்து-

(செகம் திக்குச் சுபம் பெற்று) உலகமும் திக்கில் உள்ளவர் களும் சுபம் பெற்று விளங்கப் போர்களத்திற் புகுந்து, வெற்றியைப் (பற்றிக் கொளும்) கைக் கொண்ட பெருமாளே! சொக்கப் பெருமாளே! அழகுப் பெருமாளே!

(தவம் பற்றக் கழல் தாராய்)

## 1165- 1.

(நமசிவய என்னும்) ஐந்தெழுத்தில் - பஞ்சாக்ஷரத்தில் - "ந" என்னும் எழுத்து (நடராஜ மூர்த்தியின்) இரண்டு பாதங்களாம்: (இரண்டு திருவடிகளாம்); "ம" என்னும் எழுத்து (அவரது) திரு வயிறு ஆகும்; (அவரது) மார்பு - (நடு சிகரமாகி) - (ஐந்தெழுத்தின்) நடுவில் உள்ள "சி" என்னும் எழுத்தாகும்; (அவரது) திருவாய் "வ" என்னும் எழுத்தாகும்;

(நதி முடி) கங்கை நதியை அணிந்த திருமுடி ("ய" சாரமாகி) "ய" என்னும் எழுத்தின் சாரமாக விளங்கும்; (உதய திருமேனியாகி) இங்ஙனம் தோன்றி இறைவனது திருமேனியாக விளங்கும் "நமசிவய" என்னும் (மானமயாகி எழு(த்) தான) அழகு கூடிய ஐந்து எழுத்துக்களும்;

*அகரவுக ரேதரோம சகர வுணர் வான சூரன்
அறிவி லறிவான பூர ணமுமாகும்-

அதனைஅடி யேனும் ஓதி இதயகம லாலை யாகி
மருவுமவ தான போதம் அருள்வாயே,

குகனுமரு ளாண்மை கூர மகரமெனு சாப தாரி
குறையகல வேலை மீது தனியூருங்-

குழவிவடி வாக வேநம் பரதர்தவ மாக மீறு
குலவுதிரை சேரு மாது தனைநாடி;

---

* 1. "ஓம்" என்னும் பிரணவத்தின் பொருளை உணர்ந்திருந்தான் சூரன். சூரனுக்கு முருகவேள் விசுவரூப தரிசனம் தந்தபோது, அவனுக்கு ஞான நிலையும் அந்நிலையில் தந்தனர்.

- கந்தபுரா: 4-13-430-440

"ஆறுமா முகத்து வள்ளல் சிறிது நல் லுணர்ச்சி நல்க"
சூரன் "பற்றிகல் இன்றி நின்ற பராபர முதல்வன்" இவனே,
"பங்கயன் முதலோர் காணாப் பரமன்" இவனே,
" யார்க்கும் மூல காரணமாய் நின்ற மூர்த்தியின் மூர்த்தி யன்றோ" "இப்பொழுதில் ஈசன் இவனெனும் தன்மை கண்டேன்"- என்றெல்லாம் போற்றி நின்றான். அத்தகைய ஞான நிலையைச் சூரன் அடைந்திருந்தபோது அவன் உள்ளத்தில் "அறிவுக் கறிவான பூரணப் பொருளாய் விளங்கினன்" முருகன் என்பதை இப்பாடலின் மூன்றாம் அடி குறிக்கும்.

2 அகர வுகரேத ரோம சகர உணர்வு - இங்கு "நகரம்" உடன்கூடிய என்னும் பொருளில் வட சொற்களில், மொழிக்கு முன்னாக வரும் இடைச் சொல், சமூலம் என்பதுப்போல

5,6,7. அடிகள் - வலை வீசின திருவிளையாடற் சரிதத்தைக் குறிக்கின்றன. இச் சரித வரலாற்றைப் பாடல் 303-பக்கம் 252 கீழ்க்குறிப்பிற் காண்க.

தமது தாய்க்கு உற்ற சாபத்தைக்கேட்ட விநாயகரும், முருகவேளும் மனம் பொறாது சிவபிரானிடத்திருந்த புத்தகங்களை வாரிக் கடலில் எறிந்தார்கள் விநாயகருக்கு விதிக்கும் சாபம் தமக்கே ஆகுமென அவரை விடுத்து, முருகவேளை "நீ - வணிகர் வீட்டிலே ஊமைப் பிள்ளையாய்ப் பிறக்கக் கடவாய்" எனச் சிவபிரான் கட்டளை யிட்டனர். இந்த ஊமைப் பிள்ளையே உருத்திர சன்மர் - திருப்புகழ்ப் பாடல் 350-பக்கம் 378-379 கீழ்க்குறிப்பைப் பார்க்க. இங்ஙனம் தந்தைமுன் அஞ்சாது ஆண்மையுடனும் அருட்குணத்துடனும் புத்தகங்களை வாரி முருகவேள் கடலில்

(அகர உகர) அகரம் என்னும் எழுத்துக்கும் உகரம் என்னும் எழுத்துக்கும், (ஏதர்) மூலகாரணமா யுள்ளவருடைய ('ஓம சகர") ஓம் என்று கூடின அப்பிரணவத்தின், (உணர்வான சூரன்) பொருள் உணர்வைப் பெற்ற சூரபத்மனுடைய (அறிவில் அறிவான) அறிவில் அறிவொளியாய் விளங்கினதும், பூரணப் பொருளாய் நின்றதுவுமான,

அந்தப் பொருளை அடியேனும் ஓதி (உணர்ந்து), (அது என்) (இதய கமலாலையாகி) (கமல ஆலையாகி) - (எனது) உள்ளத் தாமரையைச் சாலையாகக் கொண்டு (அல்லது ஆலயமாகி இருப்பிடமாகக் கொண்டு) விளங்குவதானதும், (அவதான போதும்) என் கவனத்துக்கு உரியதுமான ஞானத்தை அருள் புரிவாயாக,

(தனது தாய்க்கு உற்ற சாபத்தைப் பொறாது) (குகனும்) (முருகனும்)- அருள் ஆண்மைகூர - தாய்மீதிருந்த தனது அருளையும் ஆண்மையையும் (சிவ நூலைக் கடலில் எடுத்தெறிந்து சிவபிரான் முன்னிலையில்) நிரம்பக்காட்டிட, (மகரமெனு சாபதாரி) சுறாமீனாகச் சாபம் பெற்ற நந்தி தேவரின் - (குறையகல) குறை நீங்குமாறு (வேலை மீது தனி ஊரும்) கடற்கரையில் தனியாகக் கிடந்த -

குழவி வடிவாகவே - குழந்தை வடிவு கொண்டு (நம் பரதர் தவமாக மீறு) நமது (பரதர்) வலைஞர் தவத்தின் பயனாக, மிக்கு எழுகின்ற (அலைகள்) வீசும் கடற்கரையிற் சேர்ந்த - வலைஞர் எடுத்து வளர்த்த - மாது (பார்வதியைத் தேடி வந்து)

---

எறிந்ததைக் "குகனும் அருள் ஆண்மை கூர" என அருணகிரியார் குறிப்பித்துள்ளார்.

வரைபக எறிந்த கூர்வேல் மைந்தனும் தந்தை கையில்
உரைபெறு போத நூலை ஒல்லெனப் பறித்து வல்லே
திரைபுக எறிந்தானாக. நாதன் வெகுண்டு நோக்கா..
முருகனை வணிகர் தம்மில் மூங்கையா கென்றான் -

திருவிளை - வலைவீசின 8, 10.

தேவி சாபம் உற்றதும், வலைஞர் மகளானதும், இறைவர்வந்து தேவியை மணந்ததும், திருவிளையாடல் வலைவீசின படலத்திற் காணலாகும். இந்தத் திருவிளையாடலின் கருக்கத்தை-

தானிட்ட சாபந் தன்னால் தரணியிற் பரதர் யார்க்கும்
கோனிட்ட மகளாச் சார்ந்த குமரியை மணக்க வேண்டி
மீனிட்ட வலையில் வீழ வீசுகைத் திறத்தைக் காட்டும்
கானிட்ட நட்ட மாடி கனைகழல் கருதி வாழ்வாம்

எனவரும் அறுபத்துநான்கு திருவிளையாடற் பாடலிற் காண்க.

அகிலவுல கோர்கள் காண அதிசயம தாக மேவி
அரியமண மேசெய் தேக வலைதேடி-
*அறுமுகவன் மீகரான, பிறவி †யமராசை வீசும்
‡ அசபை செகர்சோதி நாத
பெருமாளே(174)

## 1166. பதங்களைப் பாட

தனதன தத்த தந்த தானத்த
தனதன தத்த தந்த தானத்த
தனதன தத்த தந்த தானத்த தனதான

நரையொடு பற்க ழன்று தோல்வற்றி
நடையற மெத்த நொந்து காலெய்த்து
நயனமி ருட்டி நின்று கோலுற்று நடைதோயா-
நழுவும்வி டக்கை யொன்று போல்வைத்து
நமதென மெத்த வந்த வாழ்வுற்று
நடலைப டுத்து மிந்த மாயத்தை நகையாதே;
விரையொடு பற்றி வண்டு பாடுற்ற
ம்ருகமத மப்பி வந்த வோதிக்கு
மிளிருமை யைச்செ றிந்த வேல்கட்கும்
வினையோடு-
மிகுகவி னிட்டு நின்ற மாதர்க்கு
மிடைபடு சித்த மொன்று வேXறுற்றுன்
விழுமிய பொற்ப தங்கள் பாடற்கு
வினவாதோ;

* வலை தேடியாகிய சிவனே - ஆறுமுக வள்ளல் - அவரே திருவாரூரில் - வன்மீக நாதர் என்னும் திருப் பெயருடன் விளங்கும் சிவபெருமான்; சூரனை அடக்கவேண்டிச் சிவனே அறுமுக வள்ளலாய்த் தோன்றினர்.

"இறை கதித்த சூர் முதலை இறுப்ப அரனே இளையோன்
ஆன வாற்றால்" - தணிகைப் புராணம். (தேவியர் துதி)

† யமராசை - இயமன் - இது இறப்பைக் குறிக்கின்றது

‡ அசபை - என்பது அஜபா மந்திரம் - The Hamsa mantra, as it is uttered without effort by a yogin, during inhalation and exhalation (Tamil Lexicon). "அவன் நான்" எனப்படும் சோகம்; சோகம் பாவனை என்பது ஜீவன்மாவும் பரமான்மாவும் ஒன்றெனப் பாவிக்கை. அ-ஜபா - பாடல் 444- பக்கம் 616 கீழ்க்குறிப்புப் பார்க்க.

X உறுதல் - அன்பு படுதல் "யாம் உற்றால்
உறா அதவர்" - திருக்குறள் 1245 உரை

எல்லா உலகினர்களும் காணும்படியாக, அதிசய உருவத்துடன் (வலைஞனுடைய கோலத்துடன்) வந்து, அந்த வலைஞர் மகளை அருமையான (தன் வலை வீசு கைத் திறத்தைக் காட்டித்) திருமணஞ் (செய்து)- செய்து கொண்டு (ஏகு அவ்வலை தேடி) சென்ற அந்த வலை தேடியாகிய சிவபிரானே -

(அறுமுக வன்மீகரான) ஆறுமுகத்தராய் எனக்கு விளங்கி (வன்மீகரான பெருமாளே) வன்மீக நாதர் என்னும் திருப் பெயருடன் (இந்தத் திருவாரூர் க்ஷேத்திரத்தில்) விளங்கும் பெருமாளே! (பிறவி) பிறப்பையும் (யம ராஜனையும்) இறப்பையும் (வீசும்) ஓட்டித்தள்ள வல்ல அஜபா மந்திரப் பொருளாகி, ஜகத்துளோர்க்கு ஜோதி நாதராய் விளங்கும் பெருமாளே!

(போதம் அருள்வாயே)

## 1166.

நரை மயிர் வர, பற்கள் கழன்று விழ, தோல் வற்றிப்போக, நடக்கும் நடை (அற) அற்றுப்போக (மெத்த நொந்து) மிகவும் நோவுற்றுக், கால்கள், (எய்த்து) இளைப்பு உற, (நயனம் இருட்டி நின்று) கண்கள் இருள் அடைந்து நின்று (கோல் உற்று) தடியை ஊன்று கோலாகக் கொண்டு - நடை பயின்று,

(நழுவும்) - நழுவி மறையப் போகும் - இறந்து படுவதான (விடக்கை) - இந்த மாமிச சரீரத்தை - (ஒன்றுபோல்) நிலைத்து நிற்கும் ஒரு பொருள்போல (வைத்து, பாவித்து நினைத்து) நமதென - நம்முடையது - நம்முடையது என்று தமது உடைமைகளைப் பாராட்டி, (மெத்த வந்த வாழ்வுற்று) அங்ஙனம் சேகரித்து வந்த வாழ்வை - செல்வத்தை அடைந்து, (நடலை படுத்தும்) ஈற்றில் துன்பத்தை உண்டாக்கும் இந்த (மாயத்தை) மாய வாழ்க்கையை (நகையாதே) சீ என்று - சிரித்துப் புறக்கணிக்காமல் - சிரித்து விலக்காமல் -

(விரை யொடு) நறுமணத்தைப் (பற்றி) நுகர்ந்து, வண்டு பாடல்பாட (ம்ருகமதம்) கஸ்தூரியை அப்பி வந்த தோய்ந்துள்ள (ஓதிக்கும்) கூந்தலுக்கும், விளங்கும் (மையை) அஞ்சனத்தை - மை நிறைந்துள்ள வேல்களுக்கும் - வேல்போன்ற கண்களுக்கும், (விரையோடு) தந்திர எண்ணத்துடனே -

(மிகு கவின் இட்டு) மிக்க அழகைச் செய்து அலங்காரத்துடன் நிற்கும் மாதர்களுக்கும் மிடைபடு நெருங்கிச் செல்லும் அல்லது இடைபடு மத்தியிலே அவஸ்தைப் படுகின்ற - (சித்தம்) உள்ளம் (ஒன்றுவேன்) சென்று பொருந்துதலை உடையவனாகிய நான், (உற்று) அன்பு பூண்டு, (உன்) உன்னுடைய (விழுமிய) சிறந்த (பொற்பதங்கள்) அழகிய திருவடிகளைப் (பாடற்கு) பாடிப் புகழுதலை (வினவாதோ) ஆய்ந்து மேற்கொள்ளேனோ! (பாடுதற்கு என் உள்ளம் ஆய்ந்து அமையாதோ).

*உரையொடு சொற்றெ ரிந்த மூவர்க்கு
மொனிபெற † நற்ப தங்கள் போதித்து
மொருபுடை பச்சை நங்கை யோடுற்று முலகூடே-
‡ உறுபலி பிச்சை கொண்டு போயுற்று
X முவரிவி டத்தை யுண்டு சாதித்து
O முலவிய முப்பு ரங்கள் வேவித்து முறநாகம்,
அரையொடு கட்டி யந்த மாய்வைத்து
மவிர்சடை வைத்த கங்கை யோடொக்க
அழகுதி ருத்தி யிந்து மேல்வைத்து மரவோடே
அறுகொடு நொச்சி தும்பை மேல்வைத்த
அரியய னித்தம் வந்து பூசிக்கும்
அரநிம லர்க்கு நன்றி போதித்த
பெருமாளே (175)

## 1167. பணிய

தனந்த தனனந் தனந்த தனந்த தனனந் தனந்த
தனந்த தனனந் தனந்த தனதான

நிமிர்ந்த முதுகுங் குனிந்து சிறந்த முகமுந் திரங்கி
நிறைந்த வயிறுஞ் சரிந்து தடியூனி-
நெகிழ்ந்து சடலந் தளர்ந்து விளங்கு விழியங் கிருண்டு
நினைந்த மதியுங் கலங்கி மனையாள்கண்,
டுமிழ்ந்து பலருங் கடிந்து சிறந்த வியலும் பெயர்ந்து
உறைந்த உயிருங் கழன்று விடுநாள்முன்-

---

* சொல்லும் பொருளும் தெரிந்த மூவர் - சொல் - தேவி; பொருள் இறைவன் - 'சொல்லும் பொருளும் என நடமாடும் துணைவருடன் புல்லும் பரிமளப் பூங்கொடியே" (அபிராமி அந்தாதி 28) "சொல்வடிவாய் நின் இடம் பிரியா இமயப்பாவை தன்னையும், சொற்பொருளான உன்னையுமே" (திருவிளை இடைக்காடன் 10) "சொல்தான் உமை; பொருள் அரனாம் மிகுபொருள் துணிவால் அவர் அருள் தொகுமால்" - கோயிற்புரா திருவிழா. 51

† பதம் - எழுத்து நற்பதங்கள் - ஐந்தெழுத்து -
"அந்தியும் நண்பகலும் அஞ்சு பதஞ் சொல்லி" - சுந்தரர். 7-83-1

‡ பிச்சை கொள்ளுதல் - பாடல் 897-பக்கம் 620 குறிப்பு

X விஷம் உண்டது - பாடல் 509-பக்கம் 162 கீழ்க்குறிப்பு

O திரிபுரம் எரித்தது - பாடல் 285-பக்கம் 206 கீழ்க்குறிப்பு

(உரையொடு சொல்) பொருளும் சொல்லும் தெரிந்த (சிவம்-சக்தி - இவர்களின் உண்மை நிலை தெரிந்த) பிரமன் திருமால் - உருத்திரன் என்னும் மூவர்க்கும் (அல்லது - சம்பந்தர் - அப்பர் - சுந்தரர் என்னும் மூவர்க்கும்), (ஒளி பெற) அவர்கள் கீர்த்தி ஒளி பெற, (நற்பதங்கள்) சிறந்த எழுத்துக்களான ஐந்தெழுத்தை - பஞ்சாக்ஷரப் பொருளை - உபதேசித்தும் அல்லது சிறந்த தெய்வப் பதவியை வகிக்கக் கற்பித்தும், தமது ஒரு பாகத்தில் பச்சைப் பெருமாட்டியாம் பார்வதியோடு அமைந்தும் - உலகெங்கும்,

கிடைக்கும் (பலி) பிச்சையை ஏற்றுக்கொண்டு சென்றும், கடலில் எழுந்த விஷத்தை உண்டு (தமது பரத்தை) நிலை நிறுத்தியும், பறந்து செல்லும் தன்மை வாய்ந்த திரிபுரங்களை எரிவித்தும், பொருந்தும்படிப் பாம்பை -

அரையிலே கட்டி அழகாக அமைத்தும் விளங்குகின்ற சடையின்மேல் தரித்துள்ள கங்கையுடனே (ஒக்க) ஒத்திருக்க, அழகுபெற்று இலங்கும்படிப் பிறைச்சந்திரனை மேலே வைத்தும், பாம்புடனே -

அறுகையும், நொச்சியையும், தும்பையையும் மேலே சூடியுள்ளவரும், திருமால், பிரமன் இருவரும் நாள்தோறும் வந்து பூசிக்கப் பெற்றவருமான 'அரன்' என்னும் நிர்மல மூர்த்தியாம் சிவனுக்கு *நல்ல உபதேசப் பொருளை உபதேசித்த பெருமாளே!

(பாடற்கு வினவாதோ)

## 1167.

நிமிர்ந்துள்ள முதுகும் குனிந்து, திகழ்ந்திருந்த முகமும் சுருக்கம் கண்டு, நிறைந்து ஒழுங்காயிருந்த வயிறும் சரிதலுற்றுச் சரிந்து, தடியை ஊன்றுவதாகி -

நெகிழ்வுற்று உடலும் தளர்ச்சி யடைந்து, ஒளியுடன் இருந்த கண் அங்கு இருளடைந்து, நினைவுடன் இருந்த அறிவும் கலக்கம் உற்றதாகி மனையவள் (கண்டு) பார்த்துச்

(சீ என) உமிழ்ந்து பிறர் பலரும் வெடு வெடு என்று பேசி, சிறப்பாக இருந்த குணத்தன்மையு ம் (பெயர்ந்து) நீங்கலாகி, (உடலிற் குடி கொண்டிருந்த) உயிரும் (சுழன்று) பிரிந்து விடும் நாள் (வருவதற்கு) முன்பாக

---

* சிவபிரானுக்கு உபதேசித்து - பாடல் 327

பக்கம் 314 கீழ்க்குறிப்பு

உகந்து மனமுங் குளிர்ந்து *பயன்கொள் தருமம் புரிந்து
ஒடுங்கி நினையும் பணிந்து மகிழ்வேனோ;
திமிந்தி யெனவெங் கணங்கள் குணங்கர் பலவுங் † குழும்பி
திரண்ட ‡ சதியும் புரிந்து முதுசூரன்-
Xசிரங்கை முழுதுங் குடைந்து நிணங்கொள் குடருந் தொளைந்து
சினங் கெழுகொடும் பெருங்கு ருதிமூழ்கி,
அமிழ்ந்தி மிகவும் பிணங்கள் அயின்று மகிழ்கொண்டு மண்ட
அடர்ந்த அயில்முன் துரந்து பொருவேலோ-
அலங்க **வெனவெண் கடம்பு புனைந்து புணருங் குறிஞ்சி
அணங்கை மணமுன் புணர்ந்த பெருமாளே (176)

## 1168. தரிசனம் பெற

தனன தாத்தன தானா தானன
தனன தாத்தன தானா தானன
தனன தாத்தன தானா தானன தனதான

நிருத ரார்க்கொரு காலா ஜேஜெய
சுரர்க ளோத்திடு வேலா ஜேஜெய
நிமல னார்க்கொரு பாலா ஜேஜெய விறலான-
நெடிய வேற்படை யானே ஜேஜெய
எனஇ ராப்பகல் தானே நான்மிக
நினது தாட்டொழு மாறே தானினி யுடனேதான்,

---

* பயன்கொள் தருமம் - தக்கார் கைப்படும் தருமமே மிக்க பயன் தரும்;

"உறக்குந் துணையதோர் ஆலம்வித் தீண்டி
இறப்ப நிழற் பயந்தா அங் - கறப்பயனும்
தான்சிறி தாயினும் தக்கார்கைப் பட்டக்கால்
வான் சிறிதாப் போர்த்து விடும்" நாலடியார் 4-8

† குழும்பி = கூடி ‡ பேய்கள் தாள மிடுதல் - கூத்தாடுதல் -
"பிள்ளை விழ விழவும் பெருந் துணங்கை கொட்டுமே"
- கலிங்க. பரணி. அவதாரம். 78

"பிணப்பறைக் குரலுவந்து வந்து சிலபேய் துணங்கை யிடுதோறும்"
-தக்கயாக. 53

X பேய்கள் போர்க்களத்திற் பிணங்களின் சிரங்களை விழுங்கும்; ரத்தத்தைக் குடிக்கும்; (தொடர் - பக்கம் 407)

மனமகிழ்ச்சியுடன் உள்ளக்குளிர்ச்சியுடன், நல்ல பயனைத் தரக்கூடிய தருமங்களைச் செய்து, மன ஒடுக்கம் அடைந்து உன்னை பணிதலுற்று மகிழ மாட்டேனோ!

திமிந்தி என்னும் ஒலியுடன் கொடிய (கணங்கள் குணங்கர்) (குணங்கர் கணங்கள்) - பிசாகக் கூட்டங்கள் (அலகைத் திரள்கள்) பல வகையனவும் (குழும்பி) ஒன்று கூடி (திரண்ட சதியும் புரிந்து) கூட்டமாக நின்று (சதியும் புரிந்து) தாள ஒத்து இட்டுப், பழையவனான சூரனுடைய

(சிரம்) தலை, கை, இவை யாவற்றையும் (குடைந்து) நோவு படச் செய்து, மாமிசம் கொண்ட குடலைத் தொளை செய்து, கோபங் கொண்ட கழுகுடனே (அந்தச் சூரனுடைய மிக்குப் பெருகும் ரத்தத்தில் முழுகி

அமிழ்ந்தும், நிரம்பப் பிணங்களை (அயின்று) உண்டு மகிழ்ச்சி பூண்டு நெருங்க, தாக்கும் வேலாயுதத்தை முன்பு செலுத்திச் சண்டை செய்த வேளே!

மாலையாக வெண்கடம்பு மாலையை அணிந்து உன்னுடன் கூடின மலை நிலைத்துப் பெண்ணாகிய வள்ளியை முன்பு திருமணஞ் செய்து கொண்டு கூடின பெருமாளே!

(நினையும் பணிந்து மகிழ்வேனோ)

## 1168.

அசுரர்களுக்கு ஒரு காலனாக (யமனாக) ஏற்பட்டவனே (ஜெஜெய) உனக்கு வெற்றி திகழ்வதாக, வெற்றி திகழ்வதாக! (நீ வெல்க வெல்க என்றபடி), தேவர்கள் போற்றித் துதிக்கும் வேலனே! நீ வெல்க வெல்க! பரிசுத்த மூர்த்தியாம் சிவனுடைய ஒப்பற்ற குழந்தையே! நீ வெல்க வெல்க - வீரம் வாய்ந்த -

பெரிய வேலாயுதத்தைப் படையாகக் கொண்டவனே! நீ வெல்க வெல்க, என்றெல்லாம் இரவும் பகலுமே நான் நிரம்ப உன்னுடைய (தாள் தொழுமாறே) திருவடியைப் பணிந்து போற்றும் படி, இனித் தாமதிக் காமலேதான் -

---

* சிர மலை விழுங்கச், செந்நீர் திரைகடல் பருகலாகப்
பிரமனை வேண்டிப்பின்னும் பெரும்பசி பெறவும் வேண்டும்"
- கலிங்க. பரணி. அவதா. 75

O போர்க்களத்தில் கழுகும், பருந்தும் வந்து உண்பது -
"வான்சிறைக் கழுகும் பாறும் வயிறுகள் பீறிப்போன"
- கலிங்க. அவதர். 73

** வள்ளியும் கடம்ப மாலை அணிவாள் -
"குழல்சேர் கடம்பு தொடை அரசி" - திருப்புகழ். 636

தரையி னாழ்த்திரை யேழே போ *லெழு
பிறவி மாக்கட லூடே நானுறு
† சவலை தீர்த்துன தாளே சூடியு
‡ னடியார்வாழ்

சபையி னேற்றியின் ஞானா போதமு
மருளி யாட்கொளு மாறே தானது
தமிய னேற்குமு னேநீ மேவுவ தொருநாளே;

X தருவி னாட்டர சாள்வான் வேணுவி
னுருவ மாய்ப்பல நாளே தானுறு
தவசி னாற்O சிவ னீபோய் வானவர் சிறைதீரச்-

சகல லோக்கிய மேதா னாளுறு
மகர பார்த்திப னோடே சேயவர்
தமரை வேற்கொடு நீறா யேபட விழமோதென்;

றருன ஏற்றம ரோடே போயவ
ருறையு மாக்கிரி யோடே தானையு
மழிய வீழ்த்தெதிர் சூரோ டேயம ரடலாகி-

---

*எழு பிறவி - பாடல் 743-பக்கம் 218 கீழ்க்குறிப்பு

† சவலை - மனக்குழப்பம் - "சவலைக் கடலுளனாய்க் கிடந்து தடுமாறும் கவலை"- திருவாசகம். 11-17

‡ அடியார் சபையிற்கூட விரும்பின அருணகிரியார்க்கு அவ் வேண்டுகோள் பலித்த தென்பது:- "இடுதலைச் சற்றுங் கருதேனைப் போதமிலேனை அன்பால் கெடுதலிலாத் தொண்டரிற் கூட்டியவா.. வேலோன்"- கந்தரலங். 100

X சூரனுக்கு அஞ்சி இந்திரன் மூங்கில் உருவுடன் சீகாழியில் தவஞ் செய்திருந்தான் - "காழி நன்னகி... இத்தலம் இனிதே என்னா இருந்தனன் இமையோர் கோமான்... வேணுவாகி மறைந்து நோற்றிருந்தான் . வேணுவின் உருப்போல் நின்று மெலிவொடு நோற்று நாளும் தாணுவை வழிபட் டங்கண் சதமகன் சாரும் நாளில்" - கந்தபுரா. 2-21-39, 44,45

O சிவன் முருகவேளைப் போருக்கு அனுப்பினது -

"ஆங்கமர் குகன்முகம் நோக்கியே இனைய கூறுவான்;
தீமையே இயற்றி உலப்புறா வன்மை கொண்டுற்ற
சூரனை அவுணர் குழுவொடும் தடிந்து சுருதியின் நெறி

இப்பூமியில் ஆழமுள்ள (திரை) கடல் ஏழு போல எழுகின்ற (உண்டாகின்ற) பிறவி என்கின்ற, அல்லது கடல் ஏழு போன்ற (எழுபிறவி) ஏழு பிறப்பு ஆகிய (மாக் கடலூடே) பெரிய கடலுள் நான் அனுபவிக்கும் (சவலை) மனக் குழப்பத்தை ஒழித்து, உன்னுடைய திருவடியையே தலையிற் சூடினவனாய், உன்னுடைய அடியார்கள் வாழ்கின்ற

(சபையின் ஏற்றி) கூட்டத்தில் (என்னைக்) கூட்டி வைத்து, (இன்) இனிய (ஞானபோதமும்) ஞான உபதேசத்தையும் எனக்கு அருள்செய்து உபதேசித்து, (ஆட் கொளுமாறேதான்) (என்னை) ஆண்டுகொள்ளவே (அது) அதன் பொருட்டே - தமியனேற்கு (முன்னே) தனியேனாகிய என் முன்பு நீ (மேவுவது) வந்து தோன்றுவதான ஒருநாள் உண்டோ! ஒரு பாக்கிய நாள் எனக்குக் கிடைக்குமோ!

(தருவின் நாட்டு அரசு ஆள்வான்) கற்பக தருக்கள் உள்ள நாடு பொன்னுலக அரசாட்சியைப் புரிபவனாகிய (இந்திரன்) (வேணுவின் உருவமாய்) மூங்கிலின் உருவெடுத்து (பல நாளே) பல நாள்கள் (தான் உறு தவசினால்) தான் செய்த தவத்தின் பயனாகச், (சிவன்) சிவபிரான் (உன்னை) "நீ சென்று தேவர்களின் (சிறைதீர) சிறையை நீக்கும் பொருட்டு

(சகல) எல்லாவித (லோக்கியம் - லௌகீகம் - உலகப்பற்று) உலக இன்பங்களையும் ஆண்டு அனுபவிக்கும் - அசுர ராஜனான சூரனையும், அவன் (சேயவர்) மக்களையும், (தமரை) சுற்றத்தினரையும் (வேற்கொடு) வேலாயுதம் கொண்டு (நீறாயே பட) அவர்கள் பொடியாய் அழிந்து விழும்படித் தாக்குவாயாக என்று -

(அருள) திருவாய் மலர்ந்து சொல்ல, ஏற்று (அவர் மொழிக்கு இணங்கி) ஏற்று (அமரோடே போய்) போருக்கெழுந்து சென்று, (அவர்) அந்த அசுரர்கள் (உறையும்) இருப்பிடமாகக் கொண்டிருந்த (மாக்கிரியோடே) பெரிய கிரவுஞ்சம், எழுகிரி யாகிய மலைகளையும் (தானையும்) சேனைகளையும், அழிந்து விழும்படிச் செய்து, எதிர்த்து வந்த சூரனுடன் (அமர் அடலாகி) பொருந்திய பகைமை (அல்லது வலிமை) பூண்டு.

---

நீ(ர்)இ. மகவான் பேரரசளித்துச் சுரர் துயர் அகற்றிப்
பெயர்தி என்றனன் எந்தை பெருமான்"

- கந்தபுரா . 1-18-34, 35

அமரில் வீட்டியும் வானோர் தானுறு
சிறையை மீட்டர னார்பால் மேவிய
*அதிப ராக்ரம வீரா வானவர் பெருமானே (177)

## 1168-1. உயிர் விடும்போது காத்தருள

தான தான தான தந்த தான தான தான தந்த
தான தான தான தந்த தனதான-

ஆர வார மாயி ருந்து ஏம தூத ரோடி வந்து
ஆழி வேலை போன்மு ழங்கி யடர்வார்கள்-
ஆக மீதி லேசி வந்து ஊசி தானுமே நுழைந்து
ஆவைமீதி லேகு ரும்பு எனவேதான்,
வீர மான சூரி கொண்டு நேரை நேரை யேபி ணந்து
வீசு வார்கள் கூகு வென்று அழுபோது
வீடு வாச வான பெண்டிர் ஆசை யான மாதர் வந்து
மேலை வீழ்வ ரீது கண்டு வருவாயே;
நாரி வீரி சூரி யம்பை வேத வேத மேபு கழ்ந்த
நாதர் பாலி லேயி ருந்த மகமாயி-
நாடி யோடி வாற அன்பர் காண வேணு தேபு கழ்ந்து
நாளு நாளு மேபு கன்ற வரைமாது,
† நீரின் மீதி லேயி ருந்த நீலி சூலி வாழ்வு மைந்த
நீப மாலை யேபு னைந்த குமரேசா-
‡ நீல னாக வோடி வந்த சூரை வேறு வேறு கண்ட
நீதி யான தோர்கு ழந்தை பெருமாளே (178)

---

* இந்த 1168-ஆம் பாடலில் பின் நாலடி - கந்த புராணச் சுருக்கமாம் என்க

† நீரின் மீதிலே இருந்த நீலி -"கடவுள் நீலி", "சுதங்கொள் நீலி" (தக்கயாக 359, 608) "உலகை ஊர்தி ஊர்வாள்" (தக்கயாக. 110) என்றது. தேவி விஷ்ணு சக்தி என்னும் கொள்கையைத் தழுவி, "பொங்குமளிப் புணரித் துயில் வல்லி" (தக்கயாக. 73) என்றாற்போல - தக்கயாக. பரணி பக்கம் 285.

‡ நீலன் - கொடியவன் - ' நிவர்த்தியலை வேண்டுமிந்த
நீலனுக்கே' - தாயுமா - பன்மாலை. 6

(அமரில் வீட்டியும்) போரில் அவனை அழித்தும், தேவர்களை அவர்கள் அடைபட்டிருந்த சிறையினின்றும் மீட்டு - நீக்கிப் புரந்தும், (அரனார் பால் மேவிய) (தந்தையாம்) சிவபிரானிடத்தே வந்து சேர்ந்த மகா பராக்ரம வீரனே! தேவர்கள் பெருமாளே!

(தமியனேற்குமுனே நீ மேவுவ தொருநாளே)

## 1168-1.

(ஆரவார மாய் இருந்து) ஆடம்பரமாய் காலங்கழிந்து வருநாளில் - எமதூதர்கள் ஓடிவந்து, (ஆழிவேலை) வட்டமான கடலைப் போலப் பேரொலி செய்து (என்னை) (அடர்வார்கள்) நெருக்கி வருத்துவார்கள்;

(என்னுடைய ) உடலிலே கோபத்துடன் ஊசியைக் குத்தி நுழைப்பார்கள், ஆலையில் வைத்த கரும்பு என்று சொல்லும்படி (ஆட்டிக் கசக்கி)-

வீரம் பொருந்திய (சூரி கொண்டு) சூரிக்கத்தி கொண்டு (நேரை நேரையே பிளந்து) செவ்வையாகப் (பாதி பாதியாகப்) பிளந்து எறிவார்கள்; இங்ஙனம் மரணவேதனைப் படுவேன்; (வீட்டில் உள்ளோர்) கூகு என்று அழுது கொண்டிருக்கும் பொழுது -

வீடுவாசலில் உள்ள மாதர்களும், என்மீது அன்பு கொண்டுள்ள மாதர்களும் வந்து என்உடல் மீது வீழ்வார்கள் - இக்கோலத்தைக் கண்டு நீ வந்து அருள்புரிவாயாக.

(நாரி) தேவி, (வீரி) வீரமுள்ளவள், (சூரி) அச்சத்தைத் தருபவள் - மகாகாளி, (அம்பை) அம்பிகை, (வேதவேதமே புகழ்ந்த) எல்லா வேதங்களும் புகழ்கின்ற (நாதர் பாலிலே) தலைவராம் சிவபெருமானிடத்தே - இருக்கும் (மகமாயி)- தேவி பார்ப்பதி -

(தன்னை) விரும்பி ஓடிவருகின்ற அன்பர்கள் கண்டு (வேணதே புகழ்ந்து) நிரம்பப் புகழ்ந்து, அல்லது மனதில் தோன்றிய வண்ணமே வேண்டியபடியே புகழ்ந்து, நாள் தோறுமே துதித்த மலைமகள்;

(கடல்) நீரில் பள்ளி கொண்டிருக்கும் நீல நிறத்தி - வைஷ்ணவி, சூலாயுதத்தை ஏந்தினவள் - ஆகிய பார்வதிக்கு வாழ்வாய் அமைந்த - செல்வமாய் அமைந்த - (மைந்த) பிள்ளையே! கடப்ப மாலையை சூடியுள்ள குமரேசனே!

(நீலனாக ஓடிவந்த) கறுத்த உடலுடன் ஓடி வந்த (அல்லது கொடியவனாக ஓடிவந்த) சூரபத்மாவை (வேறுவேறு உருவம் எடுக்கச் செய்த அல்லது) துண்டம் துண்டமாகப் பிளந்தெறிந்த (நீதனான) நியாய மூர்த்தியான ஒப்பற்ற குழந்தைப் பெருமாளே!

(வருவாயே)

## 1169. பிறவி அற

தான தந்த தான தான, தான தந்த தான தான
தான தந்த தான தான தனதான

நீரு மென்பு தோலி னாடு மாவ தென்கை கால்களோடு
நீரு மங்க மாகி மாய வுயிருறி-
நேச மொன்று நாங்த தாய ராசை கொண்ட போதில் மேவி
நீதி யொன்று பால னாகி யழிவாய்வந்.
தூரு மின்ப வாழ்வு மாகி யூன மொன்றி வாது மாத
ரோடு சிந்தை வேடை கூர உறவாகி-
ஊழி யைந்த கால மேதி யோனும் வந்து பாசம் வீச
வுனு டம்பு மாயு மாய மொழியாதோ;
தூர ணண்ட லோக மென்மை ஆறை கொண்டு போய் விடாது
தோகை யின்கண் மேவி வேலை விடும் வீரா-
தோளி வெண்பு மாலை வேணி மீது கங்கை ஆடி யாடு
தோகை பங்க ரோடு *சூது மொழிவோனே;
பாரை யுண்ட மாயன் வேலை யூதி பண்டு † பாவ லோர்கள்
பாடல் கண்டு ஏகு மாவின் மருகோனே-
பாத கங்கள் வேதி நூறி நீதி யின்சொல் வேத [illegible]
பாடு மன்பர் வாழ்வ தான பெருமானே (179)

## 1170. அர்ச்சிக்க

தனதத்தத் தத்தத் தனதன
தனதத்தத் தத்தத் தனதன
தனதத்தத் தத்தத் தனதன தனதான

‡ பகல்மட்கச் செக்கர்ப் ப்ரபைவிடு
நவரத்நப் பத்தித் தொடைநக
நுதிபட்டிட் டற்றுச் சிதறிட இதழூறல்-

---

* உபதேசித்தது "மௌனமறை" ஆதலின் - அது சூது - ரகசியப் பொருளாயிற்று - (பாடல் 523)

† பாவலோர்கள் பாடல் கண்டு திருமால் அவர்கள் பின் செல்வது - பாடல் 991-பக்கம் 868 குறிப்பைப் பார்க்க -

" பாடலின்பி னேகுமாலின்" என்றும் பாடம் ‡ 1170 -ஆம் பாடலின் 5-6 அடிகள் மனப்பாடம் செய்யத் தக்கன.

## 1169.

நீர், எலும்பு, தோல் இவைகளால் (ஆவது என் - ஆக்கப் பட்டது என்று சொல்லப்பட்டு) கை, கால் இவைகளோடு, நீண்ட (அங்கமாகி) அங்கங்களை உடையதாகி - உடல்கொண்டு - மாய மயமான உயிர் அவ்வுடலிலே ஊறப்பெற்று - உறையப்பெற்று -

ஆசை பொருந்திய தந்தை, தாய் ஆகிய இருவர்களும் காதல் கொண்ட சமயத்தில் கருவில் உற்று - ஒழுக்க நெறியில் நிற்கும் பிள்ளையாகத் தோன்றி (அழிவாய் வந்து) அழிதற்கே உரியவனாய்ப் பூமியில் வந்து - (அல்லது அழிபடும் (வாய்) துவாரத்தின் வழியே வந்து)

அனுபவிக்கும் இன்ப வாழ்வை உடையவனாகி, குறை ஒன்றும் இல்லாமல், மாதர்களுடனே மனவேட்கை (உள்ளத்து ஆசை) மிக்கு எழ - அவர்களுடன் சம்பந்தப்பட்டு -

ஊழ்வினையின்படி அமைந்த முடிவு காலத்தில் (மேதியோனும்) எருமை வாகனனாம் எமனும் வந்து பாசக்கயிற்றை வீச, (இந்த) மாமிச உடல் அழிந்து போகும் மாயச்செயல் (ஒழியாதோ) முடிவு பெறாதோ!

சூரன் அண்டங்களாம் லோகங்களின் மேலாம் தலைமையைக் கொள்ளை அடித்துப் போய்விடாமல், மயிலின்மீது ஆரோகணித்து வேலாயுதத்தைச் செலுத்தின வீரனே!

தோள்மீது எலும்பு மாலையையும், சடையின்மீது கங்கையையும், சூடி, ஆடல் புரியும் (மயிலனைய) பார்வதிபாகராம் சிவனுக்குச் (சூது) ரகசியப் பிரணவப்பொருளை உபதேசித்தவனே!

இப் பூமியை உண்டவனான மாயவன், புல்லாங்குழலை ஊதி (மகிழ்பவன்), முன்பு திருமழிசை ஆழ்வார் ஆதிய (பாவலர்களின்) கவிஞர்களின் பாடலைக் கண்டு மகிழ்ந்து (அவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி) அவர்கள் பின்பு செல்பவனாகிய திருமாலின் மருகனே!

பாபங்களை (வேறி) குலைத்து (நூறி) பொடி படுத்தி, நீதிச் சொற்களைக்கொண்டு வேத உண்மைகளை எடுத்துப் பாடும் அன்பர்களுக்கு செல்வப் பொருளாயுள்ள பெருமானே!

(உடம்பு மாயு மாயம் ஒழியாதோ)

## 1170.

சூரியனுடைய ஒளியும் மழுங்கும்படியான சிவந்த ஒளியை வீசுகின்ற நவரத்னங்களால் ஆய (பத்தித் தொடை) ஒழுங்கு வரிசை கொண்ட மாலையானது நகத்தின் நுனிபட்டதனால் அறுபட்டுச் சிதறுன்ன, வாய் இதழ் ஊறலை -

பருகித்தித் திக்கப் படுமொழி
பதறக்கைப் பத்மத் தொளிவளை
வதறிச்சத் திக்கப் புளகித தனபாரம்;

அகலத்திற் றைக்கப் பரிமள
அமளிக்குட் சிக்கிச் சிறுகென
இறுகக்கைப் பற்றித் தழுவிய அநுராக-

அவசத்திற் சித்தத் தறிவையு
மிகவைத்துப் *பொற்றித் தெரிவையர்
வசம்விட்டர்ச் சிக்கைக் கொருபொழு
துணர்வேனோ;

இகல்வெற்றிச் சத்திக் கிரணமு
முரணிர்த்தப் பச்சைப் புரவியு
†மிரவிக்கைக் குக்டத் துவசமு மறமாதும்-

இடைவைத்துச் சித்ரத் தமிழ்கொடு
கவிமெத்தச் செப்பிப் பழுதற
எழுதிக்கற் பித்துத் திரிபவர் பெருவாழ்வே;

‡புகலிற்றாக் கிட்டுப் ப்ரமையுறு
கலகச்செற் றச்சட் சமயிகள்
புகலற்குப் பற்றற் கரியதொ ருபதேசப்-

பொருளைப் Xபுட் பித்துக் குருபர
னெனமுக்கட் செக்கர்ச் சடைமதி
Oபுனையப்பர்க் கொப்பித் தருளிய
பெருமானே (180)

---

* பொற்றி = போற்றி

† இரவியை வரவழைப்பது கோழி - "ரவி உமிழ் துவசம்" என்றார் பிறிதோரிடத்து - பாடல் 1008; பாடல் 387 பக்கம் 474 கீழ்க்குறிப்பு

‡ புகல் - விருப்பம் - 'வானுறை புகல் தந்து'- பரிபாடல். 19-1

X புட்பித்து = திருவாய் மலர்ந்து

O சிவபிரானுக்கு உபதேசித்த - பாடல் 327- பக்கம் 314 கீழ்க்குறிப்பு .

உண்டு, தித்திக்கப் பேசும் மொழிகள் (பதற) பதைபதைப்பு உற-கலக்கம் காட்ட - (கைப்பத்மத்து) கையாகிய தாமரை - தாமரையன்ன கையில் உள்ள (ஒளிவளை) பிரகாசமுள்ள வளைகள் (வதறி) கலகலத்து (சத்திக்க) ஒலிசெய்ய, புளகம் கொண்ட கொங்கைப் பாரம்,

(அகலத்தில்) மார்பிலே (தைக்க) அழுந்த, பரிமள அமளிக்குள்) நறுமணம் வீசும் படுக்கையிலே (சிக்கி) அகப்பட்டுச் (சிறுசென) நிலை தாழுமாறு, (இறுக) அழுத்தமாகக் (கைப்பற்றி)க் கையால் அணைத்துத் தழுவின காமப்பற்றால் வரும்

(அவசத்தில்) மயக்கிலே (சித்தத்து அறிவையும்) உள்ளத்திலே உள்ள அறிவை மிகவும் வைத்துப் (போற்றி) அதையே மிகவும் மனத்திற்கொண்டு, மாதர்களின் வசப்படுதலை விட்டு விட்டு, (உன்னை) அருச்சனை செய்து (வணங்க) ஒருபொழுதேனும் (உணர்வேனோ) உணர்ச்சி கூடேனோ!

(இகல்) வலிமையையும் (வெற்றி) ஜெயத்தையும் கொண்ட (சத்திக் கிரணமும்) கிரண சத்தியும் - ஒளி வீசும் வேலாயுதத்தையும் (முரண்) வலிமையுடையதும் ஆடல் செய்வதுமான பச்சைக் குதிரையாம் மயிலையும், (இரவி) சூரியனுடைய (கை) கிரணங்களை (வரவழைக்கும்) - அல்லது (இரவி) சூரியனை (கை) (தன்) தொனியால் வரவழைக்கும் - குக்குடம் கோழியின் (துவசமும்) கொடியையும், (மறமாதும்) வேடர் மகளாம் வள்ளியையும் -

(இடைவைத்து) பாட்டின் இடையே பொருந்தவைத்துச், (சித்ரத் தமிழ் கொடு) அழகிய - விசித்ரமான தமிழால் ஆய (கவி) பாடல்களை (மெத்தச் செப்பி) நிறையப் பாடியும், (பழுதற எழுதி) குற்றமில்லா வகையில் எழுதியும், கற்பித்தும் திரியும் அன்பர்களின் பெருஞ் செல்வமே!

(புகலில்) விருப்பத்துடனே தருக்கம் செய்து (பிரளமயுறு - கலக - செற்றும்) மயக்கம் கொண்டதும் - கலகத்தை விளைப்பதும், (செற்றும்) பகைமை ஊட்டுவதுமான - ஷட் சமயிகள் - ஆறு சமயத்தினராலும் (புகலற்கு) சொல்லுதற்கும், பற்றற்கு அடைவதற்கும் அரியதான (முடியாததான) ஒப்பற்ற உபதேசப்

பொருளைத் திருவாய்மலர்ந்து - 'குருமூர்த்தி' என விளங்கி மூன்று கண்களை உடையவரும் (செக்கர்) சிவந்த சடைமீது சந்திரனை அணிந்துள்ளவருமான அப்பர்க்கு - தந்தையாம் பெருமானுக்கு ஒப்பித்து அருளிய - எடுத்துரைத்து அருளிய பெருமாளே!

(அர்ச்சிக்கைக்கு ஒருபொழுது உணர்வேனோ)

## 1171. மாதர் மீதுள்ள மயக்கு அற

தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத் தனதன தனதான

பத்தித்தர ளக்கொத் தொளிர்வரி
பட்டப்புள கச்செப் பிளமுலை
பட்டிட்டெதிர் கட்டுப் பரதவ ருயர்தாளப்
பத்மத்திய *ரற்புக் கடுகடு
கட்சத்தியர் மெத்தத் திரவிய
பட்சத்திய ரிக்குச் சிலையுரு விலிசேருஞ்,
சித்தத்தரு ணார்க்குக் கனியத
ரப்புத்தமு தத்தைத் தருமவர்
சித்ரக்கிர ணப்பொட் டிடுபிறை நுதலார்தந்,
†தெட்டிற்படு கட்டக் கனவிய
பட்சத்தரு ளற்றுற் றுணதடி
சிக்கிட்டிடை புக்கிட் டலைவது தவிராதோ;

மத்தப்பிர மத்தக் ‡கயமுக
னைக்குத்திமி தித்துக் கழுதுகள்
மட்டிட்டஇ ரத்தக் குருதியில் விளையாட
மற்றைப் Xபதி னெட்டுக் கணவகை
சத்திக்கந டிக்கப் பலபல
வர்க்கத்தலை தத்தப் பொருபடை யுடையோனே,
முத்திப்பர மத்தைக் கருதிய
சித்தத்தினில் முற்றத் தவமுனி
முற்பட் Oடுழை பெற்றுத் தருகுற மகள்மேல்மால்

* அற்பு = அன்பு

† தெட்டு - வஞ்சனை - "தெட்டிலே வலிய மடமாதர் வாய் வெட்டிலே" - (தாயுமா. மலைவளர். 2); தெட்டி - பாடல் 653-பக்கம் 534 கீழ்க்குறிப்பு

‡ கயமுகன் - தாரகன் - சூரன் தம்பி

X பதினெட்டுக் கண வகை - பாடல் 788-பக்கம் 338 குறிப்பு

O வள்ளியை (உழை) மான் பெற்றது - பாடல் 382 பக்கம் 464 கீழ்க்குறிப்பு

# 1171.

(பத்தி) வரிசையாய் அமைந்த (தரளக் கொத்து) முத்து மாலைகளின் கூட்டம் (ஒளிர்) பிரகாசிக்கின்றதும், (வரிபட்ட) தொய்யில் முதலிய ரேகைகள் விளங்குவதும், புளகாங்கிதம் கொண்டுள்ளதும், செப்புக் குடம் போன்றதுமான இளங் கொங்கைகளின் மீது (பட்டு இட்டு) பட்டு ரவிக்கையை அணிந்து, (எதிர் சுட்டு) முற்புறத்தில் முடிந்து, (பரதவர்) பரத நாட்டியம் வல்லவர்களுடைய சிறந்த தாளத்துக்கு இணையான

(பத்மத்தியர்) தாமரை மொட்டுப்போன்ற கொங்கையை உடையவர்கள், (அற்பு) அன்பு (ஒரு சமயத்தும்), (சுடுகடு) கடு கடுப்பு - சினக்குறிப்பு (ஒரு சமயத்தும்), காட்டும் (கண் சத்தியர்) சத்திக் கண்ணர் - வேல் போன்ற கண்களை உடையவர், மிகவும் திரவியத்தில் - பொருள்மீது (பட்சத்தியர்) ஆசை வைத்துள்ளவர்கள், (இக்கு) கரும்பு (சிலை) வில்லை உடைய (உருவிலி) உருவம் இல்லாத மன்மதனுடைய காமசேஷ்டைகள்) சேர்ந்துள்ள -

(சித்தத் தருணர்க்கு) உள்ளத்தை உடைய இளம் பருவத்தினராம் வாலிபர்க்குத் தங்களது கொவ்வைக் கனிபோன்ற வாயிதழின் இனிய அமுத ஊறலைத் தருபவர்கள், அழகிய, ஒளி கொண்ட பொட்டையிட்டுள்ள பிறைச்சந்திரன் போன்ற நெற்றியை உடையவர்கள் - ஆகிய பொது மாதர்களின் -

(தெட்டில் படு) வஞ்சனையிற் படுகின்ற கஷ்டமான (கனவிய) கனத்த - அதிகமான (பட்சத்து) அருள் அற்று - ஆசை என்கின்ற மகிழ்ச்சி நீங்கி, உனதடி உற்று - உனது திருவடியில் மனதை வைப்பதால், சிக்கிட்டு - பிரபஞ்சச் சிக்கலிலே மாட்டிக் கொண்டு, (இடைபுக்கிட்டு) அந்தச் சிக்கலின் இடையே புகுந்து அலையுந் தொழிலானது தொலையாதோ! நீங்காதோ!

(மத்தப் பிரமத்த, மத்தம் - செருக்கையும் (பிரமத்தும்) மதி மயக்கத்தையும் கொண்டிருந்த (கயமுகனை) யானை - முகம் கொண்ட தாரகாசுரனைக் குத்தியும், மிதித்தும் பேய்கள் அளவுபட்ட ரத்தக் (குருதியில்) சிவப்பில் விளையாடவும்,

மற்றைப் பதினென் கண வர்க்கங்களும் ஒலிசெய்து நடிக்கப் பலபல வகைகளான ஜீவராசிகளின் (அசுரர், யானை, குதிரை முதலியவற்றின் தலைகள் சிதறுண்டு விழச் சண்டை செய்த படைகளை (அல்லது வேற்படையை) உடையவனே!

முத்திப் பரமத்தை - முத்திப் பரமதை - முத்தி என்கின்ற மேலான பொருளைக் (கருதிய) பெற நினைத்த (சித்தத்தினில்) உள்ளத்தோடு முதிர்ந்த தவ நிலையில் இருந்த சிவ முனிவரின் முற்பட்டு - முன்னிலையிற் சென்று, உமை இலக்குமியாம் பொன்மான் பெற்றுத்தந்த (குறமகள்) வள்ளியின் மீது (மால்) ஆசை

முற்றித்திரி வெற்றிக் குருபர
முற்பட்டமு ரட்டுப் புலவனை
*முட்டைப்பெயர் செப்பிக் கவிபெறு
பெருமாளே (181)

## 1172. காத்தருள

தனதனன தந்ததன தானத் தாத்தன
தனதனன தந்ததன தானத் தாத்தன
தனதனன தந்ததன தானத் தாத்தன தனதான

பரதவித புண்டரிக பாதத் தாட்டிகள்
அமுதுபொழி யுங்குமுத கீதப் பாட்டிகள்
பலர்பொருள்க வர்ந்திடைக லாமிட் டோட்டிகள்
கொடிதாய-

பழுதொழிய அன்புமுடை யாரைப் போற்சிறி
தழுதழுது கண்பிசையு மாசைக் கூற்றிகள்
பகழியென வந்துபடு பார்வைக் கூற்றினர்
† ஒருகாம,

விரகம்விளை கின்றகழு நீரைச் சேர்த்தகில்
ம்ருகமதமி குந்தபனி நீரைத் தேக்கியெ
‡ விபுதர்பதி யங்கதல மேவிச் சாற்றிய
தமிழ்நூலின்-

விததிகமழ் தென்றல்வர வீசிக் கோட்டிகள்
முலைகளில்வி ழுந்துபரி தாபத் தாற்றினில்
விடியளவு நைந்துருகு வேனைக் காப்பது
மொருநாளே;

---

* இங்கே சுவாமி பொய்யாமொழிப் புலவர்க்கு எதிர்தோன்றித் தம் பெயர் "முட்டை" என்று சொல்லித் தம்மேல் அவரைப்பாடும்படிச் செய்த வரலாறு குறிப்பிக்கப் பட்டுள்ளது - பாடல் 422-பக்கம் 562- 565 குறிப்பைப் பார்க்க - பாடல் 1022, 1119 -ம் பார்க்க.

† ஒரு காம விரகம் - ஒரு தலைக் காமம் - எனவும் பொருள் கூறலாம். ஒருதலைக் காமமாவது - ஒரு பக்கமான காதல், வேசையர் காதல் உண்மைக் காதல் ஆகாது; அவர்களிடம் செல்பவன் காதலே உண்மைக் காதல் ஆகும்; ஆதலின் அது ஒருதலைக் காமமாம்.

‡ இந்திரனுடைய அங்க தலம் என்பது அவன் உடலெலாம் சாபத்தாற் கொண்ட யோனி (பெண் குறி)யைக் குறிக்கும் பாடல் 379-பக்கம் 458 கீழ்க்குறிப்பு.

(முற்றி) நிரம்பக் கொண்டு, (திரி) வள்ளியிருந்த தினைப்புனத்தில் (திரிந்த வெற்றிக் குருபர) ஜெய வீரனாம் குருபர மூர்த்தியே! (முற்பட்ட) எதிர்ப்பட்ட (முரட்டுப் புலவனை)- (சிவபிரானைப் பாடும் நாவினால் சிவனது குழந்தையாம் முருகனைப் பாடமாட்டேன் என்னும் பிடிவாதக் கருத்துடன் - கோழியைப் பாடிக் குஞ்சியையும் பாடுவனோ என்று கூறி) முரட்டுப் பிடிவாதம் பிடித்த புலவனாகிய பொய்யாமொழிப் புலவரைக் (குஞ்சியினும் சிறிய முட்டையைப் பாட வைக்க வேண்டி) "முட்டை" என்பது என் பெயர் எனச்(செப்பி) கூறி அந்தப் புலவரிடம் பாடல் பெற்ற பெருமாளே!

(அலைவது தவிராதோ)

## 1172.

பரத நாட்டிய வகைகளுக்குத் தக்கதும், (புண்டரிகம்) தாமரை மலர் போன்றதுமான பாதங்களைக் கொண்டு ஆடல் ஆடுபவர்கள், அமுதம் பொழிகின்றதும் குமுதமலர் போன்றதுமான வாயினின்றும் கீதங்கள் நிறைந்த பாடலைப் பாடுபவர்கள், பல பேருடைய பொருள்களைக் கவர்ந்து, கவர்ந்த பின்பு (இடை) மத்தியிலே ஒரு சமயத்தில் (கலாம் இட்டு) சண்டைசெய்து ஓட்டி விடுபவர்கள், பொல்லாத,

குற்றம் (தம்மேல்) சாராத வகைக்கு அன்பு உள்ளவர்கள் போலச் சிறிதளவு - அழுதும், அழுதும், கண்ணைப் பிசைந்தும், ஆசை மொழிகளைப் பேசுபவர்கள், (பகழி என) அம்பு என்று சொல்லும்படி வந்து பாய்கின்ற பார்வையை உடையவராய் யமனை நிகர்ப்பவர்கள், ஒரு தலைக் காமமாம் (அல்லது ஒப்பற்ற காமமாகிய,

(விரகம்) நோயை - காமத்தை விளைவிக்கும் (கழு நீரை) செங்கழு நீர்ப் பூவைச் (சேர்த்து) முடித்து, அகில், (ம்ருகமதம்) கஸ்தூரி, நிரம்பப் பன்னீர் இவைகளை நிரப்புபவர்கள் - ஆகிய வேசையர்களின் விபுதர்பதி தேவர்களின் தலைவனான இந்திரனுடைய (அங்கதலம்) உடம்பிடத்தில் உள்ள அடையாளக் குறியாம் - அல்குலை (அனுபவிக்க) விரும்பிப் பாடின தமிழ் நூல்களின்,

(விததி) பரப்பின் இனிய நறுமணம் வீசும் தென்றல் காற்று வரும்படி (விசிறி) வீசுகின்ற கோட்டிகள் - கோஷ்டிகள்) (மகளிர்) கூட்டங்கள் (அல்லது கோட்டிகள் - ஆடவர்களின் மனத்தை வளைப்பவர்கள்) ஆகிய இவர்களின் கொங்கைகளில் விழுந்து, பரிதபிக்கத் தக்க வழியில் (பொழுது) விடியும்வரை (காமப் பித்தில்) நைந்து உருகுகின்ற என்னைக் காத்தருளும் நாள் ஒன்று உண்டோ!

உரகபணை பத்தி *யபி ஷேகத் தாத்திய
சகலவுல குந்தரும மோகப் பார்ப்பதி
யுடனுருவு பங்குடைய † நாகக் காப்பனும் உதிதாவும்-
ஒருகளவு கண்டுதனி கோபத் தாய்க்குல
மகளிர் ‡சிறு தும்புகொடு மோதிச் சேர்த்திடும்
Xஉரலொடுத வழ்ந்தநவ நீதக் கூற்றனு மதிகோபக்,
கரவிகட வெங்கடக போலப் போர்க்கிரி
கடவியபு ரந்தரனும் வேளைப் போற்றுகை
O கருமமென வந்துதொழ **வேதப் பாற்பதி பிறியாத-
கடவுளை †† மு னிந்தமர ருரைக் காத்துயர்
கரவடக்ர வுஞ்சகிரி சாயத் தோற்றெழு
கடலெனவு டைந்தவுண ரோடத் தாக்கிய
பெருமாளே (182)

## 1173. பெண்கள் மயக்கின் வன்மை

தனதன தானத் தனந்த, தனதன தானத் தனந்த
தனதன தானத் தனந்த தனதான

பமுதற வோதிக் கடந்து பகைவினை தீரத் துறந்து
பலபல யோகத் திருந்து மதராசன்-
பரிமள பாணத் தயர்ந்து ‡‡பளைமட லூர்தற் கிசைந்து
பரிதவி யாமெத்த நொந்து மயல்கூர;

---

*அபிஷேகம்=முடி. ஆதிசேஷனுடைய தலைகளில் தாங்கப்படும் சகல உலகங்களையும் ஈன்றவள் பார்ப்பதி தேவி -

"அருண கண பண புயக சுடிகையின் அகில புவனமும்
உதவும் மலைமகள்"- பூதவேதாள வகுப்பு, திருப் 833

† நாக கங்கணம் -"பைபணி அரவு ....கை அணிபவன்" - சம்பந்தர். 1–111 -4

‡ சிறு தும்பு கொடு மோதி கட்டுண்டது -

"கண்ணி நுண் சிறுத் தாம்பினால் கட்டுண்ணப் பண்ணிய பெருமாயன்"- மதுரகவி. (க)

X உரலொடு தவழ்ந்தது - பாடல் 668- பக்கம் 36 குறிப்பு

O கருமம் - அவசியம் செய்ய வேண்டிய கடமை -

"காணப்போர் கைதொழல் கருமமே" - சம்பந்தர் 3-26-10

** வேதப்பால் பதி பிறியாத கடவுள் = வேதப் பிரணவத்திற் பதிப் பொருள் விளங்கப் பெறாத பிரமன்.

†† பிரமனை முனிந்தது - பாடல் 668-பக்கம் 37 கீழ்க்குறிப்பு

X பார்க்க - பாடல் 608-பக்கம் 406 பார்க்க.

‡‡ மடல் ஊர்தல் - விவரம் - பாடல் 668-பக்கம் 32 குறிப்பு

(உரகம்) ஆதிசேஷனுடைய (பணை பந்தி) பெருமை வாய்ந்த (படக்) கூட்டமாகிய முடியின்மேல் தாங்கப்பட்ட எல்லா உலகங்களையும் (தரும்) தந்த (அமோகப் பார்ப்பதி) மருள் இலாத பார்வதி தேவியைத் தனது உருவில் (பங்கு) ஒரு பாகத்தில் உடையவனும், (நாகத்தை) பாம்பைக் காப்பாக - கங்கணமாக அணிந்துள்ளவனுமான சிவபிரானும் - உறி மீது தாவின

ஒரு திருட்டுத் தனத்தைக் கண்டு (தனி ஒப்பற்ற) மிகுந்த கோபம் கொண்டவர்களான (ஆய்க்குல மகளிர்) இடையர் குலத்து பெண்கள் சிறிய (தும்பு கொண்டு) கயிறு கொண்டு மோதிக் கட்டி வைத்த உரலுடன் தவழ்ந்த (நவநீதம்) வெண்ணெய் உண்டவன் என்னும் (கூற்றனும்) பேச்சுக்கு இடம் தந்தவனும் - வெண்ணெய் உண்டவன் என்று பேசப்படுபவனும், மிக்க கோபத்தைக் கொண்டதும் -

(கர) துதிக்கையை உடையதும் (விகடம்) அழகு உடையதும், (வெம் கடம்) கொடிய மதத்தைத் தரும் (கபோலம்) கன்னத்தை உடையதும், போருக்கு அமைந்ததுமான (கிரி) மலைபோன்ற ஐராவதம் என்னும் வெள்ளை ஆனையைச் செலுத்தும் (புரந்தரனும்) இந்திரனும், வேளை - பெருமானாம் செவ்வேளைப் (போற்றுகை) துதித்து வணங்குதல் (கருமம் என) நமது கடமைச் செயலாகும் என்று உணர்ந்து வந்து வணங்க, (வேதப் பால் பதி பிறியாத) வேதப் பிரணவத்திற் பதிப்பொருள் விளங்கப் பெறாத

(கடவுள்) தேவனாம் பிரமனை (முனிந்து) கோபித்தும், தேவர்களுடைய ஊரைப் பொன்னுலகைக் காத்தும், உயரமுள்ளதும் (கரவட) வஞ்சகம் நிறைந்ததுவுமான கிரவுஞ்ச கிரி (சாய) மாண்டொழியவும், தோற்றுப்போய் ஏழு கடல்களும் பெருக்கு எடுத்ததுபோல, (உடைந்து) சிதறுண்டு அசுரர்கள் யாவரும் ஓட்டம் பிடிக்கும்படியும் எதிர்த்து மோதின பெருமாளே!

(காப்பதும் ஒரு நாளே)

## 1173.

குற்றமில்லாத நல்ல வகையில் (பல நூல்களை) ஓதி, (கடந்து) மாயை ஆதிய தடைகளைக் கடந்து, பகையாக வரும் வினைகளை முற்றும் (துறந்து) உதறித் தள்ளி, பல பல வகையான யோக மார்க்கங்களை அநுட்டித்திருந்தும், மன்மத ராஜனாம் காமனுடைய,

நறுமணம் வீசும் பாணங்களால் (அயர்ந்து) மனக் கவலையும் சோர்வும் கொண்டு, பனைமடல் ஏறுதற்கும் இணங்கிப், பரிதவித்து மிகவும் மனம் நொந்து - காம இச்சை மிகுதிப்பட,

அழுதழு தாசைப் படுங்க ணபிநய மாதர்க் கிரங்கி
யவர்விழி பாணத்து நெஞ்ச மறைபோய் நின்-
றழிவது யான்முற் பயந்த *விதிவச மோமற்றை யுன்ற
னருள்வச மோஇப்ர மந்தெ ரிகிலேனே;
† எழுதரு வேதத்து மன்றி முழுதினு மாய் நிற்கு
மெந்தை
யெனவொரு ஞானக் குருந்த ருளமேவும்
இருவுரு வாகித் துலங்கி யொருகன தூணிற்
பிறந்து
இரணியன் மார்பைப் பிளந்த தனியாண்மை,
‡ பொழுதிசை யாவிக்ர மன்தன் மருகபு ராரிக்கு
மைந்த
புளகப ஸரக் குரும்பை யுடன்மேவும்-
புயல்கரி வாழச் சிலம்பின் வனசர மானுக் குகந்து
X புனமிசை யோடிப் புகுந்த
பெருமாளே (183)

## 1174. துக்கம் ஒழிய தாளை வணங்க

தானத்தத் தனான தானன, தானத்தத் தனான தானன
தானத்தத் தனான தானன தந்ததான

பாணிக்குட் படாது சாதகர் காணச்சற் றொணாது
வாதிகள்
பாஷிக்கத் தகாது பாதக பஞ்சபூத-
பாசத்திற் படாது வேறொரு பாயத்திற் புகாது
[illegible]
பாவிக்கப் பெறாது வாதனை நெஞ்சமான,

---

* "என்னே விதியின் பயனிங் கிதுவோ"- கந் அநுபூதி 27

† இரணிய சம்மாரம் - திருமால் எங்கும் உள்ளார் என்பது -

- பாடல் 327-1-பக்கம் 317 கீழ்க்குறிப்பு; பாடல் 1137 பக்கம் 310 கீழ்க்குறிப்பு.

‡ "பொழுது செயா விக்ரமன்"- என்றும் பாடம்

X 'புனமிசை வேளைக் கமைந்த பெருமாளே' என்றும் பாடம்

அழுது அழுது, (ஆசைப் படுங்கண்) ஆசைப்படும் பொழுது, (அபிநய மாதர்க்கு) நாட்டிய மாதர்களுக்கு - காமக் குறிப்புணர்த்தும் பொது மகளிர் மீது இரங்கி - ஆசை வைத்து, அவர்களுடைய கண்ணாகிய (பாணத்து) அம்பினால் (நெஞ்சம் அறை போய்) மனது அறுக்கப்பட்டுக் - கெட்டு நின்று,

அழிந்துபோதல் நான் முன்பு செய்த விதியின் விளைவோ அல்லது உன்னுடைய திருவருளின் கூத்தோ - இந்த மயக்கத்தின் காரணம் எனக்கு விளங்க வில்லையே!

எழுதுதற்கு முடியாத (எழுதாச் சுருதியான) வேதத்தில் மாத்திரம் அல்லாமல், முழுதினும் - மற்று சகல பொருள்களிலும் விளங்கி நிற்பார் எம்பெருமான் என்று கூறின ஒரு ஞானக் குழந்தையாம் பிரகலாதருடைய உள்ளத்தில் விளங்கினவரும் -

(மனிதன் - சிங்கம் என) இரண்டு உருவம் அமைந்த நரசிங்க மூர்த்தியாம் விளங்கித் தோன்றி ஒரு பெருத்த தூணிற் பிறந்து - விளக்க முற்றெழுந்து - இரணியனுடைய மார்பைப் பிளந்தெறிந்த ஒப்பற்ற வீரத்தை,

(பொழுது) பிரகலாதன் வேண்டின அந்தப் பொழுதிலேயே அந்தச் சமயத்திலேயே - (இசையா) இசைந்து காட்டின - உடன்பட்டுக் காட்டின (விக்ரமன்) பராக்ரம சாலியுமான திருமாலின் மருகனே! திரிபுரத்தைப் பகைத்து எரித்த சிவனது மைந்தனே! புளகாங்கிதம் கொண்டதும், (படீரம்) சந்தனம் பூசியுள்ளதும், (குரும்பையுடன் மேவும்) தென்னங் குரும்பை போன்றதுமான கொங்கையுடன் மேவும் (வனசர மான்)

(புயல்) மேகமும் (கரி) யானையும் வாழ்கின்ற (அச்சிலம்பின்) அந்த வள்ளி மலையில் இருந்த (வனசர மான்) மான் அனைய வேடர் மகள் வள்ளிக்கு (உகந்து) வள்ளியின் மீது காதல் கொண்டு மகிழ்ந்து, (அவள் இருந்த) தினைப் புனத்திலே (அவளிடம்) ஓடிப் புகுந்து நின்ற பெருமாளே!

(இப் பிரமந் தெரிகிலேனே)

## 1174.

கையில் அகப்படாதது அல்லது சொல்லுக்கு (அகப்படாதது), (சாதகர்) யோகவழியில் நிற்பவர்களால் சற்றும் காண முடியாதது, தருக்கவாதிகளால் பேசிமுடிவுகாண எட்டாதது, பாவங்களுக்கு இடம்தரும் (மண், நீர், தீ, காற்று, வான் என்னும்) ஐந்து பூதங்களால் ஏற்படும்

பாசங்களில் தளைகளில் அகப்படாதது, வேறு எந்தவித உபாயத்திலும் மாட்டிக் கொள்ளாதது, எவ்வித பாவனையாலும் தியான வகையாலும் பாவிக்க (தியானிக்க) முடியாதது (வாதனை) - வருத்தங்களுக்கு இடமான நெஞ்சம் என்கின்ற

ஏனிக்கெட் டொணாது மீதுயர் சேணுக்குச் சமான நூல்வழி
யேறிப்பத் தொணாது நாடினர் தங்களாலும்-
ஏதுச்செப் பொணாத *தோர்பொருள் சேரத்துக் கமாம கோதறி
யேறச்செச் சைநாறு தாளைவ ளாங்குவேளோ;
ஆனிப்பொற் ப்ரதாப †மேருவை வேலிட்டுக் கடாவி வாசவன்
ஆபத்தைக் கெடாநி சாசரர் தம்ப்ரகாசம்-
ஆழிச்சத் ரசாயை நீழலி லாதித்தப் ப்ரகாச நேர்தர
ஆழிச்சக் ரவான மாள்தரும் எம்பிரானே;
மாணிக்க ப்ரவாள நீலம தாணிப்பொற் ‡கிராதை நூபுர
வாசப்பத் மபாத சேகர Xசம்புவேதா-
O வாசிக்கப் படாத வாசகம் ஈசர்க்குச் சுவாமி யாய்முதல்
வாசிப்பித் ததேசி காசுரர் தம்பிரானே (184)

## 1175. திருவடிச் சிந்தனை

தானன தனத்தத் தாத்த தானன தனத்தத் தாத்த
தானன தனத்தத் தாத்த தனதான

பால்மொழி படித்துக் காட்டி ஆடையை நெகிழ்த்துக் காட்டி
பாயலி லிருத்திக் காட்டி யநுராகம் -
பாகிதழ் கொடுத்துக் காட்டி நூல்களை விரித்துக் காட்டி
பார்வைகள் புரட்டிக் காட்டி யுறவாகி,
மேல்நக மழுத்திக் காட்டி தோதக விதத்தைக் காட்டி
மேல்விழு நலத்தைக் காட்டு மடவார்பால்.

---

* பரம் பொருளின் தன்மை - பாடல்கள் 1159, 1152, 1127, 1097, 1063, 1052, 1019 பார்க்க.

† மேரு - கிரவுஞ்சம் எனவே கொள்ளலாம் - பாடல் 1152 அடி 7 குறிப்பு

‡ வள்ளி பாத சேகரர் - முருகன் -

"குறமின்பத சேகரனே"- கந். அநுபூதி. 36

X சம்பு - சிவன், பிரமன், திருமால் (பிங்கலம்)

O சிவனுக்கு உபதேசித்தது - பாடல் 327-பக்கம் 314 குறிப்பு

ஏணி கொண்டு எட்ட முடியாதது, மேலே உயரத்தில் உள்ள ஆகாயத்துக்கு ஒப்பான அருமையாய் உயர்ந்த கருத்துள்ள நூல்களின் கலைகளின் வழியே ஆய்ந்து ஏறிக்கண்டு பிடிக்க முடியாதது, தேடி முயலுபவர்களாலும்.

காரணமூலம் சொல்ல முடியாதது - இத்தகைய ஒரு பொருளை (நான்) அடையவும், துக்கம் என்னும் (மா மகோததி) மிகப் பெரிய கடலினின்றும் கரை ஏறவும், (உன்னுடைய) வெட்சி மலர் சுமழும் திருவடியை வணங்க மாட்டேனோ!

(ஆணிப் பொன்) உயர்மாற்றுப்பொன் மயமானதும், பேர் பெற்றதுமான (மேருவை) கிரவுஞ்சத்தின் மீது வேலாயுதத்தை எடுத்துச்செலுத்தி, இந்திரனுடைய ஆபத்தையும், (நிசாசரர்) அசுரர்களுடைய (ப்ரகாசத்தையும்) மேம்பாட்டையும் (கெடா) கெடுத்து - ஒழித்து.

(ஆழிச் சத்ர சாயை நிழலில்) வட்டமான குடைதரும் பொருந்த நிழலில், சூரியனது ஒளிக்கு நிகரான வகையில் விளங்கி, கடலாலும் சக்ரவாள கிரியாலும் சூழப்பட்ட உலகை ஆண்டருளும் எம்பெருமானே!

(மாணிக்கம்) செம்மணி, (ப்ரவாளம்) பவளம், (நீலம்) நீலமணி இவைகளால் ஆய (மதாணி) பதக்கத்தை அணிந்த அழகிய (கிராதை) வேடப்பெண்ணின் சிலம்பணிந்த நறுமணம் உள்ள தாமரை அனைய திருவடியைத் (தலைமீது) சூடியுள்ளவனே! (சம்பு) திருமால், (வேதா) பிரமன்

ஓதி அறியாத (வாசகம்) திருவார்த்தையைச் சிவபெருமானுக்கு (சுவாமியாய்) முன்பு (வாசிப்பித்து) உபதேசித்த (தேசிகா) குருமூர்த்தியே! தேவர்கள் தம்பிரானே!

(தாளை வணங்குவேனோ)

## 1175.

பால் போலும் இனிய வாசகங்களைப் பேசிக் (காட்டி), உடுத்துள்ள ஆடையைத் தளர்த்திக் காட்டிப், படுக்கையில் உடனிருக்க வைத்துக் காட்டிக், காமப்பற்றை விளைக்கும்.

(பாகு) வெல்லம் போல இனித்த வாயிதழ் ஊறலைத் தந்து காட்டி, (நூல்களை) காமநூல் விஷயங்களை - கொக்கோ சாத்திர நுட்பங்களை விவரமாக எடுத்துக் காட்டி, கண் பார்வையைப் புரட்டிக் காட்டி, நட்புப் பூண்டு -

உடலின் மேலே நகத்தை அழுத்திக் காட்டித், தோதக விதத்தை (வஞ்சக விதமான செயல்களைக் காட்டி, மேலே விழும் ஆலிங்கன சுகங்களைக் காட்டிடும் மாதர்களிடத்தே

மேவிடு மயக்கைத் தீர்த்து சீர்பத நினைப்பைக்
[redacted]டு
மேன்மையை யெனக்குக் காட்டி யருள்வாயே
*காலனை யுதைத்துக் காட்டி யாவியை வதைத்துக்
காட்டி
காரணம் விளைத்துக் காட்டி யொருகாலங்
கானினில் நடித்துக் காட்டி யாலமு மிடற்றிற் காட்டி
† காமனை யெரித்துக் காட்டி தருபாலா;
மாறுற நிறத்தைக் காட்டி வேடுவர் புனத்திற் காட்டில்
வாலிப மிளைத்துக் காட்டி அயர்வாகி
மான்மகள் தனத்தைச் சூட்டி ஏனென அழைத்துக்
கேட்டு
வாழ்வுறு சமத்தைக் காட்டு பெருமாளே (185)

## 1176. அறிய

தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன தனதான

புகரில் சேவல தந்துர சங்க்ரம
நிருதர் கோபக்ர வுஞ்சநெ டுங்கிரி
பொருத சேவக குன்றவர் பெண்கொடி
மணவாள
புனித பூசுர ருஞ்சுர ரும்பணி
புயச பூதர ‡ என்றிரு கண்புனல்
பொழிய மீமிசை யன்புது ளும்பிய மனனாகி,
அகில பூதவு டம்புமு டம்பினில்
மருவு மாருயி ருங்கர ணங்களு
மவிழ X யானுமி ழந்தழி டந்தனி
லுணர்வாலே

---

* காலனை உதைத்தது - பாடல் 399-பக்கம் 510 கீழ்க்குறிப்பு

† காமனை எரித்தது - பாடல் 399-பக்கம் 510 கீழ்க்குறிப்பு

‡ (1) சேவல! (2) நிருதர் கோப! (3) சேவக! (4) மணவாள! (5) புனித! (6) புயச பூதர! - என்று ஆறு விளிகளால் ஆறுமுகப் பெருமானை அழைத்துள அழகு மனத்தை உருக்குகின்றது.

X யானும் இழந்த இடம் "யானாகிய என்னை விழுங்கி வெறுந்தானாய் நிலை நின்றது தற்பரமே"- கந். அநுபூதி 28

சென்று பொருந்தும் காம மயக்கை ஒழித்து சீரான உனது திருவடி நினைப்பைக் கூட்டி வைக்கும் திருவருள் மேன்மையை எனக்குக் காட்டி அருள் புரிவாயாக;

காலனை உதைத்துக் காட்டியும், அவன் உயிரை வதை செய்து காட்டியும், அங்ஙனம் உதைத்ததின் காரணத்தை எடுத்துக் காட்டியும், (ஒருகாலம்) ஊழிமுடிவில் (அல்லது) (அந்தியாம் ஒரு பொழுதில்)

சுடுகாட்டில் நடனஞ் செய்து காட்டியும், விஷத்தைக் கண்டத்தில் - (கழுத்தில்) - காட்டியும், மன்மதனை எரித்துக் காட்டின பெருமானாகிய சிவன்தரு புதல்வனே!

(வள்ளி) காதலுறும்படி (உனது) மேனி ஒளியைக் காட்டி, வேடர்களின் தினைப்புனக் காட்டில் (வாலிப) காளைப் பருவத்தின் சோர்வைக் காட்டி, மனத்தளர்ச்சியுற்று

மான்மகள் வள்ளியின் கொங்கையைச் (சூட்டி), தலை அணையாகச்சூடி, அணைத்து, ஏன் இச் சிறுகுடிலில் இருக்க வேண்டும் எனக்கூறி, வள்ளியை உடன் வரும்படி அழைத்து, அந்த அழைப்புக்கு அவள் இணங்கினதைக் கேட்டு, அவளுடன் (தணிகையில் வந்து) வாழ்வுறும்படியான சாமர்த்தியத்தைக் காட்டின பெருமாளே!

(பத நினைப்பை அருள்வாயே)

## 1176.

'(புகர் இல்) குற்றமொன்றும் இல்லாத சேவற்கொடியை உடையவனே! (தந்துரம்) ஒழுங்கின்மை (சங்க்ரம) சேர்ந்திருந்த (ஒழுங்கீனரான) (நிருதர்) அசுரர்களைக் (கோப) கோபித்தவனே! கிரவுஞ்சம் என்னும் பெரியமலையொடு சண்டை செய்த பராக்ரம சாலியே! மலை நிலத்தவராம் வேடர்களின் பெண்கொடியான வள்ளியின் மணவாளனே!

பரிசுத்தமானவனே! (அல்லது பரிசுத்தமான) (பூசுரரும்) அந்தணர்களும், தேவர்களும் பணிகின்ற (புயச பூதர) திருப்புயங்களாம் மலைகளை - மலையன்ன திருப்புயங்களை உடையவனே!' - என்று கூறி இரண்டு கண்களிலும் நீர் (பொழிய மீமிசை) மீமிசை பொழிய - உடல்மீது மேலெங்கும் பொழிய, அன்பு (துளும்பிய) ததும்பும் மனத்தை உடையவனாகி -

அகில பூத உடம்பும் - பஞ்ச பூதங்களால் ஆகிய எல்லா உடம்புகளும், அவ்வுடம்புகளிற் பொருந்தியுள்ள அரிய உயிர்களும், (கரணங்களும்) மனம், புத்தி, அகங்காரம், சித்தம் எனப்படும் கரணங்கள் நான்கும் (அவிழ) நெகிழ்ந்து இளக, (யானும் இழந்த இடந்தனில்) நான் என்னும் முனைப்பும் அழிந்த அந்நிலையில், ஞான உணர்ச்சி கொண்டு -

அகில வாதிக ளுஞ்சம யங்களும்
*அடைய ஆமென அன்றென நின்றதை
யறிவி லேயறி யும்படி யின்றருள் புரிவாயே

† மகர கேதன முந்திகழ் செந்தமிழ்
மலய மாருத மும்பல வெம்பரி
மனசி லீமுக மும்பல மஞ்சரி வெறியாடும்
‡மதுக ராரம்வி குஞ்சணி யுங்கர
மதுர கார்முக மும்பொர வந்தெழு
மதன ராஜனை வெந்துவி ழும்படி முனிபால,

முகிழ்வி லோசன ரஞ்சிறு திங்களு
முதுப கீரதி யும்புனை யுஞ்சடை
முடியர் Xவேதமு நின்றும ணங்கமழ் அபிராமி-
முகர நூபுர பங்கய சங்கரி
கிரிகு மாரித்ரி யம்பகி தந்தருள்
○முருக னேசுர குஞ்சரி ரஞ்சித
பெருமாளே (186)

---

* "ஒன்று உண்டு இல்லை என்றறி வொளித்தும்" - திருவாசகம் 3-139

† மன்மதனுக்கு - மீன் கொடி; (மலய மாருதம்) தென்றல் - தேர்; மலர்கள் - பாணம்; வண்டு - வில்லின் நாண்; கரும்பு- வில் - பாடல் 555-பக்கம் 266; பாடல் 952- பக்கம் 765. குறிப்பு; காமனை எரித்தது - பாடல் 399-பக்கம் 510 குறிப்பு.

‡ "மதுக ர.. "வ சிஞ்சினியும்" - என்ற பாடமும் காணப்படுகின்றது. சிஞ்சினி - வில்லின் நாண்.

X வேதம் நின்று மணங்கமழ் அபிராமி -

"சுருதிகளின் பணையும் கொழுந்தும் பதிகொண்ட வேரும்... அனையும் திரிபுர சுந்தரி"; " எழுதா மறையின் ஒன்றும் அரும் பொருளே"; "உறைகின்ற நின் திருக் கோயில். நான் மறையின் அடியோ முடியோ"; "மறையின் பரிமளமே"; " வேதப் பரிபுரையே"; " அருமறைக்கு முன்னாய் நடு எங்குமாய் முடிவாய முதல்வி"- அபிராமி அந்தாதி. 2, 10, 20, 22, 42, 55

" பழு மறையின் குருந்தே வருக"- மீனாட்சி. வருகை 10

"மறையாய் மறையின்பொருளாய். ... இடம் பிரியா எம்பிராட்டி" திருவிளையாடல். 4-42; வேதம் - அம்பிகையின் சிலம்பு. (பரிபுரம்) - 'அடிச்சுட்டு நூபுரமோ ஆரணங்கள்

சகல சமயவாதிகளும், சகல சமயங்களும், அடையக் கூடும், அடைய முடியாது என முறையிடும்படி நிற்பதான பொருளை, அறிவிலியாகிய நான் அறிந்து கொள்ளும்படி இன்று திருவருள் புரிவாயாக.

(மகர கேதனமும்) மீன்கொடியையும், விளங்கும் செந்தமிழை வீசும் (மலய மாருதமும்) மலயத்து - பொதிய மலைத்தென்றற் காற்றாகிய (தேரையும்) பலவான (வெம்) விரும்பத்தக்க, நறுமணமுள்ள (சிலீமுகமும்) (மலர்ப்) பாணங்களையும், பல (மஞ்சரி) பூங்கொத்துக்களின் தேனைப் பருகி விளையாடும் -

(மதுகரம்) வண்டுகளின் (ஆரம்) மாலை போன்ற வரிசை கொண்ட நாண் - வில்லின் நாணையும், (வி) நிரம்ப - விசேடமான - குஞ்ச அணியும் - பூங்கொத்துக்களை அணிந்துள்ளதும், (கர) கரத்தில் ஏந்தப்பட்டதும், (மதுரம்) இனிப்பைக் கொண்டதுமான கார்முகமும் - கரும்பாகிய வில்லையும் கொண்டு, (பொர) சண்டை செய்ய வந்து எழுந்த (மதன ராஜனை) மன்மதராஜனாம் காமனை - வெந்து விழும்படி (முனி) கோபித்த (பாலம்) நெற்றியில்

(முகிழ்) தோன்றி விளங்கும் (விலோசனர்) கண்ணை உடையவரும், அழகிய சிறிய (திங்களும்) பிறையையும், (மூது) பழைய (பகிரதியும்) கங்கையையும் அணிந்துள்ள சடை முடியை உடையவருமான சிவபிரானும், வேதக்கோயிலில் நின்று 'அல்லது வேதச் சிலம்போடு நின்று' நறுமணம் வீசும் - அழகி -

(முகரம்) ஒலிக்கின்ற சிலம்பணிந்த தாமரை போன்ற திருவடிகளை உடைய சங்கரி, (இமய) கிரியின் குமரி, (த்ரியம்பகி) முக்கண்ணி - ஆகிய பார்வதியும் தந்தருளிய முருகனே! தேவயானைக்கு இன்பம்தரும் பெருமாளே! (தேவயானையை மகிழும் பெருமாளே)

(இன்றருள் புரிவாயே)

---

அனைத்துமே" - தக்க. 119- "ஆரண நூபுரஞ் சிலம்பும் அடிகள் போற்றி" - திருவிளை காப்பு -" வேதங்கள் ஒருநான்கும் மெல்லடி மேல் வியன் சிலம்போ" பாசவதைப் பரணி. 192- "வேதாந்தத் துட்பொருளை ஆதி பராபரையை"- திருப்பனந்தாள் புராணம்.

○ இந்த 1176-ஆம் பாடல் - அதிலும் முக்கியமாய் முதல் நான்கடிகள் - மனப்பாடம் செய்யத் தக்கனவாம்.

## 1177. தொழ

தனனத்த தனத்த தனத்தன
தனனத்த தனத்த தனத்தன
தனனத்த தனத்த தனத்தன தனதான

புருவத்தை நெறித்து விழிக்கயல்
பயிலிட்டு வெருட்டி மதித்திரு
புதுவட்டை மினுக்கி யளிக்குல மிசைபாடும்-
புயல்சற்று விரித்து நிரைத்தொளி
வளையிட்ட கரத்தை யசைத்தகில்
புனைமெத்தை படுத்த பளிக்கறை தனிலேறிச்;
சரசத்தை விளைத்து முலைக்கிரி
புளகிக்க அணைத்து நகக்குறி
தலைவைத்து முகத்தை முகத்துட னுறமேவித்-
தனிவித்தி ரதத்த தரத்துமி
ழமுதத்தை யளித்து வுருக்கிகள்
தருபித்தை யகற்றி யுனைத்தொழ முயல்வேனோ;
*பரதத்தை யடக்கி நடிப்பவர்
† திரிபுரத்தை யெரிக்க நகைப்பவர்
‡ பரவைக்குள் விடத்தை மிடற்றிடு பவர்தேர்Xகப்-
பரையுற்ற கரத்தர் Oமிகப்பகி
ரதியுற்ற சிரத்தர் நிறத்துயர்
பரவத்தர் பொருப்பி லிருப்பவ ருமையாளர்;
சுரர் **சுத்தர் மனத்துறை வித்தகர்
†† பணிபத்தர் பவத்தை யறுப்பவர்
‡‡ சுடலைப்பொடி யைப்பரி சிப்பவர் XXவிடையேறுந்-

---

*இந்த 1177- ஆம் பாடலின் 5,6,7,8- அடிகள் அருமையான சிவ ஸ்துதியைக் கொண்டுள்ளன.

† திரிபுரத்தை எரித்தது - பாடல் 285-பக்கம் 206 குறிப்பு.

‡ நஞ்சுண்டது - பாடல் 286-பக்கம் 211 குறிப்பு

X பலி தேருதல் - பாடல் 897-பக்கம் 620 குறிப்பு

O கங்கை சூடியது - பாடல் 446-பக்கம் 622; பாடல் 984 பக்கம் 846

** "கோதிலார் மனமேவிய பூதனே"- சம்பந்தர். 3-155-1

# 1177.

புருவத்தை நெறித்து - (விழிக்கயல்) கயல்விழி - மீன் போலும் கண்கொண்டு (பயிலிட்டு) அழைத்து, வெருட்டி, இரண்டு புதிய (வட்டை) திரண்ட காதோலைகளை (அல்லது வட்டு- சூதாடுகருவி ஒத்த கொங்கைகளை) மிளுக்கி, வண்டின் கூட்டங்கள் இசை பாடுகின்ற

(புயல்) மேகம் போன்ற கூந்தலைச் சற்று விரித்து, வரிசையாய் அமைந்து, ஒளி வீசுகின்ற வளையல் இட்ட கரங்களை ஆட்டி அசைத்து, அகிலின் நறுமணம் வீச அலங்கரிக்கப்பட்ட மெத்தை படுக்கை உள்ள (பளிங்கறை) (பளிங்குக் கற்களாற் செய்யப்பட்ட அறையில் அமர்ந்து

(சரசத்தை விளைத்து) காம லீலைகளைப் புரிந்து, கொங்கை மலைகள் புளகம் கொள்ளும்படி அணைத்து, நகக்குறியை வைத்து, முகத்தை முகத்துடனே பொருந்தும்படி வைத்து -

தணிவித்து - காம விரகத்தை தணித்து, (இரதத்து) சுவை நிரம்பிய (அதரத்து உமிழ் அமுதத்தை) வாயிதழ் ஊறலாம் அமுதினை அளித்து (மனத்தை) உருக்குபவர்கள் தருகின்ற (பித்தை) மதிமயக்கை நீக்கி உன்னைத் தொழ முயற்சி செய்ய மாட்டேனோ!

(பரதத்தை) தாம் ஆடுகின்ற கூத்தை அமைதியுடன் ஆடுபவர், அல்லது பரத சாஸ்திர நுணுக்கமெல்லாம் தமது ஆட்டத்துக்குள் அடங்கும்படி ஆடுபவர் திரிபுரங்கள் எரிந்து போம்படிச் சிரித்தவர், கடலிலிருந்து தோன்றின விஷத்தைக் கழுத்தில் நிறுத்தினவர், (பலிபிச்சை) தேடும் கப்பரை

(பிச்சைப் பாத்திர)க் கையினர், சிறந்த (பகீரதி கங்கை தங்கும் சிரத்தினர்), (நிறத்து உயிர்) ஒளியிற் சிறந்தவரும் அல்லது புகழ் மிக்கவரும், பரவப் படுபவரும் (போற்றப் படுபவரும்) ஆன (அத்தர் பெருமான், (கயிலாய) மலையில் வீற்றிருப்பவர், உமாதேவியை ஒரு பாகத்தில் உடையவர்,

தேவர்கள், பரிசுத்தமானவர்கள் - ஆகிய இவர்களின் மனத்தில் உறைகின்ற பேரறிவாளர், பணிகின்ற பக்தர்களுடைய (பவத்தை)ப் பிறப்பை (அல்லது பாவத்தை) அறுப்பவர், சுடலை நீற்றை அணிபவர், ரிஷபவாகனத்தில் ஏறும்

---

†† "பாதந் தொழுவார் பாவந் தீர்ப்பார்" - சம்பந்தர். 1-67-1

" பேணுவார் பிணியொடும் பிறப் பறுப்பான்"- சம்பந்தர்.3-33-9

‡‡ "சுடலைப் பொடிப் பூசுவர்"- சம்பந்தர். 2-6-2

XX " விடை ஏறும் சங்கரனார்"- சம்பந்தர். 1-130-4

துணையொத்த பதத்த ரெதிர்த்திடு
*மதனைக்கடி முத்தர் கருத்தமர்
† தொலைவற்ற க்ருபைக்கு ளுதித்தருள்
பெருமாளே (187)

## 1178. பணிவிடையின் கணக்கு

தனத்தந் தான தனதன தனத்தந் தான தனதன
தனத்தந் தான தனதன தனதான

‡ புவிக்குன் பாத மதைநினை பவர்க்கும் Xகால
தரிசனை
புலக்கண் கூடு மதுதனை அறியாதே-
O புரட்டும் பாத சமயிகள் நெறிக்கண் பூது! படிறரை
புழுக்கண் பாவ மதுகொளல் பிழையாதே;
**கவிக்கொண் டாடு புகழினை படிக்கும் பாடு
திறமிலி
களைக்கும் பாவ சுழல்படு மடிநாயேன்.

---

*மன்மதனை எரித்தவர் - திருப்புகழ் 399-பக்கம் 510 குறிப்பு

† இறைவன் தேவர்கள் பால் வைத்த திருக் கருணையால் முருகவேள் தோன்றினர்.

"வந்திக்கும் மலரோ னாதி வானவர் உரைத்தல் கேளாப்
புந்திக்குள் இடர் செய்பர்க புதல்வனைத் தருதும் என்னா
அந்திக்கு நிகர்மெய் அண்ணல் அருள்புரிந்து அறிஞராயோர்
சிந்திக்கும் தனது தொல்லைத் திருமுகம் ஆறுங் கொண்டான்"
"அமரர் யாரும் அருள் முறை உன்னிப் போற்ற... நுதற்கண்
மாட்டே மூவிரு பொறிகள் தோன்றி"
"மேதகு கருணையால் விமலன்.. நீங்களிச் சுடர்களை...
கங்கையில் விடுத்திர்... என்றியம்பினான்"
"சோதிப் பிழம்பு... ஓர் மேனியாகக் கருணைகூர்
முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தனன் உலகம் உய்ய"
- கந்தபுரா. 1-11-43, 44, 66, 67, 92

‡ புவிக்கு = புவியில். உருபு மயக்கம்.

X கால தரிசனை கூடுதல் - உணர்வு ஞான நிலை பெறுதல்.

"உமை... ஓதியர் உணர்வுடை யோரே"; "உள்ளியார்... இவ்வுலகினில் தெள்ளியாரவர்"; "ஏத்தத் தெளிவாமே";

"புரமூன் றெரித்த சரவா என்பார் தத்துவ ஞானத் தலையாரே"- சம்பந்தர். 3-94-2; 1-57-1; 1-3-6; 1-102-1

O " பேத வாதப் பிகக்கரைக் காணா கண் வாய் பேசாதப் பேய்களோடே"- திருவிசைப்பா. 4-5

(துணை ஒத்த) (அடியார்களுக்குத்) துணையாய் நிற்கும் (அல்லது இரண்டு) (பதத்தர்) திருவடிகளை உடையவர், எதிர்த்துப் (பாணம் எய்த) மன்மதனைக் (சுடுந்த) எரித்தழித்த (முத்தர்) இயல்பாகவே (பாசங்களின் நீங்கியவர்) ஆகிய சிவபிரானது (கருத்து அமர் - பெருமானே!) எண்ணத்தில் (சித்தத்தில்) அமர்ந்துள்ள பெருமானே! முத்தர் - சிவபிரானது தொலைவற்ற அழிதலிலாத - மிக நிறைந்த க்ருபைக்குள் - (தேவர்கள் மீது வைத்த) கருணை மூலமாக (அல்லது கருத்துமர் தொலைவற்ற க்ருபைக்குள் - கருத்தில் உள்ள அழிதலிலாத கருணையால்) உதித்தருள் - தோன்றி அருளிய பெருமானே!

(உனைத் தொழ முயலவேனோ)

## 1178.

பூமியில் உன்னுடைய திருவடிகளை நினைத்துத் தியானிப்பவர்களுக்கும் (கால தரிசனை) திரிகால ஞானம் - இறப்பு, நிகழ்வு, எதிர் என்ற முக்கால நிகழ்ச்சிகள், (புலக்கண் கூடும்) அவர் தம் அறிவில் விளங்குவன ஆகும், - அவ்வுண்மையை அறியாமலே -

புரட்டிப் பேசும் (நெறிமுறை பிறழ்ந்து பேசும்) பாத சமயிகள் வகைகொண்ட சமயவாதிகளின், (அல்லது) பாத(க) சமயிகள் பாபநெறிச் சமயவாதிகளின் (நெறிக்கண்) வழியிலே (பூது படிறரை) புகுகின்ற - நடக்கின்ற வஞ்சகர்களை - பொய்யர்களை, புழுக்கள் நிறைந்த பாபத்துக்கு என்று ஏற்பட்ட நரகம் ஏற்றுக் கொள்ளுதல் தவறாது.

(பெரியோர்களின்) பாடல்களிற் கொண்டாடப்படும் (உனது) புகழினைப் படிக்கும் திறமும், பாடும் திறமும், இல்லாதவன், களைப்பைத்தரும் - இளைப்பை உண்டாக்கும் பாவச் சுழற்சியிலே சுழற்சியுறும் அடிநாயேன் ஆகிய எனக்கு -

---

"உவலைச் சமயங்கள் ஒவ்வாத சாத்திரமாம்
சவலைக் கடலுளனாய்க் கிடந்து தடுமாறும் கவலை" - திருவாசகம். 11-17

"சாதி மோதி வாதாடு நூல் கற்றிடுவோர்... மா காலன்
ஊர் புக் கலைவார்"- திருப்புகழ். 1031

** "படிக்கின்றிலை பழநித் திரு நாமம்"; "படிக்கும் திருப்புகழ் போற்றுவன்"- கந்தரலங். 75, 50

கலக்குண் டாகு புவிதனி லெனக்குண் டாகு
பணிவிடை
*கணக்குண் டாதல் திருவுள மறியாதோ;
சிவத்தின் சாமி மயில்மிசை நடிக்குஞ் சாமி
யெமதுளே
சிறக்குஞ் சாமி சொருபமி தொளிகாணச்-
செழிக்குஞ் சாமி பிறவியை யொழிக்குஞ் சாமி
பவமதை
தெறிக்குஞ் சாமி முநிவர்க ளிடமேவுந்,
தவத்தின் சாமி புரிபிழை பொறுக்குஞ் சாமி
குடிநிலை
தரிக்குஞ் சாமி யசுரர்கள் பொடியாகச்
சதைக்குஞ் சாமி யெமைபணி விதிக்குஞ் சாமி சரவண
† தகப்பன் சாமி யெனவரு பெருமாளே (188)

## 1179. இறத்தல் பயம் ஒழிய

தானன தந்தன தந்த தந்தன
தானன தந்தன தந்த தந்தன
தானன தந்தன தந்த தந்தன தனதான

பூசல்த ருங்கய லும்பொ ருந்திய
வாசந றுங்குழ லுந்து லங்கிய
பூரண கும்பமெ னுந்த னங்களு மடமாதர்-
போகம டங்கலை யும்பு ணர்ந்தநு
ராகம்வி ளைந்துவ ரும்பெ ரும்பிழை
போயக லும்படி யொன்றை யன்புற நினையாதே;
ஆசையெ னும்படி யுந்த னங்களு
மோகைந டந்திட வுந்தி னங்களும்
ஆருட னும்பகை கொண்டு நின்றுற நடமாடி-

---

*இறைவன் ஆன்மாக்களின் - "கணக்கறி வித்தகன்", "கணக்கறிவார்" , "கணக்கு எழுதுபவர்" - ஆதலின் - "பணி விடை கணக்குண்டாதல் திருவுளம் அறியாதோ"- என்கின்றார்;

'தொழுது தூமலர் தூவித் துதித்துநின்
றழுது காமுற் றரற்றுகின் றாரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதுங் கீழ்க்கணக் கின்னம்பர் ஈசனே" - அப்பர் 5-21-8

† தகப்பன் சாமி - தந்தைக்கும் குருவாயிருந்து உபதேசித்தாராதலின். தந்தைக்கு உபதேசித்தது - பாடல் 327-பக்கம் 314

'1178-ஆம் பாடல் - அவசியம் மனப்பாடத்துக்கு உரியது.

(மனக்) கலக்கத்தைத் தரும் இப்பூமியில் (உள்ள) எனக்கு விதிக்கப்பட்டுள்ள (பணிவிடை) தொண்டுக்கு என்று ஏற்பட்டுள்ள கணக்கின் அளவு (அடியேன் செய்யும்படி விதிக்கப்பட்ட தொண்டு - இவ்வளவு என்று உள்ளதான ஒரு கணக்கு) (உனது) திருவுள்ளத்துக்குத் தெரியாதா (உனது திருவுள்ளம் அறிந்ததே ஆம் என்றபடி).

சிவனிடத்தே தோன்றிய (அல்லது மங்கலப் பொருளாய) சுவாமி, மயிலின் மீது நடனஞ் செய்யும் சுவாமி, எம்முடைய உள்ளத்திலே சிறப்பாக விளங்குகின்ற சுவாமி, (தனது) திருவுருவத்தின் பேரொளி (அடியார்கள்) காணும்படி

விளக்கமுறும் சுவாமி, பிறவியை அடியோடு தொலைத்தருளும் சுவாமி, பாவங்களைக் குலைத்து எறியும் சுவாமி, முனிவர்கள் செய்யும்

தவப்பொருளாய் (விளங்கும்) சுவாமி. (அடியார்கள்) புரியும் பிழைகளைப் பொறுத்தருளும் சுவாமி, (குடிநிலைதரிக்கும்) தேவர்களை விண்ணிற் குடியேற்றுவித்து அங்கு நிலைக்கும்படி வைத்த சுவாமி அசுரர்களைப் பொடி யாகும்படிச்

(சதைத்த) நெரித்து அழித்த சுவாமி, எமக்குத் தொண்டு (யாம் செய்யவேண்டிய) தொண்டு இன்னதென்று விதித்துள்ள சுவாமி, சரவணத்தில் தோன்றியவரும் - தகப்பனுக்கும் குருமூர்த்தியான வருமான சுவாமி - என்றெல்லாம் விளங்குகின்ற - என்றெல்லாம் புகழத்தக்க பெருமாளே!

(எனக்குண்டாகு பணிவிடை திருவுளம் அறியாதோ)

## 1179.

(பூசல் தரும் கயலும்) சண்டை செய்யும் கயல் மீன்போல விளங்கும் கண்களையும், பொருந்தியுள்ள நறுமணம் வீசும் கூந்தலையும், விளக்கமுறும் பூரண கும்பம் என்று சொல்லத்தக்க கொங்கைகளையும் கொண்ட இளம் பெண்களின் -

போகம் அடங்கலையும் (போகம் அடங்கலும்) காமசுகம் முழுமையும் கொண்டு அனுபவித்து, காமப்பற்று நிரம்பிவர, அதனால் ஏற்படும் பெரும் பிழைகள் நீங்கிப் போகும்படியாக (அந்த ஒப்பற்ற பரம்பொருளை) அன்புடன் நினைக்காமல்

(ஆசை யெனும்படியும்) ஆசை எப்படி எப்படிப் போகின்றதோ அப்படி அப்படியே (என்னுடைய) தனங்களும் - செல்வமும், (ஓகை) மகிழ்ச்சியும் (நடந்திட) செல்ல - செலவு கொள்ள, (தினங்களும்) நாள்தோறும், (ஆருடனும்) எல்லாருடனும் பகைமை பூண்டு நிற்கும்படி (நடமாடி) இவ்வுலகி(ல்) உலவி -

*ஆடிய பம்பர முன்சு ழன்றெதி
ரோடிவி ழும்படி கண்ட தொன்றுற
ஆவிய கன்றுவி டும்ப யங்கெட அருள்வாயே;
வாசவ னன்புவி ளங்க நின்றசு
ரேசர்கு லங்கள டங்க லுங்கெட
வானவர் நின்றுதி யங்கு கின்றதொர் குறைதீர
வாரிய திர்ந்துப யந்து நின்றிட
மேருஅ டங்கஇ டிந்து சென்றிட
வாகைபு னைந்தொரு வென்றி கொண்டரு ளிளையோனே;
வீசிய தென்றலொ டந்தி யும்பகை
யாகமு யங்கஅ நங்க னும்பொர
வேடையெ னும்படி சிந்தை நொந்திட அடைவாக
வேடர்செ ழும்புன வஞ்சி யஞ்சன
வேலினு ளங்கள்க லங்கி யின்புற
†வேளையெ னும்படி சென்றி றைஞ்சிய பெருமாளே (189)

## 1180. அருள் புரிய

தான தந்தன தானா தானன
தான தந்தன தானா தானன
தான தந்தன தானா தானன தனதான

பூசல் வந்திரு தோடார் காதொடு
மோதி டுங்கயல் மானார் மானமில்
போக மங்கையர் ‡கோடா கோடிய மனதானார்
பூர குங்கும தூளா மோதப
டீர சண்பக மாலா லாளித
பூத ரங்களின் மீதே முழ்கிய அநுராக

---

* பம்பரத்துக்கு ஒப்பு - இவ்வுடல் வாழ்க்கை.

" அடலைப் பெரிய சுடலைத் திடருள்
ஆசைக் கயிற்றில் ஆடும் பம்பரம்
ஓயா நோய்க்கிடம் ஓடும் மரக்கலம்" பட்டினத்தார் -
கோயில் திரு அகவல் 2 † வேளை - பாடல் 166-பக்கம் 387 கீழ்க்குறிப்பு. வேளையிதென்றடி - என்றும் பாடம்

‡ கோடா கோடிய மனத்தர் - "முப்பது கோடி மனத்தியர்"- திருப்புகழ் 1190- பாடல் 583-பக்கம் 330 குறிப்பு.

சுற்றுகின்ற பம்பரம் முன்னே சுழன்று எதிரே ஓடி விழுதலைக் காண்பது போன்ற (ஒன்றுற) ஒரு நிகழ்ச்சி ஏற்பட - என் (உடல் உயிரற்றுவிழ), ஆவி (உயிர்) (உடலைவிட்டு) நீங்கும் (அந்தப்) பயம் நீங்க - இறப்பு என்னும் பயம் ஒழிய - அருள் புரிவாயாக.

இந்திரனுடைய அன்பு விளக்கம் உற, இருந்த அசுரத் தலைவர்களுடைய கூட்டங்கள் எல்லாம் அழிபட, தேவர்கள் நின்று கலக்கம் கொண்டிருந்த அந்த ஒரு பெருங்குறை நீங்கக் -

கடல் அதிர்ச்சியுற்று, அச்சமுற்று நிற்க, மேருமலை முழுதும் இடிந்துபோக, (வாகைமாலையை) வெற்றி மாலையை அணிந்து ஒப்பற்ற ஜெயத்தைக் கொண்டருளிய இளையவனே!

வீசின தென்றலுடனே (அந்திப் பொழுதும்) மாலைப் பொழுதும் பகைமை காட்டச், சேர (அனங்கனும்) மன்மதனும் சண்டை செய்ய, (வேடை எனும்படி) காமநோய் என்று சொல்லும்படி மனம் நொந்து வருந்த (அடைவாக) அதற்கு ஏற்ப-

வேடர்களின் செழிப்புற்ற (தினைப்) புனத்திலிருந்த (வஞ்சிக்கொடி போன்ற) வள்ளியின் (அஞ்சனம்) மைபூசின (வேலின்) வேல்போன்ற கண்ணால், உள்ளம்கலங்கி இன்பம் பெறவேண்டி - (வேளை எனும்படி) இதுசமயம் கடைக்கணித்து அருளவேண்டும் என்னும் குறிப்புடன் வள்ளியிடம் சென்று வணங்கின பெருமாளே!

(ஆவி அகன்று விடும் பயம் கெட அருள்வாயே)

## 1180.

போருக்கு எழுந்தது என்று சொல்லும்படி, இரண்டு தோடுகளை அணிந்துள்ள காதுடனே மோதுகின்ற கயல்மீன் போன்ற கண்களை உடைய (மானார்) மாதர்கள், மானமேஇல்லாத (போக மங்கையர்) வேசையர்கள், *கோடி கோடிக்கணக்கான மனத்தைக் கொண்டவர்கள் - (ஒரு நிலைப்படாத - பல எண்ணங்களை உடைய விலைமாதர்கள் (இத்தகையோரின்)

(பூரம்) பச்சைக் கற்பூரம், குங்குமம் இவைகளின் தூள்) பொடி, (ஆமோத) மிக்க வாசனைகொண்ட அல்லது மகிழ்ச்சி தரும் (படீரம்) சந்தனம், சண்பக மலர் இவை கொண்டு (மாலால்) ஆசையால் (லாளிதம்) அழகு செய்யப்பட்ட (பூதரங்களின் பீதே) மலையன்ன கொங்கைகளின் மேலே முழுகிய காமப்பற்று என்கின்ற

---

* "வஞ்சமே கோடிகோடிகள் நெஞ்சமே சேரமேவிய வன்கணார்"- பாடல் 237-பக்கம் 92.

ஆசை யென்கிற பாரா வாரமு
மேறு கின்றில னானா பேதஅ
நேக தந்த்ரக்ரி யாவே தாகம கலையாய-
ஆழி யுங்கரை காணே னூபுர
பாத பங்கய மோதே னேசில
னாயி னுங்குரு நாதா நீயருள் புரிவாயே;
வாச வன்பதி பாழா காமல்நி
சாசரன்குலம் வாழா தேயடி
மான வன்கிரி கூறாய் நீறெழ நெடுநேமி-
மாத வன்தரு *வேதா வோடலை
மோது தெண்†கடல் கோகோ கோவென
மாமு றிந்திட நீள்வே லேவிய இளையோனே;
வீசு தென்றலும் வேள்பூ வாளியு
மீறு கின்றமை யாமோ காமவி
டாய்கெ டும்படி காவா யாவியை யெனஏனல்-
மீத சென்றுற வாடா வேடுவர்
பேதை கொங்கையின் மீதே மால்கொடு
வேடை கொண்டபி ரானே வானவர்
பெருமாளே (190)

## 1181. தலங்களைப் போற்ற

தந்தந் தனன தாத்தன, தந்தந் தனன தாத்தன
தந்தந் தனன தாத்தன தனதான

பொங்குங் கொடிய கூற்றனு நஞ்சும் பொதுவில் நோக்கிய
பொங்கும் புதிய நேத்திர வலைவீசிப்-
பொன்கண் டிளகு கூத்திகள் புன்கண்கலவி வேட்டுயிர்
புண்கொண் டுருகி யாட்படு மயல்தீரக்;

---

*பிரமன் அஞ்ச வேல் ஏவினது - பாடல் 1008-அடி 5,6.

வேல் வாங்கு வகுப்பு - அடி 9. பாடல் 757-அடி 5,6.

† கடல் 'கோ கோ' என்றது - பாடல் 1139-அடி 5 பக்கம் 315 கீழ்க்குறிப்பு.

ஆசையாகிய (பாரவாரமும்) கடலை (ஏறுகின்றிலன்) தாண்டி ஏறுகின்றேன் இல்லை; நானாபேத - பலவிதப்பட்ட, அனேகமான, (தந்த்ர க்ரியா) - சாத்திர மந்திரகிரியைகளைக் கூறும்வேத ஆகம கலைகளாய

கடலின் கரையையும் காணேன். (உனது) சிலம்பணிந்த திருவடித் தாமரையை (ஓதேன்) ஓதிப்போற்றுகின்றேன் இல்லை; (நேசிலன்) - (நேசம்) அன்பும் இல்லாதவன்; ஆயினும், குரு மூர்த்தியே! நீ அருள் புரிவாயாக.

இந்திரனுடைய ஊர் பாழாகாதபடியும், (நிசாசரன்) அசுரனாம் சூரனது குலம் வாழாமல் அடியோடு மாண்டு போகவும், (வன்கிரி) வலிமைவாய்ந்த கிரவுஞ்சகிரி பிளவு படவும், (நெடுநேமி நீறெழ) நீண்ட சக்ரவாளகிரி பொடிபடவும்.

திருமால் பெற்ற பிரமனும், அலைமோதி வீசும் தெள்ளிய கடலும் (கோகோகோ என) கோ கோ என்று அஞ்சி அரற்றவும் (ஒலி செய்யவும்), (சூரனாம் மா - மாமரம் முறிபட்டு விழவும், நீண்ட வேலாயுதத்தைச் செலுத்தின இளையவனே!

"வீசும் தென்றல் காற்றும், மன்மதனுடைய மலர்ப்பாணங்களும் (மீறுகின்றமை ஆமோ!) (என் பொறுமைக்கு மேற்பட்டு வேலை செய்தல் (என்னை வாட்டுதல்) நன்றா! இந்த காம தாகம் ஒழியும்படிக் காத்தருளுக என்னுடைய ஆவியை;" என்று திணைப்புனம் உள்ள (அந்த)

இடத்தே சென்று, (வள்ளியுடன்) (உறவாடா) உறவாடி, வேடுவர் மகளாம் அவளது கொங்கையின் மீது மோகம் பூண்டு, (வேடை கொண்ட) வேட்கை - விருப்பம்கொண்ட பெருமாளே! தேவர்கள் பெருமாளே!

(அருள் புரிவாயே)

## 1181.

(பொங்கும்) கோபித்து எழும் பொல்லாத யமனையும், (நஞ்சம்) விஷத்தையும், (தன்னிடத்தே கொண்ட) (நேத்திர வலையை), (பொதுவில் நோக்கிய) வித்தியாசமின்றி யாரிடத்தும் விருப்பம் கொள்ளும் நேத்திர வலையை, (பொங்கும் விளங்கும் நேத்திரவலையை, (புதிய) புதுமைவாய்ந்த நேத்திரவலையை வீசி

(பொன் கண்டு) பொற்காசுகளைப்பார்த்து (இளகு) மன நெகிழ்ச்சி கொள்ளும் (கூத்திகள்) நாடகக் கணிகையரின் புன்கண் துன்பத்தைத் தரும் (கலவி வேட்டு) புணர்ச்சியை விரும்பி, உயிர் புண்பட்டு மனம் உருகி, (அந்தப் பெண்களுக்கு) ஆளாகின்ற காம மயக்கம் ஒழிய - (நான்)

*கொங்கின் புசக கோத்திரி †பங்கங் களையு
மாய்க்குடி
‡கொங்கின் குவளை பூக்கிற கிரிசோண-

குன்றங் கதிரை பூப் Xபர முன்துன் றமரர்
போற்றிய
குன்றும் பிறவும் வாழ்த்துவ தொருநாளே;

எங்கும் பகர மாய்க்கெடி விஞ்சும் பகழி வீக்கிய
வெஞ்சன் டதனு வேட்டுவர் சரணார-

---

* கொங்கின் புசகோத்திரி = கொங்குநாட்டிலுள்ள நாககிரி; திருச்செங்கோடு - சர்ப்பகிரி - நாகமலை எனப்படும். குருகூரில் வாழ்ந்த 'பிரதிவாத பயங்கரன்' என்னும் புலவன் திருச்செங்கோட்டில் இருந்த குணசீலர் என்னும் புலவரை வாதுக்கு அழைத்துத் திருச்செங்கோட்டுக்குப் புறப்பட்டான். வாதினை அஞ்சின குணசீலர் முருகவேளிடம் முறையிட அவர் அஞ்சற்க எனக் கனவிற் கூறிப் பிரதிவாதி பயங்கரன் வரும் வழியில் திருச்செங்கோட்டுக்கு அணித்தான ஒரு சோலையில் மாடு மேய்க்கும் இடைப் பையனாய் நின்றனர். பிரதிவாதி பயங்கரன் திருச்செங்கோட்டு மலையைக் கண்ணுற்றதும், ஒரு கருத்து தோன்றப், பாடலாம் என்று துணிந்து, திருச்செங்கோட்டு மலையானது போரில் பாம்பு படம் எடுத்து நிற்பது போல இருப்பதைக் கண்டு,

"சமர முகத் திருச் செங்கோடு சர்ப்ப சயிலம் என்ன
அமரிற் படம் விரித் தாடாத தென்னை?

என அரைப்பாட்டுப் பாடி அதை முடிக்கத் தெரியாது விழிக்க அங்கிருந்த இடைப்பையன் அவரிடம் வந்து - திருச்செங்கோடு முருகன் மலை ஆயிற்றே; அவனுடைய மயில்வாகனம் தன்னைக் கொத்தும் என்னும் பயத்தினால் இந்தப் பாம்பு படம் எடுத்து ஆடவில்லை என்னும் கருத்தை அமைத்து,

"அஃதாய்ந்திலையோ - நமரன் குறவள்ளி பங்கன் எழுகரை நாடுயர்ந்த குமரன் திருமருகன் மயில்வாகனம் கொத்துமென்றே" எனப் பாடிப்பாடலை முடித்தனன் (பாடல் 380-பக்கம் 460 கீழ்க்குறிப்பு)

பிரதிவாத பயங்கரன் இதைக்கேட்டு ஆச்சரியம் உற்று நீ யார் என இடைப் பையனை வினவ - அவன் - நான் திருச்செங்கோட்டுப் புலவர் குணசீலரின் கடை மாணவன். விரைவில் பாடத் தெரியவில்லை என்று என்னை விலக்கி இந்த மாடு மேய்க்கும் தொழிலில் ஈடுபடுத்தினர் என்றான்.

கொங்கு நாட்டில் உள்ள (புசக கோத்திரி) பாம்புமலையாகிய திருச்செங்கோட்டையும், (பங்கம்) (தரிசித்தோர்களின்) பாபங்களைப் போக்கும் ஆய்க்குடி என்னும் தலத்தையும், கொங்கின் - வாசனையுடன் குவளை மலர் - நீலோற்பல மலர் பூக்கின்ற கிரி - மலையாம் திருத்தணிகையையும், சோண

குன்றும் - சைலம் (சோணா சலம் - அருணாசலம், - செம்மலை - அண்ணாமலையையும், (பூ) அழகிய, பரம் முன் துன்று, பரம் என்னும் சொல் முன்னே வருகின்றதும், தேவர்கள் போற்றுவதுமான (குன்றம்) மலையை - அதாவது திருப்பரங்குன்றத்தையும், (பிறவும்) பிற தலங்களையும் (வாழ்த்துவது) போற்றி வாழ்த்துகின்ற ஒரு பாக்கிய நாள் எனக்குக் கிடைக்குமா!

எவ்விடத்தும் பிரமாதமாய்க் (கெடி) வல்லமையும் கீர்த்தியும் (விஞ்சும்) மேற்பட்டு விளங்கும் அம்புகளையும், கட்டப்பட்டுள்ள கடிய கொடிய (தனு) வில்லையும் கொண்ட வேடர்கள் (உனது) திருவடித்

---

இதைக்கேட்ட பிரதிவாத பயங்கரன் 'ஏது! தள்ளப்பட்ட மாணவனே இவ்வளவு விரைவில் கருத்தமைத்துப் பாடுகின்றானே! வாத்தியாராகிய குணசீலர் எவ்வளவு வேகத்தில் பாடுவரோ! அவரோடு நம்மால் வாதிட முடியாது. என்று வாதுக்கு வராமலே திரும்பிப் போய்விட்டான் என்பது ஒரு வரலாறு.

திருப்பதியையும் 'சேஷாசலம்' என்பர். இங்குக் 'கொங்கின் புஜக கோத்திரி' என்றதனால் கொங்கு நாட்டில் உள்ள திருச்செங்கோட்டையே இது குறிக்கும்.

† ஆய்க்குடி - பாடல் 982 பார்க்க.
‡ கொங்கின் குவளை பூக்கிற கிரி = திருத்தணி.

- பாடல் 272-பக்கம் 178,179 கீழ்க்குறிப்பு.

X பரம் முன் துன்று குன்றம் = திருப்பரங்குன்றம்.
O தலங்களை வாழ்த்துவதே ஒரு பேறு ஆகும் -
" பிதற்றாய் பிறைசூடி தன் பேரிடமே" என்றார் சம்பந்தர் 2-39-1.

விந்தம் பணிய வாய்ந்தரு ளந்தண் *புவன நோற்பவை
மென்குங் குமகு யாத்திரி பிரியாதே.
எங்குங் கழுழி யார்த்தெழ எங்குஞ் சுருதி கூப்பிட
எங்குங் குருவி யோச்சிய திருமானை-
என்றென் றவச மாய்த்தொழு தென்றும் புதிய
கூட்டமொ
டென்றும் பொழுது போக்கிய பெருமானே (191)

## 1182. ஆட் கொள்ள

தனன தனதன தனத்தத் தாத்தன
தனன தனதன தனத்தத் தாத்தன
தனன தனதன தனத்தத் தாத்தன தனதான

பொருத கயல்விழி புரட்டிக் காட்டுவர்
புளக தனவட மசைத்துக் காட்டுவர்
புயலி னளகமும் விரித்துக் காட்டுவர் பொதுமாதர்-
புனித விதழ்மது நகைத்துக் காட்டுவர்
பொலிவி னிடைதுகில் குலைத்துக் காட்டுவர்
புதிய பரிபுர நடித்துக் காட்டுவ ரிளைஞோரை:
உருக அணைதனி லணைத்துக் காட்டுவர்
உடைமை யடையவெ பறித்துத் தாழ்க்கவெ
உததி யமுதென நிகழ்த்திக் கேட்பவர்
பொடிமாயம்-

---

*வள்ளி நோற்றது:- தன்னை மணஞ்செய விரும்பின சுந்தரவல்லியை முருகவேள் நீ பூமியில் தவஞ் செய்வாயாக. நான் அங்கு வந்து உன்னை மணப்பேன் எனக் கூறச் சுந்தரவல்லியும் அவ்வாறே சூக்கும தேகத்துடன் வள்ளிமலைச் சாரலில் நோற்றுத் தவஞ் செய்திருந்தனள் என்பது வரலாறு.

"வள்ளி வெற்பின் மரம்பயில் சூழல்போய்த்
தெள்ளிதில் தவஞ் செய்திருந்தாளரோ"

- கந்த புராணம் 6-24-243.

பின்னர், அங்கே திருமால் சிவ முனிவராகத் தவஞ் செய்திருந்தபோது இலக்குமி பொன்மானாய் அங்குவரச் சிவ முனிவர் அதைக் காமத்துடன் நோக்க அது கருப்பங்கொள்ள சுந்தரவல்லி அந்தக் கருவினுள் எய்தினாள், கருப்பமுற்ற மான் வள்ளிக் குழியில் கருவுயிர்க்க - அந்தப் பெண் குழந்தையே 'வள்ளி' 'வள்ளிப் படுகுழியில் வந்திடலால்... இவள் நாமம் 'வள்ளி' எனக் கூறினரே!

-கந்த புராணம் 6-24-42

பின்னர், முருகவேள் பல திருவிளையாடல்களைச் செய்து வள்ளியை

தாமரையைப் பணிய, உனது அருள் வாய்த்த காரணத்தால், அழகிய குளிர்ந்த இவ்வுலகு (நோற்பவை) செய்த தவப்பயனாய் உதித்த, அல்லது இவ்வுலகில் உன்னை நோக்கித் தவஞ்செய்திருந்த மென்மை வாய்ந்ததும், குங்குமம் கொண்டதுமான, குயாத்திரி (குய அத்திரி) கொங்கை மலைகளை உடையவளும், ஓயாத வகையில்

. எங்கும் (கலுழி) கான்யாறு ஒலித்து எழவும், எங்கும் வேத ஒலி பெருகவும் - விளங்கின வள்ளி மலைத் தினைப்புனத்தில் எங்கும் குருவிகளை (எச்சிய) கவண் கல் கொண்டு ஓட்டிய அழகிய மான் அனைய வள்ளியை

என்றென்று - நீ திரு என்றும், நீ மான் என்றும் காதல் மொழிகளைக் கூறி - (அவசமாய்) தன் வசமழிந்து வணங்கி, (என்றும்) நாள்தோறும் (புதிய கூட்டமொடு) புதிதாகச் சந்திப்பது (கூடுவது) போன்ற மகிழ்ச்சியுடன், (என்றும்) தினமும், பொழுது போக்கின - காலம் கழித்த பெருமாளே!

(பரங் குன்றும் பிறவும் வாழ்த்துவதொருநாளே)

## 1182.

சண்டை செய்த கயல் மீன் போன்ற கண்களைப் புரட்டிக் காட்டுவர்; புளகாங்கிதம் கொண்ட கொங்கை மீதுள்ள (வடம்) மாலையை அசைத்துக் காட்டுவர்; (புயலின்) மேகம் போன்ற (அளகமும்) கூந்தலையும் விரித்துக் காட்டுவர் பொதுமாதர் -

(இவர் பின்னும்) சுத்தமான (இதழ்மது) வாயூறலாம் தேனைச் சிரிப்புடன் காட்டுவர், பளபளப்புள்ள இடுப்பில் உள்ள ஆடையைக் கலைத்துக் காட்டுவர்; புதிதாய் அணிந்துள்ள காற் சிலம்புடன் நடனஞ் செய்து காட்டுவர் வாலிபர்களை -

(அவர்தம்) உள்ளம் உருகப் படுக்கையில் அணைத்துக் காட்டுவர்; அவர்களுடைய பொருட் செல்வம் - சொத்து முழுமையும் பறித்து அவர்களைத் தாழ்க்க - வறிஞராய்த் தாழும் படிச் செய்ய (உததி அமுதென) கடலினின்றும் தோன்றிய அமுதம் போல (நிகழ்த்தி) இனிமையுடன் பேசிப் (பொருளைக்) கேட்பார்கள், சொக்குப்பொடி - மாயப்பொடியை

---

மணந்தார் - பாடல் 382, 435-பக்கம் 464, 590. பாடல் 624-பக்கம் 450; பாடல் 703-பக்கம் 120 கீழ்க்குறிப்புக்களைப் பார்க்க.

உதர மெரிதர *மருத்திட் டாட்டிகள்
உயிரி னிலைகளை விரித்துச் சேர்ப்பவர்
உறவு கலவியை விடுத்திட் டாட்கொள
நினையாதோ;

† மருது பொடிபட வுதைத்திட் ‡ டாய்ச்செரி
மகளி ருறிகளை யுடைத்துப் போட்டவர்
X மறுக வொருகயி றடித்திட் டார்ப்புற அழுதூறும்-
வளரு நெடுமுகி லெதிர்த்துக் காட்டென
O அசட னிரணிய னுரத்தைப் பேர்த்தவன்
** மழையி னிரைமலை யெடுத்துக் காத்தவன்
மருகோனே;

விருது பலபல பிடித்துச் சூர்க்கிளை
விகட தடமுடி பறித்துத் தோட்களை
விழவு முறியவு மடித்துத் தாக்கிய அயில்வீரா-
வெகுதி †† சலதியை யெரித்துத் தூட்பட
விளைசெ யசுரர்கள் பதிக்குட் பாய்ச்சிய
விபுத மலரடி விரித்துப் போற்றினர்
பெருமாளே. (192)

---

*வேசையர் மருந்திடுதல் - பாடல் 230-பக்கம் 74 குறிப்பு.

† மருதிடைத் தவழ்ந்தது - பாடல் 143-பக்கம் 332 குறிப்பு

சகடு உதைத்தது - பாடல் 111-பக்கம் 264 குறிப்பு

‡ ஆய் செரி = ஆயர் சேரி.

X கயிற்றால் கட்டப்பட்டது - பாடல் 736-பக்கம் 200 கீழ்க்குறிப்பு

O இரணியனை அட்டது - பாடல் 327-1-பக்கம் 317 குறிப்பு

** மலை எடுத்து நிரை காத்தது - பாடல் 678-பக்கம் 62,
- பாடல் 774-பக்கம் 302 குறிப்பு

†† (1) கடலை எரித்தது - கடல் சுவற வேல்விட்டது
- பாடல் 905-பக்கம் 640 குறிப்பு.

(2) கடலை அசுரர் பதிக்குள் பாய்ச்சியது - கடலிற் சூரனுடைய வீரமகேந்திர நகரை அழுத்தி அழிவித்தது

" மகேந்திர நகரினை... உன்குதி ஒல்லையில் தடிந்தென்றான்,
என்ற மாத்திரை சலபதி... மகேந்திரத் தொல்நூரை,...
புணரியுள் அழுத்தினன்"- கந்த புராணம் 4-16- 15-16

(உதரம் எரிதர) வயிற்றில் எரிச்சல் உண்டாகும்படி மருந்திட்டு ஆட்டிவைப்பவர்; உயிர் நிலைகளையே (விரித்துச் சேர்ப்பவர்) (தங்கள் கடுமொழிகளாலும் சரசமொழிகளாலும்) பிரித்துக் கூட்டியும் வைப்பவர்; (அத்தகைய பொதுமாதர்களின்) சம்பந்தமான புணர்ச்சியை - சேர்க்கையை நான் விட்டொழிக்கும்படி என்னை ஆண்டு கொண்டருள (உன் திருவுள்ளம்) நினைக்காதா!

மருதமரம் பொடிபட உதைத்தவர் (சகடை) உதைத்தவர்; ஆயர் சேரியில் இருந்த மகளிருடைய உறிகளை எல்லாம் உடைத்து போட்டவர்; கலங்கும்படி ஒரு கயிற்றினால் அடிபட்டுக் கட்டுண்ண அழுதவர்; பெருகி

வளர்ந்த (திரிவிக்ரமராய் பேருரு எடுத்த) நெடிய மேகவண்ணர், எதிரில் காட்டு பார்க்கலாம் என்று மகனாம் பிரகலாதனைக்கேட்டுத் தூணை மோதின அந்த முட்டாள் இரணியனுடைய (உரத்தை) மார்பைப் பிளந்தவர், மழை பொழிந்த பொழுது - பசுக்கூட்டத்தை - கோவர்த்தனகிரியைக் குடையாக எடுத்துப்பிடித்துக் காத்தவர்- ஆகிய திருமாலின் மருகனே!

வீரசின்னங்கள் பல பல ஒலிக்கச், சூரனுடைய கூட்டங்களின் பயங்கரமான பெரிய தலைகளைப் பறித்தெறிந்து, அவர்களின் தோள்களை விழும்படி முறித்து, அடித்துத் தாக்கின வேல் வீரனே!

வெகுதி - (வெகு தீயால்) - பெருநெருப்பால் - கடலை எரித்து, வினை செய் அசுரர்கள் - தீவினைகளைப் புரிந்த அசுரர்கள் (தூள்பட) அழியும்படி - பதிக்குள் - அவர்கள் வாழ்ந்த மகேந்திர நகரில் - (சலதியை) கடல் நீரைப் பாய்வித்த - நகரைக் கடல் நீரால் அழித்த (விபுத) தேவனே - மலர்களை உனது திருவடியில் விரியத் தூவிப் பரவிப் போற்றுபவர்களின் பெருமானே!

(ஆட்கொள நினையாதோ)

## 1183. திருவடியைப் பெற

தந்தானந் தாத்தந் தனதன
தந்தானந் தாத்தந் தனதன
தந்தானந் தாத்தந் தனதன தனதான

மங்காதிங் காக்குஞ் சிறுவரு
முண்டேயிங் காற்றுந் துணைவியும்
வம்பாருந் தேக்குண் டிட*வறி தெனும்வாதை-
வந்தேபொன் தேட்டங் கொடுமன
நொந்தேயிங் காட்டம் பெரிதெழ
† வண்போதன் தீட்டுந் தொடரது படியேமன்;
சங்காரம் போர்ச் ‡ சங் கையிலுடல்
வெங்கானம் போய்த்தங் குயிர்கொள
சந்தேகந் தீர்க்குந் தனுவுட னுகாமுன்-
Xசந்தாரஞ் சாத்தும் O புயவியல்
கந்தாஎன் றேத்தும் படியென
**சந்தாபந் தீர்த்தென் றடியிணை தருவாயே;
†† கங்காளன் ‡‡ பார்த்தன் கையிலடி
யுண்டேதின் டாட்டங் கொளுநெடு
XX கன்சாபஞ் சார்த்துங் கரதல னுருதேறி-

---

*வறிது = தரித்திரம், வறுமை "எம்பிரான் இரங்கி வறிது நீத்தனன்" (உபதேச - கோளேரி. சிவ புண். 316)

† பிரமன் எழுதிய எழுத்தின்படி எமன் வருவது
பாடல் 760-பக்கம் 262 குறிப்பு ‡ பார்க்க.

‡ சங்கை = அச்சம். 'அமரர்கள் தம் சங்கை எல்லாம் கீண்டானை' அப்பர் 6-67-9.

Xசந்து ஆரம் = சந்தனமும் ஆரமும். O இது புய வகுப்பு பாடுதற்கு அடி கோலியது; புய இயல் பாடும் பேறு பெற்றதைப் "புய வகுப்பிற்" காண்க.

** சந்தாபம் = கொடுமை, துன்பம்

†† 'கங்காளம் தோள்மேலே காதலித்தான்' திருவாசகம். சாழல் 11.- கங்காளம் = எலும்புமாலை - பாடல் 842, 983

ஊழி முடிவில், பிரமன், மால் முதலியோரையும் ஒடுக்கிப் பின்பு இறைவன் ஏக மூர்த்தியாய் உறைவர். இவ்வாறு ஒடுக்கும் தோறும் பிரமன், மால் முதலானவர்களுடைய எலும்பினை அவர் தரிப்பார்".

(தொடர். பக்கம் 447)

## 1183.

(மங்காது) குலத்தின் வளர்ச்சியும் பெருமையும் குறைவுபடாமல், இங்கு - இவ்வுலகில் (ஆக்கும்) உதவும் (சிறுவரும்) மக்களும் உண்டு, பின்னும் (இங்கு) இவ்வாழ்வில் (ஆற்றும்) கூட இருந்து உதவி புரியும் (துணைவியும்) மனைவியும் உண்டு; (வம்பாரும்) வம்பரும் - புதிய உறவினரும் (அல்லது பயனற்ற உறவினரும்) உண்டு; இவர்களெல்லாம் கூடித் (தேக்கு உண்டிட) நிரம்ப உண்ண, வறுமை - தரித்திரம் என்று (எண்ணும்) எண்ணப்படுகின்ற (வாதை) துன்பம் -

வந்து சேர, பொன் தேட்டம் கொடு - பொன் தேடவேண்டிய கவலையால் மனம் வருந்தி இவ்வாழ்க்கையில் (ஆட்டம் பெரிது எழ) அலைச்சல் நிரம்ப உண்டாக, (வண் போதன்) - செழிப்புள்ள மலரில் இருக்கும் பிரமன் (தீட்டும்) எழுதிவைத்த (தொடர் அது படி) எழுத்து வரிசையின் படி எமனானவன் -

(என் உயிரை) அழிப்பதற்குச் செய்யும் போரின் (சங்கையில்) அச்சத்துடனே, உடலானது (வெங்கானம்) சுடுகாட்டுக்குப் போய்ச் சேரும்படி - உயிரைக்கவர, (சந்தேகம் தீர்க்கும் இந்த உயிர் பிழைக்குமோ பிழைக்காதோ என்கின்ற சந்தேகம் தீரும்படித் தனுவுடன்) வில் முதலான ஆயுதங்களுடன் (அல்லது - தனது உடற் றோற்றத்துடன்) என்னை (அணுகாமுன் - நணுகாமுன்) அணுகுவதற்கு முன்பாக -

சந்தனமும் (ஆரமும்) கடப்ப மாலையும் அணிந்துள்ள (புய) திருப்புயங்களை உடையவனே! (இயல்) தகுதிமிக்க - அல்லது இயற்றமிழ் ஆதிய முத்தமிழ் வல்ல - கந்தப் பெருமானே - என்று நான் உன்னை (ஏத்தும்படி) போற்றும்படி, (அல்லது திருப்புயங்களின் தன்மையைக் கந்தா என்று கூறி (நான்) ஏத்தும்படி) (என) என்னுடைய (சந்தாபம்) மனத்துன்பத்தை தீர்த்து என்று உன் திருவடியிணையைத் தந்தருளுவாய்!

எலும்பு மாலையை அணிந்தவன், அருச்சுனன் (கையில்) கைவில்லால் அடியுண்டு திண்டாட்டம் கொண்டவன், பெரியகல் மேருமலையாகிய (சாபம்) வில்லைச் (சார்த்தும்) சாரவைத்துள்ள திருக்கரத்தை உடையவன், இடபவாகனத்தில் ஏறுபவன்.

---

"பரமன் இவ்வகை அடுந்தோறும் அடுந்தோறும் பலவாம்
பிரமனாதியோர் என்பினைத் தரிக்குமப் பெரியோர்
சிரமெலாந் தொடுத்தணியவா அணிந்திடும்" கந்தபுராணம் 6-13-12.

" கங்காளம் ஆமாகேள் காலாந் தரத்திருவர்
தங்காலஞ் செய்யத் தரித்தனன் காண் சாழலோ" திருவாசகம் 12-11.

(தொடர்ச்சி 448-ஆம் பக்கம் பார்க்க)

கந்தாவஞ் சேர்த்தனன் புதுமல
ஏம்பான்வெந் தார்ப்பொன் றிடவிழி
கண்டான்வெங் காட்டங் கனலுற நடமாடி

அங்காலங் கோத்தென் டிசைபுவி
மங்கா துன் டாற்கொன் றதிபதி
அந்தாபந் தீர்த்தம் பொருளினை யருள்வோனே

அன்பாலந் தாட்கும் பிடுமவர்
தம்பாவந் தீர்த்தம் புவியிடை
அஞ்சாநெஞ் சாக்கந் தரவல பெருமாளே (193)

---

(447-ம் பக்கம் தொடர்ச்சி)

‡‡ பார்த்தன் கையில் அடி உண்டது.

அருச்சுனன் தவஞ் செய்திருந்தபொழுது துரியோதனன் ஏவலால் மூகன் என்னும் அசுரன் அருச்சுனனைக் கொல்லப் பன்றி வடிவுடன் வருவதை அறிந்த சிவபிரான் தான் ஒரு வேடருபம் கொண்டுவந்து அம்பெய்தி அப்பன்றியின் பின்பாகத்தைப் பிளந்தார் அதன்பின் அருச்சுனனும் பன்றி வருவதைக் கண்டு அதன் முகத்தில் அம்பெய்தினான். இருவர் செலுத்தின அம்பினால் பன்றி இறந்துவீழ்ந்தது. எங்கள் வேடராஜன் முன்பு அம்பு தொடுக்க நீ எப்படிப் பின்பு அம்பு தொடுத்தாய் என்று வேடராஜனுடைய பரிவாரங்கள் அருச்சுனனைச் சண்டைக்கு இழுக்க, வேடராஜனான (சிவனுக்கும்) அருச்சுனனுக்கும் விற்போர் நடந்தது. நடந்த விற்போரில் (வேடன் - சிவபிரான்) அருச்சுனனுடைய வில்லின் நாணை அறுத்து எறிந்தார். நாண் அறுபட்ட வில் தடியால் அருச்சுனன் வேடராஜனுடைய முடிமேல் அடித்தான். அவன் அடித்த அடி திருமால், பிரமன் ஆகிய சகல உயிர்கள் மீதும் விழுந்தது.

"விண்ணிலுறை வானவரில் யாரடி படாதவர்
விரிஞ்சன் அரியே முதலினோர்,

மண்ணிலுறை மானவரில் யாரடி படாதவர்..
எண்ணில் பல யோனியிலும் யாரடி படாதன...
பிறப்பிலி இறப்பிலி.. தரன் கை அடி உண்டபொழுதே"

- வில்லி, அருச்சுனன் தவம் 107-108.

- திருப்புகழ் 103-பக்கம் 243 கீழ்க்குறிப்பு.

XX கன் சாபம் சார்த்தும் = மலையாகிய வில்லைத் தரித்த.
மேருவில் - திரிபுரம் எரித்தபோது
-- பாடல் 285-பக்கம் 206 கீழ்க்குறிப்பு.

(சந்த ஆவம்) பற்றுக் கோடாக - உடலியாக வைத்துள்ள அம்புக் கூட்டில், சேர்ந்துள்ள குளிர்ச்சியுள்ள புதிய மலர்ப் பாணங்களை * உடைய மன்மதன் வெந்து கூச்சலிட்டு விழ (விழி கண்டான்) கண்கொண்டு பார்த்தவன், (வெங்காடு அங்கு அனல்) உற-நடமாடி கொடிய (சுடு) காட்டில் நெருப்பை யேந்தி நடனம் ஆடுபவன்.

(அங்கு) அச்சமயம் ஒன்றில் (ஆலம்) † ஆல கால விஷத்தை (சேர்த்து) ஒன்று சேர்த்து உண்டு, எட்டுத் திக்கைக் கொண்ட பூமியில் உள்ளவர்கள் (மங்காது) அழிவுறாமல் - வாட்டம் உறாமல் உண்டாற்கு - உண்டவன் - ஆகிய சிவபிரானுக்கு (ஒன்று) பொருந்திய, (அதிபதி) உபதேசத் தலைவனாய், அம் தாபம் (ஞானப் பொருளை அறிய வேண்டும் என்கின்ற) அந்த நல்ல தாகத்தைத் தீர்த்து, அழகிய அந்த ஞானப் பொருளை (அவருக்கு) உபதேசித்தவனே! (அல்லது) நடமாடியாகிய சிவனுக்கும், அங்கு (ஆலம்) கடலால் சூழப்பட்ட எண்டிசைப் ‡ பூமியை (மங்காது) கேடு உறாமல் உண்ட திருமாலுக்கும் பொருந்திய (அதிபதி) தலைவனே! X சிவனுடைய - அகத்தியருடைய - (அடியேனுடைய, நல்ல தாபத்தைத் தீர்த்துப் பொருளை உபதேசித்தவனே!

O அன்புடனே அழகிய உனது திருவடியைக் கும்பிடுகின்றவர்களுடைய பாவத்தைத் தீர்த்து, (அம்புவி யிடை) அழகிய இப்பூமியில் (எதற்கும்) அஞ்சாத நெஞ்சையும், (ஆக்கம்) செல்வத்தையும் தரவல்ல பெருமானே!

(என்று அடியிணை தருவாயே)

---

* மன்மதனை எரித்தது - பாடல் 399-பக்கம் 510 குறிப்பு

† நஞ்சு உண்டது - பாடல் 280-பக்கம் 211 குறிப்பு

‡ திருமால் புவி உண்டது - பாடல் 267-பக்கம் 164 குறிப்பு

X மூவர்க்கும் முருகவேள் உபதேசித்ததை - "குறு முனியார்க்கும், திருப்புகழ் பண்ணவர்க்கும், ஆலாலம் உண்டவர்க்கும் உபதேசித்த ஆண்டவனே" (முருகரந்தாதி) என வருமிடத்துக் காண்க.

O 1183 - எட்டாம் அட்டவணை - பாடல் 678 அடி 8-ல் காணலாம்.

## 1184. மாதர் மீது மயக்கு அற

தனன தனதன தனத்தா தன
தனன தனதன தனத்தா தன
தனன தனதன தனத்தா தன தனதான

*மதன தனுநிக ரிடைக்கே மன
முருக வருபிடி நடைக்கே யிரு
வனச பரிபுர மலர்க்கே மது கரம்வாழும்-
வகுள ம்ருகமத மழைக்கே மணி
மகர மணிவள குழைக்கே மட
மகளிர் முகுளித முலைக்கே கட லமுதூறும்;
அதர மதுரித மொழிக்கே குழை
யளவு மளவிய விழிக்கே தள
வனைய தொருசிறு நகைக்கே பனி மதிபோலும்
அழகு திகழ்தரு நுதற்கே யந
வரத மவயவ மனைத்தா டினு
மவச முறுமயல் தவிர்த்தா னவு மொருநாளே;
†உததி புதைபட அடைத்‡தா தவன்
நிகரி லிரதமும் விடுக்கா நகர்
ஒருநொ டியில்வெயி லெழச்சா நகி துயர்தீர-
உபய வொருபது வரைத்தோள் களு
நிசிச ரர்கள்பதி தசக்ரீ வமு
முருள Xஒருகணை தெரித்தா னுமெ வுனஞான;
திதமி லவுணர்த மிருப்பா கிய
புரமு மெரியெழ முதற்பூ தர
திலத **குலகிரி வளைத்தா னுமகிழவானோர்

* மதன தனு நிகர் = மன்மதனுடைய சரீரத்துக் கொப்பாகிய; உருவ மில்லாத.

பாடல் 516, அடி 3, பாடல் 653, அடி 2 பார்க்க.

† கடலை அணையிட்டு அடைத்தது

- பாடல் 844- பக்கம் 472 கீழ்க் குறிப்பு

‡ சூரியன் தேர் புகாத நகர் = இலங்கை

பாடல் 849-பக்கம் 488 குறிப்பு

X ஒரு கணை ஏவினது - பாடல் 452-பக்கம் 6 குறிப்பு

ஞான நிலையிலாத அவுணர் - திருமால், நாரதர் இவர்களால் மதிமயங்கிச் சிவபூஜையை விட்ட அவுணர். (தொடர்.பக்கம் 451)

## 1184.

மன்மதனுடைய (தனது) உடலுக்கு (நிகர்) ஒப்பான இடைக்கே (மன்மதனைப்போல உருவமில்லாத) - இடையின்மீதும், மனம் உருகும்படியாக வருகின்ற பெண் யானையின் நடைபோன்ற நடையின்மீதும், இரண்டு தாமரை மலர்போன்றவும், சிலம்பணிந் துள்ளனவுமான மலரடிகளின் மீதும், (மதுகரம்) வண்டுகள் வாழ்கின்றதும்

(வகுளம்) மகிழும் பூவும் (ம்ருக மதம்) கஸ்தூரியும் அணிந்துள்ளதுமான மழைக்கே) மழை போன்ற நீண்ட கூந்தலின் மீதும், ரத்னங்கள் அமைந்த மகர மீன்போன்ற குழை அணியின் மீதும், இள மகளிர்களின் மலர் மொட்டுப் போலக் குவிந்துள்ள கொங்கைகளின் மீதும், கடல் அமுது போல இனித்து ஊறுகின்ற

வாயூறலின் மீதும், இனிய பேச்சின் மீதும், குழைகள் வரைக்கும் நீண்டுள்ள கண்களின் மீதும், (தளவு அளையதொரு) முல்லைமலர் போன்ற ஒப்பற்ற புன்னகையின்மீதும், குளிர்ந்த பிறைச்சந்திரன் போன்று

அழகு விளங்கும் நெற்றியின்மீதும், (அனவரதம்) எப்போதும் (அவயவம் அனைத்தூடினும்) இவ்வாறு எல்லா அவயங்களின் மீதும் (அவசம் உறும்) மயக்கம் கொள்ளும் காமப்பித்தை ஒழித்து என்னை நீ ஆண்டருளும் ஒரு நாள் எனக்குக் கிடைக்குமா!

கடல் புதைபடும்படி (அணைகட்டி) அடைத்து, (ஆதவன்) சூரியனுடைய ஒப்பற்ற தேரும் வரக்கூடாதென்று தடுக்கப்பட்டிருந்த நகரமாகிய இலங்கையில் ஒரு நொடிப் பொழுதில் (வெயில் எழ) சூரியன் ஒளிவரும்படிச் செய்து, (ஜானகி) சீதையின் துயரம் தீரும்படி -

உபய ஒருபது (2 × 10) இருபது மலைபோன்ற தோள்களும், அரக்கர் தலைவனாம் ராவணனுடைய (தசக்ரீவமும்) பத்துக் கழுத்தும், உருண்டு மாண்டு ஒழிய, ஒரே பாணத்தை விட்டவனாகிய திருமாலும், மவுனஞான

(திதம்) நிலையில்லாத அவுணர்களுடைய இருப்பிடமாயிருந்த திரிபுரங்களும் எரிபட்டு அழியும்படி, முதற் பூதர - திலத குலகிரி மலைகளுள் முதன்மைவாய்ந்ததும், மலைகளுக்குள் திலதம் (நெற்றிப் பொட்டுப்) போலச்சிறப்புற்றுக் (குலகிரி) சிரேஷ்டமானதுமான மலையாகிய மேருமலையை வளைத்தாலும் (மேருவை வில்லாக வளைத்த சிவபிரானும் மகிழ்ச்சி கொளும்படியும், தேவர்கள் (அவர்களுடைய)

-பாடல் 1021-பக்கம் 68 குறிப்பு

** மேருவை வில்லாக வளைத்தது -பாடல் 285-பக்கம் 206 குறிப்பு

திருவ நகர்குடி புகச்சீ கர
*மகர சலமுறை யிடச்சூ ரொடு
சிகர கிரிபொடி படச்சா டிய பெருமாளே (194)

## 1185. எழுந்தருள

தனதானன தனதானன தனதானன தனதானன
தனதானன தனதானன தனதான

மதனேவிய கலையாலிரு வினையால்புவி கடல்சாரமும்
வடிவாயுடல் நடமாடுக முடியாதேன்-
மனமாயையொ டிருகாழ்வினை யற †மூதுடை
மலம்வேரற
மகிழ்ஞானக அநுபூதியி னருள்மேவிப்,
பதமேவுமு னடியாருடன் விளையாடுக அடியேன்முனெ
பரிபூரண கிருபாகர முடன்‡ஞான-
பரிமேலழ குடனேறிவி ளவர்பூமழை யடிமேல்விட
X பலகோடிவெண் மதிபோலவெ வருவாயே;
சதகோடி வெண் மடவார் Oகட லெனசாமரை
யசையாமுழு
**சசிசூரியர் கடராமென வொருகோடிச்-

* கடல், சூரன், கிரி - இவை நமை அட்டது
"வேல் பட்டழிந்தது வேலையும் சூரனும் வெற்பும்" - கந்தரலங். 40,
† மூதுடை மலம் = ஆணவ மலம் "ஆணவந்தான் அனாதி" - சிவஞான சித்தி. 314
‡ 'ஞான பரி' - "ஞானமா விஞ்சை முதுகின் ஏறி" - பாடல் 179
X "சந்திர நிறங்களும்" - திருப்புகழ் 16
"வேற்கை நாதன் தாவுமயில் தனிலேறி அனந்தகோடி
சரற்கால சந்திரன் போல் தழைத்துத் தோன்றி"
- திருமலையாண்டவர் குறவஞ்சி 9
O கடலென சாமரை அசையா:-
"திரையின் கடற்பொற் கவரிபெழப் பொங்க" - இராசராச சோழனுலா. 49, 50
"திருப்பாற் கடற்றிரை யிரண்டு வந்தென.. இருமருங்கும் கவரி யிரட்டவே" - தக்க யாக 294
"பாலின் வெண் பரவைத் திரை... பரந்தெனச் சாமரை பதைப்ப" - கம்ப நிந்தனை 16
** முநிவர் ஒளி:- (தொடர். பக்கம் 453)

(திருவநகர்) செல்வம் நிறைந்த பொன்னுலகப் பட்டணத்திற் குடி புகும் படியும், (சீசரம்) அலைகளும் மகர மீனும் கொண்ட (சலம்) கடல் முறையிட்டு ஒலிடும்படியும், சூரனுடன் (உச்சிகளை உடைய) எழுகிரி பொடிபட்டழியவும், சாடிய - (வேல் கொண்டு) மோதித் தாக்கின பெருமாளே!

(மயல் தவிர்த் தாள்வதும் ஒரு நாளே)

## 1185.

மன்மதன் செலுத்தின பாணங்களிற் பட்டும், இருவினையிற் பட்டும், (புவி) மண், (கடல்) நீர், (முதலிய ஐம்பூதங்கள்), சாரம் கிரகங்களின் இயக்கம் இவைகளுக்கு ஈடுபட்ட வடிவமான இந்த உடலுடன் (உலகில்) நடமாட முடியாதவனாகிய நான் -

மனத்தின் கண் உள்ள மாயை உணர்ச்சியும், நல்வினை, தீவினை எனப்படும் முற்றின வினைகளும் (அற) ஒழிய பழமையாய் வரும் ஆணவ மலம் வேரற்றுப் போக, மகிழ்தத்தக்க ஞான (அகத்து) உள்ளத்து விளங்கும் அநுபவஞானமாகிய அருளை அடைந்து

உன் திருவடியை அடைந்த உன்னுடைய அடியார்களுடன் நாளும் கூடி விளையாட, (நீ) அடியேன் முன்பாக (பரிபூரணமான நிறைந்த கிருபைக்கு இடம் வைத்து, ஞானம் என்னும்

(பரிமேல்) குதிரையின் மேல் அழகுடனே ஏறி, விண்ணவர் தேவர்கள் பூ மழையை உனது திருவடியின் மேற் பொழிய, பலகோடி வெண்ணிலவின் ஒளி வீச எழுந்தருளுக.

(சத கோடி) நூற்றுக் கோடி வெண்ணிற, அல்லது வெண்ணிற ஆடை அணிந்த மாதர்கள் கடலென - திரைவீசுவது போல (சாமரை அசையா) சாமரங்களை வீச, பூரண சந்திரன், (பன்னிரு) சூரியர் தீப ஒளியாய் விளங்க (அல்லது) சந்திர சூரியர்களின் பேரொளி என்று சொல்லும்படி ஒளிவாய்ந்த ஒரு கோடிக்கணக்கான -

---

"அந்தர அகடுதொட் டணவு நீள்புகழ்
வெந்தெரி பசும்பொனின் விழையும் வெல்லொளி
மந்திர வாய்மொழி மறுவில் மாதவர்"- சிந்தாமணி 1239

...." மாசற இமைக்கும் உருவினர்" முநிவர், திருமுரு"
சடை ஒளி பொற்புரிபோல் ஒளிர்தர நீண்ட செங்குஞ்சிச்
சடைகொளு முடியர் தத்துவ ஞானத் தன்மையர்"

- சிவ ரகசியம் -நைமிசா 6

சடைமாமுடி முநிவோர்சர ணெனவேதியர் மறையோதுக
*சதிநாடக மருள் வேணிய னருள்பாலா;
†விதியானவ னிளையாளென துளமேவிய வளிநாயகி
வெகுமாலுற தனமேலணை முருகோனே!
‡ வெளியாசையொ - டடைXபூவணர் மருகாமணி
Oமுதிராடக
வெயில்வீசிய அழகாதமிழ் பெருமாளே (195)

## 1186. பாதுகையைப் பற்ற

தானதனத் தத்த தத்த தத்தன
தானதனத் தத்த தத்த தத்தன
தானதனத் தத்த தத்த தத்தன தனதான

மாடமதிட் சுற்று மொக்க வைத்திட
வீடுகனக் கத்த னத்தி லச்சுறு
மாலிபமொத் துப்ர புத்த னத்தினி லடைவாக-
மாதர்பெருக் கத்த ருக்க மற்றவர்
சூழவிருக் கத்த ரிக்க இப்படி
வாழ்கையில்மத் தப்ர மத்த சித்திகொள்
கடைநாளிற்;
பாடையினிற் கட்டி விட்டு நட்டவர்
கூடஅரற் றிப்பு டைத்து றப்புள
பாலையெடுத் துத்த ழற்கி ரைப்பட விடலாய-

---

*சதி நாடகம்:-
"கூடிய இலயம் சதி பிழையாமைக்
கொடியிடை உமையவள் காண ஆடிய அழகா!" ... சுந்தரர்-7-69-2
† விதி - பிரமன் - திருமால் குமாரன்; வள்ளிநாயகி திருமாலின் புத்திரி; "திருமால் அளித்தருளும் ஒரு ஞானபத்தினி" - திருப்புகழ் 1218; அதனால் வள்ளி - பிரமனது தங்கை.
‡ வெளி - தூய்மை எனவும் பொருள்படும் "உளம் வெளி செய்திடும் -சேதுபு. அகலத்தாமா 76"
X பூ வணர் = பூ வண்ணராகிய விஷ்ணு.
பூ - காயாம்பூ - நீலநிறப்பூ "பூவை விரிமலர் புரையு மேனியை"; 'கார், மலர்ப்பூவை, கடலை, இருள், மணி. அவை யைந்தும் உறழு மணிகிளர் மேனியை" - பரிபாடல் 1.13
"காய மலர் நிறவா! கருமுகில் போலுருவா! - பெரியாழ் -1-5-6
O முருகர் - பொன்னொளியினர் -"மாழைபொருமேனி"- திருப்புகழ் -161

சடை தாங்கிய அழகிய முடிகளை உடைய முநிவர்கள் சரணம் என்று வணங்க, மறையவர்கள் வேதங்களை ஓத, (சதி நாடகம்) தாள ஒத்துடன் கூடிய நடனத்தை அருளிய (வேணியன்) சடைதாங்கும் சிவபிரான் அருளிய குழந்தையே!

(விதியானவன்) உயிர்களுக்கு ஆயுளை விதிக்கும் பிரமனது (இளையாள்) தங்கை, என்னுடைய உள்ளத்துள் வீற்றிருக்கும் வள்ளிநாயகி மிக்க ஆசை அடையும்படி அவளது கொங்கைமேல் அணையும் முருகனே!

வெளி, ஆசையோடு - ஆகாயம், திசை - இவைகளில் எல்லாம் (அடை) சேர்ந்துள்ள - நிறைந்துள்ள, (பூவணர்) காயாம்பூ வண்ணராம் திருமாலின் மருகனே! அல்லது, வெளி ஆசையோடு - பகிரங்கமான, அல்லது ஞானாகாசத்தின்மீது கொண்ட, ஆசையுடனே உன்னிடம் வரும் பூவணரின் மருகா! (மணி) ரத்னம், (முதிர்) செம்மை முதிர்ந்த (ஆடகம்) பொன் இவை இரண்டின் (வெயில்) ஒளி கலந்து (வீசும்) வீசுகின்ற அழகனே! தமிழ்ப் பெருமாளே!

(வெண்மதி போலவே வருவாயே)

## 1186.

(மாடம் மதிள் சுற்றும் ஒக்க வைத்திட) - வீட்டைச் சுற்றிலும் மதில் ஒருசேர வைத்துக்கட்டப்பட்டிருக்க, அந்தவீடு (கனக்க) நிறையும்படி (தனத்தில்) பொருள் சேகரித்து வைத்து அதில் - அது காரணமாக அது கொள்ளை போகாதிருக்க வேண்டுமே என்று (அச்சுறும்) அச்சம் கொள்ளும் - பயத்துடன் காவல் செலுத்துபவனாய், (மால் இபம் ஒத்து-) மயக்கம் கொண்ட யானை போன்று, பிரபுத்தனத்தில் - அதிகாரநிலையில் (அடைவாக) தகுதியுடனே இருந்து -

பெண்கள் கூட்டம் பெருத்திருக்க, (தருக்கம் அற்றவர்) தன்னோடு எதிர்த்துத் தருக்கம் பேசாதவர்கள் சூழ்ந்திருந்து தரிக்க ஆதரிக்க (தன் இஷ்டப்படி ஒத்து நடக்க), இவ்வண்ணமாக வாழ்நாள் செலுத்தும் போது, (மத்தப் பரமத்தச் சித்தி கொள்) பெருமயக்கம் அல்லது பெருந் துக்கம் என்கின்ற சித்தி - இறப்பு என்கின்ற முடிவு வந்து சேரும் இறுதி நாளில் -

பாடையிற் கட்டி விட்டு, நண்பரானவர்கள் கூட அழுது அடித்துக் கொண்டு அல்லது ஆரவாரித்து - உறுப்புள பாவை - அவயவங்களோடு கூடிய பிண்டமாம் உருவத்தைப் - பிணத்தை எடுத்து (தழற்கு) நெருப்புக்கு இரையாகும்படி விட்டு விடுவதான -

பாடுதொலைத் துக்க ழிக்க அக்ருபை
தேடுமெனைத் தற்பு ரக்க வுற்றிரு
பாதுகையைப் பற்றி நிற்க வைத்தெனை யருளாதோ;
*ஆடகவெற் பைப்பெ ருத்த மத்தென
நாகவடத் தைப்பி ணித்து ரத்தம
ரார்கள்பிடித் துத்தி ரித்தி டப்புகை யனலாக
ஆழிகொதித் துக்க தற்றி விட்டிமை
யோர்களொளிக் கக்க ளித்த உக்கிர
ஆலவிடத் தைத்த ரித்த அற்புதர் குமரேசா,
வேடர்சிறுக் கிக்கி லச்சை யற்றெழு
பாரும்வெறுத் துச்சி ரிப்ப நட்பொடு
† வேளையெனப் புக்கு நிற்கும் வித்தக இளையோனே
வேகமிகுத் துக்க திக்கும் விக்ரம
சூரர்சிரத் தைத்து ணித்த டக்குதல்
வீரமெனத் தத்து வத்து மெச்சிய பெருமாளே (196)

## 1187. நாமவிசேடம்

தாந்தான தந்தன தந்தன
தாந்தான தந்தன தந்தன
தாந்தான தந்தன தந்தன தனதான

‡ மாண்டாரெ லும்பணி யுஞ் X சடை
யாண்டாரி றைஞ்ச மொழிந்ததை
வான்பூத லம்பவ னங்கனல் புனலான-
வான்பூத முங்கர ணங்களு
O நான் போயொ டுங்கஅ டங்கலு
மாய்ந்தால்வி ளங்கும தொன்றினை யருளாயேல்,

---

* கடல் கடைந்தது - நஞ்சு உண்டது - பாடல் 509-பக்கம் 162, 286 -பக்கம் 211 குறிப்பு

† வேளை எனநின்றது - பாடல் 1179. அடி 8 பார்க்க.

‡ "மாண்டார்தம் எலும்பணிவர்" சம்பந்தர் 3-65-9.

X " சடை அண்ணல்"- சம்பந்தர் 1-31-10.

O " நான்போய் ஒடுங்க"- அடங்கலும் மாய்ந்தால் விளங்கும் ஒன்று"

"யான் செய்தேன் .. என்னது யான் என்னும் இக்கோணை
ஞான எரியால் வெதுப்பி நிமிர்த்துத் தான், செவ்வே

வேதனைத் தொழிலை ஒழித்து விடுவதான, அந்த அருட் பேற்றினைத் (தேடும்) தேடுகின்ற என்னை (தற் புரக்க) நான் காத்துக் கொள்ளும் வகைக்கு வைத்து, உனது இரண்டு பாதரட்சைகளைச் சிக்கெனப் பற்றி நிற்கும் படியாக வைத்து, எனக்கு அருள் பாலிக்கப் படாதோ.

(ஆடக வெற்பை) பொன் மலையாகிய மேருவை பெரிய மத்தாக அமைத்து, (ஆதிசேடனாகிய) பாம்பைக் (கயிறாகப்) (பிணித்து) கட்டி, (உரத்து) பலமுட ன் (அமரரார்கள்) தேவர்கள், பிடித்துத், (திரித்திட) கடையப், புகையும் நெருப்பாகக் -

கடல் கொதிப்புற்றுக் (கதற்றி விட்டு) யாரையும் கதற வைத்து, (இமையோர்கள் ஒளிக்க) தேவர்கள் ஓடி ஒளிக்கக், (களித்த) மதர்ப்புடன் எழுந்ததான (செருக்குடன்) தோன்றின தான - கொடுமை கொண்ட - ஆலகாலவிஷத்தை (கண்டத்தில்) தரித்த அற்புதனாம் சிவனது குமரமூர்த்தியே!

(வேடர்சிறுக்கி) வேடர் பெண் வள்ளியினிடத்தே (இலச்சை அற்று) நாணம் (கூச்சம்) இல்லாது, ஏழுலகும் அருவருப்புடன் பரிகசித்து நகைக்க, நட்புப் பராட்டி, இது நல்ல சமயம் என்று சென்று (அவளிடம்) நின்ற பேரறிவு கொண்ட இளையோனே!

(வேகம் மிகுத்துக் கதிக்கும்) கோபம் மிக உண்டாகும் பராக்ரமம்கொண்ட சூரர்களுடையதலையை, (துணித்துடக்குதல்) அறுத்து அவர்களை அடக்குதல் வீரமாகும் என்னும் (தத்துவத்து)உண்மை கண்டு, அவ்வுண்மையைக் கொண்டாடின அனுட்டித்த பெருமாளே! (பாதுகையை பற்றி நிற்க அருளாதோ)

## 1187.

இறந்துபட்ட திருமால், பிரமன் ஆதியோருடைய எலும்பை அணிபவரும், சடாபாரம் கொண்ட தலைவரும் ஆய சிவபிரான் (இறைஞ்ச) உன்னை வணங்க, (மொழிந்ததை) நீ உபதேசித்த பொருளை, விண், பூமி, காற்று, தீ, நீர் ஆகிய

பெரிய ஐம்பூதங்களும், மனம், புத்தி, அகங்காரம், சித்தம் எனப்படும் கரணங்கள் நான்கும், 'நான்' என்னும் அகங்காரமும் நீங்கி ஒடுங்க - இங்ஙனம் எல்லாம் இறந்து, பட்டால் (அப்போது) விளங்குவதான ஒப்பற்ற ஒரு பொருளை -(அருளாயேல்) எனக்கு அருள உனக்கு இஷ்டமில்லாவிட்டால் - (அதற்குப் பதிலாக)

---

நின்றிட அத் தத்துவன் தான் நேரே தனை யளித்து முன்

நிற்கும் வினை ஒளித்திட்டோடும்"- சித்தியார் 305. 'ஒடுங்கிடின் அன்றி உண்மையை உணரொணாதே" சிவப்பிரகாசம் 81. "ஒட்டற்று நின்ற உணர்வு பதிமுட்டித் தேட்டற்றிடம் சிவம் உந்தீபற! - உந்தியார் - 13.

* வேண்டாமை யொன்றைய டைந்துள
மீண்டாறி நின்சர ணங்களில்
வீழ்ந்தாவல் கொண்டுரு கன்பினை யுடையேனாய்-
† வேந்தாக டம்புபு னைந்தருள்
சேந்தாச ரண்சர ணென்பது
‡ வீண்போம தொன்றல என்பதை Xயுணராதோ

---

*வேண்டாமை ஒன்றை அடைந்து:
'வேண்டாமை யன்ன விழுச் செல்வம் ஈண்டில்லை, யாண்டும் அஃதொப்ப தில்'; 'தூஉய்மை என்பது அவாவின்மை';
"அவா இல்லார்க்கு இல்லாகும் துன்பம்"- திருக்குறள் 363, 364, 368.
வேண்டாமையின் சிறப்பு - "வேண்டாமை" பிறப்பை ஒழிக்கும் "பிறவாமை வேண்டாமை வேண்ட வரும்" திருக்குறள் 862

வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை என்றமையால்
வேண்டின் அஃ தொன் றுமே வேண்டுவது - வேண்டினது
வேண்டாமை வேண்டவரும் என்றமையால் வேண்டிடுக
வேண்டாமை வேண்டுமவன் பால்

- திருக்களிற்றுப்படியார் -40

† "வேந்தா - சேந்தா-"
" வேலுலாந் தடக்கை வேந்தன் என் சேந்தன் என்னும் இம் மெல்லியல் இவளே" - திருவிசைப்பா-7-1

‡ நாமபஜனை வீண்போம தொன்றல:
"கடவுள் நாமமே கற்றல் நற்றவமே"; "நாமமே பரவுவார் வினைதீர்க்க நின்றார்"; "பிரானே என்பார்க்கு நண்ணா வினைகள் நாடொறும் இன்பம் நணுகும்மே" சம்பந்தர் 3-110-10; 2-7-6; 1-102-4.
"முடியாப் பிறவிக் கடலிற்புகார்.. திருநாமம் புகல்பவரே" கந்தரலங் 33 " கந்தன் என்னீர் உங்கள் தீதறவே" கந்தரந். 30; "மலைகிழவோன் என நூறாயிர பேதஞ் சாதம் ஒழிந்தவா தான்"திருப்புகழ் 668.

X இந்த 1187-ஆம் பாடலில் முதல் நான்கடியில் சமத்காரமான பேச்சுத் திறமையான - வேண்டு கோள் ஒன்றை விண்ணப்பிக்கின்றார் அருணகிரியார்: "முருகா! உன் தந்தை சிவபிரான் உன்னை வணங்கிநிற்க நீ அவருக்கு உபதேசித்த அந்த ரகசியப்பொருளை எனக்கு உபதேசிக்க உனக்கு இஷ்டம் இல்லையானால் - உன்னை நான் பலவந்தப் படுத்த இல்லை; அதற்குப் பதிலாக வேறொரு சிறிய வேண்டுகோள் ஒன்றைச் செய்கின்றேன் - அதுதான் "வேண்டாமை" - (அவா இன்மை-) என்பதை

'வேண்டாமை' எதுவும் வேண்டாம் என்னும் ஆசை நீக்கமான மனநிலை ஒன்றை நான் அடைந்து, உள்ளம் பல இடத்துஞ் செல்லாது என்னுள்ளே மீண்டு - ஒருவழியாய்த் திரும்பி - (ஆறி) அதன் கொழுப்பு - வேகம் அடங்கி, உனது திருவடிகளில் விழுந்து ஆசையுடனே உள்ளம் உருகும்படியான அன்புநிலையை நான் உடையவனாய்

'வேந்தா! கடம்பமாலை அணிந்தருளும் சேந்தா! உன் திருவடியே சரணம் சரணம் என்னும் அந்த வழிபாடு வீணாகப் போகும்படியான ஒரு தொண்டு அன்று - பயன்தரக்கூடிய பணியேயாம் என்பதை என் உள்ளம் உணர்ந்து பயன் பெறாதோ!

---

நான் அடைய வேண்டும்!" வேந்தா சேந்தா" எனவரும் உன் திரு நாமங்களை ஓதுதல் வீண் போகாது என்பதை நான் உணர வேண்டும்" இவ்வளவே என்கின்றனர் பார்ப்பதற்கு எளிது போல் தோன்றுகின்ற "வேண்டாமை" அடைதல் அவ்வளவு எளிதா! இறைவனை ஏமாற்றுவது போல உரைப்பதொரு வேண்டு கோள் இது:

இவ்வாறு சில பெரியோர்கள் இறைவனை ஏமாற்று முறையிற் கேட்பதுண்டு; இரண்டொரு உதாரணம் கூறலாம்:

(1)ஒளவையார்.-

"கணபதி மூர்த்தியே! நான் உனக்குப் பால், தேன், வெல்லம், பருப்பு - என்னும் நான்கு பொருளைத் தருகின்றேன் - நீ எனக்குத் "தமிழ்" மூன்று (இயல், இசை, நாடகம்) கொடு, போதும், என்கின்றார் -

"பாலும் தெளி தேனும் பாகும் பருப்புமிவை
நாலுங் கலந்துனக்கு நான் தருவேன் - கோலஞ் செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீ எனக்குச்
சங்கத் தமிழ் மூன்றும் தா".

(2) மாணிக்கவாசகர்:-

"சிவனே! நீ உன்னைக் கொடுத்து என்னை வாங்கினாய் - நம் இருவரில் யாருடைய சாமர்த்தியம் பெரிது என வினவுகின்றனர் -

"தந்த துன்தன்னைக் கொண்ட தென் தன்னைச் சங்கரா ஆர் கொலோ சதுரர்? அந்த மொன்றில்லா ஆனந்தம் பெற்றேன் யாது நீ பெற்ற தொன்றென்பால்" - திருவாசகம் 22-10

(3) அம்பலவாண தேசிகர் கலம்பகத்தில் -

"உடல் முதலா மருவிய மூன்றுங் கொண் டொன்றீவதற்கு வருத்தம் என்னே" என்கின்றார் - மனம், வாக்கு,

(தொடர்ச்சி 460-ம் பக்கம் பார்க்க)

ஆண்டார்த லங்கள ளந்திட
நீண்டார்மு குந்தர்த டந்தனில்
ஆண்டாவி துஞ்சிய தென்றுமு தலைவாயுந்-

---

(459-ஆம் பக்கத் தொடர்ச்சி)

காயம் மூன்றையும் சமர்ப்பிக்கின்றேன்; நீ அவைகளுக்குப் பதிலாக - முத்தி - என்கின்ற 'ஒன்றைத்' தா - என்றபடி.

(4) கவிராஜ பண்டாரத்தையா - என்னும் புலவர் -

"அருவித் திரிகூடத்தையா உனை நான் மருவிப் பிரிந்திருக்க மாட்டேன் ஒரு விமலைக், காதியிலே பாதி தந்தாய் அத்தனை வேண்டா மெனக்குப், பாதியிலே பாதி தந்து பார்"- என்கின்றார் - விமலைக்கு - பார்வதிக்கு உன் உடலிற் பாதி பாகம் (அர்த்த நாரீசுரராய்) தந்தாய் - எனக்குப் பாதி வேண்டாம்; பாதியிற் பாதி அதாவது "கால்" தந்தருள் என்றபடி - கால் - திருவடி - உன் திருவடியைத் தா என்றவாறு.

இத்தகைய கருத்தினது -

"அற்புதஞ் செறிந்த சித்திரம் நிறைந்த அருமை சேர் பாடல்கள் சொல்லும், நற்பதம் உனக்கிங் கில்லை போ என்று நாத நீ கூறுவையாகில், சொற்பதம் வேண்டாம் "சொல்லறச் சும்மா சுக முற இருந்தி" யென்றேனும், அற்பனுக் கொருசொல் வழங்குதி கருணை அண்ணலே தணிகை நாயகனே" என்னும் பாடலும்: (தணிகை நாயகன் மாலை 84)

இனி இந்த 1187-ஆம் பாட்டின் முதல் இரண்டடியில் கேட்ட வரம் -சிவபிரானுக்கு உபதேசித்த ரகசியம் - அருணகிரியார்க்குக் கிடைத்தது என்பதற்கும் சான்று உளது:

"நாதா குமரா நம என்றரனார் ஓதாய் என ஓதியது எப்பொருள் தான்" (கந்தர் அநு. 36), "ஈசித்த பெருமாளும் "நிருப! குருபர! குமர" என்றென்று பத்திகொடு பரவ, அருளிய மவுன மந்த்ரந்தனை... விளங்கும் படிக்கு இனிது உணர்த்தி யருள்வாயே" என்று நயமாகக் கேட்டும் (திருப்புகழ் 1127), "சடை யாண்டார் இறைஞ்ச மொழிந்ததை அருளாயேல் ..வேண்டாமையை" யேனும் கொடு" என்று ஏமாற்றும் வகையிற் கேட்டும் (திருப்புகழ் 1187), சம்பர்க்கு உபதேசித்ததைச் சிறியேனுக்கு உபதேசித்தால் உன்குருத்வம் குறையுமோ என்று தூஷித்துரைத்தும்

உலகெல்லாவற்றையும் ஆள்பவர், (தலங்கள்) மூவுலகையும் தமது திருவடியால் *அளக்க வேண்டி நீண்ட திருவுருவை எடுத்தவர், முகுந்தர், (தடம் தனில்) மடுவினிலே, ஆண்டு - அவ்விடத்தில், (ஆவி துஞ்சியதென்று) உயிரே போய்விட்டது என்று, முதலைவாயில் அகப்பட்டு

---

(திருப்புகழ் 723), முருக வேளிடம் ரகசியப் பொருளை அறிந்து கொண்டார் அருணகிரியார்; பின்பு வள்ளி மலைக்குச் சென்றதும் அருணகிரியாருக்கு இந்த ரகசியம் வெளிப்படையாகத் தானே விளங்கிற்றாம். இதனைக் "கின்னங் குறித்தடியேன் செவி நீ யன்று கேட்கச் சொன்ன, குன்னம் குறிச்சி வெளியாக்கி விட்டது.... குறிஞ்சிக் கிழவர் சிறுமிதனை முன்னங் குறிச்சியிற் சென்று கல்யாணம் முயன்றவனே" என்ற பாடலில் (கந்தரலங் 24) தெரிவிக்கின்றார்; வள்ளி என்பவள் யான் என்பது அற்றுச் செய்த தவத்தின் பயனாக, முருகன் தானே ஓடிச் சென்று அவளை மணந்தனன். இதனால் "யான் கொட்கும் மறு நீங்கிப் பக்தி செய்வோர்க்கு ஏவல் செயும் பணியாளன் ஈசன் என்பது விளக்கமாகின்றது" இவ்வொழுக்க நிலையையே "வள்ளிச் சன் மார்க்கம்" என அருணகிரியார் கூறுகின்றார். இந்த வள்ளிச் சன் மார்க்க நிலையைத்தான் முருகன் சிவபிராற்கு உபதேசித்தனர் என்பது - "வள்ளிச்சன் மார்க்கம் விள்ளைக்கு நோக்க வல்லைக்குள் ஏற்றும் இளையோனே" (திருப்புகழ் 317) என்னும் பாடலால் விளக்கமாகின்றது; வள்ளிச் சன்மார்க்க விளக்கத்தை "அருணகிரி நாதர் வரலாறும் நூலாராய்ச்சியும் என்னும் நூலில் பக்கம் 299-302 பார்க்க.

---

* தலங்கள் அளந்திட நீண்டார் -

மாவலியிடம் சென்று மூவடி மண் கேட்டு நீண்டது. பாடல் 268-பக்கம் 166; பாடல் 458 -பக்கம் 24; பாடல் 668 பக்கம் 37; கீழ்க்குறிப்புக்கள்:

நாங்கோர் *சிலம்பு புலம்பிட
ஞான்றூது துங்கச லஞ்சலம்
ஆம் † பூமு ழுங்கிய டங்கு‡ ம ளவில்நேசம்;
பூண்டாழி கொண்டுவ னங்களி
லேய்ந்தாள வென்று வெறுந்தனி
போந்தோல மென்று தவும்புயல் மருகோனே-
பூம்பாளை யெங்கும ணங்கமழ்
தேங்காவில் நின்றதொர் குன்றவர்
பூந்தோகை கொங்கைவி ரும்பிய
X பெருமாளே (197)

**1188.** *(அகப் பொருள் - நற்றாயிரங்கல்)* **வரவேணும்**

தானதன தான தத்த தானதன தான தத்த
தானதன தான தத்த தனதான

மாறுபொரு கால னொக்கும் வானிலெழு மாம
திக்கும்
வாரிதுயி லாவ தற்கும் வசையேசொல்-
மாயமட வார்த மக்கும் ஆயர்குழ லூதி சைக்கும்
வாயுமின வாடை யிற்கு மதனாலேO;
வேறுபடு பாய லுக்கு மேயெனது பேதை யெய்த்து
வேறுபடு மேனி சற்று மழியாதே
வேடர்குல மாதி னுக்கு வேடைகெட வேந டித்து
மேவுமிரு பாத முற்று **வரவேணும்;**

---

* சிலம்பு = மலையை யொத்த யானை. கஜேந்திரனுக்கு அருளிய வரலாறு - பாடல் 939-பக்கம் 731-732 குறிப்பு.

† பூ முழுங்கி = பூவை யொத்த வாயினிடத்து வைத்து முழுக்கி.

‡ அளவில் - இடை நிலைத்தீவகம்.

X இந்த 1187 - ஆம் பாடல் மனப்பாடத்துக்கும், பிரசங்கத்திற்கும் (சொற்பொழிவுக்கும்) ஏற்ற பாடலாகும்.

O காமங் கொண்டார்க்கு வேதனை தருவன - சந்திரன், கடலொலி, வசைபேசு மாதர், குழலோசை, தென்றல், மன்மதன்

பாடல் 145-பக்கம் 336; பாடல் 218 பக்கம் 54 கீழ்க்குறிப்புக்களைப் பார்க்க.

அங்கே ஒப்பற்ற ஒரு (சிலம்பு) மலை போன்ற கஜேந்திரனாம் ஆனை புலம்பிட கூச்சலிட, (ஞான்று) அப்பொழுது, ஊதின பரிசுத்தமான பாஞ்சசன்னியம் என்னும் சங்கம் (ஆம் பூ) பூ ஆம். மலரை ஒத்தவாயினிடத்தே (முழங்கி) முழக்கம் செய்யப்பட்டு- அந்த சங்க ஓசை அடங்கும் அளவில் - அடங்குவதற்குள் - அவ்வளவு விரைவில், அளவு இல் - எல்லையற்ற அன்பு -

பூண்டு, ஆழி (ஆழிகொண்டு) சக்கரத்தை ஏந்திவந்து- (வனங்களில் ஏய்ந்து ஆள என்று) அந்த மடு இருந்த வனத்தை அடைந்து அந்த யானையை ஆண்டருள்வதற்காக (காப்பாற்று வதற்காக), (வெறும் தனி போந்து -) தாம் வேறு ஆயுத முதலிய இல்லாமல், (லக்ஷ்மி தேவியும் கூட வராமல்) தாம் தனியாகவே வந்து, (ஓலம் என்று) அபயம் தந்தோம் என்று உதவின மேகவர்ணராம் திருமாலின் மருகனே!

அழகிய (பாளை) தென்னம் பாளை எங்கும் நறுமணம் வீசுகின்ற (தேங் காவில்) இனிய பூஞ்சோலையில் இருந்த ஒப்பற்ற (குன்றவர் பூந் தோகை) மலை வேடர்களின் அழகிய மயிலனைய வள்ளியின் கொங்கையை விரும்பின பெருமாளே?

(வேந்தா - சேந்தா சரண் சரண் என்பது வீண்போமதொன்றல)

## 1188.

பகைமையுடன் சண்டை செய்யும் யமனை நிகர்ப்பதும் ஆகாயத்தில் உதித்து எழுகின்றதுமான அழகிய சந்திரனுக்கும், (வாரி) கடல் (துயிலா அதற்கும்) துயில் - தூக்கம் கொள்ளாது ஒலித்துக்கொண்டே இருக்கும் அந்த நிலைக்கும், வசை மொழிகளையே பேசிக்கொண்டிருக்கும்

(மாய மடவார் தமக்கும்) வஞ்சனை கொண்டமாதர்களுக்கும், இடையர் குழலூதுகின்ற இசைக்கும், (வாயும்) வாய்ந்துள்ள (நிகழ்கின்ற) இள வாடையிற்கும் - இளம் காற்றுக்கும் தென்றலுக்கும் - (மதனாலே) மன்மதனால் (காமத்தால்) அல்லது (அதனாலே)

(வேறு படு பாயலுக்குமே) - பாயல் வேறுபடுவதற்கும் - படுக்கை வேறுபடுவதற்கும் - தனித்திருப்பதற்கும், இவைகள் காரணமாக என்னுடைய பேதைப் பெண் (எய்த்து) இளைத்துப் போய் நிறம் மாறிப் போன (மேனி) உடம்பு கொஞ்சமும் கூடாதவாறு

வேடர்களின் சிறந்த மகள் வள்ளியின் பொருட்டுக்கொண்ட (வேடை) காமநோய் - ஆசை - தீரும்படி (நடித்து) திருவிளை-யாடல்களைச் செய்து விளங்கின (உன்) இரண்டு திருவடிகளுடன் பொருந்தி இப்பேதையிடமும் நீ வரவேணும்;

ஆறுமிடை வாள ரக்கர் நீறுபட வேலெ டுத்த
ஆறுமுக னேகு நந்தி மணவாளா-
*ஆழியுல கேழ டக்கி †வாசுகியை வாய டக்கி
ஆலுமயி லேறி நிறகு மிளையோனே;
சீறுபட ‡மேரு வெற்பை நீறுபட வேசி னத்த
சேவலவ நீப மொய்த்த திரள்தோளா-
சேருமட லால்மி குத்த சூரர்கொடு போய டைத்த
Xதேவர்சிறை மீள விட்ட பெருமாளே (198)

## 1189. அருள் மறவேன்

தன்னதன தத்த தத்த தன்னதன தத்த தத்த
தன்னதன தத்த தத்த தனதான

மின்னினில் நடுக்க முற்ற நுண்ணிய நுசுப்பில் முத்த
வெண்ணகையில் வட்ட மொத்து அழகார-
விம்மியிள கிக்க தித்த கொம்மைமுலை யிற்கு லித்த
வின்னுதலி லிட்ட பொட்டில் விலைமாதர்;
கன்னல்மொழி யிற்சி றக்கு மன்னநடை யிற்க றுத்த
கண்ணினிணை யிற்சி வத்த கனிவாயிற்-
கொண்ணழிவு வைத்த புத்தி ஷண்முகநி
னைக்க வைத்த
கன்மவச மெப்ப டிக்கு மறவேனே;

---

* கடல்ஏழு - உவர் நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன். - உலகுஏழு:- பாடல் 1204 குறிப்புப் பார்க்க.

† "வாசுகி எடுத்துதறும் வாசி"- வேளைக்காரன் வகுப்பு;

‡ மேருவைக் கோபித்தது-(மேரு போன்ற பொன்மலை - கிரவுஞ்சம்) "வேலுக் கனிகலம் வேலையுஞ் சூரனும் மேருவுமே"- - கந்தரலங் -62.

X தேவர் சிறை மீட்டதை - நினைத்து ஒருபுலவர் எந்த எந்த சிறையை முருகவேள் மீட்டனர் என்பதைக் கணக்கிடுகின்றார்.

(1) "விரிஞ்சன் பெருஞ்சிறை விடுத்த பெருமாள்,

(2) கருடன் மேல்வரும் பெரிய பெருமாள் வேண்டவே தேவர் சிறை மீட்ட பெருமாள்; (3) மதுரை மேவு சங்கப் பலகைவாழ் கரைஞ்ச அன்பான நக்கீரர் சிறை மீட்டவர்சொல் கவி மாலை கொண்ட பெருமாள்; (4) காயப் பெருஞ்சிறை ஒழிக்கவே என்னையும் காசிதனில் வைத்த பெருமாள்"- க்ஷேத்திர பிள்ளை.அம்புலி -3.

(தொடர். பக்கம் 465)

(ஆறு) காமம், குரோதம், உலோபம், மோகம்; மதம் மாற்சர்யம் எனப்படும் ஆறு வகைக் குணங்களும் நிறைந்தவர்களும், வாட்படை ஏந்தியவர்களுமான அரக்கர்கள் பொடிபட்டழிய வேலாயுதத்தைச் செலுத்தின ஆறுமுகப்பிரானே! குறத்தி வள்ளியின் மணவாளனே!

கடலால் சூழப்பட்ட உலகு ஏழையும் அடக்கி (அல்லது) - கடல் ஏழு, உலகு ஏழு, இவைகளை அடக்கி, வாசுகிப் பாம்பின் வாயை அடக்கிக்கூச்சலிடும் மயிலிலேறி விளங்கும் இளையவனே!

(சீறுபட) கோபம் பிறந்து மேருமலையைக் (கிரவுஞ்சத்தைப் பொடிபடும்படிக் கோபித்தவனே! சேவற் கொடியனே! கடப்பமாலை நெருங்கும் திரண்டதோளனே -

(சேரும் - அடலால்) கூடியுள்ள வலிமையால் (வெற்றி) மிக்குள்ள சூரர்கள் கொண்டு போயடைத்த தேவர்களின் சிறையை மீளவிட்ட (மீள்வித்த) நீக்கின பெருமாளே.

(வரவேணும்)

## 1189.

மின்னலைப் போல (நடுக்கம் உற்ற) நுடங்குகின்ற நுண்மை நுட்பம் வாய்ந்த (நுசுப்பில்) இடையிலும், முத்துப் போன்ற வெண்மை நிறங் கொண்ட (நகையில்)பற்களிலும், வட்ட வடிவு கொண்டு அழகு நிரம்பி,

(விம்மி) பூரித்து, இளகி (நெகிழ்ந்து) (சுதித்த) எழுந்து விளங்குகின்ற, (கொம்மை திரண்ட கொங்கையிலும், (குனித்த) வளைவு கொண்ட (வில்) வில்லைப்போன்ற (நுதலில்) (புருவத்திலும்), அணிந்துள்ள பொட்டிலும், விலைமாதர்களுடைய

கரும்புப் போல இனிக்கும் மொழியிலும், சிறப்புற்ற அன்னத்தின் நடைபோன்ற நடையிலும், கறுப்புநிறம் கொண்ட கண்ணின் இணையில் - இரு கண்களிலும், சிறந்த கொவ்வைக் கனி போன்ற வாயிலும்,

(கன்னமழிவு) தனித்தனி ஆய்ந்து வியக்கும் ஆராய்ச்சியிற் கிடந்த என் புத்தி, அல்லது நோக்கம் செலுத்தி அழிந்த என் புத்தி மாறி (உனது) ஆறு திருமுகங்களை நினைக்கும் படியாக ஏற்பட்ட எனது (கன்ம வசம்) நல்வினைப்பயனை புண்ணியப் பயனை) (நான் எப்படி மறக்கக்கூடும்)! எந்த காரணத்தாலும் மறக்கமாட்டேன் - என்றபடி.

---

○ இந்த நாலாவது அடி அருணகிரியாருடைய இளமையின் கீழ் நிலையையும் பின்னர் - புண்ணியப் பேறுகூடின அற்புத வரலாற்றையும் தெளிவு பெற விளக்கும் பகுதியாகும். இத்தகைய அருட்பேறு கச்சியப்ப முநிவர்க்கும் கிடைத்தது. (பாடல் -1207 குறிப்பு)

அன்னநடை யைப்ப ழித்த மஞ்ஞைகுமலை யிற்குறத்தி
யம்மையட விப்பு னத்தில் விளையாடும்-
*அன்னையிரு கப்பி ணித்த பன்னிருதி ருப்பு யத்தில்
அன்னியஅ ரக்க ரத்த னையுமாளப்;
பொன்னுலகி னைப்பு ரக்கு மன்ன † நல்வ்ர
தத்தை விட்ட
புன்மையர்பு ரத்ர யத்தர் பொடியாகப்-
பொன்மலை வளைத்தெ ரித்த கண்ணுத விடத்தி லுற்ற
‡ புண்ணிய வொருத்தி பெற்ற
பெருமாளே (199)

## 1190. தத்துவ ஞானம் பெற

தத்தன தான தனத்தன, தத்தன தான தனத்தன
தத்தன தான தனத்தன தனதான

முத்தமு லாவு தனத்தியர் சித்தச னாலை செலுத்திகள்
முத்தமி டாம னுருக்கிக ளிளைஞோர்பால்-
முட்டவு லாவி மருட்டிகள் நெட்டிலை வேலின் விழிச்சியர்
Xமுப்பது கோடி மனத்திய ரநுராகத்;
தத்தைக ளாசை விதத்தியர் கற்புர தோளின் மினுக்கிகள்
தப்புறு மாறக மெத்திக ளளவேநான்-
தட்டழி யாது திருப்புகழ் கற்கவு மோதவு முத்தமிழ்
தத்துவ ஞான மெனக்கருள் புரிவாயே

---

* "குறவி இச்சையுற நித்தம் இறுகத் தழுவு மார்பா"
- பாடல் 312 - அடி 6.

† "விரதத்தைத் திரிபுரத்தவர் விட்டதும், திரிபுரம் எரித்த வரலாறும் - பாடல் 1021-பக்கம் 68 கீழ்க்குறிப்பு. பாடல் 285 - பக்கம் 206 கீழ்க்குறிப்பு

‡ புண்ணிய ஒருத்தி - பார்வதி முப்பத்திரண்டறம் வளர்த தவளாதலின் 'புண்ணிய ஒருத்தி' என்றார் -

"புண்ணியத் திருக் காமக் கோட்டத்துப் பொலிய முப்பதோ டிரண்டறம் புரக்கும்" பெரிய புரா - திருக்குறிப்பு 71 சிவபிரானைப் "புண்ணியர்" என்றார் சம்பந்தர் 'புண்ணியர் பூதியர்" 1-8-1.

X முப்பது கோடி மனத்தியர்: 'கோடா கோடிய மனதானார்' - பாடல் 1180. அடி 1; பாடல் 237 - அடி 1; பாடல் 583 - அடி 2;

அன்னத்தின் நடையையும் பழிக்கவல்ல (நடையை உடைய) (மஞ்ஞை) மயில் அனையவள், மலையில் வளர்ந்த குறமங்கை, தேவி, காட்டிலும் தினைப்புனத்திலும் விளையாடின

தாய் - ஆகிய வள்ளி - அழுத்தி அணைத்த பன்னிரு திருக்கரங்களால், அயலாராய் மாறுபட்டிருந்த அரக்கர்கள் அனைவர்களும் இறக்கும்படி வைத்துப்

பொன்னுலகைத் (தேவர்கள் உலகைக்) காத்தளித்த (மன்ன) அரசே! நல்ல சிவ விரத அநுட்டானத்திலிருந்ததைக் கைவிட்ட இழி குணத்தோராய்த் திரிபுரங்களில் வாழ்ந்திருந்தவர்களாகிய அசுரர்கள் பொடிபட்டழியப்,

(பொன் மலை) மேருவை வில்லாக வளைத்து எரித்த நெற்றிக் கண்ணராம் சிவபிரானது இடது பாகத்தில் இருக்கும் புண்ணிய தேவியாக ஒருத்தி - பார்வதி - பெற்ற பெருமாளே!

(ஷண்முக நினைக்க வைத்த (தை) மறவேனே)

## 1190.

முத்த மாலை உலவுகின்ற கொங்கைகளை உடையவர்கள், (சித்தசன்) மன்மதனுடைய (ஆணை) கட்டளைகளை (செலுத்திகள்) நடத்துபவர்கள், (முத்தம் இடா) முத்தம் தந்து, (மன்) நன்றாக, உருக்கிகள் - மனத்தை உருக்குபவர்கள், இளையோர்களிடத்தில் -

(முட்ட உலாவி) நன்றாகக் கலந்து நடந்து அவர்களை மயங்கச் செய்பவர்கள், (நெட்டிலை) நீண்ட இலையை ஒத்த வேலை நிகர்க்கும் கண்களை உடையவர்கள், முப்பது கோடிக்கணக்கான (மனத்தியர்) எண்ணங்களை உடையவர்கள், காமப்பற்றை விளைக்கும்

(தத்தைகள்) கிளி போன்றவர்கள், ஆசை விதத்தியர் - ஆசைகளைக் காட்டுபவர்கள், பச்சைக் கற்பூரம் அளாவிய தோள்களோடு மினுக்குபவர்கள், (தப்புறும் ஆறு அகம்) தப்பான வழியிற் செல்லும் மனத்துடன் (எத்திகள்) வஞ்சிப்பவர்கள் (அளவே) இடத்திலே நான்

(தட்டழியாது) நிலை குலையாது - திகைக்காமல், (உனது) திருப்புகழைக் கற்பதற்கும் ஓதுதற்கும் வேண்டிய முத்தமிழ் ஞானத்தை, (தத்துவ ஞானத்தை) உண்மை ஞானத்தை எனக்கு அருள் புரிவாயாக.

*மத்தக யானை யுரித்தவர் பெற்றகு மார† இலட்சுமி
மைத்துன னாகிய விக்ரமன் மருகோனே-
வற்றிட வாரிதி முற்றிய வெற்றிகொள் சூரர் பதைப்புற
வற்புறு வேலைவி டுத்தரு ளிளையோனே;
சித்திர மான குறத்தியை யுற்றொரு போது புனத்திடை
சிக்கென வேதழு விப்புணர் மணவாளா-
செச்சையு லாவு பதத்தின மெய்த்தவர் வாழ்வு பெறத்தரு
சித்தவி சாக வியற்சுரர் பெருமாளே (200)

## 1191. ஆண்டருள

தனன தானன தத்தான தானன
தனன தானன தத்தான தானன
தனன தானன தத்தான தானன தனதான

முருகு லாவிய மைப்பாவு வார்குழல்
முளரி வாய் நெகிழ் வித்தார வேல்விழி
முடுகு வோர்குலை வித்தான கோடெறு முலையாலே-
முறைமை சேர்கெட மைத்தார்வு வார்கடல்
முடுகு வோரென எய்த்தோடி யாகமு
மொழியும் வேறிடு பித்தேறி னாரெனு முயல்வேகொாண்;

---

* யானையை உரித்தது - பாடல் 286 பக்கம் 210 குறிப்பு

மைத்துனன்-கணவன் என்றே பொருள் கொள்ளலாம். "நப்பின்னாய் உன் மைத்துனன் பேர் பாட" என்புழிப்போல - திருப்பாவை 18.

† இலட்சுமி மைத்துனன் ஆகிய விக்ரமன் - இலட்சுமி கணவன் திருமால்; மைத்துனன் - திருமாலின் மூர்த்தி பேதமாகிய உபேந்திரன் எனக்கொள்ளலாம்; உபேந்திரனே நம்பிராஜனான வேடன்: அவன் மகள் வள்ளி; ஆதலினால் 'விக்ரமன்' என்றது நம்பிராஜன் எனக் கொண்டு அவனது மருகனே என்ற படி. ஒருமுறை திருமாலும் உபேந்திரனும், இலக்குமியும் உரையாடிக் கொண்டிருந்தார்கள். அப்போது கண்ணுவ முனிவர் வர, அவரை இவர்கள் உபசரிக்காமற் புறக்கணித்தனர் அதனால், கண்ணுவர் சபித்தனர். அவரது சாபத்தின்படி திருமால் சிவ முநி என்னும் முநிவராய்த் தவம் செய்தனர் உபேந்திரன் வேடராஜன் ஆனான் - இலக்குமி மான் ஆயினள்; சிவ முநிவருக்கும் மானுக்கும் பிறந்தவள் வள்ளி. வள்ளியை வளர்த்தவன் உபேந்திரன் (வேட ராஜன்) மற்றைய வரலாற்றை - பாடல் 382, 435- பக்கம் 464, 590 பார்க்க.

"நெடுமால் அருஞ்சிவ முநிவனாய் உதித்தான்; திருவு மான்

மத்தக யானை - கும்பத் தலத்தை உடைய யானையை உரித்தவராம் சிவபிரான் பெற்ற குமாரனே! இலக்குமிக்கு மைத்துன முறையில் உள்ள பராக்ரம சாலியின் மருகனே!

வற்றிட வாரிதி - வாரிதி வற்றிட - கடல் சுவறவும், நிரம்பின ஜெயத்துடன் விளங்கின சூரர்கள் பதைக்கும்படி. (வற்புறு) - வற்பு உறு - வலிமை உடைய வேலாயுதத்தைச் செலுத்தி அருளின இளையோனே!

அழகிய குறப்பெண் வள்ளியை அடைந்து, ஒரு சமயத்தில், தினைப்புனத்தில் அவளைச் சிக்கெனத் தழுவிச் சேர்ந்த மணவாளனே!

வெட்சி மலர் சூழும் பாதத்தினனே! அல்லது பதத்தின - திருவடியிற் சார்கின்ற - உண்மைத் தவசிகள் வாழ்வு பெறத் தரு பெருமாளே) அழியாத இன்பவாழ்வைப் பெறுமாறு உதவுகின்ற பெருமாளே! சித்த மூர்த்தியே! விசாகப் பெருமாளே! தகுதியுள்ள தேவர்களின் பெருமாளே!

(தத்துவ ஞானம் எனக்கருள் புரிவாயே)

## 1191.

வாசனை வீசி உலவும் மை பரந்த நீண்ட கூந்தலின் மீதும், (முளரிவாய்) தாமரை யன்ன வாயின்மீதும், அசைகின்ற விரிந்த வேல் அனைய கண்களின் மீதும் முடுகுவோர்) விரைந்து செல்லும் உள்ளத்தினர்களின் (மனத்தைக்) (குலை) குலைப்பதற்கு வித்தான- அடிப்படைக் காரணமாக விளங்கும் (கோடெனும்) மலைபோன்ற கொங்கையாலே.

(முறைமை சேர்கெட) முறைமை சேர்தல் கெட - ஒழுக்கம் கூடுதல் சிதறுண்டு கெட - ஒழுக்கம் தவற, (மைத்து ஆர்வு) கறுத்து, (நீர்) நிறைவுற்றுள்ள பெரிய கடலிற் பயணம் விரைந்து செல்பவர்போல - எய்த்து ஓடி - இளைப்புடனே ஓடி - வாழ்நாளைச் செலுத்தி (ஆகமும் மொழியும்) உடலும் பேச்சும் மாறுதல் உறும்படி, பித்து ஏறினார் என்று சொல்லும்படியான (முயல்வு) முயற்சிகளை- செய்கைகளை மேற்கொண்டு (அந்த உலக நெறியிலே -)

---

தோன்றிப் பாவு கான் அடைந்தனள்; உபேந்திரன். மூரிவில் வேடர் பால் உதித்தான்" - ஞான - உபதேச. 1880, 1881. இனி - இந்திரன் பிறந்த பின்பு அவனுக்குத் தம்பியாய் உபேந்திரன் (திருமாலின் அம்சம்) தோன்றினன். ஆகவே. இலக்குமியின் மைத்துனன் இந்திரன் எனவும் கொள்ளலாம்.

"யான் முதல் தோன்றினன் எனது பின்னவன்
கான் முளை யாகிய காமம்" கந்தபுரா - குமாரபுரி 44
(யான் - இந்திரன், பின்னவன் - திருமால் )

டுருகு வார்சில *சிற்றாம னோலய
முயிரு மாகமு மொத்தாசை யோடுள
முருகி † தீமெழு கிட்டான தோவென
வுரையா நன்-
புலக வாவொழி வித்தார் மனோலய
முணர்வு நீடிய பொற்பாத சேவடி
யுலவு நீயெனை வைத்தாள வேயருள்
தருவாயே;
குருகு லாவிய ‡நற்றாழி சூழ்நகர்
குமர னேமுனை வெற்பார் பராபரை
குழக பூசுரர் மெய்க்காணும் வீரர்தம் வடிவேலா-
குறவர் சீர்மக ளைத்தேடி வாடிய
குழையு Xநீள்கர வைத்தோடி யேயவர்
குடியி லேமயி லைக்கோடு சோதிய
வுரவோனே;
மருகு O மாமது ரைக்கூடல் மால்வரை
வளைவு ளாகிய நக்கீர ரோதிய
வளகை சேர்தமி ழுக்காக நீடிய கரவோனே;

---

* சிற்றா (சிறுமை + ஆ) - கீழான ஆன்மாக்கள்; ஆ - ஆன்மா: 'ஆ' திருக்கு அச்சிவம்... என்று" கம்பரந்தாதி 39

† "தீ மெழு கிட்டானதோ என"-

"அழல் சேர் மெழு கொப்ப"- திருவாச -25-8-

‡ தாழி - கடல்; கடல் சூழ் நகர் - திருச்செந்தூர்

X கரந்திருந்து (மயிலனைய) வள்ளியைக் கொண்டு சென்றது:-

"குறமயிலை வேட்டுயர் களவினாற் புணர் கந்தவேளே"

- திருப்புகழ் 1060

O நக்கீரரிடம் பாடல் பெற வேண்டுமென்று நெடு நாள் காத்திருந்தார் முருகவேள். நக்கீரர் வரலாற்றைப் பாடல் 91 பக்கம் 212 கீழ்க்குறிப்பிற் காண்க.

"உனதின் புறுகவி புகல்' என்றனுதினம் உற்றறிவித்திடவும்
உயர் செந் தமிழ் சிறி தறைகின்றில னென ஓட்டுகவிப் புலவன்
.. இடருங் குகையுறு சிறையும் தவிர் தரு நற்கவி சொற்றிடலும்
முனிவின் றெதிர் வரு முருகன் தணிகையின் முத்தமளித் தருளே"-
தணிகைப் பிள்ளைத் தமிழ் . (தொ பக். 471)

(உருகுவார் சில சிற்றா) உள்ளம் உருகுவார்கள் சில (சிறுமை + ஆ) அற்ப ஆன்மாக்கள்; மன ஒடுக்கம் உற்று, உயிரும் (ஆகமும்) உடலும் ஒருவழிப்பட்டு, (உண்மை) ஆசையுடனே (பக்தியுடனே) உள்ளம் உருகி, தீயிலிடப்பட்ட மெழுகோ என்று சொல்லும்படி (உரையா நண்பு - நண்பு உரையா) அன்பு மொழிகளைக் கொண்டு உன்னைப் புகழ்ந்துரைத்து.

உலக அவா ஒழிவித்தார் - உலக ஆசைகளாம் - மண், பொன், பெண் எனப்படும் மூவாசைகளையும் நீக்கினவர்களுடைய (மனோலய உணர்வு) மனம் ஒடுங்கின ஞான உணர்ச்சியிலே (நீடிய) செழிப்புற்ற (பொற்பாத சேவடி) அழகிய சத்திநிபாதம் தருவதான திருவடிகளுடன் உலவுகின்ற நீ என்னை வைத்து) என்மீது கடைக்கண் வைத்து (என்னை உன் மனத்தில் வைத்து) ஆண்டருளவே அருள் புரிவாயாக.

(குருகு) நீர்ப்பறவைகள் உலவுகின்ற (நல் தாழி) அழகிய கடல் சூழ்ந்துள்ள நகர் - திருச் செந்தூரில் (விளங்கும்) குமர மூர்த்தியே! (முனை வெற்பு ஆர்) தலைமைபெற்ற மலையாம் இமயமலையில் தவத்துடன் விளங்கின பராபரை - பரதேவதையாம் பார்வதியின் குழந்தையே! பூசுரர்தம் வடிவேலா - மறையோர்களுக்கு உரிய வடிவேலனே! *(மெய்க்காணும்) மெய்ப்பொருளைக் காணும் வடிவேலனே! வீரர்களுக்கு உரிய (வடி) கூரிய வேலனே!

குறவர்களுடைய அழகிய மகள் வள்ளியைத் தேடி (வாடிய குழையும்) வாடிக் குழைந்த (உரவோனே) திண்ணியனே - திடம் வாய்ந்தவனே! (நீள் கரவைத்தோடியே) நீள் கரவு வைத்து - பெரிய களவு எண்ணத்துடன் ஓடிச்சென்று (அவர் குடியிலே, அந்த வேடர்களின் இருப்பிடத்திலே இருந்த மயிலனைய வள்ளியை (கோடு) கொண்டு சென்ற (சோதிய) ஜோதி சொரூப (உரவோனே) திண்ணியனே!

(மருகு) வாழை, (மா) மாமரம் இவை நிரம்பிய மதுரையம் பதியாம் நாட்டுக்கு (மேற்கில்) அருகில் உள்ள (மாலவரை) பெருமை வாய்ந்த திருப்பரங்குன்றம் என்னும் மலையின் (கூளைவுள் ஆகிய) வட்டப்பிரதேசத்தில் இருந்த (புலவர்) நக்கீரர் ஓதின - பாடின, (வளகை) - வளமை - வளம் - செழுமை வாய்ந்த தமிழின் பொருட்டு - தமிழைக் கேட்கும் பொருட்டு (நீடிய கரவோனே) நெடுநாள் வஞ்சத்துடன் காத்திருந்தவனே!

---

- முருகனைப் பாடுவதில்லை என வைராக்கியம் கொண்டிருந்த நக்கீரரைக் குகையிற் சிறைப்படுத்தித் திரு முருகாற்றுப் படையைப் பாட வைத்தார் முருகவேள்.

* மெய் கண்டது - பாடல் 109-அடி -8-பக்கம் 261 குறிப்பு.

மதிய மேவிய *சுற்றாத வேணியர்
மகிழ நீநொடி யற்றான போதினில்
† மயிலை நீடுல கைச்சூழ வேவிய
பெருமானே. (201)

## 1192. நின்செயல் மருவ

தனனானத் தனந்த தந்தன
தனனானத் தனந்த தந்தன
தனனானத் தனந்த தந்தன தனதான

முலைமேலிற் கலிங்க மொன்றிட
முதல்வானிற் பிறந்த மின்பிறை
நுதல்மேல்முத் தரும்ப புந்தியி லிதமார

முகநேசித் திலங்க வும்பல
வினைமுசிப் புரண்ட வன்கடல்
முரணோசைக் கமைந்த வன்சர மெனமுவா,

மலர்போலச் சிவந்த செங்கணில்
மருள் கூர்கைக் கிருண்ட அஞ்சனம்
வழுவாமற் புனைந்து தின்கய மெனநாடி-

வருமாதர்க் கிரங்கி நெஞ்சமு
மயலாகிப் பரந்து **நின் செயல்**
**மருவாமற் கலங்கும் வஞ்சக மொழியாதோ;**

தொலையாநற் றவங்க ணின்றுனை
நிலையாகப் புகழ்ந்து கொண்டுள
அடியாருட் டுலங்கி நின்றருள் துணைவேளே-

---

*சுற்றாத வேணியர் - "விரியார் சடை, விரியுறு சடை" - சம்பந்தர் 1-95-4. 1-19 -3.

† உலகைச் சூழவந்தது - பாடல் 184 பக்கம் 430 கீழ்க்குறிப்பு; பாடல் 267-பக்கம் 164 குறிப்பு.

மதியம் மேவிய வேணியர் - சந்திரனைத் தரித்துள்ள சடையினர், சுற்றாத - விரிந்த சடையினர் - (மகிழ) மகிழும்படி நீ (நொடியற்றான போதினில்) ஒரு நொடிப் பொழுதுக்கும் குறைந்த நேரத்தில் - ஒரு நொடிப் பொழுது ஆகும் முன்னரே - உனது மயில் வாகனத்தை பெரிய இவ்வுலகைச் சூழ்ந்து வரும் படித் தூண்டிச் செலுத்தின பெருமாளே!

(ஆளவே அருள் தருவாயே)

## 1192.

கொங்கையின் மேலே (கலிங்கம்) ஆடை (ஒன்றிட) பொருந்த, (முதல் வானிற் பிறந்த மின் பிறை) வானில் - ஆகாயத்தில் - (முதல் பிறந்து) - அப்போதுதான் தோன்றிய - (மின்) ஒளி வீசும் பிறைச்சந்திரன் போன்ற - (நுதல் மேல்) நெற்றியின் மேல் - முத்து - முத்துப்போல வேர்வை அரும்ப - தோன்ற - புந்தியில் புத்தியில் - (இதம் ஆர) - இன்பம் நிரம்ப -

(முகம் நேசித்து இலங்கவும்) முகத்தில் நேசபாவம் விளங்கி, (பல வினை மூசி) பல வஞ்சக எண்ணங்கள் நிறைந்து, திரைபுரளும் வளப்பமுள்ள கடலின் (முரண் ஓசைக்கு) வலிய ஓசைக்கு (அமைந்தவன்) (பொருந்தினவனான - தக்கவனான - மன்மதனுடைய) கடலைத் தனக்கு ஏற்ற முரச வாத்தியமாகக் கொண்டவனாகிய மன்மதனுடைய சரம் என (மலர்ப்) பாணங்கள் என்று சொல்லும்படி - கெடாத - வாடாத

மலர் போலச் சிவந்ததாயுள்ள செவ்விய கண்ணில் மயக்கம் மிகக் கொள்வதற்கு இருண்ட அஞ்சனம், கரிய மையைத் தவறாமல் அணிந்து, வலிய (கயம்) - என நாடி - யானைபோல மதத்துடன், தேடி

வருகின்ற பெண்கள்பால் இரக்கம் வைத்து, மனமும் காம மயக்கம் பெருகி நிற்க அதனால் (நின் செயல் மருவாமல்) உனக்குச் செய்யவேண்டிய தொண்டுத் தொழில்களில் ஈடுபடாமல் கலங்குகின்ற என் (வஞ்சகம்) மோச நிலை என்னைவிட்டு நீங்காதா?

கெடாத நல்ல (தவங்கள் நின்று) தவநிலைகளில் இருந்து உன்னை நிலைத்த புத்தியுடன் புகழ்ந்துகொண்டிருக்கும் (அடியாருள் துலங்கி நின்று) அடியார்களின் உள்ளத்தே (துலங்கி) விளக்கத்துடன் இருந்து அவர்களுக்குத் (துணை அருள் வேளே) துணை செய்கின்ற செவ்வேளே!

துடிநேரொத் திலங்கு மெண்கொடி
யிடைதோகைக் கிசைந்த வொண்டொடி
சுரர்வாழப் பிறந்த சுந்தரி மணவாளா;
*மலைமாளப் பிளந்த செங்கையில்
வடிவேலைக் கொடந்த வஞ்சக
வடிவாகக் கரந்து வந்தமர் பொருசூரன்-
வலிமாளத் துரந்த வன்திறல்
முருகாமற் பொருந்து திண்புய
வடிவாமற் றநந்த மிந்திரர் பெருமாளே (202)

## 1193. ஆண்டருள

தனன தந்தன தாத்தன தந்தன
தனன தந்தன தாத்தன தந்தன
தனன தந்தன தாத்தன தந்தன தனதான

† முனைய ழிந்தது மேட்டிகு லைந்தது
வயது சென்றது ‡ வாய்ப்ப லுதிர்ந்தது
முதுகு வெஞ்சிலை காட்டிவ ளைந்தது
ப்ரபையான-
முகமி ழிந்தது நோக்குமி ருண்டது
இருமல் வந்தது தூக்கமொ ழிந்தது
மொழித ளர்ந்தது ‡ நாக்குவி ழுந்தது
அறிவேபோய்

---

*"மாயைகள் ஆற்றியே மறைந்து நின்று நான் ஏயென இயற்றுவன் அமர்" - என்ற தாரகனையும், "வல்ல மாயைகள் செய்குதி செய்குதி" என்று அவன்சொல்ல அங்ஙனமே மாயைகள் செய்த கிரவுஞ்சத்தையும் வேல் கொண்டு ஒருசேர அட்டனர் முருகவேள் - "செயவன் விட்டிடு தனிவை வேல் செருமுயல் தாரகன் வரையோடும் துன்னென அட்டது"- கந்தபுரா. 1-20 173-174-181. சூரன் மாயைப் போர் செய்தது:-

"மாயையின் பெற்றியைப் புந்தியுள் உன்னியே பல்லுருக் கொடு தோன்றினான்" கந்தபுரா. 4-13-409

† இந்த 1193 - ஆம் பாடலில் முதல் நான்கடியின் நடை அழகு வியக்கத்தக்கது. அருட்கவி அருணகிரியார் "என்நெஞ்சிற் செஞ் சொல் தருவாயே" (48) என்றும், "பொற்பும் இயல் புதுமையாகப் பாடப் புகல்வாயே (1025) என்றும் "எனக்கென்றப் பொருட்டாங்கத் தொடுக்குஞ்சொற்றமிழ்த் தந்திப் படியாள் வாய்" (33) என்றும் வேண்டியவாறே இறைவன் அவருக்கு

(துடி) உடுக்கைக்கு நேர் ஒப்பாக நின்று நன்கு விளங்குவதும் மெல்லிய கொடி போன்றதுமான இடையை உடையவளும், தோகைக்கு இசைந்த ஒண்தொடி - மயிலனையவளும், ஒளி பொருந்திய தொடியை (கைவளையை) அணிந்தவளும், தேவர்கள் வாழப் பிறந்தவளுமான சுந்தரி ஆகிய தேவசேனையின் அல்லது வள்ளியின் மணவாளனே! அல்லது - ஒண் டொடி - வள்ளிக்கும். தேவர்குலம் வாழ்ந்து விளங்கப் பிறந்த அழகி - தேவசேனைக்கும் மணவாளனே!

கிரவுஞ்சகிரி மாளும்படி அதைப் பிளந்தெறிந்த செவ்விய கையில் உள்ள கூர்வேலைக் (கொடு அந்த) கொண்டு அந்த வஞ்சக வடிவுடன் ஒளிந்து வந்து சண்டை செய்த சூரனுடைய

வலிமை அழியும்படி துரந்த - போக்கினவன்திறல் - வலிய பராக்ரமத்தைக் கொண்ட முருகனே! மல் பொருந்து மற்போருக்குத் தகுதியான - திண்புய - திண்ணிய - வலிய திருப்புயங்களை உடையவனே! (வடிவா) அழகனே! அல்லது திண்புய அழகனே! (மற்று) (மேலும்), (அநந்தம்) அளவற்ற இந்திரர்களுக்கும் பெருமாளே!

(வஞ்சகம் ஒழியாதோ)

## 1193.

(முனை) துணிவு - தைரியம் அழிந்து போயிற்று, (மேட்டி) இருந்த ஆணவம் - தானெனும் மேன்மை தொலைந்து போயிற்று; வயது ஏறிவிட்டது; வாயிலிருந்த பற்கள் உதிர்ந்து போயின; முதுகு நன்றாய் வளைந்த வில் என்று சொல்லும்படி வளைந்து போய்விட்டது; ஒளிவீசி நேர் நின்ற

முகம் (ஒளி மழுங்கித்) தாழ்ந்து தொங்கிவிட்டது, பார்வை இருள் அடைந்தது; இருமல் வந்து விட்டது; தூக்கம் ஒழிந்து விட்டது; பேச்சு தளர்ந்து சோர்வடைந்து விட்டது; நாக்கு விழுந்துவிட்டது (பேச்சுக்குத்த டையாய்); அறிவுகெட்டுப் போய்

---

அளித்த திருவாக்கு இப்பாடலிற் பொலிவுற்று விளங்குகின்றது.

‡ பல் விழுதல் நாக்குவிழுதல். ''பல்வீழ்ந்து நாத்தளர்ந்து' -சம்பந்தர் 1-59-8

"சொல்தளர்ந்து கோலூன்றிச் சோர்ந்த நடையினராய்ப் பல்-கழன்று"- நாலடி -2-3.

நினைவ யர்ந்தது நீட்டல் முடங்கலு
மவச மும்பல ஏக்கழ முந்தின
நெறிம றந்தது மூப்பு முதிர்ந்தது பலநோயும்-
நிலுவை கொண்டது பாய்க்கிடை கண்டது
சலம லங்களி னாற்றமெ ழுந்தது
நிமிஷ மிங்கினி யாச்சுதென் முன்பினி தருள்வாயே;
இனைய இந்திர னேற்றமு மண்டர்கள்
தலமு மங்கிட வோட்டியி ருஞ்சிறை
யிடு*மி டும்புள ராக்கதர் தங்களில் வெகுகோடி-
எதிர்பொ ரும்படி போர்க்குளெ திர்ந்தவர்
தசைசி ரங்களு நாற்றிசை சிந்திட
† இடிமு ழங்கிய வேற்படை யொன்றனை யெறிவோனே;
தினைவ னங்கிளி காத்தசு வுந்தரி
அருகு சென்றடி போற்றிம ணஞ்செய்து
‡ செகம றிந்திட வாழ்க்கைபு ரிந்திடு மிளையோனே-
X திரிபு ரம்பொடி யாக்கிய சங்கரர்
குமர கந்தப ராக்ரம செந்தமிழ்
தெளிவு கொண்டடி யார்க்குவி ளம்பிய பெருமாளே (203)

---

* இடும்பு - கொடுஞ்செயல் - "சூரபத்மன் பலமும் இராவணன் தீரமும்..... திரிபுரர் எண்ணமும் தக்கன் எழிலும் - இவர்களது சம்பத்து நின்றதோ அவரவர் இடும்பால் அழிந்ததன்றோ"- குமரேச சதகம் - 47

† "இடி முழங்கிய வேல்" - "தீயழற் சிகழி கான்று சென்றிட" -கந்தபுரா - 4-13-465

‡ முருகவேள் வாழ்க்கை புரிதல்.

"செருத்தணி வரைமிசை,... பச்சிளங் கொடிக்கை வனசரர் பாவையோ டொன்றி, இச்சகத்துயிர் யாவையும் உய்ய வீற்றிருந்தான்"

"கந்தனோர் தருவதாகி, வல்லியர் கிரியை ஞான வல்லியின் கிளையாய்ச் சூழப், பல்லுயிர்க் கருணைப்பூத்துப் பவநெறிகாய்த்திட்டன்பர், எல்லவர் தமக்கும் முத்தி இருங்கனி உதவும் என்றும்" - கந்தபுரா. 6-24-214-258

" திருமணம் புரிந்து வைவேற் சேவகன் உலகெலாம் பெருகு மங்கலங்கள் செய்த பெற்றி"- தணிகைப்புரா - வள்ளி திருமணம் 263

X திரிபுரம் எரித்தது - பாடல் 285-பக். 206 குறிப்பு

ஞாபகம் என்பது சோர்வடைந்து (மறதி வந்துவிட்டது); காலை நீட்டலும், (முடங்கல்) மடக்குதலும் ஆய், (அவசமும்) - மயக்கமும், பலவிதமான (ஏக்கமும்) கவலைகளும் முற்பட்டன; நெறி - ஒழுக்க நெறியும் மறந்து போய்விட்டது; மூப்பு - கிழத்தன்மை (முதுமையின் கொடுமை) முற்றிவிட்டது; பலவிதமான நோய்களும் -

நிலையாகப் பீடித்து நின்றன; பாயிற்படுக்கை விடாது பிடித்துக்கொண்டது; மூத்திரம், மலம் இவைகளின் துர்நாற்றம் எழுந்து விட்டது; ஒரே நிமிஷம், இங்கு இனி அவ்வளவுதான் (ஆச்சுது) உயிர் பிரியும் வேளை வந்துவிட்டது - என் முன்பு - என்று (உலகோர்) பேசுவதன் முன்பாக - (இனிது) நான் சுகம் பெறும்படி அருள் புரிவாயாக.

(இளைய - இந்திரன்) - இந்திரன் இளைய - இந்திரன் வருந்த (அவனது) ஏற்றமும் - மேன்மையும், தேவர்களின் ஊராம் பொன்னுலகமும் (மங்கிட) ஒளியிழந்து மங்கும்படி, (ஓட்டி) அவர்களை வெருட்டி ஓட்டிவிட்டு, (சிறையிடும்) அவர்களைப் பெரிய சிறையில் அடைவித்த (இடும்பு-உள்ள), கொடுஞ் செயலைக் கொண்ட அரக்கர்களின் பலகோடியர்,

நேரே சண்டை செய்யப் போரில் எதிர்த்தவர்களின் சதையும், சிரங்களும் நாலா திசையும் சிதறிச் சிந்த, இடிபோல ஒலித்த வேலாயுதமாகிய ஒப்பற்ற ஒரு படையைச் செலுத்தினவனே!

தினைப்புனத்திற் கிளிகள் வராது காத்த அழகியாகிய வள்ளியின் சமீபத்திற் போய் அவளது திருவடியைத் துதித்து, அவளைத் திருமணஞ் செய்து உலகெலாம் அறிய அவளுடன் வாழ்க்கை புரிந்திடும் இளையோனே!

திரிபுரத்தை எரித்துப் பொடிசெய்த சங்கரரின் குமரனே! கந்தனே! பராக்ரம மூர்த்தியே! செந்தமிழைத் தெளிவுடன் அடியார்க்குப் போதித்த பெருமாளே!

(அருள்வாயே)

## 1194. அர்ச்சிக்க

தத்தத்தத் தத்தத் தனதன
தத்தத்தத் தத்தத் தனதன
தத்தத்தத் தத்தத் தனதன தனதான

**மை**க்குக்கைப் புக்கக் கயல்விழி
யெற்றிக்கொட் டிட்டுச் சிலைமதன்
வர்க்கத்தைக் கற்பித் திடுதிற மொழியாலே-
மட்டிட்டுத் துட்டக் கெருவித
மிட்டிட்டுச் சுற்றிப் பரிமள
மச்சப்பொற் கட்டிற் செறிமல ரணைமீதே,
புக்குக்கைக் கொக்கப் புகுமொரு
அற்பச்சிற் றிற்பத் தெரிவையர்
பொய்க்குற்றுச் சுற்றித் திரிகிற புலையேனைப்-
பொற்பித்துக் கற்பித் துனதடி
**அர்ச்சிக்கச்** சற்றுக் க்ருபைசெய
புத்திக்குச் சித்தித் தருளுவ தொருநாளே;
திக்குக்குத் திக்குத் திகுதிகு
டுட்டுட்டுட் டுட்டுட் டுடுடுடு
தித்தித்தித் தித்தித் திதியென நடமாடுஞ்-
சித்தர்க்குச் சுத்தப் பரமநல்
முத்தர்க்குச் சித்தக் க்ருபையுள
சித்தர்க்குப் பத்தர்க் கருளிய குருநாதா,
ஒக்கத்தக் கிட்டுத் திரியசுர்
முட்டக்கொட் டற்றுத் *திரிபுர
மொக்கக்கெட் டிட்டுத் திகுதிகு வெனவேக-
உற்பித்துக் †கற்பித் தமரரை
முற்பட்டக் கட்டச் சிறைவிடு
‡மொட்குக்டக் கொற்றக் கொடியுள
பெருமாளே (204)

---

* திரிபுரம் எரித்தது - பாடல் 285-பக்கம் 206 குறிப்பு

† சிவனுக்கு உபதேசித்தது - பாடல் 327-பக்கம் 314 குறிப்பு

‡ ஒட்குக்ட = ஒள் குக்குட

# 1194.

(மைக்கு) மையில், கைபுக - கையைப்புகவைத்து - கயல்மீன் போலும் கண்ணில் (எற்றிக் கொட்டிட்டு) படும்படிக் கொட்டிப் பூசிச் (சிலைமதன்) கரும்புவில் ஏந்திய மன்மதனுடைய (வர்க்கத்தை) கூட்டத்தில் - வகுப்பிற் சம்பந்தப்பட்டவர்களுக்குக் காம ஆசை கொண்டவர்களுக்குக் (கற்பித்திடு) - பாடம் சொல்லிக் கொடுக்கும் (திறமொழியாலே) சாமர்த்தியப் பேச்சாலே -

(மட்டிட்டு) தேன்போல இனிக்கச் செய்து, துஷ்டத்தனமும், கர்வமும் கலந்த பேச்சுக்களை (இட்டிட்டு) இடை இடையே பேசிப்பேசி, (சுற்றி) வளைத்துப் (பரிமளம்) நறுமணம் உள்ள (மச்சப் பொற்கட்டில்) நல்ல மாற்று உள்ள அழகிய கட்டிலில் அல்லது "மஞ்சம்"எனப்படும் கட்டிலில் நிறைந்த மலர்ப் படுக்கையின் மேல்-

புகுந்து - புக்கிருந்து (கைக்கு ஒக்கப்புகும்) கையில் உள்ள பொருளுக்குத் தக்கபடிப் (புகும்) மனத்தைச் செலுத்தும் ஒப்பற்ற (தெரிவையர்) மாதர்களின் - அற்ப சிற்றின்பத் தெரிவையர் - இழிவான சிற்றின்பப் போகம் தரும் மாதர்களின் - பொய்யில் அகப்பட்டுச் சுற்றித்திரிகின்ற (புலையேனை) சண்டாளனாகிய என்னைப் -

பொற்பித்து - அழகுபடுத்தி - எனக்குப் பொலிவு உண்டாக்கிக், (கற்பித்து) உபதேச மொழிகளைப் போதித்து, உன்னுடைய திருவடியை அருச்சித்துப் பூசிக்கச், சற்று கிருபை செய்வதும், என் புத்தியில் அந்த உபதேசம் நன்றாகச் சித்தித்துப்-பயன் தருவதான ஒரு பாக்கிய நாள் எனக்குக் கிடைக்குமா!

திக்குக்குத் திக்குத் திகுதிகு- திந்தித் திதியென நடனமாடும் -

சித்த மூர்த்தியாம் சிவனுக்கும், பரிசுத்தமுள்ள, மேலான, நல்ல ஜீவன் முத்தர்களுக்கும், உள்ளத்தில் கிருபையுள்ள சித்த புருஷர்களுக்கும், பக்தர்களுக்கும் அருள் பாலித்த குருநாதனே!

ஒக்க - ஒரு சேரத் (தக்கிட்டு) - நிலை பெற்றதாய்த் திரிந்து கொண்டிருந்த (முப்புரத்து) அசுரர்கள் (முட்டக்கொட்டு அற்று) எல்லாருடைய (கொட்டு) ஆர்ப்பாட்டமும் அடங்கித், திரிபுரங்கள் மூன்றும் ஒரு சேரக் (கெட்டிட்டு) அழிந்துபோய்த், திகுதிகு என்று வேகும்படி

(உற்பித்து) செய்வித்தவராகிய சிவனுக்குக் (கற்பித்து) உபதேசம் செய்து, தேவர்களை முன்பட்ட கஷ்டங்கள் கொண்ட சிறையினின்றும் (விடு) விடுவித்த பெருமாளே! ஒள்ளிய கோழியாம் வெற்றிக்கொடி கொண்ட பெருமாளே!

(அர்ச்சிக்க அருளுவ தொருநாளே)

## 1195. இறைவன் வர

தான தனதனன தான தாத்தன
தான தனதனன தான தாத்தன
தான தனதனன தான தாத்தன தனதான

மோது மறலியொரு *கோடி வேற்படை
கூடி முடுகியெம தாவி †பாழ்த்திட
மோக முடையவெகு மாதர் கூட்டமு மயலாரும்
மூளு மனவில்விசை மேல்வி ழாப்பரி
தாப முடனும்விழி நீர்கொ ளாக்கொடு
மோக வினையில்நெடு நாளின் முத்தவ
ரிளையோர்கள்;
ஏது கருமமிவர் சா ‡வெ னாச்சிலர்
கூடி நடவுமிடு கா‡டெ னாக்கடி
Xதேழு நரகினிடை வீழ் ‡மெ னாப்பொறி
யறுபாவி
ஏழு புவனமிகு வான நாட்டவர்
சூழு முநிவர்கிளை தாமு மேத்திட
ஈச னருள்குமர வேத மார்த்தெழ வருவாயே;
○சூது பொருதரும னாடு தோற்றிரு
வாறு வருஷம்வன வாச மேற்றியல்
தோகை யுடனுமெவி ராட ராச்சிய முறைநாளிற்
சூறை நிரைகொடவ ரேக மீட்டெதி
ராளு முரிமைதரு மாறு கேட்டொரு
தூது செல அடுவலாண்மை தாக்குவ னெனமீள;

---

* கோடி = கூர்மை † பாழ்த்திட = பாழ்படுத்த
‡ எனா = என்னாமல்.
X ஏழு நரகு - பாடல் 535-பக்கம் 222 கீழ்க்குறிப்பு.
○ இந்த 1195-ஆம் பாடலின் 5-8 அடிகள் பாரதச் சருக்க வரலாறாகும்.

தருமர் சூதாடி நாட்டை இழந்ததும், 12 வருஷம் வனவாசம் இருந்ததும் அஞ்ஞாத வாசமாக விராட ராஜ்யத்தில் துரோபதையுடன் இருந்ததும், அப்போது பகைவர்கள் பசுக் கூட்டங்களைக் கவர்ந்ததும், அவைகளை மீட்டதும், பின்பு அரசுரிமை கேட்கத் தூது விட்டதும், போரே முடிவு என்று ஏற்பட்டுப் போரில் துரியோதனாதியர் யாவரும் இறக்கும்படி அருச்சுனனுடைய தேரைக் கண்ணபிரான் சாரதியாக இருந்து ஓட்டியதும் கூறப்பட்டுள.

# 1195.

தாக்குகின்ற யமன் தனது ஒப்பற்ற கூரிய வேற்படையுடன் வேகத்தில் வந்து எனது உயிரைப் பாழ்படுத்த (உடலினின்றும்) பிரிக்க, (என் மேல்) ஆசைகொண்டிருந்த பல மாதர்களின் கூட்டமும், அயலான பிறரும்:

(மூளும் அளவில்) (துக்கம்) மூண்டெழுந்தவுடன் (விசை) விசையுடன் - வேகத்துடன் (மேல விழா) மேல் விழுந்து, (பரிதாபமுடனும்) இரக்கத்துடனே (விழிநீர் கொளா) கண்ணீர் கொண்டு நிற்க, (கொடு மோக வினையில்) கொடிய (ப்ரபஞ்ச) மயக்கத்தின் காரணமாக, பலநாள் மூத்தவர்களாயுள்ளவர்களும், இளையவராய் உள்ளவர்களும் -

(ஏது கருமம்) என்ன காரணம், இவர் (சா எனா) - இவர் இறந்ததற்கு என்று கேட்கும் சொல் - என்ற விசாரணை பிறவாத வகைக்கும், (சிலர் கூடி நடவும் இடுகாடெனா), பிணத்துக்குப்பின் கூடி நடவுங்கள் சுடுகாட்டுக்கு என்று சிலர் கூறாத வகைக்கும், (கடிது ஏழு நரகினிடை வீழ்மெனாப் பொறியறுபாவி - (இவன்) பொறியறுபாவி - புலன்களை நல்ல வழியிற் செலுத்தாத பாவி இவன் - இவனை கடிது எழுநரகினிடை வீழ்ம் எனா - விரைவில் எழுநரகிடையே வீழ்த்துங்கள் என்று (யம புரியில்) கூறாத வகைக்கும்,

ஏழு உலகத்தினரும், சிறந்த தேவ லோகத்தினரும், சூழ்ந்துள்ள முனிவர் கூட்டங்களும் (ஏத்திட) போற்றி நிற்க, ஈசன் அருளிய குருமூர்த்தியே! வேதம் ஒலித்து நிறைந்து எழ, எழுந்தருளுவாயாக.

சூதாட்டம் ஆடின தருமராஜர் நாடுதோற்று - நாட்டை இழந்து, இரு ஆறு வருஷம் - பன்னிரண்டு வருஷகாலம் (வனவாசம் ஏற்று) காட்டில் வாழும் வாழ்க்கையை ஏற்றுக் கொண்டு, (இயல்-தோகையுடனுமே) உழுவலன்புடைய மயிலனைய துரோபதையுடன், விராட ராஜ்யத்தில் (உறை நாளில்) காலம் கழித்துவந்த நாளிலே -

சூறை நிரை கொடு அவர் ஏக - நிரை சூறை கொடு - பசுக்களைக் கொள்ளை அடித்துக்கொண்டு - (அவர்) துரியோதனாதியர் செல்ல, மீட்டெதிர் - எதிர்மீட்டு - எதிர்சென்று அப்பசுக்களை மீட்டு - தமக்குள்ள அரசாட்சி உரிமையைத் தருமாறு கேட்க ஒப்பற்ற தூதை அனுப்பப், போருக்கு உரிய வலிய ஆண்மையோடு தாக்குதலை ஒழிய அரசுரிமை தரேன் எனத் துரியோதனன் கூறத் - தூதினின்றும் மீளவும்-

வாது சமர்திருத ரான ராட்டிர
ராஜ குமரர்துரி யோத னாற்பிறர்
மாள நிருபரொடு சேனை தூட்பட வரிசாப-
வாகை விஜயனடல் வாசி பூட்டிய
தேரை முடுகுநெடு மால்ப ராக்ரம
மாயன் மருக அமர் நாடர் பார்த்திப
பெருமாளே (205)

## 1196. அடிமைப்பட

தனனத்தன தானன தானன
தனனத்தன தானன தானன
தனனத்தன தானன தானன தனதான

**வ**டிகட்டிய தேனென வாயினி
லூறுதுப்பன வூறலை யார்தர
வரைவிற்றிக ழூடலி லேதரு மடவார்பால்-
அடிபட்டலை பாவநிர் மூடனை
முகடித்தொழி லாமுன நீயுன
தடிமைத்தொழி லாகஎ நாளினி லருள்வாயே;
பொடிபட்டிட ராவணன் மாமுடி
சிதறச்சிலை வாளிக ளேகொடு
பொருகைக்கள மேவிய மாயவன் மருகோனே-
கொடுமைத்தொழி லாகிய *கானவர்
மகிமைக்கொள வேயவர் வாழ்சிறு
† குடிலிற்குற மானொடு மேவிய
பெருமாளே (206)

## 1197. மறவேன்

தத்த தனத்தத் தனத்த தத்தன
தத்த தனத்தத் தனத்த தத்தன
தத்த தனத்தத் தனத்த தத்தன தனதான

**வ**ட்ட முலைக்கச் சவிழ்த்து வைத்துள
முத்து வடத்தைக் கழுத்தி லிட்டிரு
மைக்கு வளைக்கட் குறிப்ப முத்திய பொதுமாதர்-

---

*கானவர் மகிமை - பாடல் 974 அடி 7

† "குன்றவர்... குறிச்சியில் தன்திரு மனையினூடே சரவண முதல்வன் தன்னை மன்றலங் குழலியோடு பொலிவுற இருத்தினானே" கந்தபுரா. 6-24-196.

(வாது) தர்க்கித்துப்போருக்கு வந்த (திருதராஷ்டிர ராஜ குமரர்) திருதராஷ்டிர ராஜனுடைய குமாரர்களான துரியோதனனும் பிறரும் (அவன் தம்பியர் முதலானோரும்) மாள - இறந்துபட, பிற அரசர்களுடன் சேனைகள் எல்லாம் தூளாக - (வரிசாப) கட்டப்பட்ட வில்லினால் வரும்

வெற்றியைக்கொண்ட (விஜயன்) அருச்சுனனுடைய (அடல்) வலிய (வாசி) குதிரைகள் பூட்டிய தேரை (முடுகு) செலுத்தின (நெடுமால்) பெரிய திருமால், பராக்ரமம் பொருந்திய (மாயன்) மாயவன் ஆகிய பெருமானுடைய மருகனே! (அமர் நாடர்) வானாடருக்கு அரசாம் பெருமாளே!

(வேதம் ஆர்த்தெழ வருவாயே)

## 1196.

வடி கட்டப்பட்ட தேன் என்று சொல்லும்படி வாயிலில் (துப்பு அன்ன ஊறலை) நுகர் பொருளாகிய இதழூறலை அல்லது துப்பன வாயினில் உறும் ஊறலை - துப்பு - அன்ன பவளம் போன்ற வாயினில் ஊறுகின்ற ஊறலை அனுபவிக்க, (வரைவில்) ஓரளவில் விளங்கும் ஊடலில் (புலவியின்பின் - பிணக்கத்தின்பின்) தருகின்ற மாதர்களிடத்தே -

(அடி பட்டு) அலைப்புண்டு அலைகின்ற பாவ ஜென்மமாகிய (நிர் மூடனை) முழு மூடனாகிய நான் (முகடித் தொழில் ஆம் முன்னம்) மூதேவியின் தொழில்களையே மேற்கொண்டவனாய் இழிந்த நிலையை அடைவதன் முன்பு, உனக்கு அடிமைப் பணி செய்யும் (பாக்கியத்) தொழில் எனக்குக் கிடைக்கும்படி நீ எந்த நாளில் அருள் பாலிப்பாயோ!

பொடி பட்டிடவும் ராவணன் முடி (ராவணன் முடி பொடிபட்டிடவும்), சிறந்த அவனது முடிகள் சிதறவும், வில்லும் அம்புகளும் கொண்டு சண்டை செய்யப் போர்க்களத்தை அடைந்த மாயவன் - திருமாலின் மருகனே!

கொடுந்தொழிலே செய்யும் காட்டாளராம் வேடர்கள் பெருமை அடையுமாறு அவர் வாழ்ந்திருந்த சின்ன குடிசையிற் (குறமான்) வள்ளியோடும் வீற்றிருந்த பெருமாளே!

(அடிமைத் தொழிலாக எந்நாளினில் அருள்வாயோ)

## 1197.

வட்டவடிவான கொங்கையின் மேலுள ரவிக்கையை அவிழ்த்து, (வைத்துள) வைத்திருக்கின்ற முத்து மாலையைக் கழுத்தில் போட்டுக்கொண்டு, இரண்டு மை பூசப்பட்ட குவளை மலர் போன்ற கண்கொண்டு (தங்கள்) குறிப்பு - தங்களது இஷ்டக் குறிப்பை நன்றாகத் தெரியப்படுத்தும் பொது மாதர்களுடைய -

மட்டம ளிக்குட் டிருத்தி முத்தணி
மெத்தை தனக்குட் செருக்கி வெற்றிலை
வைத்த பழுப்பச் சிலைச்சு ருட்கடி
யிதழ்கோதிக்;

கட்டி யணைத்திட் டெடுத்து டுத்திடு
பட்டை யவிழ்த்துக் கருத்தி தத்தொடு
கற்ற கலைச்சொற் களிற்ப யிற்றுள
முயல்போதுங்-

கைக்கு ளிசைத்துப் பிடித்த கட்கமும்
வெட்சி மலர்ப்பொற் பதத்தி ரட்சணை
*கட்டு மணிச்சித் திரத்தி றத்தையு மறவேனே;

கொட்ட மிகுத்திட் டரக்கர் பட்டணம்
இட்டு நெருப்புக் கொளுத்தி யத்தலை
கொட்டை பரப்பச் செருக்க ளத்திடை
யசுரோரைக்-

† குத்தி முறித்துக் குடிப்ப ரத்தமும்
வெட்டி யழித்துக் கணக்க ளிப்பொடு
கொக்கரி யிட்டுத் தெரித்த டுப்பன
வொருகோடிப்;

பட்ட பிணத்தைப் பிடித்தி முப்பன
சச்சரி கொட்டிட் டடுக்கெ டுப்பன
பற்கள் விரித்துச் சிரித்தி ருப்பன வெகுபூதம்-

பட்சி பறக்கத் திசைக்குள் மத்தளம்
வெற்றி முழக்கிக் கொடிப்பி டித்தயில்
பட்டற விட்டுத் துரத்தி வெட்டிய
பெருமானே (207)

---

*கட்டுமணி - அன்மொழித் தொகையாய் இது வள்ளியைக் குறிக்கலாம் - வள்ளி "தூசாமணியும்துகிலும் புனைவாள்" 'தருண மணியவை பலபல செருகிய தலையள்" ஆதலின் (கந். அநுபூதி - 43, திருப்புகழ். 515)

† 6, 7 அடிகள் - செருக்களத்தலகை வகுப்பு, பூதவேதாள வகுப்பு, பொருகளத் தலகை வகுப்புப் - போன்ற பொருளைக் கொண்டன.

(மட்டு அமளிக்குள்) நறுமணப் படுக்கையில் (முத்தணி திருத்தி) அவர்களுடைய முத்தாபரணங்களை ஒழுங்கு படுத்தி, மெத்தையில் (செருக்கி) களிப்புடன் இருந்து, வெற்றிலை வைத்த பழு பச்சிலைச் சுருள் - வெற்றிலையில் வைத்த பழுத்த பாக்குடன் பசுமையான இலைச்சுருளைக் கடிக்கும் வாயிதழை (ஊறலை) கோதி - சிறிது சிறிதாகப் பருகி (உண்டு)

கட்டி அணைத்திட்டு எடுத்து, (உடுத்திடு) அவர்கள் அணிந்துள்ள பட்டுப்புடவையை அவிழ்த்துக், கருத்து இதத்தொடு, கருத்தில் இன்பத்தோடு, கற்ற கலைகளில் உள்ள கொக்கோக சாத்திர நூலில் உள்ள சொற்களின் - பயிற்சியிலே - (உளம்) என் உள்ளம் முயற்சி செய்யும் போதும் -

உனது திருக்கையில் பொருத்திவைத்துப் பிடித்துள்ள (கட்கமும்) வாளையும், வெட்சி மலர் சூழ்ந்த அழகிய திருவடியாம் (ரட்சணை) காப்பையும், (கட்டு மணி) உடைமணி முதலிய கட்டியுள்ள அழகிய (திறத்தையும்) சாமர்த்தியத்தையும் அல்லது - கட்டுமணி - தூசாமணி முதலிய கட்டியிருந்த வள்ளியின் விசித்திரமான சன்மார்க்கத்திறத்தையும் நான் மறவேன்.

(கொட்டம்) இறுமாப்பு மிகுத்திட்ட - மிக்கிருந்த அசுரர்களுடைய பட்டணங்களை (இட்டு நெருப்புக் கொளுத்தி) தீயிட்டுக் கொளுத்தி (அத்தலை) அவ்விடத்தில் (கொட்டைபரப்பச் செருக்களத்திடை அசுரோரை) அசுரர்களைப் போர்க்களத்தில் அடியோடு கொட்டை பரப்ப - சிதறுண்ண வைத்து அழிக்க -

(அப்போது) குத்தி முறித்து (குடிப்ப ரத்தமும்) ரத்தத்தைக் குடிக்க, வெட்டி அழித்து மிக்க (களிப்போடு) மகிழ்ச்சியுடன் (கொக்கரியிட்டு) ஆரவாரத்துடன் கர்ச்சனை செய்து தெரித்து (அடுப்பன) வெளிப்பட்டுக் கூடுவன ஒரு கோடிக்

கணக்கில் அழிந்துபட்ட பிணங்களைப் பிடித்து இழுப்பன; (சச்சரி) வாத்தியத்தைக் கொட்டிக்கொண்டு (அடுக்கு எடுப்பன) அடுக்குப் பாத்திரம் போல (அப்பிணங்களை) எடுத்து அடுக்குவன; பற்களை விரியக்காட்டிச் சிரித்துக்கொண்டிருப்பன, வெகு பூதங்கள் -

கருடன் முதலிய பட்சிகள் மேலே பறந்து திசை தோறும் வட்டமிட, மத்தளங்கள் ஜயம் (ஜயபேரிகையை) முழக்கி (வெற்றிக்கொடி பிடித்து (அயில்) வேலாயுதத்தைப்படும்படி நன்றாகச் செலுத்தி (அசுரர்களைத்) துரத்தி அவர்களை வெட்டிய பெருமாளே!

(கட்கம் - ரட்சணை - திறம் மறவேன்)

## 1198. பொது மகளிர்மீதுள மயக்கு அற

தனதன தாத்த தாத்த. தனதன தாத்த தாத்த
தனதன தாத்த தாத்த தனதான

வளைகர மாட்டி வேட்டி னிடைதுயில் வாட்டியீட்டி
வரிவிழி தீட்டி யேட்டின் மணம்வீசும்-
*மழைகுழல் காட்டி வேட்கை வளர்முலை காட்டி
நோக்கின்
மயில்நடை காட்டி மூட்டி மயலாகப்,
புளகித வார்த்தை யேற்றி வரிகலை வாழ்த்தி யீழ்த்து
புணர்முலை சேர்த்து வீக்கி விளையாடும்-
பொதுமட வார்க்கு ஏற்ற வழியுறு வாழ்க்கை
வேட்கை
புலைகுண மோட்டி மாற்றி யருள்வாயே;
தொளையொழு கேற்ற நோக்கி பலவகை†வாச்சி
தூர்த்து
சுடரடி ‡நீத்த லேத்து மடியார்கள்-
துணைவன்மைநோக்கி நோக்கினிடை முறையாய்ச்சிமார்ச்
சொல்
சொலியமு தூட்டி யாட்டு முருகோனே,
X இளநகையோட்டி மூட்டர் குலம்விழ வாட்டிOயேட்டை
யிமையவர் பாட்டை மீட்ட குருநாதா-
இயல்புவி வாழ்த்தி யேத்த எனதிடர் நோக்கி **நோக்க
மிருவினை காட்டி மீட்ட பெருமாளே (208)

---

* 'மழை ஒக்கும் வடித்த கூந்தல்'- கம்பராமா - மாரீச - 70

† வாச்சி - வாச்சியம் (கடைக்குறை) - வாத்தியம்

‡ நீத்தல் = நித்தல்: நாடோறும்

X சூரனுடைய சேனைகள் முருகவேளைச் சூழ்ந்து ஆர்த்த போது அந்தச்சேனைகளைப் புன்சிரிப்பால் முருகவேள் எரித்தனர்

"நாதனும் அதனை நோக்கி நன்றிவர் முயற்சி யென்னா
ஓதினன் முறுவல் செய்ய ஒன்னலன் தானை தொன்னாள்
மூதெயில் என்ன நீறாய் வெந்துடன் முடிந்த தம்மா
தாதைதன் செய்கை மைந்தன் செய்வது தக்க தன்றோ."
- கந்தபுரா -4-13-287; திருப்புகழ் 263- அடி 7-ம் பார்க்க.

O ஏட்டை = தளர்ச்சி

** இருவினையினின்றும் மீட்டது -"அடியேன் இருவினை தூள் படவே அயிலேவிய... மயில்வாகன"- திருப்புகழ் 725. இது அருணகிரியாரின் வரலாற்றை விளக்குவது.

# 1198.

வளையல்களை கரத்தில் மாட்டிக்கொண்டு, (அல்லது கரத்தில் உள்ள வளையல்களை ஆட்டி) (வேட்டின் இடை) காமவேட்டையின் இடையே (துயில் வாட்டி) தூக்கத்தைக் கெடுத்து, (ஈட்டி) ஈட்டி போலக் கூரியதும், ரேகைகள் அமைந்ததுமான (விழி) கண்ணுக்குத் (தீட்டி) மையிட்டு (ஏட்டின்) மலர் இதழ்களின் மணம்வீசுகின்ற

மழைபோல நீண்ட (அல்லது கருமேகம் போன்ற) கூந்தலைக் காட்டிக் (காமத்தை) வளர்க்கும் கொங்கையைக்காட்டி, நோக்கின் - விருப்பத்துடன் மயிலனைய தமதுநடை (பழகைக்) காட்டி மயலாக மூட்டி - காமப்பற்று உண்டாகும்படிச் செய்து

புளகாங்கிதம் கொள்ளும்படியான வார்த்தைகளைக் காதில் ஏறவைத்து, (வரிகலை) கட்டியுள்ள ஆடையை (வாழ்த்திசூழ்ந்து) வாழ்த்துப் பேச்சுடன் - துதிகூறும் பேச்சுடன் இழுத்து, நெருங்கிப் பொருந்திய கொங்கையில் அணைத்துக் கட்டி விளையாடுகின்ற

பொதுமகளிருக்கு உகந்ததான வழியிற் செல்லும் வாழ்க்கையில் விருப்பங் கொள்ளும் (புலைகுணம்) இழிவான (என்) குணத்தை ஓட்டி நீக்கி அருள்புரிவாயாக.

(தொளை ஒழுகு ஏற்றம் நோக்கி-) (குழல் போன்ற) தொளைக் கருவிகளில் பரந்து வரும் (இசையின்) ஏற்றம் - மேன்மையைக் கண்டு, பலவகைப்பட்ட (வாச்சி) வாத்திய வகைகளைப் பெருக ஒலித்து, (உனது) ஒளிவீசும் திருவடிகளை (நித்தல்) தினந்தோறும் ஏத்துகின்ற அடியார்களின் -

(துணை) துணையே (துணைவனே)! (வன்மை நோக்கி) உனது பராக்ரமத்தைக் கண்டு, (நோக்கின் இடைமுறை) (தங்கள்) விருப்பத்தினிடையே முறை முறையாய் (ஒருவர்பின் ஒருவராக) (ஆய்ச்சிமார்) கார்த்திகை மாதர்களாம் தாய்மார் (சொல் சொலி) (கண்ணே, மணியே என்பனபோன்ற அன்பு வார்த்தைகளைச் சொல்லி (அமுது ஊட்டி) பால் ஊட்டி (ஆட்டும்) தாலாட்டும் (முருகோனே) இளையோனே!

(இளநகை யோட்டி) புன்சிரிப்பைச் சிரித்து - புன்சிரிப்புத் தீயைச் செலுத்தி (மூட்டர்) மூட்டர் - மூடர்களாம் அசுரர்களின் கூட்டம் அழிந்து விழும்படி அவர்களை வாட்டி, (ஏட்டை இமையவர்) தளர்ச்சி - சோர்வு கொண்டிருந்த தேவர்களின் (பாட்டை) கஷ்டத்தை (மீட்ட) நிவிர்த்தி செய்த - நீக்கின குரு மூர்த்தியே!

(இயல்) தகுதியுள்ள (புவி) உலகப் பெரியோர்கள் வாழ்த்தி ஏத்த, என்னுடைய வருத்தங்களைக் கண்டு, (நோக்கம்) உனது அருட் பார்வையால் (இருவினை காட்டி) என்னுடைய நல்வினை - தீவினை களின் நிலையை (எனக்குப்) புலப்படுத்தி - (மீட்ட) அவ்வினை விலங்குகளினின்றும் (வினைச் சிறையினின்றும்) என்னை மீட்டருளிய பெருமாளே! (வேட்கை) புலைகுணம் மாற்றி அருள்வாயே!

## 1199. பெண்கள் மீதுள மயக்கு அற

தானன தனன தனத்தத்த
தானன தனன தனத்தத்த
தானன தனன தனத்தத்த தனதான

வாடையில் மதனை யழைத்துற்று
வாள்வளை கலக லெனக்கற்றை
வார்குழல் சரிய முடித்திட்டு துகிலாரும்-
மால்கொள நெகிழ வுடுத்திட்டு
நூபுர மிணையடி யைப்பற்றி
வாய்விட நுதல்மிசை பொட்டிட்டு வருமாய;
நாடக மகளிர் நடிப்புற்ற
தோதக வலையில கப்பட்டு
ஞாலமு முழுது மிகப்பித்த னெனுமாறு-
நாணமு மரபு மொழுக்கற்று
நீதியு மறிவும றக்கெட்டு
நாயடி மையுமடி மைப்பட்டு விடலாமோ;
ஆடிய மயிலினை யொபபுற்று
*பீலியு மிலையு முடுத்திட்டு
ஆரினு மழகு மிகப்பெற்று †யவனாளும்-
ஆகிய விதண்மிசை யுற்றிட்டு
மானின மருள விழித்திட்டு
ஆயுத கவணொரு கைச்சுற்றி விளையாடும்,
வேடுவர் சிறுமி யொருத்திக்கு
யான்வழி யடிமை யெனச்செப்பி
வீறுள அடியிணை யைப்பற்றி பலகாலும்-
வேதமு மமரரு மெய்ச்சக்ர
வானமு மறிய விலைப்பட்டு
‡மேருவில் மிகவு மெழுத்திட்ட
பெருமாளே (209)

---

* பீலி - இலை உடை - பாடல் 1154-பக்கம் 366 குறிப்பு

† யவனாள் = யெளவனத்தை யுடையவள்.

‡ அடிமைச் சீட்டை மேருவில் எழுதினது - பாடல் 1002 பக்கம் 20, 22 குறிப்பு O பார்க்க.

## 1199.

(வாடையில்) காற்றில் (தென்றலே தேராகக் கொண்டு வரும்) மன்மதனை வரவழைத்து (அல்லது தென்றற் காற்றுடனே காமனையும் வரவழைத்து), பரிசுத்தமான வளையல்கள் கல கல என்று ஒலிக்க, (கற்றை) கூட்டமான திரண்ட கூந்தல் சரிந்து விழ அதை முடித்து, (துகில்) ஆடையை, (ஆரும்) எப்படிப்பட்டவரும்

(மால்கொள) ஆசை கொள்ளும்படியான வகையில் தளரும் படி உடுத்து, சிலம்பு இரண்டு பாதங்களிலும் பற்றிச் சூழ்ந்து (வாய்விட), ஒலிசெய்ய, நெற்றியில் பொட்டு இட்டு வருகின்ற மாயம் வல்ல -

(நாடக மகளிர்) ஆடல்வல்ல மாதர்களின் (நடிப்பு உற்ற) பாசாங்குச் சூழ்ச்சி கொண்ட (தோதக வலையில்) வஞ்சக வலையிலே அகப்பட்டு பூமியில் உள்ளார் அனைவரும் இவன் பெருத்த பித்தன் - (பைத்தியக்காரன்) என்று கூறும்படி -

(நாணமும்) என்மானமும் (மரபும்) என் குடிப்பண்பும் ஒழுக்கம் கெட்டு, நீதி, அறிவு இவை அடியோடு - மிகவும் கெட்டுப்போய், நாய் அனைய அடிமையாக (அம்மாதர்களுக்கு) நானும் அடிமைப்பட்டு விடலாமோ;

ஆடுகின்ற (தோகை மயிலுக்கு) நிகராகி, மயில்பீலியையும், தழைமயிலைகளையும், உடுத்துக் கொண்டு, யாருக்கும் இல்லாத அழகை நிரம்பப் பெற்று, யாரினும் மேலான அழகைப் பெற்று யௌவனத்தை உடையவளாய்,

சுட்டப்பட்ட தினைப்புனத்தின் மீது வீற்றிருந்து, மான் கூட்டங்கள் எல்லாம் இவளது கண்ணழகின்முன் நமது கண் எந்த மூலை என்று மருண்டு விழிக்கும்படிச் செய்து, கவண்கல் என்னும் ஆயுதத்தை ஒரு கையிற் சுற்றி வீசி விளையாடின,

வேட்டுவச் சிறுமி ஒருத்தியாகிய வள்ளிக்கு நான் வழியடிமையாம் என்று கூறி, பெருமை பொருந்திய அவளது திருவடிகள் இரண்டையும் பற்றிப் பிடித்துக் கொண்டு பல முறையும்

வேதமும், தேவர்களும், நிலைபெற்ற சக்ரவாள கிரியும் அறியும்படி அவளுக்கு விலைப்பட்ட அடிமையாய், அங்ஙனம் அடிமைப் பட்டுள்ளதை மேருமலையில் (மிகவும் எழுத்திட்ட) நன்றாக விளங்கும் சிலா சாசனமாக எழுதி வைத்துள்ள பெருமாளே! (நீதியும் அறிவும் கெட்டு விடலாமோ)

## 1200. போற்ற

தனதனன தனதனன தனன தாத்ததன
தனதனன தனதனன தனன தாத்ததன
தனதனன தனதனன தனன தாத்ததன தனதான

விரை சொரியு ம்ருகமதமு மலரும் வாய்த்திலகு
விரிகுழலு மவிழநறு மெழுகு கோட்டுமுலை
மிசையில்வரு பகலொளியை வெருவ வோட்டுமணி
வகையாரம்

விடுதொடைகள் நகநுதியி லறவும் வாய்த்தொளிர
விழிசெருக மொழிபதற அமுது தேக்கியகை
விதறிவளை கலகலென அழகு மேற்பொழிய
அலர்மேவும்;

இருசரண பரிபுரசு ருதிக ளார்க்கவச
மிலகுகடல் கரைபுரள இனிமை கூட்டியுள
மிதம்விளைய *இருவரெனு மாவு காட்டரிய அநுராகத்-
திடைமுழுகி யெனது† மன தழியு நாட்களினு
மிருசரண இயலும்‡வினை யெறியும் வேற்கரமு
மெழுதரிய திருமுகமு மருளு மேத் தும்வகை
தரவேணும்;

அரிபிரம ரடிவருட வுததி கோத்தலற
அடல்வடவை யனலுமிழ அலகை கூட்டமிட
அணிநிணமு மலைபெருக அறையும் வாச்சியமு
மகலாது

அடல்கழுகு கொடிகெருட னிடைவி டாக்கணமு
மறுகுறளு மெறிகுருதி நதியின் மேற்பரவ
X அருணரண முகவயிர வர்களு மார்ப்பரவ
மிடநாளும்,

---

* 'இருவருடலும் ஒரு வுருவாய் நயக்க'- பாடல் 540 அடி 2

† காமப்பற்றில் மனதழியு நாட்களினும் ஏத்தும் வகை தரவேணும் என்கின்றார் - இவ்வேண்டுகோள் நிறைவேறப் பெற்றது என்பதற்குப் - பாடல் 1054-பக்கம் 134 குறிப்பு.

‡ வேலே வினையை ஓட்டும் -
"வினையோட விடும் கதிர் வேல் மறவேன்"- கந். அநுபூதி. 40

X ரணமுக வயிரவர்கள்:- இவர்கள் போர்க்களத்தில் (தமருகம்) உடுக்கை வாத்தியத்துடன் நடனம் செய்வார்கள் - "அடித்த தமருக கரத்தர் பயிரவர் நடித்த நவரச நடத்தை" - "வயிரவர் சுழற்றி நடமிடு துருத்தி"- பொருகளத்தலகை வகுப்பு.

# 1200.

(விரை) வாசனை வீசும் கஸ்தூரியும் மலரும் பொருந்தி விளங்கும் பரந்த கூந்தலும் அவிழ்ந்துவிழ, வாசனைப் பண்டங்கள் (மெழுகப்பட்ட பூசப்பட்ட மலையன்ன கொங்கையின் மேல் விளங்குகின்றதும், (பகல் ஒளியை) சூரியனுடைய ஒளியையும் அது அஞ்சும்படி வெருட்டவல்ல ரத்னவகைகள், (ஆரம்) முத்து

(விடு தொடைகள்) இவைகளால் ஆய மாலைகள், நகத்தின் நுனியால் ஏற்பட்ட நகரேகைகளின் மீது நன்கு பொருந்தி விளங்க, கண் செருக, பேச்சு குழற, அமுது நிரம்ப உண்ட கை நடுக்கும் உற்று அசைதலினால் வளைகள் கலகல என்று ஒலிக்க. அழகு மேலே எங்கணும் நிறைந்து ஒழுகி விளங்க, மலர் போன்ற

இரண்டு அடிகளிலும் உள்ள (பரிபுரம்) சிலம்புகள் (சுருதிகள் ஆர்க்க) இசைவகைகளை ஒலிக்க, (அவசம் இலகு கடல்) பரவச மயக்கம் - காம மயக்கம் விளக்க முறும் கடல் கரை புரள, இனிமை கூடி உள்ளத்தில் இன்பம் பெருக, ஆண் பெண் இருவர் உள்ளோம் என்னும் பிரிவின் அளவே காணுதற்கு அரிதான காமப்பற்றின்

இடையே முழுகி என்னுடைய மனது அழிந்து கெடும் நாள்களிலும், (உனது) இரண்டு திருவடிகளின் மேன்மைத் தகுதியையும், வினையை அறுத்துத் தள்ள வல்ல வேலாயுதத்தை ஏந்தும் திருக்கரத்தையும், எழுதுதற்கு அரியதான - முடியாதது ஆன திருமுகங்களையும், உனது திருவருளையும் (ஏத்தும் வகை) போற்றும் வழிவகையை - (மன நிலையைத்) தந்தருள வேணும்.

திருமாலும் பிரமனும் திருவடியை வருடவும் (பிடிக்கவும்), (உததி) கடல் (கோத்தலற) கவிழ்ந்து புரண்டு ஒலி செய்ய, வலிய வடவாமுகாக்கினி நெருப்பைக் கக்கி வீச, பேய்கள் கூட்டம் கூட, வரிசையாய்க்கிடந்த மாமிசமும் மலைபோலப் பெருக, ஒலியுடன் அடிக்கப்படும் வாத்தியங்களும் - நீங்காது (ஒலிக்க)-

வலிய கழுகு, (கொடி) காக்கை, கருடன் இவைகளின் இடைவிடாது கூடின கூட்டமும், மற்றும் (குறளும்) பூத கணங்களும், அலைவீசும் ரத்தப்ப்ரவாக நதியின்மீது வந்து பரந்து சேரச்சிவந்த போர்க்களத்து, வயிரவர் கணங்களும் (ஆர்ப்பு அரவம் இட) பேரொலி செய்ய, நாள் தோறும்

பரவு நிசி சரர்முடிகள் படியின் மேற்குவிய
பவுரிகொடு திரியவரை பலவும் வேர்ப்பறிய
பகர்வரிய *ககனமுக டிடிய வேட்டைவரு மயில்வீரா-
படருநெறி சடையுடைய இறைவர் கேட்குரிய
பழயமறை தருமவுன வழியை யார்க்குமொரு
பரமகுரு பரனெனவு மறிவு காட்டவல
பெருமாளே (210)

## 1201. திருவடிகளைப் பற்ற

தானத்த தந்த தந்த தானத்த தந்த தந்த
தானத்த தந்த தந்த தனதான

**வே**லொத்து வென்றி யங்கை வேளுக்கு வெஞ்ச ரங்க
ளாமிக்க கன்க ளென்று மிருதோளை-
வேயொக்குமென்று கொங்கை மேல்வெற்பதென்று
கொண்டை
மேகத்தை வென்ற தென்று மெழில்மாதர்,
கோலத்தை விஞ்ச வெஞ்சொல் கோடித்து வஞ்ச நெஞசர்
கூடத்தில் நின்று நின்று குறியாதே-
கோதற்ற நின்ப தங்கள் நேர்பற்றி யின்ப மன்பு
கூர்கைக்கு வந்து சிந்தை குறுகாதோ;
† ஞாலத்தை யன்ற ளந்து வேலைக்கு ளுந்து யின்று
‡ நாடத்தி முன்பு வந்த திருமாலும்-
நாடத்த டஞ்சி லம்பை மாவைப்பி ளந்த டர்ந்து
நாகத்த லங்கு லுங்க விடும்வேலா;
ஆலித்தெ ழுந்த டர்ந்த X ஆலத்தை யுண்ட கண்ட
ராகத்தில் மங்கை பங்கர் நடமாடும்-
ஆதிக்கு மைந்த னென்று நீதிக்குள் நின்ற அன்பர்
ஆபத்தி லஞ்ச லென்ற பெருமாளே (211)

---

* மயில் ககன முகடு இடிய வருவது -
"நெடிய முது ககன முக டுரவி சி நிமிருமொரு
நீலக் கலாப மயிலாம்"
"ககன கூடமு மேலை முகடு மூடிய பசுங்
கற்றைக் கலாப மயிலாம்" - மயில்விருத்தம். 9-6.
"ககன முகட்டைப் பிளந்து . பறந்து போ(ம்).
துரங்கம்"திருப்புகழ். 1016

† பூமியை அளந்தது - பாடல் 268-பக்கம் 166 குறிப்பு
‡ கஜேந்திரனுக்கு உதவினது - பாடல் 939-பக்கம் 731 குறிப்பு
X விடம் உண்டது - பாடல் 286-பக்கம் 211 குறிப்பு

எங்கும்பரவியிருந்த அரக்கர்களின் முடிகள் பூமியின் மீது நிரம்பிக் குவியச், சுழற்சியுடன் திரியும்படி மலைகள் பலவும் வேர் பறிந்து விழச், சொல்லுதற்கரிய ஆகாய முகடு இடிபட்டு அதிர, வேட்டையாடுவது போலச் சுற்றி வரும் மயில் வீரனே!

பரந்து விரியும் வகையதான சடையை உடைய இறைவர் கேட்பதற்கு உரிய பழைய வேதம் புலப்படுத்தும் மவுனவழியை, யார்க்கும் மேலான ஒப்பற்ற சிரேஷ்டமான குருபரன் என்று போற்ற நின்று ஞான அறிவைப் புலப்படுத்த வல்ல பெருமாளே!

(ஏத்தும் வகை தரவேணும்)

## 1201.

*(வேலொத்து வென்றி அங்கை)* வென்றி அங்கை வேலொத்து- வெற்றி கொண்ட அழகிய *(உன்)* திருக்கரத்து வேலாயுதத்தை நிகர்த்து, *(வேளுக்கு)* மன்மதனுடைய *(வெஞ்சரங்களாம்)* கொடிய மலர்ப் பாணங்களாம் - மேம்பட்டு விளங்கும் கண்கள் என்று உவமை கூறியும் இரண்டு தோள்களை

*(வேய் ஒக்கும் என்று)*மூங்கிலை நிகர்க்கும் என்றும், கொங்கை மேலான மலைக்கு ஒப்பு என்றும், *(கொண்டை)* கூந்தல் மேகத்தையும் *(கரு நிறத்தில்)* வென்றது என்று கூறியும், அழகியமாதர்களின் -

*(கோலத்தை)* அழகினை *(விஞ்ச)* மேலான வகையில் *(வெஞ்சொல்)* விரும்பத்தக்க சொற்கள் கொண்டு *(கோடித்து)* அலங்கரித்துப் பேசி, வஞ்சக நெஞ்சினராகிய *(அப் பொது மகளிரின்)* *(கூடத்தில்)* ரகசியத்தில்- அல்லது கூட்டத்தில் *(நின்று நின்று)* அடிக்கடி நின்று அவர்களைக் குறித்தே காலங் கழிக்காமல் -

குற்றமற்ற உனது திருவடிகளை நேராகப் பற்றி, இன்பமும் அன்பும் மிக்குப் பெருகுதற்கு வேண்டிய உள்ளம் எனக்குக் கூடாதா அத்தகைய உள்ளத்தை அடையமாட்டேனோ (என்றபடி)

பூமியை அன்று அளந்து, கடலிடையே துயின்று தன்னைநாடி ஓலமிட்ட *(அத்தி)* கஜேந்திரன் முன்பு வந்து உதவினதிருமாலும்,

*(நாட)* உனது உதவியை நாட, *(தடம்* விசாலமான *(சிலம்பை)* கிரவுஞ்ச கிரியையும், *(மாவை)* *(சூரனாம்)* மாமரத்தையும் பிளந்து நெருக்கி, *(நாகத் தலம்)* மலையிடங்கள் எல்லாம் குலுங்கி அசையச் செலுத்தின வேலாயுதனே!

*(ஆலித்து)* ஒலித்து எழுந்து நெருங்கி வந்த *(ஆலத்தை)* விஷத்தை உண்ட கழுத்தினர் *(ஆகத்தில்)* தமது தேகத்தில் மங்கைக்கு *(பார்வதிக்கு)* ஒரு பங்கு பாகம் தந்தவர் நடனம் ஆடும் -

ஆதி மூர்த்தி - ஆகிய சிவபிரானுக்குப் பிள்ளை என்று விளங்கி, நீதி நெறியில் நிற்கும் அன்பர்களுக்கு - ஆபத்து நேரிடும் போதில் அஞ்சற்க என்று அவர்களுக்கு - அபயம் அளிக்கும் பெருமாளே! (அன்பு கூர்கைக்கு சிந்தை குறுகாதோ)

## 1202. கதிபெற

தனதான தந்த தத்த தனதான தந்த தத்த
தனதான தந்த தத்த தனதான

*அடியார்ம னஞ்சலிக்க எவராகி லும்பழிக்க
அபராதம் வந்து கெட்ட பிணிமூடி
அனைவோரும் வந்து சிச்சி யெனநால்வ ருஞ்சிரிக்க
அனலோட ழுன்று செத்து விடுமாபோற்
கடையேன்ம லங்கள் முற்று மிருநோயு டன்பி டித்த
கலியோடி றந்து சுத்த வெளியாகிக்
களிகூர என்ற னுக்கு மயிலேறி வந்து முத்தி
கதிபெற அன்பு வைத்து அருள்தாராய்
சடைமீது கங்கை வைத்து விடையேறு மெந்தை சுத்த
தழல்மேனி யன்சி ரித்தொர் † புரமூணும்
தவிடாக வந்தெ திர்த்த ‡மதனாக முஞ்சி தைத்த
தழல்பார்வை யன்ற ளித்த குருநாதா
மிடிதீர அண்ட ருக்கு மயிலேறி வஞ்சர் கொட்டம்
வெளியாக வந்து நிர்த்த மருள்வோனே
மினநூல்ம ருங்குல் பொற்பு முலைமாதி னங்குறத்தி
மிகுமாலொ டன்பு வைத்த பெருமாளே (212)

## 1203. வந்தருள

தனதன தாத்தன தனதன தாத்தன
தனதன தாத்தன தனதான

அடியில்வி டாப்பிணி மடையவி டாச்சிறி
தழியுமுன் வீட்டுமு னுயர்பாடை

---

* அடியாரைப் பழித்தலாகாது; பழிப்பதால் வரும் கேடு - இன்னது என்கின்றார்: ஈசனை எதிர்க்கலாம்; ஈசன் அருள் பெற்ற அடியாரை எதிர்க்க முடியாது; சூரியன் முன் நிற்கலாம்; சூரிய வெப்பத்தைப் பெற்ற மணலில் நிற்பது கஷ்டம் என்று நீதிநூல் கூறும்.

"ஈசனெதிர் நின்றாலும் ஈசனருள் பெற்றுயர்ந்த
நேச ரெதிர்நிற்ப தரிதாமே - தேசுவளர்
செங்கதிர் முன் நின்றாலும் செங்கதிர வன்கிரணம்
தங்கு மணல் நிற்கரிதே தான்"- நீதிவெண்பா. 39.

† திரிபுரம் எரித்தது - பாடல் 285-பக்கம் 206 குறிப்பு

‡ மதனை எரித்தது - பாடல் 399-பக்கம் 510 குறிப்பு

## 1202.

அடியார்களுடைய மனம் சலிப்புறும்படி- துன்பப்படும்படி யாராகிலும் பழித்தால் - அதனால் (அபராதம்) பிழை ஏற்பட்டு கெட்ட நோய்கள் வந்து பிடித்து - சுற்றிக் கொண்டு

எல்லாரும் வந்து சீ சீ என்று அருவருப்புடன் இகழ, நாலுபேர் பரிகசித்துச் சிரிக்க, சுற்றில் நெருப்பில் வெந்து இறந்து விடுவதுபோல -

(கடையேன்) கடை பட்டவனாய் - மிக இழிந்தவனாய் என்னுடைய - ஆணவம் மாயை காமியம் எனப்படும் மும் மலங்கள் (மூக் குற்றங்கள்) முழுமையும் (நல்வினை - தீவினை அல்லது பிறப்பு -இறப்பு எனப்படும் இரு நோயுடனும் என்னைப் பிடித்துள்ள (கலியொடும்) தரித்திரத்தோடும் அழிபட்டு (சுத்த வெளியாக) ஞான பரிசுத்த பர வெளி புலப்பட்டதாகி,

மகிழ்ச்சி மிக்கு எழ, என் பொருட்டு மயில்மீது நீ ஏறி வந்து; முத்தி வீட்டை நான் அடையுமாறு என்மீது அன்பு வைத்து உன்னுடைய திருவருளைத் தந்தருளுக.

சடையின் மீது கங்கையைச் சூடி, விடை மீதேறும் எந்தை, பரிசுத்தமான நெருப்பு மேனியர் - சிரித்து ஒப்பற்ற புரங்கள் மூன்றும்,

தவிடு பொடியாகவும், வந்து தன்னை எதிர்த்த (மதன் ஆசுமும்) மன்மதனுடைய உடலைச் சிதைத்து அழியுமாறு செய்த (சிவனது) நெருப்புக் கண் அன்று தந்த (நெருப்புக் கண்ணினின்றும்) அன்று வெளிப்பட்ட குருநாத மூர்த்தியே!

(அண்டருக்கு மிடி தீர) தேவர்களுக்கு (மிடி) கஷ்டம் - துன்பம் நீங்க, மயில் மீதேறி, வஞ்சகர்களாம் அரக்கர்களின் (கொட்டம்) இறுமாப்பும் சேஷ்டையும் (ஒடுங்குதலால்) வெளியாகும்படி வந்து நடனம் புரிந்தவனே!

மின்னல் போலவும் நூல் போலவும் நுண்ணிய இடையையும், அழகிய கொங்கையையும் கொண்ட பெண் - இளங்குறத்தி - வள்ளியின்மீது மிக்க ஆசையுடன் அன்பு வைத்த பெருமாளே!

(கதியேற அருள் தாராய்)

## 1203.

அடி -இல் - (இல் அடி) வீட்டினுள்ளே (விடா) விடாது கிடந்திருக்கும் பிணத்தை (அடையவிடா) அங்கேயே இருக்கவிடாமல் (சிறிது அழியுமுன்) பிணம் கொஞ்சம் அழுகி அழிவதற்கு முன்பாகவே, (வீட்டுமுன்) வீட்டுக்கு எதிரில் சிறப்புடன் பாடை ஒன்றை

அழகொடு கூட்டுமி னழையுமின் வார்ப்பறை
யழுகையை மாற்றுமி னொதியாமுன்;
எடுமினி யாக்கையை யெனஇடு காட்டெரி
யிடை கொடு போய்த்தமர் சுடுநாளில்-
எயினர்கு லோத்தமை யுடன்மயில் மேற்கடி
தெனதுயிர் காத்திட வரவேணும்;
*மடுவிடை போய்ப்பரு முதலையின் வாய்ப்படு
மதகரி கூப்பிட வளையூதி-
மழைமுகில் போற்கக பதிமிசை தோற்றிய
மகிபதி போற்றிடு மருகோனே,
படர்சடை †யாத்திகர் பரிவுற ராட்சதர்
பரவையி லார்ப்பெழ விடும்வேலாற்-
படமுனி யாப்பணி தமனிய நாட்டவர்
‡பதிகுடி யேற்றிய பெருமாளே(213)

## 1204. பிறவியற

தத்தன தான தானன. தத்தன தான தானன
தத்தன தான தானன தனதான

அப்படி யேழு மேழும்வ குத்துவ ழாது போதினி
னக்ரம்வி யோம கோளகை மிசைவாழும்-
அக்ஷர தேவி கோவின் Xவி திப்படி மாறி மாறிய
னைத்துரு வாய காயம தடைவேகொண்;

---

*கஜேந்திரனைக் காத்தது - பாடல் 939-பக்கம் 731 குறிப்பு
† ஆத்திகர் - ஆத்திகருக்குப் பொருளா யிருப்பவர்
"கற்றவர்கள் உண்ணும் கனி"- கடவுள்; அப்பர் -6-32-1
‡ "இமையவர் நாட்டினில் நிறை குடி ஏற்றிய...
தம்பிரானே"- திருப்புகழ். 990.
X "எட்டின் விதிப்படியே" - திருப்புகழ் 789

அழகாகக் (கூட்டுமின்) கூட்டுங்கள், (வார்ப்பறை அழையுமின்) நீண்ட பறை வாத்தியங்களை வரவழையுங்கள், அழுகையை நிறுத்துங்கள், (நொதியா முன்) கெட்டு அழியு முன்னே -

(எடுமின்) எடுங்கள் உடலை என்று கூறிச் சுடுகாட்டில் தீயின் இடையே கொண்டுபோய்த் (தமர்) சுற்றத்தவர்கள் சுட்டெரிக்கும் அந்த தினத்தில் -

(எயினர் குல உத்தமை) வேடர் குலத்து உத்தமி வள்ளியுடன் மயில் மேலே விரைவில் என்னுடைய உயிரைக் காத்தருள வர வேண்டும்;

மடு இடத்தே போய், பெரிய முதலையின் வாயில் அகப்பட்டிருந்த மத யானை - கஜேந்திரன் - ஓலமிட்டுக் கூச்சலிட - (வளை ஊதி) சங்கை ஊதி -

(மழை முகில் போல்) நீருண்ட மேகம் - கரிய மேகம் போலக் (ககபதி) பட்சி ராஜனான கருடன்மீது (தோற்றிய) பிரசன்னமாய் வந்த (மகிபதி) ராஜனாகிய திருமால் (போற்றிடும்) துதித்து ஏத்தும் மருகனே!

பரந்த சடையை உடையவரும், (ஆத்திகர்) கடவுள் உண்டென்று நம்புவோர்க்குப் பொருளாயுள்ளவருமான சிவபிரான் (பரிவுற) அன்பு கொள்ளும் வகையில் (ராட்சதர்) அரக்கர்கள் கடலில் (ஆர்ப்பு எழ) கூச்சலிட்டு அலறும்படிச் செலுத்தின வேலாயுதத்தால் - அவர்கள் (அந்த அசுரர்கள்)

பட - அழியும்படி (முனியா) கோபித்து, உன்னைப் பணிந்த(தமனியநாட்டவர்) பொன்னுலகத்தவராம் (தேவர்களின்) பதி - ஊரில் குடியேற்றின பெருமாளே! (அல்லது பொன்னுலகத்-தவரின்(பதி) தலைவனாம் - இந்திரனைக் குடியேற்றின பெருமாளே!

(எனதுயிர் காத்திட வரவேணும்)

## 1204.

அப்படி - அவ்வகையில் (அல்லது அ-படி-அந்த உலகங்கள்) ஏழும் ஏழும் - (பூலோகம், புவலோகம், சுவலோகம், சனலோகம் தபோலோகம், மகாலோகம், சத்தியலோகம் - என மேலுலகு ஏழும்; அதலம், தலம், சுதலம், தராதலம், மகாதலம், இரசதலம், பாதாளம் - எனக் கீழுலகு ஏழும் - வழாது வகுத்து, வழாது - தவறுதலிலா வகையில் (வகுத்து) படைத்து, போதினின் (மிசை) தாமரை மலரினும், (அக்ரம்) முதன்மைத் தானமான (வியோமகோளகைமிசை) அண்ட-கோளத்தினும் வாழ்கின்றவரும் -

(அக்ஷர தேவி) எழுத்துக்குத் தேவியான சரஸ்வதிக்குக் (கோவின்) தலைவருமான பிரமதேவர் இட்ட (விதிப்படி) எழுதி-யுள்ள விதி எழுத்தின்படி, மாறி மாறி - (பிறப்புக்கள் மாறிமாறி) (அனைத்து உரு ஆய) எல்லா உருவையுங் கொண்ட - காயமது - உடல்களை அடைவே கொண்டு - முறையே நான் எடுத்து -

டிப்படி யோனி வாய்தொறு முற்பவி யாவி ழாவுல
கிற்றடு மாறி யேதிரி தருகாலம்
எத்தனை யூழி காலமெ னத்தெரி யாது *வாழியி
னிப்பிற வாது நீயருள் புரிவாயே;
கற்பக வேழ மேய்வன பச்சிள ஏனல் மீதுறை
கற்புடை மாது தோய்தரு மபிராம
கற்புர தூளி லேபன மற்புய பாக சாதன
கற்பக லோக தாரண கிரிசால;
† விப்ரச மூக ‡ வேதன பச்சிம பூமி காவல
வெட்சியு நீப மாலையு மணிவோனே
மெத்திய ஆழி சேறெழ வெற்பொடு சூர னீறெழ
விக்ரம வேலை யேவிய பெருமாளே (214)

## 1205. திருவடியைப் பெற

தனன தானனம் தனன தானனம்
தனன தானனம் தனதான

அயில்வி லோசனங் குவிய வாசகம்
பதற ஆனனங் குறுவேர்வுற்
றளக பாரமுங் குலைய மேல்விழுந்
ததர பானமுண் டியல்மாதர்;
சயில பாரகுங் குமப யோதரந்
X தழுவு மாதரந் தமியேனால்
தவிரொ ணாதுநின் கருணை கூர்தருந்
தருண பாதமுந் தரவேணும்;

---

* சோக ரசம் நிறைந்தன இப்பாடலின் முதல் நான்கு அடிகள்; பாடலும் மனப் பாடம் செய்யத்தக்கது.

† விப்ர சமூக - "அந்தணர் வெறுக்கை" - திருமுருகாற்;
"வேதியர் வெறுக்கை"- வேளைக்காரன் வகுப்பு;
"விப்ரர்க் காதரன்"- திருப்புகழ். 984

‡ வேதன - "மறை நாயகனே"- கந்தர் அநுபூதி 46

X ஆதரம் தவிரொணாது - "மா அநுபவம் இது சற்றும் விடவோ இயலாது இயலாதே"- என்றார் பிறிதோரிடத்து - திருப்புகழ்.1140

இவ்வாறாக (யோனிவாய் தொறும்) எண்பத்து நான்கு நூறாயிரமாம் யோனி பேதங்களிலும் (உற்பவியா) உற்பவித்து- தோன்றிப் பிறந்தும், (விழா) பின்னர் இறந்தும், (இங்ஙனம்) உலகில் தடுமாற்றம் அடைந்தே (திரிதரு காலம்) அலைகின்ற காலம்

எத்தனை ஊழி காலம் என்று தெரியாது; (இறைவனே) நீ வாழ்வாயாக; (இனி) இனியேனும் நான் பிறவா வண்ணம் நீ அருள் புரிவாயாக;

(கற்பகம்) தென்னை, (வேழம்) கரும்பு இவைகளுக்கு ஒப்பாக (நீண்டு வளர்ந்துள்ள) பசிய இளந் தினைகள் உள்ள புனத்தில் வீற்றிருந்த கற்பு நிறைந்த மாது - வள்ளி அணைதரும் (அபிராம) அழகனே!

பச்சைக் கற்பூர (தூளி லேபன) பொடிப் பூச்சு அணிந்துள்ளவனும், மல் யுத்தத்துக்கு ஏற்ற புயத்தை உடையவனுமான (பாக சாதனன்) இந்திரனுடைய கற்பக லோகம் - கற்பக விருக்ஷங்கள் உள்ள பொன்னுலகைத் (தாரண ரக்ஷித்தவனே - பொன்னுலகுக்கு நிலைத்த வாழ்வைத் தந்தவனே! (கிரிசாலம்) கிரிசாலத்தவனே மலைக் கூட்டத்தில் விளங்குபவனே!

(விப்ர சமூக) அந்தணர் கூட்டத்தில் இருப்பவனே! (வேதன) வேதத்தில் உள்ளவனே! (பச்சிம பூமி) மேல் புறத்தில் உள்ள (பூமி) விண்ணுலகின் அல்லது பச் - இம - பூமி பொலிவு உள்ள பொன் உலகின்) காவலனே! வெட்சியும் கடப்ப மாலையும் அணிபவனே!

(நீர்) நிரம்பிய கடல் சேறு பட்டெழ, எழுகிரியும் சூரனும் பொடிபட்டழியப் பராக்ரமம் பொருந்திய வேலைச் செலுத்தின பெருமாளே!

(இனிப் பிறவாது நீயருள் புரிவாயே)

## 1205.

(அயில் விலோசனம்) வேல் போன்ற கண்கள் குவியவும், வாசகம் பேச்சு பதறவும், ஆனனம் - முகம் சிறு வேர்வை உறவும்-

(அளக பாரமும்) கூந்தற் பாரம் கலையவும், மேலே விழுந்து (அதர பானம் உண்டு) வாயிதழ் ஊறலைப் பருகி, அன்பு பூண்ட மாதர்களின்

மலைபோன்ற கனத்ததும், குங்குமம் கொண்டதுமான (பயோதரம்) கொங்கைகளை அணைய வேண்டும் என்கின்ற (ஆதரம்) ஆசை - அடியேனால்

(தவிரொணாது) நீக்க முடியாததாய் இருக்கின்றது; (அங்ஙனம் இருந்தபோதிலும்) உனது கருணை மிக்குள்ள தருண பாதமும் இளமை பொலியும் திருவடிகளை (எனக்கு)த் தந்தருள வேண்டுகின்றேன்;

கயிலை யாளியுங் குலிச பாணியுங்
கமல யோனியும் *புயகேசன்-
கணப ணாமுகங் கிழிய மோதுவெங்
கருட வாகனந் தனிலேறும்;
† புய‡லி லேகரும் பரவ வானிலும்
புணரி மீதினுங் கிரிமீதும்-
பொருநி சாசரன் தனது மார்பினும்
புதைய வேல்விடும் பெருமாளே (215)

## 1206. திருவடியைப் பெற

தனத்த தத்தனா தனத்த தத்தனா
தனத்த தத்தனா தனதான

அருக்கி மெத்ததோள் திருத்தி யுற்றுமார்
பசைத்து வக்குமா லிளைஞோரை-
அழைத்து மிக்ககா சிழைத்து மெத்தைமீ
தணைத்து மெத்தமா லதுகூர;
உருக்கி யுட்கொள்மா தருக்கு ளெய்த்துநா
வுலற்றி யுட்குநா னுடன்மேவி-
உழைக்கு மத்தைநீ யொழித்து முத்திபா
லுறக்கு ணத்தநா னருள்வாயே;
Xசுருக்க முற்றமால் தனக்கு மெட்டிடா
தொருத்தர் மிக்கமா நடமாடுஞ்-
சுகத்தி லத்தர்தா மிகுத்த பத்திகூர்
சுரக்க ஒவித்தைதா னருள்வோனே;

---

*புயகேசன் = புயங்க ஈசன் - சர்ப்ப ராஜன்

† புயல் = மேகவண்ண ராகிய விஷ்ணு.

‡ இலேகர் = தேவர்கள்.

X மாவலியிடம் மூவடி மண் கேட்கச் சென்றபோது திருமால் -"சுருக்கம் உற்ற"- குறள் ரூபம் எடுத்தனர் - பாடல் 268-பக்கம் 166 குறிப்பு

திருமால் குறுகிய உருவுடன் சென்றது -

"குறட் பிரமசாரியாய் மாவலியைக் குறும்பு அதக்கி" பெரியாழ்வார். 4-9-7

குறள் - ஈரடி உயரமுள்ள குள்ளன் -"குறியவன் செப்பப்பட்ட எவர்க்கும் பெரியவன்"- திருப்புகழ் 458, பக்கம் - 24 குறிப்பு.

கயிலை யாளியாகிய சிவபிரானும், குலிசாயுத (வஜ்ராயுத) கரத்தனான இந்திரனும், (திருமாலின் உந்தித்) தாமரையில் தோன்றினவனான பிரமதேவனும், (புயகேசன்) பாம்புகளுக்குத் தலைவனான ஆதிசேடனுடைய -

கூட்டமான படங்களின் முகம் கிழிய மோத வல்ல கொடிய கருட வாகனத்தில் ஏறும் -

(புயல்) மேக வண்ணராம் திருமாலும், (இலேகரும்) தேவர்களும் (பரவ) போற்றி நிற்க, (வானிலும்) ஆகாயத்திலும், (புணரி மீதினும்) கடல்மீதும், மலைமீதும் (இருந்து)

சண்டை செய்த (நிசாசரன்) அசுரனாம் சூரனுடைய மார்பிலே புதைந்து அழுந்தும்படி வேலைச் செலுத்தின பெருமாளே!

(தருண பாதமும் தரவேணும்)

# 1206.

(அருக்கி) அருமை பாராட்டி நன்றாகத் தோள்களை (திருத்தியுற்று) ஒழுங்கு படுத்தியும், மார்பை அசைத்தும், தம்மைக் கண்டு மகிழும் மோகம் கொண்ட இளைஞர்களை -

அழைத்து (மிக்க காசு இழைத்து) நிரம்பப் பணத்தை (அவர்கள்) (இழைத்து) தரும்படிச் செய்து, மெத்தையின்மீது அணைத்து, நிரம்பக் காமப்பற்று மிகும்படி -

(அவர்கள்) மனத்தை உருக்கி, (உட்கொள்) தம்வசப் படுத்தும் மாதர்களிடையே நான் இளைப்புற்று, நா வறண்டு அச்சத்துடன் நாணம் கொண்டவனாய் (மேவி) இருந்து

(உழைக்கும் அத்தை) உழைக்குமதை - உழைப்பதை - காலம் தள்ளுவதை நீ ஒழித்தருளி, நான் (முத்தி பாலுற) முத்தி வீட்டை அடைய (உனது) குணத்த - மேன்மை தங்கிய திருவடியைத் தந்தருளுக;

(சுருக்கம் உற்ற மால்) குறள் ரூபம் எடுத்த (வாமனராய் வந்த) திருமாலாலும் அளவிட முடியாது நின்ற ஒப்பற்ற பெருமான், மிகச்சிறந்த நடனம் ஆடும்

(சுகத்தில் அத்தர்) இன்பம் கொண்ட பெருமான் - ஆகிய சிவபிரானுக்கு மிக்க பக்தி முதிர்ந்து பெருக (ஞான) வித்தை (ஞான) மூலப்பொருளை (அல்லது ஞான வித்தையை) உபதேசித்து அருளியவனே!

---

○ வித்தை - வித்தை - ஞானம்; வித்தை - வித்தினை எனவும் கொள்ளலாம்; வித்து - மூலப் பொருள் -"ஒமெனுப தேச வித்து"என்ற இடத்துக் காண்க (திருப்புகழ். 790)

பெருக்க வெற்றிகூர் திருக்கை கொற்றவேல்
பிடித்து குற்றமா ரொருசூரன்-
பெலத்தை முட்டிமார் தொளைத்து நட்டுளோர்
பிழைக்க விட்டவோர் பெருமாளே (216)

## 1207. குணம்பெற

தனந்த தாத்தனத் தனந்த தாத்தனத்
தனந்த தாத்தனத் தனதான

அரும்பி னாற்றனிக் கரும்பி னாற்றொடுத்
தடர்ந்து மேற்றெறித் தமராடும்-
அநங்க னார்க்கிளைத் தயர்ந்த னாப்பியெத்
தரம்பை மார்க்கடைக் கலமாகிக்,
குரும்பை போற்பணைத் தரும்பு நாக்கொதித்
தெழுந்து கூற்றெனக் கொலைசூழுங்-
குயங்கள் வேட்டறத் தியங்கு தூர்த்தனைக்
*குணங்க ளாக்கிநற் கழல்சேராய்;
பொருந்தி டார்ப்புரத் †திலங்கை தீப்படக்
குரங்கி னாற்படைத் தொருதேரிற்-
புகுந்து நூற்றுவர்க் கொழிந்து ‡பார்த்தனுக்
கிரங்கி யாற்புறத் தலைமேவிப்;

---

*குணங்கள் ஆக்கி-

காமுக தூர்த்தனாகிய தன்னைக் குணங்களாக்க வேண்டும் என இப்பாடலில் அருணகிரியார் வேண்டுகின்றார் இவ்வேண்டுகோளுக்கு இணங்கிப் பெண்முகம் நோக்கி மகிழ்ந்திருந்த அவரைச் சண்முக நோக்கி மகிழுமாறு முருகவேள் அருள் பாலித்தனர் என்பதைப் - பாடல் 1189 அடி 4 விளக்குகின்றது. இத்தகைய அருட்பேறு தணிகைப் புராணம் பாடிய கச்சியப்ப முநிவருக்கும் கிடைத்தது என்பது:-

'தொழும்பினரை புடையவர்கள் ஆள்வதுறு கடனென்றும் தொல்லை மாற்றும், செழும்பவள இதழ் மடவார் திறத்தழுந்தும் எனதுளத்தைத் திருப்பித் தன் சீர்க், கொழும் புகழின் இனிதழுத்திப் புதுக்கியருள் தணிகைவரைக் குமரன் பாதம், தழும்புபடப் பலகாலும்

நிரம்ப ஜெயமே மிக்க திருக்கை வெற்றிவேல் கொண்டு குற்றங்கள் நிறைந்த ஒப்பற்ற சூரனுடைய

பலத்தைத் தாக்கி, அவன் மார்பைத் தொளைத்து, தம் பால் நண்பு வைத்த தேவர்கள் பிழைக்க (அந்த வேலைச்) செலுத்தின ஒப்பற்ற பெருமாளே! (தாள் அருள்வாயே)

## 1207.

அரும்பினால் - அரும்பு கொண்ட மலர்ப் பாணங்களைக் கொண்டும், (தனி) ஒப்பற்ற (கரும்பினாலும்) கரும்பு வில்லைக் கொண்டும், (தொடுத்து) அந்தப் பாணங்களைக் கோத்து, (அடர்ந்து மேல் தெறித்து) நெருங்கி மேலே பிரயோகித்துப் போர் செய்யும் -

(அனங்கனார்க்கு) மன்மதனால், இளைப்புற்று, (அயர்ந்து) சோர்வு உற்று, (அணாப்பி) ஏமாற்றி (எத்து) வஞ்சிக்கும் (அரம்பை மார்க்கு) மாதர்களுக்கு (அடைக்கலமாகி) அடைக்கலப் பொருள் போல ஆட்பட்டு -

(தென்னங்) குரும்பை போலப் (பணைத்து) பருத்து (அரும்பு உறா) அரும்பு உற்று - வெளித் தோன்றிக் கோபித்து எழுந்து யமன் போலக் கொலைத் தொழிலைச் சூழ்வதாகும் (கொலைத் தொழிலை மேற்கொள்ளும்)

(குயங்கள்) கொங்கைகளை (வேட்டு) விரும்பி (அறத் தியங்கு) மிகவும் சஞ்சலப்படும் (தூர்த்தனை) காமுகனை நற்குணங்கள் கொண்டவனாகும்படி செய்து உனது நல்ல திருவடியிற் சேர்த்தருளுவாயாக;

(பொருந்திடார்) பகைவர்களுடைய (புரத்து) ஊராகிய இலங்கை தீப்பட்டு எரியும்படி (குரங்கினால்) அநுமாரால் (படைத்து) செய்வித்து, ஒப்பற்ற (அருச்சுனனுடைய) தேரிற் (சாரதியாக)

வீற்றிருந்து, துரியோதனாதியர்க்கு விலகினவனாகி (பார்த்தன்) அருச்சுனனிடம் (இரங்கி) இரக்கம் உற்றவனாய், (ஆற்பு றத்து) ஆல் புறத்து - ஆலிலையின்மீது (அலைமேவி) திருப்பாற் கடலிற் பள்ளி கொண்டு -

---

சாற்றுவதல்லாற் பிறர் சீர் சாற்றாதென் நா" - எனவரும் அப்புராணத்து இறுதிப் பாடலால் விளக்கம் உறுகின்றது.

† அநுமார் இலங்கையை எரித்தது - பாடல் 883-பக்கம் 584 குறிப்பு.

‡ அருச்சுனனுக்கு உதவினது - பாடல் 932, 934, 971 - குறிப்புக்களைப் பார்க்க.

பெருங்கு ரோட்டைவிட் டுறங்கு காற்றெனப்
பிறங்க வேத்தியக் குறுமாசூர்-
பிறங்க லார்ப்பெழச் சலங்கள் கூப்பிடப்
பிளந்த வேற்கரப் பெருமாளே (217)

## 1208. பிறவியற

தனதன தத்தனாத் தனதன தத்தனாத்
தனதன தத்தனாத் தனதான

அலமல மிப்புலாற் புலையுடல் கட்டனேற்
கறுமுக நித்தர்போற் றியநாதா-
அறிவிலி யிட்டுணாப் பொறியிலி சித்தமாய்த்
தணிதரு முத்திவீட் டணுகாதே;

பலபல புத்தியாய்க் கலவியி லெய்த்திடாப்
பரிவொடு தத்தைமார்க் கிதமாடும்-
பகடிது டுக்கன்வாய்க் கறையனெ னத்தராப்
படியில்ம வித்தர்தாற் றிடலாமோ;

குலகிரி பொற்றலாய்க் குரைகடல் வற்றலாய்க்
கொடியஅு ரக்கரார்ப் பெழ*வேதக்-
குயவனை நெற்றியேற் றவனெதிர் குட்டினாற்
குடுமியை நெட்டைபோக் கியவீரா;

கலைதலை கெட்டபாய்ச் சமணரை நட்டகூர்க்
†கழுநிரை முட்டஏற் றியதாளக்-

---

* வேதக் குயவன் - பிரமன் - "வேதக் குலாலன்" என்றார் 713-ஆம் பாடலில். பிரமனைக் குட்டியது - பாடல் 608 - பக்கம் 406 குறிப்பு.

† சமணரைக் கழுநிரை முட்ட ஏற்றிய தாளக் கவிதை -

"நறுமுறு குரைச் சமணை நிரைகழு நிறுத்தியன.. தமிழ் விரகனை கவித் தொகையே" - ஆளுடைய பிள்ளை - கலம்பகம் 35. எண்ணாயிரம் சமணர் கழு ஏறினது - பாடல் 332-பக்கம் 334 குறிப்பு

பெரிய குறோட்டைவிட்டு (சூரன் தொலைந்தான் என்ற நிம்மதியு டன் குறட்டை விட்டுக்) காற்றென உறங்கிப் பிறங்கவே பெரு மூச்சுக் காற்றுடன் அறிதுயில் அமர்ந்து விளங்கவே (தியக்குறும்) கலக்கமுறும் மாமரமாய் நின்றசூரனும் (அவனுக்கு அரணாயிருந்த)

(பிறங்கல்) மலை - ஏழு மலைகளும் ஆர்ப்பு எழ - அஞ்சிக் கூச்சல் இடவும், (சலங்கள் கூப்பிட) கடல்கள் ஒலிட்டுக் கதறவும், (பிளந்த) அம் மாமரத்தைப் பிளந்தெறிந்த வேலாயுத கரப் பெருமாளே!

(குணங்களாக்கி நற்கழல் தாராய்)

## 1208.

அலம் அலம் இப் புலாற் புலையுடல் கட்டனேற்கு (கட்டனேற்கு இப் புலால் புலையுடல் அலம் அலம்) கட்டனேற்கு - கஷ்டப்படுவதற் கென்றே பிறந்த எனக்கு இந்தப் (பு லால்) மாமிசப் பிண்டமாம் (புலை) இழிவான உடல் போதும் போதும்; அறுமுக வேளே! ஜீவன் முத்தர்கள் போற்றும் தலைவனே!

அறிவில்லாதவன் நான், ஒருவருக்கு (இட்டுணாத) இட்ட பின் உண்ணவேண்டும் என்னும் அறிவு இல்லாதவன் நான், (சித்தம் மாய்த்து) மனத்தை ஒடுக்கி அழித்து, (அணிதரு) அழகு நிறைந்த முத்தி வீட்டைச் சேராமல்

பலபல வகையில் புத்தியைச் செலுத்தி, புணர்ச்சியின்பத்தில் களைப்பு உறாத காதலுடன், கிளியன்ன பெண்களோடு (இதம் ஆடும்) இனிமைப் பேச்சுக்களைப் பேசும்

(பகடி) வெளி வேஷக்காரன், (துடுக்கன்) துஷ்டன் - குறும்பு செய்பவன், (வாய்க் கறையன்) வாய் மாசு (குற்றம்) உடையவன் என்று (தரா) தரையில் (படியில்) பூமியில் (தராப் படியில்) பூமியில் மனிதர்கள் (தூற்றிடலாமோ) தூற்றலாமோ - குறை கூறிப் பழிக்கலாமா!

(குலகிரி) (மேரு) கிரவுஞ்சம் (பொற்றலாய்) பொட்டலாய்-பாழிடமாய் அழிபட்டுக், குரை கடல் - ஒலிக்கும் கடல் (வற்றலாய்) வற்றிப்போய்ப் பொல்லாத அரக்கர்களின் (ஆர்ப்பு எழ) அலறும் கூச்சல் கிளம்ப, வேதம் வல்ல

(குயவன்) குலாலனாம் பிரமனை (நெற்றியேற்று) நெற்றியிற் படும்படி அவன் எதிரே இருந்து அவனைக் குட்டின குட்டால், அவனது குடுமியையும் (நெட்டை) ஆணவத்தையும் (போக்கிய) சிதற அடித்து ஒழித்த வீரனே!

கலை தலை கெட்ட - கலை ஞானம் அடியோடு கெட்டுப் போயிருந்தவரும், - பாய் உடை உடையவருமான சமணரை நடப்-பட்டிருந்த கூரிய கழுக்களின் வரிசையில் (முட்ட) ஒருவர் பாக்கி இல்லாது (எண்ணாயிரவரையும்) ஏற்றின பெருமாளே! தாளத்துடன்

கவிதையும் வெற்றிவேற்கரமுடன் வற்றிடாக்
*கருணையு மொப்பிலாப் பெருமானே (218)

## 1209. திருவடியைப் பெற

தனன தான தந்த தந்த, தனன தான தந்த தந்த
தனன தான தந்த தந்த தனதான

அனக பார முங்கு லைந்து அரிய பார்வை யுஞ்சி வந்து
அனுகி யாக மும்மு யங்கி யமுதூறல்-
அதர பான மும்பு கர்ந்து அறிவு சோர வும்மொ ழிந்து
அவச மாக வும்பு ணர்ந்து மடவாரைப்;
† பனக னாவி யுந்த ளர்ந்து பதறு மாக மும்ப யந்து
பகலி ராவை யும்ம றந்து திரியாமற்-
பரம ஞான முந்தெ ளிந்து பரிவு நேச முங்கி ளர்ந்து
பகரு மாறு செம்ப தங்கள் தரவேணும்;
துளப மாய னுஞ்சி றந்த கமல வேத னும்பு கழ்ந்து
தொழுது தேட ரும்ப்ர சண்ட னருள்பாலா-
சுரர்கள் நாய கன்ப யந்த ‡ திருவை மாம ணம்புணர்ந்து
சுடரு மோக னம்மி குந்த மயில்பாகா;
களப மார்பு டன்த யங்கு குறவர் மாது டன்செ றிந்து
‡ கலவி நாட கம்பொ ருந்தி மகிழ்வோனே-
கடிய பாத கந்த விர்ந்து கழலை நாடொ றுங்கி ளர்ந்து
கருது வார்ம னம்பு குந்த பெருமானே (219)

---

* "கருணை மேரு"- முருகவேள் - பாடல் 272 அடி 8

† பனகன் = குற்ற முள்ளவன்

‡ தேவசேனையை "மணந்தார்"; வள்ளியுடன் "கலவி நாடகம்" பொருந்தினார் என்றார் அழகாக. "அக் களவிற் புணர்ச்சியை உடைமையான் வள்ளி சிறந்தவாறும்"- பரிபாடல் உரை 9-18. நேர் முறையில் தேவசேனையை மணந்த முருகவேள் - களவிற் புணர்ந்தார் வள்ளியை - "களவிற் பல்வகை ஒழுக்கெலாம் காட்டிய கள்வன்" தணிகைப் புரா. களவு. 637

(கவிதை) பாடும் பாடல்களும், வெற்றிவேல் ஏந்தும் திருக்கரமும், வற்றாத கருணையும் விளங்கும் பெருமாளே! இணையிலாத பெருமாளே!

(மனிதர் தூற்றிடலாமோ)

## 1209.

கூந்தல் பாரமும் கலைபட்டு, அருமையான கண் பார்வையும் செந்நிறம் உற்று, நெருங்கிச் சென்று, உடலுடன் சேர்ந்து, அமுதுபோல இனித்து ஊறும்

(அதரபானம் நுகர்ந்து) வாயிதழ் ஊறலைப்பருகி அனுபவித்து, அறிவு தடுமாற்றத்துடன் பேசி, (அவசமாகவும்) காம மயக்குடன் (புணர்ந்து மடவாரை) மடவாரைப்-பெண்களைப் (புணர்ந்து) கூடிப்-

(பாதகன்) குற்றத்துக்கு ஆளான நான் - (ஆவியும் தளர்ந்து) உயிரும் சோர்வுற்று, கலக்கமுற்ற (ஆகமும்) உடலும் பயங்கொண்டு, பகல் - இரவு என்னும் பிரிவினையும் கவனியாது மறந்து அலைச்சல் உறாமல் -

மேலான ஞானத்தை தெளிந்துணர்ந்து, அன்பும் நண்பும் கலந்து மேலெழுந்து, (உன்னைப்) பகருமாறு - போற்றிப் புகழுமாறு செவ்விய உனது திருவடிகளைத் தந்தருள வேணும்-

துளவ மாலை அணிந்த திருமாலும், சிறப்புடன் தாமரையில் வீற்றிருக்கும் பிரமனும் புகழ்ந்தும், தொழுதும் தேடுதற்கு அரியரான பெரு வீரன் (சிவபிரான்) அருளிய குழந்தையே!

தேவர்களுக்குத் தலைவனான இந்திரன் பெற்ற லக்ஷ்மீகரம் பொருந்திய தேவசேனையைச் சிறப்புடன் திருமணம் செய்துகூடி விளங்கும்படியான (மோகனம்) கவர்ச்சி மிகப் பெற்ற மயிலை நடத்துபவனே! மயில் வாகனனே! அல்லது திருமணம்கூடி, விளங்கும்படியான ஆசை மயக்கம் மிக்கிருந்த மயில் அனைய அத்தேவசேனையைப் பாகம் பிரியாதிருப்பவனே!

(களபம்) கலவைச் சாந்து பூசின மார்புடன் விளங்கும் குறவர் மாது - வள்ளியுடன் நெருங்கிப் பழகி அவளுடன் "கலவி நாடகம்" -புணர்ச்சிக் கூத்துக்களை உடையவனாய் மகிழ்ந்தவனே!

பொல்லாத பாபச் செயல்களை விட்டொழித்து, (உனது) திருவடியை நாள்தோறும் நிரம்பக் கருத்தில் தியானிப்பவர்களுடைய மனத்திற் புகுந்து விளங்கும் பெருமாளே!

(செம்பதங்கள் தரவேணும்)

## 1210. ஞானம்பெற

தானான தான தனதன, தானான தான தனதன
தானான தான தனதன தனதான

ஆசார வீன னறிவிலி கோபாப ராதி யவகுண
னாகாத நீச னநுசிதன் விபரீதன்-
ஆசாவி சார வெகுவித மோகாச ரீத பரவச
னாகாச நீர்ம ணனல்வளி யுருமாறி,
*மாசான நாலெண் வகைதனை நீநானெ னாத அறிவுளம்
வாயாத பாவி யிவனென நினையாமல்-
மாதாபி தாவி னருளல மாறாம காரி லெனையினி
மாஞான போத மருள்செய நினைவாயே
வீசால வேலை சுவறிட மாசூரர் மார்பு தொளைபட
வேதாள ராசி பசிகெட அறைகூறி-

---

*மாசான நா லெண் வகை: குணம் - உயிர்ப் பொருள்களின் பண்பு 32

குணப் பண்பு 27- அறிவு, அருள், ஆசை, அச்சம், மானம், நிறை, பொறை, உவப்பு, இரக்கம், நாண், வெகுளி, துணிவு, அழுக்காறு, அன்பு, எளிமை, எய்த்தல், துன்பம், இன்பம், இளமை, மூப்பு, இகல், வென்றி, பொச்சாப்பு, ஊக்கம், மறம், மதம், மறவி.

தொழிற் பண்பு 5. துய்த்தல், துஞ்சல், தொழுதல், அணிதல், உய்த்தல்.

இனி நா லெண் வகை 4 + 8 பன்னிரண்டு எனக்கொண்டால் - அவை உயிர் வேதனை 12, அனல், சீதம், அசனி, புனல், வாதம், ஆயுதம், விடம், மருந்து, பசி, தாகம், பிணி, முனிவறாமை

இனி நாலும் எட்டும் எனக்கொண்டால் - "நாலு"- உயிர்த்தோற்றம் நான்கு - கருப்பை, முட்டை, நிலம், வியர்வை; "எட்டு" -ஆணவமல காரியம் 8 - அவை - விகற்பம், கற்பம், குரோதம், மோகம், நகை, கொலை, அஞர், மதம்.

"மாசான நா லெண் வகை"- என்பதற்குக் குற்றமுள்ள முப்பத்திரண்டு தத்துவங்கள் - எனவும் பொருள் கூறுவர் - தத்துவங்களின் விவரம் - பாடல் 157 -பக்கம் 366 குறிப்பு

# 1210.

ஆசாரக் குறைவு உடையவன், அறிவில்லாதவன், (கோபாபராதி) கோபம் காரணமாய் (அபராதம் பல) குற்றம் பலசெய்பவன், (அவகுணன்) கெட்ட குணத்தை உடையவன் (துர்க்குணன்), யாருக்கும் ஆகாத (நீசன்) இழிந்த தன்மையுடையவன் - அநுசிதன், தகாத காரியங்களைச் செய்யும் அசுத்தன், (விபரீதன்) மாறுபாடான புத்தியை உடையவன் -

(ஆசா விசாரம்) (மண், பெண், பொன் என்னும்) மூவாசைகளிலேயே எண்ணத்தைச் செலுத்துபவனாய் (வெகுவித) பலவிதமான மோகா - ஆசைச் (சரித) சரித - சரித்திரங்களை - வரலாற்றை உடைய (அல்லது மோக - ஆசரித - ஆசைச் செயல்களைக் கைக் கொண்ட) (பரவசன்) தன்வசம் இழந்தவன்; விண், நீர், மண், தீ, காற்று எனப்படும் பஞ்ச பூதக் கலப்பால் உருவம் மாறி மாறி - (வெவ்வேறு உடம்பெடுத்து)

(மாசான) குற்றங்களுடன் கலந்த (நாலெண் வகை தனை) (குணப் பண்பு, தொழிற் பண்பு ஆகிய முப்பத்திரண்டு குணங்களைக் கொண்ட (இந்த உருவங்களை) நீ என்பதும் நான் என்பதுமான பிரிவைக் காணாத ஞான உள்ளம் வாய்க்கப்பெறாத பாவி - இவன் என்று (என்னை) நினைத்து (நீ) ஒதுக்கிவிடாமல் -

(மாதா பிதாவின்) தாய் தந்தையரின் (அருள் நலம்) அருள் நிறைந்த உபகாரச் செயல்கள் (மாறா) நீங்குதல் இல்லாத (மகாரில்) குழந்தைகளைப் போல (தாய் தந்தையரின் அன்பும் அருட் செயல்களும் நீங்காத குழந்தைகள் போல) எனை (உன் குழந்தையாகிய என்மீது) இனிமேலாயினும் அம்மையப்பனாகிய நீ (அருள் பாலித்து) (மாஞான போதம்) சிறந்த ஞானோபதேசத்தை உபதேசித்தருள் செய்வதற்கு (நினைவாயே) திருவுள்ளத்தில் நினைத்தருளுவாயாக.

வீசால - விசால - பரந்த (அல்லது வீசு - ஆலம் - வீசும் திரைகளுடைய அல்லது நஞ்சைக் கக்கின) கடல் வற்றிப் போகவும், பெரிய சூராதிகளின் மார்பு தொளைபடவும் * வேதாளகணங்களின் பசி தணியவும் (அறை கூறி) போருக்கு வாருங்கள் என அசுரர்களைக் கூவி அழைத்து,

---

* வேதாளங்களின் பசி - சூரசம்மாரத்தில் தீர்ந்ததை -

"சூரொடும் பொர வஞ்சிகுடிய பிள்ளையார்படை தொட்டநாள் ஈருடம்பு மிசைந்து இரண்டு உதிரப்பரப்பும் இறைத்தனம்" - தக்கயாக. 231

மேகார வார மென அதிர் போர்*யாது தான
ரெமபுர
மீதேற வேல்கொ டமர்செயு மிளையோனே;
† கூசாது வேட னுமிழ்தரு நீராடி யூனு னெனுமுரை
கூறாம னிய அவனுகர் தருசேடங்-
கோதாமெ னாம லமுதுசெய் வேதாக மாதி முதல்தரு
‡ கோலோக நாத குறமகள் பெருமாளே (220)

## 1211. ஞானபூஜை

தானனா தத்த தானனா தத்த
தானனா தத்த தனதான

X ஆசைகூர் பத்த னேன்மனோ பத்ம
மானபூ வைத்து நடுவேயன்-

* யாது தானர் - ராக்ஷதர்கள் - அரக்கர்கள் - "வைதனர் யாது தானர், வலித்தனர் வானரேசர்" கம்பரா. கும்பக. 174 "யாது தான ராவார் அசுரரிலே சிறப்புடையார்; திதியின் மக்கள் யாதுக்களும் தனுவின் மக்கள் தான வருமாகிய அநந்த கோடி அசுரர்கள்"- - தக்கயாக. (348).

† கண்ணப்பர் சரவாறு - பாடல் 651-பக்கம் 526; பாடல் 668 அடி 3 பார்க்க.

"வேடன் உமிழ் தருநீர் ஆடி"- "வாயின் மஞ்சன நீர் தன்னை விளைத்தவன்புமிழ்வார் போல விமலனார் முடிமேல் விட்டார்"

"ஊன் உண் எனும் உரை கூறா மன் ஈய"- "ஊனின் திரு அமு தெதிரே வைத்து.

'கொழுவிய தசைகள் எல்லாம் கோலினிற் றெரிந்து கோத்தங் கழலுறு பதத்திற் காய்ச்சிப் பல்லினா லதுக்கி நாவிற் பழகிய இனிமை பார்த்துப் படைத்த வில் விறைச்சி சால அழகிது நாயனீரே யமுதுசெய்தருளு மென்றார்; இன்ன விம் மொழிகள் சொல்லி யமுதுசெய் வித்த வேடர்"

- பெரியபுரா. கண்ணப்பர். 123, 125

"கானவர் குருசில்... உண்டுமிழ் தீ நீர் உவந்தனர் ஆடியும் விருப்படிக் கொண்ட மிச்சிலூன் மிசைந்தும்" - திருவாரூர் நான்மணி. 37

‡ கோ - கோவே.

X முருகா! உன்மீது ஆசைகொண்ட நான் - என்னுடைய "மனம்" என்பதையே தாமரை மலராகக் கொண்டு அதை "அன்பு" என்னும் நார்கொண்டு, என்னுடைய "நா" என்னும் இடத்திலே அழகாக வைத்துக் கட்டி, அதற்கு "ஞானம்", என்னும் நறுமணத்தை ஊட்டி, "நல்லறிவு" என்னும் வண்டு அதை மொய்க்கும்படி வைத்து, மந்த்ர பூர்வமாக இங்ஙனம்

மேக ஆரவாரம் என - (சப்த) மேகங்களின் பேரொலியோ இது என்னும்படி, அதிர்போர் - முழங்கும் போரில் (யாது தானர்) அரக்கர்கள் (எமபுரம் மீதேற) யம பட்டணம் போய்ச் சேரும்படி (இறக்கும்படி), வேல்கொண்டு அமர் புரிந்த இளையோனே!

(கூசாது) அஞ்சாது (வேடன்) கண்ணப்பன் (உமிழ்தரு) வாயினின்றும் உமிழ்ந்த நீராடி) நீர் அபிஷேகத்தைப் பெற்று, (ஊன் உண் எ (ன்)னும் உரை) இந்த ஊன் சுவைப்புளது, இதை உண்டருள் என்னும் சொல்லைக் (கூறா) கூறி - சொல்லி, (மன்) நிரம்ப, (ஈய) கொடுக்க, (அவன்) அந்த வேடன் (நுகர்தரு) எச்சில் செய்து கொடுத்த (சேடம்) பாக்கி,

(கோது ஆம்) குற்றம் ஆம் - தகாது, எ(ன்)னாமல் - என்று பாவிக்காமல் அமுது (செய்) உண்டவரும், (வேத ஆகம ஆதிமுதல்) வேதங்களுக்கும் ஆகமங்களுக்கும் ஆதிமுதல்வரும் ஆன சிவபிரான் (தரு) பெற்ற (கோ,)கோவே தலைவனே! உலகங்களுக்கு நாதனே! குறமகள் - வள்ளியின் பெருமாளே!

(ஞானபோதம் அருள்செய நினைவாயே)

## 1211.

ஆசைகூர் (உன்மீது ஆசைமிக்க) பத்தனேன் - பக்தியுள்ள நான் (மனோபத்மமான) மனம் எனப்படும் தாமரை மலரைவைத்து நடுவே - இடையில் - (அன்பு)

---

ஞானப் பூமாலை ஒன்றைக்கட்டி, உனது பவளம் அனைய திருவடியிற் சாத்தும் பாக்கியத்தைப் பெறுவேனோ! என்பது இப்பாடலின் முதல் நான்கடியின் கருத்து. "மனம்" என்பது எண்ணங்களைக் குறிக்கும். "நூறாயிர மனமுடை மாபாவிகள்" "முப்பது கோடி மனத்தியர்"- திருப்புகழ். 583, 1190 எனவருவன காண்க. "நாவிலே கட்டி" என்றதனால் இது "ஞானப் பாமாலையாம் பூமாலை"- எனக் கொள்ளவேண்டும்.

'பத்தி வலையிற் படுவோன்' ஈசன் ஆதலினால் 'ஆசை கூர் பத்தன்' என்றார்; ஈசன் 'மனத்தகத்தான்' ஆதலினாலும் பூவினுட் சிறந்தது பொறிவாழ் பூவே' என்றபடி பூவினுள் - பத்மம் - தாமரையே சிறந்தது ஆதலினாலும் 'மனோ பத்மம்' என்னும் பூவை வைத்து இம்மாலையைக் கட்டுகின்றேன் என்றார். 'ஒடுங்கி ஒடுங்கி உணர்ந்தங் கிருக்கில்... மடங்கி மடங்கிடும் மன்னுயிருள்ளே, நடங்கொண்ட கூத்தனும் நாடுகின்றானே' எனத் திரு மந்திரமும் (666) 'சும்மா இருக்கின்ற திறம் அரிது' எனத் தாயுமானாரும் கூறுதலால், மனம் கட்டப்பட்டா லொழிய இறை

(தொடர்ச்சி 512-ஆம் பக்கம் பார்க்க)

பானநூ லிட்டு நாவிலே சித்ர
மாகவே கட்டி யொருஞான;

வாசம்வீ சிப்ர காசியா நிற்ப
மாசிலோர் புத்தி யளிபாட-

*மாக்ருதா புஷ்ப மாலைகோ லப்ர
வாளபா தத்தி லணிவேனோ;

---

(511 ஆம் பக்கத் தொடர்ச்சி)

வனைக் காணுதல் அரிதாதலின் 'மனோபத்மமான பூ வைத்து... கட்டி' என்றார். 'அன்போ டுருகி அகங் குழைவார்க் கன்றி என்போன் மணியினை எய்த ஒண்ணாதே', 'அன்பி னுள்ளாகி அமரும் அரும்பொருள்' என்று திருமந்திரம் (272, 279) கூறுதலால் 'அன்பான நூலிட்டு' மாலையைக் கட்ட விரும்புகின்றார்; பின்னும் 'அர்ச்சனை பாட்டே ஆகும்' என்று பெரிய புராணமும் (தடுத்தாட் 70) 'ஆரூர் இனிதமர்ந்தார் தாம் படிமக்கலம் வேண்டுவரேல் தமிழ் மாலைகளால் படிமக்கலம்செய்து தொழுதும்மட நெஞ்சமே' 'வாயே வாழ்த்து கண்டாய்', 'நா நாளும் நவின் றேத்த' எனத் தேவாரம் (அப்பர் 4-102-3; 4-9-5; சம்பந்தர். 2-41-3-) முழங்குதலால் - இறைவன் திருப்பணியாம் மாலையைக் கட்டுதற்குப் புனிதமான இடம் 'நா' எனக்கொண்டு 'பாமாலை' சூட்டவே விரும்புகின்றேன் என்கின்றார்; 'ஞானக் கிரியையே நன்முத்தி நாடலே' எனத்திரு மந்திரம் (1474) உரைப்பதால் நான் கட்டும் மாலையில் ஞானத்தின் நறுமணம் வீசவேண்டும் என்கின்றார்; 'அறிவுடையார் நெஞ்சத் தங்கு நின்றானே' எனத் திருமந்திரம் 2364) கூறுவதால் 'புத்தி' (அறிவு) என்னும் வண்டு அம்மாலையில் மொய்க்க வேண்டும் எனவும் விரும்புகின்றார். 'உறுநர்த் தாங்கிய மதனுடை நோன் தாள்' எனத்திரு முருகாற்றுப் படையும் 'நின்னிற் சிறந்த நின்தாள் இணையவை' எனப்பரிபாடலும் (4) கூறுதலால்மாலையைத் திருவடியிற் சூட்டுதலே சிறந்தது எனத் தெளிந்து நான் கட்டும் மாலையை 'ப்ரவாள பாதத்தில்' அணிவேனோ' என விழைகின்றனர். மேலும், மனமாகிய பத்மம் (தாமரை) கட்டப் படுவதால் அந்தத் தாமரையில் வாசம் செய்யும் திருமகளும் கலைமகளும் கட்டப்பட்டு இவருக்கு வசப்படுவர் - கல்வியும் செல்வமும் வசப்படும் - என்பதும் தொனிதரும்.

---

* "மாத்ருகா புஷ்ப மாலை" - எனவும் பாடம் - "ஐம்பத்தோ ரெழுத்துக்களை வைத்து பாடப்படும்மாலை 'மாத்ருகாமாலை'

"அ" கார முதல் "க்ஷ" காரம் இறுதியாக ஐம்பத்தொரு

*(அன்பான நூல் இட்டு)* அன்பு என்கின்ற நாரைக்கொண்டு நாவிலே நாக்கு என்கின்ற இடத்திலே *(சித்ரமாகவே கட்டி)* விசித்திரமாகவே - அழகாகவே *(ஒரு மாலையைக்)* கட்டி *(அந்த* மாலைமீது ஒப்பற்ற ஞான வாசம் -

*(ஞானம் என்னும்)* நறுமணத்தை வீசித்தடவி, அந்த மாலை *(ப்ரகாசியா நிற்ப)* ஒளியுடன் விளங்கவும், *(மாசு இல் ஓர் புந்தி) (அந்த மாலையில்)* குற்றமில்லாத ஒரு புந்தி *(அறிவு)* என்கின்ற *(அளிபாட)* வண்டு மொய்த்துப் பாடவும் - இவ்வாறு

*(மாக்ருதா)* என்னால் *(மானசீகமாகவே)* கட்டப் படுகின்ற *(அல்லது - மாத்ருகா மந்த்ர மாலையான) (புஷ்பமாலை)* பூமாலையை *(கோலம்)* அழகிய *(ப்ரவாள பாதத்தில்)* பவளம்போற் சிவந்த திருவடியில் *(அணிவேனோ)* அணியும் பாக்கியத்தைப் பெறுவேனோ!

---

எழுத்துக்களாற் பிரிக்கப்பட்ட நாதம் என்று பெயருள்ள சப்த மந்திரங்கள் 1445 வகையாக உண்டாயின. அவற்றுள் "மாத்ருகா மந்திரமே" எல்லா மந்திரங்களிலும் உயர்ந்தது. இம்மந்திரத்தையே மேளா மந்திரம் எனவும், மாலா மந்திரம் எனவும் வேத சிவாகமங்கள்கூறின. இம்மந்திரமான ஐம்பத்தோரக்கரங்களையும் சுப்பிரமணியக் கடவுள் தமக்கு வடிவாகக் கொண்டு விளங்குவர். இதன் விவரம் வருமாறு:- "அ" தலையாகவும், "ஆ"-நெற்றியாகவும் "இ"-வலக்கண்ணாகவும், "ஈ" - இடக்கண் ஆகவும், "உ" வலச்செவியாகவும், "ஊ" இடச்செவியாகவும், "இறு" வலக் கபோலமாகவும், "இறூ" இடக் கபோலமாகவும், "இலு - இலூ"- என்பன நாசிகளாகவும், "ஏ" மேலுதடாகவும் "ஐ" கீழுதடாகவும், "ஓ" "ஔ" - என்பன மேலுங் கீழும் உள்ள பற்களாகவும், "அம்", "அஃ" என்பன முரசுகளாகவும், "க", "க்க", "க" (gha) "க" (gga) "ங" என்பன வலத்திருக் கரங்களாகவும், "ச", "ச்ச", "ஜ", "ஜ்ஜ", "ஞ" , என்பன இடத் திருக்கரங்களாகவும், "ட", "ட்ட", "ட", (da) "ட" , (dda) "ண", என்பன வலப் பாதங்களாகவும், "த", "த்த", "த", (dha) "த" (ddha) "ந", என்பன இடப் பாதங்களாகவும், "ப",என்னும் எழுத்து வயிறாகவும், "ப்ப", "ப" (bha) என்னும் எழுத்துக்கள்முறையே வலப் பாரிசம், இடப் பாரிசம் ஆகவும், "ப", (bbha) சுந்தமாகவும், "ம", இருதயமாகவும், "ய", "ர", "ல", "வ", "ச","ஷ", "ஸ", என்னும் ஏழெழுத்துக்களும் சத்த தாதுக்களாகவும், "ஹ" ஆன்மா ஆகவும், ள "க்ஷ", உபசாரங்களாகவும் திருவுருவங் கொண்டு சொற்பிரபஞ்சங்களை எல்லாம் இயக்க நிற்பர்- சுப்ரமண்ய பராக்ரமம் - மாத்ருகா மந்திர மூர்த்தி. பக்கம்.260 - இப்பாடலை மகா மந்திரங்களுள் "மது மதீயம்" என்னும் பகுதி என்று வள்ளிமலைத் திருப்புகழ் சுவாமிகள் கூறுவர்.

*மூசுகா னத்து மீதுவாழ் முத்த
    முரல்வே டிச்சி தனபார-
  மூழ்குநீ பப்ர தாபமார் பத்த
    மூரி †வே ழத்தின் மயில்வாழ்வே,
வீசுமீ னப்ப யோதிவாய் விட்டு
    வேகவே தித்து வருமாசூர்-
  வீழமோ திப்ப ராரைநா கத்து
    வீரவேல் தொட்ட பெருமாளே (221)

## 1212. மயல் ஒழிய

தானத் தனத்ததன தானத் தனத்ததன
    தானத் தனத்ததன தனதான

ஆசைக் கொளுத்திவெகு வாகப் பசப்பிவரு
    மாடைப் பணத்தையெடெ னுறவாடி-
  ஆரக் கழுத்துமுலை மார்பைக் குலுக்கிவிழி
    யாடக் குலத்துமயில் கிளிபோலப்,
பேசிச் சிரித்துமயிர் கோதிக் குலைத்துமுடி
    பேதைப் படுத்திமய விடுமாதர்-
  பீறற் சலத்துவழி நாறப் படுத்தியெனை
    பீடைப் படுத்துமய லொழியாதோ;

---

* மூசுதல் - மொய்த்தல் - 'வண்டு மூசு தேறல் மாந்தி' - நெடுநல். 33

† வேழத்தின் மயில் - தேவசேனை - யானை வளர்த்த மயில் - இது ஒரு அருமைப் ப்ரயோகம்.

'தன்னதாகிய தனிப்பெருங் களிற்றினை விளித்தனன் இந்திர மொழிவான்'

'இந்த மங்கை நந் திருமக ளாகும் ஈங் கிவளைப்
புந்தி யன்பொடு போற்றுதி இனையவள் பொருட்டால்
அந்த மில்சிறப் பெய்துமேல் என்றலும் அவனைக்
கந்த மேற்கொடு நன்றெனப் போயது களிறு;
அவ்வி யானையே போற்றிய தனையகா ரணத்தால்
தெய்வ யானையென் றொருபெயர் எய்தி'

- கந்தபுரா. 1-18-8-10

(மூசு கானத்துமீது) (சிள் வண்டுகள்) மொய்க்கும் காட்டிலே (அல்லது - வள்ளியை நாடி நீ - மோப்பம் பிடித்துச் சென்ற காட்டிலே - வாழ்ந்திருந்த - முத்துப்போல அழகிய (மூரல்) பற்களைக் கொண்ட (வேடிச்சி) வேட்டுவப் பெண் - வள்ளியின் கொங்கைப் பாரத்தில் -

முழுகி அழுந்திக் கிடக்கும் (நீபப் ப்ரதாப) கடப்ப மாலையைச் சிறப்புடன் அணியும் (மார்ப அத்த) மார்பை உடைய ஐயனே! (மூரி) வலிமையை உடைய (வேழத்தின்) ஐராவத ஆனை வளர்த்த மயில் அனைய தேவசேனையின் கணவனே!

(வீசு) அலை வீசுவதும் (மீனம்) மீன்கள் நிறைந்ததுமான (அல்லது மீன்களை அலைகளில் வீசி எறியும்) (பயோதி) கடல் (வாய்விட்டு வேக) ஒலிசெய்து வேவ - வெந்து வற்றவும் (வேதித்து வரு) தேவர்களை வருத்திவந்த பெரிய சூரன் (அல்லது மாமரமாய் நின்ற சூரன்)

வீழ - அழிபட்டு விழவும், தாக்கி, பருத்த அடிப் பாகத்தை உடைய (நாகத்து) மலையாகிய கிரவுஞ்சத்தின்மீது வீரம் பொருந்திய வேலாயுதத்தைச் செலுத்தின பெருமாளே!

(மாலை- ப்ரவாள பாதத்தில் அணிவேனோ)

## 1212.

ஆசையை நன்கு மூட்டி (வெகுவாக) வெகு பக்குவமாகப் (பசப்பி) இன்முகம், இனிய பேச்சு - காட்டி வஞ்சித்து, வரும் - வரவேண்டிய - ஆடைப் பணத்தை ஆடை வகைகளையும், பணத்தொகையையும் (அல்லது மாடைப் பணத்தை) பொற்காசினை (எடு என் உறவாடி) எடுத்துத் தா - என்று நண்புப் பேச்சுக்கள் பேசி -

(ஆரக் கழுத்து) முத்து மாலை அணிந்த கழுத்தையும், கொங்கை தங்கு மார்பையும் குலுக்கி (விழி ஆட) கண்கள் அசைய, சிறப்புள்ள மயில்போல உலவியும், கிளிபோலப்,

பேசியும், சிரித்தும், தலை மயிரை ஆய்ந்தும், அவிழ்த்தும், முடிந்தும், பேதைப்படுத்தி (எனக்கு) பேதைமையை ஊட்டி - என்னை அஞ்ஞானத்துக்கு ஆளாக்கி, மயக்கத்தைத் தருகின்ற மாதர்களின்

பீறல் - கிழிபட்டது போன்ற - சலத்து வழி - மூத்திரம் நீர் வரும் வழியை (அல்குலை) நாறப்படுத்தி - வெளிக்காட்டி, என்னைப் (பீடை படுத்தும்) துன்பத்துக்கு ஆளாக்கும், மயல் - காம மயக்கம் (ஒழியாதோ) என்னை விட்டு நீங்காதோ!

*தேசத் தடைத்துபிர காசித் தொலித்துவரி
†சேடற் பிடித்துதறு மயில்வீரா-
தேடித் துதித்த அடி யார்சித்த முற்றருளு
சீர்பொற் பதத்தஅரி மருகோனே;
நேசப் படுத்தியிமை யோரைக் கெடுத்தமுழு
நீசற் ‡கனத்தமுற விடும்வேலா-
நேசக் குறத்திமய லோX டுற் பவித்தபொனி
நீர்பொற் புவிக்குள்மகிழ் பெருமாளே (222)

## 1213. பொதுமகளிர் மீது மயக்கு அற

தான தான தனத்தன தான தான தனத்தன
தான தான தனத்தன தனதான

ஆசை நேச மயக்கிகள் காசு தேடு மனத்திகள்
ஆவி சோர வுருக்கிகள் தெருமீதே-
யாவ ரோடு நகைப்பவர் வேறு கூறு விளைப்பவர்
ஆல கால விழிச்சிகள் மலைபோலு;
மாசி லாத தனத்தியர் ஆடை சோர நடப்பவர்
வாரி யோதி முடிப்பவர் ஒழியாமல்-
வாயி லூற லளிப்பவர் நாளு நாளு மிணுக்கிகள்
வாசல் தேடி நடப்பது தவிர்வேனோ;

---

*தேசம் - ஒளி - 'தேசம் உடையாய் திற வேலோ ரெம்பாவாய்'- திருப்பாவை.
" தேசமாக்கும் திருக்கோயில்"- சம்பந்தர். 2-119-4
† 'சேடன் முடி திண்டாட ஆடல்புரி... மயில்'- மயில்விருத். 2
'அனந்தன் மணிசேர் ஆயிரம் இருந்தலைக ளாய்விரி பணங் குருதியாக முழுதுங் குலைய வந்தறையுமே" - மயில் வகுப்பு.
‡ அனத்தம் - தீமை - 'அனத்தக் கடலுள் அழுந்தி' - பெரியாழ்வார். 5-3-7
X வள்ளி பூமியிற் பிறந்த வரலாறு - பாடல் 624-பக்கம் 450 கீழ்க்குறிப்பு.

தேசத் தடைத்து - தேசம் - ஒளியை (அடைத்து) தன்னுடன் கொண்டும் (அல்லது - தேசங்களை எல்லாம் தன் சிறகால் மூடி) (பிரகாசித்து) ஒளி வீசியும், ஒலி செய்தும், கோடுகளை உடைய (சேடன்) ஆதி சேடனைப் பிடித்து உதறி எறியும் மயில் வீரனே!

தேடித் துதித்த - நீ வீற்றிருக்கும் ஆறுபடை வீடு முதலிய பல தலங்களையும் தேடி உன்னைப் போற்றும் அடியார்களுடைய உள்ளத்தே நின்று அருள்பாலிக்கும் சிறப்பையும் அழகையும் கொண்ட (பதத்த) திருவடிகளை உடையவனே! (அரி) திருமாலின் மருகனே! (அல்லது தேடித் துதித்த அடியார்களுக்கு அருளும் (பதத்த அரி) திருவடிகளை உடைய திருமாலின் மருகனே!

(நேசப் படுத்தி-) நேசம் படுத்தி - அன்பை அழித்து - அன்பு இல்லாமல் தேவர்களைக் கெடுத்த (முழு நீசற்கு) முற்றிலும் இழிந்த தன்மையராம் அசுரர்களுக்கு (அனத்தம் உற) அனர்த்தம் (கேடு) உண்டாகும்படி செலுத்தின வேலாயுதனே!

அன்பு நிறைந்த (குறத்தி) வள்ளி (மயிலோடு) உன்மீது காதலுடனே (உற்பவித்த) பிறந்த (புவிக்குள்) இடமாகிய வள்ளி மலையில் மகிழ்ந்து வீற்றிருக்கும் பெருமானே! (பொ(ன்)னி) நீர் - காவிரியாறு பாயும் (பொன்) அழகிய (புவிக்குள்) (வயலூர், திரிசிராப்பள்ளி, சாமிமலை, முதலிய தலங்களில் மகிழ்ச்சி கொள்ளும் பெருமானே!

(மயல் ஒழியாதோ)

## 1213.

ஆசையும் அன்பும் காட்டி மயக்குபவர்கள், காசு தேடுவதிலேயே மனத்தைச் செலுத்துபவர்கள், உயிரும் சோர்ந்து போகும் படி (உள்ளத்தை) உருக்குபவர்கள், தெருவில் போகும்

எல்லாருடனும் சிரிப்பவர்கள், (வேறு கூறு விளைப்பவர்) குணம் வேறுபடும் தன்மையை (விளைவிப்பவர்கள்) உண்டு பண்ணுபவர்கள் - குணம் மாறுபாடு அடைதலுக்குக் காரண பூதராயிருப்பவர்கள், ஆலகால விஷம் போன்ற கண்களை உடையவர்கள், மலைபோலப் பருத்தும்

மறு (குற்றம்) இல்லாததுமான கொங்கையை உடையவர்கள், ஆடைநெகிழும்படி நடப்பவர்கள், வாரிக்கூந்தலை முடிப்பவர்கள், எப்போதும் - இடைவிடாது -

வாயில் நின்றும் இதழ் ஊறலைத் தருபவர்கள், (நாளுநாளும்) நாள்தோறும் தங்களை அழகு படுத்திக் கொள்பவர்கள் - ஆகிய பொது மகளிருடைய (வாசல் தேடி) வீட்டு வாயிலைத்தேடி நடக்கும் வழக்கத்தை (குணத்தை) விடமாட்டேனோ!

ஓசை யான திரைக்கடல் ஏழு ஞாலமு முற்றருள்
ஈச ரோடுற வுற்றவள் உமையாயி-
யோகி ஞானி பரப்ரமி நீலி நாரணி யுத்தமி
ஒல மான *மறைச்சிசொல் அபிராமி,
ஏசி லாத மலைக்கொடி *தாய்ம னோமணி சற்குணி
*ஈறி லாதம லைக்கொடி அருள்பாலா-
† ஏறு மேனி யொருத்தனும் வேத னான சமர்த்தனும்
ஈச னோடு ப்ரியப்படு பெருமாளே (223)

## 1214. திருவடியை உணர

தான தாத்த தனதன தான தாத்த தனதன
தான தாத்த தனதன தனதான

ஆலமேற்ற விழியினர் சால நீட்டி யழுதழு
தாக மாய்க்க முறைமுறை பறைமோதி-
‡ ஆடல் பார்க்க நிலையெழு பாடை கூட்டி விரையம
யான மேற்றி யுறவின ரயலாகக்
கால மாச்சு வருகென ஓலை காட்டி யமபடர்
காவ லாக்கி யுயிரது கொடுபோமுன்-
காம வாழ்க்கை பொடிபட ஞானம் வாய்த்த கழலிணை
காத லாற்க ருதுX முணர் தருவாயே;
வேல கீர்த்தி விதரண சீலர் வாழ்த்து சரவண
Oவியாழ கோத்ர மருவிய முருகோனே-

---

* 'மறைத்திரு அபிராமி', 'தாயுமானவள் நிற்குணி', ஈறிலாத இலக்குமி தருபாலா'- என்பன பாட பேதங்கள்.

† ஏறு - வராகத்தின் ஆண்; திருமால் வராகமேனி கொண்டது பாடல் 503-பக்கம் 146 இடபமானது - பாடல் 786-பக்கம் 333 'ஏம மேனி யொருத்தியும் வேத நாத சமர்த்தனும்'- பாடம்

‡ ஆடல் - செய்கை (பிங்கலம்)

X உணர் - உணர்ச்சி - முதனிலைத் தொழிற் பெயர்

O வியாழன் - குரு. கோத்திரம் - மலை; குருமலை - சுவாமி மலை- 'வியாழகோத்ர அரிதிரு மருகோனே'- என்றும்பாடம்.

இப்பாடலைக் குருமலை-திருவேரகத்துப் பாட்டாகக் கொள்ளலாம்.

ஒலி செய்யும் அலைவீசும் கடல்(எழு), எழு பூமி இவை-யாவற்றிலும் ஒன்றி இருந்து அருள் பாலிக்கும் ஈசர் - சிவபிரானுடன் (உறவு உற்றவள்) - சேர்க்கை கொண்டவள், உமை யம்மை -

யோகி, ஞானி (பரப்பிரமி) முழுமுதற்றேவி - நீலநிறத்தி, (நாரணி) துர்க்கை, உத்தமி (ஓலமான மறைச்சி) ஒலியுடன் சொல்லப்-படும் வேதத்தினள், (சொல்) புகழ் கொண்ட (அபிராமி) அழகி -

(ஏசு இலாத மலைக் கொடி) இகழ்ச்சி என்பதே இல்லாத, அல்லது குற்றம் இல்லாத மலைப்பெண், தாய், (மனோமணி) மனத்தை ஞான நிலைக்கு எழுப்புவள், நற்குணத்தை உடையவள், (ஈறிலாத அமலை கொடி) முடிவிலாத - அழிதல் இல்லாதவள் (அமலை) மலம் அற்ற கொடி - ஆகிய பார்வதி பெற்ற குழந்தையே!

(ஏறுமேனி) வராகத்தின் (அல்லது இடபத்தின்) உருவம் எடுத்த ஒப்பற்றவனும் (திருமாலும்), வேதன் - வேதம்வல்ல சாமர்த்தியசாலியாய்வேதன் எனப்பட்டபிரமனும், ஈசனும் (சிவபிரானும்) ஆக மூவரும் பிரியம் கொள்ளும் பெருமாளே!

(மினுக்கிகள் வாசல் தேடி நடப்பது தவிர்வேனோ)

## 1214.

ஆலம் ஏற்ற - விஷம்கொண்ட (விழியினர்) கண்களை உடையவர்கள், சால - நிரம்ப (நீட்டி) வெகு நேரம் (அழுது அழுது) அடிக்கடி அழுது, ஆகம் மாய்க்க - மனம் வருந்த - நைந்து அழிய (முறை முறை) நியமப்படி பறை வாத்தியம் ஒலித்து -

(ஆடல் பார்க்க) இறந்துபட்ட செய்கையை யாவரும்தெரிந்து கொள்ள - நிலை எழு - உறுதியாகக் கட்டப்பட்ட அல்லது வழக்கப்படி கட்டப்பட்ட (பாடை கூட்டி) பாடையைத் தயார் படுத்தி, (விரைய) வேகமாக (மயானம் ஏற்றி) சுடுகாட்டுக்குக் கொண்டு போய்ச் சேர்த்துச் சுற்றத்தினர் யாவரும் விலகிச் செல்லும்படி

(காலம் ஆச்சு உன் ஆயுள் காலம் முடிந்து விட்டது, புறப்படு வாயாக என்று கூறிச்சீட்டோலையைக் காட்டி, யமதூதர்கள் (தக்க, காவல் வைத்து) காவலுடன் உயிரைக் கொண்டு போவதற்கு முன்பாக

(இந்த) ஆசை வாழ்வு (பாச வாழ்க்கை) பாழ்பட்டழிய, ஞான நிலையதாம் உனது திருவடியிணைகளைக் (காதலால்) உண்மை அன்புடன் (கருதும்) தியானிக்கும் (உணர்) உணர்வை - ஞான உணர்ச்சியைத் தந்தருளுக

வேலாயுதனே! (கீர்த்தி) புகழ்பெற்ற (விதரண) கொடை-யாளனே! (சீலர்) பரிசுத்த நெஞ்சினர் வாழ்த்திப் போற்றும் சரவண-பவனே! (வியாழ கோத்ரம்) குருமலை - சுவாமி மலையில் (மருவிய) வீற்றிருக்கும் முருகனே!

வேடர் நாட்டில் விளைபுன ஏனல் காத்த சிறுமியை
*வேட மாற்றி வழிபடு மிளையோனே;
ஞால மேத்தி வழிபடு †மாறு பேர்க்கு மகவென
நாணல் பூத்த படுகையில் வருவோனே-
நாத போற்றி யெனமுது தாதை கேட்க அநுபவ
ஞான வார்த்தை யருளிய பெருமாளே (224)

## 1215. போற்ற

தானதன தானத்த தானதன தானத்த
தானதன தானத்த தனதான

ஆலுமயில் போலுற்ற தோகையர்க ளேமெத்த
ஆரவட மேலிட்ட முலைமீதே-
ஆனதுகி லேயிட்டு வீதிதனி லேநிற்க
ஆமவரை யேசற்று முரையாதே,
வேலுமழ கார்கொற்ற நீலமயில் மேலுற்று
வீறுமுன தார்பத்ம முகமாறு-
மேவியிரு பாகத்தும் வாழுமனை மார்தக்க
மேதகவு நானித்த முரையேனோ;
நாலுமுக வேதற்கு மாலிலையில் மாலுக்கு
நாடவரி யார்பெற்ற வொருபாலா-

* வேடமாற்றி வழிபட்டது - (i) வேடன், வளையல் செட்டி, வேங்கை மரம் - கிழவன் - முதலிய வேடங்களை முருகன் பூண்டது;

(ii) சிறுமியை வேடம் மாற்றி - என்பது வள்ளிக்குத் தெய்வக் கோலத்தை அருளினதும் ஆம்.

(i) 'வேட்டுவக் கோலத்தைக் கொடு குமரன் தோன்றினான்"

" வேங்கையின் உருவ மாகி வேற்படை வீரன் நின்றான்"

"நற்றவ விருத்த வேடமது கொண்டு" - கந்தபுரா 6-24-66-75-94 "செட்டிவடி வைக்கொடு" - திருப்புகழ். 215

(ii) வள்ளியை வேடம் மாற்றினது:-

"அறு முகம் உடைய வள்ளல்.. நங்கைதனை அருளோடு நோக்கக், கொன்னவில் குறவர் மாதர் குயிற்றிய கோலம் நீங்கி, முன்னுறு தெய்வக் கோலம் முழுதொருங் குற்றதன்றே" - கந்தபுரா. 6-24-197

† "கிர்த்திகையர் அறுவரும் எடுக்க அவர் ஒருவ ரொருவர்க்கு அவன் ஓர் ஓர் புத்ரனானவனும்" - வேடிச்சி... வகுப்பு

(வேடர் நாட்டில்) வேடர்களின் ப்ரதேசத்தில் (வள்ளி மலையில்; விளைந்த (புன ஏனல்) ஏனல் புனம் - தினைக் கொல்லையைக் (காத்த) பாதுகாத்த சிறுமியை வள்ளிப்பெண்ணை (வேடம் மாற்றி) உனது நிஜ உருவைக் (காட்டாது மாற்றி) வேட-உருவுடன் சென்று (வழிபட்ட) வணங்கின (அல்லது வள்ளிக்குத் தெய்வக்கோலத்தைத் தந்தவனே! அவளை வணங்கின) இளைஞனே!

* (ஞாலம் ஏத்தி) பூமியில் உள்ளோர் போற்றி வழிபடுகின்ற (ஆறு பேர்க்கும்) கார்த்திகை மாதர் அறுவர்க்கும் (மகவென) குழந்தையென்று சொல்லும்படி நாணல் பூத்த படுகையில்) நாணல் புல் சூழ்ந்த மடுவினில் - சரவணத்தில் - தோன்றினவனே!

(நாத) தலைவ போற்றி என்றுகூறி (முதுதாதை) பெரியவராம் உனது தந்தை (கேட்க) உபதேசிப்பாயாக என்று கேட்க அவருக்கு ) அனுபவ ஞான வார்த்தையை - இன்ப நுகர்ச்சியைத்தரும் ஞான மொழியை - உபதேசித் தருளின பெருமாளே!

(காதலால் கருது முணர்ச்சியைத் தருவாயே)

## 1215.

(ஆலும்) ஆரவாரித்து ஒலிக்கும் - அல்லது ஆடும் - மயில்போல உள்ள (தோகையர்கள்) மாதர்களின் நிரம்பின முத்துமாலை மேலே அணிந்துள்ள கொங்கையின் மேலே -

பொருத்தமான ஆடையை அணிந்து, தெருவிலே நிற்க (ஆம் அவரையே) ப்ரியப்படும் அப்பொதுமாதர்களையே சிறிதேனும் (நான்) பேசாமல் -

வேலாயுதத்தையும், அழகு நிரம்பியதும், வீரம் உள்ளதும், நீலநிறமுள்ளதுமான மயில்மேல் ஆரோகணித்து விளங்குபவனான உனது மலர்ந்த தாமரை யன்ன (அல்லது பத்மம் ஆர் - தாமரை போன்ற) திருமுகங்கள் ஆறினையும்,

பொருந்தி உனது இருபுறங்களிலும் வாழ்கின்ற (அன்னைமார்) தாய்மார் - தேவசேனை - வள்ளி என்னும் இருவருடைய (தக்க மேதகவும்) சிறந்த பெருமையையும் - மேன்மையையும் நான் நாள் தோறும் புகழ மாட்டேனோ!

நான்கு முகங்களைக்கொண்ட பிரமனாலும், ஆலிலையிற் பள்ளி கொள்ளும் திருமாலாலும் தேடுதற்கு அரியராய்நின்ற சிவபிரான் அளித்த ஒப்பற்ற குழந்தையே!

---

* ஞாலம் ஏத்தி வழிபடும் ஆறுபேர் - கார்த்திகை மாதர். இது கார்த்திகை விரதத்தின் மேன்மையையும் குறிக்கும்.

"ஆரல் நாளில் விரதத்தை இயல்பின் நோற்று முப்புவனத்தின் வேண்டும் முறைமையை அடைந்த நீரார் மெய்ப்படு தொகையை யாரே விளம்புவார்"- கந்தபுரா. 6-23-19

நாணமுடை யாள்வெற்றி வேடர்குல மீதொக்க
நாடுகுயில் பார்மிக்க எழில்மாது;
*வேலைவிழி வேடச்சி யார்களவ னேமத்த
வேழமுக வோனுக்கு மிளையோனே-
வீரமுட னேயுற்ற சூரனணி மார்பத்து
வேலைமிக வேவிட்ட பெருமானே (225)

## 1216. முத்தி பெற

தனனத்தன தனனத்தன தனனத்தன தனதான

இடையித்தனை யுளதத்தைய ரிதழ்துய்த்தவ ரநுபோகம்-
இளகிக்கரை புரளப்புள கிதகற்புர தனபாரம்;

உடன்மற்கடை படுதுற்குண மறநிற்குண வுணர்வாலே-
ஒருநிஷ்கள வடிவிற்புக வொருசற்றருள் புரிவாயே;

திடமற்றொளிர் நளினப்ரம †சிறைபுக்கன னெனவேகுந்-
‡தெதிபட்சண க்ருதபட்சண Xசெகபட்சண
னெனவோதும்,

விடபட்சணர் திருமைத்துனன் வெருவச்சுரர் பகைமேல்வேல்-
விடுவிக்ரம கிரியெட்டையும் விழவெட்டிய
பெருமானே (226)

---

* வேலை விழி - " கடல்போற் கண்விழி"- திருப்புகழ். 909

† பிரமனை முருகவேள் சிறையிலிருத்தத் - திருமால் அந்த நிகழ்ச்சி யைச் சிவபிரானிடம் தெரிவிக்கச் சென்றனர் -

"கரியோன் நாலு மாமுகன் உவளகம் நீக்குவான் நாடி.... கயிலையை அடைந்து" - கந்தபுரா. 1-17-1-4

‡ தெதி = ததி: தயிர். கிருதம் = நெய்.

X செகபட்சணன் - பாடல் 267-பக்கம் 164; பாடல் 984 பக்கம் 846 குறிப்பு.

திருமாலை இவ்வாறு அழகாகப் புனைந்த அழகுக்கு இணைகூற முடியுமோ - "வாக்குக்கு அருணகிரி" என்பதற்கு இந்தப் பாடலின் 6-7 அடிகள் ஒரு நல்ல சான்று.

நாணம் உடையவளும், ஜெயமே பெறும் வேடர் குலத்திலே யாவரும் நாடும் (பெருமையை உடைய) குயில் போன்றவளும், (பார்-மிக்க) பூமியில் யாரினும் மேம்பட்ட அழகுள்ளவளும் ஆகியமாது

கடல்போற் பெரிய கண்களைக்கொண்ட வேட்டுவச்சி ஆகிய வள்ளியின் கணவனே! (மத்தம்) மதம் கொண்ட யானையின் முகத்தை உடைய கணபதிக்குத் தம்பியே!

வீரத்துடனே (போருக்கு எழுந்த) சூரனுடைய அழகிய மார்பிடத்தே வேலாயுதத்தை நன்கு செலுத்தின பெருமாளே!

(முகமாறும் நித்தம் உரையேனோ)

## 1216.

இடை இவ்வளவே (ஒரு கைப்பிடி அளவே) உள்ளவர்களும், கிளி போன்றவர்களுமான மாதர்களின் வாயிதழ் ஊறலைத் துய்த்து அனுபவித்து (அவர்களுடைய) அநுபோகத்தில் - இன்ப நுகர்ச்சியில்

மனம் இளகிக் - காமம் கரை புரண்டு ஓட - நிரம்பி மிகப் புளகாங்கிதம் கொண்டதும், பச்சைக் கற்பூரம் அணிந்துள்ளதுமான கொங்கைப் பாரத்திலே

(உடனாகி) சேர்ந்தவனாய் (மன்) மிகவும் (அல்லது மல் - அக் கொங்கையுடன் மல் போர் புரிந்து) (கடைபடும்) இழிந்த நிலையிற் சேரும் (எனது) துற்குணம் - தீக்குணம் - ஒழிய (நிற்குண உணர்வாலே) குணம் கடந்த ஞான உணர்ச்சியாலே -

ஒப்பற்றதும், உருவிலாததுமான(வடிவில்) ஒரு நிலையில் - முத்தி நிலையில் - நான் புகுமாறு ஒரு சிறிது நீ அருள் புரிவாயாக,

அறிவின் திடம் இல்லாது விளங்கினவனும், தாமரையில் வீற்றிருப்பவனுமான பிரமன் (நீ இட்ட) சிறையில் அகப்பட்டுக் கொண்டான் என அறிந்து (சிவபிரானிடம் முறையிடச்) சென்ற வரும்,

(தெதி பட்சண) தயிர் உண்டவர், (க்ருத பட்சண) நெய் உண்டவர் (செக பட்சணர்) உலகை யுண்டவர் என்று போற்றப்படுபவரும்,

விஷத்தை உண்ட சிவபிராற்கு அழகிய மைத்துனரும் ஆகிய திருமால் வெருவ (சூரனுக்குப்) பயந்து நிற்க (அந்தப் பயத்தை நீக்கும் பொருட்டுத்) தேவர்களுக்குப் பகைவர்களான அசுரர்களின் மேல் வேலாயுதத்தை

(விடு விக்ரம) செலுத்தின பராக்ரமசாலியே! அஷ்ட கிரிகளையும் விழும்படி வெட்டிய பெருமாளே!

(நிஷ்கள வடிவிற் புகப் புரிவாயே)

## 1217. கதிபெற

தனதன தான தானன, தனதன தான தானன
தனதன தான தானன தனதான

இருகுழை மீது தாவடி யிடுவன வோதி நீழலி
னிடமது லாவி மீள்வன நுதல்தாவி-
இழிவன காம வேதமு மொழிவன தாரை வேலென
எறிவன கா ள கூடமு மமுதாகக்;
கருகிய நீல லோசன அபிநய மாத ரார்தரு
கலவியில் முழ்கி வாடிய தமியேனுங்-
**கதிபெற** ஈட றாதன பதிபசு பாச மானவை
கசடற வேறு வேறுசெய் **தருள்வாயே;**
ஒருபது பார மோலியு மிருபது வாகு மேருவு
முததியில் வீழ வானர முடனேசென்-
*றொருகணை யேவு ராகவன் மருகவி பூதி பூஷணர்
உளருப தேச †தேசிக வரையேனற்,
பரவிய கான வேடுவர் தருமபி ராம நாயகி
பரிபுர பாத சேகர சுரராஜன்-
பதிகுடி யேற வேல்தொடு முருகம யூர வாகன
பரவச‡ஞான யோகிகள் பெருமாளே.(227)

---

* ஒரு கணை ஏவினது - பாடல் 452 -பக்கம் 6 குறிப்பு ‡

† சிவனுக்கு உபதேசித்தது -பாடல் 327-பக்கம் 314 குறிப்பு.

‡ ஞான யோகிகள் பெருமாளே :-

(i) ஞான தேசிக மூர்த்தி - துங்கபத்திரை நதிக்கு வடதிசைக் கண் உள்ள ஞானபுரத்திலே தவத்தால் உயர்ந்த கௌசிக முநிவர் தத்துவ ஞானம் கைகூட வேண்டிச் சடக்கர மந்திரத்தைத் தியானித்துக் குருமூர்த்தியாகிய குகப் பெருமானை நோக்கிக் கடுந்தவம் புரிந்தார். கந்தக் கடவுள் ஞானாசாரிய மூர்த்தியாகத் தோன்றிச் சிவஞானம் எனப்படும் பதி ஞானமே தெளிவை உண்டாக்கும், பேரின்பத்தைக் கூட்டுவிக்கும் என்பதை விளக்கி உபதேசித்தார். இங்ஙனம் கௌசிகர்க்கு ஞானத்தின் இயல்புகளைவிளக்கிக் காட்டின காரணத்தால் முருகவேள் 'ஞானதேசிக மூர்த்தி' எனப் பெயர் பெற்றார். இந்தப் பதி ஞானம் தான் பரம ஞானம், சிவஞானம், குகஞானம், பரஞானம், தத்துவ ஞானம், திருவடி ஞானம், அருள் ஞானம், அத்துவித

## 1217.

காதில் உள்ள இரண்டு குழைகளின் மீதிலும் (தாவடி இடுவன) தாவிப்போர் புரிவனவும் (ஓதி நிழலினிடமது) கூந்தலின் நிழலிடத்தே உலவி மீண்டு வருவனவும், நெற்றியின் கீழ்த் தாவி (ஏறியும்)

(இழிவன) இறங்குவனவாய் உள்ளனவும், காம வேதமும் மொழிவன - காம சாத்திரத்தைக் (கொக்கோக சாஸ்த்திரத்தை) எடுத்து உரைப்பனவும், (தாரை) கூரிய வேல் பாய்வது போலப் பாய்வனவும், காள கூட விஷத்தையும் - ஆலகால விஷத்தையும் அமிர்த மாக்க வல்ல காள கூட விஷத்தையும் அமுது என்று சொல்லும் படியான விஷத்தன்மையை உடைய

கரிய நீல நிறத்த கண்களை உடைய (அபிநய மாதரார்) கூத்தாடு மங்கையர் (நாடகக் கணிகையர்) தருகின்ற (கலவியில்) புணர்ச்சியின்பத்தில் முழுகி வாடிக்கிடக்கும் தனியனாகிய திக்கற்ற - நானும்

நற்கதி பெற, ஈடு பெருமை (அறாதன) நீங்காத பதி - கடவுள் (பசு) உயிர், (பாசம்) தளை அல்லது கட்டு எனப்படும். இம்மூன்றின் இலக்கணங்களைக் (கசடு அற) ஐயம் - அற்ற வகையில் (வேறு வேறு செய்து) - தனித்தனியாக விளக்கிப் பிரிவு செய்து உபதேசித்து - அருளுவாயாக.

ஒரு பத்து பாரமான (மோலியும்) மணி முடிகளும், இருபது தோள் (மேருவும்) மலைகளும் (உததியில் வீழ்) கடலில் விழ, குரங்குப் படையுடனே போய்

ஒரு அம்பைச் செலுத்தின ஸ்ரீ ராமனுடைய (திருமாலின்) மருகனே! (விபூதி பூஷணர்) திருநீற்று அலங்காரராகிய சிவபிரான் உணர்ந்து கொள்ள உபதேசம் செய்த (தேசிக - குரு மூர்த்தியே!) (வரை) வள்ளி மலையில் (ஏனல்) தினைப்புனத்தே -

(உன்னைக்) குலதெய்வமாகப் போற்றிப் பரவி வந்த (அல்லது வள்ளிமலையில் தினை பரந்து வளர்ந்திருந்த) காட்டு வேடர்வளர்த்த அழகிய வள்ளி நாயகியின் சிலம்பணிந்த திருவடியைத் தலையிற் சூடினவனே! தேவராஜனாம் - இந்திரனுடைய,

பதி - ஊராகிய பொன்னுலகத்தில் தேவர்கள் குடியேற வேலாயுதத்தைச் செலுத்தின முருகனே! மயில் வாகனனே! மிக்க ஆனந்த நிலையில் இருக்கும் ஞான யோகியர்களின் பெருமாளே!

(கதிபெற அருள்வாயே)

---

ஞானம், மெய்யுணர்ச்சி, அனுபவ ஞானம், உண்மை அறிவு

(தொடர்ச்சி 526-ஆம் பக்கம் பார்க்க)

## 1218. ஐக்கிய நிலைபெற

தனனா தனத்ததன தனனா தனத்ததன
தனனா தனத்ததன தனதான

இருநோய்ம லத்தைசிவ வொளியால்மி ரட்டியெனை
யினிதாவ ழைத்தெனது முடிமேலே-
இணைதாள ளித்துனது *மயில்மேலி ருத்தியொளி
ரியல்வேல ளித்துமகி ழிருவோரும்,
† ஒருவாகெ னக்கயிலை யிறையோன ளித்தருளு
மொளிர்வேத ‡ கற்பகந லிளையோனே-
ஒளிர்மாம றைத்தொகுதி சுரர்பார்து தித்தருள
உபதேசி கப்பதமு மருள்வாயே;
கெருநோய றுத்தெனது மிடிதூள்ப டுத்திவிடு**
கரிமாமு கக்கடவு ளடியார்கள்-

(525- ஆம் பக்கத் தொடர்ச்சி)

எனப் பலவாறு கூறப்படும் - சுப்ரமண்ய பராக்ரமம். 17. ஞானதேசிக மூர்த்தி. பக்கம் 92.

(ii) யோகா சாரிய மூர்த்தி:- சைய சித்தம் என்னும் தலத்தில் பல முநிவர்கள் கூடியிருந்து சித்திகளை அடைதற்கு உபாயம் யாது என ஆராய்ந்தபோது, நாரத முநிவர் தோன்றி "சிவயோகமே சித்திகளையும், ஞானத்தையும் முத்தியையும் கொடுக்கத் தக்கது; அதன் இலக்கணங்களை உணர்த்த வல்லவர் குகப் பெருமானே" எனக்கூறி மறைந்தனர் முநிவர்கள் முருகவேளை நோக்கித் தவஞ் செய்ய அவர் எழுந்தருளி யோக இயல்களை எடுத்து ஓதி மறைந்தார். இங்ஙனம் யோக சாதனங்களை உணர்த்திய காரணத்தால் முருகவேள் "யோகா சாரிய மூர்த்தி" யாயினர் சுப்ரமண்ய பராக்ரமம் 32. யோகா சாரிய மூர்த்தி. பக்கம் 171.

'பதி, பசு, பாச' இலக்கணம் கேட்டதால் 'ஞான யோகிகள் பெருமாளே' என அழைக்கின்றார்.

* வேல் மயில் பெறுதல் - "வேல் மயில் கொடுத்து - சிந்தை கூராய்" (பாடல் 413), "இயல் வேலுடன் மா அருள்வாயே" (பாடல் 563)

† ஒரு வாகென - 'நீ வேறெனாதிருக்க நான்வே றெனாதிருக்க' - என்றார் 220- பாடலினும் - 'இருவோர் ஒரு ரூபமதாய்' - பாடல் 563-பக்கம் 282 குறிப்பு

(தொ.பக். 527,

# 1218.

இரு நோய் மலத்தை - பிறப்பு - இறப்பு என்னும் பெரிய பவரோகத்தையும், ஆணவம், கன்மம், மாயை எனப்படும், மும்மலங்களையும் சிவ தேஜஸ் கொண்டு (மிரட்டி) வெருட்டி ஓட்டி, என்னை இனிமையாக அழைத்து என்னுடைய சிரசின் மேலே -

(உனது) இரண்டு திருவடிகளைச் சூட்டி, உன்னுடைய மயில் வாகனத்தின் மீது என்னையும் இருக்கச் செய்து, விளங்குகின்றதும் பொருந்தியதுமான வேலாயுதத்தை என் கையில்தந்து, நான் மகிழும்படியாக, நாம் இருவோரும்

ஒன்று படுவோமாக என்று - கயிலைமலைக்கடவுள் பெற்று அருளிய, விளங்கும் வேத (கற்பக) விநாயக மூர்த்திக்கு நல்ல தம்பியே! அல்லது) - வேத கற்பக - வேதம் போற்றும் கற்பகம் அனைய வரதனே! என்றும் இளையோனே -

விளங்கும் சிறந்த வேதப் பகுதிகளையும், தேவர்களும் பூலோகத்தவர்களும் போற்றி செய்ய (உபதேசிகப்பதமும்) உபதேச மொழிகளையும் (எனக்கு) அருள்புரிவாயாக,

(கரு நோய்) கருவிற் சேரும் பிறவி நோயை, ஒழித்து, என்னுடைய (மிடி) தரித்திரத்தையும் தூளாக்கி ஒழித்து விடும் ஆனையின் அழகிய முகத்தை உடைய கடவுள், அடியார்கள் -

---

‡ கற்பகம் - விநாயகருக்கு ஒரு சிறப்புப் பெயர்

"தில்லைக் குடதிசைக் கோபுர வாயில் நிலவிய கற்பகக் கன்று" -சேக்கிழார் புராணம்

"தில்லைவனக் கற்பகக் குஞ்சரம்" - சிதம்பர புராணம்.

"பரங்கிரிவாழ் கற்பகத்தை" - பரங்கிரிப் புராணம்.

"ஆரூர் மாற்றுரைத்த கற்பகத்தை" - ஆரூர்ப் புராணம்

"கற்பகம் எனவினை கடிதேகும்" - திருப்புகழ். கணபதி துதி.

"மலைக்கொடி பயந்த கற்பகத்தை" - உத்தரகோச. புராணம்

'மும்மதக் கற்பகத்தைக் கருத்து விருத்துவாம்' - சரபபுராணம்

'வேத கற்பகம் - "வேதக செல்வ விநாயகனே"

- அருணகிரிப் புராணம்

X பதம் - எழுத்து, சொல், பொருள்

O கருநோய் அகற்றுதல் - "பிறப்பொழிக்கும் ஆனை திறை கொண்டவனைச் சிந்தை செய்வாம்" - அருணாசல புராணம்.

** 'மிடி தூள் படுத்திவிடு -- கடப்பமலர் அணிவோனே' எனவும் கூட்டலாம்.

கருதாவ கைக்குவர மருள் *ஞான தொப்பைமகிழ்
கருணாக டப்பமல ரணிவோனே;
† திருமால ளித்தருளு மொருஞான பத்தினியை
திகழ்மார்பு றத்தழுவு மயில்வேலா-
சிலைதூளெ ழுப்பிகவ டவுணோரை வெட்டிசுரர்
சிறைமீள விட்டபுகழ் பெருமாளே (228)

## 1219. பிறவி யற

தனதனன தந்தனம் தனதனன தந்தனம்
தனதனன தந்தனம் தந்ததான

‡ இனமறைவி தங்கள்கொஞ் சியசிறுச தங்கைகிண்
கிணியிலகு தண்டையம் புண்டரீகம்-
எனதுமன பங்கயங் குவளைகுர வம்புனைந்
திரவுபகல் சந்ததஞ் சிந்தியாதோ;
X உனதருளை யன்றியிங் கொருதுணையு மின்றிநின்
றுளையுமொரு வஞ்சகன் பஞ்சபூத-
உடலதுசு மந்தலைந் துலகுதோறும் வந்துவந்
துழலுமது துன்புகண் டன்புறாதோ;
கனநிவத தந்தசங் க்ரமகவள துங்கவெங்
கடவிகட O குஞ்சரந் தங்கும்யானை-

---

*ஞான தொப்பை "தொப்பை யொரு பெருவயிற்றுப் பிள்ளை" - தக்கயாக 229 - திருப்புகழ் 1117- பக்கம் 256

† திருமால் மகள் வள்ளி பாடல் 624-பக்கம் 450 குறிப்பு.

ஞான பத்தினி - வள்ளி - ஞான குறமாது (பாடல் 987) ஞானா தனத்தி (பாடல் 646)

‡ தண்டை முதலியன - மறை கொஞ்சுவது - "செழுமறை யஞ்சொற் பரிபுரம்"- பாடல் 333

"மறைசதுர் விதந்தெரிந்து வகை சிறு சதங்கை கொஞ்சும்" பாடல் 50

"சதகோடி மறை ஓலமிடு நூபுரம்" - பாடல் 703

X "ஆறு மாமுகப் பிரான் அன்றி இவ்விடை வேறொரு துணையிலை மெய்ம்மை ஈது'- கந்தபுரா. 4-9-76

O குஞ்சரம் தங்கும் யானை கடக சயிலம் பெறும்படி - தேவசேனை - இது மத கும்பகம்பத் தறுகட் சிறுகட் சங்க்ராம சயில சரச வல்லி இறுகத்

(கருதா வகைக்கு) நினைத்திராத அத்தனை அளவுக்கு - கருதின அளவுக்கு மேலாக - (அல்லது கருதும் முன்னரே) - கருத வேண்டிய அவசியம் (இல்லாமலே) வரங்களைத் தருகின்ற ஞான மூர்த்தியாம் தொப்பைக்கடவுள் - ஆகிய கணபதி மகிழும் கருணை மூர்த்தியே! கடப்பமலர் அணிபவனே!

திருமால் பெற்றருளிய ஒப்பற்ற ஞான பத்தினியாகிய வள்ளியை விளங்கும் மார்பிற் பொருந்த அணைத்த கூர்வேலனே!

(சிலை) கிரவுஞ்ச கிரியைத் தூளாக்கி, (கவடு) கபடம் வஞ்சனையுள்ள அசுரர்களை வெட்டி அழித்து - (அல்லது - கவடு-) சூரனாம் மாமரத்தின் கிளைகளையும் அசுரர்களையும் வெட்டித் தேவர்களின் சிறையை (மீள்வித்த) நீக்கின புகழை உடைய பெருமாளே!

(ஒருவாசென - உபதேசிகப் பதம் அருள்வாயே)

# 1219.

(இனமறை விதங்கள்) வேத ஒலித் தொகுதியின் வகைகளைக் (கொஞ்சிய) ஒலித்துக் காட்டுகின்ற சிறிய சதங்கை, கிண்கிணி, விளங்கும் தண்டை (இவைகளை அணிந்துள்ள) (அம்) அழகிய (புண்டரீகம்) தாமரை அனைய உனது திருவடியை

எனது மனமெனும் தாமரையானது - குவளை (செங்கழுநீர்) குராமலர் இவைகளைப் புனைந்து (இவைகளைக் கொண்டு அலங்கரித்து) இரவும் பகலும் எப்போதும் தியானிக்காதோ!

உனது திருவருள் அல்லாது இங்கு வேறொரு துணையும் இல்லாது நின்று, (உளையும்) வேதனைப்படும் ஒரு வஞ்சகனாகிய நான் மண், நீர், தீ, காற்று, விண் ஆகிய ஐம்பூதங்களால் ஆய -

உடலைச் சுமந்து அலைந்து, உலகு ஒவ்வொன்றிலும் வந்து வந்து (உழலுமது) அலைச்சல் உறும் அந்தத் துன்பத்தைக் கண்டு (உனக்கு) என் மீது அன்பு பிறவாதோ!

(கனம்) பெருமையுடன் (நிவத) நிவத்தலை உடைய - உயர்ச்சியை உடையதும், தந்த - தந்தங்களை உடையதும், சங்க்ரம கவள - உணவு உண்டைகளைக் கொள்வதுவும் (அல்லது சங்கிராமம் போருக்கு உற்றதும் - கவளம் உணவு - உண்டைகளைக் கொள்வதுவும்), துங்கம் - பரிசுத்தமானதும், வெம் - கொடியதும், கடம் - மதம் கொண்டதும், (விகடம்) அழகுள்ளதும் ஆன குஞ்சரம் ஐராவதம் என்னும் யானைமீது வீற்றிருக்கும் (யானை) தேவசேனை

---

தழுவும் கடகாசல பன்னிரு புயனே' என்னும் கந்தரலங்காரத்தை (67) நினைவூட்டுகின்றது.

கடகசயி லம்பெறும் படியவுணர் துஞ்சமுன்
கனககிரி சம்பெழுந் தம்புராசி;
அனலெழமு னிந்தசங் க்ரமமதலை கந்தனென்
றரனுமுமை யும்புகழ்ந் தன்புகூர-
அகிலபுவ னங்களுஞ் சுரரொடுதி ரண்டுநின்
றரிபிரமர் கும்பிடுந் தம்பிரானே (229)

## 1220. நான் ஆர்?

தானா தனந்த தானா தனந்த
தானா தனந்த தனதான

ஊனே றெலும்பு சீசீ மலங்க
ளோடே நரம்பு கசுமாலம்-
ஊழ்நோ யடைந்து மாசான மண்டு
மூனோ டுழன்ற கடைநாயேன்,
*நானா ரொடுங்க நானார் வணங்க
நானார் மகிழ்ந்து உனையோத-
நானா ரிரங்க நானா ருணங்க
நானார் நடந்து விழநானார்;
† தானே புணர்ந்து தானே யறிந்து
தானே மகிழ்ந்து அருளூறித்-
‡ தாய்போல் பரிந்த தேனோ டுகந்து
தானே தழைந்து சிவமாகித்;
தானே வளர்ந்து தானே யிருந்த
தார்வேணி யெந்தை யருள்பாலா;

---

* இந்த 1220- பாடலின் 3,4 அடிகளின் கருத்து - பாடல் 908 -ன் முதல் நான்கு அடிகளின் கருத்தை ஒக்கும். அப்பாடலின் கீழ்க்குறிப்பைப் (பக்கம் 650-ல்) பார்க்க.

† இதனால் இறைவனுக்குத் "தான்தோன்றி யப்பர்" என ஒரு பெயர் "தனக் கென் றெதுவும் புணரா இயல்பில் தனி ஞான முதற் பொரு ளான பிரான்'- தணிகைப் புராணம் நாரதன். 71

'பிறவாதே தோன்றிப் பெம்மான்'- அப்பர். 6-11-1

'பிறவா யாக்கைப் பெரியோன்' - சிலப்பதி 5-169

‡ தாய்போல் பரிந்த தேன் = உமா தேவியார் 'பெருங் கருணைத் தாயாகி... கவின் காட்டும் அகிலாண்ட நாயகியைக் கருத்துள் வைப்பாம்' -திரு ஆனைக்காப் புராணம்.

(உனது) (கடகம்) கங்கணம் அணிந்த (சயிலம்) மலையன்ன திருப்புயத்தைப் பெறும் படியும் - அடையும்படியும், அவுணர்கள் துஞ்ச - அசுரர்கள் மடியும் படியும், முன் - முன்பு, கனககிரி) பொன் மலையாம் கிரவுஞ்சம் (சம்பெழுந்து) சம்பு எழுந்து - (பாழ்பட்டு அது இருந்த இடத்தில் சம்புப் புல் எழவும் (அப்படி நீர் மூலமாகவும், (அம்பு ராசி) கடல்,

(அனல் எழ) தீப்பட்டு வற்றவும் (முனிந்த) கோபித்த (சங்க்ரம மதலை) போர்க்கு உற்ற பிள்ளை கந்தன் என்று சிவனும் உமையும் (உன்னைப்) புகழ்ந்து (உன் மீது) அன்பு மிக்கிருக்க,

சகல பூமியில் உள்ளவர்களும், தேவர்களொடு கூட்டமாய்க் கூடி நின்று (அரி) திருமாலும் பிரமனும் கும்பிடுகின்ற தம்பிரானே.

(துன்புகண்டன்புறாதோ)

## 1220.

மாமிசம் மேலே ஏறியுள்ள மூடியுள்ள - எலும்பு, சீ சீ என வெறுக்கத்தக்க அழுக்குகள் - இவையுடனே நரம்புகள், (பிற) அகத்துங்கள்,

ஊழ்வினைசம்பந்தமாக நோய்கள் - இவைகளை எல்லாம் அடைந்து, (மாசான) குற்றங்களே நெருங்கிச் சேருகின்ற இந்த (ஊனோடு) உடலோடு அலைச்சல் உற்ற இழிவுபட்ட நாயனையவன் - அடியேன்; இப்படிப்பட்ட நான்

நான் ஆர் ஒடுங்க - ஒடுங்க நான் ஆர் - அடங்கி ஒடுங்குதல் என் வசத்தில் உள்ள சக்தியா! (வணங்க நான் ஆர்) வணங்கிப் பணிதல் (என் இச்சையில் உள்ள செயலா)! மகிழ்ந்து உனை ஓத நான் ஆர் மகிழ்ச்சியுடன் உன்னைப் போற்றுதல் என் இச்சையில் உள்ளதா!

உயிர்களிடத்தே இரக்கங் கொள்ளுதல் என் இச்சையில் உள்ள தொன்றா! (உணங்க நான் ஆர்) சிந்தை வாடி மெலிதல் தான் என் இச்சையா! (நானார் நடந்து விழ நானார்) நடத்தல்தான் என் இச்சையா! விழுதல்தான் என் இச்சையா!

தானே புணர்ந்து - புணரும் பொருளெல்லாம் தானேயாய், அறிபவனும் தானேயாய், மகிழ்பவனும் தானேயாய் அருள் சுரந்து

தாய்போன்ற அன்னைக் காட்டும் தேன் அனைய தேவியுடன் மகிழ்ந்து செழிப்புடன் விளங்கிச் சிவமாய்த் திகழ்பவனும் தானேயாய் -

வளர்பவனும் அழியாது இருப்பவனும் தானேயாய் - இங்ஙனம் தன்னந்தனி நின்று விளங்கும் பெருமான் - பூமாலை அணிந்த சடையினராம் எம்பெருமான் - சிவன் அருளிய குழந்தையே!

*சாலோக தொண்டர் சாமீப தொண்டர்
சாருப தொண்டர் பெருமாளே(230)

## 1221. மலரிட்டு வணங்க

தனதனன தனதனன தனதனன தனதனன
தத்தத்த தத்தான தந்ததான

எதிரொருவ ரிலையுலகி லெனஅலகு சிலுகுவிரு
திட்டுக்ரி யைக்கேயெ ழுந்துபாரின்-
இடையுழல்வ சுழலுவன †சமயவித சகலகலை
யெட்டெட்டு மெட்டாத மந்த்ரவாளால்;
‡விதிவழியி னுயிர்கவர வருகொடிய யமபடரை
வெட்டித் துணித்தாண்மை கொண்டுநீபம்-
Xவிளவினிள இலைதளவு குவளைகமழ் Oபவளநிற
வெட்சித் திருத்தாள்வ ணங்குவேனோ;
**திதிபுதல்வ ரொடுபொருது குருதிநதி முழுகியொளிர்
செக்கச் செவத்தேறு செங்கைவேலா-
சிகரகிரி நகரவிடு முருவமர கதகலப
சித்ரக் ††ககத்தேறு மெம்பிரானே,
முதியபதி னொருவிடையர் முடுகுவன பரிககன
முட்டச் செலுத்தாறி ரண்டுதேரர்-

---

* சாயுஜ்ய பதவியில் இறைவனோடு இரண்டறக் கலத்தலால் ஏனைய மூவகைத் தொண்டர்களைக் கூறினர்.

† 'கதறிய கலை கொடு கட்டாத் தீர்பொருள்
பதறிய சமயிகள் எட்டாப் பேரொளி' - திருப்புகழ். 1152 பார்க்க.

‡ விதி வழியின் யமபடர் உயிர் கவர்தல். 'போதன் தீட்டும் தொடரதுபடி ஏமன் சங்காரம் போர்'- திருப்புகழ் 1183. பாடல் 760, 1214, 1242-பார்க்க

X விளவின் இள இலை - 'புதிய வெள்ளில் தோய் முத்தமுறி" -திருப்புகழ். 274.

O பவள நிறத் திருத்தாள் - 'வித்ருமாகார'- திருப்புகழ் 996. -பக்கம் 4-கீழ்க் குறிப்பு

வெட்சித் திருத்தாள் - 'வெட்சி மலர் சூழ்ந்த நின்னிரு கழற்கால்'-
கல்லாடம் - முருகர் துதி; கந். அலங். 30

** திதி - காசிபர் மனைவி; அசுரர்களின் தாய். திதியின் புத்திரர் -தயித்தியர் - அசுரர் †† ககம் = பறவை (மயில்).

சாலோகம், சாமீபம், சாரூபம் என்னும் மூவகையில் உள்ள அடியார்களுக்கும் பெருமாளே!

(நானார் ஒடுங்க, வணங்க, ஓத, விழ)

## 1221.

எமக்கு எதிரானவர் ஒருவரும் இல்லை உலகத்திலேயே என்று (அலகு கூர்மையான) சிலுகு (வாதப்) போருக்கு (விருதிட்டு) கொடி கட்டி, (க்ரியைக்கே எழுந்து) அத்தகைய செய்கைக்கே துணிந்தெழுந்து - இப்பூமியின்

இடையிலே திரிந்து சுழல்பவர்களான எல்லா வகைய சமயவாதிகளாலும், (கலை எட்டெட்டும் அறுபத்து நான்கு கலைகளாலும் எட்டமுடியாத மந்த்ர வாள் கொண்டு -

(விதி வழியின்) பிரமன் எழுதின ஏட்டின்படியே உயிரைக் கவரவரும் கொடியவர்களான யம தூதர்களை வெட்டித் துண்டப்படுத்தி எனது (ஆண்மை) பத்தி வைராக்யத்தை நிலை நிறுத்திக், கடம்பு -

விளாவின் இளந் தளிர் (தளவு) முல்லை, கழுநீர் மணக்கும் பவளநிறமுள்ள, (சிவந்த) வெட்சி இவை அணிந்துள்ள திருத்தாளை வணங்க மாட்டேனோ!

(திதி புதல்வரொடு) அசுரர்களொடு சண்டைசெய்து, ரத்த ஆற்றில் முழுகி, விளக்கமுறும் செக்கச் செவேல் என்னும் மிக்க செந்நிறத்துடன் உனது செவ்விய திருக்கரத்தில் பொருந்தி உள்ள வேலை உடையவனே!

சிகரங்களை உடைய கிரி - கிரவுஞ்சத்தைப் பொடிபடச் செய்த திருவுருவத்தனே! பச்சை நிறத் தோகையையும் அழகையும் உடைய பட்சியாம் மயிலின்மீது ஏறும் எம்பெருமானே!

*பழமையானவர்கள் பதினொரு விடையர் - பதினொரு (11) உருத்திரர்களும், முடுகிச் செலுத்தப்படும் குதிரைகளைக் (ககனம்) ஆகாயத்தில் நன்கு செலுத்துகின்ற (ஆறிரண்டு தேரர்) பன்னிரண்டு (12) தேர்களை உடைய பன்னிரு சூரியர்களும்,

---

* 11 - ருத்ரர்; 12 சூரியர்; 2 - மருத்துவர், 8 வசுக்கள்: ஆக (11 +12 +2 +8) முப்பத்து முத்தேவர் -; இவர்களை 'நால் வேறியற்கைப் பதினொரு மூவர்' என்றார் திருமுருகாற்றுப் படையில். 'ஆதித்தன், உருத்திரன், வசு மருத்துவன் என்னும் ஒரோவோர் பொருள்கள் பலவாகப் பகுக்குங்காற் பன்னிருவர், பதினொருவர், எண்மர், இருவராகப் பகுக்க, நான்கு கூறாய் முப்பத்து மூவராயினார் என்றவாறு.

அவர் ஆதித்தர் பன்னிருவரும், உருத்திரர் பதினொருவரும், வசுக்கள் எண்மரும், மருத்துவர் இருவருமாம்"- திரு முருகா - உரை.

மொழியுமிரு அசுவினிக ளிருசதுவி தவசுவெனு
முப்பத்து முத்தேவர் தம்பிரானே (231)

## 1222. மாதர்மீதுள மயக்கு அற

தனந்தனந் தத்தத் தனந்தனந் தத்தத்
தனந்தனந் தத்தத் தனதானம்

எழுந்திடுங் கப்புச் செழுங்குரும் பைக்கொத்
*திரண்டுகண் பட்டிட் டிளையோர்நெஞ்-

சிசைந்திசைந் தெட்டிக் கசிந்தசைந் திட்டிட்
டிணங்குபொன் செப்புத் தனமாதர்;

அழுங்கலங் கத்துக் குழைந்து† மன் பற்றுற்
றணைந்துபின் பற்றற் றகல்மாயத்-

தழுங்குநெஞ் சுற்றுப் புழுங்குபுண் பட்டிட்
டலைந்தலைந் தெய்த்திட் டுழல்வேனோ;

பழம்பெருந் தித்திப் புறுங்கரும் பப்பத்
துடன்பெருங் கைக்குட் படவாரிப்-

பரந்தெழுந் தொப்பைக் கருந்திமுன் பத்தர்க்
கிதஞ்செய்தொன் றத்திக் கிளையோனே;

தழைந்தெழுந் தொத்துத் தடங்கைகொண் டப்பிச்
சலம்பிளந் தெற்றிப் பொருசூரத்-

தடம்பெருங் கொக்கைத் தொடர்ந்திடம் புக்குத்
தடிந்திடுஞ் சொக்கப் பெருமாளே (232)

---

* கண் - முலைக்கண் - எனவும் பொருள் கொள்ளலாம்.

† மன் - மிகுதிப் பொருளது - "கூறா மன் ஈய" (திருப்புகழ் - *1210*), 'மன் அளியர்' திருக்குறள் *1138* என்புழிப்போல.

சொல்லப்படும் இரண்டு (2) அசுவினி தேவர்களும் (இருசது) 2x4(8) எண்வித வசுக்களும் (ஆக 11+12+2+8) முப்பத்து மூவகைத் (33) தேவர்கள் தம்பிரானே.

(வெட்சித் திருத்தாள் வணங்குவேனோ)

## 1222.

(எழுந்திடும்) வெளித் தோன்றி எழுகின்றதும், சுப்பு - கவர்ச்சி தருவதுமான செழுமை வாய்ந்த (குரும்பைக்கு ஒத்து) தென்னங் குரும்பைக்கு இணையாகி, இரண்டு கண் பட்டிட்டு - இளைஞர்களின் இரண்டு கண்களும் படுவதாகி அந்த இளையோர் தம் நெஞ்சம்

(இசைந்து இசைந்து) அதன்மேலே ஈடுபட்டு ஈடுபட்டு, எட்டித் - தாவிக் (கசிந்து) உள்ளங் கசிவதாகி (இளகி), (அசைந்து இட்டு இட்டு) அசைவுற்று - சலனப்பட்டு - உள்ளக் கலக்கத்தை அடிக்கடி அடைவதற்கு, இணங்கு இடம் கொடுப்பதான அழகிய செப்புக் குடம்போன்ற கொங்கையை உடைய மாதர்களின் -

(அழுங்கல்) உருவழியக் கூடிய (அங்கத்து) அங்கங்களின் மீது அவயவங்களின் மீது (குழைந்து) மனம் (குழைந்து) உருகுதல் உற்று, (மன்) நிரம்பப், பற்று உற்று - பாசம் ஆசை கொண்டவனாய், (அவர்களை) அணைந்து, பின்பு பற்றற்று - அந்த ஆசை அற்று, அகல் - நீங்குவதான (மாயத்து) மாயவாழ்க்கையில் -

(அழுங்கு) வருந்துவதான நெஞ்சத்தைக் கொண்டு (புழுங்கு புண்பட்டிட்டு) கொதிப்புறும் மனப்புண்ணைக் கொண்டவனாய் (அலைந்து அலைந்து) மிகவும் அலைச்சல் உற்று (எய்த்திட்டு) இளைப்புற்றுத் திரிவேனோ!

(பழம்) பழவகைகள், (பெருந் தித்திப்பு உறும் கரும்பு) மிக்க இனிப்பைக் கொண்ட கரும்புகள், அப்பம் இவைகளைத் தனது பெரிய தும்பிக்கையுட் கொள்ளும்படி வாரி

அகன்று வெளித் தோன்றும் தனது தொப்பைக்கு - வயிற்றுக்கு (அருந்தி) உண்டு, (முன்) முன்னதாகவே - உடனே, பக்தர்களுக்கு (இதம்) நன்மை (செய்து ஒன்று - பொருந்தும் விளங்கும் - அத்திக்கு யானைமுகக் கணபதிக்குத் தம்பியே!

தழைந்து - செழிப்புற்று, வெளித்தோன்றி விளங்கும் (தொத்து) திரண்ட அல்லது பூங்கொத்துக்களை உடைய (துடம்) விசாலமான (கைகொண்டு கிளைகளைக்கொண்டு (அப்பி) இடங்களை கவர்ந்து மூடி சலம் பிளந்துஊற்றி கடல் நீரைக் கிழித்து மோதிச் சண்டைக்கு நின்ற சூரனாகிய அந்த -

துடம் பெருங் கொக்கை - மிகப் பெரிய மாமரத்தைத் தொடர்ந்து - பின் தொடர்ந்து (இடம்புக்கு) அது இருந்த இடத்தை அணுகிச் சென்று (அதை - அந்த மரத்தை) துடிந்திடும் வெட்டி அழித்த (சொக்கப் பெருமாளே) அழகிய பெருமாளே!

(எய்த்திட்டு உழல்வேனோ)

## 1223. இறத்தல் ஒழிய

தாத்த தானன தாத்த தானன
தாத்த தானன தந்ததான

ஏட்டி லேவரை பாட்டி லேசில
நீட்டி லேயினி தென்றுதேடி-
ஈட்டு மாபொருள் *பாத்து ணாதிக
லேற்ற மானகு லங்கள்பேசிக்,
காட்டி லேயியல் நாட்டி லேபயில்
வீட்டி லேஉல கங்களேசக்-
காக்கை நாய்நரி பேய்க்கு ழாமுண
யாக்கை மாய்வதொ ழிந்திடாதோ;
கோட்டு †மாயிர நாட்ட னாடுறை
கோட்டு ‡வாலிப மங்கைகோவே-
கோத்த வேலையி லார்த்த சூர்பொரு
வேற்Xசி காவன Oகொங்கில்வேளே;
பூட்டு வார்சிலை கோட்டு **வேடுவர்
பூட்கை சேர்குற மங்கைபாகா-
பூத்த மாமலர் சாத்தி யேகழல்
போற்று தேவர்கள் தம்பிரானே (233)

## 1224. காமப்பித்து அற

தத்தத் தாத்த தத்தத் தாத்த
தத்தத் தாத்த தனதான

இச்சுப் பூட்டு கைச்சக் கோட்ட
கத்திற் கோட்டு கிரியாலங்-

---

*பாத்துண்ணுதல் பகுத்துத் தான் உண்டல் - 'பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல்'; 'பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னும் தீப்பிணி தீண்டல் அரிது' திருக்குறள் 44. 227.

† ஆயிர நாட்டன் = ஆயிரங் கண்ணனாகிய தேவேந்திரன்.

‡ வால் இப மங்கை = தெய்வயானை. X சிகாவளம் = மயில்.

O கொங்கில் - கொங்கு நாட்டில் உள்ள திருச்செங்கோடு.

சென்னிமலை, மருதமலை, முதலிய தலங்களில்.

** வேடுவர் பூட்கை - வேடுவர் கொள்கைகள், பழக்க வழக்கங்கள்,; வேடுவர் ஆடை, அணி, 'தினைகாத்தல் - ஆயால் ஓட்டல் முதலிய.

# 1223.

ஏட்டில் (வரை) எழுதப்படுகின்ற (நரஸ்துதிப்) பாடல்களும், சில நீட்டிலே - (அவைதம்முட் சில பாடல்களை நீட்டி இசை பாடுதலும், (இனிது என்று தேடி) பொருள் சம்பாதிப்பதற்கு இனிய வழிகளாம் என்று எண்ணிப் (பிரபுக்களைப்-) பொருட் செல்வர்களைத்) தேடிச் சென்று -

(ஈட்டும் மாபொருள்) சம்பாதிக்கின்ற பெரும் பொருளைப் பாத்து - பகுத்து - பங்கிட்டு (உணாது) உண்ணாமல் (இகல்) ஏற்றமான - தகுதி மிக்க குலப் பெருமைகளைப் பேசி,

காட்டிலும், பொருந்திய நாட்டிலும், இருந்து பழகும் வீட்டிலும் உலகங்கள் ஏச - உலகில் உள்ளோரின் பழிச் சொல்லுக்கு ஆளாகி - (ஈற்றில்)

காக்கையும், நாயும், நரியும், பேய்க் கூட்டங்களும் உண்ணும் படி (இந்த) உடல் இறந்து படுதல் என்பது ஒழியாதா! நீங்காதா;

(கோட்டும்) அமையப்பெற்ற (ஆயிர நாட்டன்) ஆயிரம் நாட்டத்தைக் (கண்களைக் கொண்ட) இந்திரனுடைய (நாடு) பொன்னுலகில் (உறை) வசிக்கின்ற (கோட்டு) தந்தங்களை உடையதும், (வால்) வெண்ணிற முடையதுமான (இபம்) யானை ஐராவதம் வளர்த்த (மங்கை) தேவசேனையின் தலைவனே!

(கோத்த வேலையில்) (உலகு ஆடையாக) உடுத்துள்ள கடலில் (அல்லது) கவிந்துள்ள கடலில், ஆர்ப்பரித்து நின்ற சூரனோடு சண்டையிட்ட வேலாயுதத்தை ஏந்திய (சிகாவள) மயிலனே! கொங்கு நாட்டுத்தலங்களில் வீற்றிருக்கும் செவ்வேளே!

கட்டப்பட்ட (நாண்ஏற்றப்பட்ட) பெரிய (சிலை) வில்லை ஏந்திய (கோட்டு வேடுவர்) மலை வேடர்களின் (பூட்கை சேர்) கொள்கையில் சேர்ந்து வளர்ந்த (குறமங்கை) வள்ளியின் (பாகா) பங்கனே!

மலர்ந்துள்ள நல்ல பூக்களைச் சாத்தி (உன்) திருவடியைப் போற்றும் தேவர்கள் தம்பிரானே!

(யாக்கை மாய்வ தொழிந்திடாதோ)

# 1224.

(கச்சு) ரவிக்கை (பூட்டுகை) இணைக்கப் பட்டதும் (சக்கு + ஓடு + அகத்தில்) - சக்கு - (ஆடவர்களின்) கண் - ஓடுகின்ற செல்லுகின்ற - (அகம்) இடமாய் விளங்குவதுமான (கோட்டு கிரி -) - கோடு கிரி - சிகரங் கொண்ட மலையன்ன கொங்கை மீதும், (ஆலம்) விஷத்தைக்

கக்கித் தேக்கு செக்கர்ப் போர்க்க
யற்கட் கூற்றில் மயலாகி;
அச்சக் கூச்ச மற்றுக் கேட்ட
வர்க்குத் தூர்த்த னெனநாளும்-
அந்தப் பேற்றி லிச்சிப் பார்க்க
றப்பித் தாய்த்தி ரியலாமோ;
*பச்சைக் கூத்தர் மெச்சி†சேத்த
‡பத்மக் கூட்டி ஓுறைவோரி-
பத்திற் சேர்ப்பல் சக்கிற் கூட்டர்
பத்தக் கூட்ட ரியல்வானம்;
மெச்சிப் போற்ற வெற்புத் தோற்று
வெட்கக் Xகோத்த கடல்மீதே
மெத்தக் காய்த்த கொக்குக் கோட்டை
வெட்டிச் சாய்த்த பெருமாளே (234)

## 1225. பிறப்பு அற

தனதனந் தனதனன தனதனந் தனதனன
தனதனந் தனதனன தனதான

Oகடலினும் பெரியவிழி மலையினும் பெரியமுலை
கவரினுந் துவரதர மிருதோள்பைங்-

---

* பச்சை - 'மரகத நாராயணன்' - (திருப்புகழ் 583)

'பச்சைமா மலைபோல் மேனி' - தொண்டரடிப் பொடி திருமாலை 2. இனி - பச்சை - பார்வதி எனவும் கொள்ளலாம். பேரூரில் தேவி பச்சை நாயகி ஆதலின், பச்சைக் கூத்தர் - பச்சை நிறப்பார்வதியின் பாகராம் கூத்தப்பிரான் (சிவன்) எனலுமாம்.

† சேத்த பத்மம் - பிரமன் செந்தாமரையில் வீற்றிருப்பதாகவும் சொல்வர் - "நிறங்கிளர் செந்தாமரையோன்" 'செய்ய தாமரை மேலிருந்தவன்' - சம்பந்தர் 1-131-7; 2-50-9.

‡ பத்மக் கூட்டி ஓுறைவோர் இபத்தில் சேர் பல் சக்கின் கூட்டர் எனப் பிரிக்க; பத்மக்கூட்டி ஓுறைவோர் = பிரமா; இபத்தில் சேர் பல் சக்கின் கூட்டர் = தேவேந்திரன், பல் சக்கின் கூட்டர் = கூட்டமாகிய பல கண்களை யுடையவர்; சக்கு - கண்.

X கோத்த கடல், "கோத்த வேலை" திருப்புகழ் 1223.

O கண் - 'வதனம்மைதீர் கஞ்சத்தின் அளவிற்றேனும் கடலினும் பெரிய கண்கள்' கம்பரா - மாரீசன் -70.

(சுக்கி) வெளிப் படுத்தித் (தேக்கு) நிரம்பினதாய் (செக்கர்) செந்நிறத்ததாய், போர் - கயல் - கண் - போர்க்கு உற்றதாய்க் கயல் மீன் போன்றதான *கண்களின் மீதும் - கூற்றில் பேச்சுக்களின் மீதும் (மயலாகி) காம மயக்கம் கொண்டவனாய் -

(அச்சக் கூச்சம் அற்று) பயமும், நாணமும் இல்லாது போய் (கேட்டவர்க்கு) என்னைப் பற்றி விசாரிப்பவர்களிடம் (என்னைத்) தூர்த்தன் என - இவன் காமுகன் - பரத்தமை கொண்டொழுகுவோன் என்று பலரும் கூறத் தினந்தோறும் -

(அத்தப் பேற்றில்) பொன் பொருள் பெறுவதிலேயே (இச்சிப்பார்க்கு) இச்சை - ஆசை கொள்ளும் அவர் மீது (விலை மகளிர் மீது) அற - மிகவும், (பித்தாய் - காமப்பித்துக் கொண்டவனாய் (நான்) திரிதல் நன்றா! திரிதல் ஆகாது என்றபடி;

(பச்சைக் கூத்தர்) பச்சை நிற முடையவரும் - காளிங்கன் என்னும் பாம்பின் மீது நடித்தவருமான திருமால் மெச்சி - மெச்ச - புகழ்ந்து போற்றவும் சேத்த - சிவந்த பத்மக்கூட்டில் - தாமரை ஆசனத்தில் (உறைவோர்) வீற்றிருக்கும் பிரமன்,

(இபத்தில் சேர்) வெள்ளை யானையின்மீது ஏறும் (பல சக்கில் கூட்டர்) பல (ஆயிரம்) கண்களோடு கூடிய இந்திரன், (பத்தக் கூட்டர்) பக்த ஜனக் கூட்டங்கள் (இயல் வானம்-) தகுதி வாய்ந்த விண்ணுலகத்தவர் - ஆகிய இவர்கள்

மெச்சிப் போற்ற - புகழ்ந்து போற்றவும் (வெற்பு) கிரவுஞ்ச கிரி தோற்றுப் போய் நாணம் கொள்ளவும் (கோத்த கடல்மீதே) உலகுக்கு ஆடையாக அமைந்துள்ள (சூழ்ந்துள்ள) கடலிடையே-

நிரம்பக் காய்த்த (சொக்கு) மாமரத்தின் (கோட்டை) கொம்புகளை வெட்டிச் சாய்த்த - வெட்டி - அழித்த பெருமாளே!

(பித்தாய்த் திரியலாமோ)

## 1225.

கடலைக் காட்டிலும் பெரிய கண்கள், மலையைக் காட்டிலும் பெரிய கொங்கை இனும் - பின்னும் - கவர், (இதழ் ஊறலை) நுகர்தலுக்கு உரிய (துவர் அதரம்) பவளம் போன்ற சிவந்த வாயிதழ் அல்லது துவரினும் கவர் அதரம் - பவளத்தினும் அதிக கவர்ச்சியுடைய வாயிதழ், இரண்டு தோள்கள் பசுமை வாய்ந்த,

---

* கண் - "செவ்வாய்கு கன்னியர் வண்ணப் பயோதரம் சேர எண்ணி மால்வாங்கி ஏங்கிமயங்காமல்" - கந்தரலங். 77.

கழையினுங் குழையுமென மொழி *பழங் கிளவிபல
 களவுகொண் டொருவர்மிசை கவிபாடி,
அடலசஞ் சலனதுல னநுபமன் குணதரன்மெய்
 அருள்பரங் குரனபய னென்†ஆசித்-
தலமரும் பிறவியினி‡ யலமலம் பிறவியற
 அருணபங் கயசரண மருள்வாயே;
வடநெடுங் குலரசத கிரியினின் றிருகலுழி
 மகிதலம் புகவழியு மதுபோல-
மதசலஞ் சலசலென முதுசலஞ் சலதிநதி
 வழிவிடும் படிபெருகு முதுX பாகை,
உடையசங் க்ரமகவள தவளசிந் துரதிலக
 ருலகுமிந் திரனுநிலை பெறவேல்கொண்-
டுததிவெந் தபயமிட மலையொடுங் கொலையவுண
 ருடனுடன் றமர்பொருத பெருமாளே (235)

## 1226. பதம் பெற

தத்தத் தனத்ததன தத்தத் தனத்ததன
 தத்தத் தனத்த தனதான

கட்டக் O கணப்பறைகள் கொட்டக் குலத்திளைஞர்
 கட்டிப் புறத்தி லணைமீதே-

---

* "பழங் கிளவி பல களவு கொண்டு" - 'இயல்வாணர் தெரியும் அருமைப் பழைய மொழியைத் திருடி நெருடிக் கவிபாடித் - திரியு மருள்விட்டு' திருப்புகழ் 290.

† ஆசித்தல் விரும்பிப் புகழ்தல் - 'ஆசித்தார் மனதிற் புகும் உத்தம'- திருப்புகழ் 443.

‡ அலம் அலம் - போதும் போதும்-பாடல் 912- பக்கம் 659-குறிப்பு ‡

X பாகை=பாகனை.

O கணப்பறை-இதுபுறமுழவு-இதனை 'அதமக் கருவியான கணப்பறை' என்றார் சிலப்பதிகார உரையாசிரியர் -3- பக்கம் 106. 'சத்தக் கணப்பறைகள்'- திருப்புகழ் 921.

(கழையினும்) மூங்கிலினும் குழைந்து நிற்கும் என - என்று மாதர்களைப் புகழப் பொருள் வேண்டி, (மொழி) சொல்லப்படும் (பழங்கிளவிபல) பழையஉவமைச் சொற்கள் பலவற்றைப் (பழைய நூல்களினின்று) களவு கொண்டு - திருடி (ஒருவர்மிசை - பொருட் செல்வம் உடைய - ஒருவர் மீது கவிகளை உண்டாக்கிப் பாடி - (அவரை அப்பாடல்களில்)

(நீ) அடல் அசஞ்சலன் - வலிமை பொருந்தியவன் அசஞ்சலன் கவலை அற்றவன், (அதுலன்) நிகரில்லாதவன், (அநுபமன்) உவமை இணை கூற முடியாதவன் (இணையில்லாதவன், (குணதரன்) நற்குணம் உடையவன், (மெய் அருள் பர அங்குரன்) உண்மைப் பொருளை அருளவல்ல மேலான தோற்றத்தவன், அபயன் அடைக்கலம் தர வல்லவன் என்றெல்லாம் (ஆசித்து) விரும்பிப் புகழ்ந்து வாழ்த்தி -

மனம் கலங்கி வருந்தும் இப்பிறப்பு, இனிப் போதும் போதும்; ஆதலால் பிறவி என்பது ஒழிய சிவந்த தாமரை யனைய உனது திருவடியைத் தந்தருளுக.

வடக்கே உள்ள பெரிய சிறந்த வெள்ளி மலையிலிருந்து (இரு கலுழி) இரண்டு (அல்லது பெரிய) நீர்ப் பெருக்கு (அல்லது காட்டாறு (மகிதலம்) பூமியில் புக வழிந்து வருவதுபோல,

மதநீர் சலசல என்னும் ஒலியுடன் (முதுசலம் சலதி) பழமையான நீர் நிறைந்த (சலதி) கடலும் ஆறும் (வழிவிடும்படி) தனது ஓட்டத்துக்கு முன் வழிவிட வேண்டுவது போலப் பெருகுவதும், பழைய பாகனை - ஓட்டும் யானைப்பாகனாக - இந்திரனை.

உடையதும், சங்கரம கவள - கவள சங்கரம் - உணவு உண்டைகள் சேரப்பற்றி உண்பதும், அல்லது சங்கராம - போர்புரிவதும், கவளம் - ஊண் உண்டைகள் உண்பதும் (தவள) வெண்ணிறம் உடையதுமான (சிந்துரம்) யானையாம் ஐராவதத்தைக் கொண்ட (திலகன்) சிறந்தவனான இந்திரனனுடைய பொன்னுலகும், அந்த இந்திரனும் நிலைபெற்று உய்ய, வேலை ஏந்தி -

(உததி) கடல் வெந்து ஓலமிடவும், கிரவுஞ்சகிரியுடனும், கொலைத் தொழில் பூண்ட அசுரர்களுடனும் (உடன்று) மாறுபட்டுப் பகைத்துப் போர்புரிந்த பெருமாளே!

(பங்கய சரணம் அருள்வாயே)

## 1226.

கட்டக் கணப்பறைகள் - கஷ்டத்தைக் குறிக்கும் (அல்லது கட்டப்பட்ட) தோற்பறை வகைகள் கொட்டப்பட்டு ஒலிக்க, (குலத்து) இறந்தவருடைய - ஜாதியைச் சேர்ந்த இளைஞர்கள் (கட்டி) பாடையைக்கட்டிப் பிணத்தின் விறகுப்படுக்கையின் மேல்

கச்சுக் கிழித்ததுணி சுற்றிக் கிடத்தியெரி
கத்திக் கொளுத்தி யனைவோரும்;
சுட்டுக் குளித்துமனை புக்கிட் டிருப்பரிது
சுத்தப் பொயொப்ப துயிர்வாழ்வு-
துக்கப் பிறப்பகல மிக்கச் சிவத்ததொரு
சொர்க்கப் பதத்தை யருள்வாயே;
எட்டுக் குலச்சயில முட்டத் தொளைத்தமரர்
எய்ப்புத் தணித்த கதிர்வேலா-
எத்திக் குறத்தியிரு முத்தத் தனக்கிரியை
யெற்பொற் புயத்தி லணைவோனே;
*வட்டக் கடப்பமலர் மட்டுற்ற செச்சைமலர்
வைத்துப் பணைத்த மணிமார்பா-
† வட்டத் திரைக்கடலில் மட்டித் தெதிர்த்தவரை
வெட்டித் துணித்த பெருமாளே (236)

## 1227. பெண்கள் மீதுள்ள மாயம் ஒழிய

தந்த தானன தந்த தானன
தந்த தானன தனதான

கண்டு போல்மொழி வண்டு சேர்குழல்
கண்கள் சேல்மதி முகம்வேய்தோள்-
கண்டு பாவனை கொண்டு தோள்களி
லொண்டு காதலி லிருகோடு,
மண்டி மார்பினில் விண்ட தாமென
வந்த கூர்முலை மடவார்தம்-
வஞ்ச மாலதில் நெஞ்சு போய்மடி
கின்ற மாயம தொழியாதோ;
கொண்ட லார்குழல் கெண்டை போல்விழி
கொண்டு கோகில மொழிகூறுங்-

---

* வட்டக் கடப்ப மலர் - கடப்ப மலர் வட்ட வடிவினது. "மரா அத்து உருள்பூந் தண்டார்" திருமுரு 'உருள்பூ' - தேருருள் போன்ற வட்டப்பூ"- வேறுரை).

† இந்த அடியுடன் பாடல் 306- அடி 8 - ஒப்பிடுக.

கச்சக் கிழித்ததுணி - அரைப்பட்டிகை கொண்டு சுற்றுவது போலக் கிழிக்கப் பட்ட துணிகொண்டு சுற்றிக் (கிடத்தி) படுக்கவைத்து, எரிகத்திக் கொளுத்தி - நெருப்பு முழுங்கும்படி தீ இட்டுச், சுடுகாட்டுக்கு வந்த யாவரும் -

சுட்டுவிட்டு (நீரில்) குளித்து, வீட்டுக்குப்போய் இருப்பர்; இங்ஙனம் முற்றிலும் (பொய் ஒப்பது) நிலையற்றிருப்பது (இந்த) உயிர் வாழ்க்கை; (ஆதலால்)

துக்கத்துக்குக் காரணமான இந்தப் பிறவி ஒழிய (நீ) மிகவும் சிவந்ததான ஒப்பற்ற (சொர்க்கப் பதத்தை) பேரின்பத்துக்கு இடமான உனது திருவடியைத் தந்தருளுக.

எட்டு திக்குப் பெரிய மலைகளை (அவைதமில் இருந்த அசுரர்களை) அடியோடு நன்கு (தொளைத்து) கலக்கித், தேவர்களின் இளைப்பைச் (சோர்வை) நீக்கின ஒளி வேலனே!

(எத்தி) வஞ்சித்து - சூழ்ச்சி செய்து - குறத்தி - வள்ளியின் இரண்டு முத்துமாலை அணிந்திருந்த கொங்கை மலைகளை (எல்) ஒளி பொருந்திய (பொன்) அழகிய திருப்பு யங்களில் அணிந்தவனே!

வட்ட வடிவுள்ள கடப்ப மலர் மாலையையும், தேன் பொருந்திய வெட்சி மலர் மாலையையும் அணிந்து பெருமையுறும் அழகிய மார்பனே!

வட்ட வடிவமாய் வளைந்துள்ளதும், அலை வீசுவதுமான கடலிடையே எதிர்த்தவரை - எதிர்த்து வந்த பகை அசுரர்களை மட்டித்து முறியடித்து, வெட்டிப் பிளந்த பெருமாளே!

(சொர்க்கப் பதத்தை அருள்வாயே)

## 1227.

(கற்கண்டை நிகர்க்கும் மொழி பேச்சு); வண்டுகள் சேர்வன கூந்தல்; கண்கள் சேல்மீனை ஒக்கும்; (மதி) சந்திரனை (ஒக்கும்) முகம்; மூங்கிலை நிகர்க்கும் தோள் - என,

உவமை கண்டு (பாவனை கொண்டு) அவைகளை அங்ஙனே பாவித்து - தியானித்து, தோள்களில் (ஒண்டு) ஒண்டும்படியான - சாரும்படி (காதலில்) ஆசை பூண்பதால், இரண்டு மலைகள்

(மண்டி) நெருங்கி - மார்பில் வெளிப்பட்டுள்ளனவாம் என்று சொல்லும்படி தோன்றுவதான (கூர்) சிறப்புற்ற கொங்கைகளை உடைய மாதர்களின் -

வஞ்சகம் நிறைந்த (மால் அதில்) மோக மயக்கில் (என்) நெஞ்சு போய் மாய்கின்ற (இந்த) மாயம் - அது - ஒழியாதோ - மயக்க அறிவு - அஞ்ஞானம் நீங்காதோ!

(கொண்டல் ஆர் குழல்) மேகம் போன்ற கூந்தல், கெண்டை மீன்போன்ற கண், இவைதமைக் கொண்டு (கோகில மொழி) குயில் போன்ற பேச்சுக்களைப் பேசுபவளும் -

கொங்கை யாள்குற மங்கை வாழ்தரு
குன்றில் மால்கொடு செலும்வேலா;
வெண்டி மாமன மண்டு சூர்கடல்
வெம்ப மேதினி தனில்மீளா-
வென்று யாவையு மன்றி *வேளையும்
வென்று மேவிய பெருமாளே (237)

## 1228. அருள்பெற

தத்தன தத்தன தத்தன தத்தன
தத்தன தத்தன தனதான

† இப்பரை கைக்கொள வைப்பவர் மைப்பயில்
கட்பயி லிட்டிள வளவோரைக்-
கைக்குள்வ சப்பட பற்கறை யிட்டுமு
கத்தைமி னுக்கிவ ருமுபாயப்;
‡ பப்பர மட்டைகள் பொட்டிடு நெற்றியர்
பற்றென வுற்றவொர் தமியேனைப்-
பத்மப தத்தினில் வைத்தருள் துய்த்திரை
யட்டதெ ணக்கினி யமையாதோ;
Xகுப்பர வப்படு பட்சமி குத்துள
**முத்தரை யர்க்கொரு மகவாகிக்-

---

*வேளையும் (மாரன் - காமனையும்) அழகால் வென்றதால் 'குமாரன்' என முருகவேளுக்குப் பெயர் மாரன் - மன்மதனையும் கு- குற்சிதப் படுத்துபவன். தன் அழகால் இழிவு படுத்துபவன் - "ரத்தின பணா நிருத்தன் மெய்ச்சுதனும் நாடு மிக்க லக்ஷண குமார சுப்ரமணி-யோனே" - திருப்புகழ் 1256.

† பிச்சைப் பாத்திரத்தை எடுக்கும்படி செய்பவர்கள் 'சுஞ்சுளியுந் தடி யிந்து போ' என்பவர்கள் - என்றார் 767 - ஆம் பாடலில்.

‡ பப்பர மட்டைகள் - பாடல் 508. அடி 1.; 570 அடி 3. பார்க்க.

Xகு பரவப் படு = பூமியிலுள்ளோரால் புகழப்படும்; கு = கூ = பூமி.

** முத்து + அரையர்; முத்தர் + ஐயர் எனப்பிரித்தும் பொருள் காணலாம்.

கொங்கையை உடையவளுமான (குற மங்கை) வள்ளி வாழ்ந்திருந்த (குன்றில்) வள்ளி மலையில் (மால்கொடு) அவள்மீது கொண்ட காதலோடு சென்ற வேலனே!

(வெண்டி மா மனம்) மா மனம் வெண்டி - சிறந்த தன் மனம் (வெண்டி) அடங்கி வற்றிக் களைத்துப்போய் (மண்டு) நெருங்கி வந்த சூரன் (வெம்ப) வாடவும், கடல் கொதித்து வேவவும் (மேதினிதனில்) உலகிடையே ரட்சிக்க வந்து-

(வென்று யாவையும்) சூரன் முதலான யாவரையும் யாவற்றையும் ஜெயித்துப், பின்னும் (வேளையும்) மன்மதனையும் வென்று - உன் அழகால் ஜெயித்து வீற்றிருக்கும் பெருமாளே!

(மாயமதொழியாதோ)

## 1228.

(கப்பரை) பிச்சை ஓட்டைக் கையிற் கொள்ளும்படி வைப்பவர்கள் (அப்படிப்பட்ட தரித்திர நிலைக்குக் கொண்டு வந்து விடுபவர்கள்), மை பயில் கண் பயிலிட்டு - மை பூசிய கண்ணை உபயோகப்படுத்தி - கண் பார்வை கொண்டே, இள - இளம் பருவத்தினரான (வளவோரை) (பொருள்) வளப்பம் பொருந்தினவரைத் (தமது)

கைக்குள்ளே வசப்படும்படி - (பற் கறை யிட்டு) பல்லில் வெற்றிலை உண்ட (கறை) அடையாளத்துடனே, முகத்தை மினுக்கி வருகின்ற தந்திரசாலிகளான -

(பப்பர மட்டைகள்), கூத்தாடிகளாம் பயனிலிகள், பொட்டு இட்டுள்ள நெற்றியினை உடையவர்கள் - ஆகிய வேசையர்களே (பற்றென உற்ற) துணையெனக்கொண்ட ஒரு தன்னந்தனியனான - கதியற்றவனான - என்னை (உனது)

(பத்ம பதத்தினில்) தாமரையன்ன திருவடிக் கீழ் வைத்து, (உனது) திருவருளைத் (துய்த்து) அனுபவித்து (இரைபட்டது) - அந்த அருள் உணவை அடைந்தேன் என்னும்நிலை - திருவருள் உணவை உண்டு அனுபவித்தல் என்னும் பாக்கியம் - எனக்கு இனியேனும் பொருந்தாதா - கூடாதோ!

*கு பரவப் படு- பூமியில் உள்ளோராற் புகழப்படும் (பட்சம்) அன்பு மிகவும் உள்ள (முத் தரையர்க்கு) மூவுலகுக்கும் தலைவரான சிவபிராற்கு ஒப்பற்ற குழந்தையாகி -

---

* கு பரவும் - முத்தரையர்; சிவன் மூவுலகுக்கும் தலைவன், "இம் மூவுலகுக்கு அன்னையும் அத்தனும் ஆவாய்.

அழல்வணா நீ யலையோ"- அப்பர் 4-112-3.

"மூவுலகும் ஏத்தும் படியார்" - 'மூவுலகுக்கொரு மூர்த்தி யாய்க் காத்தனை'- சம்பந்தர் 1-72-2; 2-14-4;

*குத்திர மற்றுரை பற்றுணர் வற்றவொர்
குற்றம றுத்திடு முதல்வோனே;
விப்ரமு னிக்குழை பெற்றகொ டிச்சிவி
சித்ரத னக்கிரி மிசைதோயும்-
விக்ரம மற்புய வெற்பினை யிட்டெழு
வெற்பைநெ ருக்கிய பெருமாளே (238)

## 1229. திருவடியைப் பெற

தனதாத்த தய்ய தனதாத்த தய்ய
தனதாத்த தய்ய தனதான

இலை கோட்டு வல்லி விலைகாட்டு வில்ல
ரிலைமார்க்கு மெய்யி லவநூலின்-

கலைகாட்டு பொய்ய †மலைமாக்கள் சொல்ல
கடுகாட்டி வெய்ய அதிபாரக்,

கொலைகோட்டு ‡கள்ளி டறிவோர்க்கு முள்ள
முகையாக்கை நையு முயிர்வாழக்-

கொடி கோட்டு மல்லி குரவார்க்கொள் தொல்லை
மறைவாழ்த்து செய்ய கழல்தாராய்;

சிலைகோட்டு மள்ளர் திணைகாத்த கிள்ளை
முலைவேட்ட பிள்ளை முருகோனே-

---

* வஞ்சனை இல்லாது, சங்கப் புலவர்கள் சொன்ன உரையில் பற்று உணர்வு - பக்ஷபாதம் இல்லாதபடி குற்றம் - அவர்களுக்குள் இருந்த கலகத்தை நீக்கி உண்மைப் பொருளை விளக்கி உதவின முதல்வனே என்று 'சங்கத்தார் கலகந் தீர்த்த திருவிளையாடலையும் இது குறிக்கலாம். (பாடல் 350 -பக்கம் 378-79 குறிப்பு) குற்றம் - துன்பம் (திருக்குறள் 1029) † மலைமாக்கள் சொல் கடுமையாயிருக்கும் 'வேடுவர் விரவலாமை சொல்லி' - சுந்தரர் 7-49-1 அமலை மாக்கள் - ஆரவாரப் பேச்சினர் எனலுமாம்.

‡ வேசையர் கள்ளுண்பவர் - கள் ஊட்டுபவர் - 'பேய் நீருணிகள்' - 'ஆவேச நீருண் மதப் பொறிச்சிகள், - திருப்புகழ் 341, 362.

(குத்திரம்அற்று) வஞ்சகம் இல்லாது உன்னை (உரை) புகழ்தல், பற்று - உன்னிடம் ஆசை கொள்ளுதல், உணவு -உன்னை அறிதல் இம்மூன்றும் (அற்ற) இல்லாத ஒரு குற்றம் - பிழையை குறைபாட்டை அறுத்துதவும் (நீக்கும்) முதல்வோனே - முன்னவனே!

விப்ர முனிக்கு - அந்தண முனிவராம் - சிவ முநிவர்க்கு - சிவமுநிவர் நோக்கால் - உழை - மான்பெற்ற (கொடிச்சி) குறிஞ்சி நிலத்து - மலை நிலத்துப் பெண் ஆகிய வள்ளியின் அதிசயிக்கத் தக்க அழகிய கொங்கை மலைமீது அணைந்த -

(விக்ரம) பராக்ரமசாலியே! மற்புய வெற்பினை இட்டு மல்யுத்தத்துக்குப் - பொருந்தின புயமலை கொண்டு, எழுகிரியைத் தாக்கி அழித்த பெருமாளே!

(அருள் துய்த்தல் - எனக்கினி அமையாதோ)

## 1229.

(கலை)ஆடை (கோட்டு) வளையப் பெற்ற (புடைவைசூழ்ந்துள்ள) வல்லி - கொடி போன்ற (தங்கள்) இடைக்கு, விலை காட்டு - விலை கூறுகின்ற (வில்) ஒளி பொருந்திய (அரிவை மார்க்கு) பெண்களாம் விலை மகளிருக்கு - வேசையர்க்கு, மெய்யில் - தங்கள் உடலில் (அவ நூலின்) பயனற்ற நூலாகிய கொக்கோக சாத்திர நூலின்,

(கலை காட்டு) கலை அமிசங்களை - நுணுக்கமான பகுதிகளை விளக்குபவர்களாய், பொய் நிறைந்த (மலைமாக்கள்) வேடர்களின் (சொல்ல) சொற்களைப் போன்ற - சொற்களின் (கடு) விஷத்தைக் (காட்டி) முரட்டுத்தனமான விஷ வார்த்தைகளைப் பேசுபவர்களாய், வெய்ய - கொடுமையானதும், அதிக, பாரமுள்ளதும்

கொலை-கொலை செய்ய வல்லதும் (கோடு) மலை போன்றதுமான கொங்கையை உடையோராய்க் (கள் இடு) மதுவை ஊட்டுகின்ற (அறிவோர்க்கும) புத்தியை உடையவர்களான வேசையர்க்கு உள்ளமுகை உள்ளமாகிய மலரரும்பும், யாக்கை - உடலும் நைந்து வேதனைப்படும் என்னுடைய உயிர் வாழும் பொருட்டு

(கொடி கோட்டு மல்லி) கொடி மல்லிகை (கோட்டு) மல்லிகை மர மல்லிகை, குராமலர், ஆர் - ஆத்திமலர் இவைகளைக் கொண்டதும் (தொல்லை மறை) பழைய வேதம் வாழ்த்துவதுமான உனது (செய்ய) சிவந்த திருவடியைத் தந்தருளுக.

சிலை கோட்டு - வில்லை வளைக்கும் (மள்ளர்) (குறிஞ்சி நில மக்களாம்) குறவர்களின் அல்லது - சிலை - வில்லை ஏந்திய - கோட்டு மள்ளர் - மலைவாசிகளாகிய - வேடர்களின் தினைப் புனத்தைக் காத்த (கிள்ளை) கிளிபோன்ற வள்ளியின் கொங்கையை விரும்பின பிள்ளையாம் இளைஞனே!

திணிகோட்டு *வெள்ளி பவனாட்டி லுள்ள
சிறைமீட்ட † தில்ல மயில்வீரா;
அலைகோட்டு ‡ வெள்ள மலைமாக்கள் விள்ள
மலைவீழ்த்த வல்ல அயில்மோகா-
Xஅடி போற்றி யஃலி முடி சூட்ட வல்ல
அடியார்க்கு நல்ல பெருமானே (239)

## 1230. பாட

தனன தந்த தத்தான. தனன தந்த தத்தான
தனன தந்த தத்தான தனதான

இளவு கொண்டு கைக்காசி னளவ றிந்து கர்ப்பூர
களப துங்க வித்தார முலைமீதே-
கலவி யின்பம் விற்பார்க ளவய வங்க ளைப்பாடு
கவிதெ ரிந்து கற்பார்கள் சிலர்தாமே;
oஉளநெ கிழ்ந்த சத்தான வுரைம றந்து சத்தான
உணையு ணர்ந்து. கத்தூரி மணநாறும்-
உபய பங்க யத்தாளி லபய மென்று னைப்பாடி
யுருகி நெஞ்சு சற்றோதி லிழிவாமோ;
அளவில் வங்க விச்சேனை பரவ வந்த சுக்ரீவ
அரசு டங்க டற்றூளி யெழவேபோய்-
அடலி லங்கை சுட்டாடி நிசிச ரந்த சக்ரீவ
மற **வொ ரம்பு தொட்டார்த மருகோனே,

---

* வெள் இபவன் = வெள்ளை யானையை யுடைய தேவேந்திரன்.

† தில்லம் = காடு; தில். தில்ல - விழைவு, காலம், ஒழியிசை என்னும் பொருள்களில் வரும் ஓர் இடைச்சொல் (தொல்.சொல், 255) 'தீயேன் தில்ல மலைகிழவோர்க்கே' ஐங்குறு.204

‡ வெள்ளம் = ஒரு பேரெண் (பிங்கலம்).

X இந்த அடியைப் பாடல் 321 அடி எட்டுடன் ஒப்பிடுக.

O பாடல் 1230-அடி 3,4 -மனப் பாடஞ் செய்யத்தக்க அருமை அடிகள்

** ஒரம்பு தொட்டது - பாடல் 452-பக்கம் 6 கீழ்க்குறிப்பு

திண்ணிதான தந்தங்களை உடையதும், வெண்ணிற முடையதுமான (இபவன்) இபம் யானையாம் ஐராவதத்தை உடையவனான இந்திரனுடைய நாட்டில் உள்ள - பொன்னுலகினருக்கு ஏற்பட்ட (தேவர்களுக்கு உற்ற) சிறையை நீக்குவித்த கானமயில் வீரனே!

(அலை) கடலிடத்தும் (கோடு) மலையிடத்தும் இருந்த (வெள்ளம்) வெள்ளக் கணக்கான - மலைமாக்கள் - மலைபோன்ற அல்லது மலைமிருகங்கள் போன்ற - பகுத்தறிவில்லாத அரக்கர்கள் (விள்ள) - நீங்கிஓட, மலை - கிரவுஞ்சம் எழுகிரி ஆதிய மலைகளை (வீழ்த்தவல்ல) தள்ளி அழிக்க வல்ல வேலாயுதப் பிரியனே!

அடிபோற்றி - உனது திருவடியைப் போற்றி செய்து (துதித்து), அல்லிமாலையை - தாமரை, கழுநீர் ஆதிய மாலையை, (உனது) திருமுடியிற் சூட்டும் திறம் வாய்ந்த அடியார்களுக்கு நல்ல பெருமாளே!

(செய்ய கழல் தாராய்)

## 1230.

'களவு கொண்டு' வஞ்சக எண்ணம் கொண்டு (கைக்காசின்) கையில் உள்ள பொருளின் அளவைத்தெரிந்துகொண்டு, பச்சைக் கற்பூர கலவைச் சாந்து கொண்ட - துங்க வித்தார - உயர்ந்து பரந்த கொங்கையைக் கொண்டு -

புணர்ச்சியின்பத்தை விற்பவர்களாகிய (விலை மாதர்களின்) அவயவ உறுப்புக்களைப் பாடும் பாடல்களைத்தெரிந்து கற்பவர்களாகிய சில மக்கள் தம்முடைய.

உள்ளம் (நெகிழ்ந்து) நெகிழ்ச்சி யுற்று - உருகி அசத்தான சாரமற்ற பயனற்ற - வீணான (உரை மறந்து) பேச்சுக்களை மறந்து - பேச்சுக்களைப் பேசாமல், (சத்தான) உண்மைப் பொருளாம் உன்னை அறிந்து கஸ்தூரியின் நறுமணம் வீசும் - (உனது)

இரண்டு தாமரையன்ன திருவடிகளில் (அபயம் என்று) அடைக்கலம் புகுந்தேன் என்று ஓதி உன்னைப்பாடி, (உருகி நெஞ்சு) நெஞ்சம் உருகி, சிறிது நேரம் உன்னைப் புகழ்ந்து துதித்தால் ஏதேனும் இழிவு ஏற்படுமா என்ன! (ஓர் இழிவும் ஏற்படாது - பெருமையையே பெறலாம் என்க)

அளவில் - கணக்கில்லாத, வன்மை வாய்ந்த, குரங்குப் படைகள் பரந்து சூழ்ந்துவர வந்த சுக்ரீவன் என்னும் கவி - குரங்கு அரசுடனே சென்று, கடல் தூசி படும்படி சென்று

(அடல்) பகைக்கு இடமாயிருந்த இலங்கை நகரைச் சுட்டுப் போர்புரிந்து அரக்கன் ராவணனுடைய - பத்துக் (கழுத்தும்) தலைகளும் அற்றுவிழ, ஒரு அம்பைப் பிரயோகித்தவரான திருமாலின் மருகனே!

வளரு மந்த ரச்சோலை மிசைசெ றிந்த முற்பாலை
வனசர் கொம்பி னைத்தேடி யொரு*வேட-
வடிவு கொண்டு பித்தாகி யுருகி வெந்த ரக்கானில்
மறவர் குன்றி னிற்போன பெருமாளே (240)

## 1231. பணிய

தய்யனா தத்ததன தய்யனா தத்ததன
தய்யனா தத்ததன தனதான

† இள்ளமீ னச்சுறவு கொள்ளுமீ னற்பெரிய
கல்விவீ றக்கரிய மனமாகுங்-

*வேட வடிவு கொண்டு பித்தாகி - 'கோதைப் பித்தாய் ஒரு வேடுவ ருபைப்பெற்றே" - திருப்புகழ் 980.

† தன்னுடைய ஆற்றலால் - தந்திரத்தால் - சுறாமீன் - பிற மீன்களை உண்ணும். அதுபோலத் தனது கல்விஞான ஆற்றலாலும் தந்திரத்தாலும் பல புலவர்களை ஒரு அறிஞன் வெல்வான்; கல்விஞானத்தின் பெருமையை யமுனைத் துறைவருடைய சரித்திரம் விளக்கும்.

சிறுகுழந்தையாகிய யமுனாரியர் "வித்வஜன கோலாகலன்" என்னும் மகா பண்டிதனை ராஜ சபையில் நாம் - "ஆம்" - என்கின்ற மூன்று கேள்வியை மாத்திரம் - "அல்ல" என்று மறுப்பிரானால் நம்மை ஜெயித்ததாக ஒப்புக்கொள்ளுகிறோம்" என்றார். மகா பண்டிதனும் நன்று என்றான். முதற் கேள்வி: "ஐயா! உமது தாய் புத்ரவதி" என்கிறோம், இதை உமது வாக்கு வல்லமையால் மறுத்து உரையும் என்றார். இரண்டாவது கேள்வி: இந்த அரசன் தர்மவான் என்கிறோம் - இதை மறுத்துரையும் பார்க்கலாம் என்றார்: மூன்றாவது கேள்வி - இந்த ராஜ பத்தினி பதிவிரதை என்கிறோம், இதை மறுத்துரையும் என்றார். மகா பண்டிதன் என் தாயை நான் எப்படி புத்ரவதி அன்று என்று நிலைநிறுத்தக்கூடும்; அரசன் எதிரில் அவன் தர்மவான் அன்று என்றும், அரச பத்தினி பதிவிரதை அன்று என்றும் எப்படி நான் வாதிக்கக்கூடும் என மயங்கி, விடைகூற மாட்டாது நான் தோற்றேன் என ஒப்புக்கொண்டான். அரசன் "சுவாமி! தேவரீரே நீர் எழுப்பிய கேள்விகளில் நீர் உரைத்தவற்றை மறுத்துக் கூறுங்கள் பார்க்கலாம்" என்றார் யமுனைத் துறைவர் -

(i) 'ஒரு பிள்ளையும் பிள்ளையல்ல ஒரு மரமும் தோப்பல்ல' என்ற பழமொழிப்படி இப்பண்டிதரின் தாய்க்கு-வாழைஒருகுலைசனுவதுபோல,இவர் ஒரே பிள்ளை ஆதலால் - இவர் தாய் வாழைமலடியாதலால் புத்திரவதி யாகாள்.

(தொ பக். 551)

வளர்ந்துள்ள (மந்தரச் சோலை தெய்வ விருக்ஷமாகிய 'மந்தாரம்' போன்ற மரங்கள் சூழ்ந்த - அல்லது மந்தாரம் - செம்பரத்தை அல்லது முள் முருக்கு ஆகிய மரங்களைக் கொண்ட சோலை மிசை - சோலையின் கண்ணும், நெருங்கி முன் நின்ற (பாலை) முல்லையும் குறிஞ்சியும் (காடும் மலையும்) கொண்ட நிலத்தின் கண்ணும் (வனசரர் கொம்பினை) வேடர்மகள் வள்ளியை அல்லது சோலையில் நெருங்கி முன் இருந்த பாலை -பெண், வேடர் மகள் - வள்ளியை - அல்லது சோலையில் பொருந்தி வளர்ந்து முன்னே தோன்றிய பாலைக்கொடி போன்ற வேடர் கொம்பு - வள்ளியைத் - தேடிச் சென்று, ஒப்பற்ற வேடர்

வடிவத்தைப் பூண்டு, காமப் பித்துடன் உள்ளம் உருகி, (வெயிலில்), வெந்து அற - அற வெந்து - மிகவும் வேவுதல் உற்று, காட்டில், வேடர் வாழ்ந்த மலையிடத்தே சென்ற பெருமாளே?

(உனை சற்று ஓதில் இழிவாமோ)

## 1231.

கள்ளத் தந்திரத்தை உடைய (மீனச் சுறவு) சுறா மீனானது (கொள்ளும் மீன்) மீன் கொள்ளும் - பிற பல மீன்களை உண்ணும் (அது போலப் பல புலவர்களை வெல்லக்கூடிய நல்ல பெரிய கல்வி ஞானமானது வீற (எனக்கு) மேம்பட்டு விளங்கக் கரிய மனமாகும் வலிய (அல்லது அஞ்ஞான) மனமாகிய

---

(ii) 'ராஜா ராஷ்டிர கிருதம் பாபம்; என்ற நீதி வாக்கியத்தின்படி நாட்டினர் செய்த பாபம் அரசனை அடையும்: ஆதலால் அரசன் தர்மவான் ஆகான் -

(iii) கரு உற்பத்தியாற் சந்திரனுக்கும், விளையாட்டால் கந்தருவனுக்கும், தீபன விர்த்தியால் அக்கினிக்கும், பின்பு மணஞ் செய்துகொள்பவனுக்கும் சுவாதந்திரியப்படுதலால், நான்கு பதிகளை உடையவளாகின்றாள் -ஒருபத்தினி.

" மன்றல் எவ்வாறு முற்றும் வானவர் அருள் இல்லாமல்" என்றபடி மணம் செய்யும் காலத்தில் அக்கினி, வருணன் முதலிய தேவர்களுக்குச் சமர்ப்பிக்கப்படுதலால் ஸ்திரீகளுக்குப் பதிவிரதா பங்கம் வருகின்றது என விளக்கினர்; இவ்விளக்கத்தைக்கேட்ட அரசன் யமுனைத் துறைவரின் அறிவைமிக மெச்சினன்.

இனி; கள்ள மீனச் சுறவுகொள்ளும் = வஞ்சனையையுடைய சுறாமீனைக் கொடியாகக் கொள்ளும்; மீனற் பெரிய கல்வி = மன்மதனைச் சார்ந்த பெரிய காமவித்தை; (மீனன் என்பது இங்கே காமன் என்னும் துணையாய் நின்றது, 'வேதவேதியர்' என்றதுபோல; ஈனன் என்றும் பிரிக்கலாம்); வீற = மிகுதியாக; கரியமனம் ஆகும் கல்விடாது - உற்றதிசை - போன போன

(தொடர்ச்சி 552-ம் பக்கம் பார்க்க)

*கல்விடா துற்றதிசை சொல்விசா ரத்திசைய
மெய்கள்தோ ணிப்பிறவி யலைவேலை;
மெள்ள ஏ றிக்குரவு வெள்ளிலார் வெட்சிதனை
முல்லைவே ருற்பலமு ளரிநீபம்-
வில்லநீள் பொற்கனக வல்லிமே லிட்டுனது
சொல்லையோ திப்பணிவ தொருநாளே†;
துள்ளு‡மா னித்தமுனி புள்ளிமான் வெற்புதவு
வள்ளிமா னுக்குமயல் மொழிவோனே-
தொல்வியா ளத்துவளர் செல்வர்X யா கத்தரையன்
எல்லைகா ணற்கரியர் குருநாதா;

---

(551-ம் பக்கத் தொடர்ச்சி)

திக்குகளிலெல்லாம்; சொல் விசாரத்து இசைய = எடுத்துச் சொல்லப்படும் கவலைகளில் பொருந்த (வெறும் சொல்லாராய்ச்சியில் பொருந்த என்றும் கொள்ளலாம்); மெய்கள் தோணி = உடம்புகள் தோன்றி (தோணி = மரூஉ), பிறவி அலை வேலை = பிறவியாகிய அலைகளையுடைய கடலை"...எனப் பொருள் காண்பர் அன்பர் வாகீச கலாநிதி ப்ரும்மஸ்ரீ கி.வா ஜகந்நாத அய்யர்.

---

* கல் = கல்லை.

† சுறாவாகிய பெருமீன் சிறு மீன்களை அடக்கி உண்ணுவது போல நற் பெரிய கல்வி - நல்ல அருள் ஞானக் கல்வியின்முன் பிற கலைஞானங்கள் அடங்கி ஒடுங்கும்; ஆதலால் அந்த அருள் ஞானமாம் பெரிய கல்வி வீற (எனக்குக் கைவசப்பட்டு விளங்க) என்பது 1231-ஆம் பாடலின் முதலடியின் கருத்து. கரிய அஞ்ஞானம் மூடியுள்ள மனத்தை நிலையாக நிறுத்தி நாலு திசையிலுள்ள பெரியோர்கள் சொன்னவற்றை ஆராய்வதால் மெய்கள் தோன்றிப் பிறவிக் கடலை ஏறிக் கடந்து - அல்லது திசைப் பெரியோர்கள் செய்துள்ள ஆராய்ச்சியில் ஏற்பட்ட மெய்களை (உண்மைகளைத்) தோணியாகக் கொண்டு பிறவிக்கடலை ஏறிக் கடந்து - குரவு, விளா, ஆகிய மலர்கொண்டு உனது பாத தாமரையைப் பூசித்து, உனது புகழை ஓதிப் பணியும் ஒரு நாள் எனக்குக் கிட்டுமா என்பது அடிகள் 2,3,4ன் கருத்து.

‡ மா னித்த முனி = மால் நீத்த முனி - சிவ முநிவர்; வள்ளியம்மை வரலாறு - பாடல் 382-பக்கம் 464.

கல்லை (விடாது) அது போகும் வழியில் விடாது - ஒரு நிலைப்படுத்தி, உற்ற திசை - பொருந்தியுள்ள நாலு திசைகளில் உள்ள பெரியோர்கள் (சொல்) சொல்லியுள்ள, விசாரத்து - ஆராய்ச்சிகளின் பயனாக (மெய்கள் தோணி) உண்மைப் பொருள்கள் தோன்றி விளங்கிப், பிறவியாகிய அலைகடலை - (அல்லது ஆராய்ச்சியின் பயனாக ஏற்படும் மெய்களே - உண்மைகளையே (தோணி) படகாகக் கொண்டு பிறவியாகிய அலைகடலை)

மெதுவாக (ஏறி) கடந்து - தாண்டி, குராமலர், (வெள்ளில்) விளா இலை; (ஆர்) ஆத்தி, வெட்சி, (தனை) தண் -அ -குளிர்ச்சி பொருந்திய முல்லை, (வேர்) குறுவேர், (உற்பலம்) நீலோற்பலம் (முளரி) தாமரை, (நீபம்) கடம்பு -

(வில்வம்) வில்வம், நீள் - பெரிதும், (பொன்) அழகுள்ளதும் (கனகம்) பொன்போல ஒளி வீசுவதுமான (அல்லி) ஆம்பல் முதலிய நீர்ப்பூக்களை (மேலிட்டு) உனது திருவடியின் மீது இட்டு, அல்லது வில்வம் முதலியவற்றை (நீள்பொற் கனக அல்லி - பெருமை மிக்க (பொன்) அழகுள்ளதும்) (கனகம்) பொன் போன்றதுமான (அல்லி) உனது திருவடித் தாமரையின்மீது சொரிந்து, உனது சொல்லை (புகழை) ஓதி - உரைத்து, உன்னைப் பணியும்படியான ஒருநாள் எனக்குக் கிட்டுமா! (அல்லது உனது சொல்லை - நீ சம்பந்தராய்த் திருவாய் மலர்ந்த தேவாரப் பதிகங்களை ஓதிப் பணியும் ஒரு பாக்கிய நாள் எனக்குக் கிட்டுமா)!

துள்ளும் - வீறிட்டு எழும் (மால்) ஆசைகளை (நீத்து) விட்டொழித்த (முனி) சிவ முநிவர் (புணர்ந்த) புள்ளி மானாகிய இலக்குமி (வெற்பு) வள்ளி மலையில் (உதவு) பெற்ற வள்ளியம்மையாம் மான் போன்ற நங்கையினிடம் (மயல்) காதல் மொழிகளைப் பேசினவனே!

(தொல்) பழமையான (வியாளத்து) பாம்பாகிய ஆதிசேடன் மீது (வளர்) கண் வளரும் - துயில் கொள்ளும் செல்வராம் திருமாலும் * (யாகத்து அரையன்) வேள்வி நாயகனான இந்திரனும் எல்லையே காண்பதற்கு அரியராகியசிவபிரானுக்குக் குருநாதனே!

---

* யாகத்து அரையன் = யாக வேந்தன், மகபதி = இந்திரன். யாகங்கள், ஐவகைய = பிரமம், தெய்வம், பூதம், பிதுர், மானுஷம் என்பன. பிரம யாகம் = வேதம் ஓதுதல், தெய்வ யாகம் = ஓமம் வளர்த்தல், பூத யாகம் = பலியீதல், பிதுர் யாகம் = தர்ப்பணம் செய்தல், மனுஷ யாகம் = இரப்போருக்கு அளித்தல். வேதம் ஓதுதல் பிரம யாகம் எனப்படுதலால் யாகத்து அரையன் = பிரமன் எனவும் எடுத்துக் கொள்ளலாம்.

*தென்னுநா தச்சுருதி வள்ளல்மோ லிப்புடைகொள்
செல்வனே முத்தமினர் பெருவாழ்வே-
† தெய்வயா னைக்கிளைய வெள்ளையா னைத்தலைவ
தெய்வயா னைக்கினிய பெருமாளே (214)

## 1232. வழிபட

தன்னன தனதன தன்னன தனதன
தன்னன தனதன தனதான

கன்னியர் கடுவிட மன்னிய கயலன
கண்ணிலு மிருகன தனமீதுங்-
‡ கன்மைகள் மருவிய மன்மத னுருவிலி
மென்மைகொ ளுருவிலு மயலாகி;
இன்னல்செய் குடிலுட னின்னமு முலகினி
லிந்நிலை பெறவிங னுதியாதே-
யென்னுமு னடியவர் நன்னிய பதமிசை
யென்னையும் வழிபட விடவேணும்;
பொன்Xநவ மணிபயில் மன்னவ புனமற
மின்முலை தழுவிய புயவீரா-
O புண்ணிய முளபல விண்ணவர் தொழுமுதல்
எண்மலை யொடுபொரு கதிர்வேலா;
**தன்னிறை சடையிறை யென்††முனி பரவரு
இன்னிசை யுறு‡‡ தமிழ் தெரிவோனே-

---

* பிரமனைக் குட்டியது - பாடல் 608-பக்கம் 406 குறிப்பு.

† தெய்வ யானை = விநாயகர். 1231-ஆம் பாடலின் இந்த எட்டாவது அடியைத் திருப்புகழ், 274-ம் பாடலின் ஈற்றடியுடன் ஒப்பிடுக, அதன் உரை, குறிப்பும் காண்க.

‡ கன்மை = அரக்கர் கோமான்.. "கன்மையான் மலையை ஒடிக் கருதித்தான் எடுத்து" - அப்பர் 4-59-6.

X நவமணிகள் = கோமேதகம், நீலம், பவளம், மரகதம், மாணிக்கம், முத்து, புஷ்பராகம், வைடூரியம், வைரம்.

O புண்ணியலோகம்-தேவருலகம்.

** சிவபிரான் தனக்குத் தானே தலைவன் - "எம்பிரான் தம்பிரானாம்" - திருவாசகம். 35-2.

†† முனி - "முனிதனை மூவுலகுக்கொரு மூர்த்தியை"

‡‡ பாடல் 19 அடி. 6 பார்க்க. - சம்பந்தர் 2-14-3.

(தெள்ளும்) தெளிவான (நாதம்) ஒலியுடன் (சுருதி) வேதங்களை ஓதும் வள்ளல் - பெருமான் பிரமனுடைய (மோலி) தலையைப் (புடைகொள்) புடைத்த - குட்டின செல்வனே! முத்தமிழும் வல்ல புலவர்களின் பெருஞ் செல்வமே!

தெய்வ யானையாகிய விநாயக மூர்த்திக்கு இளையவனே- தம்பியே! வெள்ளை யானைத் தலைவ - வெள்ளை யானையாம் ஐராவதத்துக்குத் தலைவனே! தெய்வயானை (தேவசேனை)க்கு இன்பம் தரும் பெருமாளே! (உனது சொல்லை ஓதிப் பணிவது ஒரு நாளே)

# 1232.

பெண்களின் கடுமையான விஷம் பொருந்தின, கயல் மீன் போன்ற கண்களிலும், இரு கனத்த கொங்கைகளிலும்

கன்மைகள் (கல்லின் தன்மைகள்-) உறுதிப்பாடான வேலைத்திறம் (மருவிய) பொருந்தியுள்ள மன்மதன், உருவம் இல்லாதவன், ஆகிய காமனுடைய (வெந்து போதற்கு முன்பு இருந்த) மென்மைகொண்ட உருவத்தின் மீதும் - காமமயக்கம் கொண்டு -

(இன்னல்) துன்பம் ஏற்படுகின்ற (குடிலுடன்) வீடாகிய இந்த உடலுடனே இன்னமும் இந்த உலகிடையே இதே நிலையை அடையும்படி இவ்வாறு நான் பிறவாமல் -

உன்னைத் தியானிக்கும் உனது அடியவர்கள் அடைந்துள்ள உனது திருவடியின் மீது நாளும் வழிபாடு செய்யுமாறு என்னை அந்த நன்னெறியில் செலுத்த வேண்டுகின்றேன்.

பொன் நவமணி ஆபரணங்கள் (பயில்) அணிந்துள்ள (மன்னவ) அரசே! (அல்லது) பொன்னவ - பொன்போல ஒளி வீசும் அருமையனே! (மணி பயில்) ரத்னாபரணங்கள் அணிந்துள்ள மன்னவ! தினைப்புனத்தில் (மறமின்) வேட்டுவக் குலத்து மின் போல ஒளிதரும் வள்ளியின் கொங்கையைத் தழுவிய புயங்களைக் கொண்ட வீரனே! (அல்லது மற மின் - வள்ளி தனது கொங்கையில் தழுவிய புயவீரனே!

புண்ணியம் செய்து சுவர்க்கத்தில் வாழும் பல தேவர்களும் தொழுது நிற்கும் (முதல்) முதல்வனே! எண் மலை - மதிக்கத்தக்க கிரவுஞ் சகிரியின் (அல்லது கிரவுஞ்சகிரி, எழு கிரி ஆக எட்டு மலைகளுடன் ) பொரு - சண்டை செய்த ஒளி வேலனே!

தன் இறை - தனக்குத் தானே தலைவனான (சடையிறை) சடைப் பெருமான் எங்கின்ற (முனி) கடவுளின் சந்நிதிகளில் (பரவரு) பரவுவதற்கு - துதிப்பதற்கு அருமையான இனிய இசை அமைந்த தமிழை (தேவாரத்தை) உலகினர் தெரியச் சொன்னவனே! (அல்லது முனியாம் சிவபிரான் பரவ - உன்னைப் போற்றி நிற்க அவருக்கு அருமையானதும் இனிய இசையுற்றது மானதமிழை - தமிழ்மறையைத் (தெரிவோனே) உபதேசித்தவனே!

தன்னளி தருமொரு பன்னிரு விழிபயில்
சண்முக மழகிய பெருமாளே (242)

## 1233. சீர்பாத வகுப்பாதி பாட

தந்ததன தத்த தத்த தந்ததன தத்த தத்த
தந்ததன தத்த தத்த தனதான

**கி**ஞ்சுகமெ னச்சி வந்த தொண்டையள்மி கக்க றுத்த
கெண்டையள்பு னக்கொ டிச்சி யதிபாரக்-
கிம்புரிம ருப்பை யொத்த குங்கும*மு லைக்கு றத்தி
கிங்கரனெ னப்ப டைத்த பெயர்பேசா

நெஞ்சுருகி நெக்கு நெக்கு நின்றுதொழு நிர்க்கு ணத்தர்
நிந்தனையில் பத்தர் வெட்சி மலர்தூவும்-
† நின்பதயு கப்ர சித்தி யென்பனவ குத்து ரைக்க
நின்பணித மிழ்த்ர யத்தை யருள்வாயே

‡ கஞ்சன்வர விட்ட துட்ட குஞ்சரம ருப்பொ சித்த
கஞ்சனும தித்தி கைக்க மதம்வீசங்-
Xகந்தெறிக ளிற்று ரித்து வென்றுதிரு நட்ட மிட்ட
கம்பனும திக்க வுக்ர வடிவேல்கொள்.

டஞ்சியந் கத்ர யத்தை யஞ்சலென விக்ர மித்து
அன்பர்புக ழப்பொ ருப்பொ டமராடி-
அன்றவுண ரைக்க ளத்தில் வென்றுதநி யைக்க லக்கி
அண்டர்சிறை வெட்டி விட்ட பெருமாளே (243)

---

*† முலைக் குறத்தி கிங்கரன் என்றதனால் - 'மேதகு குறத்தி திருவேளைக்காரனே" எனவரும் திருவேளைக்காரன் வகுப்பும், வேடிச்சி காவலன் வகுப்பும் - 'பதயுகப்ரசித்தி, என்றதனால் சீர்பாத வகுப்பும், 'என்பன வகுத்துரைக்க' என்றதனால் பிற திருவகுப்புக்களும் - பாடுதற்கு அடிகோலி வேண்டுகோளாக இந்தப்பாடல் விளங்குகின்றது; இது சம்பந்தமாகத் திருப்புகழ் 962, 1183 குறிப்புக்களைப் பார்க்க.

‡ யானையைக் கண்ணபிரான் அட்டது

பாடல் 120-பக்கம் 286 கீழ்க்குறிப்பு.

X சிவபிரான் களிறு உரித்தது - பாடல் 286-பக்கம் 210 கீழ்க்குறிப்பு. களிற்றை உரித்தபின் நட்டம் இட்டது - 'களியுரித்து ஆடு கங்காளர்

' - சம்பந்தர் 3-93-6.

குளிர்ந்த கருணையையே பாலிக்கின்ற ஒப்பற்ற பன்னிரண்டு கண்களைக் கொண்ட ஆறு திரு முக அழகு வாய்ந்த பெருமாளே!

(என்னையும் வழிபட விடவேணும்)

## 1233.

(கிஞ்சுகம்) முருக்கு போலச் சிவந்த (தொண்டையள்) கொவ்வைக் கனியாம் வாயிதழினள், மிகவும் கருநிறங் கொண்ட கெண்டைமீன் போன்ற கண்ணினள், தினைப்புனங்காத்த மலைநிலப் பெண் (வள்ளி) யின் அதிக பாரமுள்ள.

கிம்புரி (பூண்) அணிந்துள்ள (மருப்பு ) யானையின் தந்தத்தை ஒத்ததும், குங்குமம் அணிந்ததுமான கொங்கையைக் கொண்ட குறத்தியின் (கிங்கரன்) ஏவலாள் - (வேலைக்காரன்) என (நீ) அடைந்த பெயரைப் புகழ்ந்து பேசி,

நெஞ்சம் உருகி, நெகிழ்ந்து நெகிழ்ந்து நின்று தொழுகின்ற (நிர்க்குணத்தர்) குணங்கடந்த பெரியோரும், பழிப்புக்கு இடம் தராத பக்தர்களும், வெட்சி மலரைத் தூவுகின்ற

உனது திருவடியிணைகளின் (ப்ரசித்தி) பெருங்கீர்த்தி முதலான ப்ரதாபங்களை நான் - வகுத்து உரைக்க வகைப்படுத்தி எடுத்துரைக்க, உனக்குப் பணி செய்யத், (தமிழ்த் திரயத்தை) முத்தமிழ் ஞானத்தை பாலித்து அருள்வாயாக.

கம்சன் அனுப்பின துஷ்டத்தனமுள்ள (குஞ்சரம்) குவலயாபீடம் என்னும் யானையின் தந்தத்தை (ஒசித்த) முறித்த (கங்கனும்) கருடனை (வாகனமாகக்) கொண்ட திருமாலும், மதி - புத்தி (திகைக்க) கலங்க மத நீரைப் பொழிவதும்,

(கந்து) கட்டியுள்ள தறியையும், எறி ஒடித்தெறியவல்லதுமான களிறு - யானையை (உரித்து) தோலை உரித்து. வென்று - அழகிய நடனத்தைச் செய்த ஏகாம்பர மூர்த்தியும் மதிப்புடன் நோக்க, உக்ரம் பொருந்திய கூரிய வேலாயுதத்தால்,

(சூரனுக்கு) பயந்திருந்த (ஜகத்ரயத்தை) மூவுலகை - மூவுலகினரையும் அஞ்சாதீர்கள் என்று (விக்ரமித்து) பராக்ரமத்தைக் காட்டி, அன்பர்கள் புகழ்ந்து பாராட்டப். (பொருப்பொடு) கிரவுஞ்ச கிரியுடன் போர்புரிந்து -

அந்நாள் அசுரர்களை போர்க்களத்தில் ஜெயித்து, (உததியை) கடலைக் கலக்கித் தேவர்களின் சிறையை (வெட்டி விட்ட) நீக்கி வெளிவிடுத்த பெருமாளே!

(தமிழ்த்ரயத்தை அருள்வாயே)

## 1234. திருவடியைப் பெற

தனதனன தாத்தன தனதனன தாத்தன
தனதனன தாத்தன தனதான

குடிமைமனை யாட்டியும் அடிமையொடு கூட்டமும்
குலமுமிரு மாப்புமி குதியான-
கொடியபெரு வாழ்க்கையி லினியபொரு ளீட்டியெ
குருடுபடு *மோட்டெண வுடல்வீழில்,
அடைவுடைவி டாச் † சிறு பழையதுணி போர்த்தியெ
அரிடசுடு காட்டிடை யிடுகாயம்,
அழியுமள வாட்டிலுன் அமலமலர் மாப்பத
அருணசர ணாஸ்பதம் அருள்வாயே;
அடியினொடு மாத்தரு மௌளமௌளமொ ளாச்சென
அலறிவிழ வேர்க்குல மொடுசாய-
அவுணர்படை தோற்பெழ அருவரைக ளார்ப்பெழ
அயிலலகு சேப்பெழ ‡ மறைநாலும்
உடையமுனி யாட்பட முடுகவுணர் கீழ்ப்பட
உயரமரர் மேற்பட வடியாத-
உததிகம ராப்பிள முதுகுலிச பார்த்திபன்
உலகுகுடி யேற்றிய பெருமாளே (244)

## 1235. முத்திபெற

தனன தந்த தத்த. தனன தந்த தத்த
தனன தந்த தத்த தனதான

குறைவ தின்றி மிக்க சலமெ லும்பு துற்ற
குடிலி லொன்றி நிற்கு முயிர்மாயம்

* மோடு - உடம்பு -'மோட்டுடைப் போர்வை' - ஆசாரக். 92

† பிணத்துக்குச் "சிறு பழைய துணி போர்த்து" என்றார். 'கச்சுக் கிழித்த துணி சுற்றிக் கிடத்தி' என்றார. 1226-ஆம் பாடலில்; இது அருணகிரியார் காலத்து வழக்கத்தைக் காட்டுகின்றது.

‡ பிரமன் வேலால் சிறையுற்றதால் - அஞ்சி ஆட்பட்டான் - பாடல் 571-பக்கம் 310 கீழ்க்குறிப்பு.

## 1234.

(குடிமை) குடிப் பிறப்பின் ஒழுக்கத்துக்கு ஏற்ற (மனை-யாட்டியும்) மனைவியும், (அடிமையொடு கூட்டமும்) ஏவலாளர்-களுடைய கூட்டமும், (பிறந்த) குலப் பெருமையும், (இறுமாப்பும்) ஆணவச் செருக்கும் மிக்கு நிற்கும் -

பொல்லாத பெரிய வாழ்க்கையில் இனிமை தரும் பொருளைச் சேகரித்துக் (குருடுபடு மோட்டென) கண் தெரியாது குருடுபட்ட உடல்போல இந்த உடல் விழுந்தால் (இறந்துபட்டால்)

(அடைவு உடை) தகுதியான உடையை (விடா) விட்டு - விடுத்து (அதற்குப் பதிலாக)ச் சிறிய பழைய துணி ஒன்றால் (பிணத்தைப்) போர்த்து, அரிடம் (கொளுத்தப்படும்) தீங்குக்கு இடமான சுடுகாட்டின் இடையே போடப்படுகின்ற உடல்

அழிந்து போகும் (அளவாட்டில்) அளவில் - அளவு கூடுங் காலத்தில், உன்னுடைய (அமல) குற்றமற்ற (மலர்) - தாமரை மலரனைய மாப்பத - சிறந்த பதவியாகிய - நிலையாகிய (அருண) சிவந்த (சரண ஆஸ்பதம்) திருவடியாம் ஆதரவை - பற்றுக் கோட்டினை அருள் புரிவாயாக.

அடியோடு (மா -தரு) மாமரமாகிய விருக்ஷமும் (சூர்மா) மொள மொள மொள என முறிந்து அழிந்துபோம் நிலை (ஆச்செண) ஆச்சுது (கூடிற்று) என்று சொல்லும்படி, அலறிக் கூச்சலிட்டு விழ, வேர்த்திரளுடன் (தன்னுடைய) வேர் போன்ற சகல அசுர கூட்டத்துடனும், சாய்ந்தழிய -

அசுரர்களின் படையெல்லாம் தோல்வி உண்டாக, அரிய கிரவுஞ்சம், எழுகிரி ஆதிய மலைகள் கூச்சலிட, வேலாயுதத்தின் இலைகள் (கூரிய புறங்கள்) அல்லது (அயில்) வேல். (அலகு) ஆயுதம் (சேப்பு எழ) செந்நிறம் காட்ட, வேதங்கள் நாலும்

(உடைய முனி) கொண்ட முநியாகிய பிரமன் தனது (ஆணவம்) அடங்கி ஆளாக அடிமைப்பட, முடுகி எதிர்த்து வந்த அசுரர்கள் கீழ்ப்பட்டு வணங்கச், சிறந்த தேவர்கள் மேற்பட்டு விளங்க, வற்றாத

கடல் கமராப் - பிள - (கமரா) கமராக - நிலம் பிளப்புண்டது போலப்பிளவுகாட்டிப்பிள்) ள- பிளவுபட (முதுகுலிசபார்த்திபன்) பழையவனும் வஜ்ராயுதனுமான அரசன் - இந்திரனுடைய (உலகு) பொன்னுலகில் (தேவர்களைக்) குடியேற்றி வைத்த பெருமாளே!

(சரணாஸ்பதம் அருள்வாயே)

## 1235.

(குறைவ தின்றி) குறைவு இல்லாதவகையில் நிறைய ஜலம் எலும்பு இவைகள் நெருங்கிய குடிலில்) வீடாகிய உடலில் பொருந்தியிருக்கும் உயிர் என்கின்ற மாயப் பொருள் -

குலைகு லைந்து தொர்ப்பை யிடைநி னைந்து நிற்ப
கொடிய கொண்ட லொத்த வுருவாகி;
மறலி வந்து துட்ட வினைகள் கொண்ட லைத்து
மரண மென்ற துக்க மணுகாமுன்-
மனமி டைஞ்ச லற்று னடிநி னைந்து நிற்க
மயிலில் வந்து முத்தி தரவேணும்;
அறுகு மிந்து மத்த மலையெ றிந்த அப்பு
மளிசி றந்த புட்ப மதுசூடி-
அருந டஞ்செ *யப்ப ரருளி ரங்கு கைக்கு
அரிய இன்சொல் செப்பு முருகோனே,
சிறுகு லந்த னக்கு ளறிவு வந்து தித்த
சிறுமி தன்த னத்தை யணைமார்பா
† திசைமு கன்தி கைக்க அசுர ரன்ற டைத்த
சிறைதி றந்து விட்ட பெருமாளே (245)

## 1236. மயக்கு அற

தான தனன தத்த தான தனன தத்த
தான தனன தத்த தனதான

**கோ**க னகமு கிழ்த்த போக புளகி தத்த
கோடு தலைகு லைத்த முலையாலே-
கூட வரவ ழைக்கு மாடு குழைய டர்த்த
நீடி யகுவ ளைக்கண் மடமானார்,
ஆக முறவ ணைத்து காசை யபக ரித்து
மீள விதழ்க டிப்ப தறியாதே-

* தந்தைக்கு உபதேசித்தது - பாடல் 327-பக்கம் 314 குறிப்பு அப்பர் - சிவபிரான் (அருள் இரங்குகைக்கு) தம்மீது இரங்கி அருள் பாலிக்கும் பொருட்டு அருமையான இனிய சொல் (திருநெறித் தமிழாம் - தேவாரத்தை) ஓதின இளைஞனாம் சம்பந்தனே எனவும் பொருள் காணலாம்.

† இந்த எட்டாம் அடியையும் வேண்டுகோளையும் பாடல் 276 அடி எட்டு, நாலுடன் ஒப்பிடுக.

(குலைகுலைந்து) நிலைகெட்டு நடுங்கத் (தெர்ப்பையிடை) தெர்ப்பைப் படுக்கையில் (நினைந்து நிற்ப) கிடத்த வேண்டும் என்று (உறவினர்கள்) நினைந்து நிற்கும்போது, பொல்லாதவனாய், கருமேகத்துக்கு நிகரான உருவத்துடன் -

(மறலி) யமன் வந்து, (துட்ட வினைகள் கொண்டு) பொல்லாத செயல்களைச் செய்து வருத்தமுறச் செய்து (அல்லது அந்த உயிர் செய்த கொடிய செயல்களை மனத்திற்கொண்டு அதன பொருட்டு, அலைத்து - அவ்வுயிரை வருத்தி) இறந்து போதல் என்ற துக்க நிகழ்ச்சி கூடுவதன் முன்பாக -

(நான்) மனம் இடைஞ்சல் அற்று - மனத்தில் வேதனைகள் ஒன்றும் இல்லாது - உன் அடி நினைந்து நிற்க - உன் திருவடியைத் தியானித்து நிற்க, நீ மயிலில் வந்து எனக்கு முத்திதர வேண்டுகின்றேன்.

அறுகு, சந்திரன், ஊமத்தை அலைகளை வீசும் (அப்பு) கங்கைநீர், அளி சிறந்த - வண்டுகள் நிரம்பி மொய்க்கும் மலர்கள் (அது சூடி) இவைகளைச் சூடிக்கொண்டு

அருமையான நடனம் செய்த (அப்பர்) தந்தையார் (சிவபிரான்) (அருள்) உபதேசப் பொருளை அருள்வாயாக என்று (இரங்குகைக்கு) உன்னை வேண்டி இரங்கினதற்கு இசைந்து, அருமையான இனிய உபதேசச் சொல்லை அவருக்குச் (செப்பு) உபதேசித்த முருகனே!

(சிறு குலம் தனக்குள்) கீழான குறக்குலத்தில் (அறிவு வந்து உதித்த) ஞான நிலை கூடித் தோன்றின (சிறுமி) இளம் பெண் - வள்ளியின் கொங்கையை அணைந்த திருமார்பனே!

(திசைமுகன் திகைக்க) பிரமனும் திகைத்து நிற்க அசுரர்கள் அந்நாளில் (தேவர்களை உள்ளே தள்ளி மூடின) சிறையைத் திறந்துவிட்ட பெருமாளே! (மயிலில் வந்து முத்திதர வேணும்)

## 1236.

(கோகனகம்) தாமரை மொட்டலர்ந்தது போன்றதாய்ப், (போகம்) காம இன்பத்தினாற் புளகாங்கிதம் கொண்டதாய்க், (கோடு) மலையின் (தலை) சிறப்பையும் (குலைத்த) அழித்த கொங்கையாலே -

(கூட வர அழைக்கும்) சேருதற்கு வரவழைக்கின்றவரும், (மாடு) பொன்னாலாய குழையை நெருங்கி நீண்டுள்ளதும், குவளை மலர் போன்றதுமான கண்களையுடையவருமான (மடமாதரார்)- இளம் பெண்கள் (தங்கள்)

தேகத்திற் படும்படி அணைத்தும் (அங்ஙனம் அணையப்-பட்டவரின்) பொருளை அபகரித்தும், மீண்டும் வாயிதழைக் கடிப்பதை (அதிலுள்ள வஞ்சனை எண்ணத்தைத்) தெரிந்து கொள்ளாமல் -

ஆசை யதுகொ ளுத்து மால மதுகு டித்த
*சேலில் பரித விப்ப தினியேனோ;
† மாக நதிம திப்ர தாப மவுலி யர்க்கு
சாவி யதுவொ ரர்த்த மொழிவோனே-
வாகு வலைய சித்ர ஆறி ருபுய வெற்பில்
வாழ்வு பெறுகு றத்தி மணவாளா,
வேக வுரக ரத்ந நாக சயன சக்ர
மேவி மரக தத்தின் மருகோனே-
‡ வீசு திரைய லைத்த வேலை சுவற வெற்றி
வேலை யுருவ விட்ட பெருமாளே (246)

## 1237. துன்பம் ஒழிய

தந்தந் தனந்த தந்தந் தனந்த
தந்தந் தனந்த தனதான

சந்தம் புனைந்து சந்தஞ் சிறந்த
தண்கொங்கை வஞ்சி மனையாளுந்
தஞ்சம் பயின்று கொஞ்சுஞ் சதங்கை
தங்கும் பதங்க ளிளையோரும்;
X எந்தன் தனங்க ளென்றென்று நெஞ்சி
லென்றும் புகழ்ந்து மிகவாழும்-
இன்பங் களைந்து துன்பங்கள் மங்க
இன்றுன் பதங்கள் தரவேணும்,
கொந்தின் கடம்பு செந்தண் புயங்கள்
கொண்டங் குறிஞ்சி யுறைவோனே-

---

* சேலில் பரிதவிப்பது = சேல்களையொத்த விழி மிரட்டால் பரிதவிப்பது. "நஞ்சு மேய்ந்திளங் களிக்கயல் மதர்ப்பன போல வஞ்சிவாட் கண்கள் மதர்த்தன"

"கயல் நஞ்சை மேய்தலிற் செருக்குவனபோலக் கண்கள் அலர்ந்து இருமாந்து அஞ்சிப் பிறழ" - சிந்தாமணி 2384 (உரை)

† தந்தைக்கு உபதேசித்தது -பாடல் 327-பக்கம் 314 குறிப்பு

‡ கடல் சுவற வேல்விட்ட திருவிளையாடல் எனவும் கொள்ளலாம். - பாடல் 905-பக்கம் 640 கீழ்க்குறிப்பு.

X 'இளையோரும் எந்தன் தனங்கள்' - "நம்பொருள் நம் மக்கள் என்று நச்சியிச்சை செய்துநீர் அம்பரம் அடைந்து சால அல்லலுய்ப்பதன் முனம்" - சம்பந்தர் 2-97-1.

"தம்பொருள் என்ப தம் மக்கள்" - திருக்குறள் 63.

ஆசை மிக்கு எழுப்புவதும், (ஆலம் அது குடித்த) விஷத்தை உண்ட சேலில் - சேல் மீன் போலப் (பரிதவிப்பது) வருந்துவதும் - (அல்லது ஆலம் அது குடித்த - விஷத்தை தன்னிடத்தே கொண்டுள்ள - சேலில் - சேல் மீனை ஒத்த விழி மிரட்டால் பரிதவிப்பதும் வருந்துவதும், இனியேனோ - இன்னமும் வேண்டுமோ - போதும் போதும் என்றபடி,

(மாக நதி) ஆகாய (நதியாகிய) கங்கை, (மதி) சந்திரன் இவைதமை அணிந்துள்ள (ப்ரதாப) கீர்த்தியைக்கொண்ட (மவுலியர்க்கு) திருமுடியை உடைய சிவபிராற்கு (உசாவியது) அவர் விசாரித்ததான (ஓர் அர்த்தம்) ஒப்பற்ற ஒரு பொருளை உபதேசித்தவனே!

(வாகுவலையம்) தோளணி பூண்டதும், (சித்ர) அழகியதுமான (ஆறிருபுய வெற்பில்) பன்னிரண்டு புயங்களாம் மலைகளில் மலையன்ன புயங்களில் (வாழ்வு பெறு) வாழ்க்கை இன்பத்தைப் பெற்ற குறத்தி - வள்ளியின் மணவாளனே (கணவனே)!

(வேகம்) நஞ்சுள்ள (உரகம்) பாம்பு, (ரத்ன) ரத்னமணி கொண்ட (நாகம்) பாம்பு - ஆகிய ஆதிசேடன்மீது (சயனம்) பள்ளி கொள்ளும் - துயில் கொள்ளுபவரும், சக்ராயுதத்தை ஏந்தினவரும் ஆன (மரகதத்தின்) மரகத நிற (பச்சை நிறத்), திருமாலின் மருகனே!

வீசுகின்ற அலை அலைக்கும் கடல் வற்றிப்போக ஜெய வேலை ஊடுருவச் செல்லவிட்ட பெருமாளே!

(பரிதவிப்ப தினியேனோ)

## 1237.

(சந்தம் புனைந்து) சந்தனம் அணிந்து, (சந்தம் சிறந்த) அழகு சிறந்த, (தண்) குளிர்ந்த கொங்கைகளை உடைய (வஞ்சிக் கொடி போன்ற) பெண்ணாம் மனையவளும் -

(துஞ்சம் பயின்று) (என்னைப்) பற்றுக் கோடாகக்கொண்டு (துணையாகக் கொண்டு) கொஞ்சி ஒலிக்கும் (சதங்கை) கிங்கிணியை அணிந்துள்ள பாதங்களை உடைய குழந்தைகளும் -

ஆக இவர்களே என்னுடைய செல்வங்கள் என்றென்று என்று அடிக்கடி மனத்திலே எப்போதும் புகழ்ந்துகூறி (மிக வாழும்) மிக நன்றாக வாழ்கின்ற

(இன்பம்) இந்த (நிலையிலா) இன்பத்தை நீக்கி, எனது துன்பங்கள் எல்லாம் அடங்கி ஒழிய, இன்று உனது (பதங்கள்) திருவடிகளைத் தந்தருள வேண்டுகின்றேன்;

பூங்கொத்துக்களை உடைய கடப்ப மாலையைச் செவ்விய குளிர்ந்த திருப்புயங்களில் அணிந்துகொண்டு அழகிய மலையிடங்களில் வீற்றிருப்பவனே!

கொங்கின் புனஞ்செய் மின்கண்ட கந்த
குன்றம் பிளந்த கதிர்வேலா;
*ஐந்திந் த்ரியங்கள் வென்றொன்று மன்பர்
அங்கம் பொருந்து மழகோனே
அண்டந் தலங்க ளெங்குங் கலங்க
அன்றஞ்ச லென்ற பெருமாளே (247)

## 1238. வினை அற

தனதன தனத்த தத்த, தனதன தனத்த தத்த
தனதன தனத்த தத்த தனதான

சலமல மசுத்த மிக்க தசைகுருதி யத்தி மொய்த்த
தடியுடல் தனக்கு ளூற்று மிகுமாயம்
சகலமு மியற்றி மத்த மிகுமிரு தடக்கை யத்தி
தனிலுரு மிகுத்து மிக்க ளொடுதாரம்,
கலனணி துகிற்கள் †கற்பி னொடுகுல மனைத்து முற்றி
கருவழி யவத்தி லூற்று மகிழ்வாகிக்
கலைபல பிடித்து நித்த மலைபடு மநர்த்த முற்ற
கடுவினை தனக்குள் நிற்ப தொழியாதோ;
மலைமக ளிடத்து வைத்து மதிபுனல் சடைக்குள் வைத்து
மழுவனல் கரத்துள் வைத்து மருவார்கள்
மடிவுற நினைத்து வெற்பை வரிசிலை யிடக்கை வைத்து
மறைதொழ ‡நகைத்த அத்தர் பெருவாழ்வே;
பலதிசை நடுக்க முற்று நிலைகெட அடற்கை யுற்ற
படையது பொருப்பில் விட்ட முருகோனே

* இந்த ஏழாவது அடி அருமையானது மனப் பாடத்துக்கு உரியது.
† கற்பு = கல்வி.
‡ சிரித்துத் திரிபுரம் எரித்தது - பாடல் 285-பக்கம் 206 குறிப்பு

வாசனை கொண்ட மலைக் கொல்லை (செய்) வயல்களில் இருந்த(மின்) மின்னல் போன்ற ஒளிகொண்ட வள்ளியைக் (கண்ட) கண்டு கொண்ட கந்தனே! கிரவுஞ்ச மலையைப் பிளந்த ஒளி வேலனே!

மெய், வாய், கண், மூக்கு, செவி எனப்படும் ஐந்து பொறிகளையும் ஜெயித்து இருக்கும் அன்பர்களுடைய உடலிற் பொருந்தி விளங்கும் அழகனே!

அண்டங்களும், பூமிகளும் எங்கும் (அன்று சூரனுக்கு அஞ்சிக்) கலங்கின அந்தக் காலத்தில் 'அஞ்சல் - பயப்படாதீர்கள்' என்ற பெருமாளே! (இன்றுன் பதங்கள் தரவேணும்)

## 1238.

ஜலம், மலம், அசுத்தங்கள் (அழுக்குகள்) நிறைந்த மாமிசம், (குருதி) ரத்தம், (அத்தி) எலும்பு இவைகள் நெருங்கிச் சூழ்ந்துள்ள (துடி உடல்) புலாலால் ஆய இந்த உடலில் அல்லது துடித்த (இந்த) உடலில் வாசம் கொண்டு மிக்க மாயமான (வஞ்சனையான) மோசமான செயல்கள் -

பலவற்றையும் செய்து, மதம் மிகுந்ததும் (இரு துடக்கை) கரிய பெரிய துதிக்கையை உடையதுமான யானைபோல (உருமிகுத்து) உருவம் பெருத்து குழந்தைகளுடன் (தாரம்) மனைவி -

(கலன்) ஆபரணங்கள், அணிந்துகொள்ளும் (துகிற்கள்) ஆடைகள், (கற்பினொடு) கல்வி இவைகளுடன் (குலம் அனைத்தும்) குலம் (சாதி) ஆக இவை முழுமையும்முற்றி - முழு வளர்ச்சி பெற்று, (கருவழி அவத்தில்) பிறப்பு வழி என்கின்ற (அவம்) பயனற்ற வழியில் செல்பவனாய் அதிலே மகிழ்ச்சி அடைந்தவனாகி -

(கலை பல பிடித்து) பலவித சாத்திர நூல்களைக் கற்று நாள் தோறும் (அலைபடும்) அலைச்சல் உறும் (அனர்த்தம்) வேதனை (உற்ற - முற்ற) சேர, நிறைய, பொல்லாத வினைக்கு உள்ளாகி நிற்கும் இச்செயல் ஒழியாதோ (நீங்காதோ)!

மலைமகள் - பார்வதியை இடது பாகத்தில் வைத்து, சந்திரனையும், கங்கையையும் சடையிலேவைத்து, மழு (பரசு) ஆயுதத்தையும் (அனல்) நெருப்பையும் கையிலே வைத்து, (மருவார்கள்) பகைவர்களாகிய திரிபுரத்து அசுரர்கள் -

(மடிவுற) இறந்து ஒழிய நினைத்து (வெற்பை) மேருமலையைக் கட்டப்பட்ட வில்லாக இடது கையிலே வைத்து வேதங்கள் தொழுது நிற்கச் சிரித்த (திரிபுரத்தைச் சிரித்து எரித்த) அத்தர் - பெருமானாம் சிவனது பெருஞ் செல்வக் குழந்தையே!

பல திசையில் உள்ளவர்களும் நடுக்கம் அடைந்து நிலை தடுமாற, (அடல்) வெற்றி பொருந்திய (கை உற்ற) திருக்கையில் இருந்த (படையது) படையாகிய வேலாயுதத்தைப் (பொருப்பில்) கிரவுஞ்சகிரியின் மீது பிரயோகித்த முருகனே!

பழுதறு தவத்தி லூற்று வழிமொழி யுரைத்த பத்தர்
பலருய அருட்கண் வைத்த பெருமாளே (248)

## 1239. சிவயோகம் கூட

தாந்தன தானதன தாந்தன தானதன
தாந்தன தானதன தனதான

*சாங்கரி பாடியிட வோங்கிய ஞானசுக
தாண்டவ மாடியவர் வடிவான-
சாந்தம தீத †முணர் கூந்தம சாதியவர்
தாங்களு ஞானமுற வடியேனுந்;

‡ தூங்கிய பார்வையொடு X தாங்கிய வாயுவொடு
Oதோன்றிய சோதியொடு சிவயோகந்-

---

* சாங்கரி - சங்கரி (முதல் நீண்டது) சங்கரி பாடித் தாளமிட சிவபிரான் ஆடுவர் -"தளரிள வளரென உமைபாடத் தாளமிட... ஓர் கழல்வீசி... ஆடும்" - சம்பந்தர். 2-111-1 "சாங்கரீயை"- சங்கரர் பத்னி -

"கீதம் உமைபாட..... வேத முதல்வன் நின்றாடும்"- சம்பந்தர். 1-46-7 "படிதரு பதிவ்ரரை பொத்தச் சுந்தப் பாழ்ங்காள் தனிலாடும் பழையவர்"- திருப்புகழ். 1081 "பாடுங் கவுரி பவுரி கொண்டாடப் பசுபதிநின் றாடும்" - கந்தரல 68

ஞான சுக தாண்டவம் - மதுரை வெள்ளியம்பலத்தில் ஆடின தாண்டவம் -"ஞானசுந்தரத் தாண்டவம்" எனப்படும். "ஆலவாயிடத்தில் நயங்கொள் பேரொளி வெள்ளியம்பலத்தில் "ஞான சுந்தர நாடகம் நடிப்பான்"- திருமுருகன் பூண்டிப் புராணம் புராண வரலாறு. 41

† உணர் கூந்தம சாதியவர் - (கூந்தம - கூர்ந்த தம அல்லது கூருந் தம; ஞான உணர்ச்சி (கூந்தம) கூர்ந்த தமது - (மிக்குள்ள) (சிவனது) - சிவன் தமர்களாம் - அடியார்கள்: கூம் தம சாதியவர் - கூவும் தமோகுணத்தவர் - எனவும் பொருள் காண்பர்.

‡ "முருகன் உருவங் கண்டு தூங்கார்"- கந்தரலங். 55

"தூங்கிக் கண்டார் சிவலோகமும் தம்முள்ளே
தூங்கிக் கண்டார் சிவயோகமுந் தம்முள்ளே
தூங்கிக் கண்டார் சிவபோகமுந் தம்முள்ளே
தூங்கிக் கண்டார் நிலைசொல்வதெவ் வாறே" - திருமந்திரம். 129

(தொடர்ச்சி பக்கம் 567)

குற்றமற்ற தவநிலையில் இருந்து (வழி மொழி) வழிபாட்டு மொழிகளை - துதி மொழிகளைச் சொல்கின்ற பக்தர்கள் பலரும் (உய்ய) நற்கதிபெற அருட் பார்வை வைத்த - திருக்கண்ணால் அருள் பாலித்த பெருமாளே!

(சடுவினை தனக்குள் நிற்ப தொழியாதோ)

## 1239.

(சாங்கரி) சங்கரி - பார்வதி தேவி, பாடியிட - பாட (அல்லது பாடித் தாளம் இட - தாளம் போட) ஓங்கிய - மேம்பட்டு விளங்கின ஞான ஆனந்த தாண்டவத்தை ஆடினவரான சிவபிரானது (வடிவான) வடிவை அடைந்துள்ளவர்களும் - சாரூப பதவியில் உள்ளவர்களும் -

சாந்தம் அதீதம் - சாந்த குணத்தின் கடந்த நிலையில் - உச்ச நிலையில் இருந்து (உணர்கூந்தம சாதியவர் தாங்களும்) உணர்- உணர்ச்சி - ஞானம், கூந்தம - கூர்ந்த தம - கூர்ந்த - மிக்கிருந்த - தம சாதியவர் தாங்களும் - அந்தச் சிவபிரானது இனத்தினருமான - சிவன் தமர்களான - பெரியோர்களும் (ஞானம் உற) அந் நாடகக் காட்சியால் ஞான நிலையை அடைய - அடியேனும்

தூங்கிய பார்வையொடு - அறிதுயில் கொண்ட ஞானக் கண்ணுடனும், (தாங்கிய வாயுவொடு) - புறத்தே ஓடாத வண்ணம் நிறுத்தப்பட்ட சுழுமுனையில் - நிறுத்தப்பட்ட - பிராண- வாயுவுடனும், அந்நிலையில் காணப்படும் ஜோதி தரிசனத்துடனும், சிவயோக நிலையில்

---

"உணர்வொடு தூங்குவார்க்கே விளங்கும் அநுபூதி"

- திருப்புகழ். 757

X தாங்கிய வாயுவொடு - சுழு முனையில் நிறுத்தப்பட்ட பிராணவாயு - 'வாயுவினைப்பிங்கலையால் வாங்கியே சுழு முனையில் நேயமுற நிறுவி"- திருப்புகழ் 713-பக்கம் 144 உரையிற் காண்க.

"நயனம் இரண்டும் நாசிமேல் வைத்திட்

டுயர்வெழா வாயுவை உள்ளே அடக்கித்

துயரற நாடியே தூங்க வல் லார்க்குப்

பயனிது காயம் பயமில்லைத் தானே" - திருமந்திரம். 605

O தோன்றிய ஜோதி - இதனை 'வேலுமயில் வாகனப் ப்ரகாச மதிலே தரித்து விடுமதுவே சிறக்க" என்று 790 -ஆம் பாடலிலும், 'சோதி புணர்கின்ற வாழ்வு சிவம் என்ற சோகம்" - என்று 444-ஆம் பாடலிலும் விளக்கியுள்ளார்.

தூண்டிய சீவனொடு வேண்டிய காலமொடு
*சோம்பினில் வாழும்வகை அருளாதோ;
† வாங்குகை யானையென வீன்குலை வாழைவளர்
வான்பொழில் சூழும்வய லயலேறி-
‡ மாங்கனி தேனொழுக வேங்கையில் Xமேலரிகள்
மாந்திய வாரணிய மலைமீதிற்;
பூங்கொடி போலுமிடை Oயேங்கிட வாரமணி
பூண்பண பாரியண தனபாரப்-
**பூங்குற மாதினுட னாங்குற வாடியிருள்
பூம்பொழில் மேவிவளர் பெருமானே (249)

## 1240. அடியார்களுடன் வரும் தரிசனம் பெற

தனதான தந்ததன தனதான தந்ததன
தனதான தந்ததன தனதான

††சிவஞான புண்டரிக மலர்மாது டன்கலவி
சிவபோக மன்பருக அறியாமற்-
செகமீது மன்றுமல வடிவாயி ருந்துபொது
திகழ்மாதர் பின்செருமி யழிவேனோ,

---

* சோம்பு - செயலற் றிருத்தல்.

"சோம்பர் இருப்பது சுத்த வெளியிலே
சோம்பர் கிடப்பதுஞ் சுத்த வெளியிலே
சோம்பர் உணர்வு சுருதி முடிந்திடம்
சோம்பர் கண்டாரச் சுருதிக்கண் தூக்கமே" - திருமந்திரம். 128

† யானையின் வளைந்த துதிக்கை வாழைக்குலைக்கு ஒப்பிடப்பட்டது - "முரண்வேழக் கைபோல் வாழை காய் குலையீனும் கலிக்காழி" -சம்பந்தர். 1-102-2

'கருங்கதலிப் பெருங் குலைகள் களிற்றுக் கைம்முகங் காட்ட' - பெரிய புரா. திருநாவு. 6

‡ குரங்குகள் மாங்கனி உண்பது:
"ஏறி மாவின் கனியும் பலவின் இருஞ் சுளைகளும்
கீறி நாளும் முசுக் கிளையொ டுண்டுகளும் கேதாரமே"
- சம்பந்தர். 2-114-6

X குரங்குகள் வாழும் மலை - வள்ளி மலை -
"மந்தி குதிகொள் அந்தண் வரை" - திருப்புகழ். 1070
"மர்க்கட சமூகம்.. இறால் எட்டு வரை"
- பூதவேதாள வகுப்பு.

O இடை ஏங்கக் கொங்கைப் பாரம் - பாடல்கள் 1006, 1010 பக்கம் 32, 42 பார்க்க. (தொ.பக். 569)

(தூண்டிய சிவனொடு) பரசிவத்துடன் கூடி நிலைத்த ஆன்மாவுடன், (வேண்டிய காலமொடு) பல்லூழி காலம் (அல்லது - விரும்பின கால அளவு) சோம்பினில் - சும்மா இருக்கும் மௌனஞான நிலையில் வாழும்படியான பாக்கிய வகையை உனது திருவருள் (எனக்கு) அருளாதோ!

(வாங்குகை) தொங்குகின்ற துதிக் கையைக்கொண்ட யானை போல - யானையின் துதிக்கை போல ஈன் குலை வாழை குலையின் வாழை-குலைகளைத் தள்ளும் வாழை வளர்கின்ற பெரிய பொழில்-கள் சூழ்ந்துள்ள வயல்களின் பக்கங்களில் ஏறி - பாய்ந்து சென்று -

மாம்பழங்களைத் தேன் ஒழுகும்படி வேங்கை மரத்தின் மேலிருந்து (அரிகள்) குரங்குகள் (மாந்திய) உண்ட (ஆரணியம்) காடுகளைக்கொண்ட (மலைமீதில்) வள்ளி மலையில்,

பூங்கொடி போல நுண்ணிய இடை வாடும்படி, வார் ரவிக்கையையும்) அம் அணி - அழகிய ஆபரணங்களையும் (அல்லது ஆர மணி - முத்தாபரணத்தை) (பூண்பன) அணிந்துள்ளனவும், பருத்துள்ளனவுமான கொங்கைப்பாரங்களை உடைய

அழகிய குறப்பெண் வள்ளியுடனே (ஆங்கு) அம்மலையில் உறவாடி - நேசம் பூண்டு கலந்து விளையாடி, இருண்டதும் அழகியதுமான (அவ் வள்ளி மலை)ச் சோலையில் விரும்பி வீற்றிருந்த பெருமாளே! (சோம்பினில் வாழும் வகை அருளாதோ)

## 1240.

சிவஞானம் எனப்பட்ட தாமரை மலரில் வீற்றிருக்கும் மாதுடனே (சிவமாதுடனே) கலவி - புணர்ந்து ஏற்படும் (சிவ போகத்தை) மங்களகரமான பேரின்பத்தை, மன் - நன்றாகப் பருக - உண்டு - அனுபவிக்கத் தெரியாமல் -

(செகம் மீது உழன்று) பூமியிலே அலைந்து திரிந்து, மல வடிவாயிருந்து - மல சொரூபமாயிருந்து - ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மல உருவாய் இருந்து, பொதுதிகழ் மாதர் - (பொருள் கொடுப்பவர்கள்) எல்லாருக்கும் பொதுவாய் விளங்கும் பொது மகளிர் (விலைமாதர்களின்) பின் செருமி - பின்னரே நெருங்கி அடைந்து அழிந்து போவேனோ!

---

**பொழிலில் உறவாடினது:
"கன்னி தனையோர் கடிகா விளிற் கலந்து
துன்னு கருணை செய்து தொல்லுருவங் காட்டினனே"
- கந்தபுரா. 6-24-115

†† சிவஞான புண்டரிக மலர்மாதுடன் கலவி - 'சிவமாதுடனே அநுபோகமதாய்' - பாடல் 563-பக்கம் 282 குறிப்பு.

"ஞானவல்லியை நன் மணம் புணர்த்தி" -சிதம்பர மும்மணிக் கோவை -29-42.

தவமாத வங்கள்பயில் அடியார்க ளங்களொடு
 தயவாய்ம கிழ்ந்துதினம் விளையாடத்-
தமியேன் மலங்களிரு வினைநோயி டிந்தலற
 *ததிநாளும் வந்ததென்முன் வரவேணும்;
உவகாரி யன்பர்பணி கலியாணி யெந்தையிட
 முறைநாய கங்கவுரி சிவகாமி-
ஒளிரானை யின் †கரமில் மகிழ்‡மாது ளங்கனியை
 யொருநாள்ப கிர்ந்தவுமை யருள்பாலா;
Xஅவமேபி றந்தளனை யிறவாம லன்பர்புகு
 மமுதால யம்பதவி யருள்வோனே-
அழகாOந கம்பொலியு மயிலாகு **றிஞ்சிமகிழ்
 அயிலாபு கழ்ந்தவர்கள் பெருமாளே (250)

## 1241. ஜோதி துலங்க

தானத்த தான தந்த தானத்த தான தந்த
 தானத்த தான தந்த தனதான

சீறிட்டு லாவு கண்கள் மாதர்க்கு ††நாள்ம ருண்டு
 சேவித்து மாசை கொண்டு முழல்வேனைச்-

---

* ததி - தக்கசமயம் - "நுண் நூலரும் ததியுறப் புகுந்து ஆசிகள் நுவன்றார்"- வில்லி - அருச்சுனன் - தீர்த்த - 76

† கரமில் - கரத்தில்.

‡ விநாயகர் மாதுளங்கனி பெற்றது:-

வரலாற்றைப் பாடல் 184 பக்கம் 430 கீழ்க்குறிப்பிற் காண்க. பெற்றது "மாதுளங்கனி" எனப் பழநிப் புராணம் கூறுகின்றது. நாரதரின் மகதியாழின் கீதத்தைக்கேட்டு மகிழ்ந்து பிரமதேவர் நாரதருக்குத் தந்தது இந்த மாதுளங்கனி. நாரதர் அதைச் சிவபிரானுக்குச் சமர்ப்பித்தனர்.

"முண்டகச் சது மறையவன் முடி முறை துளக்கி
வண்டிருக்கையி லிருந்தமா துளங்கனி யொன்றைப்
பண்டு நல்கினன் பரமனுக் கென்றனன் பதுமத்
தண்டர் கோனுநங் கருத்தும் அற்றேஎன அறைந்தான்"
- பழநிப்புராணம் - திரு ஆவினன் குடிச்சருக்கம் - 28

X இந்த அடி அருணகிரிநாதரின் வரலாற்றுப் பகுதியது.

O மயில் - குறிஞ்சி நிலத்தது - மலை நிலத்தது.

"மயில்கள் ஆலப் பெருந்தேனிமிரத், தண்மழை தழீஇய மாமலை நாட"- ஐங்குறு - 292. (தொ.பக். 571)

தவம், மாதவங்கள் - தவமும், பெருந்தவமும் செய்கின்ற அடியார் கூட்டங்களுடன், அன்புவைத்து மகிழ்ந்து தினமும் விளையாடவும்

அடியேனுடைய மும்மலங்கள், இருவினைகள், நோய்கள், (அல்லது பிறப்பு இறப்பு நல்வினை தீவினை - என்னும் நோய்கள், அச்சமுற்று அலறத்(தறி) தக்க சமயத்தில், நாளும் - நாள்தோறும் (வந்தது என்முன்) பிரத்யக்ஷமாய் வந்தவனாய் என் முன்பே வர வேண்டுகின்றேன்.

யார்க்கும் உபகாரம் செய்பவள் (உதவி செய்பவள்), அன்பர்கள் பணிகின்ற கலியாணி, எந்தை சிவபிரானது இடது பாகத்தில் இருக்கின்ற நாயகம் - தலைமைவாய்ந்த கவுரியம்மை, சிவகாமி -

விளங்குகின்ற (ஆனையின்) விநாயகருடைய கரத்தில் (யாவரும்) மகிழும்படியான (மாதுளங் கனியை) மாதுளம் பழத்தை முன்பொருநாள் (பகிர்ந்து) கொடுத்த உமையம்மை அருளின குழந்தையே!

வீண் காலமே போக்கப் பிறந்த என்னை (இறவாமல்) இறவாத வரத்தைத் தந்து அன்பர்கள் புகுகின்ற அமுதக் கோயிலில்(பதவி) ஒரு பதவியை -ஸ்தானத்தை - நிலையை அருளியவனே!

(அழகா) அழகனே! நகம் பொலியும் (மலைநிலத்தே விளங்கி வாழும்) அல்லது (கால்) நகங்கள் விளங்கும் (மயிலா) மயில் வாகனத்தை உடையவனே! (குறிஞ்சி) மலை நிலங்களில் (மகிழ்) மகிழ்ச்சி கொள்ளும் (அயிலா) வேலாயுதகரனே! புகழ்ந்தவர்கள் - புகழ்ந்து போற்றும் அடியார்களுக்குப் பெருமாளே!

(என் முன் வரவேணும்)

## 1241.

சீறிட்டு - சீறுதலுடனே - கோபக் குறியுடனே உலவுகின்ற கண்களை உடைய (மாதர்க்கு) மாதர்களிடத்தே நாள்தோறும் மருண்டு, மருட்சியுற்று - மயக்குற்று, அவர்களைச் (சேவித்தும்) வணங்கியும், அவர்கள் மீது ஆசைகொண்டும் திரிகின்ற என்னை -

---

** மலைநிலமும் முருகனும்:- "அறுமுகக் கடவுள்" கோது நீத்தர சாட்சி செய் குறிஞ்சியக் குறிஞ்சி"- காஞ்சிப்புராண - நாட்டுப் - 49

"வெற்பர் வேலிறைக்குப் பொருந்து பூசனை விழாத்தினம் எடுப்பது பொருப்பு" - " வேற்படை நின்மலன் - மலைக்கெலாங் கடவுளாய்க் கலத்தல்"- தணிகைப் புரா - நாட்டு - 32,33

†† நாள்மருண்டு = நாள்தோறும் மருண்டு.

சீரிட்ட மாக நின்ற காசைக்கொ டாத பின்பு
சீரற்று வாழு மின்பம் நலியாதே;
*ஆறெட்டு மாய்வி ரிந்து மாறெட்டு மாகி நின்று
மாருக்கு மேவி னம்ப அறியாதே
ஆகத்து ளேம கிழ்ந்த † ஜோதிப்ர காச இன்பம்
ஆவிக்கு ளேது லங்கி அருளாதோ;
மாறிட்டு வான டுங்க மேலிட்டு மேல கண்டம்
வாய்விட்டு மாதி ரங்கள் பிளவாக-
வாள்தொட்டு நேர்ந டந்த சூர்வஜ்ர மார்பு நெஞ்சும்
வான்முட்ட வீறு செம்பொன் வரையோடு,
கூறிட்ட ‡ வேல பங்க வீரர்க்கு வீர கந்த
கோதற்ற வேடர் தங்கள் புனம்வாழுங்-
கோலப்பெண் வாகு கண்டு மாலுற்று வேளை கொண்டு
கூடிக்கு லாவு மண்டர் பெருமாளே (251)

## 1242. 'ஆதி முருகா என'

தானதன தானதன தானதன தானதன
தானதன தானதன தனதான

Xசூதினுண வாசைதனி லேசுழலு மீனதென
தூசுவழ கானவடி வதனாலே-
oசூத **முட னேருமென மாதர்நசை தேடுபொரு
ளாசைதமி லேசுழல வருகாலன்,
††ஆதி விதி யோடுபிற ழாதவகை தேடியென
தாவிதனை யேகுறுகி வருபோது-
ஆதிமுரு காதிமுரு காதிமுரு காஎனவு
மாதிமுரு காநினைவு தருவாயே,

---

*தத்துவங்கள் 96-பாடல் 157-பக்கம் 366 - கீழ்க்குறிப்பு

† ஜோதி - பாடல் 1239. அடி 3 பார்க்க

‡ வேல அபங்க எனப் பிரிக்க. X "சூதுமய வாசை" - என்றும் பாடம்.

O சூதம் = மாந்தளிர். "மாந்தளிர்கள் போல வேய்ந்த உடல் மாதர்" - திருப்புகழ் 402

** உடனேரும் = உடல் நேரும்.

†† 1242-ஆம் பாடலின் அடி 3,4, மனப்பாடத்துக்கும், நித்தம் ஓதுதற்கும் உரியன.

சீராகவும் இஷ்டமாகவும் (முதலில்) வைத்திருந்து நிலையாகக் கொடுத்து வந்திருந்த காசு கொடாத பின்னர் - அந்தச் சீரும் சிறப்பும் அற்றுப் போம்படி வாழச் செய்யும் சிற்றின்பத்தில் ஈடுபட்டு நான் வருந்தாமல்

ஆறெட்டுமாய் விரிந்தும் ஆறெட்டும் ஆகி நின்று (6x8 = நாற்பத்தெட்டாக விரிந்து அதனுடன் 6x8 = நாற்பத்தெட்டுகூட - ஆகத் தொண்ணூற்றாறு தத்துவங்களாய் விளங்கி நின்று யாராலும் சொல்லுதற்கு அறிய முடியாத வகையில் -

உடலிடத்தே மகிழ்ந்து துலங்கும் ஜோதி ஒளி இன்பமானது எனது ஆவிக்குள்ளே பிரகாசித்து உயிர்க்கு உயிராய் விளங்கி - எனக்கு அருள் பாலிக்காதோ!

மாறிட்டு - பகைமைபூண்டு, தேவர்கள் நடுங்க மேலிட்டு மேற்கிளம்பி மேலே உள்ள பூமி - வானுலகு வாய்விட்டு ஓலிட, (மாதிரங்கள்) திசைகள் பிளவுபடும்படி -

வாளேந்தி நேரே எதிர்த்துவந்த சூரனுடைய வஜ்ர மார்பும் நெஞ்சமும் வான் முட்ட - (திடுக்கிட்டு திக்திக் என்று) பலமாக அடித்துத் துடிக்க - விளங்குகின்ற (செம்பொன் வரையோடு ) மேரு அன்ன கிரவுஞ்சகிரியுடன் -

(சூரன்மார்பையும்) கூறு செய்த (வேல) வேலாயுதனே! அபங்க குறைவு இல்லாதவனே - நிறை பொருளே! வீரர்க்கும் வீரனே! கந்தனே! குற்றமற்றவேடர்களின் தினைப்புனத்தில் வாழ்ந்திருந்த

அழகிய - வள்ளியின் (வாகு) அழகைப் பார்த்து மாலுற்று - ஆசை கொண்டு - வேளை கொண்டு சமயம் அறிந்து (அவளோடு) கூடிக் குலாவின பெருமாளே! தேவர்கள் பெருமாளே!

(ஜோதி ப்ரகாச இன்பம் ஆவிக்குளே துலங்கி அருளாதோ)

## 1242.

சூதாக - வஞ்சனையாக வைக்கப்பட்ட (தூண்டிலில் உள்ள) உணவை உண்ணும் ஆசையிலே சுழன்று வரும் மீன்போல - தூசு - ஆடையின் அழகுடனே கூடிய உருவத்தினாலே -

(சூதம்) மாந்தளிரின் நிறத்தை உடல் நிறம் ஒக்கும் என்று மகிழ்ந்து (மாதர் நசை) பெண்கள் மீதுள்ள காம இச்சை காரணமாகத் தேடும், பொருளாசைகளிலே (சுழல்) மனம் அலைச்சல் உறும் நாளிலே - வருகின்ற காலன்

ஆதியில் - முதலில் (பிரமனால்) எழுதப்பட்ட விதிக்குத்-தவறாத வகையில் (விதிஎழுத்துப்படி) என்னைத் தேடி என்னுடைய ஆவியைப் பற்ற அணுகி வரும்போது -

"ஆதிமுருகா! ஆதிமுருகா! ஆதிமுருகா!" என்றுகூற, ஆதிமுருகா! அந்த ஞாபகத்தை (எனக்குத்) தரவேண்டுகின்றேன்.

ஒத்துமுகி லாடுகிரி *யேறுபட வாழசுரர்
ஓலமிட வே† யயில்கொ டமராடி-
‡ஒநமசி வாயகுரு பாதமதி லேபணியும்
யோகமயி லா அமலை மகிழ்பாலா,
நாதரகு ராமஅரி மாயன்மரு காபுவன
நாடுமடி யார்கள்மன துறைவோனே-
ஞான Xசுர வானைகண வாமுருக னேயமரர்
நாடுபெற வாழவருள் பெருமாளே (252)

## 1243. எழுந்தருள

தனந்தான தானான தனந்தான தானான
தனந்தான தானான தனதான

செழுந்தாது பார்மாது மரும்பாதி ருபோடு
சிறந்தியாதி லூமாசை யொழியாத-
திறம்பூத வேதாள னரும்பாவ மேகோடி
செயுங்காய நோயான னரகேழில்,
விழுந்தாழ வேமுழ்க இடுங்காலன் ○மேயாவி
விடுங்கால மேநாயென் வினைபாவம்-
விரைந்தேக வேவாசி துரந்தோடி யேஞான
விளம்போசை யேபேசி வரவேணும்;
அழுங்கோடி தேவார்க ளமர்ந்தார வானீடி
அழன்றேகி மாசீத நெடுவேலை-

* ஏறுபட = பொடியாக

† "கதிர்கொடமராடி" - என்றும் பாடம்.

‡ ஒநமசிவாயகுரு - சிவபிரான்- "பஞ்சாக்ஷர மயம் சம்பும் பரம் ப்ரஹ்ம ஸ்வரூபிணம், நகாராதி யகாராந்தம்" ஜ்ஞாத்வா பஞ்சாக்ஷரம் ஜபேத்" (இதன் பொருள்) பரப்ரஹ்ம ஸ்வரூபமாயுள்ள பஞ்சாக்ஷரத்தைத் தன் மயமாகக் கொண்டவர் சம்பு. பஞ்சாக்ஷரம் நகாரம் முதல் யகாரம் இறுதியாக உள்ளதென அறிந்து ஜபிக்கக்கடவர்" (ஸ்ரீ பஞ்சாக்ஷர விளக்கம் -பக்கம் 1)

நமசிவாய - ஸ்தூலபஞ்சாக்ஷரம்; இதில் முதல் நின்ற நகார மகாரங்கள் பாசத்தையும், இடைநின்ற சிகார வகாரங்கள் பதியையும் கடைநின்ற யகாரம் பசுவையும் தெரிவிக்கும். "போற்றியோம் நமச்சிவாய புயங்கனே" - திருவாசகம் - சதகம் 62 "நமச்சிவாயவே ஞானமும் கல்வியும்"- அப்பர் 5-90-2

X "குறவானை கணவா" என்றும் பாடம் ○ மேய் = மேவி.

(ஓதம்) ஈரமுள்ள (முகில்) மேகம் (ஆடு) பரவிச்செல்லும் (கிரி) கிரவுஞ்சமலை, (ஏறுபட) பொடிபட, வாழ்ந்திருந்த (அல்லது ஆழ் அசுரர் - தமது வாழ்க்கை ஆழ்ந்தழிய நின்ற) அசுரர்கள் பயந்து கூச்சலிட வேல்கொண்டு போர் புரிந்தவனே!

"ஓம் நமசிவாய" எனப்படும் பஞ்சாக்ஷரத்துக்கு உட்பொரு ளானவரான குருமூர்த்தியாம் சிவன் உனது திருவடிகளில் பணியும்படியான உயர் நிலையைக் கொண்ட மயிலா (அல்லது) குருமூர்த்தியாம் சிவனது திருவடியிலே பணிந்து பூசித்த (யோக மயிலா) உற்சாகத்தை - தகுதியைக் கொண்ட மயிலனே;) (மலமற்றவளாம்) தேவி மகிழும் குழந்தையே!

(நாத) தலைவனே! ரகுராமராம் திருமாலாம் மாயனுடைய மருகனே! பூமியில் உன்னை விரும்பிப்போற்றும் அடியார்களின் மனத்திடத்தே உறைபவனே!

ஞானரூபியாம் (சுர ஆனை) தேவ சேனையின் கணவனே! முருகனே! தேவர்கள் தமது நாட்டினைப் - பொன்னுலகைப் - பெற்றுவாழ அருள்புரிந்த பெருமாளே!

(ஆதிமுருகா எனவும் நினைவு தருவாயே)

## 1243.

செழுந்தாது - செழுமையான பொன், (பார்) மண், (மாது) பெண் என்னும் மூவாசைகளும் (அரும்பாதி ரூபோடு) முதலில் அரும்பு விட்டுப் பின்னர் வளருவது போன்ற உருவத்துடனே - வடிவுடனே (சிறந்து) மேல்மேல் விளங்கி, எதிலுமே ஆசை நீங்காத -

(திறத்தை) கோட்பாட்டினை அல்லது இயல்பை உடைய பூதம் நான் வேதாளம் நான், பூதவேதாளன் - பேய்பிசாசு, நான், கொடிய பாவங்களைக் கோடிக்கணக்கில் செய்பவன் நான், உடலில் நோய் கொண்டவன் நான், ஏழுநரகங்களிலும்

விழுந்து ஆழ்ந்து முழுகும்படி தள்ளுகின்ற காலன் (மேவி) என்னை அணுக - நான் உயிர் விடுங்காலத்தில், அடியேனுடைய வினைபாவம், இவை

அதிவேகத்தில் (ஏகவே) என்னை விட்டு அகலும்படி - (வாசி) உன்குதிரையாகிய மயிலை வேகமாகச் செலுத்தி, ஓடியே - ஓடிவந்து, (ஞான விளம்போசையே) ஞானமொழிகளைச் சொல்லும் ஓசை ஒலியே கேட்கும்படி பேசி வந்தருள வேண்டும்;

(அழும்) அழுத, (கோடி தேவர்கள்) கோடிக்கணக்கான தேவர்கள் (அமர்ந்து ஆர வான் நீடி) வான் நீடி அமர்ந்து ஆர வானுலகில் நீடித்து மன அமைதியுடன் பொருந்தி வாழ்ந்திருக்க வேண்டி, நீ (அழன்று ஏகி) கொதிப்புடன் கோபித்துச் சென்று, மாசீத நெடுவேலை - மிகவும் குளிர்ச்சி கொண்ட பெரிய கடலில்-

அதிர்ந்தோட வேகாலன் விழுந்தோட வேசூர
அலங்கார வேலேவு முருகோனே;
கொழுங்கானி லேமாதர் செழுஞ் *சேலை யேகோடு
குருந்தேறு மால்மாயன் மருகோனே-
†குறம்பாடு வார்சேரி புகுந்தாசை மாதோடு
குணங்கூடி யேவாழு பெருமாளே (253)

## 1244. திருவடியை நினைக்க

தத்த தனதனன தத்த தனதனன
தத்த தனதனன தனதான

தத்த னமுமடிமை சுற்ற மொடுபுதல்வர்
தக்க மனையினமு மனைவாழ்வுந்
தப்பு நிலைமையனு கைக்கு வர‡விரகு
தைக்கு மயல்நினைவு குறுகாமுன்,
பத்தி யுடனுருகி நித்த முனதடிகள்
பற்று மருள்நினைவு தருவாயே-
பத்து முடியுருளு வித்த பகழியினர்
பச்சை நிறமுகிலின் மருகோனே,
அத்தி முகவனழ குற்ற Xபெழைவயிற
னப்ப மவரைபொரி அவல்தேனும்-
அப்பி யமுதுசெயு ○மொய்ப்ப னுதவ அட
விக்குள் மறமகளை யணைவோனே,
முத்தி தருமுதல்வர் முக்க ணிறைவரொடு
முற்று **மறைமொழியை மொழிவோனே-
முட்ட வசுரர்கிளை கெட்டு முறியமுதல்
வெட்டி யமர்பொருத பெருமாளே (254)

---

*சேலையே கோடு = சேலைகளைக் கொண்டு. சேலையுடன் குருந்தமரத்தில் ஏறினது:- பாடல் 111-பக்கம் 264. பாடல் 1075, பக்கம் 174, 175 குறிப்பு †குறம் - குறத்திப் பாட்டு

‡ விரகு உதைக்கும் மயல் நினைவு = அறிவைச் சிதைக்கும் புத்தி மாறாட்டம். Xபெழை = பேழை

"வாழைக் கனிபல வின்கனி மாங்கனி தாஞ்சிறந்த
கூழைச் சுருள்குழையப்பம் என் னுண்டை எல் லாம் துறுத்தும்
பேழைப் பெருவயிற் றோடும் புகுந் தென்னுளம் பிரியான்
வேழத் திருமுகத் துச் செக்கர் மேனி விநாயகனே" கபிலர் மூத்த நாயனார் இரட்டை மணிமாலை -4. ○மொய்ப்பன் = மொய்ம்பன்,

** சிவனுக்கு உபதேசித்தது - பாடல் 327-பக்கம் 314 குறிப்பு

(அதிர்ந்து ஓட) அதிர்ச்சியுடன் வேகமாய்ச் செல்லக் காலன் அசுரர்களின் உயிரைக் கவர வேகமாய் விழுந்து (போர் முனைக்கு) ஓடக், கூர்மை உடையதும் அலங்காரம் உள்ளதுமான வேலாயுதத்தைச் செலுத்தின முருகனே!

செழிப்புள்ள காட்டிடையே பெண்களின் நல்ல ஆடைகளை எடுத்துக் கொண்டு குருந்த மரத்தில் ஏறின திருமாலாம் மாயனுடைய மருகனே!

"குறம்" என்னும் பாடல் வகையைப் பாடுபவர்களாகிய குறவர்களின் சேரியிற் புகுந்து உன் ஆசைக்கு உகந்த அல்லது உன்மீது, ஆசை வைத்திருந்த மாது - வள்ளியுடன் (குணம் கூடியே) அவள் குணத்துக்கு மகிழ்ந்து அவளுடன் கூடியே வாழ்கின்ற பெருமாளே!

(ஞான ஓசையே பேசி வரவேணும்)

## 1244.

தத்தனமும் - தத் - அந்த, தனமும் - பொருளும், ஏவலாளர், சுற்றத்தினரும், புதல்வரும், தகுதியான மனைவியும் மனைவியைச் சார்ந்தவர்களும், இல்லறவாழ்வும் ஆன இவைகள்

தப்பு நிலைமை - தப்பிப் போம்படியான - இவைகளை இழக்கும்படியான - மறக்கும்படியான - நிலைமை - சந்தர்ப்பம் குறுகிவர, அப்போது, விரகு உதைக்கும் மயல் நினைவு - அறிவைச் சிதைக்கும் புத்திமாறாட்டம் என்னை அணுகிவருமுன்பு - (நான்)

பத்தியுடனே மனம் உருகி நாள்தோறும் உன் திருவடிகளைப் பற்றும் திருவருட் பேறாம் நினைவைத் தந்தருளுக.

(ராவணனுடைய) பத்து முடிகளையும் உருளுவித்த - (அறுத்து உருட்டித்தள்ளின பகழியினர்) அம்பைக் கொண்டவரும், பச்சை நிறங்கொண்ட மேகவண்ணரும் ஆன திருமாலின் மருகனே!

(அத்தி முகவன்) யானை முகத்தை உடையவன், அழகுள்ள பேழை - கூடை - பெட்டி போன்ற வயிற்றை உடையவன், அப்பம், அவரை, பொரி, அவல், தேன் இவைகளை

அப்பி - (தொப்பையில்) நிரப்பி (அமுது செய்யும்) உண்ணும் (மொய்ம்பன்) வலிமையை உடைய (கணபதி) உதவி செய்யக் காட்டில் வேடர்மகள் வள்ளியை அணைந்தவனே!

முத்தியைத் தரும் முதல்வராம் முக்கண் மூர்த்தியொடு (முற்றுமறை மொழியை) - மறைமொழி முற்றும் - வேத மொழி முழுமையையும் உபதேசித்தவனே!

முட்ட அசுரர்கிளை - அசுரர்கிளை முட்ட - அசுரர் கூட்டம் முழுமையும் (முறிய) தோற்றுப்போய் அழிய, (முதல்) முன்பு வெட்டிப் போர்புரிந்த பெருமாளே!

(உனதடிகள் பற்றும் அருள் நினைவு தருவாயே)

## 1245. பரம் பொருளை நாட

தனதனன தானனம் தனதனன தானனம்
தனதனன தானனம் தனதான

தலைவலய போகமுஞ் சலனமிகு மோகமுந்
தவறுதரு காமமுங் கனல்போலுந்-
தணிவரிய கோபமுந் துணிவரிய லோபமுஞ்
சமயவெகு ரூபமும் பிறிதேதும்,
அலமலமெ னாஎழுந் தவர்களநு பூதிகொண்
டறியுமொரு காரணந் தனைநாடா-
ததிமதபு ராணமுஞ் சுருதிகளு மாகிநின்
*றபரிமித மாய்விளம் புவதோதான்,
கலகஇரு பாணமுந் திலகவொரு சாபமுங்
களபமொழி யாதகொங் கையுமாகிக்-
கவருமவ தாரமுங் கொடியபரி தாபமுங்
கருதியிது வேளையென் றுகிராத;
குலதிலக மானுடன் கலவிபுரி வாய்பொருங்
குலிசகர வாசவன் திருநாடு-
குடி புகநி சாசரன் பொடிபட †மகீதரன்
குலையநெடு வேல்விடும் பெருமாளே (255)

## 1246. பதி இலக்கணம்

தனதன தனதன தனதன தனதன
தனதன தனதான

தவநெறி தவறிய குருடுகள் தலைபறி
கதறிய பரபாதத்-
தருமிகள் கருமிகள் வெகுவித சமயிக
ளவரொடு சருவாநின்,

* 'பேச்சினால் உமக்கு ஆவதென் பேதைகாள்'- சம்பந்தர் 2-9-2. † மகீதரன் = ஆதிசேஷன்.

## 1245.

தலை வலய போகமும் - சிறப்புற்ற எல்லையை (அளவைக்) கண்ட இன்ப சுகங்களும், (சலன மிகு மோகமும்) கலக்கம் - சஞ்சலம் மிக்க ஆசைகளும், பிழையுள்ள நெறியிற் போம்படிச் செய்யும் காம இச்சையும், தீப்போல

அடக்குதற்கு அரிதான கோபமும், துணிந்து ஒரு நல்ல காரியத்தில் ஈடுபட விடாத (உலோபமும்) சுயாமைக் குணமும், சமய கோட்பாடுகளால் ஏற்படும் பல வேஷங்களும், பிற எதுவும்.

(அலம் அலம் எனா) போதும் போதும் என்று எழுந்தவர்கள் ஞான உணர்ச்சியுடன் எழுந்தவர்கள் - ஞானிகள் அனுபூதிகொண்டு தங்களது அனுபவ ஞானம் கொண்டு அறிகின்ற ஒரு மூலப் பொருளை நாடி உணராது

நிரம்ப மதக்கொள்கைகளையே சாற்றும்பு ராண வகைகளும், (சுருதிகளும்) வேதமொழிகளும் ஆய் எடுத்து (அபரிமிதமாய்) அளவிலாதவகையிற் பேசுவதோ பெரிது! வெறும் பேச்சு பயன்தராது என்றபடி

(கலகம்) காமப்போரை விளைக்கும் (இரு பாணமும்) இரண்டு பாணங்களாகிய கண்களும், திலகம் - பொட்டு இட்டுள்ள ஒப்பற்ற (சாபமும்) வில்லைப்போன்ற நெற்றியும், கலவைச் சாந்து நீங்காத கொங்கையுமாகி -

உள்ளத்தைக் கவர்ந்த (அவதாரமும்) இப்பூலோகத்தில் வந்துள்ள தோற்றத்தையும், வேடரிடையே வளர்ந்து தினைப்புனத்தைக் காக்கவேண்டி வந்த பரிதாபமான தொழிலையும், கருதி - கருத்திலே வைத்து, இதுதான் (வேளை என்று) ஆட் கொள்ளுவதற்குத் தக்க சமயமென்று, கிராத - வேடர்களின்

(குலதிலக மானுடன்) குலத்தில் சிறந்த, (மான் அன்ன) வள்ளியுடன் (கலவி புரிவாய் புணர்ச்சி நாடிப் புரிவாய்; சண்டை செய்ய வல்ல (குலிசம்) வஜ்ராயுதத்தைக் கையிற் கொண்ட இந்திரனுடைய (திருநாடு) பொன்னுலகம்-

குடியேற, அசுரன் - சூரன் பொடிபட, (மகீதரன்) பூமியைத் தாங்கும் ஆதிசேடன் (குலைய) நடுநடுங்க வேலைச் செலுத்தின பெருமாளே. (அபரிமிதமாய் விளம்பு வதோ தான்)

## 1246.

தவவழியை விட்டு விலகின குருடர்கள், தலைமயிரைப் பறித்துத், தமது கோட்பாடுகளைப் பலமாக எடுத்துக்கூறும் (பரபாதம்) பிற மார்க்கத்துத் -

(தருமிகள்) அறநெறிகளை உரைப்பவர்கள், (கருமிகள்) தீவினை உடையோர்கள், பலவிதமான சமயநெறிகளை அனுட்டிப் பவர்கள் - ஆகிய இவர்களொடு (சருவா நின்று) போராடி நின்று

றவனிவ னுவனுட னவளிவ ளுவளது
இதுவுது வெனுமாறற்-
றருவுரு வொழிதரு உருவுடை யது*பதி
தமியனு முணர்வேனோ;
குவலய முழுவதும் மதிர்பட வடகுவ
டிடிபட வுரகேசன்-
கொடுமுடி பலநெரி தரநெடு முதுகுரை
கடல்புனல் வறிதாகத்,
† துவல்கொடு முறையிடு சுரர்பதி துயரது
கெடநிசி சரர்சேனை-
துகளெழ நடநவில் மரகத துரகதம்
வரவல பெருமாளே. (256)

## 1247. வாழ்த்த

தனதன தாத்தனத் தனதன தாத்தனத்
தனதன தாத்தனத் தனதான

**தி**தலையு லாத்துபொற் களபம்வி டாப்புதுத்
த்ரிவிதக டாக்களிற் றுரகோடு-
சிகரம காப்ரபைக் குவடென வாய்த்துநற்
சுரர்குடி யேற்றிவிட் டினநீரை;
மதனவி டாய்த்தனத் திளைஞரை வாட்டுசெப்
பிணைமுலை மாத்தவக் கொடிபோல்வார்-
வலையிலி ராப்பகற் பொழுதுகள் போக்குமற்
றெனையுனை வாழ்த்தவைத் தருள்வாயே
‡ சததள பார்த்திபற் கரிபுரு ஷோத்தமற்
கெரிகண லேற்றவற் குணராதோர்

---

* அருமை வாய்ந்த "பதி இலக்கணம்" இது.

† துவல் - " இசைந்தவா றடியார் இடுதுவல்"- சம்பந்தர் 3-119-2 "துவலைச் சிமிழ்த்து நிற்பவன்" - திருப்புகழ் 280 - அடி 7.

" அவன் செருப்படியாவன விருப்புறு துவலே" - 11 திருமுறை கண்ணப - மறம் (நக்கீரர்)

‡ பிரமன் - திருமால் - இவர்களுக்கு உபதேசித்தது - பாடல் 1028-பக்கம் 86 குறிப்பு.

அவன், இவன், உவன் என்றும்; அவள், இவள், உவள் என்றும்; அது, இது, உது (எனும் ஆறு அற்று) என்றும் குறிப்பதற்கு இல்லாதவகையில் நின்று

உருவம் இன்மை, உருவம் உடைமை இவை இரண்டும் (ஒழிதரு உரு) நீங்கின தன்மையைக் கொண்ட பொருள்தான் பதி (எனப்படும் கடவுள்) என்னும், (அந்நிலையை) அடியேனும் உணர்வேனோ (அறிந்து) கொள்வேனோ!

உலகம் முழுமையும் அதிர்ச்சி கொள்ளவும், வடக்கே உள்ள மேருமலை பொடிபடவும், (உரகேசன்) பாம்பின் தலைவனான ஆதிசேடனுடைய

வளைந்த முடிகள் பலவும் நெரிபடவும் நீண்டுள்ளதும், பழையதும், ஒலிப்பதுமான கடலில் நீர் வற்றிப்போகவும் -

(துவலி) அர்ச்சனைப் பூக்களொடு பூசித்து விண்ணப்பிக்கும் தேவர் தலைவனாம் இந்திரனுடைய துன்பங்கள் ஒழியவும், அசுரர்களின் சேனை -

பொடிபட்டுப் பொடி எழவும் நடனம் செய்கின்ற பச்சைக் குதிரையாம் மயில்மீது வரவல்ல பெருமாளே!

(பதி தமியனும் உணர்வேனோ)

## 1247.

(திதலை) தேமல் பரவியுள்ளதும், அழகிய (களபம்) கலவைச் சாந்தை விடாததாய் - கலவைச் சாந்துடன் கூடியதாய்ப், புதிதாய் கன்னமதம், கைமதம், கோசமதம் என்னும் மூன்றுவித மதநீர் கொண்ட யானையின் (உரம் கோடு என) பலத்த தந்தம் என்றும்

சிகரங்களைக் கொண்ட மிக்க பொலிவு கொண்ட (குவடு என) மலையை நிகர்க்கும் என்றும் சொல்லும்படி அமைந்து, நல்ல (சுரர்குடி) தேவர்கள் குடிப்பதான (தேவர்களின் பானமான) அமுதத்தை (ஏற்றிவிட்டு) நிரம்பக் கொண்டதாய் - அமுதம் பொதிந்ததாய், இளநீரைப் போன்றதாய்

(மதனவிடாய்) காம இச்சை என்னும் தாகத்துக்கு, (காம தாகத்தைத் தீர்க்கும் இளநீராய், தனத்து - செல்வமுடைய - வரான இளைஞர்களை வாட்டுந் தன்மையதாய், செப்புக் குடம் போன்றதான இரு கொங்கைகளைக் கொண்டு, பெரிய தவம் நிறைந்தவர்களாய்க், கொடி போன்ற சாயலை உடையவர்களான மாதர்களின் -

வலையிலே இரவும் பகலும் காலத்தைக் கழிக்கும் என்னை உன்னை வாழ்த்தும்படியாக வைத்து அருள்புரிவாயாக.

(சததளம்) நூறு இதழ்த்தாமரையில் இருக்கும் (பார்த்திபற்கு) அரசாம் பிரமனுக்கும், அரிபுருஷோத்தமற்கு - திருமாலாம் புருஷ உத்தமனுக்கும், எரிகின்ற நெருப்பைக் கையில் ஏந்தினவரான சிவபிரானுக்கும், அறிய முடியாததான ஒரு -

சகலச மார்த்தசத் தியவன சாக்ஷமுக்
கியபர மார்த்தமுற் புகல்வோனே;
கதிர்மணி நீர்க்கடற் சுழிபுகு ராக்ஷதக்
கலகப ராக்ரமக் கதிர்வேலா-
கருதிய *பாட்டினிற் றலைதெரி மாசுணக்
கவின்†உரு சாத்துணைப் பெருமாளே (257)

## 1248. அரிய பொருள்பெற

தனதந்த தனதனன தனதந்த தனதனன
தனதந்த தனதனன தனதான

திரைவஞ்ச இருவினைகள் நரையங்க மலமழிய
‡சிவ கங்கை தனில்முழுகி விளையாடிச்-
சிவம்வந்து Xகுதிகொளக வடிவுன்றன் வடிவமென
திகழண்டர் முநிவர்கள மயன்மாலும்;
அரன்மைந்த னெனகளிறு முகனெம்பி யெனமகிழ
அடியென்க ணளிபரவ மயிலேறி-
அயில்கொண்டு திருநடன மெனதந்தை யுடன்மருவி
**அருமந்த பொருளையினி யருள்வாயே;

---

* இறைவன் பாட்டுள் நிற்பது:- 'காட்டுளாடும் பாட்டுளானை" சம்பந்தர் -3-40-5. "பாலின் நெய்யாம், பழத்தின் இரதமாம், பாட்டிற் பண்ணாம்"- அப்பர் 6-15-1.

† உசாத்துணை - உற்றதுணைவன் - "கற்றவர் நற்றுணை கற்றவர்க்கு நல்ல உசாத்துணை" - திருக்கோவையார் 400 உரை.

‡ சிவகங்கை தனில்முழுகி - இது - மதிமண்டலச் சுத்த கங்கை "அமுதக் கடல் மூழ்கி; அருணாசலத்தின் உடன் மூழ்கி - என வருவன காண்க - திருப்புகழ் 867, 790 பார்க்க.

X குதிகொளக = குதிகொள அகம் எனப் பிரிக்க.

O அகம் = யான்; அக வடிவு = என்னுடைய வடிவம்.

"நீவேறெனா திருக்க நான் வேறெனா திருக்க" - திருப்புகழ் 220.

** சிவபிரானுக்கு உபதேசித்த பொருளை எனக்கும் உபதேசம் செய் என அருணகிரியார் அடிக்கடி வேண்டுவர்: திருப்புகழ் - 173, 397, 723, 1127, 1187, 1251; கந்தர நுபூதி 36 - காண்க.

சகல, சமார்த்த, சத்திய, வன, சூக்ஷ, முக்கிய, (பரமார்த்தத்தை) எல்லாவிதமானதும் - சமார்த்த - சம அர்த்த - ஒத்த பொருளானதும், (சத்திய) உண்மை நிறைந்ததும், (வனம்) அழகுள்ளதும், சூக்ஷும் - நுட்பமானதும், முக்கியமானதுமான (பரமார்த்தத்தை) மேலான உண்மைப்பொருளை - முன்பு உபதேசித்தவனே!

ஒளி பொருந்தியதும், முத்து, பவளம் முதலிய மணிகளை உடைய நீர்மையை - நிலையைக் கொண்ட கடலின் நீர்ச்சுழியிற் புகுந்திருந்த அரக்கர்களைக் (கலக) போர்புரிந்த பராக்ரமம் கொண்ட ஒளி வேலனே!

(கருதிய) உன்னைக் கருதிப் பாடப்பட்ட (பாட்டினிற்றலை) பாட்டில் நிற்றலை - பாடலிடத்தே (நீ) அமர்ந்திருத்தலைத் தெரிந்துள்ளவர்களும், மாக்ஷணம், மகாக்ஷண நேரத்தில் - வெகு விரைவில் பாட வல்லவர்களுமான கவிஞர்களின் பெரியோர்களின் - (உசாத்துணைப் பெருமாளே) விசாரணைக்கு - ஆராய்ச்சிக்குத் துணை செய்யும் - (உற்றதுணைவனாம்) பெருமாளே!

(உனை வாழ்த்த வைத் தருள்வாயே)

## 1248.

(திரை கடல் அலைபோல வருகின்றவையும், (வஞ்ச) வஞ்சனைச் செயல்களால் வருவதுமான இரு வினைகள் - நல்வினை தீவினை எனப்படும் இரு வினைகளும்; மயிர் நரைத்தலுக்கு இடம் கொடுக்கின்ற (அங்கம்) உடலும், (மலம்) - ஆணவம், கன்மம், மாயை எனப்படும் மும்மலங்களும் அழிவுபட, (சிவகங்கை) சிவாமிர்தமாம் கங்கை நீரில் மூழ்கி - இன்பத்தில் திளைத்து விளையாடி -

உள்ளத்தில் சிவமாம் மங்கலப் பொருள்வந்து அழுத்தமாகப் பதிய, அகவடிவு உன்றன் வடிவமென - என்னுடைய வடிவம் உன்னுடைய வடிவம் என்று சொல்லும்படி, விளங்கும் தேவர், முனிவர் இவர்கள் கூட்டமும், பிரமனும், திருமாலும் -

சிவபிரானது - குமாரன் என்றுமகிழ, யானைமுகக் கடவுள் கணபதி 'என் தம்பி' என்றும் மகிழ்ச்சி கொள்ள, அடியேன் இடத்தில் (அளிபரவ) கருணையை மிகக் காட்ட, (நீ) மயிலில் ஏறி -

(அயில் கொண்டு) வேல் ஏந்தி, தந்தை திரு நடனம் என உடன் மருவி - தந்தையாம் - சிவபிரானது திரு நடனம் என்று சொல்லும்படி நடனஞ்செய்து உடன் இருந்து என்னுடன் பொருந்தி - (அல்லது) வேலேந்தி, திருநடனத்தைச் செய்கின்ற (என) என்னுடைய தந்தையாம் சிவபிரானுடன் (மருவி) பொருந்தி (நீ உபதேசித்த) அருமந்த பொருளை, அல்லது திருநடனமென - இஃது ஒரு திருவிளையாடல் என்று சொல்லும்படி தந்தையுடன் பொருந்திச் சொன்ன அருமந்த பொருளை - அரிய மறைப்பொருளை இனி (எனக்கும்) அருள்வாயே.

*பரியென்ப நரிகள்தமை நடனங்கொ டொருவழுதி
பரிதுஞ்ச வருமதுரை நடராஜன்-
† பழியஞ்சி யெனதருகி லுறை ‡ புண்ட ரிகவடிவ
பவளஞ்சொ லுமைகொழுந னருள்பாலா;
இருள்வஞ்ச கிரியவுண ருடனெங்க ளிருவினையு
மெரியுண்டு பொடியஅயில் விடுவோனே-
எனதன்பி லுறைசயில மகிழ்வஞ்சி குறமகளொ
டெனு Xபஞ்ச ணையின்மருவு
பெருமானே (258)

---

* நரிபரியாக்கிய திருவிளையாடல்: பாடல் 439-பக் 601-குறிப்பு

† "பழியஞ்சி" - சிவபிரான். சிவபிரான் பழியஞ்சிய வரலாறு :- குலோத்துங்க பாண்டியன் மதுரையில் அரசியற்றும் நாளிலே ஒரு பிராமணன் ஒரு வேடனுடன் வந்து

"அரசே" நான் என் மனைவியை, ஓர் ஆலமர நிழலில் இருத்தி விட்டுப் போய்த் தண்ணீர் கொண்டு வருமுன் இவ்வேடன் அம்பெய்தி அவளைக் கொன்று விட்டு அயலிலே நின்றான் என முறையிட்டான். வேடன் தண்டிக்கப்பட்டும் 'அரசே! நான் அவளைக்கொன்றவன் அல்லேன்' எனறான்; அரசன் வேடனைச் சிறையிலிட்டுத் திருக்கோயிலுக்குச் சென்று "இறைவா! இக்கொலையை யார் செய்தார்கள்! உண்மையை உணர்த்த வேண்டுகின்றேன்" எனத் துதித்தனன். அப்போது ஒரு அசரீரி வாக்கு "செட்டித் தெருவில் இன்று ஒரு கலியாணம் நடக்கும்; அங்கே அந்தப் பிராமணனுடன் வா, உண்மையைத் தெரிவிப்போம்" என்றது. அங்ஙனமே அரசன் மாறுவேடம் பூண்டு, பிராமணனுடன் அந்தக் கலியாண வீட்டிற்குப் போய் ஒரு புறத்தில் இருந்தான். அப்போது அங்கு வந்த இயம தூதர்களில் ஒருத்தன் "இந்த மணமகன் உயிரைக் கொண்டு போக வேண்டும். இன்று ஆலமரத்தில் ஏறுண்டு கிடந்த அம்பு அதன் கீழிருந்த பார்ப்பனிமீது காற்றினால் விழும்படிசெய்து அவளுடைய உயிரைக் கவர்ந்தோமே; அதுபோலப் புறத்தே உள்ள பசுவை வெருட்டி இந்த மணமகனை முட்டச் செய்து அவன் உயிரை கவர்வோம் நாம்" என்றான். இதைக் கேட்ட பிராமணன் "இந்த மணமகன் அப்படி இறந்தால் என் மனைவி இறந்ததும் அப்படியே" என்று தெளியலாம்" என்றான். சற்று நேரத்துக் கெல்லாம் - அங்ஙனமே கொல்லைப் புறத்துப் பசு வெருண்டு ஓடி வந்து மணமகனை முட்டிப் பிணமகனாக்கியது; பிராமணனும் அரசனும் "ஐயோ - வேடன் கொன்றான் என

குதிரை என்று நரிகளைத் திருவிளையாடலாகக் காட்டி ஒரு (வழுதி) பாண்டியனுக்கு இருந்த (பரிதுஞ்ச) குதிரைகள் இறந்துபட எழுந்தருளிவந்த மதுரை நடராஜப் பெருமான் -

பழியஞ்சி - பழிக்கு அஞ்சினவனான சொக்கநாதப் பெருமான் - என்னுடைய அருகில் - சமீபத்தில் (உறை) இருப்பவன், புண்டரிக வடிவ, செந்தாமரைபோன்ற திருவுருவத்தினன்-பவளநிறத்தினன் என்று சொல்லும்படியானவன், உமை கணவன் அல்லது பவள வாய்ச் சொற்களை உடைய உமையின் கணவன் - ஆகிய சிவபிரான் ஈன்றருளிய குழந்தையே!

இருள் சூழ்ந்ததும், வஞ்சனைச் செயல்கள் செய்வதுமான கிரவுஞ்சகிரியும் அதனிடமிருந்த அசுரர்களும், எங்கள் இரு வினையும் இவை எரிபட்டு அழிய வேலைச் செலுத்துபவனே!

என்னுடைய அன்பில் உறைகின்றவளும் (சயிலம்) வள்ளி மலையில் மகிழ்ந்திருந்தவளுமான வஞ்சிக் கொடி அனைய குறமகளொடு - குறத்தி வள்ளியுடன் (எனு) என்னும்படியான - மதிக்கும்படியான பஞ்சணையில் - பஞ்ச சயனத்தில் பஞ்சமெத்தையில் பள்ளிகொள்ளும் (அல்லது பொருந்தியிருக்கும்) பெருமாளே -

(அருமந்த பொருளையினி யருள்வாயே)

---

அவனைத் துன்புறுத்தினோமே" என வருந்தினர் அரசன் வேடனைச் சிறையினின்று நீக்கி - என் பிழையைப் பொறுத்துக் கொள் என்று சொல்லி அவனுக்கு வேண்டுவன கொடுத்து அனுப்பினன். பிராமணனுக்கும் மறு விவாகம் செய்து கொள்ளப் பொருள் கொடுத்து அனுப்பினன். பின்னர் திருக்கோயிலுக்குச் சென்று "ஆதரம் பெருகப் பாவியேன் பொருட்டு எம் அடிகள் நீர் அரும் பழி யஞ்ச நாதரா யிருந்தீர்" என்று சொல்லித் துதித்தான்:-

"அத்தன் அப்படு பழிக்கே அஞ்சியக் கணத்துத் தோன்ற
உத்தமப் பத்தி மாறற்கு உணர்வுற உணர்த்த லாலே
பத்தர்கள்பத்தனுக்குப் 'பழியஞ்சுஞ் சொக்கன்' என்றோர்
வித்தகப் பெரிய நாமம் விளங்கிய தவனி மீது"-

- திருவாலவாயுடையார் திருவிளையாடல் - பழியஞ்சி -29.

‡ சிவன் நிறம்: "பவள வண்ணப் பரிசார் திருமேனி"

- சம்பந்தர் 1-27-5; பவள வாயினாள் - சம்பந்தர். 3-2-1.

X "பஞ்ச அணைமருவு" - எனவும் பாடம்: பஞ்சு மெத்தை: பஞ்ச அணை - பஞ்ச சயனம்: அன்னத்தூவி பூ. இலவம்பஞ்சு, கோரை மயிர் இவற்றால் அமைந்த ஐவகைப் படுக்கை அழகு, குளிர்ச்சி, மார்த்தவம் - மிருதுத்தன்மை, பரிமளம், வெண்மை என்ற ஐவகைத் தன்மை கொண்ட படுக்கை எனவுமாம்.

## 1249. பிறவியற

தானான தாத்த தானான தாத்த
தானான தாத்த தனதான

*தீயூதை தாத்ரி பானீய மேற்ற
வானீதி யாற்றி கழுமாசைச்-
சேறூறு தோற்பை யானாக நோக்கு
மாமாயை தீர்க்க அறியாதே,
பேய்பூத மூத்த பாறோரி காக்கை
பீறாஇ ழாத்தி னுடல்பேணிப்-
பேயோன டாத்து கோமாளி வாழ்க்கை
போமாறு பேர்த்து னடிதாராய்;
வேயூரு சீர்க்கை வேல்வேடர் காட்டி
லேய்வாளை வேட்க வுருமாறி-
மீளாது வேட்கை மீதூர வாய்த்த
வேலோடு வேய்த்த இளையோனே,
மாயூர வேற்றின் மீதே புகாப்பொன்
மாமேரு வேர்ப்ப றியமோதி-
மாறான மாக்கள் நீறாக வோட்டி
வானாடு காத்த பெருமாளே (259)

## 1250. ஞானப் பொருள் பெற

தனத்தன தனத்தன தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன தனதான

துடித்தெதிர் வடித்தெழு குதர்க்கச மயத்தவர்
சுழற்கொரு †கொடிக்கொடி யெதிர்கூறித்-
துகைப்பன கிதத்தலை யறுப்பன யில்விட்டுடல்
துணிப்பன கனித்தலை மிசைபார;

---

* தீயூதை. வான் = தீ. கால், மண், நீர், வான் ஆகிய பூதம் ஐந்து. "ஐம்பூதத்தான் ஆகியதோர் ஆக்கை"- வேற்பத்து 9.

† கொடிக் கொடி = கோடி கோடி.

## 1249.

(தீ) அக்கினி, (வளை) காற்று, (தாத்ரி) மண், (பானீயம்) நீர், (ஏற்ற) உயர்ந்த வான் - (ஈதியால்) இந்த ஐந்து பூதங்களால், திகழும் - விளங்குகின்றதும், ஆசை என்கின்ற

சேறு ஊறியுள்ளதும், தோலால் ஆனதுமான பையாகிய இந்த உடலை, (யானாக) நானாக (நோக்கும்) எண்ணுகின்ற மகாமாயையைத் (தீர்க்க) ஒழிக்க - நீக்க அறியாமல் -

பேய்களும், பூதங்களும், வயது சென்ற (பாறு) பருந்துகளும், (ஓரி) நரிகளும், காக்கைகளும், (பீறா) பீறி - கிழித்து, இழா - இழுத்து, (தின்) உண்ணுகின்ற (இந்த) உடலைப் (பேணி) விரும்பிப் பாதுகாத்துப்

(பேயோன்) பேய்போன்ற நான் (நடாத்து) செலுத்துகின்ற கோமாளி வாழ்க்கை - கோணங்கி வாழ்க்கை - நகைப்புக்கு இடமான வாழ்க்கை (போமாறு தொலையும் வண்ணம் (பேர்த்து) விலக்கித் தள்ளி உன்னுடைய திருவடியைத் தந்தருளுக.

வேய் - புல்லாங்குழலில் (ஊரு) வைத்துத் தடவும் (சீர்க்கை) சீரான கையில் வேல் ஏந்தும் வேடர் வாழ்ந்த (வள்ளி மலைக்) காட்டில் (ஏய்வாளை) பொருந்தி யிருந்த வள்ளியை (வேட்க) விரும்பித் திருமணஞ் செய்ய உருவத்தை மாற்றிக் கொண்டு.

திரும்பாது விருப்பம் மேலெழப் பொருந்திய வேலுடனே (வேய்த்த) ஒற்றர் செய்தி அறிவது போலச் சென்ற இளையவனே!

(மாயூர ஏற்றின்) ஆண்மயிலின் மேல் ஏறிப் பொன்னிறம் உடைய மகாமேரு (கிரவுஞ்சம்) வேர் பறியும்படி தாக்கி

மாறுபட்டு எதிர்த்த (மாக்கள்) அசுரர்கள் சாம்பலாக (ஓட்டி) ஓட்டி ஒழித்து, வானுலகைக் காத்த பெருமாளே!

(உன் அடி தாராய்)

## 1250.

(துடித்து) உடல் பதைத்து, எதிர், எதிரே, வடித்து எழு கூர்மையுடன் எழுந்திருக்கின்றவர்களான (குதர்க்க சமயத்தவர்) விதண்டாவாதம் - முறை கெட்ட தருக்கம் - செய்யும் சமயவாதிகளின் (சுழற்கு) சுழலுக்கு - கூட்டத்துக்கு ஒருகோடிக்கோடிக் கணக்கில் எதிர் வாதம் பேசித் -

(துகைப்பன) - மிதித்து உழக்கக் கூடியதும் - வருத்தமுறச் செய்யக்கூடியதும், அகிதத் தலை அறுப்பன - (இதம் இன்மை) தீமைகளின் அதிகார நிலையை அறுத்துத் தள்ளக் கூடியதும், அயில் விட்டு - வேலாயுதத்தைச் செலுத்தி (உடல்) (மாறுபட்டோர்) உடலைத் (துணிப்பன), துண்டிக்க வல்லதும், கணி - நூல் வல்லவர்களின் தலைமீது உள்ள பாரமான -

முடித்தலை விழுப்பன முழுக்கஅ டிமைப்பட
முறைப்படு மறைத்திர ளறியாத-
முதற்பொருள் புலப்பட வுணர்த்துவ னெனக்கொரு
மொழிப் பொருள் பழிப்பற அருள்வாயே
*குடிப்பன முகப்பன நெடிப்பன நடிப்பன
கொழுத்தகு ருதிக்கட லிடையூடே-
குதிப்பன மதிப்பன குளிப்பன களிப்பன
குவட்டினை யிடிப்பன சிலபாடல்,
படிப்பன திருப்புக ழெடுப்பன முடிப்பன
பயிற்றிய லகைக்குலம் விளையாடப்
பகைத்தெழு மரக்கரை யிமைப்பொழு தினிற்பொடி
படப்பொரு துழக்கிய பெருமாளே (260)

## 1251. உபதேசம் பெற

தத்த தத்த தானனம்தத்த தத்த தானனம்
தத்த தத்த தானனத் தனதான

துத்தி நச்ச ராவிளம் பிச்சி நொச்சி கூவிளஞ்
சுக்கி லக்க லாமிர்தப் பிறைசூதம்-
சுத்த ரத்த பாடலம் பொற்க டுக்கை யே †டலஞ்
சுத்த சொற்ப கீரதித் திரை நீலம்,

---

* 1250 -ஆம் பாடலின் அடிகள் 5-7 "பொருகளத்தலகை வகுப்பு" போர்க்களத்தலகை வகுப்பு, செருக்களத்தலகை வகுப்பு - இவைகளின் கருத்தைக் கொண்டன

(i) "குதித்து முழுகியும் இரத்த நதியிடை
குடித்தும் உணர்வொடு களித்து வருவன...
எழுவகை நிருத்தம் இடுவன - பொருகளத்தினலகையே.

(ii) 'குருதிக் கடலைப் பெருகப் பருகிக்... களிக்கும் ஒரு திரள்' செருக்களத்தில் அலகையே"

(iii) "ஒழுகுதிரந்தனில் முழுகி எழுந்தன... போர்க்களத்தில் அலகையே"

(iv) "களமுழுதும் வாழிய திருப்புகழ் முழக்குவன... பூதவேதாளம் அநேக விதங்களே"

† அலம் - தேள் - சிவபிரான் சடையில் "தேளும்" உண்டு. பேரூர்க் கனகசபையில் அகோர மூர்த்தியின் விரி சடையிலே ஒரு பெரிய தேள் சித்திரிக்கப் பெற்றிருக்கின்றது. அகோர மூர்த்தியின் ரூபத் தியான சுலோகத்தில் -

முடித்தலை - தலைமுடி - குடுமியை, (விழுப்பன) விழுந்து போம் படிச் செய்ய வல்லதுமான (முதற் பொருளை), (முழுக்க) யாவரும் அடிமைப்படும்படி - ஒழுங்குபட அமைந்துள்ள (மறைத்திரள்) வேதமொழிகளின் கூட்டம் கண்டு உணராத -

முதற்பொருள் - மூலப்பொருளைப் - (புலப்பட) யாவருக்கும் தெரியும்படி உணர்த்துவன் - தெளிவுடன் தெரிவிப்பேன்; நீ எனக்கு ஒப்பற்ற மொழி - பிரணவ மொழியின் பொருளை - யாரும் பழிக்காத நல்ல முறையில் உபதேசித்தருளுவாயாக.

(குடிப்பன) போர்க்களத்தில் ரத்தத்தைக் குடிப்பன ஆகவும், (முகப்பன) மொள்ளுவன ஆகவும், (நெடிப்பன) தாமதிப்பன ஆகவும், (நடிப்பன) கூத்தாடுவன ஆகவும், (கொழுத்த) செழிப்புற்றுக் குழம்பாயிருக்கும் ரத்தக்கடலினுள்ளே -

குதிப்பன, (மதிப்பன) ரத்தக்கடலின் அளவை அளவிடுவன, அதில் குளிப்பன, அதைக்கண்டு மகிழ்வன, (அந்த மகிழ்ச்சியில்) மலைகளையும் இடிப்பன ஆகவும், சில பாடல்களைப்

படிப்பன ஆகவும், (முருகன்) திருப்புகழை (எடுத்து) ஆரம்பித்து முடிப்பன ஆகவும், இங்ஙனம் (பயிற்றி) நிகழ்ச்சிகளை நி■ழ்த்தி (அலகைக் குலம்) பேய்க் கூட்டங்கள் விளையாடப்

பகைத்து எழுந்த அரக்கர்களை ஒரு நொடிப் பொழுதிலே பொடிபடும்படிப் போர்புரிந்து (உழக்கிய) கொன்ற பெருமாளே.

(பொருள் பழிப்பற அருள்வாயே)

## 1251.

புள்ளிகளை உடையதும், விஷத்தை உடையதுமான (அரா) பாம்பு, புதிய பிச்சி (சாதி மல்லிகை) மலர், நொச்சிப்பூ (கூவிளம்) வில்வம், (சுக்கிலக்கலா) வெண்ணிறத்தாய்க், கலைகளைக் கொண்டதாய், அமிர்தமயமான பிறைச்சந்திரன், மாந்தளிர்,

சுத்தமான ரத்த நிறப் (பாடலம்) பாதிரி, பொன்னிறக் (கடுக்கை) ஏடு கொன்றை மலர், அலம் - தேன் - பரிசுத்தம் என்ற புகழையுடைய திரைபகீரதி - அலைவீசு கங்கை, நீலோற்பலம் -

---

'கபால மாலா பரணம் சர்ப்ப "வ்ருஸ்சிக பூஷணம்" கட்வாங்கஞ்ச கபாலம் சகேடகம். பாஸமேவச' என வருகின்றது. (சித்தாந்தம் - மலர் 22-இதழ் 5 - 1949 மே. பக்கம் 168)

"கீளுலாங் கோவணங் கீழரைக் கேயசைத் திட்டவன்
கோளுலாம் வேணிமேற் கோளராக் கூவிளம் கொண்டவன்
வாளுலாம் நீள்விழி மாதராள் பங்கினான் வான்மியூர்த்
தேளுலாஞ் செஞ்சடைத் தேசிகன் சேவடி சேர்மினே" (6) - என்பது அருட்கவி சேதுராமனார் திருவாக்கு திருவான்மியூர்க் கோயிலில் 29-5-1955 தேதியிற் பாடிய திருப்பதிகம்.

புத்தெ ருக்கு பாழிகங் கொத்தெ டுத்த தாளிதன்
பொற்பு மத்தை வேணியர்க் கருள்கூரும்
புத்தி சித்தி வாய்கனஞ் *சுத்த சத்ய வாசகம்
புற்பு தப்பி ராணனுக் கருள்வாயே;
பத்தி யுற்ற தோகையம் பச்சை வெற்றி வாகனம்
பக்க மிட்டு லாவி †யச் சுரர்மாளப்
பக்க விட்டு வாய்நிணங் கக்க வெட்டி வாய்தரும்
‡பத்ம சிட்ட னோடமுத் தெறிமீனக்,
கைத்த லைப்ர வாகையுந் தத்த ளிக்க மாமுறிந்
துட்க முத்து வாரணச் சதகோடி
கைக்க ளிற்று வாரணம் புக்கொ ளிக்க வாரணங்
கைப்பி டித்த சேவகப் பெருமாளே (261)

## 1252. புகழ, உண்மை பகர

தனன தத்த தய்ய, தனன தத்த தய்ய
தனன தத்த தய்ய தனதான

தெரிவை மக்கள் செல்வ முரிமை மிக்க வுண்மை
தெரிவ தற்கு உள்ள முணராமுன்
Xசினமி குத்த தின்னர் தனிவ ளைத்து வெய்ய
சிலுகு தைத்து வன்மை சிதையாமுன்;

---

* "சத்ய வாசகம் அருள்வாயே" - பாடல் 1248 அடி 4-ன் குறிப்பு

† அச்சுரர் = அசுரர்

‡ பத்ம சிட்டன் - சூரபத்மன் - சூரன் பகுதி ஆணவம். பத்மன் பகுதி - அறிவு -. ஆதலால் "பத்ம சிட்டன்" என்றார் - ஆணவம் மயிலாயிற்று. ஞான சூரியனாம் முருக வேளால் அடக்கப்பட்டது. பத்மன் - அறிவுப்பகுதி சேவலாயிற்று - கொடியாய் உயர்த்தப்பட்டது "இருபெருருவின் ஒரு பேரியாக்கை" - திருமுருகா. 57

X சினமிகுத்த தின்னர் - ஐம்பொறிகள் - "சினமலியறுபகை மிகுபொறி" சம்பந்தர் 1-21-5. "மூள்வாய தொழிற்பஞ்சேந்திரிய வஞ்ச முகரிகாள் நும்முடைய மம்மராணை நடாத்துகின்றீர்"..

அப்பர் 6-27-9:" ஒர ஒட்டார் ஒன்றை உன்ன ஒட்டார் மலரிட்டுனதாள் சேர ஒட்டார் ஐவர்" கந் அலங் 3

புதிய எருக்க மலர், (பாழி) பெருமை பொருந்திய (கம்) பிரமகபாலம், கொத்து கொத்தாயுள்ள (தாளி) தாளி அறுகு, தண் - குளிர்ந்ததும், பொற்பு - அழகு வாய்ந்ததுமான (மத்தை) ஊமத்தும் - இவைகளைச் சூடிய வேணியர்க்கு - சடைப் பெருமானாம் சிவபிராற்குத் உபதேசித்தருளின -

புத்தியும் (சித்தியும்) அஷ்டமாசித்திகளும் வாய்ந்ததும், (கனம்) பெருமையும், சுத்தமும், உண்மையும், கொண்டுள்ளதுமான (வாசகம்) உபதேச மொழியை (இந்த) புற்புதம் - நீர்க்குமிழி போன்று நிலைத்திராத உயிர்க்கு - அடியேனுக்கு அருள் புரிவாயாக.

(பத்தியுற்ற) வரிசையாய் அமைந்துள்ள தோகைகளை உடைய, அழகிய, பச்சை நிறங்கொண்ட, ஜெயவாகனமாம் - மயிலின் பக்கலில் ஏறி, உலாவி அசுரர்கள் மாண்டு ஒழியப்,

பக்க விட்டு - பகவிட்டு - பிளவுபடுத்தி, வாய்கள் மாமிசத்தைக் கக்கும்படி வெட்டி, வாய்தரும் - வாய்தல்தரும் - நேர்ந்து வந்த சூரபத்மனாம் (சிட்டன்) மேலோன் ஓட்டம் பிடிக்கவும், முத்துக்களை வீசி, மீன்களைக்

(கைத்தலை) தன்னிடம் கொண்டதான (ப்ரவாகையும்) வெள்ளமாம் கடலும் (தத்தளிக்க) திகைப்புற்றுக் கலக்கமுறவும், மா - மாமரமாய் நின்ற சூரன் முறிபட்டு (உட்க) அச்சம் உறவும், முத்து வாரணச் சதகோடி - (கடலிலிருந்த) சதகோடி முத்து வாரணம் - நூறு கோடிக் கணக்கான முத்துக்களை ஈனும் (வாரணம்) சங்குகளும் -

கைக்களிற்று வாரணம் - துதிக்கையை உடைய களிறு வாரணம் யானை - அஷ்ட கஜங்களும் பயந்து ஒளித்துக்கொள்ளவும் செய்து, (வாரணம்) யானை - தேவசேனையைக்கைப்பிடித்த - மணந்த பெருமாளே! அல்லது (வாரணம்) கோழியைக் கொடியாகக் கையிற் கொண்ட பராக்ரமம் உள்ள பெருமாளே!

(சத்ய வாசகம் புற்புதப் பிராணனுக்கு அருள்வாயே)

## 1252.

(தெரிவை) மனைவி, மக்கள், செல்வம், இவைகளின் உரித்தாம் தன்மை எவ்வளவினது என்னும் மிக்க உண்மை - நின்ற உண்மையைத் தெரிந்துக் கொள்ளவேண்டுமென்று (என்) உள்ளம் உணர்ந்துகொள்வதற்கு முன்பு (எனது குழந்தைப்பருவத்திலேயே)

கோபம் மிகுந்தவரும் (திண்மை) வலிமை வாய்ந்தவர்களுமான ஐம்புலன்களும் என்னைத் தனிப்படவைத்து வளைப்பதனால், கொடிதான (சிலுகு) துன்பக் குழப்பங்கள் (தைத்து) வந்து (என்னை) அழுந்தப்பொருந்த (எனது) வன்மை - சக்தி (அழிவு) படுவதற்கு முன்பாக - (பிரபஞ்ச விஷயங்கள் என்னைப் பீடித்து அலைப்பதற்கு முன்பாக - என் அறிவு உலக விஷயங்களில் ஈடுபடுவதற்கு முன்பாக எனது குழந்தைப் பருவத்திலேயே -

பரவை புக்கு தொய்யு மரவ ணைக்குள் வைகு
பரம னுக்கு நல்ல மருகோனே-
பழுதில் நிற் *சொல் சொல்லி யெழுதி நித்த முண்மை
பகர்வ தற்கு † நன்மை தருவாயே
இருகி ரிக்க ளுள்ள வரைத டிக்கு மின்னு
மிடியு மொய்த்த தென்ன எழுதூரை
எழுக டற்கு ளுள்ளு முழுகு வித்து விண்ணு
ளிமைய வர்க்கு வன்மை தருவோனே,
‡ அரிவை பக்க முய்ய வுருகி வைக்கு மைய
ரறிய மிக்க வுண்மை யருள்வோனே-
Xஅறிவி னுக்கு ளென்னை நெறியில் வைக்க வல்ல
அடிய வர்க்கு நல்ல பெருமாளே (262)

**1253.** *(அகப் பொருள்)* - மாலையைப் பெற

தந்தன தந்த தந்தன தந்த
தந்தன தந்த தனதான

O தென்றலு மன்றி யின்றலை பொங்கு
திண்கட லொன்று மிகமோதச்-
*செந்தழ லென்று வெந்தழல் சிந்து
திங்களும் வந்து துணையேய;
அன்றிலு மன்றி துன்றுச ரங்க
ளைந்துமெ னெஞ்ச மழியாதே-

---

* சொல் - புகழ் - திருக்குறள், 387

† நன்மை - நற்குணம் - திருக்குறள் 194.

‡ தேவிக்கு இடப்பாகம் தந்தது - பாடல் 548-பக்கம் 248.

பாடல் 301-பக்கம் 246, பாடல 828 பக்கம் 436 - கீழ்க்குறிப்பு.

உய்ய அரிவைபக்கம் வைத்தார் உய்ய - உலகுய்ய - 'பெண்பால் உகந்திலனேற் பேதாய் இருநிலத்தோர் விண்பாலி யோகெய்தி விடுவர்காண் சாழலோ - திருவாசகம்.

சிவனுக்கு உபதேசித்தது - பாடல் 327 பக். 314

X இது அருணகிரியார் வரலாற்றுக்கு உதவும் பகுதி

O தென்றல், கடல், திங்கள், அன்றில், காமன் பாணங்கள் - காமம் மிக்கவரை வருத்துவன - பாடல் 218-பக்கம் 53 கீழ்க்குறிப்பு.

** 'செந்தழலே வந்தழலைச் செய்திடினும்' - பெருமாள் திருமொழி.5-6.

பரவை புக்கு - திருப்பாற்கடலில் புகுந்து (தோய்யும்) துவட்சியுறும் பாம்பணையிலே பள்ளி கொண்டிருக்கும் பரமனாம் திருமாலுக்கு நல்ல மருமகப்பிள்ளையே!

குற்றம் என்பதே இல்லாத நினது சொல்லை - தேவாரப் பொன்மொழிகளை சொல்லுவதற்கும், எழுதுவதற்கும் நாள் தோறும் உண்மையே பேசுதற்கும் வேண்டிய (நன்மை) நற்குணத்தை (நீ எனக்குத் தந்தருளுக. (அல்லது) - குற்றமில்லாத (நிற்சொல் சொல்லி) உனது சொல் - திருப்புகழ்களைச் (சொல்லி) எடுத்துக் கூறி, எழுதி அவைகளை (வசனமாகவோ பாட்டாகவோ) எழுதிநாளும் உண்மையே பேசும்படியான நலத்தை (நல்வாழ்வைத்) தந்தருளுக.

இரு கிரிக்குள் உள்ளவரை - கிரவுஞ்சகிரி, எழுகிரி, என்னப்பட்ட இருவகை மலைகளில் வாசஞ் செய்திருந்த அசுரர்களையும், (துடிக்கும்) மிக்கு எழும் மின்னலும் இடியும் நெருங்கி வருவது போல் போர்க்கெழுந்து வந்த சூரனையும்

ஏழுகடல்களிலும் முழுகும்படித்தள்ளி, (விண்ணுள்) விண்ணுலகில் (இமையவர்க்கு) தேவர்களுக்குப் பலத்தைத் தந்தவனே!

அரிவை பக்கம் உய்ய உருகி வைக்கும் ஐயர் - உய்ய, அரிவை பக்கம் உருகி வைக்கும் ஐயர் - உலகம் உய்ய. அரிவை பார்வதி தேவியை - பக்கம் இடது பாகத்தில் (உருகி) அவளது தவத்துக்கு இரங்கி, வைத்துள்ள ஐயர் - சிவபெருமான் அறியும்படி சிறப்புற்ற உண்மைப்பொருளை உபதேசித்தவனே!

அறிவினுக்குள் என்னை - என்னை (அறிவினுக்குள்) - ஞான நிலையில் - (நெறியில்) ஒழுங்கானவழியில் வைக்க வல்ல பெருமாளே! அடியார்களுக்கு நல்ல பெருமாளே! (அல்லது) என்னை ஞான நிலையில் - ஒழுங்கு நெறியில் வைக்க வல்ல அடியவர்களுக்கு நல்ல பெருமாளே!

(உண்மை பகர்வதற்கு நன்மை தருவாயே)

## 1253.

தென்றல் மாத்திரம் அன்று - தென்றலுடனே - இன்று - இன்றைய தினத்தில், அலை பொங்கு - அலை பொங்கி, எழும் (திண்கடல்) ஒன்றும் - வலிய கடல் ஒன்றும் - வலிய கடலும்கூட மிகப் பலமாக (மோத) என்னைத் தாக்கப் -

பொங்கி எரியும் நெருப்பு என்று சொல்லும்படிக் கொடிய நெருப்பைத் தூவுகின்ற சந்திரனும் கூடி வந்து அவைகளுக்குத் துணையாகப் பொருந்த -

அன்றிற் பறவையும் அதனுடன் நெருங்கி வந்த (மன்மத) பாணங்கள் ஐந்தும் என்னுடைய உள்ளத்தை அழிவு செய்யாமல்

அந்தியி லென்றன் வெந்துய ரஞ்ச
அன்பொட லங்கல் தரவேணும்;
வென்றிவி ளங்கு குன்றவர் வஞ்சி
விஞ்சிய கொங்கை புணர்மார்பா
வெண்டர ளங்கள் தண்டைச தங்கை
மின்கொடி லங்கு கழலோனே;
கொன்றைய ணிந்த சங்கர ரன்று
கும்பிட வந்த குமரேசா-
குன்றிட அண்ட ரன்றுய வென்று
குன்றமெ றிந்த பெருமாளே (263)

## 1254. திருவடிமறவாமை

தானன தனன தானன தனன
தானன தனன தனதான

தோரண கனக வாசலில் முழவு
தோல்முர சதிர முதிராத-
தோகையர் கவரி வீச*வ யிரியர்
தோள்வலி புகழ மதகோப;
வாரண ரதப தாகினி துரக
† மாதிர நிறைய ‡ அரசாகி-
Xவாழினும் வறுமை கூரினு நினது
வார்கழ லொழிய மொழியேனே;
பூரண புவன காரண Oசவரி
பூதர புளக தனபார-
பூஷண நிருதர் தூஷண விபுதர்
பூபதி நகரி குடியேற,

---

* வயிரியர் = பாணர் புகழ்ந்து பாடுவோர். 'வயிரியர் சேர்ந்து பாட' என்றார் 778-ஆம் பாடலிலும். வயிரியர் - அரசன் முன்னிலையிற் பாடிப்பரிசு பெறுவோர் வயிரியர். 'செந்நீர்ப்பசும் பொன் வயிரியர்க் கீத்த'- 'நல்யாழ், மண்ணமை முழவின் வயிரியர் இன்மை தீர்க்கும்-குடிப்பிறந்தோயே' புறநானூறு -9, 164.

(அரசர் முன்னிலையில்) நின்று ஏத்துவோர் - சூதர், இருந்து ஏத்துவோர் மாகதர். (சிலப்பதி -5-48). †மாதிரம் = திசை.

‡ அடி 1-4 இது அருணகிரியார் காலத்து அரச வாழ்க்கை விளக்கும் - பாடல் 778-1-3 (தொ.பக். 595)

அந்திப் பொழுதில் வந்து என் கொடிய துயர் அஞ்சி நீங்க அன்புடனே உன் மாலையைத் தந்தருள வேண்டுகின்றேன்,

வெற்றி விளங்கும் மலைநிலத்து வேடர்களின் பெண் வள்ளியின் - மேலோங்கு கொங்கையை அணைந்த மார்பனே!

வெண்முத்துக்களால் ஆய தண்டையும் சதங்கையும், (கிங்கிணியும்) பிரகாசத்துடன் ஒளிவீசும் கழலை உடையவனே!

கொன்றை மாலையை அணிந்த சங்கரர் அன்று கும்பிட (அவருக்கு உபதேசம் செய்ய) வந்த குமரேசனே!

மனம் குன்றி (வேதனையால் நொந்து) நிலை குறைவுற்று இருந்த தேவர்கள் அன்று பிழைக்கும்படி போரில் வெற்றி பெற்றுக் கிரவுஞ்சத்தைப் பிளந்தெறிந்த பெருமாளே!

(அலங்கல் தரவேணும்)

## 1254.

தோரணங்கள் கட்டியுள்ள பொன்மயமான (அரண்மனை) வாயிலில் முழவு, தோல் முரச வாத்தியம் (முதலிய) ஒலிக்க - இளம்பருவத்தினரான,

மாதர்கள் கவரி வீச, (வயிரியர்) - புகழ்ந்து பாடும் பாடகர்கள் எனது புஜ பராக்ரமத்தைச் சிறப்பித்துப் புகழ, மதம் கொண்டதும், கோபம் கொண்டதுமான

யானைகள், தேர்கள், காலாட்படைகள், (துரகம்) குதிரைப் படைகள் திசை நிரம்பி விளங்க, நான் ஒரு அரசனாகி -

வாழ்ந்திருந்தாலும் சரி, தரித்திர நிலை மிக்குப் பாடு பட்டாலும் சரி, உன்னுடைய நேர்மை பொருந்திய திருவடியைத் தவிர வேறு எதைப்பற்றியும் யாரைப்பற்றியும் பேசமாட்டேன், வேறுயாரையும் எதையும் புகழேன்:

முழுமுதலே! (புவனகாரண) உலகங்களுக்கு மூலகாரண மூர்த்தியே! சவரி - குறத்தி வள்ளியின் பூதரம்) மலைபோன்றதும், புளகம் கொண்டுள்ளதுமான கொங்கைப் பாரங்களைப்

(பூஷண) (மார்பில்) அணியாகக் கொண்டுள்ளவனே! (நிருதர் தூஷண) அசுரர்களைக் கண்டனம் செய்பவனே! நிந்திப்பவனே! விபுதர் - தேவர்கள், பூபதி - அரசனாகிய இந்திரனுடைய நகரி பொன்னுலகு குடியேறும் படியும் -

---

X இந்த அடி அருணகிரியாரின் திடபக்தியைக் காட்டும். 'மறுக்கும் தகைமைகள் செய்யினும் யானுன்னை வாழ்த்துவனே' - அபிராமி அந்தாதி - 46 'மெய்த்திருவந் துற்றாலும் வெந்துயர் வந்துற்றாலும் ஒத்திருக்கும் உள்ளத் துரவோனே - நளவெண்பா - சுயம்வர 5. 'நரகம் புகினும் எள்ளேன் திருவருளாலே இருக்கப்பெறின்' திருவாசகம் -சதகம் 2. ♦சவரி - குறத்தி

ஆரண வனச ஈரிரு குடுமி
 *ஆரியன் வெருவ மயிலேறு-
மாரிய பரம ஞானமு † மழகு
 மாண்மையு முடைய ‡ பெருமானே (264)

## 1255. பிறவி யற

தத்தனா தனத்த தத்தனா தனத்த
 தத்தனா தனத்த தனதான

நச்சுவாள் விழிக்கொ டெற்றியே தனத்தை
 நத்துவார் சுகத்தில் நலமாக-
நட்டமா மனத்தை யிட்டமே கொடுத்து
 நத்துவாழ் கடற்கு ளணைபோலே;
கச்சமே செலுத்தி யச்சமே படுத்து
 கட்ட ஏழ் X பிறப்பு விடவேதான்
கற்றநூ லுகக்க வெட்கமே செறித்த
 கட்டனே னினைப்ப தொருநாளே;
இச்சையே செலுத்தி யுச்சிதாள் O பலிக்கு
 மிட்டமா லவற்கு மருகோனே-
எற்றுவா ரிதிக்குள் முற்றிநீள் பொருப்பை
 யெக்கிநேர் மடித்த இளையோனே,
மெச்சவே புடைத்த முத்தமார் தனத்தி
 மிக்கவாள் படைத்த விழியாலே
வெட்டுமா மறத்தி யொக்கவே யிருக்க
 வெற்றிவே லெடுத்த பெருமானே (265)

---

* பிரமனுக்கு முருகவேளிடம் அச்சம்: "நான் மறைவிதியை நடுங்கு சிறைவைத்த" காரணத்தால் (கல்லாடம்)

† 'அழகும் ஆண்மையும் இலகியசரவண பெருமானே' - திருப் 1011

✓ ‡ இந்த 1254 ஆம் பாடல் மணப்பாடத்துக்கு உரியது:

X பிறப்புவிடவே கற்றநூல் என்றபடியால் - கற்ற நூல்கள் பிறப்பை ஒழிக்கவல்ல தேவாரம் திருவாசகம் ஆதிய சிவ சம்பந்த நூல்கள். பிறப்பறுக்க வல்லவர் - சிவனே! 'பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்தன் பெய்கழல்கள் வெல்க' , சிவ புராணம்.

சம்பந்தர் தேவாரம் பிறப்பறுக்கும் என்பது:- 'ஞான சம்பந்தன் நற்றமிழ் மாலை உரை செய்து நவில்வார்... மண் மிசைப் பிறவார் மற்றிதற் காணையும் நமதே' - சம்பந்தர் 3-118-11.

O பலிச் சக்ரவர்த்தியின் உச்சியில் -தலைமிசைதாள் வைத்தது பாடல் 268-பக்கம் 166, பாடல் 458-பக்கம் 24 கீழ்க்குறிப்பு.

வேதம் ஓதுபவனும், தாமரையில் இருப்பவனும், (சரிரு) நான்கு குடுமிகளைக் கொண்டவனுமான ஆரியன் - பெரியோனாம் பிரம தேவன் அச்சங் கொள்ளும்படியும் - மயிலில் ஏறி வரும் -

(ஆரிய) பெரியோய்! மேலான ஞானத்தையும், அழகையும், பராக்ரம திடத்தையும் உடைய பெருமாளே!

(கழல் ஒழிய மொழியேனே)

# 1255.

(நஞ்சு) நச்சு விஷம், வாள் இவை போன்ற (விழிக்கொடு) கண்கொண்டு, எற்றியே - (ஆடவர்களைத்) தாக்கியே, (தனத்தை) பொருளை (நத்துவார்) ஆசைப்படுபவர்களாகிய விலைமாதர்களின் (சுகத்தில்) காம போகத்தில் - நன்மை பெற - இன்பம் பெற -

நட்ட - மா - மணத்தை - நடப்பட்ட - புதைக்கப்பட்ட - சிறந்த - மணத்தை (அல்லது) - நஷ்டம் அடைவதாகின்ற மணத்தை, இஷ்டத்துடன் - பிரியத்துடன் கொடுத்து - பிரியப்பட்டு வைத்து (நத்து வாழ்) சங்குகள் அல்லது நத்தைகள் வாழ்கின்ற கடலிலே அணையிட்டது போலக் -

கச்சமே செலுத்தி - ஒப்பந்தம் செய்த வகையிற் போக விட்டு (அச்சமே படுத்து) - பயத்தையே உண்டு பண்ணுகின்ற கஷ்டமான எழு பிறப்புக்களையும் விடுவதற்கே தாண்டுதற்கே

கற்ற நூல் - (பிறப்புவிடவே கற்ற நூல்) பிறவியை ஒழிக்கும் பொருட்டுக் கற்ற (சிவ நூல்களில்) உகக்க - மகிழ்ச்சி கொள்ள, வெட்கமே நிறைந்துள்ள (கட்டனேன்) துன்பங்கள் நிறைந்த நான் (உன்னை) நினைப்பதான ஒரு (நல்ல நாள்) எனக்குக் கிடைக்குமா!

(இச்சையே செலுத்தி) தமது (இச்சை) விருப்பத்தை இன்ன தென்று தெரிவித்து (உச்சிதாள்பலிக்கும்) - மாவலிச்சக்ரவர்த்திக்கு (உச்சி) அவனது தலையில் தாள் - தமது பாதத்தை (இட்ட) வைத்த (மாலவற்கு) திருமாலுக்கு மருகனே!

எற்று வாரிதிக்குள் - (அலை) வீசும் கடலினுள் - முற்றி நீள் பொருப்பை - பரந்து நீண்ட எழுகிரியை (எக்கி) தாக்கி ஊடுருவிச் செல்லும்படி. (வேலைச் செலுத்தி) நன்கு அழித்த இளையவனே!

(மெச்சவே) புகழும்படியாகப் (புடைத்த) பருத்து எழுந்துள்ள முத்தமாலை நிறைந்த கொங்கையை உடையவள், கூர்மிகுந்த வாளாயுதத்தைப் போன்ற தன் கண்களைக் கொண்டு

(உயிரின் வினையை) வெட்டவல்ல சிறந்த வேட்டுவச்சி - ஆகிய வள்ளி கூடவே இருக்க, வெற்றி வேலைத் திருக்கையிற் கொண்டு விளங்கும் பெருமாளே!

(நினைப்ப தொருநாளே)

## 1256. கிருபை பெற

தத்ததன தான தத்த தத்ததன தான தத்த
தத்ததன தான தத்த தனதான

நிற்குணமு ளார்த மைப்போல் மைக்குழலி லேசி றக்க
நற்பரிம ளாதி துற்ற மலர்சூடி-
நச்சுவிழி யால்ம யக்கி யிச்சைபல பேசி யுற்று
நற்பொருள வாம னத்தர் வசமாகி;
வெற்பனைய மாத னத்தை பொற்புறவு றாவ ணைத்து
மெத்தமய லாகிநித்த மெலியாதே-
வெட்சிகமழ் நீப புஷ்ப வெற்றிசிறு பாத பத்ம
மெய்க்கிருபை நீய ளிப்ப தொருநாளே;
*ரத்தினப ணாநி ருத்தன் †மெய்ச்சுதனு நாடு மிக்க
லக்ஷணகு மார சுப்ர மணியோனே-
‡ நற்றிசையு மேறி யிட்ட பொய்ச் Xசமணை வேர றுத்து
நற்றிருநி றேப ரப்பி விளையாடும்;
சற்சனகு மார வ்ருத்தி அற்புத○சி வாய னுக்கொர்
சற்குருவி நோத சித்ர மயில்வீரா-
**சக்ரதரன் மார்ப கத்தி லுக்ரமுட னேத ரித்த
சத்தியடை யாளமிட்ட பெருமாளே. (266)

---

* காளிங்க நிர்த்தனம் - பாடல் 245-2 பக்கம் 114; பாட்டு 402 - பக்கம் 518; பாட்டு 868-பக்கம் 544- கீழ்க்குறிப்புக்கள்.

† மன்மதனையும் அழகில் வென்றார் முருகவேள் - 'வேளையும் வென்று மேவிய பெருமாளே'- பாடல் 1227-பக்கம் 544 குறிப்பு

‡ நற்றிசையும் = நாற்றிசையும்.

X சமணை வேரறுத்து திருநீறு பரப்பினது. பாடல் 841- பக்கம் 466-குறிப்பு

○ சிவனுக்கு உபதேசித்தது. பாடல் 327-பக்கம் 314 குறிப்பு

**சக்ரதரன் - திருமால் எனக்கொள்ளாது - திருமாலின் சக்கரத்தைத் தரித்திருந்த தாரகாசுரன் எனக் கொள்ளலாம். தாரகனுக்கும் திருமாலுக்கும் நடந்தபோரில் திருமால் சக்கரத்தைவிட அது தாரகனது மார்பில் ஆரமாகப் பொருந்தி விளங்கிற்று.

"மாலும் ஆழியம் படையை உய்த்தான்..
நேமிதானும் புராரிதன் வரத்தால்....
தாரக அசுரன் கண்டந் தன்னை வந்தணுகிச் செம்பொன்
ஆரம தாயிற் றம்மா! தவத்தினும் ஆக்கம் உண்டோ!"

- கந்த புரா -2-12-92,93.

(தொ.பக். 599)

## 1256.

நற்குணம் உள்ளவர்களைப் போல, (மை) கரிய (குழலிலே) கூந்தலிலே - அழகு விளங்கும்படி, நல்ல நறுமணங்கள் முதலிய நெருங்கி நிறைந்த மலர்களை முடித்துக் கொண்டு -

விஷக் கண்ணால் (ஆடவர்களை) மயக்குவித்து, அவர்களுக்கு மகிழ்ச்சி தரக்கூடியபல பேச்சுக்களைப்பேசிக் கொண்டிருந்து விலை உயர்ந்த பொருளைப்பெற (அவாம் அவாவும்) ஆசைப்படும் மனத்தராம் பொது மகளிரின் வசத்தில் அகப்பட்டு - (அவர்களின்)

மலைபோன்ற அழகிய கொங்கையைப் (பொற்புற) அழகு பெற உறா - (உற்று) அடைந்து அணைத்து, மிகவும் மோகம் கொண்டவனாய் நாள்தோறும் மெலிந்து நிற்காமல் -

வெட்சிமலர், மணம் வீசும் கடப்ப மலர் இவைகளைக் கொண்டதும், ஜெயத்தையே தருகின்றதுமான சிறிய திருவடித் தாமரையைக் கொண்டவனே! உண்மையான உனது (கிருபை) திருவருளை நீ எனக்குப் பாலிக்கும் ஒப்பற்ற நாள் உண்டோ! அத்தகைய நாள் எனக்குக் கிடைக்குமா!

ரத்தினம் கொண்ட படங்களை உடைய காளிங்கன் என்னும் பாம்பின் மீது நடனம் செய்தவனான (கண்ணபிரான்) திருமாலின் உண்மைக் குமாரனான மன்மதனும் விரும்பும்படியான மிகுந்த லக்ஷணத்தைக் கொண்ட குமார சுவாமியாம் சுப்பிரமணியனே!

நான்கு திசைகளிலும் பரவியிருந்த பொய்யராம் சமணரை வேருடன் அறுத் தெறிந்து சிறந்த மேன்மை பொருந்திய திருநீற்றையே பரப்பி விளையாடின

நல்லனே! குமார! செல்வப் பொருள், அற்புத மூர்த்தி, 'சிவாய' என்னும் முத்தி பஞ்சாக்ஷரத்தின் மூலப் பொருள் - ஆகிய சிவனுக்கு ஒப்பற்ற சற்குரு மூர்த்தியே! விநோதமான அழகிய மயில் வீரனே!

(திருமாலின்) சக்ரத்தை தரித்திருந்த தாரகாசுரனது மார்பிடத்தில் உக்ரத்துடனே நீ ஏந்தியுள்ள (சத்தி) வேல் கொண்டு அடையாளம் இட்ட பெருமாளே!

(மெய்க்கிருபை நீ அளிப்ப தொருநாளே)

---

அத்தகைய தாரகன் மார்பிற் சத்திவேல் பாய்ந்து அடையாளம் இட்டது சத்திவேல் மார்பைப் பிளந்தது என்க - "அவன் (தாரகன்) மார்பென்னும் வச்சிர வரையின் மீது... வேல்பட்ட தன்றே" -

"தாரகன் மார்பமென்னும் தடம்பெரு வரையைக் கீண்டு....
சோரியும் துகளும் ஆடித் துன்னென மீண்ட தன்றே"

- கந்தபுரா. I-20-184-185.

## 1257. ஒளிபெற

தானாந்த தானந் தாத்த தானாந்த தானந் தாத்த
தானாந்த தானந் தாத்த தனதான

நாகாங்க ரோமங் காட்டி வாரேந்து நாகங் காட்டி
நாமேந்து பாலங் காட்டி யபிராம-
நானாங்க ராகங் காட்டி *நாகேந்த்ர நீலங் காட்டி
நாயேன்ப்ர காசங் காட்டி மடலூர,
மேகாங்க கேசங் காட்டி †வாயாம்பல் வாசங் காட்டி
மீதூர்ந்த போகங் காட்டி யுயிரீர்வார்-
மேல்வீழ்ந்து தோயுந் தூர்த்தன் மோகாந்த காரந்
தீர்க்க
வேதாந்த தீபங் காட்டி யருள்வாயே
ஏகாந்த வீரம் போற்றி நீலாங்க யானம் போற்றி
யேடார்ந்த நீபம் போற்றி முகில்தாவி-
‡ஏறோங்க லேழுஞ் சாய்த்த நான்மூன்று
தோளும் போற்றி
X யார்வேண்டி னாலுங் கேட்ட பொருளீயும்.

---

* இந்த்ர நீலம் - கருங்குவளை. இந்திரம் - மேன்மையானது.
நாகம் - சுவர்க்கம். பொன்னுலகத்தும் சிறந்த நீலமலர்.
† 'ஆம்பலம் போதுகாட்டும் அணிதிகழ் பவளச் செவ்வாய்'
- நைடதம் - சூதாடு -1

‡ ஓங்கல் ஏழு சாய்த்தது. ஏழு கிரியை அட்டது
- பாடல் 257 பக்கம் 140 கீழ்க் குறிப்பு.

எழுகிரியை முருகவேள் அட்டது - பிறிதொரு வரலாறு:-

இறைவனது இடப்பாகம் பெறவேண்டித் தேவி காஞ்சியிலிருந்து திருவண்ணாமலைக்குப் போகும்வழியில் தேவி தங்குவதற்காக வாழை மரங்கள் கொண்டு குமரவேள் ஒரு பந்தல் போட்டு வைத்தார். தேவி குமரனை நோக்கி நீ உனது கை வேலை ஏவி சந்தியாவந்தனம்செய்ய நல்ல நீர் வரவழைப்பாயாக என்றனள் கந்தபிரான் செலுத்தின வேல் பாய்ந்து சென்று போதவான், புத்திராண்டன், புருகூதன், போதன், பாண்டரங்கன்,சோமன், வாமன் என்று சொல்லப்பட்ட ஏழு பேரையும் அவர்களிருந்த ஏழு மலையையும் வீட்டி - அழித்து நல்லதண்ணீர் நதியை அழைத்து வந்தது. அந்த நதியே சேயாறு! (சேய் வரவழைத்த ஆறு). ஏழு பேரின் வரலாறு:- அனந்தபாபுரம் என்ற ஊரில் ஏழு பிராமணர்கள் பலதீவினைகளைச்செய்து. பின்பு அவ்வினை தீரவேண்டிப் பிரமனைக் குறித்துத் தவஞ் செய்தனர் பிரமன் 'நீங்கள் ஏழு பேரும்' ஏழு மலைகளில் இருந்து தவஞ் செய்வீர்களானால் முருகவேள் சூலம் வேண்டி வேலை விடுவார். அது உங்களையும், உங்கள் பாவத்தையும், நீங்கள் இருக்கும்

## 1257.

(நாக அங்கம்) பாம்பு போன்ற அங்கமாகிய அல்குலின் மீதுள்ள ரோமத்தைக் காட்டி, வார் - ரவிக்கை அணிந்துள்ளதும் நாகம் மலைபோன்றதுமான கொங்கையைக் காட்டி, நாம் (நாமம்) ஏந்து - அச்சம் தரும் - அல்லது புகழத் தக்க - (பாலம்) நெற்றியைக் காட்டி, (அபிராம) அழகிய -

(நானாங்க ராகம்) நானா - பலவிதமான - அங்கராகம் உடம்பிற் பூசுதற்குரிய பரிமள திரவியங்களை அல்லது - பலவித ராகங்களைக் காட்டி, நாகேந்த்ர நீலம் - நாகம் - தேவருலகினின்று கொண்டு வரப்பட்ட இந்த்ர நீலமலர் - நீலோற்பல மலர்போன்றகண்களைக் காட்டி - நாயேன் - அடியேன் கொண்டுள்ள (ப்ரகாசம்) மோகத்தின் ஒளியை- (காட்டி) வெளிப்படுத்தி - மடல் (ஊர) ஏறும்படி -

மேக அங்க கேசம் காட்டி - கருமேக - (அங்கம்) உறுப்பாம் - கேசம் - கூந்தலைக் காட்டி, வாயாம்பல் - ஆம்பல் மலர் போன்ற வாயின் நறுமணங் காட்டி - மேலே படுத்தனுபவிக்கும்போக சுகத்தைக்காட்டி உயிரை அறுப்பவரான பொது மகளிரின்-

மேலே விழுந்து புணரும் காமுகனாகிய துட்டனாகிய என்னுடைய காம மயக்கம் என்னும் (அந்தகாரம்) இருளை ஒழிக்க நீ வேதத்தின் முடிவாகிய உண்மைப் பொருளைக் காட்டி அருள்புரிவாயாக.

தனிப்பட்ட - இணையிலாத - உனது வீரத்தைப் போற்றுகின்றேன்; நீலநிற அங்கத்தை (உடலினை) உடைய (யானம்) உனது விமானமாம் மயிலைப் போற்றுகின்றேன்; மலர் நிறைந்த கடப்பமாலையைப் போற்றுகின்றேன், மேகங்கள் தாவி

ஏறு ஓங்கல் ஏழும் - மேலேறிப்படியும் மலைகள் ஏழினையும் (சாய்த்த) தொலைத்த அழித்த உனது (4X3) பன்னிரு தோள்களையும் போற்றுகின்றேன்; யார் வேண்டிக் கொண்டாலும் (அவரவர்) கேட்ட (பொருளினை) பொருளை - வரத்தைத் தந்தருளும் உனது

---

மலைகளையும் பொடிபடுத்தும் என்று சொல்லிப்போனார்; இதுவே ஏழுகிரி பிளந்த வரலாறு.

"காதலால் இறைஞ்சிக் கந்தன் ஏவினான் கைவேல் அவ்வேல்
போதவான், புத்திராண்டன், புகழ்புருகூதன், போதன்,
வாதில் பாண்டரங்கன், சோமன், வாமனென்பவரை வாட்டி
மீதில் ஏழ்கிரியை வீட்டிக் கொணர்ந்தது வேலை நீத்தம்"
"எழுவரையும் அதிலிருக்கும் எழுவரையும் பிளந்தது நீ எறிந்த
கூர்வேல்" அருணா புரா - திருக்கன் 31, 35.

X 'வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்'

- அப்பர். 6-23-1.

த்யாகாங்க சீலம் போற்றி வாயோய்ந்தி டாதன்
நார்த்து
*தேசாங்க சூரன் தோற்க மயிலேறிச்-
†சேவேந்தி தேசம் பார்க்க வேலேந்தி மீனம் பூத்த
தேவேந்த்ர லோகங் காத்த பெருமாளே (267)

## 1258. இடர் ஒழிய

தனதன தனதனத் தனதன தனதனத்
தனதன தனதனத் தனதான

பரிமள மலரடுத் தகில்மண முழுகிமைப்
பரவிய ம்ருகமதக் குழல்மானார்-
பருமணி வயிரமுத் திலகிய குழையினிற்
படைபொரு வனவிழிக் கயலாலே;
எரியுறு மெழுகெனத் தனிமன மடையநெக்
கினிமையொ டுருகவிட் டவமேயான்-
இருவினை நலியமெய்த் திறலுட னறிவுகெட்
டிடர்படு வதுகெடுத் தருள்வாயே;
சொரிமத அருவிவிட் டொழுகிய புகர்முகத்
தொளைபடு கரமலைக் கிளையோனே-
துடியிடை யொருகுறக் குலமயில் புளகிதத்
துணைமுலை தழுவுபொற் புயவீரா
அரியன பலவிதத் தொடுதிமி லையுமுடுக்
கையுமொகு மொகுவெனச் சதகோடி-
‡அலகையு முடனடித் திடவடி யயிலெடுத்
தமர்செயு மறுமுகப் பெருமாளே (268)

---

* தேசாங்க = தசாங்கம்- நாமம், நாடு, ஊர், ஆறு, மலை, ஊர்தி, படை, முரசு, தார், கொடி - திருவாசகம். யானை, நாடு, ஊர், ஆறு, மலை, குதிரை தேர், முரசு, தார், கொடி (திவா. பிங்) மலை, ஆறு, நாடு, நகர், குதிரை, களிறு, மாலை, கொடி, முரசு, ஆணை (கந்தகலி) ஆணைக்குப் பதிலாகத்தானை அல்லது செங்கோல் என்பன போன்ற பத்து அரசியல் உறுப்புக்கள் 'வானேந்திடா அன்றார்த்த தீதார்ந்த சூரன்'. என்றும் பாடம்.
† சேவு = சேவல்

*1257-ஆம் பாட்டின் அடி 5,6, அடி 7-ல் சீலம் போற்றி! வரையில் முருகவேள் துதிக்கு உரிய பாகமாம்.*

‡ 'ஏழுவகை நிருத்தம் இடுவன அலகையே' (வகுப்பு)

த்யாகாங்க - கொடைப் பெருமை அலங்கார (சீலத்தை) குணத்தைப் போற்றுகின்றேன்; வாய் ஓயாமல் முன்னாளில் கூச்சலிட்டவனும், தசாங்கத்தை உடையவனுமான சூரன் தோற்றுப் போக, மயிலில் ஏறிச்

சேவு - சேவலைக் கொடியாக (ஏந்தி) பிடித்துத், தேசத்தோர் - நாட்டிலுள்ளோர் கண்டுகளிக்க, வேலாயுதத்தை ஏந்தி (மீனம் பூத்த) நக்ஷத்திரங்கள் விளங்கி நின்ற தேவேந்திர லோகத்தைக் காத்தளித்த பெருமாளே!

(வேதாந்த தீபங்காட்டி அருள்வாயே)

## 1258.

நறுமணமுள்ள மலர்கள் வைக்கப் பெற்றதாய், அகிலின் நறுமணத்தில் முழுகினதாய், (மை பரவிய) கருநிறம் பரந்துள்ளதாய்க் கஸ்தூரி அணிந்துள்ளதான கூந்தலை உடைய மாதர்களின் -

பருத்த ரத்னங்கள், வயிரம், முத்து இவை கொண்டு விளங்கும் குழையின் மீது (காதணியின் மீது) (படைபொருவன) போர்புரிவது [illegible] (நீண்டு பாயும்) கண் என்னும் கயல்மீனாலே - கயல் மீன் போன்ற கண்ணாலே -

நெருப்பிற்பட்ட மெழுகு - என்று சொல்லும்படி (தனி) துணை யற்றிருக்கும் எனது மனம் (அடைய நெக்கு) நன்று நெகிழ்ந்து, இனிமை யொடு - அந்தச் சிற்றின்பத்திலேயே உருகும் படி விட்டு, (அவமே யான்) வீணாக நான்

இருவினைகளும் என்னை வருத்த, எனக்குள்ள (உண்மை வலிமையுடன் புத்தியும் கெட்டு (இடர்படுவது) வேதனைப்படுவதை ஒழித்து அருள்புரிவாயாக.

சொரிகின்ற மதநீரை அருவி போல விட்டு ஒழுக்கெடுக்கும் புள்ளிகொண்ட முகத்தையும், தொளை கொண்ட துதிக்கையையும் உடைய (கரமலைக்கு) யானைக்கு (கணபதிக்கு) இளையவனே- தம்பியே!

துடிபோன்ற இடையை உடைய ஒப்பற்ற குறக்குலத்து மயில்போன்ற வள்ளியின் புளகாங்கிதம்கொண்ட இருகொங்கை-களையும் அணையும் அழகிய திருப் புயங்களை உடைய வீரனே!

அருமையான, பலவகைப்பட்ட (திமிலை வாத்தியங்கள்) - பறை வகைகளும், உடுக்கை வாத்தியமும் மொகு மொகு என்று ஒலிக்கச் - (சதகோடி) நூற்றுக்கோடி (கணக்கான)

(அலகையும்) பேய்களும் (அந்த வாத்தியங்களின் ஒலிக்குப் பொருந்தக்) கூடவே நடிக்க, (வடி அயில்) கூரிய வேலாயுதத்தை எடுத்துப் போர்புரிந்த ஆறுமுகப் பெருமாளே!

(இடர்படுவது கெடுத் தருள்வாயே)

## 1259. முத்தியுற

தத்தனத் தத்தனத் தத்தனத் தத்தனத்
தத்தனத் தத்தனத் தனதான

பற்றநெட் டைப்படைத் துட்டிருட் டைத்தயிர்ப்
பத்தைமுட் டிப்படுத் தயில்மாதர்.

பக்கமிட் டுப்பொருட் கொட் *குமிட் டப்பரப்
பற்றுகெட் டுப்பயிர்க் களைபோலுங்;

கற்றகட் டுக்கவிக் கொட்டமொட் டிக்கனைத்
திட்டுகத் தத்திலுற் றகமாயுங்.

கட்டமற் றுக்கழற் பற்றிமுத் திக்கருத்
தொக்க ‡நொக் குக்கணித் தருள்வாயே

வற்றவட் டக்கடற் கிட்டிவட் டித்துரத்
திட்டுமட் டுப்படப் பொருXமாயன்.

மற்றுமொப் புத்தரித் தெட்டாட் டப்புறத்
துற்றஅத் தர்க்கருட் பெருவாழ்வே;

---

*குமிட்ட = குமிட்டிக்க; திரட்ட † சத் தத்தி ஹூற்று = சத்தி.

‡ நொக்கு கணித்து =நோக்குக் குறித்து; கடாக்ஷித்து

X மாயன் எட்ட எட்ட எட்டாதவர் சிவபெருமான் - இது அடிமுடி தேடிய வரலாறு - பாடல் 319 பக்கம் 292; பாடல் 535 பக்கம் 222 கீழ்க் குறிப்பு.

# 1259.

பற்ற நெட்டைப் படைத்து - நெட்டை - செருக்கை, பற்ற படைத்து - பற்றும்படியாகக் கொண்டு - (செருக்குடன்), உட்டிருட்டைத் தயிர்ப்பத்தை -உள் -து - இருள் - தைத்து - அயிர்ப்பு - அ (த்) தை - உள் -மனம், து - உண்ட - உட்கொண்டுள்ள, இருள் அஞ்ஞானம், தைத்து -நன்கு பற்றி, அயிர்ப்பு அதை - சந்தேகக் கவலைகளை, முட்டிப்படுத்து - முட்டியுத்தத்தில் தாக்குவது போலத் தாக்கும்படி செய்கின்ற, அயில் - வேல்போலும் கண்களை உடைய (பொது) மாதர்கள் மீது - (அல்லது - நெட்டை செருக்கையும், உள் திருட்டை - உள்ளே திருட்டு எண்ணங்களையும், பற்ற படைத்து - பற்றும்படி கொண்டு, தயிர்ப்பத்தை - தயிர்ப்ப (து) த்தை - தயிர்ச் சோற்றை - முட்டிப் படுத்து -உண்டை உண்டையாக, அயில் - உண்கின்ற, (பொது) மாதர் மீது -

பக்கம் இட்டு - நட்புவைத்து (அவர்களுக்குப்) பொருள்கொள் குமிட்ட - பொருள் கொண்டுவந்து (சேர்த்துத்) திரட்ட பரம் - பற்று கெட்டு - பரம் பொருளின்மேல் இருக்கவேண்டிய ஆசையே இல்லாதுபோய் (அல்லது பரப்பு அற்று - பொருள் திரட்டவேண்டும் என்ற பேராசை நீங்கி) பயிரிலே களைந்து எறிய வேண்டிய பூடுகளைப் போன்றதும் -

(கற்ற) தான் கற்றுள்ளதும் (கட்டு) தான் கட்டியுள்ளதுமான, கவி பாடல்களைக், கொட்டம் ஒட்டி - முழக்கத்துடன் இணைத்துக், களைத்திட்டு - ஒரு களைப்பு களைத்து, கத்தத்தினும்று - கத்தி, அகம் மாயும் - உள்ளம் சோர்ந்து குலைகின்ற

கட்டம் அற்று - கஷ்டம் நீங்கிக், கழல் பற்றி - உனது திருவடியைச் சிக்கெனப் பிடித்து, முத்திக் கருத்து ஒக்க - முத்திபெறவேண்டும் என்றுள்ள கருத்து ஒக்க - கருத்து பொருந்திக் கூடிட, நோக்குக் கணித்து - கடாக்ஷித்து - அருள்புரிவாயாக.

வற்ற வட்டக் கடல் - வட்ட வடிவுள்ள கடல் வற்றிப்போக, அணுகிச் சென்று, வட்டித் துரத்திட்டு (அங்குள்ள - அசுரர்கள்) சுழன்று உருண்டு ஓடும்படி துரத்தி (மட்டுப்பட) அவர்கள் சிறுமை அடையும்படி சண்டை செய்த திருமால் -

மற்றும் ஒப்புத் தரித்து - பின்னும், நமக்கு இணையான தோன்றாம் என மனதில் தரித்து - மனத்திற்கொண்டு, அல்லது ஒப்புத் தரித்து - (தமது) கவனத்தைச்செலுத்தி, எட்ட எட்ட - எட்டி எட்டிப் பார்த்தும் - பன்றி உருவுடன் பாதாளம் எலாம் சென்று சென்று பார்த்தும், புறத்து உற்ற தோன்டப்பட்ட அளவுக்கும் அப்பாலதாய்ப் போய்க் கொண்டிருந்த (திருவடிகளை உடைய) அத்தர்க்கு - தந்தையாம் சிவபிரானுக்கு உபதேசித்தருளின பெருஞ் செல்வமே!

செற்றமுற் றச்சினத் திட்டுநெட் டைப்பொருப்
பெட்டைமுட் டிச்செருச் செயும்வேலா-
சித்தர்சித் தத்துறப் பற்றிமெத் தப்புகழ்ச்
செப்பு*முத் தித்தமிழ்ப் பெருமானே (269)

## 1260. ஞானோபதேசம் பெற

தானன தான தாத்த. தானன தான தாத்த
தானன தான தாத்த தனதான

பாதக மான யாக்கை வாதுசெய் பாவி கோத்த
பாணமும் வாளு மேற்ற இருபார்வை-
பாரப டீர மாப்ப யோதர மாதர் வாய்த்த
பாயலின் மீதி ணாப்பி யிதமாடுந்
தோதக மாய வார்த்தை போதக மாக நோக்கு
தூய்மையில் நாயி னேற்கும் வினைதீரச்-
சூழுமு ணாதி நீத்த †யானொடு தானி லாச்சு
கோதய ஞான வார்த்தை யருள்வாயே
சாதன வேத நூற்பு ராதன பூண நாற்ப்ர
ஜாபதி யாண்மை தோற்க வரைசாடிச்-
சாகர சூர வேட்டை யாடிய வீர வேற்ப்ர
தாபம கீப போற்றி யெனநேமி

---

*முத்தித் தமிழ் - சம்பந்தர் தேவாரம் - "ஞானசம்பந்தன் .. தமிழ் பத்தும் வல்லார் எய்துவர் வீடெளிதே" 3-59-11

† "யான்தான் எனவறலே இன்பநிட்டை
என்றருணைக் கோன்தான் உரைத்த
மொழி கொள்ளாயோ" - தாயுமானவர் -உடல் பொய் 65
'யான் தான் எனுஞ்சொல் இரண்டுங் கெட்டாலன்றி
யாவருக்குந் தோன்றாது சத்தியம்" - கந்தர் அலங் 95

‡ 'பிரஜாபதி ஆண்மை தோற்க'... 'வேட்டை ஆடிய வீரவேல்'- விடவசனம் சிலபறையும் விரிஞ்சன் விலங்கது கால்பூண்டு தன் மேல் தீர்ந்தனன். . வேல்வாங்கவே" - வேல் வாங்கு வகுப்பு.

செற்றம் - வெறுப்பு, முற்ற - முதிர்ச்சி அடையச் (சினத்திட்டு) கோபித்து, நெட்டை - நீண்டிருந்த, பொருப்பு எட்டை - அஷ்டகிரிகளையும் (கிரிகளில் வாசம்) செய்திருந்த அசுரர்களை - முட்டி தாக்கிப் போர்புரிந்த வேலாயுதனே!

சித்த புருஷர்கள் தமது சித்தத்து - மனத்திலே உறப்பற்றி நிலைக்கும்படி, பற்றி - சிக்கெனப் பிடித்து, மெத்த - நிரம்பப் புகழ்ச் செப்பும் - உனது புகழைப் (செப்பு) பாடும் பெருமாளே! முத்தித் தமிழ் - முத்தியைத் தரவல்ல தமிழாம் - தேவாரத்தை அருளிய பெருமாளே - (அல்லது) முத்தியைத்தரவல்ல பெருமாளே! தமிழ் கடவுளாம் பெருமாளே!

(நோக்குக் கனித்து அருள்வாயே)

## 1260.

பாதகத்துக்கு - பாவத்தினால் ஏற்பட்ட (யாக்கை) உடலுடன் (வாது செய்) வேதனைப் போர் செய்கின்ற பாவியாகிய நான், கோத்த பாணம் - செலுத்தற்குத் தயாராயிருக்கும் பாணத்தையும் - அம்பையும் வாளையும் (ஏற்ற) போன்ற இரண்டு கண்களையும்,

பாரமானதும், (படீரம்) சந்தனம் பூசியுள்ளதுமான (மா) அழகிய பயோதரம் - கொங்கைகளையும் உடைய மாதர்களின் - வாய்த்த பாயலின் மீது - பொருந்தியுள்ள படுக்கையின் மேலிருந்து (அணாப்பி) ஏமாற்றி (இதம் ஆடும்) இனிமை காட்டும்

தோதகம் ஆய வார்த்தை அலலது - தோதகம் மாய வார்த்தை வஞ்சகமான பேச்சுக்களை அல்லது - வஞ்சகம் - பாசாங்கு கூடிய பேச்சுக்களைப் போதகம் ஆக - உபதேச மொழியாக (நோக்கும்) கருதும், தூய்மை இல் - பரிசுத்தம் இல்லாத (நாயினேற்கும்) அடியேனுக்கும் - என்னுடைய வினைகள் ஒழிய -

சூழும் - பொருந்திய அனாதி - தொடக்கம் இல்லாததாய், நீத்த பெருகுந்தன்மையதான - யான் - தான் - என்னும் இரண்டும் இல்லாததாய்ச் - சுக, ஆரம்பமான - சுகத்தைத் தோற்றுவிக்கும் ஞான வார்த்தையை உபதேசித்தருளுக.

சாதனவேதநூல் - வேதநூல்சாதன - வேதநூல்களிற் பயிற்சி யுள்ள, புராதன - பழமை யுடையவனும், பூணநூல் - பூணூல் அணிந்தவனும் ஆன பிரஜாபதி - பிரமதேவனுடைய (ஆண்மை தோற்க) தீரம் குலைய வைத்து - அகங்காரத்தை ஒடுக்கி - கிரவுஞ்ச மலையை (சாடி) துகைத்தழித்து -

சாகரம் - கடலில் இருந்த (மாமரமாய் நின்ற) - சூரனை வேட்டை ஆடிய - சாங்கரித்த வீர வேலை ஏந்திய (ப்ரதாப) கீர்த்திமானே! மகீப - அரசே! போற்றி - உன்னைத் துதிக்கின்றேன் - என்று சக்ரதரனாகிய

மாதவன் மாது பூத்த பாகர னேக நாட்ட
வாசவ னோதி மீட்க மறைநீப-
மாமலர் தூவி வாழ்த்த யானையை மாலை சூட்டி
வானவர் சேனை காத்த பெருமாளே (270)

## 1261. காம மயக்கு அற்று, உணர

தான தனந்தன தான தனந்தன
தான தனந்தன தனதான

பார நறுங்குழல் சோர நெகிழ்ந்துப
டீர தனம்புள கிதமாகப்-
பாவைய ருந்தியில் மூழ்கி நெடும்பரி
தாப முடன்பரி மளவாயின்,
ஆரமு துண்டணை மீதி லிருந்தநு
ராகம் விளைந்திட விளையாடி
ஆக நகம்பட ஆர முயங்கிய
ஆசை மறந்துனை யுணர்வேனோ;
*நாரத னன்றுச காய மொழிந்திட
நாயகி பைம்புன மதுதேடி-
நாண மழிந்துரு மாறிய வஞ்சக
நாடியெ பங்கய பதநோவ,
மார சரம்பட †மோக முடன்குற
வாணர் குறிஞ்சியின் மிசையேபோய்-
மாமுநி வன்புணர் மானுத வுந்தனி
மானை மணஞ்செய்த பெருமாளே (271)

---

* வள்ளிமலையில் வள்ளியின் அழகைக் கண்ட நாரதர் "என்னை ஆளுடை அறுமுகன் துணைவியாயிருப்ப, முன்னர் மாதவம்புரிந்தவர் இவரென" உணர்ந்துடனே தணிகை மலைக்குச் சென்று முருகனை வணங்கி - வள்ளியைக் கண்ட விவரத்தைக்கூறி, 'மோன நற்றவ முனிவன் தன் மகள் மானின் உற்றுளாள் வள்ளி வெற்பினில், கானவக் குலக்கன்னியாகியே, ஏனலைப் புரந்திதனில் மேவினாள்';'நினக்கு நேரழகுள்ளவளில் அவள், தனக்கு நேரழகுள்ளவர் தாமிலை' என்றெலாம் கூறி முருகவேள் வள்ளியை நாடிச் செல்லும்படி செய்தனர், முருகனும் அங்ஙனமே சென்று அவளிடம் வேட்கை புகன்றும் அகன்றும் வருந்தியும் வாழ்த்தியும் மாயைகள் செய்து 'முந்தை உணர்ச்சியை முற்றுற நல்கித், தந்தையுடன் தமர் தந்திட' அவளை மணஞ் செய்துகொண்டனர் - என்பது கந்தபுராண வரலாறு † 'வாரமுடன்' என்றும் பாடம்

மாதவன் - திருமாலும், மாது பூத்த பாகர் - தேவி விளங்கும் பாகத்தினராம் - சிவனும், (அனேக நாட்டம்) பலகண்களை உடைய வாசவன் - இந்திரனும், ஓதி - புகழ்ந்து, மீட்க - தம்மை ரக்ஷிக்க வேண்டி - மறை - வேதமொழி கொண்டும், நீபம் - கடம்பின்

மாமலர் - அழகிய மலர்களைத் தூவியும் (வாழ்த்த) உன்னை வாழ்த்த, (யானையை) தேவசேனையை (மாலை சூட்டி) திருமணஞ் செய்து, வானவர் - தேவர்களின் சேனையைக் காத்த - ரக்ஷித்த பெருமாளே!

(ஞான வார்த்தை அருள்வாயே)

## 1261.

பாரமானதும் நறுமணம் உள்ளதுமான குழல் - கூந்தல் சோர குலைய, நெகிழ்ச்சியுற்று - கட்டுத் தளர்ந்து - இளகி, பமர தனம் சந்தனம் அணிந்துள்ள கொங்கை புளகிதம் கொள்ளப் -

(பாவையர்) மாதர்களின் (உந்தியில்) உந்தித்தடத்தில் கொப்பூழில் - வயிற்றில் முழுகினவனாய், மிக்க (பரிதாபமுடன்) தாகத்துடன், பரிமள வாயின் - நறுமணமுள்ள வாயிதழில் உள்ள

ஆரமுது - நிறைந்த அமுதூறலை உண்டு - பருகி, அணைமீதிலிருந்து - படுக்கையில் இருந்து, அநுராகம் விளைந்திட - காமப்பற்று மிக உண்டாக - (விளையாடி) காமலீலைகளைச் செய்து-

ஆகம் நகம்பட - உடலில் நகக்குறிகள்பட, ஆர - மிகநன்றாக, முயங்கிய - தழுவின ஆசையை மறந்து, உன்னை உணர மாட்டேனோ - உன்னை உணரும் பாக்கியம் கிடைக்குமோ!

நாரதமுநிவர் அந்நாளில் (சகாயம் மொழிந்திட) திருவினும் மிக்க அழகி - வள்ளி சம்பந்தமான உதவி மொழிகளை எடுத்துக் கூற, அந்த நாயகி - வள்ளிநாயகி இருந்த, பைம்புனம் அது - பசிய தினைப்புனத்தைத் தேடி -தேடிச் சென்று-

நாணம் அழிந்து - கூச்சத்தையும் விட்டு, உரு மாறிய - உண்மை உருவம் மாறின (வேட உருவம் முதலிய எடுத்த) வஞ்சக - வஞ்சகனே (தந்திரக்காரனே)! அல்லது உருவம் மாறும்படியான வஞ்சகம் (தந்திர வழியை) நாடியே - விரும்பிப் பங்கயபதம் - தாமரை யன்ன திருவடிகள் நோவ

மன்மதனுடைய பாணங்கள் தைக்க, காம இச்சையுடன், குறவர்கள் வாழும் மலையின் மீது சென்று

மாமுநிவன் - சிறந்த சிவமுநிவர் புணர்ந்ததால் (மான்) இலக்குமிமான் (உதவும்) பெற்ற ஒப்பற்ற மான்போன்ற வள்ளியைத் திருமணஞ் செய்த பெருமாளே!

(ஆசைமறந்து உனை உணர்வேனோ)

## 1262. முருக என்றோத

தனதன தனதன தனதன தனதன
தானத் தனந்தம் தனதான

பிரமனும் விரகொடு பிணிவினை யிடர்கொடு
பேணிக் கரங்கொண் டிருகாலும்
பெறநிமிர் குடிலென வுறவுயிர் புகமதி
பேதித் தளந்தம் புவியூடே;
வரவிட வருமுட லெரியிடை புகுதரு
வாதைத் தரங்கம் பிறவாமுன்
மரகத மயில்மிசை வருமுரு கனுமென
வாழ்க்கைக் கோரன்புந் தருவாயே;
அருவரை தொளைபட அலைகடல் சுவறிட
ஆலிப் புடன்சென் றசுரேசர்
அணைவரு மடிவுற அமர்பொரு தழகுட
னாண்மைத் தனங்கொண் டெழும்வேலா;
*இருவினை யகலிட எழிலுமை யிடமுடை
யீசர்க் கிடுஞ்செந் தமிழ்வாயா
†இயல்பல கலைகொடு இசைமொழி பவரினும்
ஏழைக் கிரங்கும் பெருமாளே (272)

## 1263. யோகநிலை

தானன தானன தந்த தானன தானன தந்த
தானன தானன தந்த தனதான

பூதக லாதிகள் கொண்டு யோகமு மாக மகிழ்ந்து
பூசைகள் யாதுநி கழ்ந்து பிழைகோடி

---

*சம்பந்தப் பெருமானது செந்தமிழ் இருவினையை நீக்கும் என்பது:-
'ஞான சம்பந்தன் தமிழ் வல்லார்க் கடையா வினைகள்'
ஞான சம்பந்தன் சொல் பன்னவே வினை பாறுமே'
- சம்பந்தர் 2-61-11; 1-55-11.

† 1262-ஆம் பாடல் அடி எட்டுடன் பாடல் 422 அடி எட்டைக் கவனிக்க வும்.

## 1262.

(பிரமனும்) பிரமதேவனும், விரகொடு - சாமர்த்தியத்துடன், பிணிவினை - பிணிக்கப்பட்ட - இணைக்கப்பட்ட வினை, இடர் - துன்பங்களைக் கொண்டதாய், விருப்புடன், கரம் கொண்டு - (இரண்டு) கைகளுடன், இருகாலும் - இரண்டு கால்களும் -

பெற - பெறும்படியாக, நிமிர் உயர்த்தப்பட்ட - ஏற்படுத்தப்பட்ட குடில்என - குடிசைபோன்ற உடல் என்பதிற் பொருந்தும்படி உயிரானது புக, மதி பேதித்து - அறிவு என்பது அவ்வவ்வுயிர்க்குப் பேதப்படும்படி - வித்தியாசப்படும்படி - வேறுபாடாகும்படி அளந்து - கணக்கிட்டு அமைத்து, அம்புவியூடே - உலகிடையே -

வரவிட அனுப்ப (பிரமனும் அனுப்ப), வரும் உடல் - வந்து சேர்கின்ற இந்த உடலானது, எரியிடையே (இறுதியில்) புகுந்தழியும் (வாதை) துன்பம் என்கின்ற (தரங்கம்) அலை (பிறவாமுன்) தோன்றுவதற்கு முன்பாக -

மரகதமயில் மிசை - 'பச்சை மயில்மீது வருகின்ற முருகனே' என்று கூறி, வாழ்வதற்கு வேண்டிய ஓர் அன்பை - ஒப்பற்ற ஓர் அன்பைத் தந்தருளுக.

அரியமலையாகிய கிரவுஞ்சம் தொளைபட்டழிய, அலைவீசும் கடல் வற்றிப்போக, (ஆலிப்புடன்) ஆரவாரத்துடன் போய், அசுரத்தலைவர்கள்

யாவரும் இறந்துபடச் சண்டைசெய்து அழகுடனே ஆண்மைத்தனம் - வீரபராக்ரமம் விளங்க எழுந்த வேலாயுதனே!

அடியார்களுடைய இருவினையும் நீங்கும்படி (எழில்உமை) அழகிய உமாதேவியை - (இடம் உடை) தமது இடது பாகத்தில் கொண்டுள்ளவரான ஈசர்க்கு - சிவபிரானுக்கு (இடும் செந்தமிழ் வாயா) செந்தமிழ் இடும்வாயா! - திருநெறித்தமிழ் என்னும் தேவாரச் செந்தமிழை (இடும்) சமர்ப்பித்த (திரு) வாயனே!

இயற்றமிழ் முதலான பல கலைகளுடன் இசைத்தமிழ்ப் பாடல்களை - அல்லது இசைகளைப் - பாடுபவர்களைக் காட்டிலும் ஏழையாகிய அடியேனிடம் (அதிக) இரக்கம் காட்டும் பெருமாளே!

(வாழ்கைக்கு ஓரன்பும் தருவாயே)

## 1263.

பூத கலாதிகள் கொண்டு - மண், நீர், தீ, காற்று, விண் எனப்படும் ஐம்பூதங்களின் சம்பந்தமான (கலாதிகள்) சாத்திரங்கள் முதலானவைகளை ஆய்ந்தறிந்து, யோகவகை கூடி மகிழ்ந்து, பூசைகள் யாவற்றையும் செய்து, (பிழை கோடி) கோடிக்கணக்கான பிழைகள் -

போம்வழி யேதுதெ ரிந்து *ஆதிய நாதியி ரண்டு
பூரணி காரணி விந்து வெளியான,
நாதப ராபர மென்ற யோகியு லாசம றிந்து
†ஞானசு வாச முணர்ந்து வொளிகாண
நாடி ‡யொ ராயிரம் வந்த தாமரை மீதில மர்ந்த
நாயகர் பாதமி ரண்டு மடைவேனோ;
மாதுசர் வேஸ்வரி வஞ்சி காளிபி டாரி Xவிபஞ்சி
வாணிவ ராகிம டந்தை யபிராமி
வாழ்சிவ காம சவுந்த்ரி oயாலமெ லா**முக பஞ்ச
வாலைபு ராரி ††யி டந்த குமையாயி,
‡‡வேதபு ராணம்வி ளம்பி நீலமு ராரியர் தங்கை
மேலொடு கீழுல கங்கள் தருபேதை
வேடமெ லாமுக சங்க பாடலொ டாடல்ப யின்ற
வேணியர் நாயகி தந்த பெருமானே (273)

## 1264. அஞ்சலென

தனந்தா தனந்தா தனந்தா தனந்தா
தனந்தா தனந்த தனதான

பெருங்கா ரியம்போல் வருங்கே டுடம்பால்
ப்ரியங்கூர வந்து கருவூறிப்-
xxபிறந்தார் கிடந்தா ரிருந்தார் தவழ்ந்தார்
நடந்தார் தளர்ந்து பிணமானார்,

---

* ஆதி அநாதி யிரண்டு பூரணி:- 'ஆதி அநாதியும் ஆய பராசத்தி' -திருமந்திரம் 1120.

† ஞான சுவாசம் உணர்ந்து ஒளிகாண:- "ஞானத்தில் யோகமே நாதாந்த நல்லொளி"- திருமந்திரம் 1474

‡ ஆயிரம் வந்த தாமரை:- 'நாறுபத்திலுடனெட்டு இதழாகி' -திருப்புகழ் 439, 790 "சஹஸ்ர பத்ர கமலே வ்யாப்தாகஷரை மண்டிதை இஷ்டி"- காமிகாகமம்.

X விபஞ்சி - வீணை.

O ஆல மெலாம் = ஆலம் மேலாம்; அதாவது. பிரளய கால வெள்ளத்தின் மேலாகிய. ** முகபஞ்ச = பஞ்ச முக 'பஞ்ச வக்த்ராயை நம" பஞ்சப் ப்ரம்ம சொரூபிண்யை நம - லலிதா சஹஸ்ர நாமம் 515, 250. ஈசானாய அம்பிகா, தத்புருஷாய கணாம்பிகா, அகோராய கங்கா, வாமதேவாய கௌரி, சத்யோஜாத துர்க்கா -என்ப. 'அஞ்சுமுக நீலி'- திருப் 859 (தொ.ப. 613)

நீங்கும்படியான வழி, இன்னதென்று காரணம் உணர்ந்து, முதலும் ( அனாதியும்) முதலற்றதுமாய் - ஆக இரண்டுமாய் நிற்கின்ற பூரணி - முழுமுதல்வி, காரணி - சகலத்துக்கும் காரண பூதமாயிருப்பவளாகிய பராசத்தியும், விந்து வெளியான நாத(ம்)

(வெளியான விந்து நாதம்) தோன்றி முழங்கின விந்து நாதமும் விந்து சம்பந்தமான நாத ஒலிகூடி முழங்கும் இடத்தில் (பராபரம்) பரம்பொருளுமாகக் காட்சிதர, யோகிகள் காணும் அந்த (உல்லாசம்) பரமானந்த ஒளியை அறிந்து அனுபவித்து, ஞானசுவாசம் உணர்ந்து - ஞான மூச்சினால் - ஞானயோக நிலையை அறிந்து, (ஒளிகாண) நாதாந்த நல்லொளி தோன்ற

அதைவிரும்பி ஒரு ஆயிரம் இதழோடுகூடிய குருசுமலத்தின் மீதுள்ள பெருமானது இரண்டு திருவடிகளை அடைவேனோ!

மாது, சர்வேசுரி, வஞ்சிக்கொடி போன்றவள் காளி, பிடாரி, விபஞ்சி (விபஞ்சி என்னும் வீணையை ஏந்தினவள்), வாணி, வராகி மாது, அபிராமி (அழகி),

வாழ்வு பொலியும் சிவகாம சௌந்தரி, ஆலமேலாம் முக பஞ்சவாலை - (ஆலம் மேலாம்) - பிரளய கால வெள்ளத்தின் மேலாகிய பஞ்சமுக வாலை - ஐந்துமுகம் கொண்ட பாலாம்பிகை, புராரி - திரிபுரத்தை எரித்த சிவனது (இடம் தகுமை) இடம் தகு உமை - இடது பாகத்துக்குத் தக்க உமாதேவி, (ஆயி) தாய் -

வேதங்களையும் புராணங்களையும் சொன்னவள், நீலநிற முள்ளவரும், முரன் என்னும் அசுரனுக்குப் பகைவருமாகிய திருமாலின் தங்கை, மேல் உலகங்கள் ஏழு, கீழ் உலகங்கள் ஏழு ஆக உலகங்கள் பதினான்கையும் தந்தபேதை - அளித்த மாது -

வேடமெலாம் - ஆடலுக்கு உரிய வேடங்கள் எல்லாம் நிலை கலங்கச் சங்கம் - சபையில் - பாடலும் ஆடலும் பயின்ற சடைப் பெருமானது தேவி - ஆகிய பார்வதி பெற்ற பெருமாளே!

(பாதம் இரண்டும் அடைவேனோ)

## 1264.

பெரிய காரியத்தைச் சாதிப்பதற்கு வந்ததுபோல வந்துள்ளதும், கேடு - அழிவுக்கு இடமானதுமான உடம்பிடத்தே பிரியப்படும்படி வந்து கருவில் ஊறிப்

பிறந்தார் என்றும், படுத்திருந்தார் என்றும், இருந்தார் என்றும், தவழ்ந்தார் என்றும், நடந்தார் என்றும், தளர்ந்து பிணமானார் (என்றும் கூறுதற்கு இடமானவுடல்)-

---

† † இடந்தகுமை - இடம் தகு உமை.

‡ ‡ 'சர்வ வேதாந்த சித்தாந்த சுதத்வாயை நமோநம' - லலிதா அஷ்டோத்ரம்

XX "நல்வாயில் செய்தார் நடந்தார் உடுத்தார் நரைத்தார் இறந்தார்"- சுந்தரர். 7-3-1.

அருங்கான் மருங்கே யெடுங்கோள் சுடுங்கோள்
அலங்கார நன்றி தெனு*மூழ்கி-
அகன்றா சையும்போய் விழும்பா முடம்பால்
அலந்தேனை யஞ்ச லெனவேனும்;
இருங்கா னகம்போ ,யிளங்கா ளைபின்போ
கவெங்கே மடந்தை யெனவேகி-
எழுந்தே †குரங்கா லிலங்கா புரந்தீ
யிடுங்கா வலன்றன் மருகோனே;
‡பொருங்கார் முகம்பா ணிகொண்டே யிறைஞ்சார்
புறஞ்சாய அம்பு தொடும்வேடர்-
புனங்கா வலங்கோ தைபங்கா வபங்கா
புகழ்ந்தோது மண்டர் பெருமானே (274)

## 1265. திருவடியைப் புகழ

தத்தத் தனத்தத்த தத்தத் தனத்தத்த
தத்தத் தனத்தத்த தனதான

மக்கட் பிறப்புக்கு ளொக்கப் பிறப்புற்ற
மட்டுற்ற சுற்றத்தர் மனையாளும்-
மத்யத் தலத்துற்று நித்தப் பிணக்கிட்டு
வைத்துப் பொருட்பற்று மிகநாட,
நிக்ரித் திடுத்துட்டன் மட்டித் துயிர்ப்பற்ற
நெட்டைக் கயிற்றிட்டு வளையாமுன்-
நெக்குக் குருப்பத்தி மிக்குக் கழற்செப்ப
×நிற்றத் துவச்சொற்க ளருள்வாயே;

---

*மூழ்கி அகன்றாசையும் போய் "நீரிற் படிந்துவிடு பாசத்தகன்று" திருப்புகழ் 162 பக்கம் 376 குறிப்பு.

† குரங்கால் இலங்காபுரம் தீயிட்டது - பாடல் 704 - அடி 5.6; பாடல் 883 பக்கம் 584 கீழ்க் குறிப்பு.

‡ வேடுவரின் கொடுமை - வில்லைக் காட்டி வெருட்டி வேடுவர் லிரவலாமை சொல்லிக் கல்லினாலெறிந்திட்டு மோதியும் கூறை கொள்ளும் இடம் 7-49-2.

× நில் - உறுதியாயிருத்தல் - "வீடு பெறநில்"- ஆத்திசூடி.

அரிய (கான்) மருங்கே - அரிய சுடுகாட்டின் பக்கம் எடுத்துச் செல்லுங்கள், அங்கே சுடுங்கள் - பிணக்கோலம் நன்றே அமைந்துள்ளது என்றெல்லாம் கூறி, சுடுகாட்டில் எரியிலிட்ட பின்பு (நீரில் முழுகி)

(அகன்று பிரிந்துபோய்) அசையும் போய் - இருந்த பாசமும் நீங்குமாறு விழுந்து பாழாகும் இவ்வுடலால்: உடல் காரணமாக (அலந்தேனை) மனக்கலக்கமும் துக்கமும் அடையும் என்னை (அஞ்சல்) பயப்படாதே என்று கூற (நீ) வரவேணும்;

(இருங்கானகம் போய்) பெரிய காட்டகத்தே சென்று, இளங்காளை - இளைய வீரனாம் தம்பி இலக்குமணன் - பின் போகப் பின் தொடர்ந்து வர, எங்கே (காணாதுபோன) மடந்தை மாது - சீதை என்று (ஏகி) தேடிச்சென்று

எழுந்தே - புறப்பட்டு, குரங்கால் - அநுமார் என்னும் குரங்கைக்கொண்டு இலங்கைப் பட்டணத்தில் (தீயிடுங் காவலன்) நெருப்பு வைத்த (காவலன்) அரசான இராமபிரானுடைய (திருமாலின்) மருகனே!

பொரும் - சண்டை செய்யும், (கார்முகம்) வில்லைப் (பாணி கொண்டே) கையிற் கொண்டவராய், இறைஞ்சார் - தம்மை வணங்காதவர்களுடைய (புறம் சாய) வீரம் அழியும்படி அம்பைச் செலுத்தும் வேடர்களுடைய

தினைப்புனத்தைக் காவல் இருந்த (அம்) அழகிய கோதை - பெண் - வள்ளி பங்கனே! (அபங்கா) குறைவு - நாசம் இல்லாதவனே! புகழ்ந்து ஓதுகின்ற தேவர் பெருமாளே!

(அஞ்சல் என வேணும்)

## 1265.

மக்களாக எடுத்த பிறப்பிலே (ஒக்கப் பிறப்பு உற்ற) கூடப் பிறந்துள்ள மட்டுற்ற - (சுற்றம் என்னும்) அளவில் உள்ள பந்துக்களும், மனையாளும்,

மத்யத் தலத்து உற்று - (எனது) வாழ்நாளின் இடையிலே வந்து சேர்ந்து, நித்தப் பிணக்கிட்டு - தினமும் மாறுபட்டுச் சண்டையிட்டு, வைத்த - சேகரித்துள்ள பொருளைப் பற்றுதற்கே மிகவும் நாடி நிற்க -

நிக்ரித்து இடும் துட்டன் - கொல்லவரும் துஷ்டனாம் எமன், (மட்டித்து) அழித்து - என் உயிரைப்பிடிக்க நீண்ட பாசக்கயிற்றை வீசி வளைப்பதற்கு முன்பாக -

(நெக்கு) உளம் நெகிழ்ந்து, குருபக்தி மிகுந்து, கழல் செப்ப உனது திருவடியைப்புகழ, (நிஜ தத்துவச் சொற்கள்) நிஜ உறுதியாயுள்ள (அல்லது) நின் - உனது) தத்துவச் சொற்கள் உண்மை அறிவுச் சொற்களை எனக்கு உதவி அருளுக!

திக்கப் புறத்துக்குள் *நிற்கப் புகழ்ப்பித்த
சித்ரத் தமிழ்க்கொற்ற முடையோனே-
சிப்பக் குடிற்கட்டு மற்பக் †குறத்திச்சொல்
தித்திப்பை யிச்சிக்கு மணவாளா;
முக்கட் சடைச்சித்த ருட்புக் கிருக்கைக்கு
முத்தித் துவக்குற்று மொழிவோனே-
முட்டச் சினத்திட்டு முற்பட் டிணர்க்கொக்கை
முட்டித் தொளைத்திட்ட பெருமாளே (275)

## 1266. திருவடியைப் பெற

தத்தனா தத்ததன தத்தனா தத்ததன
தத்தனா தத்ததன தனதான

மக்கள்தா யர்க்குமரு கர்க்குமா மர்க்குமனை
விக்கும்வாழ் நர்க்குமிக மனதூடே
மைத்தவே லைக்குநெடி துற்றமா யத்துயரம்
வைத்துவா டச்சமனு முறமேவித்,
திக்குநா டிக்கரிய மெய்க்கடா விற்றிருகி
திக்கஆ விக்களவு தெரியாமுன்-
‡சித்தமோ வித்துயிலு மற்றுவா ழச்சிறிது
சித்ரபா தக்கமல மருள்வாயே
X இக்குவே ளைக்கருக முக்கணா டிக்கனலை
யிட்டுயோ கத்தமரு மிறையோர்முன்-

---

* நிற்கப் புகழ்ப்பித்த - "சம்பந்தன் முடிவில் இன்தமிழ்"- 1-94-11

† "குறத்திச் சொல் தித்திப்பை இச்சிக்கும் மணவாளா"- "குறப்பெண் - தொண்டைவாய்த் தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவன்"- முத்துக்குமார - செங்கீரை -5.

‡ சித்தம் ஒவித்துயிலும் அற்று வாழ்தல் - "பரமானந்தத்தே தேங்கார் நினைப்பும் மறப்பும் அறார்... என்செய்வார் யம தூதருக்கே" - கந்தரலங் -55.

X மன்மதனை எரித்தது - பாடல் 399- பக்கம் 510.

மன்மதனை எரித்தபின் இறைவர் யோகத்து அமர்ந்தார் - "காமவேள் யாக்கை.. கன்னமதாகி... துஞ்சினன் போய பின்னை அண்ணலம் பகவன் தொல்லை அமைதியின் இருந்தான் எங்கோமான் விரதமோன மோடிருத்தலும் -" -கந்தபுரா -1.4 96; 1 5.1.

திக்கு அப்புறத்துக்குள் - நாலுதிசைகளின் புறங்களுள்ளும் நாற்றிசையிலும் (நிற்க) அழியாதிருக்க, புகழ்ப்பித்த (சிவனது) புகழைச் சம்பந்த மூர்த்தியாய் எடுத்துக் கூறின (சித்ரத் தமிழ்க் கொற்றம்) அழகிய தமிழ் பாடும் வீரத்தை உடையவனே!

(சிப்பம்) அற்பமான (குடில் கட்டு) குடிசை கட்டியுள்ள (அற்பக் குறத்தி) சிறுமைகொண்ட குறத்தி - வள்ளியின் சொல்லின் இனிப்பை விரும்பி ஆசைப்படும் மணவாளனே!

மூன்று கண்களையும், சடையையும் உடைய சித்தமூர்த்தியாம் சிவனுடைய (உட்புக்கிருக்கைக்கு) உள்ளத்தே நுழைந்து படிவதற்கு முத்தி நிலையை முதலிலிருந்து - ஆரம்பத்திலிருந்து (கடைவரை) உபதேசித்தவனே!

முட்டச் சினத்திட்டு - முழுக் கோபம் கொண்டு முன்னே இருந்த இணர் பூங்கொத்துக்களுடன் கூடின - கொக்கை - மாமரமாம் சூரனை, முட்டி - எதிர்த்துத் தாக்கித் தொளைத்திட்ட தொளைத்து அழித்த பெருமாளே! (தத்துவச் சொற்களருள்வாயே)

## 1266.

மக்கள் - பெற்ற மக்களுக்கும், தாயாருக்கும், (மருகர்க்கும்) சகோதரிகளின் மக்களுக்கும், மருமகப் பிள்ளைகளுக்கும் மாமன்மார்களுக்கும், மனைவிக்கும் உடன் வாழ்பவர்க்கும், மிகவும் மனத்திடத்தில் -

மைத்த - கருநிறம்கொண்ட, வேலைக்கு - கடலைக் காட்டிலும், நெடிது உற்ற - பெரிதாயுள்ள மாயத் துயரம் - மாயை சம்பந்தமாய் வரும் துன்பத்தை, வைத்து வாட - உண்டாக்கி, மனம் சோர்வு கூற, யமனும் வந்து சேர்ந்து -

திக்கு நாடி - இருக்கும் இடத்தைத் தேடி, கரிய - கருநிறமான, மெய் - உடலை உடைய, கடாவில் - எருமைக் கடாவின் மீது, திருகி - முறுக்குடன் வந்து, திக்க - என் சொற்களைக் குழற வைக்க (ஆவிக்கு அளவு தெரியா முன்) உயிர் உடலின் தங்கும் கால அளவு தெரிவதற்கு முன்பாக - (இறப்பதன் முன்)

சித்தும் - மனம், ஓவி - நீங்கி ஒடுக்கம் உற்று, துயிலும் அற்று கனாவும் நீங்கி, (சித்தும் ஓவி - துயிலும் அற்று) நனவு கனவு அற்று - (நினைப்பு - மறப்பு அற்று) நான் வாழ்வதற்கு - நீ சற்று உனது அழகிய திருவடித் தாமரையை அருளுவாயாக.

(இக்கு) கரும்பு வில்லைக்கொண்ட (வேளை) மன்மதனைக் கருக - கருகும்படி - தீந்து போம்படி, முக்கண் - மூன்றாவதாம் - நெற்றிக் கண் கொண்டு, நாடி - அந்த மன்மதனது செயலை ஆய்ந்து கனலையிட்டு அவன் மீது நெருப்பை ஏவிப் பின்னர் யோகத்து அமரும் - யோகத்தில் அமர்ந்த இறையவர் - சிவபெருமானது முன்னிலையில் -

*எச்சரா திக்குமுற நிற்குமா யற்குமுத
லெட்டொணா வித்தைதனை யினிதீவாய்;
பக்கஆர் வத்துடனுள் நெக்குநா டிப்பரவு
பத்தர் †பா டற்குருகு முருகோனே-
பக்கம்‡யா னைத்திருவொ டொக்கவா ழக்குறவர்
பச்சைமா னுக்கினிய பெருமாளே (276)

## 1267. அகப்பொருள் - நற்றாயிரங்கல் - மாலைபெற

தனனத் தனதன தனனத் தனதன
தனனத் தனதன தனதான

மதனிக் கதுகொடு Xபதுமப் புதுமலர்
மலையப் படவிடு வலியாலே-
வனமுற் றினவளை யினநித் திலமலை
வலையத் துகள்வளை கடலாலே;
விதனப் படுமதி வதனக் கொடியுற
வெருவிப் பரிமள அணைமீதே-
மெலியக் கலைதலை குலையத் o தகுமினி
விரையக் குரவலர் தரவேணும்;
புதனைச் சதுமுக விதியச் சுதனெதிர்
புனைவித் தவர்தொழு கழல்வீரா

---

* "சர்வம் விஷ்ணுமயம் ஜகத்"; 'அண்டபந்திகள் தாமாய் வாளாய் ஒன்றினும் கடை தோயாமாயோன்" - திருப்புகழ் 46.

"செகமும் அண்டமும் ஒருரு வாய்நிறை"
நெடிய அம்புயல் மேனியனார் அரி - திருப்புகழ் 856.

† பாடற்குஉருகும் முருகன் - 'முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழவைப்போன்' - கந்தரலங். 22

'பாட்டுக்கு உருகும் தமிழ்ச் சொக்கநாதர்' - மதுரைக் கலம்பகம் 80.

'செழீ இக் கேளிர்சுற்றம் நின்னை எழீஇப் பாடும் பாட்டமர்ந் தோயே' - பரிபாடல் 14.

‡ 'வாசவன் தருதிருவையொரு தெய்வானை'- திருப்புகழ் 219

X பதும மலர்ப்பாணம் - காமனது முதற்பாணம்
-பாடல் 19-பக்கம் 60 குறிப்பு

O தகும் = தகுமா? - 'தகுமோ இவளுண்மெலிவே' - சம்பந்தர். 2-18-1.
'தளைபட்டழியத் தகுமோ தகுமோ'- கந் -அநு -4

எச்சராதிக்கும் - இயங்குகின்ற உயிர்கள் முதலிய யாவற்றிலும் பொருந்தி நிற்பவரான (மாயற்கு) திருமால் முதலானவர்களுக்கு எட்ட ஒண்ணாத வித்தையை - ஞானப் பொருளை நன்கு (சுவாமி) உபதேசித்தவனே!

பக்கம் - உன்பால், ஆர்வத்துடன் - ஆசையுடன், அல்லது - பக்க ஆர்வத்துடன் - அன்புடனும் ஆசையுடனும், உள்ளம் நெகிழ்ந்து, நாடிப் பரவு - விரும்பிப் போற்றுகின்ற பக்தர்களின் பாடலுக்கு உருகுகின்ற முருகனே!

பக்கம் - உனது ஒரு பக்கத்தில் (இடது பக்கத்தில்) உள்ள தேவசேனையாம் இலக்குமியுடன் பொருந்தி வாழும் அந்தக் குறவரிடத்தே வளர்ந்த பச்சை நிறம் உள்ளவளும் மான் போன்றவளுமான வள்ளிக்கு இனிய பெருமாளே!

(சித்ர பாதக் கமலம் அருள்வாயே)

## 1267.

மதன் - மன்மதன், (இக்கு அது கொடு) கரும்பு வில்லைக் கொண்டு, பதுமப் புது மலர் - தாமரையின் புது மலர் அம்பை மலையப்படவிடு - என் மீதும் - பகைத்து மாறுபட்டு (விடு) ஏவும் வலிமையாலும் -

வனம் முற்றின - அழகு (அல்லது நீரில்) நிறைந்தவளை - சங்குகளின், இனம் நித்திலம் - கூட்டமான முத்துக்கள், அல்லது சங்குகளின் கூட்டமும், முத்துக்களும், அலை - அலைகளாகிய வலையத்து வலயத்து - வட்டச் சூழலிலே உகள் - சிதறி விழுகின்ற வளைந்துள்ள கடலாலும் -

விதனப்படும் - துக்கப்படும், மதி - நிலவுபோன்ற, வதனம் முகத்தை உடைய, கொடி - வஞ்சிக்கொடி போன்ற (என்) பெண், அறமிகவும் வெருவி - அச்சம் அடைந்து, நறுமணமுள்ள படுக்கையின் மேல் -

மெலிய - மெலிந்து போகவும், கலை - ஆடை, தலை குலைய மிகவும் குலைந்து போதல் தகுமோ - தக்கதா - நன்றா! இனி, விரைய - நறுமணம் உள்ள குர அலர் - குரா மாலையைத் தந்தருள வேண்டும் -

புதன் - புதனுடைய, ஐ - பிதாவாகிய * சந்திரனைச் சதுமுக விதி நான்கு முகங்களை உடைய பிரமன், அச்சுதன் - திருமால் இவர்களின் எதிரே புனைவித்தவர் - சூடிக்கொண்டவராகிய சிவன் தொழுகின்ற திருவடியை உடைய வீரனே!

---

*திங்களைச் சிவபிரான் சூடியது - பாடல் 415 பக்கம் 548 கீழ்க்குறிப்பு. புதன் ஐ - புதன் பிதா சந்திரன் - புதனுக்கு 'மதிமகன்' என்று ஒரு பெயர் உண்டு (பிங்கலம்) (மதிமகன் - சந்திரன் புதல்வன்)

பொருகைச் சரிவரி பெருகச் செறிவுறு
புனமெய்க் குறமகள் மணவாளா;
முதுநற் சரவண மதனிற் சததள
முளரிப் *பதிதனி லுறைவோனே-
முதுமைக் கடலட ரசுரப் படைகெட
முடுகிப் பொரவல பெருமாளே (277)

## 1268. சாரூபம் பெற

தனதன தனான தான தனதன தனான தான
தனதன தனான தான தனதான

மதிதனை யிலாத பாவி குருநெறி யிலாத கோபி
மனநிலை நிலாத பேயன் அவமாயை-
வகையது விடாத பேடி தவநிலை விலாத மோடி
†வரும்வகை யிதேது காய மெனநாடும்:
‡விதியிலி பொலாத லோபி Xசபைதனில் வராத
கோழை
வினையிகல் விடாத கூள னெனைநீயும்-
மிகுபர மதான ஞான நெறிதனை விசார மாக
மிகு Oமுன துருப தான மருள்வாயே;
எதிர்வரு முதார சூர னிருபிள வதாக வேலை
யியலொடு கடாவு தீர குமரேசா-

---

*பதி - உறைவிடம் 'நாளுக்கு உறை பதி'- திருக்குறள் 1015

† 'பிறப்பையும் நாடி அது வேரை அறுத்து' - திருப்புகழ் 293

‡ விதி - பாக்கியம் - 'முன்னம் நோற்ற விதிகொலோ' திருவாய்மொழி 6-5-7.

X 'கோழை பல அரிய நூல் ஓதி என்ன - உபகாரமில்லாத வம்பர் வாழ்வுக்கு நிகராம்' - குமரேச சதகம் 27. 'கொல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்தும் நல்லாரவையஞ்சுவார்' - குறள் 729

O இறைவனோடு இரண்டறக் கலக்கும் சாயுஜ்ய நிலையினும் அருணகிரியார்க்குச் 'சாரூபபதவியே' விருப்பம் போலும். அது பற்றியோ கிளி ரூபம் வாய்த்தது! சாரூபம் சன்மார்க்கத்தாற் கைகூடுவது. சன்மார்க்கத்தார் சிவயோக சித்தராய் யமனை வென்றிடுவர்.

"தங்கி யசாரூபந்தான் எட்டாம் யோகமாம் தங்குஞ் சன்மார்க்கந் தனிலன்றிக் கைகூடா." "சாற்றும் சன்மார்க்கமாந் தற்சிவ தத்துவத், தோற்றங்களான சுருதிச் சுடர்கண்டு, சீற்றம் ஒழிந்து சிவயோக சித்தராய்க், கூற்றத்தை வென்றார் குறிப்பறிந்தார்களே" - திருமந்திரம் 1510, 1477. (தொ. ப-621)

பொரு - பொருந்திய, கை - கையில், சரி - வளையல்களை, வரி ஒழுங்கு நிரை - அல்லது (நீளம்) பெருக - நிரம்ப - (வளையல்கள் கை நிறையச் (செறிவுறு) நெருங்கியுள்ள குறமகள், புனம் - தினைப்புனத்தில் இருந்த, மெய் - உண்மை நிறைந்த குறமகள் வள்ளியின் மணவாளனே!

பழைய நல்ல சரவணம் அதனில் - சரவணத்தில் - சததள முளரி நூற்றிதழ்த் தாமரையாகிய பதிதனில் - உறைவிடத்தில் வீற்றிருப்பவனே! (அல்லது - சரவணம் அதனில் - சரவணத்திலும், சததளம் - நூறு இதழ்களைக்கொண்ட முளரி (தாமரை)ப் பதி- னரிலும் - பொற்றாமரைப் பதியாகிய மதுரையிலும் உறைபவனே!

பழைய கடலிடத்தே நெருங்கியிருந்த அசுர சேனை கெட்டு அழிய விரைவிற் சென்று சண்டை செய்ய வல்ல பெருமாளே.

(குரவலர் தரவேணும்)

## 1268.

மதிதனை இலாத - அறிவு இல்லாத பாவி, குரு சொன்ன நெறியில் நிற்காத கோபி - சினமுள்ளவன், மனம் ஒரு நிலையில் நிற்காத பேயனையவன், பொல்லாத பயனற்ற மாயை, பொய்யான

போக்குகளை விடாத பேடி, ஆண்மை அற்றவன், தவம் என்னும் நினைப்பே இல்லாத (மோடி) (வகைக்) காளி அனையவன், (வரும் வகை இதேது காயம்) காயம் வரும்வகை இதேது - இந்த உடல் பிறப்பு வந்த வகை இது எப்படி - என்று ஆயும் -

விதி - பாக்கியம் இல்லாத பொல்லாத லோபி - குறையை உடையவன், சபைகளுக்கு வராத - சபைகளில் வந்து பேசும் மனத்திடம் இல்லாதவன், வினையின் வலிமையை விடாத - நீக்க மாட்டாத (கூளன்) பயனிலி - ஆகிய என்னை நீயும்

மிகு பரமதான - மிக சிரேஷ்டமான மேலான - ஞானமார்க்கத்தை விசாரமாக - ஆராய்ச்சி செய்ய, மிகும் - மிக்கு விளங்கும் உன்னுடைய ரூபதானம் - ரூப பரிசை - சாரூபம் என்னும் நன்கொடையை அடியேனுக்குத் தந்தருளுக.

எதிர்த்து வந்த (உதார சூரன்) மேம்பாடு உடைய சூரன் இரண்டு பிளவாகும்படி வேலாயுதத்தை (இயலொடு) தகுதியுடன் தக்க முறையில் செலுத்தின தீரனே! குமரேசனே!

---

"ஈறற்ற சொற் சுக சொரூபத்தையுற்றடைவேனோ"- திருப்புகழ் 425.

'உனை உணர்ந்தொரு மவுன பஞ்சரம் பயில்தருஞ் சுகபதம் அடைந்து அருள்பொருந்தும தொருநாளே -திருப்புகழ் 1151.

'இருவோர் ஒரு ரூபமதாய்.. இறையோனிடமாய் விளையாடுகவே இயல்வேலுடன்மா அருள்வாயே - திருப்புகழ் 563.

*இனியசொல் மறாத சீலர் கருவழி வராமல் நாளும்
இளமையது தானு மாக நினைவோனே;
நதியுட னராவு பூணு பரமர்குரு நாத னான
நடைபெறு கடூர மான மயில்வீரா-
நகைமுக விநோத ஞான குறமினுட னேகு லாவு
நவமணி யுலாவு மார்ப † பெருமானே (278)

## 1269. கும்பிட

தனந்தாத் தனந்தாத் தனந்தாத் தனந்தாத்
தனந்தாத் தனத்தம் தனதான

மலந்தோற் சலந்‡ தேற் றெலும்பாற் கலந்தீட்
டிடுங்கூட் டினிற்றங் கிடுXமாய-
மயங்காத் தியங்காப் oபயங்கோட் டிடுங்காற்
றுடன்போக் குறத்தந் தையுமாதும்;
குலந்**தாய்க் குடம்பாற் பிறந்தேற் றிடுங்கோத்
†† தடங்கூப் பிடத்தம் aபுவியாவும்-
குலைந் bதார்ப் பெழுங்காட் டிலந்தாட் களன்பாற்
குனங்காத் துணைக்கும் பிடலானாய்;
தலந்தாட் டொடண்டாத் தனைந்தார்க் கிளங்காத்
தடந்தாட் புடைத்தன் cபினர்வாழத்-

---

*இனிய சொல் மறாத சீலர்-
'யாவர்க்குமாம் பிறர்க்கின்னுரைதானே' - திருமந்திரம் -252.
'சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பந் தரும்'- திருக்குறள் 98.

† திருப்புகழ் 611-ஆம் பாடலிற்போல, இந்த 1268-ஆம் பாடல் முதல் நான்கடியில் தம் குறைகளை எடுத்துக்கூறி பாவி, கோபி, பேயன், பேடி, மோடி, விதியிலி, லோபி, கோழை, கூளன் - எனத் தம்மையே நொந்து சொல்கின்றார் ஆசிரியர்.

‡ தேற்று = தெற்று. Xமாயம் = மாய வாழ்க்கையில்

o பயம்கோட்டிடும்காற்று = பயனாகவளைக்கப்பட்ட பிராணவாயு.

** தாய்க்கு உடம்பால் பிறந்து ஏற்றிடும் கொத்து = தாயுடன் கூடப் பிறந்தவர்களின் வர்க்கம்.

†† அடம் கூப்பிட = கொடுமையாய்ப் புலம்ப. aபுவி - இடம்

b ஆர்ப்பு எழுங்காட்டில் = அழுகையோசை எழுமுன்.

c இறைவன் தாளுக்கு இளங்கா, தடம் உவமை கூறப்பட்டுள.
'இளவேனிலும் மூசுவண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே' - அப்பர் - 5-90-1

இனிமை வாய்ந்த சொற்கள் (மறாத) இல்லை என்னாத எப்போதும் இனிமை சொல் பேசும் (சீலர்) சுத்த ஆன்மாக்கள் பெரியோர்கள் - (கருவழி வராமல்) மீண்டும் பிறவாதபடியும், எப்போதும் இளமையுடன் விளங்கும்படியும் (நினைவோனே) நினைத்து அருள்பவனே!

(கங்கை) யாற்றுடன் (அராவு) பாம்பை அணியும் பரமேசுரனுக்குக் குருமூர்த்தியான மயில் வீரனே! நடையில் கடினம் (வேகம்) வாய்ந்ததான - வெகுவேக நடையை உடைய மயில்வீரனே!

சிரித்த முகத்தை உடையவளும், (விநோத) அழகிய அல்லது அற்புதகரமான ஞானத்தைக் கொண்டவளுமான குறமின் - வள்ளியுடனே குலவு - கொஞ்சுகின்ற பெருமாளே! நவரத்ன மாலை விளங்குகின்ற மார்பை உடைய பெருமாளே!

(உனது ரூபதானம் அருள்வாயே)

## 1269.

மலம் தோல் சலம் தெற்று எலும்பால் - மலம், தோல், ஜலம்' (தெற்று) செறிந்துள்ள எலும்பு இவைகள் கலந்து (கூட்டிடும்) கூட்டப்பட்ட (கூட்டினில்) கூடாகிய இந்த உடம்பில் தங்கியிருக்கும் (மாயம்) - மாய வாழ்க்கையில் -

மயங்கா - மயங்கியும், தியங்கா - தியங்கியும் சஞ்சலப்பட்டும், பயம் கோட்டிடும் காற்றுடன் - பயன்தர வளைக்கப்பட்ட பயன்தரப்புக வைக்கப்பட்ட, காற்றுடன் - பிராண வாயுவுடன் (உயிர்) போக்குற நீங்க - (உடலை விட்டு விலகத்) தந்தையும், மாதும் - மனைவியும் -

குலம் - தாய்க்கு - சிறந்த தாய்க்கு உடம்பால் பிறந்து ஏற்றிடும் கொத்து - தாயுடன் கூடப் பிறந்தவர்களாய் விளங்கும் வர்க்கத்தினர் - கூட்டத்தினர் (உறவினர்) அடம் கூப்பிட - கொடுமையாய் - மிகப் பலமாய்க் கூப்பிட - புலம்ப -அழ - தம் - தாம் வாழ்ந்த புவி யாவும் - இடத்தில் உள்ளார் யாவரும் -

குலைந்து - உள்ளம் சோர்வுற்று, ஆர்ப்பு எழும் காட்டில் - அழுகை ஓசை எழும் காட்டிலும் - ஓசை எழுமுன், அம் தாள்கள். உனது அழகிய திருவடிகளை - அன்பால் - அன்புடனே, குணம் காத்து - நற்குணக் காப்புடனே - நல்ல குணத்துடனே உன்னைக் கும்பிட்டு வணங்கும்படி என்னை ஆட்கொண்டருளுக.

தலம் தாள் - தாள் தலம் - திருவடியாகிய இடத்தைத் தொடு தொட்டு, அண்டா - அண்டி - நெருங்கித், தளைந்தார்க்கு கட்டினவர்களுக்கு - (உன் திருவடியை மனத்தில் நன்கு கட்டிப் பிடித்தவர்களுக்கு - அழுத்தமாகச் சிந்தித்துத் தியானிப்பவர்களுக்கு) அந்தத் திருவடி - இளங்கா - இளம்பூஞ்சோலை, தடம் குளிர்ந்த பொய்கை (ஆகும்) அத்தகைய தாள் - திருவடியைப் புடைத்த - ஆரவாரத்துடன் போற்றின - பக்தர்கள்வாழத் தரும்.

தருங்கூத் தரும்பார்த் துகந்தேத் திடஞ் *சூத்
திரஞ்சாற் றிநிற்கும் பெருவாழ்வே;
†அலைந்தாற் றெழுங்‡கோச் சலந்தீக் கலந்தாட்
டரம்போச் செனக்கன் றிடும்வேலா-
அறங்காத் துறங்காத் திறம்பார்த் திருந்தோர்க்
Xகயர்ந்தோர்க் களிக்கும் பெருமாளே (279)

## 1270. ஞானவீடு பெற

தனதான தான தந்த தனதான தான தந்த
தனதான தான தந்த தனதான

மனநூறு கோடி துன்ப நொடி மீதி லேநி னைந்து
மதனூட லேமு யங்கி யதிரூப-
மடமாத ராசை கொண்டு புவிமீதி லேம யங்கி
மதிசீரெ லாம ழிந்து கொடிதான;
வினைமூடி யேதி ரிந்து புவிமீதி லேயு ழன்று
விரகான்மெ யேத ளர்ந்து விடுநாளில்-
விசையான தோகை துங்க மயிலேறி யோடி வந்து
வெளிஞான வீடு தந்து அருள்வாயே;
O திணைவேடர் காவல் தங்கு மலைகாடெ லாமு ழன்று
**சிறுபேதை கால்ப ணிந்த குமரேசா-

*தந்தைக்கு உபதேசித்தது பாடல் 327. பக்கம் 314 கீழ்க்குறிப்பு

† இங்கே அமணர்கள் ஜலத்திலும் தீயிலும் இட்ட ஏடு அபஜயப் பட்டு ப் போனதைக் குறிப்பித்தது. பாடல் 181-பக்கம் 420 கீழ்க்குறிப்பு.

‡ கோ -சொல் (பிங்கலம்)

X அயர்தல் - வழிபடுதல் - பூசித்தல் 'விரைமலர் தூய் ..... பலி செய்து அயரா நிற்கும், - திருக்கோவையார் 348; அளிக்கும் - அருள் செய்யும் : "அஞ்சினர்க்கு அளித்தலும்" - சிறுபாணாற் -210 உரை.

O 'கனையோடருவித் துறையோடு பசுந்
தினையோடிதனோடு திரிந்தவனே'
'வெங்காடும் புனமும் கமழும் கழலே' கந்தர நு. 40, 44.

** வள்ளிபதம் பணியும் தணியா அதிமோக'- கந்தர நு -6.

வாழத்தரும் - வாழ்வுறும்படி உதவுகின்ற கூத்தரும் - கூத்தப் பிரானாம் சிவபிரானும், பார்த்து மகிழ்ந்து (ஏத்திட) போற்றி செய்ய, அம் - அழகிய சாத்திரம் - ஞான நூலைச், சாற்றி நிற்கும் - (அவருக்கு) உபதேசித்து நின்ற பெருஞ் செல்வமே!

அலைந்த - வெள்ளநீர் அசைந்து வந்த ஆற்றெழும் - வைகை ஆற்றில் எதிர்ந்து எழுந்து எதிரேறிவந்த கோ - (உனது) சொல் - (நீ எழுதிவிட்ட திருப்பாசுரத்தின் பெருமையைக் கண்டு) சலம் - நீரிலும், தீ - நெருப்பிலும் கலந்து - சபதத்திற் போட்டியிற் கலந்து, ஆள் தரம் போச்சு - நமது ஆண்மைத்தரம் - நமது ஆண்மைத்தரம் - நமது ஆண்மையும் மேன்மையும் போச்சு - தொலைந்தன என - என்று (சமணர்கள்) சொல்லும்படி, கன்றிடும் - கோபித்த வேலனே! (சம்பந்த மூர்த்தியே)!

அறம் காத்து - தருமநெறியைக் காப்பாற்றி அந்த நெறியில் உறங்காத் திறம் பார்த்து - உறங்காத - தூங்காத, சோர்வு உறாத வகையைக் கண்டு இருந்தோர்க்கு - இருந்த பெரியோர்களுக்கும் அயர்ந்தோர்க்கு - (உன்னைப்) பூசித்து வழிபடுவோர்க்கும் அளிக்கும் - வரங்கள் தருகின்ற - அல்லது அருள் செய்கின்ற பெருமாளே -

(உனைக் கும்பிட ஆளாய்)

## 1270.

மனத்திலே நூறு கோடிக் கணக்கான துன்பங்கள் ஒரு நொடிப் பொழுதிலே நினைந்து, மதன் ஊடலே - காமனது ஊடலே - கலவிப் பிணக்கத்திலே (முயங்கி) ஈடுபட்டு, மிக்க அழகுள்ள -

மடமாதர் - இளம்பருவத்துப் பெண்கள் மீது ஆசை பூண்டு, இப்பூமியிலே மயங்கி - மதி மயங்கி - மருண்டு, (மதிசீர் எல்லாம்) அறிவு, மதிப்பு, இவை எல்லாம் கெட்டுக் - கொடிய - கடுமையான-

வினை மூடித்திரிந்து இப் பூமியிலே (பல இடத்தும்) திரிந்து, விரகால் - தந்திர உபாயச் செயல்களின் பயனாக மெய்யே தளர்ந்து உடல் தளர்ந்து போய் விடுகின்ற அந்த நாளில் - அந்த இறுதி நாளில்-

வேகம் வாய்ந்த தோகையுடன் கூடிய (துங்க) பெருமை வாய்ந்த மயிலில் ஏறி, விரைவில் வந்து, பரவெளியாம் ஞான முத்தி வீட்டைத் தந்து அருளுவாயாக!

தினைப்புனத்தில் வேடர்களின் காவல் உள்ள மலைப்புறம், காட்டின் புறம் எல்லாம் திரிந்து, அங்கிருந்த சிறு பேதைப் பெண்-வள்ளியின் அடிகளிற் பணிந்த குமரேசனே!

திரையாழி சேது கண்டு பொருராவ ணோசை
வென்ற
திருமால்*மு ராரி தங்கை, யருள்பாலா;
முனிவோர்கள் தேவ ரும்பர் சிறையாக வேவ ளைந்த
முதுசூரர் தாணை தங்கள் கிளையோடு-
முடிகோடி தூளெ ழுந்து கழுகோடு பாற ருந்த
முனைவேலி னாலெ றிந்த பெருமாளே (280)

## 1271. பொது மாதர் மயக்கு அற

தானதன தனத்த தந்த தானதன தனத்த தந்த
தானதன தனத்த தந்த தனதான

மாதர்மயல் தனிற்கலந்து காம†பனி யெனப்புகுந்து
‡மாடவிய லெனச்சுழன்று கருவூறி-
மாறிXபல வெனச்சுமந்து தேனுகுட மெனத்திரண்டு
மாதமிது வெனத்தளர்ந்து வெளியாகி;

வேதபுவி தனிற்கழன்று ஏனமென வெனத்தவழ்ந்து
வீறுமணி களைப்புனைந்து நடைமேலாய்-
வேணவித மெனத்திரிந்து நாறுபுழு குடற்றிமிர்ந்து
வேசிவலை தனிற்கலந்து மடிவேனோ;

Oஆதிசர ணெனக்கயங்கு லாவமுத லையைக்கிடங்கி
லாரவுடல் தனைப்பிளந்த அரிநேமி-

---

*முராரி - திருப்புகழ் 522-பக்கம் 196 கீழ்க்குறிப்பு.

† 'பனியின் விந்துளி போலவே கருவினூறுமளவில்' திருப்புகழ் 241.

‡ மாட இயலென = உளுந்துபோல.

X 'பலகனியின் வயிறாகி'- திருப்புகழ் 241

O திருமால் முதலையை அட்ட வரலாறு - பாடல் 939 -பக்கம் 731 கீழ்க்குறிப்பு

அலைவீசும் கடலிலே (சேது கண்டு) அணை உண்டுபண்ணிச், சண்டைக்கு வந்த ராவணேசனை ஜெயித்த திருமால், முரன் என்னும் அசுரனைப் பகைத்துக் கொன்றவன் - ஆகிய விஷ்ணு மூர்த்தியின் தங்கை பார்வதி அருளிய குழந்தையே!

முனிவர்கள், தேவர்களாம் விண்ணுலகத்தவர் சிறையிற் படும்படி வளைத்துச் சிறையிட்ட பெரிய சூரர்களின் சேனைகள் அவர்களுடைய சுற்றத்தாருடன்

(தத்தும்) முடி - தலைகள், கோடி தூள் எழுந்து - கோடிக் கணக்கான பொடியாய் எழுந்து பறக்க, (அவர்கள் பிணத்தை) கழுகும் (பாறு) பருந்தும் (அருந்த) உண்ணும்படி (முனை வேலினால் ) போர் வேலினால் அல்லது வேல் முனையால் அழித்த பெருமாளே!

(ஞான வீடு தந்து அருள்வாயே)

# 1271.

பெண்களின் காம மயக்கத்திலே ஈடுபட்டுக், காமத்தால் ஏற்பட்ட பனி போன்ற ஒரு துளி உட்சென்று, மாட இயலென உளுந்து போலச் சூழ்ச்சியுற்றுக் கருப்பத்திலே ஊறி -

மாறி - உருவம் மாறுதல் உற்று - வளர்ந்து, பல எனச் சுமந்து பலாப் பழம்போல ஆனதைச் சுமந்து, தேனு குடம் என - பசுவின் பனிக்குடம் போலப் பருத்து, மாதம் இது - பேறு காலம் - பிரசவ காலம் இது (பெற வேண்டிய மாதம்) இது என - வந்தது என்று கூற, வயிறு தளர்ந்து குழந்தையாக வெளிப்பட்டு -

வேத புவிதனில் - வேதத்திற் சொல்லப்பட்ட இந்த பூமியில் விழுந்து பிறந்து) ஏனம் எனஎன - பாவம்பாவம் என்று சொல்லும் படி தவழ்ந்து - அல்லது பாத்திரம் (அல்லது பன்றிக்குட்டி) உருளுவதுபோலத் - தவழ்ந்து, ஒளிவீசும் மணிகளை (உடை மணி முதலியவற்றை) அணிந்துகொண்டு, நடைகள் மிகவும் ஏற்பட்டு வளர்ந்து பலவித நடைகள் ஏற்பட்டு -

வேண விதம் எனத் திரிந்து - மனம்போன போக்கின்படிப் பல வகையாகத் திரிந்து, நறுமணம் வீசும் (புழுகு) வாசனைப் பண்ட வகைகளை உடலிற் பூசி (வேசிகளின்) விலை மாதர்களின் வலையிலே பட்டு இறந்து படுவேனோ!

ஆதிசரண் - ஆதி மூலமே! சரணம் என - என்று, கயம் கஜேந்திரனாம் யானை, குலாவ - கொண்டாடிக் கூப்பிட (அதைப் பற்றி நின்ற) முதலையைக் (கிடங்கில்) - மடுவில் - ஆர - நன்றாக உடல் தனை - அந்த முதலையின் உடலைப் பிளந்த (அரிநேமி) நேமி அரி - சக்கரத்தை ஏந்திய அரி (திருமால்)-

*ஆமைகய லெனச்செயங்கொள் கோலகுற ளரித்தடங்கை
யான அர வணைச்†சயந்தன் மருகோனே;
‡சோதியுரு வெனத்திரண்டு கோலஅரு ளையிற்கலந்த
சோமனணி குடிற்Xசிலம்ப னருள்பாலா
தோகைமயி லெனச்சிறந்த ரூபிகுற மகட்கிரங்கி
தோள்களிறு கிடப்பு ணர்ந்த பெருமாளே (281)

## 1272. வாழ்வுற

தத்ததன தானனத் தத்ததன தானனத்
தத்ததன தானனத் தனதான

முத்துமணி யாரமொய்த் திட்டஇரு கோடுமுற்
பட்டகரி போலுமத் தனமாதர்.
முற்றுமதி யார்முகத் துற்றமுனை வேலுறப்
பட்டுமுகில் போல்மனத் திருள்மூடிச்;
சுத்தமதி போய்வினைத் துட்டனவ னாய்மனத்
துக்கமுற வேமிகச் சுழலாதே.
சொற்கள்பல நாவினிற் றொட்டுனிரு தாடொழச்
சொற்கமல வாழ்வுசற் றருள்வாயே;

---

*திருமால் எடுத்த அவதாரங்களுள் - கூர்மம், மீனம் வராகம், வாமனம், நரசிங்கம் என்னும் ஐந்து கூறப்பட்டுள்ளது.

(1) கூர்மம் - ஆமை - கடல் கடைந்த போது - பாடல் 509-பக். 162 கீழ்க்குறிப்பு மத்தாக இருந்த மந்தரமலை கடலில் அழுந்தப் பார்த்தது. அப்போது திருமால் ஆயிரம் கைகளை உடைய ஆமை வடிவு கொண்டு அந்த மலையைத் தன் முதுகில் தாங்கி மத்து கொண்டு கடைவதற்கு உதவினர்,

"அமரர் அமுதங்கடைந் தெடுப்ப வரை... தாழாது மாயோன்
வளர்கூன் புறத்து ஆமை யுருவில் தாங்கிக் கடல் மதித்து
வானோர்க்கு அமுதம் உதவினான்"- கூர்ம புராணம் - இந்த்ரத்துய்ம -
முத்தி - அத்தியாயம்.

" அருள் சுரந்து மாயவன்.. கமடமதாம் உருவெடுத்தான்
கொண்ட கூர்ம மெய் யிலக்கம் யோசனையிடங்கொண்டு
வெண்டிரைக் கடற் படிந்து வீழ் மந்திரம் எழுப்பித்
திண்டிறற் பெரு முதுகின் மேல் திகழுற நிறுத்தக்
கண்டு தேவரும் அசுரரு முன்புபோற் கடைந்தார்:
திருநெல்வேலிப் புராணம். கச்சபாலய. 13, 14.

(2) மனம் - மச்சாவதாரம் - பாடல் 245- பக்கம் 108 குறிப்பு
(3) வராகம் - பாடல் 503 -பக் 146 குறிப்பு. (தொ.ப. 629)

ஆமை - ஆமை, கயல் - மீன் என்றும், ஜெயம் கொள் - வெற்றி கொண்ட கோலம் - பன்றி, குறள் - வாமனர், தடங்கை அரியான - விசாலமான கைகள்கொண்ட நரசிங்கம், என்னும் அவதாரங்கள் எடுத்து - அரவணை - பாம்பணையிற் சயந்தன் - சயத்தன் சய(ன) த்தன் - பள்ளிகொண்டவன் - ஆகிய திருமாலின் மருகனே!

ஜோதி உருவத்துடன் பிழம்பாக அழகிய திருவண்ணாமலையில் (கலந்த) தோன்றி நின்றவனும், சோமன் - நிலவை - அணி - அணிந்துள்ளவனுமான குடிற் சிலம்பன் - சிலம்புக் குடிலன் மலையிடத்தினன் மலை உருவத்தன் - ஆகியசிவன் அருளிய குழந்தையே!

கலாபம் கொண்ட மயில்போல விளங்கும் உருவத்தினளாம் குறமகள் - வள்ளிக்கு இரங்கி - வள்ளியிடம் பேரன்புவைத்து. அவளுடைய தோள்களை அழுந்த அணைத்து அவளுடன் சேர்ந்த பெருமாளே! (வேசி வலைதனிற் கலந்து மடிவேனோ)

## 1272.

முத்தாலும் (மணியாலும்) ரத்னங்களாலும் ஆய ஆரம் - மாலைகள் நெருங்கியுள்ள இரண்டு (கோடும்) மலைகள் போலவும், எதிர்ப்பட்ட (அல்லது இரண்டு தந்தங்கள் முன் தோன்றும்) யானைகள் போலவும் உள்ள கொங்கைகளை உடைய மாதர்களுடைய

(முற்றுமதி) - பூரண சந்திரன் போன்ற முகத்தில் உள்ள போர் வேல் போன்ற கண்களால் தாக்கப்பட்டு, (a) கரிய மேகம் போல மனத்திலே அஞ்ஞான இருள் வந்து மூடி -

தெளிவான பரிசுத்த அறிவு போய், செயலில் துஷ்டத்தனம் உடையவனாய், மனத்தில் துக்கம் கொண்டு, மிகவும் சுழன்று கலக்கம் உறாமல் -

சொற்கள் பல (பலவகைய புகழ்ச் சொற்களை) நாக்கொண்டு (தொட்டு) தொடுத்து - பாடித் துதித்து உன்னுடைய இரண்டு திருவடிகளைத் தொழச், சொல் - புகழப்படும் - கமலம் தாமரையன்ன உனது திருவடியின் கீழ் வாழும் வாழ்வைச் சற்றுக் கொஞ்சம் தயை புரிந்து அருள்வாயாக,

---

(4) வாமனர் அவதாரம் பாடல் 268 -பக்கம் 166 கீழ்க்குறிப்பு.

(5) நரசிம்ம அவதாரம் - பாடல் 327-1-பக்கம் 317.

† சயனத்தன் - சயத்தன் எனக்குறுகிச், சயந்தன் எனச் சந்த நோக்கித் திரிந்தது ‡ஜோதி உருவாக அருணையில் திரண்டு நின்றது பாடல் 319-பக்கம் 292 Xசிலம்பன்:- ஜோதி மலையாக நின்றவன், "ஒரு *வரையாம் ஒருவரையாம் அகலாது கருத்துட் சேர்ப்பாம்" (* வரை - மலை) (அருணாசல புரா - பாயிரம்)

(a) (முகில் மூடு சுத்தமதி) மேகம் மூடும் பூரண நிலவு - அஞ்ஞான இருள் மூடும் நல்லறிவுக்கு ஓர் அழகிய உவமை.

கொத்துமுடி யானபத் தற்றுவிழ வேகுறிப்
புற்றஅதி கோபனச் சுதன்மாயன்-
கொற்றமரு காகுறக் கொச்சைமற மாதினுக்
கிச்சைமொழி கூறுநற் குமரேசா;
பத்தியுட னேநினைத் *தெத்துமடி யார்வினைப்
பற்றுவிடு மாமறைப் பொருளானாய்-
பத்திவர ஞானசொற் கற்றவர்கள் பாடுநற்
பசுபத தேவர்மெய்ப் பெருமாளே (282)

## 1273. அடியாரொடுகூட

தனதன தானத் தானன, தனதன தானத் தானன
தனதன தானத் தானன தனதான

முருகம யூரச் சேவக சரவண ஏனற் பூதரி
முகுளப யோதக் கோமள முலைமீதே-
முழுகிய காதற் காமுக பதிபசு பாசத் தீர்வினை
†முதியபு ராரிக் கோதிய குருவேயென்;
றுருகியு மாடிப் பாடியு மிருகழல் நாடிச் சூடியு
முணர்வினொ டூடிக் கூடியும் வழிபாடுற்-
றுலகினொ ராசைப் பாடற நிலைபெறு ஞானத் தாலினி
‡யுனதடி யாரைச் சேர்வது ×மொருநாளே

*எத்தும் - ஏத்தும்

† உபதேசித்தது .- (பதி, பசு, பாசத், தீர்வினை - ஓதினது)- சிவனுக்கு உபதேசித்தது - பாடல் 327-பக்கம் 314 குறிப்பு

"தத்துவம் கேட்டலும் தனக்குத்தான் நிகரிலான், தழுங்கி நின்றாடினான்"- தணிகைப்புரா - வீராட்ட - 118.

‡ அடியாரொடு கூடுதலின் இன்றியமையாமையைக் குறிக்கின்றது; இது ஒரு முக்கிய வேண்டுகோள்; "நமக்கு உண்டு கொலோ.. திருமூலட்டானன்.. அடித் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே"- அப்பர் 4-101-6.

× 1273 - பாடல் மனப்பாடம் செய்யத்தக்க பாடல், முதல் நான்கடிகள் மிக உயர்ந்த பத்தி நிலையன.

கொத்து முடியான பத்து - ராவணனது கொத்தாக இருந்த பத்து முடிகளும் - தலைகளும் அறுபட்டு விழவே குறிக்கொண்டு (அம்பு எய்த) மிக்க கோபங் கொண்டவனான (அச்சுதன்) விஷ்ணு, மாயன் - மாயவன் - ஆகிய திருமாலுடைய -

(மருகனே!) வீரம் வாய்ந்த மருகனே! குறக்குலத்து (கொச்சை-) இழிவான வேட்டுவப் பெண் வள்ளியிடம் காம இச்சை காட்டும் பேச்சுக்களைப் பேசின நல்ல குமரேசனே!

பத்தியுடனே (உன்னை) நினைந்து ஏத்தும் (போற்றும்) அடியார்களுடைய வினைப்பற்றைப் போக்கவல்ல சிறந்த வேதப் பொருளானவனே!

பத்தி, வர ஞானம் - சிரேஷ்டமான ஞானம் இவைகளைக் கொண்ட சொற்களைக் கற்றவர்கள் (அல்லது பத்தி வருதற்கு ஞான சொற் கற்றவர்கள்) பாடுகின்ற நல்ல (பசுபத) அன்புக்கு உரியவனே! உரிய திருவடிகளை உடையவனே! அல்லது அன்பு மொழிகளை உடையவனே! தேவர்களின் பெருமாளே! உண்மைப் பெருமாளே!

(வாழ்வு சற்றருள்வாயே)

## 1273.

"முருகனே! மயிலேறும் பராக்ரமசாலியே! சரவணபவனே! தினை விளைந்த (பூதரி) மலைப் பெண் வள்ளியின் அரும்புற்றதும், சந்தனம் அணிந்ததும், (கோமளம்) அழகுடையதுமான கொங்கையின் மேலே-

முழுகின ஆசைபூண்ட காமுகனே (காமம் கொண்டவனே!) (பதி) கடவுள், (பசு) உயிர் - (பாசம்) தளை, கட்டு இவைகளின் (தீர் வினை) தீர்ந்த - முடிவான கருத்தை - உட்பொருளைப் பழைய (புராரிக்கு) திரிபுரம் எரித்த - சிவனுக்கு - உபதேசித்த குருவே! என்று துதித்து -

மனம் உருகியும், ஆடியும், பாடியும், இரண்டு திருவடிகளை நாடியும், சூடியும், ஞான உணர்ச்சியுடன் பிணங்கியும் இணங்கியும் வழிபாடு செய்து -

உலகினருடைய - பிரபஞ்ச ஆசைப்பாடுகள் அற்றுப்போக, நிலையான ஞானத்துடனே இனி உன்னுடைய அடியார்களுடன் சேரும்படியான பாக்கியத்தை அடையும் ஒரு நாள் எனக்குக் கிடைக்குமா!

மருகனெ னாமற் சூழ்கொலை கருதிய மாமப் பாதகன்
வரவிடு மாயப் *பேய்முலை பருகாமேல்
வரு†மத யானைக் கோடவை திருகி‡வி
ளாவிற் காய்கனி
மதுகையில் வீழச் சாடிய Xசதமாபுட்
பொருதிரு கோரப் பாரிய Oமருதிடை போயப் போதொரு
**சகடுதை யா††மற் போர்செய்து விளையாடிப்-
‡‡பொதுவியர் சேரிக் கேவளர் புயல்மரு
காவஜ் ராயுத
புரமதில் மாபுத் தேளிர்கள் XX பெருமாளே (283)

---

*பேய்முலை உண்டது - பாடல் 115 பக்கம் 274 பாடல் 408 பக்கம் 534 கீழ்க்குறிப்பு. கண்ணபிரானுக்கு மாமனாகிய கம்ஸன் தன்னுடன் பிறந்த தேவகியின் பிள்ளை கிருஷ்ணன் தன்னைக் கொல்லப் பிறந்துள்ளான் என்பதை நாரதர் மூலமாக உணர்ந்து, கண்ணனைக் கொல்லப் பூதனை என்னும் ராக்ஷஸியை அனுப்பினான் அந்த அரக்கி குழந்தைகண்ணனை எடுத்து விஷம் தடவின தனது முலையைக் கொடுக்க, கண்ணன் பால் உண்கின்ற பாவனையில் அவள் உயிரை உறிஞ்சி அவளை மாள்வித்தனன்

† யானையின் தந்தங்களைத் திருகினது:-
பாடல் 882-பக்கம் 580, பாடல் 120 -பக்கம் 286 கீழ்க்குறிப்பு.

‡ விளா எறிந்தது:- கண்ணனைக் கொல்லக் கம்ஸன் அனுப்பின ஓரசுரன் (கபித்தாசுரன்) விளாமரமாய் வந்து நின்றான்; மற்றொரு அசுரன் (வத்ஸாசுரன்) கன்றின் உருவத்துடன் பசுத்திரளிற் கலந்து நின்றான்; இதைக் கண்ணபிரான் அறிந்து அந்தக் கன்றை எறி குணிலாகக் கொண்டு அவ்விளாமரத்தின்மேல் எறிய, இரண்டு அசுரர்களும் இறந்து பட்டனர். காசிக் கலம்பகம் - 62 (உரைக்குறிப்பு) - குமரகுரு பிரபந்தம் - 496- பார்க்க.

'கன்றின் உருவாகி, மேய் புலத்தே வந்த கள்ள அசுரன்தன்னைச்
சென்று பிடித்துச் சிறுக் கைகளாலே விளங்காய் எறிந்தாய்
போலும்'- பெரியாழ்வார் -3-3-7

"கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவன்"- சிலப் -17.

X புள்ளின் வாய்க் கீண்டது - பாடல் 987-பக். 856. கீழ்க்குறிப்பு(5) பார்க்க

O மருத மரங்களை முறித்தது - பாடல் 143 -பக்கம் 332 குறிப்பு
"பெருமா வுரலிற் பிணிப்புண் டிருந்து அங்
கிருமா மருதம் இறுத்த இப்பிள்ளை" - பெரியாழ் - 1-2-10

** "சகடு உதைத்தது"- பாடல் 111-பக்கம் 264 குறிப்பு.

"நாள்களோர் நாலைந்து திங்கள் அளவிலே
தாளை நிமிர்த்துச் சகடத்தைச் சாடிப்போய்
வாள்கொள் வளையெயிற் றாருயிர் வவ்வினான்"
-பெரிய திருமொழி. 1-2-11

(தொடர்-பக்- 633

மருகன் - சகோதரி தேவகியின் மகன் (எனாமல்) என்று கருதாமல், சூழ் கொலை கருதிய - சூழ்ச்சியுடன் அந்த மருகனைக் கொல்ல எண்ணின, மாமனாம் பாவியாகிய கம்சன் (வரவிடு) அனுப்பிவைத்த மாயத்தில் வல்ல, பேயின் கொங்கையை உண்டும் பின்னும்,

(கொல்ல) வந்த மதயானை யாகிய குவலயாபீடம் என்னும் யானையின் தந்தங்களைத் திருகிப் பறித்தும், விளாமரத்தின் காய்களும்கனிகளும் (மதுகையில்) தனது வன்மையால் விழும்படிச் சாடி - தாக்கியும், தன்னைத் தாக்கின - அ -அந்த சதம் - இறகுகளை உடைய மா - பெரிய, புள் - கொக்காகிய பறவையுடன் -

பொருது - சண்டை செய்து, (அதன் வாயைப் பிளந்தும்) இரு- இரண்டு, கோரம் - கொடுமை வாய்ந்த, பாரிய - பருத்த, மருதிடை - மருத மரங்களின், இடைபோய் - மத்தியில் போய் தவழ்ந்து சென்று (அம்மரங்களை முறித்தும்), அப்போது - அந்நிகழ்ச்சியுடன் ஒரு (சகடு) வண்டியை உதைத்தும், மல் போர் செய்து - மல்லர்களுடன் யுத்தம் செய்தும், இங்ஙனம் திருவிளையாடல்களைச் செய்து -

பொதுவியர் - இடையர்களின் சேரிக்கே - (இடையர்) சேரியிலே வளர்ந்த மேகவர்ணனாம் திருமாலின் மருகனே! வஜ்ராயுதபுரம் அதில் - குலிசாயுதம் ஏந்திய இந்திரனுடைய ஊராகிய பொன்னுலகில் இருக்கும் சிறந்த புத்தேளிர்கள் தேவர்களின் பெருமாளே!

(உனது அடியாரைச் சேர்வதும் ஒரு நாளே)

---

†† 'மற்போர் செய்தது ' (i) நிலவறையில் மல்லருடன் போர் - பாடல் 934-பக்கம் 720 கீழ்க்குறிப்பு X பார்க்க.

(ii) கம்ஸனால் வலிய அழைக்கப்பட்ட கண்ணனும் பலராமனும் அவனது சபையில் கம்ஸனால் ஏவப்பட்ட சாணூரன். முஷ்டிகன் முதலிய பெரு மல்லர்களால் மற்போரில் எதிர்க்கப்பட்டனர். அந்த மல்லர்களை மற்போரில் கண்ணனும் பலராமனும் மடிவித்தனர்

"இருமலைபோல் எதிர்ந்த மல்லர் இருவர் அங்கம் எரி செய்தார்"

"ஏவிற்றுச் செய்வான் ஏன்றெதிர்ந்து வந்த மல்வரை சாவத்தகர்த்த. சதுரன்" - பெரியாழ்வார். 2-2-8, 4-2-6

‡‡ இடையர் சேரியில் வளர்ந்தது - 'கோபாலர் சேரியில் மகவாயும்' - திருப்புகழ். 940 அடி 5

XX 1273 -ஆம் பாடலில் பின் நான்கு அடிகளில் கண்ணபிரானது லீலைகளில் ஏழு திருவிளையாடல்களை அருமையாக அமைத்துள்ளார் அருணகிரியார். இங்ஙனம் திருமாலின் பல லீலைகளை எடுத்துரைப்பதில் பெரியாழ்வார் போல அன்பு ததும்பின

(தொடர்ச்சி 634-ம் பக்கம் பார்க்க.)

## 1274. பலன்உற

தானா தனதன தானா தனதன
தானா தனதன தனதான

*மூலா நிலமதின் மேலே மனதுறு
மோகா டவி †சுடர் தனைநாடி-
மோனா நிலைதனை ‡நானா வகையிலு
மோதா நெறிமுறை முதல்கூறும்;
லீலா விதமுன தாலே கதிபெற
நேமா ரகசிய வுபதேசம்-
நீடு ழிதனிலை வாடா ×மணியொளி
நீதா பலமது தருவாயே

(633-ம் பக்கத் தொடர்ச்சி)

நெஞ்சத்தினராய் விளங்குகின்றார் நமது அருணகிரியார் (பாடல் 775, 987 - சீர்பாதவகுப்பு இறுதி அடிபார்க்க). இந்த அருமையைக் கண்டால் "அருணகிரியாரையும்" ஒரு ஆழ்வார் எனக்கூறி மகிழ்வார்கள் திருமால் அடியவர்கள்; இங்ஙனம் திருமாலின் பல லீலைகளைப் பெரியாழ்வாரும் கூறிக்கூறி மகிழ்வார் உதாரணமாக -

"வானவர் தாம் மகிழ வன்சக டம்முருள
வஞ்ச முலைப்பேயின் நஞ்சம துண்டவனே!
கானக வல் விளவின் காயுதிரக் கருதிக்
கன்றது கொண்டெறியும் கருநிற என்கன்றே!
தேனுக னும் முரனும் திண்டிறல் வெந் நரகன்
என்பவர் தாமடியச் செரு அதிரச் செல்லும்
ஆனை! எனக் கொருகால் ஆடுக செங்கீரை
ஆயர்கள் பேரேறே! ஆடுக ஆடுகவே"

- பெரியாழ்வார் திருமொழி 1-5-4

* மூலா நிலமதின் மேலே - சுடர் - "மூலங்கிளர் பிரகாசமதாய்" - திருப்புகழ் 190-பக்கம் 444, "நன்சுடர் - நடத்தி" - திருப்புகழ் 647 அடி 2

மூலா நிலம் இதைச் 'சதுரத்தரை' என்றார் 751ஆம் பாடலில்.

† சுடர்தனை நாடி - "சோதியுணர் கின்ற வாழ்வு" - பாடல் 444-பக்கம் 616-617 உரையைக் காண்க.

‡ நானா வகையிலும் ஒதா நெறிமுறை - "ஆகமத்தின் நூலாய ஞான முத்தி நாடோறு நானுரைத்த நெறியாக" - திருப்புகழ் 220.

(தொடர்-பக் -635

# 1274.

மூலா நில மதின் மேலே மனதுறு மோகாடாவி சுடர் தனை நாடி - மனதுறு மோகாடாவி மனத்திற் பொருந்தியுள்ள மோகாடவி - மோக அடவி - ஆசை என்கின்ற காடு - வேறு வழியிற் செல்லாது, மூலா நிலம் அதின் மேலே - மூலாதார நிலைக்கு மேலே உள்ள சுடர்தனை நாடி - ஜோதியை நாடி (மூலாதாரத்தில் உள்ள விநாயகர் முதல், மேலே சுவாதிஷ்டானம், மணி பூரகம், அனாகதம், விசுத்தி, ஆஞ்ஞை முதலிய ஆதாரங்களில் உள்ள பிரமா, விஷ்ணு, ருத்திரன், மகேசுரன் - சதாசிவம் ஆகிய மூர்த்திகளின் திருக்கோலங்கள் பிரசன்னமாகி நல்ல சுடர் தோற்றமுற - யோகவழியில் நாடி (அல்லது, மூலா - மூலப் பொருளே! நிலமதின் மேலே - இப் பூமியிலே) என் மனத்தில் உள்ள ஆசை என்கின்ற காடு (சுடர்தனைநாடி) ஜோதி ஒளியாகிய உன்னைநாடி

மோனாநிலைதனை - மௌனநிலையை, நானாவகையிலும் - பல வகையாலும், ஓதா - கற்று, நெறிமுறை முதல் கூறும் நன்னெறிமுறை வழி முதலானவற்றைக் கூறுகின்ற - காட்டுகின்ற -

லீலாவிதம் - உனது பலவகைய லீலைகளின் - திருவிளையாடல்களின் உண்மை நிலையை, உனதாலே - உன்னுடைய திருவருளாலே (கண்டு), (அல்லது உன்ன - ஆராய்ந்து கருத, அதாலே - அதன் பயனாக), நான் நற்கதியைப் பெற - பெறும்படியான (நேமாரகசியம்) நியமம் வாய்ந்த - ஒழுங்கான ரகசிய உபதேசத்தின். (பலமது தருவாயே)!

நீடூழி - நீண்ட ஊழிகாலத்தும் (எப்போதும்) தன்நிலை - தனது நிலை வாடாத - கெடாத மணி ஒளியே - சுயம் பிரகாச மணிச் சோதியே! நீதா - நீதனே - நீதிமானே! பலமது - பலனை - பயனைத் தந்தருளுக. (அல்லது - உபதேசமாம் - தன்நிலை நீடூழி வாடா மணி ஒளியை - தனது சுயம் பிரகாச ஒளி - நீண்ட ஊழி காலத்தும் வாடாத மணிச்சோதி ஒளியை - உபதேச ஒளியை - நீதனே! பலமது - பயன்தரத்தருவாயே - உபதேசித்தருளுக எனலுமாம்.

---

X மணியொளி - "மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்"

- கந்தரநுபூதி. 51

நாலா ருசியமு தாலே திருமறை
நாலா யதுசெப மணிமாலை-
நாடாய் *தவரிடர் கேடா வரிகரி
நாரா யணர்திரு மருகோனே;
சூலா திபர்சிவ ஞானார் †யமனுதை
காலார் தரவரு குருநாதா-
தோதீ திகுதிகு தீதீ செக‡செக
சோதீ நடமிடு பெருமாளே (284)

## 1275. திருவடியை மறவேன் என்றது

தனதனந் தனந்த தனதனந் தனந்த
தனதனந் தனந்த தனதான

வரிபரந் திரண்டு நயனமுஞ் சிவந்து
வதனமண் டலங்கள் குறுவேர்வாய்-
மணிசிலம் பலம்ப அளகமுங் குலைந்து
வசமழிந் திழிந்து மயல்கூர;
இருதனங் குலுங்க இடைதுவண் டனுங்க
இனியதொண் டையுண்டு மடவார்தோள்-
இதமுடன் புணர்ந்து ×மதிமயங் கினும்பொ
னிலகுநின் பதங்கள் மறவேனே;
விரிபரந் தியங்கு முததியுங் கலங்க
விடமினும் பிறந்த தெனவானோர்-
வெருவிநெஞ் சமஞ்சி யுரனொடுந் தயங்கி
விரைபதம் பணிந்து முறையோவென்;
றுரைமறந் துணங்க அயில்தொடும் ப்ரசண்ட
உயர்தலங் குலுங்க வருதோகை-
ஒருபெருஞ் சிகண்டி மயிலமர்ந் திலங்கி
உலகமும் புரந்த பெருமாளே (285)

---

* -"முருக! தவத்தைக் காப்பவர் தம்பிரானே" - என்றாராதலின் "தவர் இடர் கேடா" என்றார் - திருப்புகழ். 53

† யமனை உதைத்தது - பாடல் 399-பக்கம் 510 கீழ்க்குறிப்பு.

‡ ஜெகஜோதி - 'ஜோதியிற் ஜகஜோதீ' - திருப். 996-1 அடி -8

× மடவாருடன் மயங்கினும் மறவேன் என்கின்றார்; 833, 859, 893, 940, 948, 1010, 1054, 1099, 1197, 1276 -என்னுமுள்ள பாடல்களும் இக்கருத்தைக் கொண்டனவே.

நாலாருசி யமுதாலே - நாலாவிதுமான - பலவகையான இன்பச் சுவையமுதம் பருகிய உணர்ச்சியாலே அழகிய மறைகள் நான்கையும், ஜெபமணிமாலை கொண்டு

நாடாய் - நாடு ஆய் - நாடி ஆய்கின்ற, தவர் - தவசிரேஷ்டர்களின், இடர் - இடர்களை - துன்பங்களை - வருத்தங்களை - கேடா தொலைத்து அழிப்பவனே! ஹரிஹரி என ஓதப்படும் நாராயண மூர்த்தி, திரு - இலக்குமி - இவர்களின் மருகனே!

சூலாதிபர் - சூலாயுதம் ஏந்தினவர், சிவஞானர் - சிவஞானத்தினர், யமனை உதைத்த காலினர் - திருவடியினர் - தந்தருள வந்த குருமூர்த்தியே!

தோதீ திகுதிகு தீதீ ஜெகஜெக ஜோதீ - ஜோதி சொரூபனே! (துடி, குடை) நடனத்தைத் - தோதி திகு திகு தீதீ ஜெக என்று செய்யும் பெருமாளே! (பலமது தருவாயே)

# 1275.

ரேகைகள் பரந்துள்ள இரண்டு கண்களும் சிவந்து, வதன மண்டலங்கள் - முகமண்டலங்கள் - முகவட்டம் சிறுவேர்வைத் துளிகளைக் கொண்டதாய் -

ரத்னச் சிலம்பு ஒலிக்க, கூந்தலும் சரிந்துகலைய, தன்வசம் கெட்டு, இழிநிலையை அடைந்து காமப்பித்துமிக,

இரண்டு கொங்கைகளும் குலுங்கி அசைய, இடை துவட்சியுற்று (அனுங்க) வருந்த, இனிய (தொண்டை) வாயூறலை (உண்டு) பருகி, மாதர்களின் தோள்களை

இன்பச் சுவையுடன் அணைந்து சேர்ந்து, (மதிமயங்கினும்) என் புத்தி கெட்டுப் போனாலும், பொன் இலகு - தங்க மயமான உனது திருவடிகளை நான் மறவேன்;

விரிந்து பரந்து (இயங்கும்) அசைகின்ற (உததியும்) கடலும் கலக்கமுற, (ஆல கால) விஷந்தான் (இன்னும்) மீண்டும் பிறந்து விட்டதோ என்று தேவர்கள்

அச்சமுற்று உள்ளம் பயந்து (உரனொடும்) திண்மையும் - திடமும் தயங்கி - வாடிக்குலைந்து, உனது (விரைபதம்) நறுமணம் வீசும் திருவடி மலரைப் பணிந்து வணங்கி 'முறையோ' என்று ஓலமிட்டு

உரைமறந்து - இன்னது சொல்லுவது என்பதுகூட அறியாது மறந்து, (உணங்க) சிந்தைவாடி நிற்க, (அயில் தொடும்) வேலாயுதத்தைச் செலுத்தின (ப்ரசண்ட) வீரனே! சிறந்த பூமிகள் எல்லாம் குலுங்கி அசைய வந்த கலாபத்தை உடைய

ஒப்பற்ற பெரிய சிகண்டி என்னும் பேரை உடைய மயில் மேல் அமர்ந்து விளங்கி, உலகத்தைக் காத்தளிக்கும் பெருமாளே!

(நின் பதங்கள் மறவேனே)

## 1276. திருவடியை மறவேன் என்றது

தனதன தான தான, தனதன தான தான
தனதன தான தான தனதான

*வரிவிழி பூச லாட இருகுழை யூச லாட
வளர்முலை தானு மாட வளையாட-
மணிவட மாலை யாட முருகவி ழோதி யாட
மதுரமு தூறி வீழ அநுராகம்;
இருவரு மேக போக †மொருவர்த மாக மாக
இதமொடு கூடி மாயை படுபோதும்-
‡இருகர மாறு மாறு மறுமுக நீப மார்பு
மிருகழல் தானு நாளு மறவேனே;
திருநட மாடு காளி பயிரவி மோடி சூலி
X திரிபுர நீற தாக அனல்மோதுஞ்-
சிவைகயி லாச வாசி மலைமகள் நாரி பாரி
திருமுலை யாயி தாயி யருள்பாலா;
O குருபர நாத னாகி யரனொரு காதி லோது
குணநிதி யாசை நேச முருகோனே-
குறமக ளார பார முகிழ்முலை மீது தாது
குலவிய மாலை மேவு பெருமாளே (286)

## 1277. பிறவி நீங்கத் திருவடி த்யானம்

தனதனன தனதனன தனதனன தனதனன
தத்தத் தனந்தனம் தத்தத் தனந்தனம் தந்ததான

விழையுமனி தரையு **முநி வரையுமவ ருயிர் துணிய
வெட்டிப் பிளந்து ††ளம் பிட்டுப் பறிந்திடுஞ்
செங்கண்வேலும்-

---

* 'மருமலர் பாயல் மீது கலவி செய் மாதினோடு, மதியிலியேனு மாசை மிகவாகி, மதிமுகம் வேர்வையாட முருகவிழோதியாட' என்றும் பாடம். † ஒருவர் தம் ஆகமாக - 'இருவரெனும் அளவு காட்டரிய' - பாடல் 1200. பக்கம் - 490 குறிப்பு

‡ இருமை - பெருமை. தொல் - சொல் 396 - உரை "இணைகரம்" எனவும் பாடம்.

X திரிபுரம் எரித்தது தேவி - பாடல் 304 -பக்கம் 256-

O சிவபிராற்கு உபதேசித்தது - திருப். 327-பக் 314 குறிப்பு.

(தொடர் -பக்கம் - 639)

# 1276.

ரேகைகளைக் கொண்ட கண்கள் காமப் போரை விளைவிக்க, (காதில் உள்ள) இரண்டு குழைகளும் ஊஞ்சல் ஆடுவது போல ஆட, எழுந்தோங்கு கொங்கைகளும் ஆட, வளையல்கள் ஆட -

ரத்ன சரங்களாம் மாலைகள் ஆட, நறுமணம் வீசிக்கமழும் கூந்தல் ஆட (அலைய), மதுர அமுது ஊறி வீழ - இனிமையான அமுதம் ஊறுகின்ற (மொழிகள்) சிதறி வெளிவர, இங்ஙனம் காமப் பற்றுடன்

இருவரும் - ஆணும் பெண்ணுமாக இருவரும், ஏக போகத்தில் ஒன்றாய்க் கலத்தலில், ஒருவர்தம் ஆகம் ஆக, ஒருவர் உடலே என்னும்படி ஒருடலாக, இன்பசுகத்துடன் கூடிப் புணர்ந்து உலகமாயையில் (நான்) அகப்பட்டிருக்கும்போது கூட-

இருகரம் - பெருமை பொருந்திய (உனது) கரங்கள் ஆறும் ஆறும் (6 + 6) பன்னிரண்டையும், ஆறுமுகத்தையும், (நீபம்) கடம்பு அணிந்துள்ள மார்பையும், இரண்டு திருவடிகளையும் நான் மறக்க மாட்டேன்.

திருநடனம் ஆடுகின்ற காளி, பயிரவி, (மோடி) துர்க்கை (காடுகாள்), சூலம் ஏந்தினவள், திரிபுரத்தைப் பொடியாகும்படி நெருப்பை வீசித் தாக்கின

சிவாம்பிகை, கயிலாயத்தில் வசிப்பவள், மலைகுமாரி, நாரி, (பாரி) - பெரியவள் - அல்லது உலகமாதா, திருமுலை கொண்ட ஆத்தாள், தாய் ஆகிய தேவி பெற்றருளிய குழந்தையே!

குருபரமூர்த்தியாகி, சிவனது ஒப்பற்ற காதிலே உபதேசம் செய்த குணச்செல்வனே - (நற்குணம் நிறைந்தவனே)! அன்பும் நண்பும் கொண்ட முருகவேளே!

குறமகள் - வள்ளியின் ஆரம் - முத்துமாலை அணிந்துள்ளதும், பாரமானதும், வெளித் தோன்றுவதுமான கொங்கைகளின் மேலே (உனது) மகரந்தப்பொடி விளங்கும் மாலைகள் பொருந்தப் பெற்ற பெருமாளே! (அல்லது குறமகளின் முலைமீது உள்ள தாதுமாலையை (மேவு) விரும்புகின்ற பெருமாளே)

(இருகழல் தாளும் நாளும் மறவேனே)

# 1277.

தம்மீது ஆசைகொண்ட மனிதர்களையும், முநிவர்களையும், அவர் உயிரே அறுபடும்படி துண்டாக்கிப் பிளந்து, அவர்களுடைய உள்ளத்தையே பிட்டுப் பறித்துப் பிடுங்குகின்ற செவ்விய கண்களாம் வேலும் -

---

** முநிவரையும் வாட்டும் - 'முனிவரும் மனவலி கரையும்' - திருப் 921 -பக்கம் 682 குறிப்பு. †† உளம் பிட்டு - உள் அம்பு இட்டு - எனவும் பிரித்துப் பொருள் காண்பர்.

விரையளக முகிலுமிள நகையும்ருக மதகனவி
சித்ரத் தனங்களுந் தித்தித்த தொண்டையும்
புண்டரீகச்,
சுழிமடுவு மிடையுமழ கியமகளிர் தருகலவி
சுட்டித் திரிந்திஙன் தட்டுப் படுங்கொடும்
பங்கவாழ்வுந்-
தொலைவில்பிற வியுமகல வொருமவுன பரமசுக
சுத்தப் பெரும்பதஞ் சித்திக்க அன்புடன்
சிந்தியாதோ;
*எழுதரிய அறுமுகமு மணிநுதலும் வயிரமிடை
யிட்டுச் சமைந்தசெஞ் சுட்டிக் கலன்களுந்
துங்கநீள்பன்-

னிரு †கருணை விழிமலரு மிலகுபதி னிருகுழையும்
ரத்நக் குதம்பையும் பத்மக் கரங்களுஞ் செம்
‡ பொனூலும்,

மொழிபுகழு Xமுடைமணியு Oமரைவடமு மடியிணையு
முத்தச் சதங்கையுஞ் சித்ரச் சிகண்டியுஞ்
செங்கைவேலும்

---

* இந்த 1277-ஆம் பாடலின் பின் நான்கு அடிகள் பணப்பாடம் செய்யத்தக்கன முருகன் அழகை விளக்கும் அழகை உடையன எழுதரிய அறுமுகமும் - 'ஏவணச் சிலையினாரை யாவரே எழுதுவாரே' - அப்பர் -4-77-2.

'பழுதுறாத பாவாணர் எழுதொணாததோள்வீர'

- திருப்புகழ் 1051. பக்கம் 128

'இயலும் நடையும் வடிவும் அழகும் எழுத அரியன் வருகவே'

- முத்து பிள்ளை. வருகை -10.

† கருணை விழி - 'பொங்கும் அருட்கருணைவிழிக் கடையொழுக மலர்ந்த முகப் பொலிவினோடும்'- தணிகைப்புரா குமரேச 45.

'முந்நான்காகும் விழிகளின் அருளும்' - கந்தபுரா -1-20-126.

‡ 'மணி மீதே முநூலொளிர'- திருப்புகழ் 1143.

X உடைமணி - 'உடை மணி கட்டிச் சிறு தேர் உருட்டி'

திருக்கோவை. 385.

O 'முநிவர் தொழு மடியிணையும்' - என்றும் பாடம்.

(விரை) நறுமணம் கொண்டுள்ள (அளகமுகிலும்) கூந்தலாம் மேகமும் - கருமேகம் போன்ற கூந்தலும், இளநகையும் புன்சிரிப்பும், ம்ருகமத - கஸ்தூரி அணிந்த, கன - பெருத்த, விசித்திரமான அதிசயிக்கத்தக்க (தனங்களும்) கொங்கைகளும் - தித்திப்புச் சுவை கொண்ட (தொண்டையும்) வாயூறலும், (அல்லது இன்பகரமான குரலும்), தாமரையன்ன -

சுழிமடுவும் - குழிந்துள்ள கொப்பூழ்த்தடமும் - இடையும், (இவை யெலாம்) அழகு நிறைந்த மாதர்கள் தருகின்ற (கலவி) காமநுகர்ச்சியைச் (சுட்டி) குறித்து - வேண்டித் திரிந்து இங்ஙனம் (தட்டுப்படும்) தடைபடுகின்ற கொடிய (பங்கவாழ்வும்) இடர் நிறைந்த வாழ்க்கையும்

முடிவே இல்லாத பிறப்பும் (அகல) ஒழிய, ஒப்பற்ற மவுன பரமசுகமதாம் பரிசுத்தப் பெரிய (பதம்) நிலை அல்லது திருவடி, சித்திக்க - (எனக்குக்) கிடைக்குமாறு அன்புடனே உனது திருவுள்ளம் சிந்தியாதோ - நினைக்காதோ!

எழுத முடியாத ஆறுதிருமுகங்களும், அழகிய நெற்றியும், வயிரங்கள் இடையிட்டு - மத்தியில் வைக்கப்பெற்றுச் (சமைந்த) அமைந்துள்ள செவ்விய சுட்டி முதலிய கலன்களும் - ஆபரணங்களும், துங்க பரிசுத்தமான, நீண்ட (பன்னிரு)

பன்னிரண்டு கருணை விழிமலர்களும், (இலகு) ஒளிவீசுகின்ற பதினிரு (10 + 2) பன்னிரண்டு குழைகளும் - குண்டலங்களும், ரத்னத்தாலாய (குதம்பையும்) காதணியும், (பத்மக் கரங்களும்) தாமரையன்ன திருக்கரங்களும், செம்பொன்னாலாய பூணூலும் -

*சொல்லிப் புகழத்தக்க (உடைமணியும்), அரைவடமும் - அரையிற் கட்டியுள்ள அரை நாணும் அல்லது அரைச் சதங்கையும், திருவடியிணைகளும், முத்துக்களால் ஆயகிங்கிணியும், அழகிய மயிலும், செவ்விய திருக்கரத்தில் வேலாயுதமும் - இவ்வாறு

---

*மொழி புகழும் - உனது மொழியும். புகழும் அல்லது சொல்லப்படும் உனது புகழும் - அல்லது, (மறை) மொழியைப் புகழ்ந்ததுபோல ஒலிக்கும் உடை மணியும் - எனலுமாம் 'மறை. சதங்கை கொஞ்சும்' என்புழிப்போல (திருப்புகழ் 50)

*முழுதுமழ கியகுமர கிரிகுமரி யுடனுருகு
முக்கட் சிவன்பெறுஞ் சற்புத்ர வும்பர்தந்
தம்பிரானே (287)

## 1278. ஞானம்பெற

தானதன தாத்த தானதன தாத்த
தானதன தாத்த தனதான

வீணையிசை கோட்டி யாலமிட றூட்டு
வீரமுனை † மீட்டி விழியார்தம்

---

*முழுதும் அழகிய குமர: முருகவேளின் எந்த எந்த அழகினைக் கண்டு எந்த எந்த தேவர்கள், தேவதைகள் மகிழ்ந்தார்கள் என்பதைக் கீழ்க்காட்டும் கம்பை முருகன் பிள்ளைத் தமிழ்ப் பாட்டு விளக்குகின்றது:-

" கமலமட மங்கைவத னத்தழகு காண்பள், அக்
கரிய முகில் வண்ண னுஞ் செங்
கண்ணழகு காண்பள், வளர் கலைவாணி சொல்லழகு
காண்பள்; முக்கண் தாதையும்
விமல முறு சொற் பொருளின் அழகு காண்பன்; விதி
வியன் கரத் தழகு காண்பான்;
வீறு தோள் அழகிந்தி ராணி காண்பாள், உம்பர்
வேந்து வேல் அழகு காண்பான்;
நிமலமன அடியர் அடி அழகு காண்பார், கௌரி
நின்று பின் னழகு காண்பாள்;
நின்னொத்த ஆதித்தன் வடிவழகு காண்பன்; ஒரு
நீயுமவ ருடன் குழுமியே
அமல மென் னகையழகு காணலாம், சமயமீ
தம்புலீ யாட வாவே;
அம்புய தடங்குலவு கம்பைவளர் கந்தனுடன்
அம்புலீ யாட வாவே."

'முக அழகி' என்ற நம்முடைய முகத்தழகு இந்தக் குழந்தை முருகன் முகத்து அழகுக்கு முன் எந்த மூலை என்று முருகனது முகத்தழகையே இலக்குமி பார்த்து நிற்பாள்; நம்மைச் செந்தாமரைக் கண்ணன் என்று கூறி நமது கண்ணை வியப்பரே, நமது கண் அழகு இம் முருக வேளின் கண்ணழகுக்கு முன், எந்த மூலை என்று முருகன் கண்ணழகையே திருமால் கவனித்து நிற்பார். இந்தச் சகல கலாவல்லவனாம் முருகனது சொல்லழகுக்கு முன் 'சொல்லழகி' என்ற நமது சொல்லழகு எம்மாத்திரம் என்று முருகனுடைய சொல்லழகையே கலைமகள் கவனித்து நிற்பாள்.

முழுதும் (எல்லாம்) அழகுமயமாயுள்ள குமர மூர்த்தியே! கிரி - இமயமலையின் (குமரி) மகள் பார்வதி மாட்டு (உருகும்) மனம் நெகிழ்ந்த முக்கண் கொண்ட சிவபிரான் பெற்ற, நற்குணம் - நற்செய்கை உள்ள புத்திரனே! தேவர்களின் தம்பிரானே!

(பதம் சித்திக்க அன்புடன் சிந்தியாதோ)

## 1278.

வீணையில் இசையை வளைத்து - பிறப்பித்து (விஷத்தை (மிடறு) தொண்டையிற் செலுத்தும்) ஆலம் - விஷம், (இடறு ஊட்டு) தாக்குதலைச் செய்யும் வீரத்தையும், கூர்மையையும் கொண்ட ஈட்டிபோன்ற கண்களைக் கொண்ட மாதர்களின்,

---

சொற்பொருளாவான் என்ற நமக்கே உபதேசிக்க வல்ல குருமூர்த்தியாய் விளங்குகின்றானே. இவனது சொற்பொருளின் அழகே அழகென்று தந்தை சிவபிரான் முருகனது சொற்பொருளின் அழகை வியந்து காண்பார்; இந்த அழகிய திருக்கரத்தால் தானே நம்மை முருகன் குட்டினான், என்னே இவனது கைகளின் அழகு என்று படைப்புத் திறம் கொண்ட கை அழகு உள்ள பிரமன் அக் கையழகையே வியந்து காண்பான்: முருகவேளின் தோள் அழகைக்கண்டு - இந்தத் தோளின் பராக்ரமத்தாலன்றோ நாம் மங்கல நூல் வாங்காது தாலியுடன் வாழ்கின்றோம் என்று இந்திரன் மனைவி முருகனது தோள் அழகையே பார்ப்பாள், முருகன் கை வேலழகைப் பார்த்து இந்த வேல் தானே சூராதியரைக் கொன்று நமக்குப் பொன்னுலக வாழ்வைத் தந்தது என்று தேவேந்திரன் அந்த வேலின் அழகையே பார்த்து நிற்பான்- "உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்தாள்" என நக்கீரர் கூறினாரே - அத்தகைய பெருமை வாய்ந்த திருவடிதானே நமக்கு மோக்ஷ வீடு என உணர்ந்து அடியார்கள் முருகன் திருவடியையே கண்டு களிப்பார், முருகனுக்கு முன்னழகு போலவே பின்னழகும் உள்ளதே என்று மகிழ்ந்து, குழந்தை முருகன் தன்எதிரில் போகும் போது அக்குழந்தையின் பின் அழகையும் கண்டு பார்வதி உள்ளம் குளிர்ந்து அந்தப் பின்னழகையே கண்டு மகிழ்வாள், நமது ஒளி முருகனது பேரொளி முன் எந்த மூலை என்று சூரியன் அந்தப் பேரொளியையே கண்டு மகிழ்வான்; நிலவே! நீயும் வந்து இவர்களுடன் கூடினால் முருகனது புன்னகை - மந்த ஹாஸத்தின் ஒளி அழகைக் கூட்டத்துடன்கூட்டமாய் நின்று காணலாம். இந்தச் சமயத்தைக் கைவிடாதே; முருகனுடன் வந்து கலந்து ஆடுதற்கு வருவாயாக"- என்பது பொருள்

† கண்ணுக்கு ஈட்டி உவமை - "ஈட்டி வரி விழி தீட்டி"

- திருப்புகழ் 1198.

வேதனையில் நாட்ட மாகியிடர் பாட்டில்
 வீழுமயல் தீட்டி யுழலாதே;
ஆணியுள வீட்டை மேவியுள மாட்டை
 யாவலுட னீட்டி யழியாதே-
ஆவியுறை கூட்டில் ஞானமறை யூட்டி
 யானநிலை காட்டி யருள்வாயே;
கேணியுற வேட்ட ஞானநெறி வேட்டர்
 கேள்சுருதி *நாட்டி லுறைவோனே-
†கீதவிசை கூட்டி வேதமொழி சூட்டு
 கீரரியல் கேட்ட க்ருபைவேளே,
சேணினுயர் காட்டில் வாழுமற வாட்டி
 சீதவிரு கோட்டி லணைவோனே-
சீறவுணர் நாட்டி லாரவழல் மூட்டி
 ‡தேவர்சிறை மீட்ட பெருமாளே (288)

## 1279. ஞானவழி பெற

தானனா தத்ததன தானனா தத்ததன
 தானனா தத்ததன தனதான

வேலைவா ளைக்கொடிய ஆலகா லத்தைமதன்
 வீசுபா ணத்தைநிக ரெனலாகும்-
வேதைசா தித்தவிழி மாதரா பத்தில்வினை
 யாடிமோ கித்திரியும் வெகுரூப,

* நாடு - இடம், "சம நாட்டிடை யிடாமல்"- கம்பரா - இலங்கை கேள்வி 45.

† வேத மொழி - திருமுருகாற்றுப்படை. "அருமறைகள் கூட்டி உரை செய் தமிழ் பாட்டு" (திருப்புகழ் 1092): "எங்கள் கீரன்மொழியும் பசுந்தமிழெனும் சொல் வேத நிலை தெரியலாம்" - திருவிரிஞ்சை பிள்ளை - அம்புலி. கீத இசை கூட்டி - "பழுத்தமுது தமிழ்ப்பலகை யிருக்கு மொருகவிப்புலவன் 'இசைக் குருகி' வரைக்குகையை யிடித்து வழிகாணும்"- வேல் வகுப்பு. கீத இசை - வேத கீத இசை, மறையவர் வேதங் கூறுவது போன்ற இசையுடனும் நிறுத்திய உச்சரிப்புடனும் திரு முருகாற்றுப் படையை ஓத வேண்டும் என்பது இதனாற் பெறப்படும்.

‡ தேவர் சிறைமீட்ட பெருமாளே - பாடல் 905 - 8 பார்க்க.

வேதனையில் - நோய்தரும் தொந்தரவில் (நாட்டமாகி) கண் கொண்டவனாய் - கவனம் வைத்தவனாய், இடர் பாட்டில் - துன்ப நிகழ்ச்சிகளில் விழுவதான மயல் - காம மோகம் (தீட்டி) கூராகி மிக்குத் திரியாமல் -

ஆணி உள வீட்டை - ஆதாரமாயுள்ள வீட்டை, மேவி - விரும்பி, உளம் - உள்ளம் - மனது (மாட்டை) - மாடு ஐ - பொன்னை ஆசையுடனே சேகரித்து இங்ஙனம் பொழுதைப் போக்கி அழியாமல் -

உயிர் வாசம் செய்யும் கூடாகிய இந்த உடலில் ஞானமறைப் பொருள்களை (ஊட்டி) உபதேசித்து, ஆன - நன்மை தருவதான நிலைமையைக் காட்டி யருள்வாயாக.

கேணி உற - கிணறு - போல (மிக ஆழமாக) - வேட்ட விரும்பப்பட்டதான ஞான மார்க்கத்தை (வேட்டர்) விரும்பினவர்கள் கேள் - விசாரணை செய்கின்ற - ஆய்கின்ற, சுருதி நாட்டில் - வேதத்து - இடத்தே - வேத மொழியிடத்தே உறைபவனே!

கீத இசையுடன் வேதமொழி போன்ற திருமுருகாற்றுப்படை என்னும் தமிழ்மாலையைச் சூட்டின (கீரர்) நக்கீரருடைய இயற்றமிழைக் கேட்டருளின கிருபா மூர்த்தியாம் செவ்வேளே!

ஆகாயம் வரை உயர்ந்துள்ள வள்ளிமலைக் காட்டில் வாழ்ந்திருந்த வேடப்பெண் வள்ளியின் சீதம் - குளிர்ந்த இரண்டு மலையன்ன கொங்கையில் அணைபவனே!

கோபிக்கும் குணத்தராம் அவுணர்களுடைய பிரதேசத்தில் நிரம்பத் தீயை மூட்டித் தேவர்களின் சிறையை நீக்கின - அல்லது தேவர்களைச் சிறையினின்றும் மீள்வித்த பெருமாளே!

(ஞானமறை யூட்டி ..... அருள்வாயே)

## 1279.

வேலாயுதத்தையும், வாளையும், கொடிதான ஆலகால விஷத்தையும், (மதன்) (மன்மதன்) செலுத்துகின்ற பாணங்களையும், ஒப்பாகச் சொல்லக் கூடிய -

(வேதை) துன்பந்தருவதைச் (சாதித்த) நிலைநாட்டுகின்ற கண்களை உடைய மாதர்களுடன், ஆபத்தில் - ஆபத்தான லீலைகளில் விளையாடி, மோகித்து - மோகம் - ஆசை கொண்டு, இரியும் - (அதனால்) நிலைகெடுகின்றதான (வெகுரூப) பல உருவத்ததான - பலவகையதான

கோலகா லத்தைவிட லாகிமா றக்குணவி
காரமோ டத்தெளிய அரிதான
கூறொணா தற்பரம ஞானசு பந்தின்வழி
கூடலா கப்பெருமை தருவாயே;
*வாலிமார் பைத்துணிய ஏழ்மரா இற்றுவிழ
வாளிபோ டக்கருது மநுராமன்-
†வானுலோ கத்திலம ரேசனோ லிக்கவளை
யூதிமோ கித்துவிழ அருள்கூரும்;
‡நீலமே னிக்குமரு காவுதா ரத்துவரு
நீசர்வாழ் வைக்களையு மிளையோனே-
நேசமா கக்குறவர் தோகைமா னைப்புணரு
நீபதோ ளொப் Xபரிய பெருமாளே (289)

## 1280. முத்தி பெற

தத்ததன தானத் தனதான

இத்தரணி மீதிற் பிறவாதே-
எத்தரொடு கூடிக் கலவாதே;
முத்தமிழை யோதித் தளராதே-
முத்தியடி யேனுக் கருள்வாயே;
தத்துவமெய்ஞ் ஞானக் குருநாதா-
சத்தசொரு பாபுத் தமுதோனே;
நித்தியக்ரு தாநற் பெருவாழ்வே-

---

* வாலி மார்பும் ஏழு மராமரமும் - இற்ற வரலாறு - பாடல் 231-பக்கம் 78 கீழ்க்குறிப்பு; பாடல் 287-பக்கம் 214-பாடல் 631பக்கம் 470 கீழ்க்குறிப்பு.

† சங்கத்தை ஊதித் தேவேந்திரன் முதலானோரை மயங்கிவிழச் செய்தது - பாடல் 889-பக்கம் 596; பாடல் 15-பக்கம் 50 கீழ்க்குறிப்பு.

‡ நீலமேனி - நீல மேனியை உடைய பெருமான் -

'வாரொடுங்கும் கொங்கை பங்கா' - என்புழிக் கொங்கை கொங்கையை உடைய பார்வதியைக் குறிப்பதுபோல -சம்ப. 1-50-8

X ஒப்பரிய - அரிய - இன் றமைப் பொருளைக் குறிக்கும். - ஒப்பிலாத எனப் பொருள்படும் - 'உறற் பால தீண்டா விடுதல் அரிது என்றாற்போல ஈண்டு அருமை இன்மைமேல்நின்றது' திருக்குறள் 7-உரை. திருப்புகழ். 1069-பக்கம் 165 கீழ்க்குறிப்பு.

(கோல காலத்தை) - ஆடம்பரங்களை (விடலாகி) விட்டு விட்டு, (மாற) நல்வழிக்கு மாறிவரவும், குண விகாரங்கள் குணவேறுபாடுகள் - குண அவலக்ஷணங்கள் (ஓட) என்னைவிட்டு ஓடி நீங்கவும், தெளிந்து அறிவதற்கு அரியதானதும்,

எடுத்துச் சொல்வதற்கு ஒண்ணாததும், (தற்பரம) மேம்பட்ட தானதும் ஆன ஞான மயமான நெறி (கூடலாக) கூடும்படியான பெருமையை எனக்குத் தந்தருளுக.

வாலியின் மார்பு பிளக்கவும்; ஏழு மராமரங்கள் முறிந்து விழவும், (வாளிபோட) அம்பைச் செலுத்த எண்ணங்கொண்ட மநுதர்ம சாத்திரத்தை அனுட்டித்த ஸ்ரீராம மூர்த்தி,

(வான் உலோகத்தில்) விண்ணுலகில், (அமரேசன்) தேவர் தலைவனாம் இந்திரன் (ஒலிக்க) ஓலமிட - அபயக் கூச்சலிட, வளை - சங்கத்தை எடுத்து ஊதி, (மோகித்து விழ) அந்த நாதத்தால் தேவர்கள் யாவரும் மயங்கிவிழ, அருள் மிகுந்துள்ள

நீலநிறமேனிப் பெருமானாம் கண்ணபிரான் - ஆகிய அழகிய திருமாலுக்கு மருமகனே! உதாரத்து வரும் - மேம்பாடு படைத்து வந்த (நீசர்) இழிந்தோராம் அசுரர்களுடைய வாழ்வைக் (களையும்) ஒழித்து எறிந்த இளையவனே!

நேசம் ஆக - அன்பு கூடும்படிக் குறவர்மயில் போன்ற வள்ளி என்ற மானைச் சேர்ந்து அணைத்த (நீப) கடப்பமாலை அணிந்த தோளுக்கு இணையிலாத அல்லது நீப - கடம்பனே; (தோள்) - பராக்ரமம் (ஒப்பரிய) பெருமானே!

(ஞானரூபத்தின் வழி - தருவாயே)

## 1280.

இந்தப் பூமியிலே பிறவாமலும்,

வஞ்சகர்களுடன் கூடிக் கலந்து கொள்ளாமலும்,

இயல் இசை நாடகம் என்னும் மூன்று தமிழ்களையும் படித்துப் படித்துச் சோர்வு அடையாமலும்,

முத்தியை அடியேனுக்கு அருள்புரிய வேண்டுகின்றேன்;

*உண்மைப் பொருளாய மெய்ஞ்ஞானத்தை (உபதேசிக்க வல்ல) குருமூர்த்தியே!

(சத்த சொருபா) ஒலி உருவத்தனே; புதிய அமுதம் போன்றவனே!

நித்தியக்ருதா - நித்தியவாழ்வை - மோக்ஷத்தைத் தருபவனே (அல்லது நாள்தோறும் நற்செய்கை செய்பவனே!) நல்ல பெருஞ் செல்வனே!

---

* இது அருணகிரியார் வரலாற்றைக் குறிப்பதாம்.

நிர்த்தஜெக ஜோதிப் பெருமாளே *(290)

## 1281. முடிவுப் பொருளைப் பெற

தந்தந்த தனத்தன தாத்தன தனதான

என்பந்த வினைத்தொடர் போக்கிவி சையமாகி-
'இன்பந்தனை யுற்றும காப்ரிய மதுவாகி,
அன்புந்திய பொற்கிணி பாற்கட லமுதான-
அந்தந்தனி லிச்சைகொ †ணாற்பத மருள்வாயே
‡முன்புந்தி நினைத்துரு வாற்சிறு வடிவாகி-
X முந்திந்தி யெனப்பர தாத்துட னடமாடித்,
O தம்பந்த மறத்தவ நோற்பவர் குறைதீரச்-

---

*1280 பாடல் அடிகளைக் கொண்டு பல பாடல்கள் அமைக்கலாம். உதாரணமாக 1,2,3,4 அடிகள் ஒரு தனிப்பாடல் ஆகும், 5,6,7,8 ஒரு தனிப்பாடல் ஆகும்; 1,2,5,4 ஒரு பாடல்; 1,2,6,4 ஒரு பாடல்; 1,2,7,4 ஒரு பாடல்; 1,2,4,8 ஒரு பாடல். அப்படியே 2,4,6,8 ஒரு பாடல். 1,4,5,6. 2,4,5,6. 3,4,5,6 - இவைபோலப் பிறவும் கண்டு கொள்க.

† ஆர்ப்பதம் என்பது ஆற்பதம் என்றாயிற்று.

‡ சூரனை அழிக்கச் சிறு வடிவானது - "இறை சுதித்த சூர் முதலை இறுப்ப அரனே இளையோன் ஆனவாற்றால்" - தணிகைப்புராணம். தேவியர் துதி

X "ஜெகஜோதி நடமிடு பெருமாளே" - என்று 1274 -ஆம் பாடலிற் கூறியதும் - "முந்திந்தி எனப் பரதத்துடன் நடமாடி" - என்பதுவும் சிதம்பரத்தில் முருகவேள் நடன மாடினதைக் குறிக்கலாம்- 'முதலி பெரியம்பலத்துள் வரையசல மண்டபத்துள் முநிவர்தொழ அன்று நிர்த்தம் ஆடினான்" - கடைக்கணியல்வகுப்பு.

"அரி துயில் சயன வியாள மூர்த்தனும்
மணிதிகழ் மிகுபுலி யூர்வி யாக்ரனும்
அரிதென முறைமுறை ஆடல் காட்டிய பெருமாளே"

(திருப்புகழ். 650) என வருவன காண்க. இந்த நடனம் அருணகிரியார்க்கு முருகவேள் காட்டின தரிசனமாம் என்க.

(அருணகிரிநாதர் வரலாறு பக்கம் 27, 28, 30, 197 பார்க்க)

O சம்பந்தர் தேவாரம் பந்தம் அறுக்கும் -

1 "ஞான சம்பந்தன் சொல் சிந்தையால் மகிழ்ந் தேத்த வல்லா ரெலாம் பந்த பாசம் அறுக்க வல்லார்களே"

2 "பத்திவை வல்லார் பந்தமறுத் தோங்குவர்"

3. 'தமிழ்பத்தும் வல்லார்மேல் பந்தமாயின பாவம் பாறுதல் தேறுதல் பயனே' - சம்பந்தர். 3-49 11; 2-36-11; 2-93-11

நிர்த்தம் - ஆடல் புரியும் பெருமாளே! ஜெகத்தில் - உலகத்திலே ஜோதியாய் விளங்கும் பெருமாளே!

(முத்தி அடியேனுக்கு அருள்வாயே)

## 1281.

எனது (பந்த வினைத் தொடரை) சூழ்ந்து கட்டியுள்ள வினை என்னப்பட்ட (தொடரை) விலங்கைப் - போக்கி ஒழித்து விசையமாகி - (நான்) வெற்றியடைந்து -

இன்பநிலையை அடைந்து நிரம்பப் பிரியம் கொண்டு

அன்பு பெருகிய நிலையதாய்ப் பொன் கிண்ணியில் உள்ள பாற்கடல் அமுதத்துக்கு ஒப்பான

முடிவான பேரின்பப் பொருள்மீது - (இச்சை கொள்) ஆசையைக் கொள்கின்ற (ஆஸ்பதம்) ஆதார நிலையைத் தந்தருளுக.

முன் - முன்பு (சூரனை அழிக்கப்) புந்தி நினைத்து - மனத்தில் எண்ணி உருவாற் சிறுவடிவாகி - உருவத்தில் இளையவனாய் -

முன் - சூரசம்மாரம் ஆன காலத்தில், 'திந்தி' என்னும் ஒலியுடன் பரதாத்துடன் - பரதத்துடன் - பரதசாத்திர முறைப்படி துடி என்னும் கூத்தினை ஆடி,

தங்களது பந்தம் - மலக்கட்டு (அற) நீங்கத் தவநிலையில் நின்று நோற்பவர்களுடைய குறைகள் நீங்க

---

நடமாடி - என்னாது இனி "நடமாடித்"- என இருப்பதால் 1281-ஆம் பாடலின் 5-8 அடிகள் சம்பந்தரையே குறிப்பதாகவும் பொருள் காணலாம் (உரையிற் *குறிப்பிட்ட இடம் காண்க). சம்பந்தராய்ச் சிறு வடிவாகித் தோன்றினதும், இறைவன் முன்னிலையில் பாடி நடன மாடினதும்: - போதாயன முனி சூத்திரம், கவுணிய கோத்திரத்து மறையவர் சிவபாத இருதயர் முருகனே குழந்தையாய் வரவேண்டு மௌனத் தவம் புரிந்தனர் எனவும், அவருக்கு அருள் செய விரும்பி முருகன் அவர் முன்பு இளங் குழந்தையாய்த் தோன்றினர் எனவும், அக்குழந்தையை அவர் அணைத்து எடுத்துத் தமது மனைவி பகவதியம்மையிடம் கொடுத்தனர் எனவும், சம்பந்தர் வரலாற்றைச் சீகாழிப்புராணம் கூறும்.

"மாதவம் புரிவோன் முன் இளங் கதிர்போல் மதலையாய், வந்தனன் கந்தன்" -சீகாழிப்புரா ஞானசம் அவதாரம் 6

சம்பந்தர் அவ்வத்தலங்களில் இசையுடன் பதிகம் பாடின போது பாடி ஆடினராதலின் - "திந்தி எனப் பரதத்துடன் நடமாடி" என்றார், "பதிகத்திற் புணரும் இன்னிசை பாடினர் ஆடினர் பொழிந்தனர் விழிமாரி" - பெரியபுரா. ஞானசம். 161

'நடன ஞான சம்பந்தர்' என உற்சவ விக்கிரமும் உண்டு. சென்னைக் கோட்டைக் கண்காட்சியில் வைத்திருந்தது "பொற்கிண்ணி அமுது"- சம்பந்தரை நினைவூட்டும்.

சம்பந்த னெனத்தமிழ் தேக்கிய பெருமாளே (291)

## 1282. அநுபூதி பெற

தனத்தந் தானத் தனதான

கருப்பற் றூறிப் பிறவாதே-
கனக்கப் பாடுற் றுழலாதே;
திருப்பொற் பாதத் தநுபூதி-
சிறக்கப் பாலித் தருள்வாயே;
பரப்பற் றாருக் குரியோனே-
பரத்தப் பாலுக் கணியோனே;
திருக்கைச் சேவற் கொடியோனே-
செகத்திற் சோதிப் பெருமாளே (292)

## 1283. இறைவனைப் பற்ற

தனத்த தத்தத் தனத்த தத்தத் தனத்த தனதான

கருப்பை யிற்சுக் கிலத்*து லைந்துற் பவித்து மறுகாதே-
கபட்ட சட்டர்க் கிதந்த சித்ரத் தமிழ்க்க ளுரையாதே,
† விருப்ப முற்றுத் துதித்தெ னைப்பற் றெனக்க ருதுநீயே-
வெளிப்ப டப்பற் றி டப்ப டுத்தத் தருக்கி மகிழ்வோனே,
பருப்ப தத்தைத் தொளைத்த சத்திப் படைச்ச மரவேளே-

*உலைந்து - அலைப்புண்டு
† அருணகிரியாரின் வரலாற்றைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

சம்பந்த மூர்த்தி எனும் பெயருடன் விளங்கித் தமிழை நிரம்பப் பருகினை - (பருகி உலகுக்குத்தந்த) பெருமாளே!* (அல்லது, முன்பு மனத்தில் எண்ணி உருவிற் சிறுவடிவமாம் - குழந்தை வடிவுடன் தோன்றி, திந்தி என்று பரத சாத்திர முறைப்படி நடனமாடிச் சம்பந்தன் என்னும் பெயர்கொண்டு தமிழ் நிரம்பச் சொன்ன பெருமாளே!) (அந்தந் தனில் ஆர்பதம் அருள்வாயே)

# 1282.

கருவிலே - பிறப்பிலே ஆசை ஊறி (நான்) பிறவாமலும்-

(கனக்கப்) மிகவும் (பாடு உற்று) கஷ்டங்களை வருத்தங்களை நான் அடைந்து திரியாமலும் -

திரு - முத்திச் செல்வமாம் (உனது) அழகிய திருவடிச் (அநுபவச்) சிந்தனையை (நினைவு விருப்பத்தை)

(நான்) சிறப்புற (எனக்குப்) பிரசாதித்து அருள் புரிவாயாக.

(பரப்பு) ஆசைப் பெருக்கு அற்ற (பெரியார்க்கு) உரியவனே!

மேலானதாய் யாவற்றையும் கடந்து அப்பால் உள்ள இடத்துக்கு அருகில் உள்ளவனே!

திருக்கரத்திற் சேவற்கொடி கொண்டவனே!

உலகிலே ஜோதிப் பொருளாம் பெருமாளே!

(அனுபூதி அருள்வாயே)

# 1283.

கருப்பையிலே சுக்கிலத்திலே அலைப்புண்டு தோன்றிக் கலங்காமலும்

(கபட்டு) வஞ்சனை கொண்ட (அசட்டர்க்கு) மூடாத்மாக்களிடம் (இதத்து) இன்பம் தருவதான அழகிய தமிழ்ப் பாடல்களைச் சொல்லாமலும்

(நீ நினைத்தால் ஒழிய நான் உன்னைப் பற்றமாட்டேனா-தலினால்) 'ஆசையுடனே துதித்து என்னைப் பற்றுவாயாக' என்று) என்னைக் குறித்து (கருது நீயே) நீயே நினைக்க வேண்டுகின்றேன்.

வெளிப்பட (அடியார்கள் முன்பு) வெளிப்படவும், (பற்றிட) அவர்களை ஏற்றுக் கொள்ளவும், (படுத்து) அவர்களை ஆட்கொள்ளவும், (தருக்கி) களித்து மகிழ்ச்சி கொள்பவனே! (அல்லது) விருப்பங்கொண்டு துதித்து 'என்னைப் பற்றுவாயாக' எனக் (கருதும்) (நீயே) கருத்துக்கொண்ட நீயே, என் முன் வெளிப்படவும், என்னை ஏற்றுக்கொள்ளவும், என்னை ஆட்படுத்தவும் களிப்புடன் மகிழ்ந்தவனே! (என்னை ஆட்கொள்ளக் கருதி என்னை ஆண்டு மகிழ்ந்தவனே)

கிரவுஞ்சகிரியைத் தொளைத்த சத்திவேற் படை ஏந்திய போர் வேளே!

பணிக்கு லத்தைக் கவர்ப்ப தத்துக் களித்த மயிலோனே,
செருப்பு றத்துச் சினத்தை முற்றப் பரப்பு மிசையோனே-
திணைப்பு னத்துக் குறத்தி யைக்கைப் பிடித்த
பெருமாளே (293)

## 1284. அகப்பொருள் (அணைந்தருள) நற்றாயிரங்கல்

தனதனன தானத் தனதான

கொடியமத வேள்கைக் கணையாலே-
குரைகடலொடு நீலக் கடலாலே;
நெடிய புகழ் சோலைக் குயிலாலே-
நிலைமைகெடு மானைத் தழுவாயே;
கடியரவு பூணர்க் கினியோனே-
*கலைகள்தெரி மாமெய்ப் புலவோனே,
அடியவர்கள் நேசத் துறைவேலா-
† அறுமுகவி நோதப் பெருமாளே(294)

## 1285. ஆண்டருள

தானான தானதனத் தனதான

கோடான மேருமலைத் தனமானார்-
கோமாள மானவலைக் குழலாதே,
நாடோறு மேன்மைபடைத் திடவேதான்-
நாயேனை யாளநினைத் திடொணாதோ;
‡ஈடேற ஞானமுரைத் தருள்வோனே-
ஈராறு தோள்கள்படைத் திடுவோனே,
மாடேறு மீசர்தமக் கினியோனே-

---

*முருகன் - சகலகலா வல்லவன் - பாடல் 320-பக்கம் 296 கீழ்க்குறிப்பு

† 1284 - நீ அறுமுக விநோதப் பெருமாள் - ஆதலின் - என் மகள் உன்மீது ஆசை கொண்டுள்ளாள். நீ அடியவர்கள் நேசத்தில் உறைபவன் ஆதலினால் உன்னை நேசிக்கும் இப்பெண்ணிடமும் வந்து சேரவேண்டும், நீ சகல கலைகளிலும் வல்லவன் ஆதலினால் இந்தப் பெண்ணின் துயரத்தின் காரணத்தைக் கண்டு அந்தத் துயரத்தைத் தீர்க்க வேண்டும்; சிவபிரானுக்கு இனியோன் நீ ஆதலினால் அவரைப் போலவே அடியார்க்கு நல்லவனாய், - நச்சினார்க்கினியனாய் உன்னை நினைத்துக் காம வேதனைப்படும் - இந்தப் பேதையிடம் இனியனாய் வந்து அவளைத் தழுவுவாயாக என நாளாம்

(பணிக் குலத்தை) பாம்பின் கூட்டங்களைத் தனது கவர்ப்பதத்துக்கு அளித்த பிரிவு கொண்ட பாதத்திற் பிணித்துள்ள - பாதத்தாற் கட்டி அகப்படுத்தியுள்ள மயிலவனே!

போர்க்களத்திலே கோபத்தை முற்றிலும் விரித்துக்காட்டிய புகழாளனே!

தினைப்புனத்திலே குறத்தி வள்ளியைக் (கைப்பிடித்த) பாணிக் கிரகணம் - திருமணம் செய்துகொண்ட பெருமாளே!

('எனைப் பற்றெனக்' கருது நீயே)

## 1284.

பொல்லாதவனான மன்மத வேளின் (அல்லது செருக்குள்ள வேள்) கை செலுத்துகின்ற பாணங்களாலும்

குரை - ஒலித்தலுக்குக் (கண்) இடமான - ஒலிக்கின்ற நெடிய நீல நிறக் கடலாலும்

பெரிய புகழ்பெற்ற சோலையில் உள்ள குயிலாலும்

தனது நிலைமை (சுய அறிவு) தடுமாறுகின்ற மான்போன்ற இந்தப் பேதையை அணைத்தருளுவாயாக.

கடிக்கின்ற குணத்தை உடைய பாம்பை ஆபரணமாக அணிந்துள்ள சிவபிரானுக்கு இனிய (குழந்தையே)!

(சகல) கலைகளையும் தெரிந்த சிறந்த உண்மைப் புலவனே!

அடியார்களுடைய அன்பில் உறைவிடங் கொண்டுள்ள வேலனே!

ஆறு திருமுகங்களை உடைய அதிசயப் பெருமாளே!

(மானைத் தழுவாயே)

## 1285.

(சிவன் கையில் வில்லாக) கோடுதலை - வளைதலைப் பெற்ற அல்லது சிகரங்களைக் கொண்ட - மேரு மலையை ஒத்த கொங்கைகளையுடைய (மான்போன்ற) மாதர்களின்

(கோமாளம் ஆன) கொண்டாட்டமான - சந்தோஷகரமான வலையிற் பட்டுத் திரியாமல்

நாளுக்கு நாள் மேன்மை (சிறப்பும் மகத்துவமும்) பெருகி உண்டாகவே

அடியேனை (நீ) ஆண்டருள நினைத்திடக் கூடாதா! (நினைத்தருளுக என்றபடி)

நான் ஈடேறும்படியாக ஞானோபதேசம் செய்தருளினவனே!

(2 x 6) பன்னிரண்டு புயங்களைக் (கைகளைக்) கொண்டவனே,

இடபத்தில் ஏறுகின்ற சிவபிரானுக்கு இனியவனே!

---

அடியின் கருத்துக்கு ஏற்பப் பின் நாலடிப் பகுதிகள் பொருந்தக் காணலாம்.

‡ இது அருணகிரியார் வரலாற்றை - ஞானோபதேசம் பெற்றதைக் குறிக்கும்.

மாதானை யாறுமுகப் பெருமாளே (295)

## 1286. துணைபெற

தனன தத்தன தாத்தன தனதான

சமய பத்தி வ்ருதாத்தனை நினையாதே-
சரண பத்ம சிவார்ச்சனை தனைநாடி;
அமைய சற்குரு சாத்திர மொழிநூலால்-
அருளெ னக்கினி மேற்றுணை தருவாயே;
*உமைமு லைத்தரு பாற்கொடு அருள்கூறி-
† உரிய மெய்த்தவ மாக்கிந லுபதேசத்;
‡தமிழ்த னைக்கரை காட்டிய திறலோனே-
X சமண ரைக்கழு வேற்றிய பெருமாளே (296)

## 1287. ஞானோபதேசம் பெற

தனதன தாத்தனத் தனதான

சருவிய சாத்திரத் திரளான-
O சடுதிக ழாஸ்பதத் தமையாத;

---

*உமை முலைப் பாலுண்டது - பாடல் 110-பக்கம் 260 குறி 5

† சம்பந்தர் உபதேசத்தால் - உலகை வாழ்வித்தார் -

"அழுதுலகை வாழ்வித்த கவுணிய குலாதித்த" - என்றார் பாடல் 423 -பக்கம் 566 கீழ்க்குறிப்பு.

‡தமிழ்தனைக் கரைகாட்டிய திறலோனே - முருகன் - கல்வி கரைகண்ட புலவோன் - பாடல் 320-பக்கம் 296 கீழ்க்குறிப்பு.

சம்பந்தர் - தமிழ்தனைக் கரை காட்டிய திறலோன் - சம்பந்தரே தம்மை "அருந்தமிழ் சுற்று முற்றும் ஆயினான், முத்தமிழ் ஞானசம்பந்தன், நல்ல செந்தமிழ் வல்லவன் ஞான சம்பந்தன்"

- எனக் கூறுவதால் உணரலாம். (சம்பந்தர் 2-98-11; 3-2-11, 2-82-11)

X அடி 5-8- சம்பந்தரைக் குறிக்கின்றன - கழு ஏற்றினது - திருப்புகழ் 181-பக்கம் 422 கீழ்க்குறிப்பு.

O சாத்திரத் திரளான சடுதிகழ் ஆஸ்பதம் - ஆறங்கம் எனவும் கொள்ளலாம். "சிக்ஷா, வ்யாகரணம் சந்தோ நிருக்தம் ஜ்யோதி ஷம் ததா; கல்பச்சேதி ஷடங்காளி வேதஸ்யாஹு * : மனீஷிண." என்பது அமரகோசம்: அவைதாம்.

1. "சிக்ஷை" - இது வேதத்தின் உச்சாரண லக்ஷணத்தை - எழுத்துக்களின் உச்சரிப்பு முதலியவற்றை உணர்த்துவது.

2. "வியாகரணம்" - வேதத்தின் பத லக்ஷணத்தை விளக்குவது;

மா - சிறந்த (தானை) சேனைகளைக் கொண்ட (தேவர் சேனைகளுக்குப் பெருமாளே - தலைவனே.) (அல்லது மாது ஆனை - மாதாகிய தேவசேனைக்குப் பெருமாளே! ஆறுமுகப் பெருமாளே!

(ஆள நினைத்திடொணாதோ)

## 1286.

சமயத்தில் உள்ள - மதக் கொள்கையில் உள்ள பத்தி, விருதா - பய னற்ற, தனை நினையாமல் - (அளவினது - அல்லது பயனற்ற தன்மையது என்று) நினையாமல் - சமய பக்தியை வீணென்று நினையாமல் -

உனது திருவடித் தாமரையிற் சிவார்ச்சனை செய்ய விரும்பினவனாய் (நான்)

(அமைய) மனம்பொருந்தி நிலைத்திருக்க, சற்குரு மூலமாகவும், சாத்திர மொழி நூல்கள் மூலமாகவும் உனது திருவருளை எனக்கு இனிமேல் துணையாகத் தந்தருளுக.

உமா தேவியின் கொங்கை தந்த (பால் கொடு) பால் உண்ட தன் பயனாக - சிவபிரானது திருவருளைப்பதிகங்களில் எடுத்துக்கூறி அங்ஙனம் திருவருளை எடுத்துக் கூறுதலையே

தனக்கு உரிய உண்மைத் தவ ஒழுக்கமாகக் கொண்டு) உலகினர்க்கு அல்லது வேண்டிய உண்மைத் தவநிலையை ஓங்கச் செய்து நல்ல உபதேசங்களைக்கொண்ட

தமிழை - (தேவாரத்) தமிழால் - முத்திக்கு ஒருகரை காட்டு வித்த பராக்ரமசாலியே! (அல்லது தமிழைக்கரைகண்ட பராக்ரம சாலியே)

சமணர்களைக் கழுவிலேற்றின பெருமாளே!

(துணை தருவாயே)

## 1287.

(சருவிய) பழகியுள்ள சாத்திரத் திரளான (அனிதய வார்த்தையை) - எல்லா சாத்திரங்களின் திரண்ட பொருளான (அனிதய வார்த்தையை)

சடுதிகழ் - ஆறு என்று விளங்குகின்ற (ஆஸ்பதத்து) ஆதாரங்களில் மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம் அனாகதம், விசுத்தி, ஆஞ்ஞை - எனப்படும் ஆறாதாரங்களில் (அமையாத) பொருந்தி அடங்காத (அனிதய வார்த்தையை)

---

வடமொழி இலக்கணம்,

3. "நிருத்தம்" - வேதத்தின் பதங்களுக்கு விவரணம் (அர்த்தம்) கூறுவது. சொற்களை ஆராய்வது; வேதசப்த நிகண்டும் இதில் உண்டு,

(தொடர்ச்சி 656- ஆம் பக்கம் பார்க்க)

அருமறை யாற்பெறற் கரிதாய-
அனிதய வார்த்தையைப் பெறுவேனோ;
நிருதரை மூக்கறுத் தெழுபார-
நெடுதிரை யார்ப்பெழப் பொருதோனே,
பொருளடி யாற்பெறக் கவிபாடும்-
புலவரு சாத்துணைப் பெருமாளே (297)

## 1288. நல்வழி யுற

தனத்தத் தானன தனதான

சினத்துச் சீறிய வழிகாணச்-
சிரித்துப் பேசியு மயல்பூண,
கனத்துப் போர்செயு முலைதோணக்-
கலைக்குட் பாதியு மறைவாக;
மனத்துக் காறுதல் வருமாறு-
மலைப்பப் பேணியு மிகவாய,
தனத்தைச் சூறைகொள் மடவார்தம்-
சதிக்குப் போம்வழி தவிர்வேனோ;
தெனத்தத் தாதென எனவேபண்-
திருத்தத் தோடளி யிசைபாடும்;
புனத்துக் காவல்கொள் குறமாதின்-
புணர்ச்சிக் கேயொரு வழிதேடி;
இனத்துக் காவல ரறியாமல்-

(655-ஆம் பக்கத் தொடர்ச்சி)

4. 'சோதிடம்' - திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம் முதலியவற்றால் வைதிக கருமங்களைச் செய்தற்குரிய காலத்தை - கால ஞானத்தையும் அதன் பலத்தையும் - அறிவிப்பது.

5. "கற்பம்" - ஆசுவலாய நீயம், போதாய நீயம், ஆபஸ்தம்பம் முதலிய சூத்திரங்களிலிருந்து வைதிக கருமங்களை பிரயோகிக்கும் முறைமைகளைக் கூறுவது. யக்ஞ கர்மங்களை அனுஷ்டிக்கும் விதத்தைப் போதிப்பது.

6. "சந்தம், சந்தசு, சந்தோபிசிதம்" - வேதங்களின் சந்தங்களை - யாப்பிலக்கணங்களைக் கூறுவது; காயத்ரி முதலியவற்றின் சந்தங்களின் ஞானத்தைப் போதிப்பது. வேத புருஷனுக்கு - சந்தோபிசிதம் - பாதம்; கற்பம் - திருத்தம் - காதுகள்; சிட்சை - நாசி; சோதிடம் - கண்; வியாகரணம் - முகம் என்பர்.

அரிய மறையால் - வேதங்களால் பெறுதற்கு அரிதான (அனிதய வார்த்தையை)

(அனிதய வார்த்தையை) இதயத்துக்கு எட்டாத - மனதுக்கு எட்டாத உபதேச மொழியைப் பெறுவேனோ - பெறுகின்ற பாக்கியம் எனக்குக் கிட்டுமா!

அசுரர்களை (மூக்கறுத்து) அவமானம் செய்து, ஏழு, பெருமை கொண்ட

நெடிய (திரை) கடல்களிலும் ஒலி உண்டாகச் சண்டை செய்தவனே!

பொருள் - சிறப்பான பொருள், அடியால் - அடிதோறும் அமைய, அல்லது உண்மைப் பொருளை உனது திருவடித் துணையாற் பெறப் பாடல்களைப் பாடும்,

*புலவர்களுக்கு (உசாத் துணை) உற்ற துணைவனான (அல்லது புலவர்களின் ஆராய்ச்சிக்குத் துணை செய்யும்) பெருமாளே.

(அனிதய வார்த்தையைப் பெறுவேனோ)

## † 1288.

(தங்கள் எண்ணத்தை நிறைவேற்றச்) (சீறிய சினத்துச்) சீறிக் கோபித்தலால் (வசப்படுத்தும்) வழி (காண) ஏற்பட்டவுடன் -

சிரித்தும், பேசியும், காமப் பற்று உண்டாகும்படி -

கனமாய் விளங்கிக் காமப்போர் செய்யும் கொங்கை தெரிய

(ஆடையுள் பாதியே மறைய நின்று)

(வந்தவனுடைய) மனதுக்கு ஒரு ஆறுதல் உண்டாக வேண்டி

(அவன்) மலைந்து மயங்கும்படி (பேணியும்) அவனை உபசரித்து விரும்பியும் (மிகவாய) நிரம்பத்

(தனத்தைப்) பொருளைக் கொள்ளையடிக்கின்ற மாதர்களின்,

(சதிக்கு) வஞ்சனைச் சூழ்ச்சியில் (போம் வழி) அகப்படும் (வழி) தீய ஒழுக்கத்தைத் (தவிர்வேனோ) விலக்கேனோ - நீக்கேனோ!

தெனத்தத் தாதென என்னும் (பண்) பண்களைத்,

திருத்தத் தோடு - திருத்தமான முறையில் - நன்றாக (அளி) வண்டுகள் இசை பாடுகின்ற,

தினைப்புனத்தைக் காவல் கொண்டிருந்த குறமகள் வள்ளியை அணைவதற்கே ஒரு வழியைத் தேடி,

அந்தக் குறக் கூட்டத்துக் காவலாளிகளுக்குத் தெரியாமல்

---

* 'கவிஞர் உசாத்துணைப் பெருமாளே' - என்றார் 1247-ஆம் பாடலில்.

† 1288 -ஆம் பாடல் எட்டு எதுகையுடன் இரட்டைத் திருப்புகழ் ஒன்றாக அமைக்கப் பெற்றது. முதல் பாதி ஒரு பாடலாகும்; பிஃபாதி பிறிதொரு பாடலாகும்.

இளக்கித் தோகையை மகிழ்வோயென்;
றெனக்குத் தாளிணை யருள்வாய்சூர்-
இறக்கப் போர்செய்த பெருமானே (298)

## 1289. (அகப்பொருள்) நற்றாயிரங்கல்

தானத் தானன தந்ததான

தீதுற் றேயெழு திங்களாலே-
தீயைத் தூவிய தென்றலாலே;
போதுற் றாடும நங்களாலே-
போதப் பேதைந லங்கலாமோ;
*வேதத் தோனைமு னிந்தகோவே-
வேடப் பாவைவி ரும்புமார்பா;
ஓதச் சூதமெ றிந்தவேலா-
† ஊமைத் தேவர்கள் தம்பிரானே (299)

## 1290. அகப்பொருள் - அணைந்தருளுக -

தய்யதன தானத் தனதான

துள்ளுமத வேள்கைக் கணையாலே-
தொல்லைநெடு நீலக் கடலாலே;
மெள்ளவரு சோலைக் குயிலாலே-
மெய்யுருகு ‡மானைத் தழுவாயே;
தெள்ளுதமிழ் பாடத் தெளிவோனே-
செய்யகும ரேசத் திறலோனே;
× வள்ளல்தொழு ஞானக் கழலோனே-
வள்ளிமண வாளப் பெருமானே (300)

---

*பிரமனை முனிந்தது - பாடல் 608-பக்கம் 406; பாடல் 571. பக்கம் 308 கீழ்க்குறிப்பு. † பாடல் 68-அடி 8-ம் பார்க்க.

‡ மன்மதன் அம்புகள், கடல், குயில் - இசை காமங் கொண்டார்க்கு வேதனை தருவன - பாடல் 218 -பக்கம் 53 கீழ்க்குறிப்பு

× உபதேசம் பெற்றபோது சிவபிரான் பிள்ளையை வணங்கினர்.
"நாதா குமரா நமவென் றரனார்.." கந். அநு 36.
"எதிருறுங் குமரனை யிருந்தவி சேற்றியங்
கதிர்கழல் வந்தனை யதனொடுந் தாழ்வயின்
சதுர்பட வைகுபு தாவரும் பிரணவ
முதுபொருட் செறிவெலாம் மொழிதரக் கேட்டனன்"
- தணிகைப்புரா. வீராட்ட. 117

இணக்கித் தோகையை (தோகையை) மயில்போன்ற அந்த வள்ளியை (உன் இஷ்டத்துக்கு) இணங்க வைத்து மகிழ்ந்தவனே! என்றைக்கு,

(நீ) எனக்கு உன் திருவடியிணையைத் தந்தருளுவாய்! சூரன் இறக்கும்படி போர் செய்த பெருமாளே!

(என்று எனக்குத் தாளிணை அருள்வாய்)

## 1289.

(எனக்குத்) (தீது) துன்பம் - இடையூறு செய்யவே எழுகின்ற நிலவாலும்,

நெருப்பை அள்ளி வீசுகின்ற தென்றற் காற்றாலும்.

(போதுற்று) தனது மலர்ப் பாணங்களை எடுத்து (ஆடும்) பிரயோகித்து (அல்லது மாலைப் போதில் வந்து) விளையாடும் (அனங்கனாலே) மன்மதனாலும்,

போதப் பேதை - அறிவுள்ள என் (பேதை) பெண் (நலங்கலாமோ) கஷ்டப்படுதல் நன்றா!

வேத நாவினனாம் பிரமனைக் கோபித்த தலைவனே!

வேடர்களின் பெண் வள்ளி விரும்புகின்ற (அல்லது வள்ளியை விரும்பும்) திருமார்பனே!

(ஓதம்) கடலில் (சூதம்) மாமரத்தை எறிந்த - பிளந்தெறிந்த வேலாயுதனே!

(சகலகலாவல்லவனாம் உன் முன்னே வாயிலிகளாகிய ஊமைகளாம் - தேவர்களுக்குத் தம்பிரானே (தலைவனே)!

(பேதை நலங்கலாமோ)

## 1290.

செருக்குடன் வரும் மன்மத வேளின் கை செலுத்தும் (மலர்ப்) பாணத்தாலும் -

பழமையாய் உள்ள (அல்லது துன்பத்தைத் தரும்) நெடிய நீலநிறக் கடலாலும்

மெதுவாக வந்து (குரலைக் காட்டும்) சோலைக் குயிலாலும்

உடல் உருகிவாடும் மான் அனைய இந்தப்பெண்ணை அணைந்தருளுக.

தெளிவு கொண்ட தமிழ்ப் பாக்களைப் பாடத் தெளிவு கொண்டவனே! (தெளிவு கொண்ட சம்பந்தப் பெருமானே)

செம்மை வாய்ந்த குமரேசன் எனப் பேர்பெற்ற பராக்ரம சாலியே!

வள்ளற் பெருமானாம் சிவபிரான் தொழுகின்ற ஞானத் திருவடிகளை உடையவனே!

வள்ளிக்கு மணவாளனாம் பெருமாளே!

(மானைத் தழுவாயே)

## 1291. யான் எனது அற

தானதனத் தனதான

தேனியல்சொற் கனிமாதர்-
சேவைதனைக் கருதாதே;
*யானெனதற் றிடுபோதும்-
யானறிதற் கருள்வாயே;
வானவருக் கரசான-
வாசவனுக் கினியோனே;
ஆனைமுகற் கிளையோனே-
ஆறுமுகப் பெருமாளே (301)

## 1292. அநுபூதி பெற

தானதன தானனத் தனதான

நாரியர்க ளாசையைக் கருதாதே-
நாளுமிரு பாதபத் மமுநாட;
ஆரமுத மானசர்க் கரைதேனே-
ஆன அநு பூதியைத் தருவாயே;
காரணம தானவுத் தமசீலா-
கானகுற மாதினைப் புணர்வோனே-
சூரர்கிளை தூளெழப் பொரும்வேலா;
தோகைமயில் வாகனப் பெருமாளே (302)

## 1293. அநுபூதி விளங்க

தான தனத்த தனதான

நாளு மிகுத்த கசிவாகி-
ஞான நிருத்த மதைநாடும்;
ஏழை தனக்கு மநுபூதி-
ராசி தழைக்க அருள்வாயே;

---

*யான் எனது அற்றிடு போதும் - யான் எனது அற்ற நிலையில்தான் உண்மைப் பொருளைக் காணலாகும். "யான் எனது எனச் சருவும் ஈன சமயத் தெவரும் யாரும் உணர்தற்கரிய நேர்மைக்காரனும்" - வேளைக்காரன் வகுப்பு.

"யான் தான் எனுஞ் சொல் இரண்டும் கெட்டாலன்றி
யாவருக்கும் தோன்றாது சத்தியம்" - கந்தரலங் 95

"யான் தான் என வறலே இன்ப நிட்டை"- தாயுமானவர்

- (தொடர் -பக் - 661.)

# 1291.

தேனின் இனிமைச்சுவைத் தன்மை கொண்ட சொற்களை உடைய (கனி - கனிகை) மாதர் - பொதுமகளிருக்கு (அல்லது - சொற்கு அணி மாதர் - சொல்லழகு உடைய பெண்களுக்கு -

பணிவிடை செய்வதைச் சிந்தியாது - நினைக்காமல்

"யான்" , "எனது" என்னும் இரண்டு பாசங்களும் - ஆசைகளும் (அற்றிடு) நீங்குகின்ற (போதம்) ஞானத்தை

நான் அறியும்படி அருள்புரிவாயாக.

தேவர்களுக்கு அரசனான

இந்திரனுக்கு இனிமை வாய்ந்தவனே (இன்பம் தருபவனே)!

ஆனை முகத்தை உடைய கணபதிக்குத் தம்பியே!

ஆறுமுகப் பெருமானே!

(போதம் அருள்வாயே)

# 1292.

பெண்களின் மீதுள்ள ஆசையை எண்ணாமல் (ஆசையை மறந்து)

நான் உன்னுடைய இரண்டு பாத தாமரைகளை விரும்பித் தேட

நிறைந்த அமுதம் என்னும் படியதான, சர்க்கரை, தேன்

(ஆன) என்னும்படியதான - அனுபவ ஞானத்தைத் தந்தருளுக. (அல்லது சர்க்கரை - தேன் போன்றவனே! (ஆன ) நன்மை பயப்பதான அநுபூதியைத் தருவாயே!

(சகலத்துக்கும்) காரண பூதனாயிருக்கும் உத்தம சீலனே!

காட்டுக் குறமாது (வள்ளியைச்) சேர்பவனே!

சூரபதுமனது சுற்றம் இறந்து தூளாம்படி சண்டை செய்த வேலனே!

கலாபத்தை உடைய மயிலை வாகனமாகக் கொண்ட பெருமானே!

(அநுபூதியைத் தருவாயே)

# 1293.

தினந்தோறும் மிக்க அன்பு ஊறிக் கசிந்த (நெகிழ்ந்த) உள்ளத்தவனாய்

(உனது) ஞான நடனக் கோலத்தைக் காண விரும்பும்

எளியேனாகிய எனக்கும் அனுபவ ஞானம் என்னும்

(ராசி) (யோகம்) பாக்கியப் பொருத்தும் பெருகி விளங்க அருள்புரிவாயாக.

---

உடல் பொய். 65. "யானென தென்னும் செருக் கறுப்பான் வானோர்க் குயர்ந்த உலகம் புகும்" - திருக்குறள் 346.

பூளை யெருக்கு மதிநாக-
பூண ரளித்த சிறியோனே;
*வேளை தனக்கு சிதமாக-
வேழ மழைத்த பெருமாளே (303)

## 1294. நடன தரிசனம்

தத்தனத் தனனதத்த தனதான

நித்தமுற் றுனைநினைத்து மிகநாடி-
நிட்டைபெற் றியல்கருத்தர் துணையாக;
நத்தியுத் தமதவத்தி னெறியாலே-
லக்யலக் கண † நிருத்த மருள்வாயே;
வெற்றிவிக் ரமவரக்கர் கிளைமாள-
விட்டநத் துகரனுக்கு மருகோனே,
‡குற்றமற் றவருளத்தி லுறைவோனே
குக்குடக் கொடிதரித்த பெருமாளே (304)

## 1295. அகப்பொருள்: மாலை பெற

தானந்த தானத்தம் தனதான

நீலங்கொள் மேகத்தின் மயில்மீதே

---

*சமயம் பார்த்து யானை (கணேசரை) அழைத்தது - பாடல் 606-பக்கம் 400 குறிப்பு. பாடல் 900-பக்கம் 629 குறிப்பு

† இங்கு வேண்டியவாறே தில்லை, திருத்தணி, செந்தூர், கொடுங்குன்றம் முதலிய தலங்களில் முருகவேளின் நிருத்த தரிசனத்தை அருணகிரியார் கண்டு களித்துள்ளார்:

(i) "வியாள மூர்த்தனும். 'புலியூர்' வியாக்ரனும்
அரிதென முறை முறை ஆடல் காட்டிய பெருமாளே"

(ii) 'தணிகைமலை' தனில் மயிலில் நிர்த்தத்தில் நிற்கவல பெருமாளே!

(iii) " செந்திலிலும் என்றன் முன் கொஞ்சி நடனங் கொளும் கந்த வேளே!"

(iv) "கொடுங் கிரியில் நிர்த்தச் சரண்களை மறந்திடேனே"

- திருப்புகழ். 650, 308, 16, 404 - பார்க்க.

இனி நிருத்தம் அருள்வாயே என்பதற்கு - முறைப்படி நிருத்தம் செய்து (ஆடிப்பாடி) உன்னைத் தொழ அருள்வாயே - எனவும், நிருத்தம் - ஆறங்கத்தில் ஒன்றாய நிருத்தம் - வேதத்தின் பதங்களின் ஆராய்ச்சியை பாடல் 1287-பக்கம் 655 குறிப்பு -3 அருள்வாயே (தொடர் -பக். 663)

(a) பூளைப்பூ, எருக்கு, (மதி) நிலவு, (நாகம்) பாம்பு - இவைகளைப்
பூண்டுள்ள பெருமான் ஈன்றருளிய குழந்தையே!
(வேளை தனக்கு) உனக்கு வேண்டியிருந்த சமயத்துக்கு (உசிதமாகத்) தக்கபடி - தகுதியாக - (சமயோசிதமாக)
வேழம் - யானையை (கணேசரை) வரவழைத்த பெருமானே!
(அநுபூதி ராசி தழைக்க அருள்வாயே)

## 1294.

தினந்தோறும் (உற்று) பொருந்தி உன்னை நினைத்து மிகவும் விரும்பியும்
நிஷ்டை நிலையை - தியானநிலையைப் - பெற்று ஒழுகும் கருத்தமைந்த பெரியோர்களைத் துணையென
(நத்தி) விரும்பியும், உத்தமமான - சிறந்த தவ ஒழுக்கத்தை நான் பற்றுவதின் பயனாக
இலக்கியத்தில் (பரதசாத்திரத்தில்) சொல்லியபடியும், இலக்கண (நிருத்த இலக்கணப் படியும்) உள்ள நிருத்தம் - உனது நிருத்ததரிசனத்தை நீ எனக்கு அருள்புரிவாயாக. (அல்லது) இலக்கிய இலக்கணங்களிற்கண்டுள்ளபடி (b) (நிருத்தம்) பற்றின்மை என்னும் பாக்கியத்தை அளித்தருளுவாயாக.
வெற்றியும், பராக்ரமும் கொண்டிருந்த அசுரர்களின் சுற்றத்தார் யாவரும் (மாளவிட்ட) இறக்கும்படி
வைத்த (நத்து கரனுக்கு) சங்கம் ஏந்திய திருக்கரங்களை உடைய திருமாலுக்கு மருகனே!
குற்றம் என்பதே இல்லாத பெரியோர்களின் உள்ளத்தில்-மனத்திலே விளங்குபவனே!
கோழிக் கொடியை ஏந்திய பெருமானே!
(நிருத்தம் அருள்வாயே)

## 1295.

நீல நிறத்தைக் கொண்ட மேகம் போன்ற மயில் மேலே

---

எனவும் பொருள் காணலாம். "பக்தர்கள் பாடுவர் ஆடுவர்" - "பாடி யாடிப் பரவுவார்" "பாடியாடும் மெய்ப்பத்தர்கட்கருள் செய்யும் முத்தினை"- சம்ப. 1-28-7; 2-109-9.

‡ "அறுபகை செற் றைம்புலனும் அடக்கி ஞானம் புகலுடையோர் தம்முள்ளப் புண்டரிகத் துள்ளிருக்கும் புராணர்." - சம்ப 1-132-6

(a) பூளை - பாட்டு 273-பக் 181 -குறிப்பு.

(b) " நிருத்த சுக சிற் கனத்து நிலை" சிவ - தரு - சனன 96

நீவந்த வாழ்வைக்கண் டதனாலே;
மால்கொண்ட பேதைக்குன் மணநாறும்-
மார்தங்கு தாரைத்தந் தருள்வாயே,
*வேல்கொண்டு வேலைப்பண் டெறிவோனே-
வீரங்கொள் சூரர்க்குங் குலகாலா;
† நாலந்த வேதத்தின் பொருளோனே-
‡நானென்று மார்தட்டும் பெருமானே (305)

## 1296. அகப்பொருள்

தத்தத் தனான தனதான

பட்டுப் படாத மதனாலும்-
பக்கத்து மாதர் வசையாலும்;
சுட்டுச் சுடாத நிலவாலும்-
Xதுக்கத்தி லாழ்வ தியல்போதான்;
Oதட்டுப் படாத திறல்வீரா-
தர்க்கித்த சூரர் குலகாலா,

---

* கடல் கலற வேல்விட்டது - பாடல் 905-பக்கம் 640 குறிப்பு‡

"வேலொன்றில் வீழக் குன்றெறிவோனே" - என்றும் பாடம்.

† "நாலங்க வேதத்தின்" "பொருளோதி" எனவும் பாடம்.

‡ (i) 'நான்' - 'யான்' - இச்சொல் கடவுளையே குறிக்கும்.

"நம: அகம் பதார்த்தாய" - யான் என்ற சொல்லுக்குப் பொருளானவனே என்னை அளித்தனை. (நீலகண்ட சிவாசாரியர்)" "உள்ளத் தொடுங்கும் புறத்துளும் நானெனும் கள்ளத்தலைவன்" திருமந்திரம். 3016 "தன்னை யிழந்தவர்முன் யான் என்று சென்றிடும் காசிப்பிரான் " - காசிக் கலம்பகம். 84. "பிறிதின்றி நான் அமரும் பொருளாகி நின்றான்" - சம்ப. 3-107-5.

(ii) சகல கலா வல்லவன் நான்தான் என்று மார்தட்டின வரலாற்றைப் பாடல் 320-பக்கம் 296 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

X மன்மதன் (பாணங்கள்), மாதர் வசை நிலவு - காமத் தீயை வளர்ப்பன - பாடல் 218- பக்கம் 53 கீழ்க்குறிப்பு.

O முருகன் திறல் - தட்டுப் படாதது. நினைத்த காரியத்தை முடிக்க வல்லவர் முருக வேளே "முருகனொத் தீயே முன்னியது முடித்தலின்" மாறாவென்றிப் பிணிமுகவூர்தியொண் செய்யோன்" - (புறநா. 56) 'தக்கத் த்ரிசூலி குலபாலா' - என்றும் பாடம்

நீ எழுந்தருளி வந்த திருவுலக்க வாழ்வைத் தரிசித்த காரணத்தாலே

உன்மீது ஆசை கொண்ட இந்தப் பெண்ணுக்கு உன்னுடைய நறுமணம் வீசுவதும்

*மார்பில் தங்கி விளங்குவதுமான (தாரை) மாலையைத் தந்து அருள்புரிவாயாக.

வேலாயுதத்தைக்கொண்டு - (வேலை) கடல் முன்பு சுவற வற்றும்படி - செலுத்தினவனே!

வீரம் படைத்த சூரர் குலத்துக்கே யமனாக விளங்கினவனே!

இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்று சொல்லப்படும் அந்த நான்கு வேதங்களின் பொருளாய் விளங்குபவன்

நானே என்று - மார்பினைத் தட்டும் - பெருமை கொள்ளும் பெருமாளே! (அல்லது) நான்காகிய (அந்த வேதத்தின்) அழகிய வேதங்களின் பொருளோனே (பொருளாய் விளங்குபவனே) - சகல கலா வல்லவன் - உயிர்க்கு உயிராய் நிற்பவன் - 'நான்' என்று உயிர்க்குள்ளே ஒளித்து நிற்பவன் - நான்தான் என்று (மார்தட்டும்) பெருமை பாராட்டும் பெருமாளே!

(தாரைத் தந்தருள்வாயே)

## 1296.

(என்னைத் தனது மலர்ப் பாணங்களால்) பட்டுப் படாது தாக்கியும் தாக்காதது போல (உருவிலியாய் நிற்கும் மன்மதனாலும்

அன்னை அயலிலுள்ள மாதர்களின் வசைப் பேச்சாலும் (பழிப்புரைகளாலும்)

(தனது கிரணங்களால் உண்மையாகவே எரித்தும்) எரிக்காததுபோல விளங்குகின்ற நிலவாலும்

நான் துன்பத்தில் மூழ்கித் தவித்தல் தகுதியோதான்!

(தட்டுப்படாத) தடைபடாத - குறைவுபடாத பராக்ரமம் கொண்ட வீரனே!

தருக்கம் செய்து (வாதித்து) எதிர்த்த அசுர சூரர்களின் குலத்துக்கே யமனாக அமைந்தவனே! (வாதித்த அமண வீரர்களின் குலகாலனே - எனலுமாம்)

---

*வள்ளிக்கு மார்பு மாலையைத் தந்ததைப் பாடல் 316, அடி 5-ல் பார்க்க.

*மட்டுப் படாத மயிலோனே-
†மற்றொப்பி லாத பெருமானே (306)

## 1297. வரம் பெற

தனனத் தத்தன தனதான

‡பரவைக் கெத்தனை விசைதூது
பகரற் குற்றவ ரெனமாலும்;
மரபுக் குச்சித ப்ரபுவாக
வரமெத் தந்தர வருவாயே;
கரடக் Xகற்பக னிளையோனே-
Oகலைவிற் கட்குற மகள்கேள்வா;
**அரனுக் குற்றது புகல்வோனே-
††அயனைக் குட்டிய பெருமானே (307)

## 1298. திருவடி தரிசனம்

தனதனன தாத்தனத் தனதான

பிறவியலை யாற்றினிற் புகுதாதே-
பிரகிருதி மார்க்கமுற் றலையாதே;
உறுதிகுரு வாக்கியப் பொருளாலே-

---

* மட்டுப்படாத மயில் - மயிலின் பராக்ரமம் மட்டுப்படாதது
"தடக் கொற்ற வேள்மயிலே இடர்தீரத் தனிவிடில் நீ
வடக்கிற் கிரிக்கப் புறத்து நின் தோகையின் வட்டமிட்டுக்
கடற்கப் புறத்தும் கதிர்க்கப் புறத்தும் கனக சக்ரத்
திடர்க்கப் புறத்தும் திசைக்கப் புறத்தும் திரிகுவையே" -
கந்தரலங். 96-பின்னும் 'குசை நெகிழா' 'செலிற்றிகழ்' எனத் துவக்கும் பாடல்களையும் காண்க - கந்தரலங். 11, 97

† "ஒப்பிலாத பெருமாள்" - "தனிநிகையில் இணையிலி"- திருப்புகழ் 289.

‡ சுந்தரர் பொருட்டுப் பரவையாரிடம் ஒரு முறைக்கு இருமுறையாக இறைவன் தூது சென்றனர் - (பாடல் 413-பக்கம் 612 கீழ்க்குறிப்பு. பாடல் 944-பக்கம் 744 கீழ்க்குறிப்பு). அடியார்க்கு எளியராய் அங்ஙனம் இருமுறை தூது சென்ற சிவனுடைய மரபில்வந்த பிள்ளையாயிற்றே, முருகா, நீ ஆதலால் உன்மரபுக்கு ஏற்ற கருணையுடன் - எனக்கு வரம் மெத்தத் தர வந்தருளுவாயாக - என்றார்.

X கற்பகன் - விநாயகருடைய சிறப்புப் பெயர் - பாடல் 454 பக்கம் 10 கீழ்க்குறிப்பு. (தொடர் -பக்கம், 667)

அளவு கடந்த திறல் தாழ்வு படாத மயில் வாகனனே
வேறு இணையே இல்லாத பெருமாளே!

(துக்கத்தில் ஆழ்வது இயல்போதான்)

## 1297.

(அடியான் பொருட்டு - சுந்தரர் பொருட்டு) பரவை நாச்சியாரிடம் எத்தனை முறை (வேண்டுமென்றாலும்) தூது போய்ச்

சொல்வதற்கு ஒருப்பட்டவர் - தயாராயிருந்தவர் இவர் என்னும் (மாண்) பெருமை வாய்ந்தவர் (இம் முருகவேளின் தந்தையாம் சிவபிரான்) என்னும் புகழினைப் பெற்ற உனது

மரபுக்கு (குலத்துக்கு) உச்சித - ஏற்ற ப்ரபுவாக - தகுதியும் மேன்மையும் கொண்ட பிரபுவாக - (பெரியோனாக) நீயும் விளங்கி

வரங்களை (எனக்கு) நிரம்பத் தருவதற்கு எழுந்தருளி வருவாயாக

(கரடம்) மதம் பாயும் கவட்டினை உடையவனும், கற்பக விருக்ஷம் போல வேண்டுவார் வேண்டுவதே ஈந்தருள்பவனும் ஆன கணபதியின் தம்பியே!

(கலை) மான் (கண்) போன்ற (வில்கண்) ஒளி பொருந்தின கண்ணை உடைய குறமகள் (வள்ளியின்) கணவனே!

சிவபிராணுக்கு (உற்றது) அழிவிலா உண்மைப் பொருளை உபதேசித்தவனே!

பிரமனைக் குட்டின பெருமாளே!

(வரம் மெத்தத்தர வருவாயே)

## 1298.

பிறப்பு என்கின்ற அலைகள் வீசும் ஆற்றிலே புகுந்து அலைச்சல் உறாமல்

பிரபஞ்ச விஷயங்களாம் மாயா வழிகளிற் பொருந்தி அலைச்சலுறாமல்

உறுதி - (நன்மை) ஆன்மலாபத்தைத் தரவல்ல குரு உபதேச மொழியின் பொருள் மூலமாய்

---

O 'கலை - மான்போன்ற கண்'- 'மான்போற் கண் பார்வை பெற்றிடு' - 'மானை நேர் விழி' - 'விழி மீனோ மானோ' -திருப்புகழ். 89, 886, 328

**சிவனுக்குப் போதித்தது - பாடல் 327-பக்கம் 314 குறிப்பு

†† அயனைக் குட்டியது - பாடல் 608 -பக்கம் 406 குறிப்பு††

உனதுபத காட்சியைத் தருவாயே
*அறுசமய சாத்திரப் பொருளோனே;
†அறிவுளறி வார்க்குணக் கடலோனே
‡குறுமுனிவ னேத்துமுத் தமிழோனே-
குமரகுரு ×கார்த்திகைப் பெருமாளே (308)

## 1299. காத்தருள

தத்தனத் தாத்தத் தாத்த தனதான

புத்தகத் தேட்டிற் றீட்டி முடியாது-
பொற்புறக் கூட்டிக் காட்டி யருள்ஞான,
வித்தகப் பேற்றைத் தேற்றி யருளாலே-
மெத்தெனக் கூட்டிக் காக்க நினைவாயே;
தத்தைபுக் கோட்டிக் காட்டி லுறைவாளைச்-
○சற்கரித் **தேத்திக் கீர்த்தி பெறுவோனே;

---

*ஆறு சமயங்கள் - சைவம், வைணவம், காணாபத்யம், கௌமாரம், சாத்தம், சௌரம் என்பன - இவை வைதிக மதம். சைவம் - சிவனைப் பர தெய்வமாகக் கொண்டு வழிபடும் சமயம்; வைணவம் - திருமாலை (விஷ்ணுவைப்) பரம் பொருளாகக் கொண்ட சமயம்; காணா பத்யம் - கணபதியை முதற் கடவுளாக வழிபடுஞ் சமயம்; கௌமாரம் - குமரக் கடவுளே (முருகனே) பரம்பொருளென்று வழிபடும் சமயம்; சாத்தம் - சாக்தம் சக்தியைப் பரதேவதையாக வழிபடும் சமயம்; சௌரம் - சூரியனை வழிபடும் சமயம்.

† அறிவுள் அறிவார்க் குணக் கடலோனே!-
"அறிவொன்றற நின் றறிவா ரறிவிற் பிறிவொன்றற நின்ற பிரான்" -கந். அநுபூதி -48 "அறிவுள் அறியும் அறிவூற அருள்வாயே" என்றார் 718 -ஆம் பாடலில்.

‡ அகத்தியர் - திருத்தணிகை முதலிய தலங்களில் முருகக் கடவுளைப் பூசித்துள்ளார் - பாடல் 409 அடி 7; பாடல் 441-பக்கம் 609 கீழ்க்குறிப்பு **

× கார்த்திகேயன் - என்பது முருகன் திரு நாமங்களுள் ஒன்று. முருகக் கடவுளைச் சரவணப் பொய்கையில் கார்த்திகை மாதர் போற்றி வளர்த்த காரணத்தால் "கார்த்திகை மைந்தன்" என முருகவேள் பெயர் பெற்றனர். "உவகையொடு கிர்த்திகையர் அறுவரும் எடுக்க அவரொருவ ரொருவர்க்கவன் ஒரோர் புத்ரன் ஆனவனும்"- வேடிச்சி - வகுப்பு.

(தொடர் -பக்கம் 669)

உன்னுடைய திருவடித் தரிசனப் பேற்றைத் தந்தருளுக.

ஆறு சமய சாத்திரங்களுக்கும் பொருளாய் விளங்குபவனே!

அறிவின் உட்பொருளை அறிபவர்களாம் பெரியோருக்குக் குணக்கடலாய் (அல்லது) பெரியோரின் குணக்கடலில் விளங்குபவனே! பெரியோர்க்கு (உண) அனுபவிக்கக் கடல்போன்ற பெரியவனே!

அகத்திய முனிவர் துதிக்கும் முத்தமிழ்ப் பெருமானே!

குமரகுரு எனும் பெயர்ப் பெருமானே! கார்த்திகை (மாதர்களுக்கு இனிய) பெருமானே!

(உனது பத காட்சியைத் தருவாயே)

## 1299.

புத்தகங்களிலும் ஏட்டிலும் எழுத முடியாத (பொருளை)

(பொற்பு உற) அழகு பொருந்தக் கூட்டுவித்துக் காட்டியும், அருள் மயமாம் ஞான

(வித்தகப் பேற்றை) நன்மைப் பேற்றினை (பாக்கியத்தை)த் தேற்றி) தேற்றுவித்து - தெளியவைத்து உனது திருவருளால்

பக்குவமாக எனக்கு அதைக் (கூட்டி) கூட்டி வைத்தும் என்னைப் பாதுகாக்க நினைத்தருள வேண்டுகின்றேன்

(தத்தை) கிளிகளை - புக்கு ஓட்டி - அவை தினைப்புனத்தில் இருக்கும் இடங்களிற் சென்று (a) ஓட்டி (ஆயால் ஓட்டி) அந்தத் தினைக் காட்டில் இருந்தவளாம் வள்ளியைச்

(சற்கரித்து) உபசரித்து, ஏத்தி - புகழ்ந்து, கீர்த்தி பெறுவோனே - பேரும் புகழும் பெற்றவனே!

---

"கந்தன்தனை நீர் போற்றிய கடனால் இவன் உங்கள்
மைந்தன் எனும் பெயராகுக மகிழ்வாய் எவரேனும்
நுந்தம்பக லிடையின்னவன் நோன்தாள்வழி படுவோர்
தந்தங்குறை முடித்தே பரந்தனை நல்குவம் என்றான்" -

இது சிவபிரான் தந்த வரம் - கந்த புரா. 1-13-30

O சற்கரித்து - உபசரித்து.

** வள்ளியை உபசரித்து ஏத்திக் கீர்த்தி பெற்றனர் முருகவேள்.

அடியார்க்கு எளியராய் அமைந்து தானேவந்து வள்ளியை மணம் புரிந்தாராதலின் - பாடல் 253 அடி 5 -பக்கம் 133 குறிப்பு* (a) இது முருகர் ஆயால் ஓட்டினதையும் குறிக்கும் - திருப் 768, 902

*கைத்தலத் தீக்குப் பார்த்து நுழையாத-
†கற்பகத் தோப்புக் காத்த பெருமாளே (309)

## 1300. விரும்ப

தன்ன தனந்தன தனதான

பொன்னை விரும்பிய பொதுமாதர்-
புன்மை விரும்பியெ தடுமாறும்;
என்னை விரும்பி‡நி யொருகால் ×நின்-
என்னி விரும்பவு மருள்வாயே;
○மின்னை விரும்பிய சடையாளர்-
**மெய்யின் விரும்பிய குருநாதா;
‡‡ அன்னை விரும்பிய குறமானை-
அண்மி விரும்பிய பெருமாளே. (310)

---

*கைத்தலத்து ஈ குப்பு = தும்பி வண்டுக் கூட்டம்; குப்பு = கும்பு. இதனால் கற்பகத் தோப்பில் ஈ - தும்பி வண்டுகள் நுழையா என்பது பெறப்பட்டது.

† கற்பகம் - வேண்டிய பொருளைக் கொடுக்கும். கற்பகத் தோப்பு என்றார் 'கற்பகக் கானம்' - சிந்தாமணி 2997. கற்பகங்கள் பத்து வகையனவாம்; (1) மத்தி யாங்கம் - இது திவ்ய ஸாரமாகிய நானாவித பானங்களைத் தரும்; (2) தூரியாங்கம் - இது நானாவித வாத்தியங்களைத் தரும். (3) பூஷணாங்கம் - இது அனேகவித ஆபரணங்களைத் தரும்; (4) மாலியாங்கம் - அநேகவித மாலைகளைத் தரும்; (5) தீபாங்கம் - அது அனேகவித ரத்ன தீபங்களைத் தரும் (6)கிருகாங்கம் - இது பிரஸாத மண்டபாதிகளைத் தரும்; (7) சோதிராங்கம் - இது சந்திராதித்தர் ஒளியினை அடக்கும் ஒளியினைத் தரும்; (8) போசனாங்கம் - இது நானாவித ரஸத்தனவாகிய நான்கு வகை உணவினைத் தரும்; (9) பாசனாங்கம் - இது வேண்டிய கலங்களைத் தரும்; (10) வஸ்திராங்கம் - இது விசித்திர வஸ்திரங்களைத் தரும். இது ஸ்ரீ புராணத்திற் கண்டது - சிந்தாமணி. 2997-பக்கம் 870 கீழ்க்குறிப்பு.

"கற்பகக் காட்டுவளர் கடவுள்மா"- மீனாட்சி பிள்ளை முத் 7

‡ நி = நீ. ×நின் என்னி = நின்னை யெண்ணி.

○ மின்போலும் சடை - 'மின்னார் சடை'- சம்பந்தர். 1-97-4.

** சிவபெருமான் தன் பிள்ளையிடம் பிரணவத்தின் பொருளைக் கேட்க விரும்பினர் - என்பது -

"காமரு குமரன் சென்னி கதுமென உயிர்த்துச் செக்கர்த்
தாமரை புரையுங் கையால் தழுவியே அயனுந் தேற்றா

கைத்தலத்து ஈ - தும்பி வண்டுகளின் (கும்பு) குப்பு, ஆர்த்து ஒலிசெய்து நுழைய முடியாத

கற்பக விருக்ஷத் தோப்பு உள்ள பொன்னுலகைக் காத்த பெருமாளே.

(காக்க நினைவாயே)

## 1300.

பொன்னையே நாடி விரும்புகின்ற பொது மாதர்களின்

இழிவான குணத்தை விரும்பித் தடுமாறுகின்ற

என்னை விரும்பி நீ ஒருமுறையேனும் (நின்) உன்னை

எண்ணி (தியானித்து) (நான்) விரும்புமாறு அருள்புரிவாயாக.

மின்னல்போல ஒளி வீசும் சடைப் பெருமான்

(மெய்யின்) உண்மைப் பொருளை விரும்பி நிற்க அவருக்கு உபதேசித்த குருநாதனே! (அல்லது உண்மையாகவே விரும்பி ஏத்தின குருநாதனே)

(அன்னை) எனது தாய், நீ விரும்பின ஆசைப்பட்ட குறமான் வள்ளியை (அல்லது அன்னை - உமையம்மை விரும்பிய வள்ளியை)

(அண்மி) நெருங்கி விருப்பம்கொண்ட பெருமாளே!

(நின்னை எண்ணி விரும்பவும் அருள்வாயே)

---

ஓமென உரைக்குஞ் சொல்லின் உறுபொருள் உனக்குப் போமோ போமெனில் அதனை யின்னே புகலென இறைவன் சொற்றான்"

- கந்தபுரா. 1-17-37

முருகன் பொருள் விரிக்கக் கேட்டுச் சிவபிரான் -"தத்துவங்கேட்டலும் தனக்குத் தான் நிகரிலான் தழங்கி நின்றாடினான்"- தணிகைப் புரா. வீராட்ட. 118

†† அன்னை - வள்ளியைத்தனது தாய் என்பர் அருணகிரியார்-

(i). "என்னுடையதாய்... கடம்பாடுகுழல் அன்னை.. வள்ளி" - பாடல் 619 - "எனதாயி வளி நாயகி" - பாடல் 644; என்றனொரு தாய்.. குற மங்கை" - பாடல் 833.

(ii). அன்னை - பார்வதிக்கு உகந்தவள் வள்ளி என்பது:- "பார்வதி யார்க்கும் இனித்த பெணாகிய மான் மகள்" திருப் 789.

## 1301. நற்கதி பெற

தனனத்த தத்த தனதான

**ம**ணைமக்கள் சுற்ற மெனுமாயா-
வலையைக்க டக்க அறியாதே;
வினையிற்செ ருக்கி யடிநாயேன்-
விழலுக்கி றைத்து விடலாமோ;
சுனையைக்க லக்கி விளையாடு-
சொருபக்கு றத்தி மணவாளா,
*தினநற்ச ரித்ர முளதேவர்-
சிறைவெட்டி விட்ட பெருமாளே. (311)

## 1302. அகப்பொருள்

தானனா தானன தந்ததான

**வா**ரிமீ தேயெழு திங்களாலே-
மாரவே ளேவிய அம்பினாலே,
பாரெலா மேசிய பண்பினாலே-
†பாவியே னாவிம யங்கலாமோ;
சூரனீன் மார்புதொ ளைந்தவேலா,
சோதியே தோகைய மர்ந்தகோவே-
மூரிமால் யானைம ணந்தமார்பா
மூவர்தே வாதிகள் தம்பிரானே. (312)

## 1303. தமிழ் கொடு போற்ற

தானத் தத்தத் தத்தன தத்தத் தனதான

**வா**னப் புக்குப் பற்றும ருத்துக் கனல்மேவு-
மாயத் தெற்றிப் பொய்க்குடி லொக்கப் பிறவாதே

---

*தினம் நற்சரித்திரம் உள்ளவர் தேவர்களாதலால் - "புண்ணியம் உள பல விண்ணவர்" என்றார் 1232 ஆம் பாடலில். தேவர்கள் தினந்தோறும் சிவனையே வழிபடுவார். "சிவமாய கண்டனே! நின்னையன்றி நித்தலும் சிவமாய சிந்தையில் தேர்வதில்லை தேவரே" - சம்பந்தர் 3-52-5

† காமத்தை வளர்ப்பன - திங்கள், மன்மதன் பாணங்கள், மாதர் வசை - பாடல் 218 -பக்கம் 53 கீழ்க் குறிப்பு.

## 1301.

மனைவி, மக்கள், சுற்றத்தார் என்கின்ற மாய
வலையை விட்டு விலக (தாண்ட)த் தெரியாமல்
வினையிலேயே (செருக்கி) களித்து மயங்கி அடிமை நாயேனாகிய நான்
வீணுக்குப் (பயனின்றி) என் ஆயுள் நாளைக் கழித்து விடல் நன்றா? (நன்றன்று என்றபடி)
சுனையைக் கலக்கி விளையாடின
உருவழகியாம் குறத்தி - வள்ளியின் மணவாளனே!
நாளும் நல்ல ஒழுக்கங்களை மேற்கொண்டிருந்த தேவர்களின்
சிறையை (வெட்டிவிட்ட) நீக்கி ஒழித்த பெருமாளே!

(விழலுக்கு இறைத்து விடலாமோ)

## 1302.

கடல் மீது எழுகின்ற நிலவாலும்
மன்மதன் செலுத்தின அம்பினாலும்
உலகிலுள்ளோர் யாவரும் இகழ்ந்து பேசும் செய்கையாலும்
பாவியாகிய எனது உயிர் நிலையழியலாமா!
சூரனுடைய பெரிய மார்பைத் தொளை செய்த வேலனே!
ஜோதியே! மயில்மீது வீற்றிருக்கும் அரசே!
(சூரி) பெருமையும் (மால்) உன் மீது ஆசையும் கொண்டிருந்த (யானை) தேவசேனையை மணந்த திருமார்பா! (அல்லது தேவசேனை மணந்த திருமார்பா!)
பிரமா, விஷ்ணு, ருத்திரன் ஆகிய மூவர்க்கும் (திரிமூர்த்திகளுக்கும்) பெருமானே! தேவாதிகளின் தலைவனே! (அல்லது தேவாதிகளாம் மூவர்க்கும் தலைவனே)

(பாவியேன் ஆவி மயங்கலாமோ)

## 1303.

(வான்) ஆகாயம், (அப்பு) நீர், (கு) மண், (பற்று) இவையுடன் கூடின (மருத்து) காற்று (கனல்) நெருப்பு ஆகிய பஞ்ச பூதங்கள் சேர்ந்துள்ள

மாய - மாயம் - நிலையிலாத -(தெற்றி) ஒரு கட்டடமாம், (பொய்க்குடில்) பொய்த் தோற்றமான இந்தக் குடில் ஒக்க - குடிசை - வீடாகிய - உடலுடனே பிறவாமல்

ஞானச் சித்திச் சித்திர நித்தத் *தமிழாலுன்-
நாமத் தைக்கற் றுப்புகழ் கைக்குப் புரிவாயே
கானக் †கொச்சைச் சொற்‡குற விக்குக் கடவோனே-
காதிக் கொற்றப் பொற்குல வெற்பைப்
பொரும்வேலா;
தேனைத் தத்தச் சுற்றிய செச்சைத் தொடையோனே-
தேவச் சொர்க்கச் சக்கிர வர்த்திப்
பெருமாளே (313)

## 1303 -1. அருள் பெற

அரிய பெரிய பாடலின் பகுதி இவ்வளவே ஓலையிலிருந்து கிடைத்தது. வாக்கின் அருமை பெருமை கருதி, இப்பகுதியேனும் அழிவு படாதிருக்க வேண்டி ஈண்டு அச்சிடப்பட்டது.

தனதன தனதன தனன தனதன
தனதன தனதன தனன தனதன
தந்தத் தனந்ததன தந்தத் தனந்ததன..... தனதான

குருபர சரவண பவசண் முககுக!
ஒருபர வயமியல் எயினர் மகள் சுக
மண்டத் தனங்கள்புணர் சண்டத் திரண்ட புஜ!
உழுவைகள் கரடிகள் கிடிகள் பகடுகள்
இளைகளை நெறுநெறு நெறென உலவுவி
லங்கற்குறிஞ்சியுறை தொங்கற்கடம்ப! அருள் தருவாயே!

---

* தமிழாலுன் நாமத்தைக் கற்றுப் புகழ்தல் - தமிழே முருகவேளாம் தமிழ்க் கடவுளுக்குப் பிரியமாதலால் செந்தமிழால் துதிக்க விரும்புகின்றார் அருணகிரியார் "சிகராத்ரி கூறிட்ட வேலுஞ் செஞ் சேவலும் செந்தமிழாற் பகர் ஆர்வம் ஈ" என்றார் அலங்காரத்தில் (52). 'கனத்த செந்தமிழால் நினையே தினம் நினைக்கவும், தருவாய்'- திருப்புகழ். 949-பக்கம் 756 கீழ்க்குறிப்பு

† வள்ளி கொச்சைச் சொல்லினள் - 'கொச்சை மொழிச்சி குறத்த விழிச்சி'- திருப்புகழ் 728

‡ குறவிக்குக் கடவோனே - வள்ளியை ஆட்கொள்ள முருகவேள் கடமைப் பட்டிருந்தார். "குறமாதுடன் மால் கடனாம் எனவே அணைமார்பா" - திருப்புகழ். 563-பக்கம் 284 குறிப்பு

(ஞானச்சித்தி) ஞானம் சித்திக்க (கைகூட) வைப்பதும் (சித்திரம்) அழகுள்ளதும், நித்தம் - அழியாததுமான தமிழ் கொண்டு (முருகன், குமரன், குகன்) ஆதிய உனது பெயர்களைக் கற்றுப் புகழ்வதற்கு அருள் புரிவாயாக.

காட்டில் வசித்தவளும், (கொச்சைச் சொல்) திருந்தாத பேச்சை உடையவளுமான குறத்தி - வள்ளிக்குக் கடமைப்பட்டவனே!

(கொற்றப் பொற்குல வெற்பைக்காதி) வெற்றி பெற்றிருந்ததும், பொன் மயமாயிருந்ததுமான கிரவுஞ்ச மலையைக் (காதி) கூறு செய்து, அதனுடன் (பொரும் வேலா) சண்டை செய்த வேலாயுதனே!

(தேனை) வண்டுகளைத் (தத்தச் சுற்றிய) தாவிக் குதிக்கும்படி வைத்துச் சுற்றிய - சுற்றி அணியப்பட்ட வெட்சி மாலையனே!

தேவர்கள் வாழும் சொர்க்கத்தில் - பொன்னுலகில் விளங்கும் சக்ரவர்த்திப் பெருமாளே!

(தமிழால் உன் நாமத்தைப் புகழ்கைக்குப் புரிவாயே)

## 1303 -1.

குருபரனே! சரவணபவனே! ஷண்முகனே! குகப் பெருமானே! ஒரு - ஒப்பற்ற, பர - மேலான, வயம் - வெற்றி, இயல் - பொருந்தியுள்ள, எயினர் மகள் - வேடர்மகள் - வள்ளியின் - சுகம் மண்டு இன்பம் நிறைந்துள்ள, அத்தனங்கள் - அந்தக் கொங்கைகளை அணைந்துள்ள, (சண்ட) - வலிமை பொருந்தியதும் திரண்டுள்ளதுமான திருப் புயங்களை உடையவனே! உழுவைகள் - புலிகள், கரடிகள், கிடிகள், -பன்றிகள், பகடுகள் - யானைகள் இவைகளெல்லாம் இளை - காவற் காடுகள், களை - களைந்து அழியும்படி, நெறு நெறு நெறு என்று முறியும் படி - உலவுகின்ற, விலங்கல் குறிஞ்சி - மலைகள் உள்ள மலை நிலத்தே வீற்றிருக்கும் (கடம்பனே!) மாலையாம் கடம்பு அணிந்தவனே! அருள் புரிவாயாக.

....அடிபடு முரசு தவில்பட
கந்தக்கை துந்துமித டந்தப்பு டன் சலிகை
.....கரடிகை யறைபறை திமிலை..... அபிநவ
சங்கொற்றை கொம்புகுழல் வங்கக் கருங்கடல் கொள்
பிரளய மிதுவென அதிர உலகர்கள்
அரகர சிவசிவ அபய மபயமெ
னுஞ்சந்த மெங்குமெழ வெஞ்சத்தி கொண்டுபடை
புகவானோர்
....வனச மலர்நிகர், செம்பொற் சதங்கையடி யன்பர்க்கு
வந்துதவு பெருமாளே (314)

## 1304. க்ஷேத்திரக் கோவை - துதி

தந்த தானன தானான தந்தன
தந்த தானன தானான தந்தன
தந்த தானன தானான தந்தன தனதான

1கும்ப கோணமொ 2டாரூர் 3சிதம்பரம்
உம்பர் வாழ்வுறு 4சீகாழி நின்றிடு
கொன்றை வேணியர் 5மாயூர மம்பெறு 6சிவகாசி;

---

1. கும்பகோணம், ஆரூர், சிதம்பரம் - இந்த மூன்று தலங்களை முதலில் எடுத்துக் கூறினதின் காரணம் ஆராயத் தக்கது.

(i) கும்பகோணம் - இது தேவாரத்தில் குடமூக்கு எனப்படும். இந்த ஒரு ஊரில் 'குடந்தைக் காரோணம் (கும்பகோணம் காசிவிசுவநாதர் கோயில், 'குடந்தைக் கீழ்க்கோட்டம்' (கும்பகோணம் நாகேஸ்வரசுவாமி கோயில்) - குடமூக்கு - (கும்பேசுரர் கோயில்) - என்னும் மூன்று பாடல் பெற்ற கோயில்கள் உள்ளன. பன்னிரண்டு ஆண்டுக்கு ஒருமுறை மாசிமகத்தில் காசி கங்கை தன்னிடத்தே படிந்தவர்களின் பாபங்கள் தனக்குக் கூடினவற்றை ஒழிக்கும் பொருட்டு வந்து படியும் - அதிகச் சிறப்புள்ள 'மாமக தீர்த்தம்' இந்தலத்தில் உளது. 'கங்கை மாமகம் தோறும் வந்து வந்துதற் படிந்தோர் விட்டுப் போமகம் போக மூழ்கும் புநித நீர்ப்பதியைக் காண்மின்' - திருவிளை - அருச்சனை -25. அகம் = பாவம்; "தாவி முதற் காவிரி நல் யமுனை கங்கை சரச்சுதி பொற்றாமரை புட்கரணி தெண்ணீர்க் கோவியொடு குமரிவரு தீர்த்தஞ் சூழ்ந்த குடந்தைக் கீழ்க் கோட்டத்தெங் கூத்தனாரே" -அப்பர் 6-75-10

அடிபடுகின்ற முரச வாத்தியமும், (தவில்) மேளவாத்தியமும் சத்திக்க, கந்தக்கை (கம் தக்கை) கம் - (அடிக்கும்) தொழிற்குரிய - தக்கை - ஒருவகைப்பறை (பம்பை வாத்தியம்) துந்துமி - பேரிகை, தடம் - பெரிய, தப்பு பறைவகை, இவையுடன் (சல்லிகை) - பெரும் பறைவகை..... கரடிகை - கரடிகத்தினாற் போன்ற ஓசையை உடைய பறைவகை, ஒலிக்கப்படும் பறையாம் திமிலை - ஒருவகைப் பறை...... (அபிநவம்) அதிசயிக்கத்தக்க புதுவகையதான சங்கம், ஒற்றை - ஒரு தொளைக்கருவி, கொம்பு - ஊது கொம்பு, குழல் - புல்லாங்குழல், இவையெலாம் வங்கம் - மரக்கலங்கள் உலவும், கரியகடல் கொள்ளும், பிரளயம் - பிரளய கால வெள்ளமோ இது என்னும்படி, அதிர்ச்சியை உண்டாக்க, உலகில் உள்ளோர் ஹரஹர, சிவசிவ, அடைக்கலம், அடைக்கலம் என்று கூச்சலிடும் சப்தமே எங்கும் உண்டாக, கொடிய வேலாயுதம் கொண்டு, (பூதப்) படைகள் உடன் வரத் தேவர்கள் -

- (வனஜ மலர்) தாமரை மலர் போன்றதும் செவ்விய பொன்னாலாகிய சதங்கையை அணிந்துள்ளதுமான திருவடியை அன்பர்களுக்கு எழுந்தருளி வந்து உதவுகின்ற பெருமாளே!

(அருள் தருவாயே)

## 1304.

கும்பகோணம், (அதனுடன்) திருவாரூர், சிதம்பரம், தேவர்கள் வாழ்க்கை கொள்ளும் சீகாழி, நிலையாகக் கொன்றை மலர் கொண்ட சடையினர் (வாழும்) மாயூரம், அம்பெறு - அழகு (அல்லது ஜலம்) வாய்ந்த சிவகாசி - அல்லது அம் - கங்கை நீரும் (சிவ) மங்களகரமும் உள்ள காசித்தலம்-

---

"சாமியோடு சரச்சுவதியவள்
சோமியும் உறையுங் குடமூக்கிலே" - அப்பர். 5-22-8
"பலதலத்துள்ளும் சிறந்த மாதலம் கும்பகோணம் "
"தலத்தின் இரும்புகழ் சிரவணம் ஒன்றால் எவ்வெலாத்
தலத்தும் வசித்த பேறாதி எய்துவர் யாவரும் மன்னோ"
"யாதொரு தலத்து மாண்மியம் கேட்டால் இகபர முத்தி
முற்றெய்தும், ஓதொரு கும்ப கோணம் அத்தலம் என்றுணருமின்"
-குடந்தைப்புரா. தலவிசேடம். 8-11.

2. ஆரூர் - திருவாரூர் - இத்தலத்தையும் சிதம்பரத்தையும் முதலடியிற் கூறினதின் காரணம் - சம்பந்தப் பெருமான் அருளிய க்ஷேத்திரக் கோவைப் பதிகத்தின் தொடக்கம் 'ஆரூர் தில்லை அம்பலம்' என வருவதே - சம்பந்தர் 2-39-1 அப்பர் பெருமானும் 'தில்லைச் சிற்றம்பலம் என முதற் பாட்டையும்

(தொடர்ச்சி 678-ஆம் பக்கம் பார்க்க)

7கொந்து லாவிய ராமே சுரந்தனி
வந்து பூஜைசெய் நால்வேத *தந்திரர்
கும்பு கூடிய 8வேளூர் 9பரங்கிரி தனில்வாழ்வே

---

(677-ஆம் பக்கத் தொடர்ச்சி)

'ஆரூர் மூலட்டானம்' என இரண்டாம் பாட்டையும் தொடங்கியுள்ளார். 6-70. திருவாரூர் - பஞ்சபூதஸ்தலங்களில் 'பிருதிவித்தலம்'; பிறக்க முத்தியளிக்கும் பெரும்பதி; 'பிறந்தவர் பிறவாப் பெரும் பதி' - கல்லாடம் 52, லக்ஷ்மி பூசித்த தலம். 'மலர் மென்பாவை முழுதுள திருவும் என்றும் முடிவில் மங்கலமும் எய்த விழுமிதின் நோற்றுப் பெற்ற வியன் திருவாரூர்'- கந்தபுரா - குமாரபுரி -81; சப்தவிடங்கத் தலங்களுள் முதன்மையானது. (வீதிவிடங்கத் தியாகர்). 'திருமகள் தவஞ்செய் செல்வத் திருவாரூர்ப் பணிவன் என்னா, ஒருவன் ஏழடி நடந்து மீண்டிடின் ஒப்பில் காசி, விரிபுனற் கங்கை யாடி மீண்டவன் ஆவன் என்றால், இருடிகாள் ஆரூர் மேன்மை பிரமற்கும் இயம்ப வற்றோ' - திருவாரூர்ப்புரா - தல மகிமை -71, திருப்புகழ் 820-க்கு முன்னுள்ள தலக்குறிப்பு - (பக்கம் 416) *(தந்திரர் - மறையவர்)

3. சிதம்பரம்: - பஞ்சபூதஸ்தலங்களில் ஆகாசத்தலம், பஞ்ச சபைகளில் நடராஜப் பெருமானது ஆனந்தத் தாண்டவம் நடைபெறும். 'கனகசபை' யைக் கொண்டது; தரிசித்தால் முத்தி யளிக்கும் தலம். திருப்புகழ் 590-க்கு முன்னுள தலக் குறிப்பைப் பார்க்க (பக்கம் 352)

4. சீகாழி.- திருஞானசம்பந்தப் பெருமான் திரு அவதாரம் செய்த திருப்பதி. இந்திரன் சூரனுக்கு அஞ்சி, மூங்கில் உருவாய் நின்று சிவனைப் பூசித்த திருப்பதி 'அமரர்கோன் துணைவியோடு ... வேணுவாகி மறைந்து நோற்றிருந்தான் மாதோ' - கந்தபுரா - 2-21-44 . பிரமன் பூசித்ததால் பிரமபுரம் எனப்படும். தேவர்கள் புகலிடமாகப் புகுதலால் திருப்புகலி என்பது ஒரு திருப் பெயர்; அதுபற்றியே 'உம்பர் வாழ்வுறு சீகாழி; என்றார்- 'இமையோர் புகவுலகு புகழ.. பெருகு புகலி நகரே' - சம். 3-67-3

(திருப்புகழ் 768 - தலக்குறிப்பு - பக்கம் 286 பார்க்க)

(தொ. பக். 679)

கொந்து - திரளான ஜனங்கள் - பக்தர் கூட்டங்கள் உலவுகின்ற ராமேசுரம், ஒப்பற்றநிலையில் வந்து பூஜை செய்கின்ற நான்கு வேதங்களும் வல்ல (தந்திரர்) கல்வியாளரின் கூட்டம் கூடியுள்ள (வேளூர்) புள்ளிருக்குவேளூர் - வைத்தீசுரன் கோயில், திருப்பரங்குன்றம் எனப்படும் தலங்களில் வீற்றிருக்கும் செல்வமே!

---

5 மாயூரம்:- இது மாயவரம் என வழங்கும். பார்வதி மயில் உருவுடன் சிவபிரானைப் பூசித்த திருப்பதி. 'இமயச் செல்வி மஞ்ஞையாய் வழிபட் டேத்தும் இது துலாப் பொன்னித் தானம்' -திருவிளை. அருச்சனை 19; திருப்புகழ். 792 -பக்கம் 348 தலக்குறிப்பைப் பார்க்க.

6. அம்பெறு சிவகாசி, - இது 'காசித்தலம்' எனக்கொண்டால் 'அம்' ஜலம் - கங்கையைக் குறிக்கும். சிவம் - மங்கலத்தைக் குறிக்கும் - காசி - இறந்தால் முத்தியளிக்கும் தலம். திருப்புகழ் 655-பக்கம் 2-தலக்குறிப்பைப் பார்க்க. 'சிவகாசி' என்றே ஒருதலம் தெற்கே பாண்டிநாட்டில் உள்ளது.

---

7. கொந்து உலாவிய ராமேசுரம் - கொந்து - திரள் - இங்கு பக்தர் திரளைக் குறிக்கும் - ஸ்ரீராமர் பூசித்ததலம் - திருப்புகழ் 987 -பக்கம் 852 - தலக்குறிப்பைப் பார்க்க.

8. வேளூர்:- இது புள்ளிருக்கு வேளூர் எனப்படும் வைத்தீசுரன் கோயில் - திருப்புகழ் 783 -பக்கம் 324 -தலக் குறிப்பைப் பார்க்க.

9. பரங்கிரி: - திருப்பரங்குன்றம் - ஆறு படைவீடுகளில் முதலாவது திருப்புகழ். 2-பக்கம் -22- தலக்குறிப்பு

10செம்பு கேசுர 11மாடானை யின்புறு
12செந்தி 13லேடகம் வாழ் 14சோலை யங்கிரி
15தென்றன் மாகிரி நாடாள வந்தவ
16செகநாதஞ்-
செஞ்சொ 17லேரக 18மாவா வினன்குடி
19குன்று தோறுடன் 20மூதூர் 21விரிஞ்சைநல்
செம்பொன் மேனிய சோணாடு
22வஞ்சியில் வருதேவே,

23கம்பை மாவடி மீதேய சுந்தர
*கம்பு லாவிய 24காவேரி சங்கமு†
25கஞ்சி ராமலை வாழ்தேவ தந்திர‡ 26வயலூரா-

---

*10.செம்புகேசரம்:- இது திரு ஆனைக்கா - பஞ்ச பூத ஸ்தலங்களில் 'அப்பு' ஸ்தலம் - திருப்புகழ். 495-பக்கம் 122- தலக்குறிப்பு.*

*11 ஆடானை.- திருப்புகழ் 985பக்கம் 848 தலக்குறிப்பு.*

*12 செந்தில்.- திருச் செந்தூர் - 'செந்திலிலும் என்றன் முன் கொஞ்சி நடனங் கொளும் கந்தவேளே' (திருப்புகழ் 16) என நடன தரிசனம் பெற்றுத் தான் இன்புற்ற காரணத்தாலும் அருணகிரியார் இத்தலத்தை 'இன்புறு செந்தில்' என்றார். திருப்புகழ் 16- தலக்குறிப்பு பக்கம் 52 பார்க்க.*

*13. ஏடகம் - திருவேடகம் - மதுரைக்கு வடமேற்கு 12 1/2 மைல். சமணரொடு சம்பந்தர் வாது செய்து வைகையாற்றில் இட்ட ஏடு சென்று தங்கின தலம். 'ஏடுசென் றணைதரும் ஏடகத் தொருவனை' - சம்பந்தர் 3-32-11. (* கம்பு = சங்கு)*

*14. சோலையங்கிரி - என்பது பழமுதிர் சோலை. பாடல் 433 பக்கம் 586 தலக்குறிப்பு*

*15. தென்றல் மாகிரி - பொதியமலை - பாடல் 412-பக் 540 தலக்குறிப்பு. († காவேரி சங்க முகம் - காவிரிப்பூம்பட்டினம்)*

*16. ஜெகநாதம்: வடக்கே உள்ள இத்தலத்தில் உள்ள ஆண்டவனும் அருணகிரியார்க்கு முருகனாகக் காட்சி கொடுத்தார் போலும்: அல்லது, அத்தலத்தில் முருகன் ஆலயமும் இருந்தது போலும். (‡ தந்திர -சேனையை உடையவனே!)*

*17 ஏரகம் :- திருவேரகம் - பாடல் 195-பக்கம் 2- தலக்குறிப்பு*

*18. ஆவினன்குடி:- பாடல் 100-பக்கம் 234 - தலக்குறிப்பு*

*19. குன்றுதோறாடல் - பாடல் 233-பக்கம் 84- தலக்குறிப்பு*

*20. மூதூர் - 'பழம்பதி' - 'விருத்தபுரி' இது திருப்புன வாயில் என்னும் தேவாரம் பெற்ற திருப்பதி. "பத்தர் தாம்பலர் பாடி நின்றாடும் பழம்பதி, பொத்தி வாந்தைகள் பாட்டறாப் புனவாயிலே" (சுந்தரர்-7-50-1). திரு ஆடானைக்கு வடக்கு 12 மைல்.*

(செம்புகேசுரம்) திருஆனைக்கா, ஆடானை - திருஆடானை, நீ மகிழ்ந்து வாழும் செந்தில் - திருச்செந்தூர், திருஏடகம், (வாழ்) (ஆறு திருப்பதிகளுள் ஒன்றானதாய் நீ வாழ்கின்ற) சோலைமலை - பழமுதிர்சோலை, தென்றல் - தென்றல் காற்றுக்குப் பிறப்பிடமான மாகிரி சிறந்த பொதியமலை - எனப்பட்ட (நாடு ஆள) தலங்களில் வீற்றிருக்க, வந்தவ - வந்தவனே! ஜெகநாதும் -

செம்மையான (சொல் புகழ்பெற்ற (செவ்விய) குருவாக நின்று உபதேசச்சொல்லை நீ உன் தந்தைக்குச் சொன்ன (திரு ஏரகம் - சுவாமிமலை, மா - சிறந்த, ஆவினன்குடி திருவாவினன்குடி - பழநி, குன்று தோறாடல் இவையுடன் மூதூர் பழம்பதி எனப்படும் திருப்புனவாயில், திருவிரிஞ்சை எனப்படும் விரிஞ்சிபுரம் - ஆகிய தலங்களில் வீற்றிருக்கும் சிறந்த செம்பொன் நிறங்கொண்ட திருமேனியை உடையவனே! சோழநாட்டில் சிறந்த தலைநகரான வஞ்சியில் - கருவூரில் எழுந்தருளியுள்ள தெய்வமே!

கம்பா நதி விளங்கும் (காஞ்சியில்) மாமரத்தின் அடியில், மீது, ஏய -பொருந்திவிளங்கும் அழகனே! கம்பு - சங்குகள் உலவும்காவேரி கடலுடன் சங்கமம் ஆகும் முகத்துவாரத்தில் உள்ள காவிரிப்பூம்பட்டினத்திலும், சிராமலை - திருச்சிராப் பள்ளியிலும், வாழ்கின்ற (தேவசேனாபதியே) தேவர்களை (தந்திர) சேனையாக உடையவனே! (அல்லது வாழும்) தேவனே! (பூத) சேனைகளை உடையவனே! வயலூரர்ப் பெருமானே!

---

(திருஆடானை - திருப்புகழ் 985 பக்கம் 848 - தலக்குறிப்பு)

நான்கு வேதங்களும் பூசித்த தலம். 'சரத வேதம் பரவு புனவாயில் நகரும்'- திருவிளை - அருச்சனை -32.

21 விரிஞ்சை. - விரிஞ்சிபுரம் - திருப்புகழ். 672 பக்கம் 44 தலக்குறிப்பு.

22. வஞ்சி. 'சோணாடுவஞ்சி' என்றதனால் கருவூர் - திருப்புகழ் 927 -பக்கம் 702 -தலக்குறிப்பு, 'சோழன் மன்னிய அநபாயன் சீர் மரபின் மாநகரமாகும் தொன்னெடுங் கருவூர்" பெரியபுரா - எறி பத்த - 2. "வாடா வஞ்சி" - புறநானூறு 39

23 கம்பை மாவடி: - காஞ்சிபுரத்தில் ஏகாம்பரநாதர் திருக்கோயிலில் மாமரத்தின் கீழ் இருக்கும் முருகர் -'காஞ்சி மாவடி வைகும் செவ்வேள் மலரடி போற்றி' - கந்தபுரா -பாயிரம். 3

24. காவேரி சங்கமுகம் - காவிரிப் பூம்பட்டினம் (பல்லவனீச்சரம்) சீகாழிக்குத் தென்கிழக்கு 10 மைல். பட்டினத்துப் பிள்ளையார் அவதரித்த தலம்.

25 சிராமலை:- பாடல் 329-பக்கம் 320 தலக்குறிப்பு

26 வயலூர் - திருப்புகழ் 904-பக்கம் 636-தலக்குறிப்பு.

கந்த மேவிய 27போரூர் நடம்புரி
28தென்சி வாயமு மேயா *யகம்படு
29கண்ட யூர்வரு சாமீக டம்பணி மணிமார்பா
எம்பி ரானொடு வாதாடு மங்கையர்
உம்பர் †வாணிபொ னின்மால் சவுந்தரி
எந்த நாள்தொறு மேர்பாக நின்றுறு
துதியோதும்
இந்தி ராணிதன் மாதோடு நன்குற
மங்கை மானையு மாலாய்ம னந்‡துல
கெங்கு மேவிய தேவால யந்தொறு
பெருமாளே (315)

---

27 போரூர் - திருப்போரூர் - திருப்புகழ் 714 பக்கம் 146 தலக்குறிப்பு
( *அகம்படு - பாவத்தைத் தொலைக்கும்.)

28. சிவாயம்.- வாட்போக்கி - என்பர் - பாடல் 347- பக்கம் 368 தலக்குறிப்பு. குழித்தலைக்குத் தெற்கு 5 மைலில் உள்ள திருவாலீச்சுரம் என்பர்

29. கண்டியூர் - தஞ்சாவூருக்கு வடக்கு 6 மைல். சப்தஸ்தான க்ஷேத்திரங்களில் ஒன்று திருவையாற்றுக்குப் போகும்வழி (பாடல் 891-பக்கம் 602 - தலக்குறிப்பு) பாடல் 890 -பக்கம் 602 கீழ்க்குறிப்பும் பார்க்க. அஷ்டவீரத் தலங்களில் ஒன்று. பிரமன் சிரசைக் கொய்த தலம்.

† சரஸ்வதி, இலக்குமி முதலானோர் தேவசேனையை ஏத்துவது "இந்திரையும் நாமகளும் ஏனையரும் ஏத்தப் புந்திகளி கூர்தரு புரந்தரன் முன் வந்தாள்" - கந்தபுரா 5-2-232

‡உலகெங்குமேவிய தேவாலயம் என்றதனால் - உலகில் உள்ள எல்லா மூர்த்தத் தேவாலயங்களிலும் உள்ள கடவுள் முருகனே என்பது அருணகிரியார் கொள்கை. "யாதொரு தெய்வங்கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே, மாதொரு பாகனார் தாம் வருவர்"- (சித்தியார்) என்னும் கருத்தது.

---

வேலும் மயிலுந் துணை

---

# திருஎழு கூற்றிருக்கை

திருஎழு கூற்றிருக்கை- இதன் சிறப்பு ஆய்தற் பாலது "புகலியில் வித்தகர் போல - அமிர்தகவித் தொடைபாட - அடிமை தனக் கருள்வாயே" (திருப். 242) என்று வேண்டியவாறே, புகலி வித்தகர் (சம்பந்தப் பெருமான்) திருஎழு கூற்றிருக்கை பாடியவாறே தாமும் முருகவேளுக்கு இத்திரு எழு கூற்றிருக்கையைப் பாடித் தமது ஆண்டவனுக்குச் சமர்ப்பித்தனர். அருணகிரியார்.

கந்தம் - நறுமணங்கள் பொருந்திய திருப்போரூர், நீ நடனம் புரிந்த தலமாம் தென் - அழகிய, சிவாயம் - திருவாட் போக்கி - எனப்படும் தலங்களில் (மேயாய்) விளங்குபவனே! அகம் படு - பாவத்தை போக்குகின்ற அல்லது பிரமனது அகங்காரம் அடக்கப்பட்ட; அல்லது பிரமனது அ +கம் = அந்தத்தலை; படு - அறுபட்ட திருக்கண்டியூரில் எழுந்தருளும் சுவாமியே! கடப்பமாலை அணிந்துள்ள அழகிய மார்பனே!

எம்பிரானொடு - எம்பெருமான் சிவனொடு, வாதாடு நடனமிடத் - தர்க்கம் புரிந்த, மங்கையர் - காளியும் அவளைச் சேர்ந்த தோழியர்களும், உம்பர் - மேலுலகில் உள்ள (வாணி) சரஸ்வதி, பொன் (இலக்குமி) எனப்படும் நீள்மால் சவுந்தரி - பெரிய பெருமை வாய்ந்த அழகி, அல்லது திருமாலுக்கு உரிய அழகி ஆகியஇவர்கள் யாவரும் (எந்த நாள்தொறும்) தினந்தோறும் ஏர்பு ஆகநின்று -உள்ளத்து எழுச்சியுடன்நின்று, பொருந்திய துதியுடன் போற்றுகின்ற

இந்திராணி (இந்திரன்மனைவி சசி) பெற்ற மாது - தேவசேனையுடன், நன் - நல்ல, குறமங்கைமான் - குறக்குலப் பெண்மான் வள்ளியையும் - மாலாய் - ஆசையுடன் மணந்து திருமணஞ்செய்து கொண்டு, உலகத்தில் எங்குமுள்ள தேவாலயங்கள் தோறும் வீற்றிருக்கும் பெருமாளே!

---

**வேலு மயிலுந் துணை**

---

இக்காரணம் பற்றிச் சம்பந்தர் பாடியுள்ள திரு எழு கூற்றிருக்கையிலுள்ள ஒரு தனிச்சிறப்பு அருணகிரியார் பாடியுள்ள திருஎழு கூற்றிருக்கைக்கும் உண்டு என்பது போதரும். ஞான சம்பந்தப் பெருமானுடைய திருப்பதிகங்களை நாடோறும் ஓதிப் பயின்று வந்த அவர் தந்தையார் சிவபாத இருதயர் அவை நாடொறும் பெருகி வர அங்ஙனம் முற்றும் பயிலப் பெறாது வருந்த அவர் பொருட்டுச் சம்பந்தர் திருஎழு கூற்றிருக்கையைப் பாடியருளி அஃது ஒன்றையே விதிப்படி ஓதினால், எல்லாப் பதிகங்களையும் ஓதிய பயன் கிடைக்கும் என்று ('எந்தைக் கெழு கூற்றிருக்கை'- பெரியபுரா. 2174) அறுதியிட்டு உரைத்தனராம். அதுபோல, அருணகிரியாரின் பதினாறாயிரம் திருப்புகழையும் ஓதும் நியமத்தால் வரும் பயன் அவரருளிய இந்தத் திருஎழு கூற்றிருக்கை ஒன்றைப் பாராயணம் செய்யும் நியமம் ஒன்றினாலேயே பெறலாகும் என்பது வெள்ளிடை மலை போலத் தெள்ளிதில் உணரலாம் என்க. பின்னும், எழு கூற்றிருக்கை என்பது ஒன்று முதல் ஏழுவரை ஏறியும் இறங்கியும் எண்ணலங்காரம்படப் பாடப்படும் பாட்டுவகை எனப்பொருள் தருவதுடன் திரு - எழு - கூற்று - இருக்கை எனப் பிரிவதாகித், திரு - முத்தித்திரு முத்தி இன்பம், எழு - எழுகின்ற - முத்தியின்பத்தை எழுப்பு

(தொடர்ச்சி 684-ஆம் பக்கம் பார்க்க)

# திருவெழுகூற் றிருக்கை

(இப்பாடலின் இலக்கணத்தைப் பட விளக்கத்திற் காண்க)

ஓருரு வாகிய தாரகப் பிரமத்
1தொருவகைத் தோற்றத் திருமர பெய்தி
ஒன்றா யொன்றி யிருவரிற் றோன்றி 2மூவா தாயினை,
3இருபிறப் பாளரி 4னொருவ னாயினை;
ஓராச் செய்கையி னிருமையின் முன்னாள்
5நான்முகன் குடுமி இலமப்பினிற் பெயர்த்து
6மூவரும் போந்து இருதாள் வேண்ட ஒருசிறை
விடுத்தனை;

---

(683-ஆம் பக்கத் தொடர்ச்சி)

சின்ற - கூற்று - சொற்களின் - இருக்கை - இருப்பிடம் எனப் பொருள் தருவதாகி - லக்ஷ்மீகரமும் வீட்டின்பமும் தருதற்கு இருப்பிடமான திருப்பதிகம் இது என்பது இப்பதிகத்தின் பெயரளவிலேயே விளங்கா நிற்கும்.

**திருஎழு கூற்றிருக்கை** 96 பிரபந்தங்களுள் ஒன்று; அவைதாம்:-

சாதகம், பிள்ளைக்கவி, பரணி, கலம்பகம்,* அகப்பொருட் கோவை, ஐந்திணைச் செய்யுள், வருக்கக்கோவை, மும்மணிக் கோவை, அங்கமாலை, அட்டமங்கலம், அநுராகமாலை, இரட்டை மணிமாலை, இணைமணிமாலை, நவமணிமாலை, நான்மணிமாலை, நாமமாலை, பல்சந்தமாலை, பன்மணிமாலை, மணிமாலை, புகழ்ச்சிமாலை, பெருமகிழ்ச்சிமாலை. வருக்கமாலை மெய்க்கீர்த்திமாலை, காப்புமாலை, வேனின்மாலை, வசந்தமாலை, தாரகைமாலை, உற்பவமாலை, தானைமாலை, மும்மணிமாலை, தண்டகமாலை, வீரவெட்சிமாலை, வெற்றிக் கரந்தை மஞ்சரி, போர்க்கெழு வஞ்சி, வரலாற்றுவஞ்சி, செருக்கள வஞ்சி, காஞ்சிமாலை, நொச்சிமாலை, உழிஞைமாலை, தும்பைமாலை, வாகைமாலை, ஆதோரணமஞ்சரி, எண்செய்யுள், தொகைநிலைச்செய்யுள், ஒலியலந்தாதி, பதிற்றந்தாதி, நூற்றந்தாதி, உலா, உலா மடல், வளமடல், ஒருபா ஒருபஃது இருபா இருபஃது, ஆற்றுப்படை, கண்படைநிலை, துயிலெடைநிலை. பெயரின்னிசை, ஊரின்னிசை, பெயர்நேரிசை, ஊர்நேரிசை, ஊர்வெண்பா, விளக்குநிலை, புறநிலை, கடைநிலை, கையறுநிலை, தசாங்கப்பத்து தசாங்கத்தியல். அரசன் விருத்தம், நயனப்பத்து, பயோதரப்பத்து, பாதாதிகேசம்.

ஒரு பொருளாகிய பிரணவமாம் முழுமுதலின் ஒரு வகையான தோற்றத்தில் (ஐந்து முகத்தோடு அதோ முகமும் சேர்ந்த சிவத்தின் தோற்றத்தில்) சத்தி - சிவம் எனப்படும் என்னும் இரண்டின் இலக்கணமும் கொண்டு, தான் ஒரு உருவாகப் பொருந்தி, அந்தச் சிவம் சத்தி எனப்படும் இருவரிடம் தோன்றி, மூப்பு இலாது, என்றும் இளையவனாய் விளங்குகின்றவன் ஆயினை;

இரு பிறப்பாளர் அந்தணர் குலத்தில் ஒப்பற்ற வனாயினை:

பிரணவத்தின் பொருளை (ஓராது) அறியாமல் (பிரமன்) விழித்த காரணத்தால், (இருமையின்) பெருமையுடன் முன்பு ஒரு நாள் (ஒரு) பிரமனுடைய குடுமியை இமைப்பளவில் கலையச் செய்து, அரன், அரி, இந்திரன் ஆகிய மூவரும் உன்னிடம் வந்து உனது இரண்டு திருவடிகளைப் பணிந்து முறையிட்டு வேண்ட நீ இட்ட சிறையினின்றும் அந்தப் பிரமனை விடுவித்தாய்;

---

சோதிபாதம், அலங்காரபஞ்சகம், கைக்கிளை, மங்கலவெள்ளை, தூது, நாற்பது, குழமகன், தாண்டகம், பதிகம், சதகம், செவியறிவுறூஉ, வாயுறை வாழ்த்து, புறநிலை வாழ்த்து, பவனிக்காதல், குறத்திப்பாட்டு, உழத்திப்பாட்டு, ஊசல், எழுகூற்றிருக்கை, கடிகைவெண்பா, சின்னப்பூ, விருத்தஇலக்கணம், முதுகாஞ்சி, இயன்மொழி வாழ்த்து, பெருமங்கலம், பெருங்காப்பியம், சிறுகாப்பியம்.

1. ஒருவகைத் தோற்றத் திரு மரபு எய்தி - திருப்புகழ். 389 முதல் அடி பக்கம் 480 குறிப்பு

2 'என்றும் இளையாய்' - திருமுருகாறு தனிப்பாடல்.

3. இரு பிறப்பாளர் -உப நயனத்துக்கு முன்பு ஒரு பிறப்பும் பின்பு ஒரு பிறப்புமாகிய இரு பிறப்பினையும் உடைய அந்தணர் (திருமுரு. 182 உரை)

4. ஒருவன் - சம்பந்தர் 'அந்தணர் ஆகுதி பெருக பிள்ளையார் திரு அவதாரம் செய்தார்'- பெரிய புரா. ஞானசம். 23, 26.

5. "நாலு சிரமோடு சிகை தூளிபட தாளமிடும் இளையானே"- திருப்புகழ். 987; 'குட்டினான் அயன் நான்கு மாமுடிகளும் குலுங்க' - கந்தபுரா. 1-16-14- திருப். 608-பக்கம் 406 குறிப்பு ††

6. மூவரும் போந்து - திருமுருகாற்றுப்படை - திரு ஆவினன் குடிப் பகுதியில் - (1) புள்ளணி நீள் கொடிச்செல்வன் - திருமால், (2) மூவெயின் முருக்கிய செல்வன் - சிவன், (3) யானை எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வன் - இந்திரன் - இம் மூவரும் கூறப்பட்டுளர். மூவர் - அரன், அரி, பிரமன் எனக் கொண்டால் பிறிதொரு அண்டத்துப் பிரமன் எனப்பொருள் கொள்ளலாம்.

ஒருநொடி யதனில் இருசிறை மயிலின்
முந்நீ ருடுத்த நானிலம் அஞ்ச நீ 7வலஞ் செய்தனை;

8நால்வகை மருப்பின் மும்மதத் திருசெவி
ஒருகைப் பொருப்பன் மகளை வேட்டனை;

ஒருவகை வடிவினி லிருவகைத் தாகிய
9மும்மதன் தனக்கு மூத்தோ னாகி
நால்வாய் முகத்தோன் ஐந்துகைக் கடவுள்
அறுகு சூடிக் கிளையோ னாயினை;

10ஐந்தெழுத் ததனில் நான்மறை யுணர்த்து
முக்கட் சுடரினை 11இருவினை மருந்துக் 12கொருகுரு
வாயினை;

13ஒருநாள் உமையிரு முலைப்பா லருந்தி
14முத்தமிழ் விரகன் நாற்கவி ராஜன்
15ஐம்புலக் கிழவன் 16அறுமுக னிவனென
எழில்தரு மழகுடன் கழுமலத் துதித்தனை;
அறுமீன் பயந்தனை, ஐந்தரு வேந்தன்
நான்மறைத் தோற்றத்து முத்தலைச் செஞ்சூட்
17டன்றி லங்கிரி விருபிள வாக ஒரு வேல் விடுத்தனை,
காவிரி வடகரை மேவிய குருகிரி இருந்த
18ஆறெழுத் தந்தணர் அடியிணை போற்ற
ஏரகத் திறைவ னென இருந்தனையே

---

7 வலஞ் செய்தது - திருப்புகழ் 184-பக்கம் 439 கீழ்க்குறிப்பு திருப்புகழ் 267-பக்கம் 164 குறிப்பு

8. ஐராவதம் நான்கு தந்தங்களை உடையது - 'பட்டநாற் பெரு மருப்பினாற்கர இபத்தின் வாட்பிடியின் மணவாளா' -திரு.265 அடி 5

9. மும்மதன் தனக்கு மூத்தோனாகி - முருகன் வேண்ட ஒரு கோட்டு மழகளிறாகிய கணபதி - இரு கோட்டு முதுகளிறாகத் தோன்றி, மும்மதம் கூடிவந்த காரணத்தால் - அந்த மும்மத முது களிற்றுத் தோற்றம் முருகன் தோற்றத்துக்குப் பின்னர் நிகழ்ந்த நிகழ்ச்சியாக, முருகன் அந்த மும்மதக் களிற்றுக்கு மூத்தோன் ஆயினன் வள்ளியை வெருட்ட வந்தபோது காட்டானையாக வந்த காரணத்தால் கணபதிக்குக் கன்ன மதம், கை மதம், கோச

(தொடர்ச்சி 688-ஆம் பக்கம் பார்க்க)

ஒரு நொடிப் போதில் (இரு) பெரிய சிறகுகளை உடைய மயில்மீது ஏறி, (முந்நீர்) கடலை (ஆடையாக) உடுத்துள்ள - குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் - எனப்படும் நால் வகைத்தான உலகு அஞ்ச நீ அதை வலம் வந்தனை:

நான்கு வகைத் தந்தங்களையும், மும்மதத்தையும், இரண்டு செவிகளையும், ஒப்பற்ற துதிக்கை ஒன்றையும் கொண்ட மலையன்ன ஐராவதத்தை உடைய இந்திரன் மகள் தேவசேனையை மணஞ் செய்து கொண்டனை:

ஒருவகையான யானைவடிவிலே இருவகைத்தாகிய - 'மழ களிறு' 'முது களிறு' (இளங்களிறு)- (வயதான களிறு) - என இரண்டு வகையாகவும் வரவல்ல 'மும்மதன்' - மும்மதத்துடன் வந்த யானைக்கு மூத்தவனாகி விளங்கி, தொங்கும் துதிக்கை முகத்தோனாம் ஐங்கரக் கடவுள், அறுகுசூடி -ஆகிய கணபதிக்குத் தம்பி ஆய் விளங்குகின்றாய்.

ஐந்தெழுத்து பஞ்சாக்ஷர மூலமாக நான்கு வேதங்களும் கடவுள் இவரே என உணர்த்தும் முக்கட் சுடரின் ஐ -மூன்று சுடர்களைத் தமது கண்களாகக் கொண்டுள்ள தலைவரும், நல்வினை - தீவினை எனும் இரண்டு வினைகளை ஒழிக்கும் மருந்தாய் விளங்குபவருமான சிவனுக்கு ஒரு குருவாக அமைந்தாய்:

முன்பொருநாள் உமாதேவியின் பெருமை வாய்ந்த முலைப் பாலை உண்டு, இயல் - இசை - நாடகம் எனப்படும் முத்தமிழில் வல்லவனாய் (ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் எனப்படும்) நான்குவிதக் கவிபாடுவதிற் கவிராஜனாய், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் எனப்படும் ஐம்புலங்களுக்கும் (பஞ்சேந்திரியங்கட்கும்) உரிய உணர்ச்சிகட்கும் கிழவனாய் - பஞ்சேந்திரியங்களையும் தனது வசத்தில் உடையோனாய் - அந்த உணர்ச்சி கட்கு அடிமைப் படாதவனாய் - ஐம்புலம் வென்றோனாய் - ஆறுமுகங்களை உடைய ஷண்முக மூர்த்தியே இவன் என்று யாவரும் கூறிப் புகழும்படி (எழில்) இளமை விளங்கும் அழகுடனே (கழுமலம்) சீகாழிப்பதியில் தோன்றினாய்:

(அறுமீன்) கார்த்திகை மாதர்களாம் ஆறு நக்ஷத்திரங்களும் பெற்றபுதல்வனாய் விளங்கினாய்; சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிஜாதம், கற்பகம் எனப்படும் ஐவகைத் தெய்வத விருக்ஷங்கள் உள்ள பொன்னுலகத்துக்கு (வேந்தன்) சக்ரவர்த்தி ஆய் விளங்கி, நால் - நாலு வகையானதாய், மறை (ரகசியமான) விளங்காததான தோற்றத்து (பை, முட்டை, நிலம், வியர்வை) எனப்படும் தோற்றங்களுள் ஒன்றானதும் - மூத்து - அழுகு, அலை அசைதரும் - அல்லது முத்தலை முப்பிரிவுகளைக் கொண்ட செவ்விய உச்சிக்

(தொடர்ச்சி 688-ஆம் பக்கம் பார்க்க)

(687-ஆம் பக்கம் உரைத் தொடர்ச்சி)
கொன்டையை உடையதுமான, அன்றில் - கிரௌஞ்சப் பறவையின் பெயர் கொண்ட கிரி - மலை இரண்டு பிளவு ஆகும்படி ஒப்பற்ற ஒரு வேலைப் பிரயோகித்தாய்;

காவிரியின் வடகரையில் உள்ள குருகிரி - குருமலை எனப்பெயர் கொண்ட சுவாமிமலையில் (திருஏரகத்தில்) குடி-கொண்டுள்ளவர்களும், உனது திருமந்திரமாகிய 'குமாராய நம' என்னும் சடாக்ஷரமந்திரம் ஓதுபவர்களுமாகிய அந்தணர்கள் உனது திருவடியிணையைப் போற்ற, "ஏரகத்து இறைவன்" என்னும் திருப்பெயருடன் விளங்கி வீற்றிருக்கின்றாய்.

---

(686-ஆம் பக்கம் குறிப்புத் தொடர்ச்சி)
மதம் என மூன்று மதநீர் ஏற்பட்டது; 'மும்மதத்தன் என்றொரு பெயர் தனக்கும்... உறுத்தவன்' - தணிகைப் புரா. காப்பு: இனி

10. ஐந்தெழுத்திலே - பஞ்சாக்ஷரத்திலே - நான்கு வேதப் பொருள்களும் அடங்கும் என்பதை உணர்த்தும் முக்கட் பெருமான் எனவும் பொருள் காணலாம். "மந்திர நான்மறையாகி... ஆன்வன... அஞ்செழுத்துமே"- சம்பந்தர் 3-22-2; "வேத நான்கினும் மெய்ப் பொருளாவது நமச்சிவாயவே" - சம்பந். 3-49-1

11. "தீவினைக்கோர் மருந்தாவான்" - சம்பந்தர். 2-43-11

12. தந்தைக்கு குரு - 1178 சுற்றடி.

13. உமை முலை உண்டது - திருப்புகழ். 110- பக்கம் 260 குறிப்பு

14. 'தாரை.. அகிலமும் ஓதா துணர்ந்த - 'முத்தமிழ் விரகன்' வந்தான் என ஊத' பெரிய புரா. ஞானசம்பந்தர். 223

15. சம்பந்தர் - தன்னை இறைவனது ஒளி எனக் கூறியுள்ளார் "கருக்குடி மைந்தன் தன்னொளியான... சம்பந்தன்" - சம். 3-21-11 ஆதலால் இறைவன் தன்மை சம்பந்தர்க்கும் உண்டு. "புலன்கள் வென்றவன் எம் இறைவன்"- சம்பந்தர். 3-61-7

16. சம்பந்தர் - அறுமுகன் தோற்றம் - திருப். 841 அடி 5, 8.

17. அன்றில் அங்கிரி = குருகு பெயர்க் குன்றம் - கிரௌஞ்ச கிரி "குருகு பெயர்க் குன்றம் கொன்ற நெடுவேலே"- சிலப்பதி குன்றக்குரவை. "அன்றிலம் பேர் பெற்றுள்ள அவுணன்"- கந்த புரா. 2-24-1

18. ஏரகத்தில் ஆறெழுத் தந்தணர் முருகனைத் துதிப்பது - "இரு பிறப்பாளர்... ஆறெழுத் தடக்கிய அருமறைக் கேள்வி..... நாவியன் மருங்கில் நவிலப்பாடி... பொழுதறிந்து நுவல... மகிழ்ந்து ஏரகத் துறைதலும் உரியன்" - திருமுரு. 186-9.

உ
முருகன் துணை

# அநுபந்தம்
# திருப்புகழும் தெய்வங்களும்

(விஷயங்களுக்கு அடுத்த எண் திருப்புகழ்ப் பாவின் எண்)

ஸ்ரீ அருணகிரிநாதர் திருவாய்மலர்ந்த திருப்புகழ் என்னும் நூலின் பெருமைக்கு முக்கிய காரணம் அந்நூலின் நடுநிலைப்போக்கு. "தெய்வம் இகழேல்" என்னும் ஔவைப்பிராட்டியின் நன்மொழியைப் பொன்மொழியாகப் போற்றினவர் அருணகிரியார். நரகில் உழல்பவர் இவர் இவர் என அவர் கூறிய அட்டவணையில் "ஈசர் விஷ்ணுவை சேவை செய்வோர்தமை இகழ்வோர்" களையும் ஒன்றாகச் சேர்த்துள்ளார். தம்மை அடிமைப்படுத்தி ஆண்டருளி மெய்ஞ்ஞானம் பாலித்த திருக்கைவேற் பெருமானைக் குறிக்கோள் தெய்வமாகக் கொண்டு, கணபதியின் பெருமையைக் கூறி அப்பெருமானுக்கு இளையோனே என்றும், சிவபிரானது சிறப்பினைக் கூறி அப் பெரியோனுக்குப் புதல்வோனே, குருமூர்த்தியே என்றும், திருமாலின் லீலைகளைக் கூறி அவ்வண்ணலுக்கு உகந்த மருகோனே என்றும் திறம் விளங்கப் போற்றுவர். "வாக்கிற் கருணகிரி" எனப் பட்டம் பெற்றவராதலின், கணபதியைப் புகழுமிடத்தோ, சிவபிரானைத் தோத்திரம் சொல்லுமிடத்தோ, தேவியைச் சிறப்பிக்கும் இடத்தோ, திருமாலைப் போற்றுமிடத்தோ, இவரது வாக்கின் அழகுக்கு இணையான பகுதி மேற்சொன்ன கடவுளரைத் தனி முறையிற் போற்றும் நூல்களகத்தும் காண்டலரிது. இக்கடவுளரைப் பற்றித் திருப்புகழாதிய நூல்களில் அருணகிரியார் கூறியுள்ள விஷயங்களைத் "திருப்புகழும் கணபதியும்" , "திருப்புகழும் சிவனும்" "திருப்புகழும் (பார்வதி) தேவியும்", "திருப்புகழும் திருமாலும்" முதலிய தலைப்புக்களின்கீழ் விளக்கி எழுத விரும்புகின்றேன். முதலாவது, "திருப்புகழும் கணபதியும்" என்பதை எடுத்துக் கொண்டு கணபதியைப் பற்றித் திருப்புகழில் உள்ள முக்கிய விஷயங்களைக் கூறுவோம்:

## 1. திருப்புகழும் கணபதியும்

**(1) கணபதிக்கு உகந்த உணவுப்பொருள்கள்:**

அப்ப வகைகள், அமுது, அவரை, அவல், இளநீர், எள், கடலை, கரும்பு, கற்கண்டு, கிழங்குகள், (வெண்) சர்க்கரை, சுகியன்,

சோறு, தினைமா, துவரை, தேங்காய், தேன், நெய், பச்சரிசி, பணியாரம், பயறு, பருப்பு, வாழைப்பழம் - மாம்பழம் பலாப்பழம் - வெள்ளரிப்பழம் முதலிய பழவகைகள், பாகு, பால், பிட்டு, பொரி, மாவுவகைகள், முறுக்கு, லட்டு, வடை.

## (2) கணபதியின் உருவமும் நிறமும்:

ஆனை முகத்தினர்; ஐந்து கரத்தினர்; ஒற்றை மருப்பினர்; பிறை சூடியவர்; பவள நிறத்தினர்; பானு (சூரிய) நிறத்தினர்; திருவரையிற் பாம்பைக் கச்சாகக் கட்டியுள்ளவர்; தொப்பை வயிற்றினர்; மத்தள வயிற்றினர்.

## (3) கணபதியின் திருவருளும் பராக்ரமமும்:

அடியார்க்குக் கற்பக விருக்ஷம்போல அருளும் அன்பும் நிறைந்த கடவுள். கணங்களுக்குத் தலைவர்; வல்லபை தேவியின் கணவர்; மூஷிக (பெருச்சாளி) வாகனர்; கஜமுகாசுரனை அடக்கினவர்; சிவபிரானது தேரின் அச்சை முறித்தவர்; தந்தையாம் சிவபிரானை வலம் வந்து தாயிடமிருந்து மாதுளங்கனி பரிசு பெற்றவர் (1240); வியாச முனிவர் பூஜை செய்து நிவேதனம் வைத்துத் தொழுது சொல்லப் பாரதக்கதை முழுமையும் மேருமலையில் தமது தந்தமே எழுதுகோலாகக் கொண்டு எழுதினவர் (1019, 1098); யானையாக எதிர் தோன்றி வள்ளியைத் தமது இளவல் முருகருக்குக் கூட்டுவித்தவர்; தம்பி முருகரின் கையைப் பிடித்து (அழைத்துச்) செல்பவர் (454); ஓர் அரசன் மகள் வருந்தி அழைக்க அவளது பகைவர்களை வெருட்டி ஓட்டி அவளுக்கு உதவினவர் (4); கடல் நீரைத் தமது துதிக்கையால் உறிஞ்சினவர் (5).

## (4) கணபதிக்கு உகந்த வழி பாடு : தோப்பணமும், குட்டும்.

## (5) அருணகிரியார் கணபதிக்கு இட்டழைத்த திருநாமங்களுள் அருமை வாய்ந்தன:

"அம்புலி மௌலியான், ஐந்துகர பண்டிதன், குஞ்சர மாமுக விக்கின ப்ரபு, குட்டிக் கரிமுகன், ஞான தொப்பை, தொப்பையப்பன், மகோதரன், மத்தள வயிறன்"- என்பன.

**(6) கணபதியும் முருகரும்:**

கணபதியை இடைவிடாது சிந்திப்பவர் சிந்தையில் முருகவேள் உகந்து வாழ்வர்:

'மதகளி றனவர தமுமகலா மாந்தர்கள் சிந்தையில் வாழ்வாம்படி செந்திலில் அதிபதி முருகன்' - தேவேந்திர சங்க வகுப்பு.

**(7) கணபதி தோத்திரம்:**

(திருவானைக்காத் திருப்புகழ் 'அஞ்சன வேல்விழி' (495) என்னும் பாடலினின்றும் எடுத்துத் துதியாக அமைக்கப்பட்டது)

"குஞ்சர மாமுக விக்கி னப்ரபு!
அங்குச பாச கரப்ர சித்த! ஓர்
கொம்ப! மகோதர! முக்கண் விக்ரம கணராஜ!
கும்பிடு வார்வினை பற்றறுப்பவ!
எங்கள் விநாயக! நக்கர் பெற்றருள்
குன்றைய ரூபக! கற்ப கப்பிளை! அருள்தாராய்"

கணபதியின் பராக்கிரமங்களுள் 'கடல்நீரை உறிஞ்சினதைக் கூறினோம். அகத்திய முநிவர் கடல் நீரை உண்டது யாவரும் அறிந்தது; கணபதி கடல் நீரைப் பருகின சரித்திரம் அத்துணைப் பிரசித்தமில்லை. ஆதலின் அச்சரித்திரத்தை ஈண்டுக் கூறுவது அவசியமாயிற்று. மந்தர மலையை மத்தாக்கித் தேவர்கள் கடலைக் கடைந்தபோது மந்தரம் நீருள் அழுந்தி நிலைகுலையத் திருமால் உடனே ஒரு பெரிய ஆமை உருவெடுத்து அம் மத்தை மேலுக்கு எடுத்து வந்து நிறுத்தினர்; தேவர்கள் கடலைக் கடைந்து அமுதங் கண்டனர். பின்னர் நீரிற்கிடந்த ஆமை செருக்கடைந்து கடலைக் கலக்கி உலகங்களை அழிக்க முயல்வதைக் கண்டு அஞ்சி அடைந்த தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்கிச் சிவபெருமான் விநாயக-மூர்த்தியை அந்த ஆமையை அடக்க அனுப்பினர். அவர் கடல் நீரைத் தமது துதிக்கையால் உறிஞ்சினர். இங்ஙனம் கடல்நீரைக் கணபதி துதிக்கையால் உறிஞ்சினதை அருணகிரியார் "நினது திருவடி" என்னும் திருப்புகழில், "மகர ஜலநிதி வைத்த துதிக்கர வளரு கரிமுக ஒற்றை மருப்பன்" என்ற இடத்தில் குறித்துள்ளார். இதனை "மாமலைப்போற் கோடேந்திக் குறுமுநிபோற் கடலையெலாம் வாரித்துய்த்து" என்னும் சூரியற் புராணத்தாலும், "ஏழ்கடல்

உண்டகை காவிரி தந்தகை" எனவரும் கழியல் பிள்ளைத்தமிழாலும், "திரைபொரு வேலைநீர் ஒன்று பூட்கை நெடுங்கரத்துட்புக நின்றுறிஞ்ச" எனவரும் உபதேச காண்டத்தாலும் அறியலாகும். இங்ஙனம் கடல் நீரைக் கணபதி உறிஞ்சினபொழுது ஆமையும் அத்துதிக்கையில் புகுந்தது. பின்பு, விநாயகர் தாம் உறிஞ்சின நீரை மீண்டும் நிலத்திற் சிதறும்படி உமிழ, ஆமையும் பூமியில் சிதறுண்டு விழுந்தது. அந்த ஆமையைத் தமது தந்தத்தால் குத்தி அதனோட்டைப் பிடுங்கித் தந்தையாகிய சிவபிரானிடம் தந்தனர்.

"கோடு குத்திக் கமடங் குடைந்ததன்
ஓடு தந்தைக்(கு) அடியுறை தந்தனன்"
(உபதேச காண்டம், கூர்மாவதாரச் சருக்கம்)

அந்த ஓட்டைச் சிவபிரான் தமது மார்பிலணிந்தனர். "முற்றலாமை பூண்டு"- சம்பந்தர் தேவாரம். கடல் நீரைக் கணபதி உறிஞ்சினபொழுது ஆமையும் அவர் துதிக்கையுட் சென்றதைக் காட்டுகின்ற விநாயகமூர்த்தியின் சிலையுருவமும் உளது. திருத்தணிகை மலைக்கோயில் பிராகாரத்தில் (மேலண்டைப் பிராகாரம்) மத்தியிலுள்ள உச்சிப் பிள்ளையாரின் உருவததில் அவரது துதிக்கையின் மேல் உற்று நோக்கின் ஓர் ஆமை உருவத்தை இன்றும் காணலாம்.

திரிசிராப்பள்ளிக்கருகிலுள்ள வயலூர் என்னும் தலம் அருணகிரியாருக்கு மிக உகந்த தலம். அங்குள்ள கணபதி "பொய்யாக் கணபதி" என்னும் திருநாமத்தவர். அவரது திருவருள் உளதேல் நம்மையாண்ட முருகவேளைப் பாடச் செஞ்சொல் நெஞ்சில் எளிதில் எழும் என அருணகிரியார் கருதினார். வள்ளியம்மை பிணங்கினபொழுது என்னை யாண்ட முருகவேள் கணபதியின் துணையை நாடினரே; ஆதலின், அவரது அநுமதியைப் பெற்றே நானும் கணபதியைப் பாடிக் கணபதியாரின் திருவருளால் எனது ஆண்டவன் முருகவேளின் பெருமைகளை உள்ளங்குளிரப் பாடுவேனென்று துணிந்து, "நிசிசரரைப் பெலியிட்டருள் பெருமாளே, நினது திருவடி சத்திமயிற்கொடி நினைவு கருதிடு புத்திகொடுத்திட..... ஒற்றை மருப்பனை.... தொப்பண குட்டொடு வனச பரிபுர பொற்பத அர்ச்சனை மறவேனே" என்னும் பாடலைப்

பாடி முருகவேளைத் துதித்தார். இங்ஙனம் பத்தினிப் பெண்போலத் தமது நாயகராம் முருகவேளின் உத்தரவைப் பெற்றபின் "கைத்தல நிறைகனி, உம்பர் தரு" என்னும் பாடல்களைப் பாடப், பொய்யாக் கணபதியார் மிக மகிழ்ந்து அருணகிரியாரின் கனவில் தோன்றி, "அன்ப! நீ பாடும் திருப்புகழ்ப்பாக்களில் முருகவேளின் மயில், கடம்பு, வேற்படை, சேவற் கொடி, திருவடி, பன்னிருதோள், வயலூர் இவைகளை வைத்துப் பாடுவாயாக" எனக் கூறி மறைந்தார். அருணகிரியார் மகிழ்ந்தார்; விழித்தெழுந்தார்; ஆடினார்; "வித்தக மருப்புடைய பெருமாளே!.... உயர் திருப்புகழ் விருப்பமொடு செப்பென எனக்கருள்கை மறவேனே" என நன்றி பாராட்டும், "பக்கரை விசித்ரமணி" என்னும் திருப்பாடலைப் பாடினார். இங்ஙனம் தமக்கு அருள்பாலித்த பொய்யாக் கணபதியாரை அருளிற்சீர் 'பொய்யாதகணபதி' எனப் பாராட்டி, "அருளிற் சீர் பொயாத கணபதி..... வாழும் வயலியில் "அருளிற் சீர் பொயாத கணபதி.... வாழும் வயலியில் அழகுக் கோயில் மீது மருவிய பெருமாளே!" (910) எனத் தமது ஆண்டவரைப் போற்றி மகிழ்ந்தார். இதன் விரிவை யான் எழுதிய "அருணகிரிநாதர் வரலாறும் நூலாராய்ச்சியும்" என்னும் நூலிற் காணலாம்.

மேற் சொன்ன விஷயங்கள் அடங்கிய முக்கியமான பாடல்களின் எண்:- 168, 456,495, 551, 960, 986, 1005, 1019, 1098, 1240, 1244.

## 2. திருப்புகழும் சிவனும்

இனி, அருணகிரியார் சிவபிரானைப்பற்றி உரைத்துள்ள விஷயங்களை ஆராய்வோம்.

1. **சிவனது உருவமும் நிறமும்:** எரியின் மேனி, செம்பொன், மேனி, பாதி சிவப்பு - பாதி பச்சை.

2. **சிவபிரான் சூடும் மலர்கள் முதலிய:** அறுகு, ஆத்தி, (ஊ)மத்தம், (வெள்) எருக்கு, கரந்தை, கழுநீர், குரா, குருந்து, கொன்றை, சூதம், செம்பை, தாமரை, தும்பை, துழாய், நொச்சி, பாதிரி, பிச்சி, பூளை, மாதுளமபூ, வன்னி, வில்வம்.

3. **சிவபிரான் சிரசிற் சூடுவன:** கங்கை, பிறை, பாம்பு தேன், கொக்கிறகு, தலைமாலை, கொன்றைமாலை.

4. **சிவபிரான் உடலில் அணிவன:** ஆமைஓடு, பன்றியின் கொம்பு, எலும்புமாலை, * புலியுரி, சிங்கஉரி, யானைஉரி, தும்பைமாலை, அரவாபரணம்.

5. **சிவபிரான் திருக்கரத்துள்ளன:** சூலம், துடி, திருமாலின் குருதி நிரம்பிய பிரமகபாலம், மான், மழு, மணி, தீ.

6. **சிவபிரான் திருநாமங்களுள் அருமை வாய்ந்தன:** ஆதிரையான், ஒநமச்சிவாயசாமி, கயிலைமலைக்கிழவன், கரதல கபாலி, கனக கார்முகாசாரி (கனகம் - பொன், கார் முகம் - வில், மேரு பொன் மலைவில்) காமாரி (காமனுக்குப் பகைவன்), காலகாலப்ரபு, கீதநாயகர், குருவிலாதவர், கொண்டல் பாகன் (கொண்டல் - திருமால்), சடைத்தம்பிரான், சதாசிவ கோத்திரன், சாதியிலாதவர், நாகக்காப்பன், பரதகுரு, பினாகாயுதர், மழுவுழை கபால டமருக த்ரிசூல மணிகர விநோதர், முக்கட் சித்தர், விபூதி பூஷணர்.

7. **சிவபிரானது தன்மையும் திருவருளும்:** சிவபிரான் யார்க்கும் எட்டாதவர்; பிரமனுக்கும் திருமாலுக்கும் எட்டாதவர்; ஆயினும் அடியார்களுக்கு நினைத்த மாத்திரையில் அருள் புரிபவர்; அன்பர் அகத்திற் குடிகொள்பவர்; மூவரையும் தத்தம் தொழிலில் நிறுத்திவைத்துள்ளவர் (787); அம் மூவருக்கும் குருமூர்த்தியா யுள்ளவர்; மூங்கிலடியில் தோன்றினவர் (திருநெல்வேலியிலும் திருப்பாசூர் என்னும் தலத்திலும்); வேதத்தைக் கோவணமாகக் கொண்டவர், வேதங்களுக்கு எட்டாதவர், சுடலைப்பொடியணிபவர், தமிழுக்கு உடையவர்; பிரமகபாலத்திற் பிச்சையேற்பவர்; சூரியனையும் சந்திரனையும் அக்கினியையும் மூன்று கண்களாகக் கொண்டவர்; திருநீறு அணிபவர், கணபதிதாதை, முருகவேள் தந்தை, திங்களுக்குத் தலையிடந் தந்தவர், விடையை வாகனமாகக் கொண்டவர், கயிலையை இருப்பிடமாகக் கொண்டவர்.

8. **சிவபராக்ரமம்:** தக்ஷயாகத்தில் - வீரபத்திரரால் - அக்கினியின் கை குறைக்கப்பட்டது, இந்திரன் குயில்வடிவு எடுத்தவனது சிறகு அரியப்பட்டது, சந்திரன் காலின்கீழ்த் தேய்க்கப்பட்டான், ஒரு சூரியனது பல் தகர்க்கப்பட்டது, ஒரு

சூரியனது கண் பறிக்கப்பட்டது, சரஸ்வதியின் மூக்கு அறுபட்டது. தக்கன் யாகம் அழிபட்டது.

தாருகாவன முநிவர்களை அடக்குதற்பொருட்டு செய்த லீலையில் சிவன் பலியேற்றார், புலியுரி அணிந்தார், மான், மழு, துடி, கபாலம் ஏந்தினார், அரா அணிந்தார்.

அட்டவீரச் செயல்களுள் - பிரமன் சிரம் கொய்தது, தக்கனை அட்டது, திரிபுரம் எரித்தது, காமனைத் தகித்தது, காலனை உதைத்தது, சலந்த ராசுரனைச் சங்கரித்தது, யானையை உரித்தது கூறப்பட்டுள. இவைதம்முள் திரிபுரம் எரித்தபொழுது மேருவை வில்லாக வளைத்ததும், திரிபுராதிகள் மூவர் மாளாது பிழைத்து அருள் பெற்றதும் விளக்கப்பட்டுள.

பிற பராக்ரமங்களில், கங்கையைச் சிரசிலேற்றது, சரபமாய் நரசிங்கத்தை அடக்கியது, சிங்கவுரி அணிந்தது, பிரமனுக்கும் திருமாலுக்கும் எட்டாத அழலுருவாக நின்றது, ராவணனை மலையின்கீழ் நெரித்தது, பின்னர் அவனுக்கு வாள் ஈந்தது, நஞ்சு உண்டது, திருமாலையே இடப வாகனமாகக் கொண்டது சொல்லப்பட்டுள.

9. **சிவபிரானை வழிபட்டவர்கள்; சிவனடியார்கள்.** காஞ்சியில் உமையம்மை பூசித்தது, உமை தழுவக் குழைந்தது, உமைக்கொரு பாகம் அளித்தது, பார்த்தன் கையில் வில்லடி பட்டது, கண்ணப்பரது எச்சில் உண்டது, மணி வாசகருக்குக் குருந்தமர அடியில் குருமூர்த்தியாய்த் திகழ்ந்தது, சுந்தரருக்காகப் பரவையிடம் தூது சென்றது - சொல்லப்பட்டுள.

10. **திருவிளையாடல்களில்:** (ருத்ரஜன்மராய்) சங்கத்தார் கலகந் தீர்த்தது, சமணரைக் கழுவேற்றியது, நரி பரி யாக்கியது, பிட்டுக்கு மண்சுமந்தது, எல்லாம்வல்ல சித்தரானது, பழியஞ்சினது, வலைவீசியது, மாறியாடினது, மேருவைச் செண்டாலடித்தது, வளையல் விற்றது ஆகிய திருவிளையாடல்கள் கூறப்பட்டுள.

11. நடராஜப் பெருமானுடைய திருநடனத்துக்குத் தனிப் பெருமை தந்து அதைப் பலவித சந்தங்களில் அருணகிரியார்

விளக்கியுள்ளார். உதாரணமாக ஒரு சில காட்டுவாம்.

1. "குமுதபதி வகிரமுது சிந்தச் சிந்தச்
சரணபரி புரகருதி கொஞ்சக் கொஞ்சக்
குடிலசடை பவுரிகொடு தொங்கப் பங்கிற் கொடியாடக்
குலதடினி அசைய இசை பொங்கப் பொங்கக்
கழலதிர டெகுடெகுட டெங்கட் டெங்கத் தொகுதிதோ
தொகுகுகுகு தொகுகுகுகுதொங்கத் தொங்கத்
திமிதமென முழவொலிமு ழங்கச் செங்கைத்
தமருகம ததிர்சதியொ டன்பர்க் கின்பத்
திற முதவு பரதகுரு" (திருப்புகழ் 17)

2. "தொந்தந் தொந்தந் தொந்தந் தெ:
றொலிபட நடமிடு பரன்!" ( " 115)

3. "செகக்கச் செகக்க செக்க தரிக்கத் தரிக்க தக்க
திமித்தித் திமித்தி தித்தி யென ஆடும்
செகத்துக் கொருத்தா ( " 243)

4. "தனதாந்தன தான தனந்தன
தெனதோங்கிட தோன துணங்கிட
தனவாம்பர மான நடம் பயில் எம்பிரானார்" ( " 724)

5. " செகசெச் சேசெச் செகவென முரசொலி
திகழச் சூழத் திருநடமிடுபவர்" ( " 893)

6. "தொந்திதிமி தோதி தந்திதிமி தாதி
என் றுநட மாடு மவர்" ( " 942)

7. " திக்குக்குத் திக்குத் திகுதிகு
டுட்டுட்டுட் டுட்டுட் டுடுடுடு
தித்தித்தித் தித்தித் திதியென நடமாடும் சித்தர்" ( " 1194)

திருவாலங்காட்டில் காளியுடன் நடமாடினதும், சுடலையில் நடமாடுவதும், முயலகனை மிதித்து நடமாடுவதும் கூறப்பட்டுள பொன்னம்பலத்திற் செய்யும் நடனத் திருகோலத்தின் ரகசிய இலக்கணத்தையும்,

"அகரமாதி யாமக்ஷரங்கள் அவனி கால் விணரப்பொ டங்கி
அடைய வேக ரூபத்தி லொன்றி முதலாகி
அமரர் காணவே யந்தமன்றில் அரிவை பாட ஆடிக் கலந்த
அமல நாதனார்" - (திருப்புகழ் 966)

எனவரும் அடிகளில் விளக்கியுள்ளார். (அவனி - பூமி, கால் - காற்று, விண், அப்பு - நீர், அங்கி - தீ. பஞ்சபூதங்கள்:

ஏகரூபம்: அத்துமன்று - பொன்னம்பலம்; அத்தும் - பொன்) இறைவனாடும் பொழுது தேவி பாடுவதும் இவ்வடிகளிற் கூறப்பட்டுளது. அவர் ஆடும் பொழுது தேவி தாளம் ஒத்துவள் (1081); திருமால் கைத்தாளம் போடுவார் (1082).

12. திரிபுரத்தை எரித்தது, யானைத் தோலைப் போர்த்தது, காமனைப் பொடியாக்கியது ஆகிய இம் மூன்று பராக்கிரமங்களையும் -

"புரத்தார் வரத்தார்.. பொரத்தா னெதிர்த்தே வருபோது
பொறுத்தார் பரித்தார் சிரித்தார் எரித்தார்
பொரித்தார் நுதற்பார் வையிலேயின்
கரித்தோ லுரித்தார் விரித்தார் தரித்தார். மதனாரைக்
கரிக்கோல மிட்டார்" (திருப்புகழ் 424)

என வெகு அழகாகவும், தெளிவாகவும், வேடிக்கையாகவும் அருணகிரியார் பாராட்டியுள்ளார்.

13. சிவபிரானுக்குத் தலைமைத் தானத்தை என்ன அருமையாக அருணகிரியார் அளித்துள்ளார் என்பது -

"தானே புணர்ந்து தானே அறிந்து
தானே மகிழ்ந்து அருளூறித்
தாய்போல் பரிந்த தேனோடுகந்து
தானே தழைந்து சிவமாகித்
தானே வளர்ந்து தானே இருந்த
தார்வேணி எந்தை" (திருப்புகழ் 1220)
"சகலமயம் பரமேச்சுரன்" ( " 933)

எனவரும் அழகிய அடிகளால் அறியக்கிடக்கின்றது.

14. சிவபிரானும் - தமக்குத் திருநீறு அளித்துத், தம்மை ஆட்கொண்டு, உய்யும் வகையை அருளினர் என்பதைத் தெளிவாக அருணகிரியார் எடுத்து ஓதுகின்றார்.

"சுமழ்மா இதழ் சடையார். அடியேன் துயர்தீர்ந்திட
வெண் தழல் மாபொடி அருள்வோர்" (திருப்புகழ் 568)
"எனை அடிமை கொண்ட சுவாமி சதாசிவ கடவுள் எந்தையர்"
(திருப்புகழ் 856)
"எந்த னாவிக்குதவு சந்த்ர சேர்வைச் சடையர்" ( " 901)
" அமுதமதை யருளி எமையாளும் எந்தை ( " 211)
" எருக்கும் இதழியும் முடிக்கும் இறைகுரு
எமக்கும் இறையவன்" (திருவகுப்பு 5)

**15.** சிவபிராற்குரிய துதிகள் வேறு எந்த நூல்களிலுங் காணுதற் கரிய அழகிய நிலையில் திருப்புகழிற் காணலாகும். இரண்டொரு உதாரணங்கள் இங்குக் குறிப்போம்.

1. "தொந்தத் தொகுகுட என்பக் கழலொலி
பொங்கப் பரிபுர செம்பொற் பதமணி
சுழற்றி நடமிடு நிருத்தர், அயன்முடி
கரத்தர்; அரிகரி யுரித்த கடவுள்; மெய்
தொண்டர்க் கருள்பவர் வெந்தத் துகளணி
கங்கைப் பணிமதி கொன்றைச் சடையினர்
தொடுத்த மதனுரு பொடித்த விழியினர்
மிகுத்த புரமதை எரித்த நகையினர்
தும்பைத் தொடையினர் கண்டக் கறையினர்
தொந்திக் கடவுளை தந்திட்டவர் (திருப்புகழ் 585)

2. பரதத்தை அடக்கி நடிப்பவர்
த்ரிபுரத்தை யெரிக்க நகைப்பவர்
பரவைக்குள் விடத்தை மிடற்றிடு பவர்; தேர்கப்
பரையுற்ற கரத்தர் மிகப்பகி
ரதியுற்ற சிரத்தர் நிருத்தபர்
பரவத்தர் பொருப்பி லிருப்பவர் உமையாளர்;
சுரர் சுத்தர் மனத்துறை வித்தகர்
பணிபத்தர் பவத்தை யறுப்பவர்
சுடலைப்பொடி யைப்பரி சிப்பவர் விடையேறும்
துணை யொத்த பதத்தர் எதிர்த்திடு
மதனைக்கடி முத்தர் ... (திருப்புகழ் 1177)

மேற் காட்டிய அடிகளில் "வாக்குக் கருணகிரி" என்பதன் உண்மை எவ்வளவு தெளிவாக விளங்குகின்றது. சிவனைப் பற்றிய விஷயங்கள் அடங்கிய முக்கியமான பாடல்களின் எண்கள்: 18, 190, 211, 340, 387, 390, 424, 451, 510, 528, 562, 585, 745, 801, 878, 914, 983, 984, 1021, 1051, 1077, 1092, 1099, 1110, 1132, 1166, 1176, 1177, 1183, 1220, 1238, 1259.

## 3. திருப்புகழும் பார்வதியும்

திருப்புகழிலும் பிற நூல்களிலும் அருணகிரியார் பார்வதி தேவிக்கு மிகச் சிறந்த ஸ்தானத்தைக் கொடுத்துள்ளார். தேவியின் பெருமையைத் தமிழ் மொழியில் முற்றுங் கற்று மகிழ விரும்புவோர் அருணகிரியார் தேவியைத் துதித்துக் கூறியுள்ள பாசுர அடிகளையும், "அபிராமி அந்தாதி" என்னும் நூலையும் அவசியம் படிக்க வேண்டும். இனி, திருப்புகழாதிய அருணகிரியாரின் நூல்களிற் பார்வதியைப் பற்றி வருவன கூறுவாம்.

**1. தேவியின் உருவமும் நிறமும்:**

செம்பொன் மேனியள், மரகதம் பொன் மேனி, ஆகாச ரூபி, மரகத சொரூபி, பஞ்ச முகவாலை, வேதாகம கலை ரூபாள், வேதச் சொருபாள், நாதவடிவி, சோடி மதித்தோற்றம், மாணிக்க மி(ன்)னாள், பச்சை யெறிக்கும் ப்ரபையள், பச்சை நங்கை, கோல நீல வருணத்தி, கார்போலு மேனி(யள்).

**2. தேவியின் உடை:**

செம்பொற் பட்டு உத்தரியம்; புலித்தோலுடை.

**3. தேவியின் திரு நாமங்களுள் அருமை வாய்ந்தன.**

அகில ஜக அண்ட நாயகி, அஞ்சு முக நீலி, அம்பண கரதலி, (அம்பணம் - ஒருவகை யாழ்), ஆதியந்தமுமான சங்கரி, ஆறு சமயத்தி, எண்குண பூரணி, காயத்திரி, கோகுல சக்தி, சமய முதல்வி, தமனிய தநு தரி (பொன்வில் - மேரு), நவசித்தி யருள் சத்தி, நாகபூஷணத்தி, நாளுமினிய கனி, பஞ்சபாணி, பதிவிரதை, முக்கோணத் தானத்தாள், ராஜத லக்ஷண லக்ஷ்மி, மழுவுமை கரத்தி, முயலகபதத்தி, மூவர்க்கு முன்னாள், வேதக்குழலாள்.

**4. தேவியின் வாகனம்:** விடை - எருது, சிங்கம்.

"கிழப்பொற்காளை மெலேறும் எம் நாயகி" (626) சிங்கமேறி (768).

**5. தேவியை வழிபடுவோர்:**

சரஸ்வதி, இலக்குமி, ரதி, இந்திராணி கிருத்திகை முதலிய மாதாக்கள், சத்த மாதர்கள், ரம்பை ஆகிய தெய்வப் பெண்கள். தேவியின் பதத்திற் சிவபிரான் பணிவதால் அவரது சடா மகுடத்துள்ள கொன்றை, கரந்தை இலைகளின் மணம் தேவியின் பாதத்தில் வீசுகின்றது.

**6. தேவியின் பராக்கிரமமும், திருவிளையாடலும், பெருமையும்:**

தேவி திருமாலின் தங்கை கணபதியின் தாய்; முருகவேளின் அன்னை; சூரனை வெல்ல வேலாயுதத்தை முருகவேளுக்கு 'எம் புதல்வா வாழி வாழி" என ஆசி கூறி அளித்தவள். சிவபிரானுக்கு உயிர்; சிவனுடன் நடனம் புரிபவள் (644); சிவபிரான் ஆடும்போது பாடுபவள், தாளம் ஒத்துபவள் (1239, 1081); சிவபிரானது இடது பாகத்தைப் பெற்றவள். சகல அண்டங்களையும் ஈன்றவள்; சகல உலகங்களுக்கும், உயிர்களுக்கும், ஐந்து பூதங்களுக்கும் ஒரு முதலாகி

நின்றவள்; தமிழைத் தந்த பழையவள்; பொன்'ர மலையை (மேருவை) ஏந்தித் திரிபுரத்தை எரித்தவள்; கூற்றை உதைத்தவள் (760); ஆலம் (விஷம்) உண்டவள்; அதனால் நீலகண்டம் உடையவள்; முக்கோணத் தானத்தவள் *, நவகோண சக்கரத்தில் அமைபவள்; (அடியார்களது) பிறவி அலையைத் தடுத்து நிறுத்துபவள்; கருதும் அன்பர்க்குச் சித்தி அளிப்பவள்; இரு நாழி நெல் கொண்டு முப்பத்திரண்டு அறங்களையுங் கச்சியில் வளர்த்தவள்; தகப்பனாம் தக்கனைத் தண்டனை பெற வைத்தவள்; "தகப்பனை மழுக்கொடு வெட்டிய நிமலிகை" (748); வேதங்களால் துதிக்கப்பட்டவள், யுக முடிவில் உலகங்களைத் தமது உதரத்தில் (வயிற்றில்) அடக்குபவள்; சம்பந்தருக்குப் பாலமுது தந்தவள்; ஈறிலாதவள் (1213); ஆகம நூல்களுக்கு எட்டாதவள் (192); அரன், அரி அயன், அண்டர்களுக்கு எட்டாதவள் (640); அயன், மால், அரன் மூவரும் ஒன்றதான தேவி (365); பரத்தின் உச்சியில் நடம் நவில்பவள் (267)

## 7. திருமாலே தேவி:

திருமாலே தேவி - தேவியே திருமால் என விளக்கப்பட்டுள்ளது; ஆதலால் தேவேந்திர சங்க வகுப்பில் இரணியனைச் சங்கரித்தது தேவி என்று பாராட்டப்பட்டுள்ளது. "பழைய சந்தத்தைப் பெற்ற மடப் பெண்" (458) "திகிரி மேவுகையாள்", (526) 'அண்ட முண்ட நாரணி' (889) என வருவன காணலாம். அகர எழுத்தென முதன்மையாக நின்று உயிர்களை ரக்ஷிக்கத் தேவியே அரியென விளங்குகின்றாள்" என்கின்றார். "அகரந் திரு உயிர் பண்புற அரி யென்பதுமாகி" (608)

## 8. தேவியும் அருணகிரியாரும்:

தமது ஆணவம், மயக்கம், காமியம் இவைகளைத் தேவி அகற்றித் தனது பிறப்பை யொழித்து ஆண்டருளியதை அருணகிரியார் "ஆணவ மயக்கமுங்க(ல்)லி காமியம் அகற்றி என்றனை ஆள் உமை பரத்தி" (647), "என் மாசு சேர் எழு பிறப்பையும் அறுத்த உமை" (439), 'எனை அருள் வைத்திட்டாண்ட நாயகி' (482) எனத் தெளிவுற விளக்கியும்; 'எனை ஈனை அரசி' - (543), "எனதுயிரெனுந்திரியம்பகி" "எனது தாய்", "எனை யீணசக்தி" (580) "எனையீண மலை மாது" (644), "என் க(ண்)ணில் வளருஞ் சிவகாமி" (608) என அருமை யாகத் துதித்துமுள்ளார்.

---

*ஒன்றெட்டுச் சக்ரதலப் பெண் - திருப் -456 "ஒளிநின்ற கோணங்கள் ஒன்பது மேவி உறைபவளே" - அபிராமி அந்தாதி.

## 9. தேவியின் துதி:

தேவியின் பெருமைகளை அடுக்கடுக்காகக் களைபெறக் கூறித்துதிக்கும் துதிமொழிகளைக் காண வேண்டுபவர் தேவேந்திர சங்க வகுப்பையும், சீர்பாத வகுப்பு, வேல் வாங்கு வகுப்பு இவைகளின் சுற்றடிகளையும், பூத வேதாள வகுப்பின் முதலடியையும் படித்து மகிழ்வுறலாம். திருப்புகழில் வந்துள்ள துதி நயப்பாகங்களில் வடசொலும் தமிழ்ச்சொலும் துள்ளித் ததும்பச் சந்த இன்பம் பொழிந்து மலியும் ஒரு சில உதாரணங்களைக் காட்டுவாம்.

464. குலகிரி வந்துப் பிறந்த பெண்கொடி
உலகடையப் பெற்ற உத்தி அந்தரி
குறைவற முப்பத் திரண்டறம்புரி கின்றபேதை
குணதரி சக்ரப் ப்ரசண்ட சங்கரி
கணபண ரத்நப் புயங்க கங்கணி
குவடு குனித்துப் புரஞ் சுடுஞ்சின வஞ்சிநீலி
கலப விசித்ரச் சிகண்ட சுந்தரி
கடிய விடத்தைப் பொதிந்த கந்தரி
கருணை விழிக் கற்பகத் திகம்பரி எங்களாயி
கருதிய பக்தர்க் கிரங்கும் அம்பிகை
சுருதி துதிக்கப் படுத்தரி சம்பவி - கவுரி.

526. குமரி காளி வராகி மகேசுரி, கவுரி மோடி, சுராரி நிராபரி
கொடிய சூலி சுடாரணி யாமளி மகமாயி
குறளு ரூப முராரி சகோதரி, உலக தாரி உதாரி பராபரி
குரு பராரி விகாரி நமோகரி அபிராமி
சமர நீலி புராரி தனாயகி, மலைகுமாரி கபாலி நனாரணி
சலில மாரி சிவாய மனோகரி பரையோகி
சவுரி வீரி முநீர்விட போஜனி, திகிரி மேவு கையாளி செயாளொரு
சகல வேதமு மாயின தாயுமை

1133. படிமுழுதும் காத்த மால் குலத்தி
முதுமறையின் பேச்சி நூலிடைச்சி
பகிர் மதியம் பூத்த தாழ் சடைச்சி விருநாழி
படிகொடறம் காத்த மாபரைச்சி
மணிவயிரம் கோத்த தோள்வளைச்சி
பலகலையும் போற்று வேல்விழிச்சி நெடுநீலி
அடுபுலியின் தோற்படா முடைச்சி
சமரமுகன் காட்டு மால் விடைச்சி
அகலிட முண்டார்க்கு நேர் கடைச்சி.

மேற்காட்டிய துதிகளில் எத்தகைய சந்தமாயிருந்தாலும் சொற்கோவையும் பொருட்கோவையும் எவ்வளவு அழகுபட அமைந்துள்ளன பாருங்கள்! இது அன்றோ "வாக்கு"; என்னே முருகன் திருவருட் ப்ரசாதம் இருந்தவாறு!

**பார்வதியைப் பற்றிய விஷயங்கள் அடங்கிய முக்கியமான பாடல்களின் எண்:-** 137, 221, 303, 337, 434, 455, 457, 464, 526, 640, 644, 648, 653, 812, 898, 920, 997, 1001, 1129, 1133, 1136, 1213.

## 4. திருப்புகழும் திருமாலும்

திருப்புகழின் வாயிலாக முதலிற் கணபதியைக் கண்டோம்; பின்னர், சிவனையும் பார்வதியையும் கண்டோம்; இப்போது திருப்புகழ் மூலமாகத் திருமாலைக் காண்போம். திருமாலுக்கே உரித்தான நாலாயிரப் பிரபந்தமாதிய நூல்களிற் காணமுடியாத அடுக்கடுக்கான துதிகளைத் திருப்புகழிற் கண்டு திருமாலடியவர்கள் அகங் களிகொள்வர். முருகவேளைத் திருமால் மருகன் என நினைப்பதே அருணகிரியார்க்கு ஓர் ஆனந்தம்; திருமாலின் பெருமையைக் கூறப்புகுந்தவர் அவருடைய பல அவதாரங்களில் நடைபெற்ற அருஞ்செயல்களைப் பாராட்டி மகிழ்வர்; கண்ணபிரான் இயற்றிய பல லீலைகளையும், பாரத யுத்தத்தில் அவர் ஈடுபட்டு உதவிய செயல்களையும் பாராட்டுவர்; ஸ்ரீராம மூர்த்தியாய் ராவண சம்ஹாரம் செய்த பராக்ரமத்தைப் பாடிக் களி கொள்வர் இங்ஙனம் திருமாலைக் குறித்த பல அரிய விஷயங்களைத் தமது இனிய சந்தப்பாக்களில் நவரத்னங்களை எடுத்து இழைப்பதுபோல ஆங்காங்கு புகட்டிப் புகழ்வார் அருணகிரியார். முதலாவதாக, மூல புருஷராகிய திருமாலைப்பற்றி அருணகிரியார் சொல்லியுள்ள விஷயங்கள் இவைஇவை எனக் கூறிப் பின்னர்த் திருமாலின் அவதார விசேடங்களில் இயற்றப்பட்ட லீலைகளை எடுத்துக் குறிப்போம்.

### 1. திருமாலின் லீலைகள், அவரைப்பற்றிய செய்திகள்.

திருமால் முல்லை நிலத்துக் கடவுள்; காத்தற்றொழிலைப் புரியுங் கடவுள். சர்வான்மாக்களும் கலக்கமற்றுச் சுகமுறத்தாம் அனந்தல் - துயில் கொள்பவர் - திருமங்கையின் கணவர்; 'தெய்விக பொன் ஆழி' யாகிய சக்கரத்தையும், "புனித சங்கத்" தையும் திருக்கரத்திற் கொண்டவர். சங்கு, சக்கரம், கதை, வாள், வில் - என்னும் ஐந்து

ஆயுதங்களைக் கொண்டவராதலின் "ஐயாயுத பாணி", "பஞ்சாயுதர்" எனப் பேர்பெற்றவர். பாற்கடலில் நாக மெத்தையில் துயில்பவர்; ஆலிலையிற் "பெருங் குறோட்டை விட்டு" உறங்குபவர்; பரவும் அடியார்களது வினைகெட அருள்பவர்; தேசமெல்லாம் போற்றும் பெருமை வாய்ந்தவர்; எங்கும் நிறைந்தவர்; எல்லாம் ஆனவர்; கௌஸ்துப மணி மார்பர்; துழாய் மார்பர்; மார்பகத்தில் லக்ஷ்மிதேவி வீற்றிருக்கப் பெற்றவர்; மாறிலாத சிவபத்தியுடையவர்; தமது பத்தியின் பயனால் சிவபிரானிடம் சக்கரம் பெற்றவர்; தமிழ்ச்சுவை பருகத் தமிழ்ப் பயில்வோர்கள் பின் திரிபவர்; அவர்கள் 'சொன்ன வண்ணம்' செய்பவர்; பிரமனை ஈன்றவர்; முருகபிரானிடத்தில் நேசம் மாறாதவர்; அரக்கரை அழிப்பவர்; தேவரைக் காப்பவர்; சிவபிரானது பிரம கபாலத்தில் தமது ரத்தத்தைப் பலிக் கொளப் பெய்தவர்; பார்வதிக்கு அண்ணன்; சத்தியே திருமால்; திருமாலே சத்தி.

## 2. திருமாலின் நிறம்:

கடல் நிறம்; (காயாம்) பூ நிறம்; மேக நிறம்; மரகத நிறம்; கருநெல்லி மேனி; எனக் கூறப்பட்டுள.

## 3. திருமாலின் பெயர்கள்:

அச்சுதன், அரிகேசவன், ஆதி நாரணன், ஆதி மாயன், ஆதியரி, ஆதிரகுராம ஜெயமால், கருதி யுடையவன், தயாபரவஸ்து, புருஷோத்தமன், ஜெயதுங்க முகுந்தன், ஜுவர் தோழன், காக்கைக் கடவுள், கான முடியோன், (கானம் - பொன்) குணத்ரய நாதன், சகஸ்ரநாம கோபாலன், சங்கு சக்ர கதாபாணி, சீரங்க ராஜன், வடவேங்கடத்தி லுறைபவன், ரிஷிகேசன் - எனப்பல அரிய திருநாமங்கள் ஆளப்பட்டுள.

## 4. பராக்ரமச் செயல்கள்:

### (1) பாற்கடல் கடைந்தது.

திருமால் வாரி (கடல்) கடைந்தார்; வாரி ஏழுங் கடைந்தார்; அமரர் ஒருபாலும், வாலி முதலானவர்கள் ஒருபாலுமாக அமுதுபெறக் கடைந்தார்; மேருவை (மந்தர மலையை, இமகிரியை) மத்தாகவும் ஆயிரம் வாயுடை வாசுகியைக் கயிறாகவும் கொண்டு கடைந்தார். திமிதிமியென்று ஒலியெழக்கடைந்தார். எழுந்த விடத்தை ஈசர்க்கு உதவினார்; கிடைத்த அமுதத்தைச் சிவபக்தர்களாம்

தேவர்களது பசிதீரப் பகிர்ந்தளித்தார்; கடைந்தபோது நோவுற்றன அரவும், மதியும், திருமாலின் ஆயிரந்தோள்களும்; கடைந்தபோது எழுந்தன லக்ஷ்மி, பாரிஜாதம் முதலிய பல சித்திப் பொருள்கள்.

## (2) கஜேந்திர மோக்ஷம்

தாமரை மடுவில் முதலையின் வாயிற் சிக்குண்ட யானை பொருமி ஆவி சோர்ந்து திகைத்து, "ஆதிமூலமே சரணம்" "என்னை ஆண்டருள்" என ஓலமிட்டு அழைத்தது; 'ஹா! நாராயணா! நற்றுணைவா! லக்ஷ்மீகாந்தா! துழாய் மார்பா! கோபாலா! காவாய்! காவாய்' எனக் கதறி அழைத்தது. அழைத்த ஒரு நொடிக்குள் பெருமாள் அன்புடன் கருடன் மீதேறி வந்தனர்; தமது பொற் சங்கத்தை ஊதிக்கொண்டு ஆகாய மார்க்கமாக விரைவில், சங்க நாதம் அடங்கு முன்னரே, 'அஞ்சற்க' எனக்கூறி வந்தனர்; சக்கரங் கொண்டு முதலையின் தலையைச் சின்னாபின்னமாகக் கிழித்தனர். அதுகண்டு மண்ணும் விண்ணும் பெருமாளைப் பரவியேத்தின (1062, 1187)

இனித் திருமாலின் அவதாரங்களில் இயற்றப்பட்ட லீலைகளை எடுத்துக் கூறுவோம். அவதாரங்களுள் கயல் (மீன்), ஆமை (கூர்மம்), கோலம் (பன்றி, வராகம்), அரி (நரசிங்கம்), குறள் (வாமனர்) என்னும் ஐந்து அவதாரங்கள் -

"ஆமை கய லெனச் செயங்கொள்
கோல குற ளரித் தடங்கை
யான அரவணைச் சயந்தன் மருகோனே! (1271)

எனவரும் ஓரடியிற் கூறப்பட்டுள; மற்றைய ஐந்து அவதாரங்களுள் ராமாவதாரம், கிருஷ்ணாவதாரம் சம்பந்தமான லீலைகள் திருப்புகழிற் பரக்கக் கூறப்பட்டுள. அவதாரங்களுள் -

**1. மச்சாவதாரம்** (மீன்):

இந்த அவதாரத்தில் திருமால் மீனுரு எடுத்து வேதங்களை மீட்ட சரித்திரம் கூறப்பட்டுளது:

"சிறுத்த செலு அதனுளிருந்து பெருத்த திரை உததி கரந்து
செறித்த மறை கொணர நிவந்த ஜெயமால்" (திருப் 245)
"ஆரணற்கு மறை தேடியிட்ட திருமால்" (திருப் 580)

**2. வராகாவதாரம்** (பன்றி உரு):

பூமியைப் பாய்போற் சுருட்டி யெடுத்துப் பாதாளத்திற் சென்றொளித்த அசுரனைத் திருமால் பன்றி உரு எடுத்துச் சென்று

கொன்று, பூமியை மீட்டுவந்து பழம்படியே வைத்ததும், அப்பன்றியே கர்வங்கொண்டு அண்டங்களைக் கலக்க, முருகவேள் அதனுடன் போர் செய்து அதை அடக்கியதும் கூறப்பட்டுள.

"சூகரத்தொ டம்பு தாவெடுத்து வந்த சூதன்" (திருப். 229)
(சூகரம் - பன்றி; அம் பூ - அழகிய பூமி)
"ஏனபதி தனை கோலக்காலமாக அமர்செய்த
வடிவேலா" (திருப். 503)
(ஏனபதி - ஆதிவராகம்)

சிவபிரானது திருவடியைத் தேடப் பூமியைத் தோண்டிச் சென்றபோதும் திருமால் பன்றி உரு எடுத்தார் "பெரு நிலஞ் சூகர மாய்க்கீன்றான்" (கந் - அலங்), "கோல வுருவா யெழுந்து பாரதனையே இடந்து" (திருப். 726).

### 3. நரசிம்மாவதாரம்:

"ஓம் இரணிய ரூபா நமோ" எனச் சுக்ராசாரியராம் ஆசான் எடுத்துரைக்க அவன் குலை நடுங்கும்படித் தவநெறியில், சத்திய நெறியில் நின்ற பாலன் பிரகலாதன் "நம நாராயணாய" எனக் கூறி னதும், அங்ஙனம் கூறக் கேட்ட இரணியன் கோபங் கொண்டதும். "உன் இறைவன் எதனில் உளன், இத் தூணில் உளனோ" எனத் தூணை இரணியன் அறைந்ததும், அறைந்த வுடன் தூணிலிருந்து திருமால் இரண்டு உருவான நரசிங்க உருவத்துடன் வெளித்தோன்றி இரணியன் கதற அவன் மார்பை நகத்தாற், பீறி, உடலை இருபிளவாய் வகிர்ந்து, அவன் உயிரையும் ரத்தத்தையும் உறிஞ்சி, துளசிமாலையுடன் அவன் பசுங்குடலையும் தோள்மாலையாக அணிந்து வெற்றிகொண்டது மான விவரங்கள் கூறப்பட்டுள.

(திருப். 874, 1137, 1153 முதலிய)

### 4. வாமனாவதாரம் - திருவிக்ரம சொரூபம் -

மாவலிச் சக்ரவர்த்தியின் முன் திருமால் வாமன முநிவராகக் (குறள் ரூபத்தினராக)ச் சென்று மூவடி மண் கேட்டுப் பின் உலகளந்த மூர்த்தியாக நீண்ட உருவைக் கொண்டு மூதண்ட கூட முகடு முட்ட ஒரு சேவடியை நீட்டினதும், மண்ணுலகை ஓரடியில் அளவிட்டதும், மாவலியின் உச்சியில் ஒரு திருவடியை வைத்து அவனைச் சிறையிட்டதும், சுக்ராசாரியின் கண்ணைக் கெடுத்ததும் கூறப்பட்டுள. (திருப். 268, 643, 845, 1201, 1255 கந் - அலங் . 15-முதலிய)

## 5. ஸ்ரீ ராமாவதாரம்:

ராமாயணச் சுருக்கத்தைத் திருப்புகழில் 379 (ஆலகால), 987 (வாலவயதாகி), 1156 (குனகியொரு) - எனத் தொடங்கும் பாடல்களிற் காணலாகும். ஸ்ரீராமர் மேக நிறத்தவர் என்பதும், தாய் கோசலை குழந்தை ஸ்ரீ ராமரோடு குலாவுவதும், விசுவாமித்திரரது யாகத்தை ஸ்ரீராமர் காத்ததும், அவர் தாடகையைச் சங்கரித்ததும், வில்லை முறித்து அவர் சீதையை மணந்ததும், சீதை தங்க நிறத்தவள். மெய்வேதலக்ஷ்மி - என்பதும். தம்பியும், சீதையும் உடன்வரத் தாய்சொல் தவறாது ஸ்ரீ ராமர் காட்டுக்குச் சென்றதும், ராமர் காகத்துக்கு ஒரு கண் அளித்ததும், சூர்ப்பநகை ராவணனிடத்திற் சீதையைப் பற்றிக் கலகம் செய்ததும், மாயமானை (மாரீசனை) வதைத்ததும், சீதையை ராவணன் தூக்கிச்சென்று இலங்கையில் தனது படைவீட்டில் அசோகவனத்திற் சிறைவைத்ததும், ஸ்ரீ ராமர் மராமரத்தை அட்டதும், வாலியை வதைத்ததும், தாரையைச் சுக்ரீவற்கு அளித்து அரசாட்சியை ஈந்ததும், சீதையைத்தேடி ஸ்ரீராமர் சென்றதும், சுக்ரீவன் படைதந்து உதவினதும், போருக்கு எழுந்ததும், அநுமாரோடு எழுபது வெள்ளம் வானரசேனைகள் சென்றதும், ராவணன் அரசாட்சியில் இலங்கையிற் சூரியன் புக அஞ்சினதும், அநுமார் இலங்கையை எரித்ததும், ஸ்ரீராமர் கடல் மீது கோபித்துப் பாணம் எய்ததும், சேதுபந்தனம் செய்ததும், விபீஷணரது சரணாகதியும், ஏழுநாள் யுத்தமும், யுத்த வர்ணனையும், கும்பகர்ணன் வதமும், ராவணனுக்கு வீணைக்கொடி என்பதும், ஹநுமார் தோள்மிசை யிருந்து ஸ்ரீராமர் போர் செய்ததும், ராமசரத்தின் ஆற்றலும், இலங்கை அரக்கர்கள் வதமும், ராவணன் வதமும், அவன் தலைகள் மலைபோலவும் பனம்பழம் போலவும் அற்று விழுந்ததும், சீதையை மீட்டதும், இலங்கையை அழித்ததும், விபீஷணருக்கு முடி சூட்டியதும், ஹநுமனை உகந்ததும், ஸ்ரீராமரின் பிள்ளைகள் ராமருடன் போர் செய்ததும் - ஆகிய விஷயங்கள் கூறப்பட்டுள

## 6. கிருஷ்ணாவதாரம்:

ஸ்ரீ கிருஷ்ணபிரான் இடையர்குலத்தவ ரென்பதும், அவர் தயிருண்டதும், வெண்ணெய் திருடி உண்டதும், உறிகளை உடைத்ததும், உரலொடு கட்டுப்பட்டதும், உருண்டதும், யசோதையிடம் அடிபட்டதும், கம்ஸன் விட்ட அலகையைச் சங்கரித்ததும், அவன் அனுப்பின யானையின் கோட்டை முறித்ததும்,

கஞ்சன் வஞ்சங்களைக் கடந்ததும், காளிங்க நிர்த்தனமும், குருந்தமேறிப் பெண்களொடு லீலை செய்ததும், அவர் தம் ஆடைகளைக் கவர்ந்ததும், மருதிடைத் தவழ்ந்ததும், சகடு உதைத்ததும், புலியுண்டதும், புல்லாங்குழல் ஊதிப் பசுக்களைக் காத்ததும், புல்லாங்குழல் ஊதும் ப்ரபாவமும், மலையைக் குடையாகப் பிடித்துப் பசுக்களைக் காத்ததும், மற்போர் செய்ததும், விளவெறிந்ததும், புள்ளின் வாய் கீண்டதும், பாரிஜாத விருக்ஷத்தைப் பூமியிற் கொண்டு வந்ததும், உலக்கையை ராவி நடுக் கடலில் விட்டதும் கூறப்பட்டுள. க்ருஷ்ண லீலைகள் பலவற்றை வேல்வாங்கு வகுப்பின் ஈற்றடியிற் படித்து மகிழலாம்.

கண்ணபிரானது குழலோசையின் இனிமையையும், திறத்தையும் அருணகிரியார் சிறப்பித்ததுபோல வேறுயாரும் சிறப்பிக்கவில்லை என்றே கூறலாம்; அன்பர்கள் யாவரும் படித்து இன்புறத்தக்க தாதலின் இங்கு எடுத்துக் காட்டுவோம்:-

*அளையில் உறைபுலி பெறுமக வயில்தரு*
*பசுவின் நிரைமுலை யமுதுண: நிரைமகள்*
*வசவ னொடு புலி முலை யுண; மலையுடன் உருகா நீள்*
*அடவி தனிலுள உலவைகள் தளிர்விட*
*மருள மதமொடு களிறுகள் பிடியுடன்*
*அகல; வெளியுயர் பறவைகள் நிலம்வர, விரல்சேர் ஏழ்*
*தொளைகள் விடு குழை விரல் முறை தடவிய*
*இசைகள் பல பல தொனிதரு கருமுகில்*
*சுருதி யுடையவன் நெடியவன் மனமகிழ் மருகோனே!*

*(திருப். 60)*

*(கண்ணபிரான் தமது புல்லாங்குழலில், விரல்களைத் தடவித்தடவிப் பலபல இசைகளை எழுப்ப, அந்தக் குழலோசையைக் கேட்டு மயங்கிப் புலிக்குட்டி பசுவின் மடியிற் பாலுண்டது; பசுவின் கன்று புலிமுலை யுண்டது; மலை உருகிற்று; காட்டில் இருந்த மரங்கள் தளிர்கள் விட்டன; ஆண் யானைகள் காம வெறிகொண்டு பிடியுடன் அகன்றன; விண்ணில் இருந்த பறவைகள் நிலத்தே வந்தன)*

திருமாலின் நான்கு லீலைகள் (கஜேந்திர மோக்ஷம், இரணியன் வதை, மாபலியைச் சிறைவைத்தது, ராவணனைச் சங்கரித்தது) சீர்பாத வகுப்பின் ஈற்றடியிற் பின்வருமாறு ஒருசேரச் சிறப்பிக்கப்பட்டுள; அவை ஓத ஓத இன்பம் ஊட்டுவன:

"மத சிகரி கதறி முது முதலைகவர் தர நெடிய
மடு நடுவில் வெருவி யொரு விசை 'ஆதிமூல' மென
வருகருணை வரதன் (1), இகல் இரணியனை நுதியுகிரின்
வகிரும் அடல்அரி (2), வடிவு குறளாகி மாபலியை
வலிய சிறை யிடவெளியின் முகடு கிழி படமுடிய
வளரு முகில் (3), நிருபன் இருப துவாகு பூதரமும்
மகுடம் ஒரு பதும் முறிய அடுபகழி விடுகுரிசில் (4)."

பின்னர், பலராமர் அவதாரத்தைச் 'சீரம்' (கலப்பை) செங்கை கொண்ட 'சீரங்கர்' எனக் கந்தரந்தாதி 98-ஆம் பாடலிலும், 1273 -ஆம் திருப்புகழில் 'மற்போர் செய்து' எனவரும் வரலாற்றில் அடங்கவும், கற்கி அவதாரத்தை 736-ஆம் பாடலில் -'துரகத நரபதி' எனக் குறிப்பாற் கூறியும் உள்ளார்.

இங்ஙனம் திருமாலின் பல பராக்ரமங்களையும் அவதார லீலைகளையும் கூறி அத்தகைய பெருமானுக்கு உகந்த மருகோனே - எனத் தமது குருநாதராம் குழந்தைக் குமரனைப் போற்றிப் போற்றி மகிழ்வர் அருணகிரியார்.

திருமாலைக் குறிக்கும் முக்கிய பாடல்களின் எண்:- 122, 132, 458, 509, 808, 874, 956, 1004, 1009, 1012, 1062, 1082, 1137, 1153, 1187, 1203, 1207.

## 5. திருப்புகழும் முருகரும்

இனி, திருப்புகழுக்கு மூல மூர்த்தியாய் விளங்கும் முருகவேளைப் பற்றி அருணகிரியார் கூறுவதையும் கவனிப்போம். தம்மை ஆட்கொண்டருளிய மூர்த்தி முருகவேளேயாதலின், அவரது திருவடித் தியானம் மனத்தினில் நழுவாதிருக்க வேண்டுமென்பதே முதல் முதல் அருணகிரியார் விரும்பி வேண்டுவது. அவ்வேண்டு-கோளை அவர் முருகரிடம் முறையிடும் வழியும், தமது விருப்பம் நிறைவேறுவதற்கு அவர் செய்யும் அறிவு நிறை தொண்டும் மிகவும் பாராட்டத்தக்கன. நினைத்த காரியம் நிறைவேறுதலில் இடையூறு ஒன்றும் வாராதிருக்க, விநாயகமூர்த்தியின் திருவருள்தானே வேண்டும்; ஆதலால், முருகவேளை நாயகராகக் கொண்ட அருணகிரியார் முருகவேளை நோக்கி-

"எதிர்த்து வந்த அசுரர் கூட்டங்களைப் பலியிட்ட பெருமானே! உனது திருவடி, உனது வேல், உனது பரியாம் மயில், கொடியாம் சேவல் இவை தமை எனது நினைவினில் வைத்துக் கருதும் புத்தியை அடியேனுக்குப் பிராசாதிக்கவேண்டியே, நான் ஒற்றை மருப்பனை (விநாயகமூர்த்தியை) வலஞ்செய்வேன்; அவரை மலர்கொண்டும், தோத்திரச் சொற்கள் கொண்டும் அருச்சிப்பேன், அவர் முன்னிலையில் குட்டிக் கொள்வேன்; தோப்பணம் போடுவேன்" எனக் கூறுகின்றார்.

*"எதிரும் நிசிசர ரைப்பெலி யிட்டருள் பெருமானே!*
*நினது திருவடி *சத்திமயிற் கொடி*
*நினைவு கருதிடு புத்தி கொடுத்திட . .*
*ஒற்றை மருப்பனை வலமாக..*
*மருவு மலர்புனை தொத்திர சொற்கொடு*
*வளர்கை குழைபிடி தொப்பண குட்டொடு*
*வனச பரிபுர பொற்பத அர்ச்சனை மறவேனே.*

- *திருப்புகழ் (5)*

இங்ஙனம் கணபதியின் பூரண அருளைப் பெற்று யாதொரு இடையூறும் இல்லாமற் சரமாரியாகத் தமது ஆண்டவருக்கு (முருகவேளுக்குப்) பாமாலை ஆயிரக் கணக்காகச் சூட்டி மகிழ்கின்றார். முருகவேளின் அழகு, அலங்காரம், கோலம், திறல், கருணை முதலியவற்றைத் தமக்கென்றே அமைந்த சந்தச் செந்தமிழ்ச் சொற்களால் வெகு அழகாக எடுத்தெடுத்துப் புகழ்கின்றார். அவை தம்முள் சிலவற்றை ஈங்கெடுத்துக் காட்டுவாம்.

**(1) முருகன் அழகு:**

*'அந்தம் வெகுவான ரூபக்கார!"* (41)
*'அழகான மேனி தங்கிய வேளே!"* (101)
*'திருக்கை வேல் வடிவழகிய பெருமாளே!"* (802)
*மற்றவ ரொப்பில ரூபாதீபா!* (838)
*'இலகு கமல முகமு மழகும் எழுத அரிய பெருமாளே!'* (1067)
*லக்ஷண குமார சுப்ரமணி யோனே!* (1256)

*வேல் என்னாது சத்தி என்றதனால் முச்சத்தியையும் குறிப்பதாகக் கொண்டு, இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சத்தியாகிய வள்ளி, தேவசேனை, வேல் என மூன்றையும் கொள்ளலாம்.

'வசல பசுபதி மகிழ்தர ஒருமொழி
மவுன மருளிய மகிமையும் இமையவர்
மரபில் வனிதையும் வனசரர் புதல்வியும் வடிவேலும்
மயிலும் இயலறி புலமையும் உபநிட
மதுர கவிதையும் விதரண கருணையும்
வடிவும் இளமையும் வளமையும் அழகிய பெருமாளே' (1007)
'முழுதும் அழகிய குமர' (1277)
'பன்னிரு விழிபயில் சண்முகம் அழகிய பெருமாளே' (1232)

## (2) முருகன் ஒளியும், வடிவும், நிறமும்:

'நிறத்திற் கந்தன்' (77), 'வடிவின் நாயக' (285)
'சதகோடி அருண ரவியினும் அழகிய ப்ரபைவிடு
கருணை வருணித தனுபர' (511)
'அருணர் கோடியி னார் ஒளி வீசிய
தருண வாண்முக மேனியனே!' (527)
'பலகோடி வெண் மதிபோலவெ வருவாயே' (1185)
'பூரண மாமதி போலா று மாமுகம்' (730)
'சந்திர நிறங்கள்' (16)
(செந்நிறம்) 'செக்கர் நிறமாயிருக்கும் பெருமாளே' (275)
(பவள நிறம்) 'வித்ருமாகார' (996)

## (3) முருகவேளின் பலவித கோலங்கள்:

### (i) குழந்தை வேலன் கோலம்:

தண்டையணி வெண்டையங் கிண்கிணி சதங்கையும்
தண்கழல் சிலம்புடன் கொஞ்சவே...
கண்டுற கடம்புடன் சந்தமகு டங்களும்
கஞ்சமலர் செங்கையும் சிந்துவேலும்
கண்களு முகங்களுஞ் சந்திர நிறங்களும்
கண்குளிர என்றன்முன் சந்தியாவோ! (16)

### (ii) திருவுரு அழகுக் கோலம்:

எழுதரிய அறுமுகமும் மணிநுதலும் வயிரமிடை
யிட்டுச் சமைந்தசெஞ் சுட்டிக் கலன்களும்-துங்கநீள்பன் -
னிருகருணை விழிமலரும் இலகுபதி னிருகுழையும்
ரத்னக் குதம்பையும் பத்மக்கரங்களும் -செம்பொனூலும்
மொழிபுகழும் உடைமணியும் அரைவடமும் அடியிணையும்
முத்தச் சதங்கையுஞ் சித்ரச் சிகண்டியும் - செங்கைவேலும்
முழுதும் அழகிய குமர! (1277)

**(iii) (ஆறு திரு முகங்களிலும்) திருநீற்று விளக்கக் கோலம்:**

*'சட்சோதிப் பூதிப் பாலத்தா' (1123)

'நீறுபடு மாழைபொரு மேனியவ' (161)

**(iv) ருத்ராக்ஷ அணிகலக் கோலம்:**

† 'அக்ஷ மாலா தரா' (338)

**(v) வேற்கரக் கோலம்:**

(வேலை மறவாது எப்போதும் கரத்திலேந்தும் பெருமான் என்பது )

'வேலை மறவாத கரதலா விசாகா!' - (1050)

**(vi) வள்ளி திருவடி விளங்கும் திருமுடிக் கோலம்:**

'வேட பதிவ்ருதா சுசீ பாத பதும சேகரா !' (1050)

**(vii) கொலு வீற்றிருக்கும் கோலம்:**

(1) சீரான கோல கால நவமணி மாலாபி ஷேக பார வெகுவித
தேவாதி தேவர் சேவை செயுமுக மலராறும் -
சீராடு வீர மாது மருவிய ஈராறு தோளும் நீளும் வரியளி
சீராகம் ஓது நீப பரிமள இருதாளும்,
ஆராதனாதல் வேடர் மடமகள் ஜீமூதம் ஊர் வலாரி மடமகள்
ஆதார பூதமாக வலமிடம் உறைவாழ்வும்
ஆராயு நீதி வேலு மயிலு மெய்ஞ் ஞானபி ராம தாப வடிவமும்
ஆபாத னேனும் நாளும் நினைவது பெறவேணும். (350)

(2) ‡ தவர் வாட்டோ மரகுலந் தரியாக் காதிய சூருந்
தனியாச் சாகர மேழுங் கிரியேழும்
சருகாக் காய் கதிர்வேலும் பொருகாற் சேவலுநீலந்
தரிகூத்தா டியமாவுந் தினைகாவல்
துவர்வாய்க் கானவர்மானும் சுரநாட்டா னொருதேனுந்
துணையாத் தாழ்வற வாழும் பெரியோனே! (681)

---

*சட் -ஷட் - ஆறு; பூதி - விபூதி; பாலம் - அத்தா! - பாலம் - நெற்றி.

†அக்ஷமாலா - அக்கமாலை - ருத்ராக்ஷமாலை.

‡ தவர், வாள், தோமரம்: தவர் - வில்; தோமரம் தண்டாயுதம்;
தரியாக் காதிய சூர் - தரித்துப் பகைத்து வந்த சூரன்.
கிரிஏழு - சூரனுக்கு அரணாக வந்த ஏழுமலை - இந்த
ஏழுமலைகளையும் முருகள் வேல் அழித்தது.

கூத்தாடிய மா - மயில்.

'ஏழுமலை கொல்லும் அசனி - தக்கயாகப்பரணி; 'ஏழுமலை பொடித்த கதிரிலை நெடுவேல்' - கல்லாடம்.

**(viii) தேவர், யோகிகள் சூழக் கொலுவீற்றிருக்கும் கோலம்:**

சிகர வும்பர்கள் பாகீராதிகள் பிரபையொன் றுபிரா சாதாதிகள்
சிவ சடங்கமொ டசானாதிகள் சிவமோனர்
தெளியு மந்த்ரக லாபாயோகிகள் அயல் விளங்கு சுவாமி (880)

**(IX) நடன கோலம்:**

அலங்கார முடிக்கிரணத் திரண்டாறு முகத்தழகிற்
கசைந்தாடு குழைக்கவசத் திரள்தோளும் -
அலந்தாம மணித்திரளைப் புரண்டாட நிரைத்த கரத்
தணிந்தாழி வளைக் கடகச் சுடர்வேலும்;
சிலம்போடு மணிச்சுருதிச் சலங்கோசை மிகுத்ததிரச்
சிவந்தேறி மணத்த மலர்ப் புனைபாதம் -
திமிந்தோதி திமித்திமிதித் தனந்தான தனத்தனனத்
தினந்தோறு நடிப்பதுமற் புகல்வேனோ! (883)

**(x) (அடியார்க் கருள்செய) வருகைக்கோலம்:**

சுடரனைய திருமேனி யுடையழகு முதுஞான
சொருபகிரி யிடமேவு முகமாறும்
சுரர் தெரிய லளிபாட மழலைகதி ரறைபாய
துகிரிதழின் மொழிவேத மணம்வீச -
அடர்பவள ஒளிபாய அரியபரி புரமாட
அயில்கரமொ டெழில்தோகை மயிலேறி;
அடியனிரு வினைநீறு பட அமர ரிநூபுரை
அதிசயமெ னருள்பாட வரவேணும். (643)

**(xi) மணவாள கோலம்:**

"மணவாளக் கோலத் திருமார்பா" (1026)
"மணவாளக் கோலமும் உடையோனே" (502)

**(xii) தியானத்துக்கு உரிய கோலம்**

வேலும் அழகார் கொற்ற நீலமயில் மேலுற்று
வீறுமுன தார்பத்ம முகமாறு(ம்)
மேவியிரு பாகத்தும் வாழுமனை மார்தக்க
மேதகவு(ம்) நான்நித்தம் உரையேனோ - (1215)

**(xiii) கடை நாளில் தரிசனந் தர வரும்படி வேண்டிய கோலம்**

(1) மரணபக்குவமா நாள் -

கமல முகங்களுங் கோமளத் திலங்கு
நகையு நெடுங்கணுங் காதினிற் றுலங்கு

கனக குதம்பையுந் தோடும் வஜ்ர அங்க தழும்பட் சுடர் வேலும்-
கடிதுல கெங்கணுந் தாடி யிட்டு வந்த
மயிலு மிலங்கலங் கார பொற்ச தங்கை
கழலொலி தண்டையங் காலும் ஒக்க வந்து
வரமெனக்கருள் கூர்வாய் - (567)

(2) உலகிலுள பலரரிசி வாய்மீதி லேசொரியு மந்தநாளில் -
உனதுமுக கருணைமல ரோரா றும் ஆறிருகை
திரள் புயமும் எழில்பணிகொள் வார்கா தும் நீள்விழியும்
உபயபத மிசைகுலவு சீரே று நூபுரமும் அந்தமார்பும் -
மறையமறைய அமரர்தரு பூமாரி யேசொரிய
மதுவொழுகு தரவில் மணி பீதேமு நூலொளிர
மயிலின் மிசை யழகுபொலி யாளாய்மு ளாரடியர் வந்து கூட -

*                    *                    *                    *

மதலையொரு குதலையடி நாயேனை யாள இங்ஙன் வந்தி
டாயோ. (1143)

## (4) முருகன் திறல்

"சத்தவிறற் றிறல் வீரா தீரா" (838)

## (5) முருகன் கருணை

"கருணை மேகமே! தூய கருணை வாரியே! யீறில்
கருணை மேருவே! தேவர் பெருமாளே" (1048)

## (6) முருகன் திருவடியின் பெருமை

'முருகன் திருவடி எல்லாப் பொருள்களிலும் ஒன்றுபட்டும் நிற்கும்; வேறாகவும் நிற்கும்; சகல சத்திகளும் அஷ்ட சித்திகளும் எளிதாம்படிப் பெருவெட்ட வெளியில் விளங்கி நிற்கும். சிவபிரானும் போற்றித் தியானித்துத் தொழ நிற்கும். சிதாகாச வெட்ட வெளியில் ஞான நிருத்தம் புரிந்து நிற்கும். சமய கோடிகளும், அரி, அயன், முதலிய தேவர் கூட்டமும் 'அறிய அறிய அறியாத' தன்மையில் நிற்கும். நமது ஊராகவும், நம்மைப் பெற்ற தாயாகவும், நமது சுற்றத்தாராகவும் அருகிருந்து துணை புரிந்து நிற்கும்'- என்றெல்லாம் விளக்கியும், 'அரிய மோன வழிதிறந்த நளின பாதம்,' பலகலை படித்தோது பாவாணர் நாவிலுறை யிருசரணம்!" , நாவேறு பாமணத்த பாதாரம்", ' ரகைஅதரு சிற்றடி' , பரமர் வந்திக்கத் தக்க பத(ம்); "முத்தமிழ்வாணரோது சித்திர ஞான பாதம்', 'ஞானபாத பத்மம்' என்றெல்லாம் சிறப்பித்தும் மகிழ்கின்றார் அருணகிரியார்.

**(7) முருகவேளின் தோளின் பெருமை:**

"பழுதுறாத பாவாணர் எழுதொணாத தோள்"

**(8) முருகன் கண்கள்:**

அவரது மலர்க்கண்கள் குளிர்ந்த அருள் நோக்கத்தன. (ஆறிரு பார்வையும் அருளைத்தர! தண்ணளி தருமொரு பன்னிரு விழி, "மேவினார்க்கு அருள் தேக்கு துவாதசாக்ஷ") எனக் கூறியுள்ளார்.

**(9) முருகவேளின் ஆபரணங்கள்:**

அரைவடம், மணிவடம், பொன் நாண், ஆரம், ஆழி (மோதிரம்), உடைமணி, கழல், கிண்கிணி, ரத்னக் குதம்பை, கடகம், குழை, கொலுசு, சலங்கை, முத்துச் சதங்கை, சிலம்பு, செம்பொன் நூல், சுட்டி, (கனக) தண்டை, நூபுரம், பதக்கம், முத்துமாலை, வீரகண்டை, வெண்டையம், மணிக்கிரீடம் - முதலிய கூறப்பட்டுள. முருகவேளின் **சதங்கை** ஒலியும், நூபுர ஒலியும் வேத ஒலிகளாம்; 'மறைவிதங்கள் கொஞ்சிய சிறு **சதங்கை**', சதகோடி மறை ஒலமிடு **நூபுரம்** - என்பர். அவரது **தண்டை** பலவித சந்த பேதங்களை விளக்கிக் காட்டுவதாம். 'சந்தபேதம் ஒலித்திடும் தண்டை' என்கின்றார். அவரது **கிண்கிணியும், சிலம்பும்** இனிய நாத கீதங்களை வெளியிடுகின்றனவாம். நாதகீத கிண்கிணி', "இனிய நாத சிலம்பு'-என ஓதியுள்ளார்.

**(10) முருகவேளின் படைகள்:**

வேல், கட்கம் (வாள்), கவசம், குலிச சத்தி, கோதண்டம், சிறுவாள், சீரா (உடைவாள்) சூலம், தண்டு கூறப்பட்டுள.

**(11) முருகவேளுக்கு உரிய மாலையும் மலர்களும்:**

பாமாலை, கடம்பு (நீபம்), வெட்சி, குரா, கூதளம், அடம்பு, அறுகு, கரந்தை, கொன்றை, கோங்கு, கோடல் (காந்தள்),
சண்பகம், செங்கழுநீர், செவ்வந்தி, தாமரை, தும்பை, துளசி, நீலோற்பலம், பிச்சி, மகிழம்பூ, முல்லை, விளா (வெள்ளில், வில்வம்.)

**(12) முருகவேளின் திருவிளையாடல்களும் பராக்கிரமங்களும்:**

சிவனுக்கு உபதேசம், பிரமன், மால், இந்திரனுக்கு உபதேசம், அகத்தியர்க்கு உபதேசம், பழம் பெற வேண்டி உலகெலாம் வலம்

வந்தது, சிவபிரான் தன்னைத் தேடிவரச் செய்தது, திருவேங்கடத்திற் குகைவழி வந்தது, சப்த முனிவர்களுக்கு இருக்கு மந்திரம் உபதேசித்தது, சநகாதி நால்வர்க்கு அருளியது, ஈறிலாது இலகுவது, மறைகள் 'குமரகுரு' என ஒலிடுதல், 'ஓம்' என்னும் பிரணவத்துக்கு உயிர்ப்பாக விளங்குவது, கல்வி கரைகண்டது, வராகத்தை அடக்கியது, எழுகிரியை யட்டது, வேல்கொண்டு தீர்த்தங்கண்டது, ருத்ர ஜன்மராய்த் தமிழ் ஆய்ந்தது, கடலை அட்டது, மேருவைச் செண்டாலடித்தது, நக்கீரருக்கு இலக்கணம் ஓதி "உலகம் உவப்ப" என்று அடி எடுத்துக் கொடுத்தது, நக்கீரரைப் பூதத்தினின்றுங் காத்தது, முட்டைப் பெயர் செப்பிப் (பொய்யா மொழிப் புலவரிடம்) கவி பெற்றது, சம்பந்தமூர்த்தியாய் விளையாடியது, தில்லையம்பலத்தில் திருநடம் ஆடியது - முதலியன கூறப்பட்டுள, கந்தபுராணச் சுருக்கமும் கூறப்பட்டுளது. காமனை யெரித்தது, பொறிகள் தோன்றியது, அக்கினி தேவன் பொறிகளைத் தாங்கிச் சென்றது, முருகன் திரு அவதாரம், அவர் கங்கா புத்திரரானது, அறுவர் முலையுண்டது, அறுசிறுவர் ஓருடலினரானது, உமை முலைப்பாலுண்டது, குழந்தைத் திருவிளையாடல்கள், இந்திரனை அச்சுறுத்தியது, ஆட்டு வாகனங் கொண்டது, பிரமனைப் பொருள் வினவித் தண்டித்தது, சிருஷ்டித் தொழில் செய்தது, சூரன் வரம் பெற்றது, சூராதியர் கொடுமை, இந்திரன் மூங்கிலாயமைந்து தவங் கிடந்தது, முருகருக்குத் தேவி வேல் அளித்தது, முருகருக்குச் சிவபிரான் படையீந்தது, தாரகாசுர சம்ஹாரம், கிரௌஞ்சம் பிளந்தது, வீரவாகு தேவர் தூது, அசுரரைச் சிரித்தெரித்தது, சிங்கமுகாசுர சம்ஹாரம், சூர்மாவை அட்டது, சூரனை அட்டுத் துடிக் கூத்தாடியது, சூரன் இருபிளவாய்ச் சேவலு மயிலுமானது, தேவர் சிறைமீட்டுப் பொன்னுலகம் புரந்தது, தேவசேனை திருமணம், வள்ளியொடு லீலைகளும், திருமணமும், - ஆகிய யாவும் சொல்லப்பட்டுள.

## (13) முருகவேளின் தன்மை:

அடியார்க்கெளியர், யாகரக்ஷகர், இசைப்ரியர், கிரிப்ரியர், தமிழ்ப்ரியர், சந்தக் கவிப்ரியர்.

## (14) முருகவேளின் தெய்வ உறவினர்:

சிவகுமாரர், பார்வதிபாலர், விநாயகரது தம்பி, மால் மருகன் திரு மருகன், பிரமன் மைத்துனர், சாரதி (சரஸ்வதி) துணைவர் (சகோதரர்), காம வேள் மைத்துனர்.

**(15) முருகவேளைத் தொழுவோர்:**

சிவன், மால் பிரமன், இந்திரனாதிய தேவர்கள், முனிவர்கள்.

**(16) முருகவேள் உறையும் இடம்:**

அடியார் இதயம், அடியார் கூட்டம், பணிபவர் சித்தம், குகனென்பவர் மனது, குற்றமற்றவர் உளம், ஞானிகள் சித்தம், பாவாணர் நா, மாதவர் இதயம், வேதசிரோமுடி, விநாயகரை எப்போதும் சிந்திப்போரது சிந்தை

**(17) முருகவேள் திருநாமங்களுள் அருமையான ஒருசில:**

அடியர் காவற்காரப் பெருமாள், அடியார்க்கு நல்ல பெருமாள், ஆகம சார சொரூபன், ஆயிரங்கலை கத்தன், ஆறாதாரன். உண்டநெஞ்சறி தேன், உம்பர்த்தேவர்கள் தம்பிரான், என்றும் இளையோன், கடவுட் சக்கரவர்த்தி, கல்வி கரைகண்ட புலவோன், கவிஞருசாத்துணைப் பெருமாள், கவிராஜப் பெருமாள், குழந்தைக் குருநாதன், குறத்தி கிங்கரன், சகலகலாதரன், சத்யவாக்யப் பெருமாள், செந்தமிழ்ப்பெருமாள், ஞானபண்டிதசாமி, தகப்பன்சாமி, நாரதகீத விநோதன், பிள்ளைப் பெருமாள், முத்தமிழ் விநோதன், முத்திக்கொரு வித்து, முருகச் சிம்புள், முழுச் சேவகன், வள்ளி வேளைக்காரன்.

முருகன் திருநாமங்களுள் (i) சிறியன:- சேய். வேள், குகன் என்பன:

**(ii) பெரியது:** "வீரசேவகவுத்தண்ட தேவகுமார ஆறிருபொற்

செங்கைநாயகன்.

**(iii) முருகன் திருநாமம் அடுக்கி வந்துள்ள பாடல்கள்:-**

64, 144, 195, 196, 247.

முருகன் நாம விசேடம் கூறும் பாடல்கள்:- 668, 1187

**(18) முருகவேளிடம் வேண்டத் தக்கவை காட்டும் பாடலடிகள்.**

(1) "சகலதுக் கமுமறச் சகலசற் குணம்வரத்
தரணியிற் புகழ்பெறத் தகைமைபெற் றுனதுபொற்

சரணமெப் பொழுதுநட் பொடுநினைத் திட அருட்
டருவாயே" (672)

(2) எனது யானும் வேறாகி எவரும் யாதும் யானாகும்
இதய பாவனாதீதம் அருள்வாயே. (1048)

(3) மனதாலே இறந்திட்டுப் பெறவே கதியாயினும்
இருந்திட்டுப் பெறவே மதியாயினும்
இரண்டிற் றக்கதொ ரூதியம் நீதர இசைவாயே. (631)

(4) இறைவா எதுதா அதுதா (834)

(5) மாப்பாதகனாம் அடியேனை நினருளாலே
பார்ப்பாயலையோ அடியாரொடு
சேர்ப்பாயலையோ உனதாரருள்
கூர்ப்பாயலையோ உமையாள் தரு குமரேசா! (685)

**(19) முருகன் பெருமை:**

(1) சிலைமகள் நாயன் கலைமகள் நாயன்
திருமகள் நாயன் தொழும்வேலா! (261)

(2) கஞ்சம் வாய்த்திட் டவர்க்கும் கூட்டிக்
கன் று மேய்த்திட் டவர்க்குங் கூற்றைக்
கன்ற மாய்த்திட் டவர்க்குந் தோற்றக் கிடையாதீ (373)

**(20) முடிவு:**

முருகா எனவோர் தரமோ தடியார்
முடிமே லிணைதாள் அருள்வோனே!
ஒருகால் முருகா பரமா குமரா
உயிர்கா எனவோ தருள் தாராய். (851)

முருகவேளைப் பற்றிய விஷயங்கள் கூறும் - முக்கியமான பாடல்களின் எண்:- 117, 185, 451, 452, 454, 457, 509, 513, 766, 777, 803, 838, 880, 987, 1256.

## 6. திருப்புகழும் தேவசேனையும்

இனித் தேவசேனையைப் பற்றி அருணகிரிநாதர் கூறியுள்ள அரிய பொருள்களை ஆராய்வாம். வள்ளியம்மையைப் போற்றின அளவில் அதிக இடங்களில் தேவசேனையைப் பற்றிக் கூறாவிடினும் தேவசேனையைப் பற்றிப் பல அரிய பொருள்களை அருணகிரியார் வெளியிடுகின்றார். அவை தாம்:-

(1) தேவசேனை "முத்தி (தரு) மாது" என்பது ஓர் அரிய பொருள். இது "முத்தைத்தரு பத்தித் திருநகை அத்தி"- என ஆண்டவரே எடுத்துக் கொடுத்த முதல் திருப்புகழாலும், "அமுதத் தெய்வானை திரு

முத்திமாதின் மணவாளா" - என்னும் திருமுட்டத்துத் திருப்புகழாலும் (764) விளக்கம் உறுகின்றது. "ஆரிய சேவலி" "குடில் மங்கை" எனவரும் திருநாமங்களும் ஈண்டு உணரற்பாலன.

(2) தேவசேனை முதலில் 'அமுதவல்லி' என்னும் பெயரினள் என்பதை உணர்த்த "அமுதத் தெய்வானை" (764), "அமுத மாது" (788) எனப் போற்றப்பட்டுள்ளாள்.

(3) தேவசேனை தேவர்கோன் மகளாதலின் அந்த அம்மைக்கு உரியன இடி, குலிசம், ஐராவதம், பொன்னுலகம் - என்னும் நான்கும். இதை,

"இடிபு முனை மலி குலிசமும் இலகிடு
கவள தவள விகடதட களகட இபமும்
*இரணிய தரணியும் உடையதொர் தனியானை" - (1008)

என வருவதால் அறிகின்றோம்.

(4) தேவர்கள் வாழ்வதற்கு முருகவேள் மூலகாரணர்; தேவசேனை யம்மையார் துணைக் காரணம் என்பது "சுரர் வாழப் பிறந்த சுந்தரி" (1192) என்றதனால் விளக்கப்படுகின்றது.

(5) தேவசேனை யிடத்து முருகவேளுக்கு மிக்க காதல் உண்டு என்பது -

"யானை அறவிற் றுவளும் ஆசைக்காரன்"
- (வேளைக்காரன் வகுப்பு)

தத்தத்து அத்தி நத்தை தாது! - (கந். அந். 54)
அத்தி நகை இன் நித்திலம் உந்து அயில்
அமுதத்தால் உருகிய சித்த!" - (கந். அந் 62)
"உம்பற் றருமகள் சுகிப்ப, மண அறை களிக்க
துணை அறு முகத்தொ டுறமயல் செழித்த திருபுய
செம்பொற் கரகமலம் பத்திரு தலம்" -(585)

என வியந்துரைப்பதால் அறியக்கிடக்கின்றது.

(6) வள்ளியம்மை யிடத்தும் தேவசேனை யிடத்தும் "என் ஆவியை ஆண்டருளுமின்" என வேண்டும் நிலையில் முருகவேள் காதல்கொண்டிருந்தனர் என்பது -

உந்தி யிர்! அத்தியிர்! அத்தனை ஆவி
ஆளும் என் சேவகனே! -(கந். அந். 7)

- என்னும் அருமை வாக்கால் விளக்கப்படுகின்றது.

*இரணிய தரணி - பொன் உலகு

இங்ஙனம் கூறியிருந்தும் வள்ளிபாற் கொண்ட காதலே அளவுகடந்தது என்னும் மேம்பாடு -புய வகுப்பில் - முருகனது வாகைப் புயங்கள் -

'விபுதர் குலக்குலி சன்ப யந்த செங் கையானைக் கிசைந்தன'
'வேடர் விமலை தினைப்புன மங்கை கொங்கை கண்டு
வேளைப்புகுந்தன'

என்னும் இடத்தில் - முருகவேளின் புயங்கள் (தேவசேனைக்கு) உடன் பட்டுப் பொருந்தின என்று மாத்திரம் கூறி, வள்ளி கொங்கைக்கு மோகித்துக் காத்துக்கிடந்து புகுந்தன - என நுணுக்கமாக உணர்த்தியதால் விளக்கம் உறுகின்றது. பின்னும் திருப்புகழில் ஓரிடத்தில் தேவசேனையை மணந்தனர் என வாளா கூறி வள்ளியைச் சேரக் கலவி நாடகம் புரிந்தனர் முருகர் எனச் சிறப்புக் கூறப்பட்டுளது.

"சுரர்கள் நாயகன் பயந்த திருவை மாமணம் புணர்ந்து
குறவர் மாதுடன் செறிந்து கலவி நாடகம் பொருந்தி
மகிழ்வோனே"! (1209)

(7) தேவசேனை விண்ணுலகத்து அழகிய அணங்கு என்பதைச் -
"சம்பைக் கொடியிடை ரம்பைக் கரசி", (585) 'சம்பைக்
கொடியிடைவிபுதை' (210), கரகுஞ்சரி, வானவைந் தொடி'
எனவரும் இடங்களிற் காண்க.

(8) தேவசேனையைக் குறிக்கும் அருஞ் சொற்றொடர்களுட் சில:- அண்டத் திருமயில், தேவபூ, சொர்க்கக்கிளி, தேவகுஞ்சரி, வேழமங்கை, சசிதருமயில், குஞ்சரிமான், புருகூதன் மினாள்.

(9) தேவசேனையைத் துதிப்பதால் வரும் பயனையும் அருணகிரியார் விளக்கியுள்ளார். தேவசேனை மேகவாகனனாம் இந்திரனது குமாரியாதலின் அந்த அம்மையார் ஊர்ந்து செல்லும் மேகம் நமது வறுமையை ஒழிக்கும் என்கின்றார்.

'தெய்வமின் ஊர் செல்வந்து இகழும் நமது
இன்மை தீர்க்கும்' (கந். அந் 100)

(10) தேவசேனைக்கு உரிய துதி:

"அகரு ம்ருகமத களப பரிமள விகட முகபட கடின புளகித
அமிர்த பூதரி அண்டர் செழுங் கொடி;
குமுத வாய்மயில்; குஞ்சரி, மஞ்சரி.

*அக்கமொரு கோடிபெறு வஜ்ரபா ணிக்குமரி*
*தக்க அமராவதி புரக்கும் ஆணை (க்குஇறைவன்)*

*- (பூதவேதாள வகுப்பு)*

இனி வள்ளியை பற்றி ஆய்வோம்.

## 7. திருப்புகழும் வள்ளியும்

**வள்ளியம்மை:**

(i) (1) **திருமாலின் மகள்:**

*"திருமால் அளித்தருளும் ஒரு ஞான பத்தினி" 1218.*

(2) **திரு (இலக்குமி)யின் மகள்:** *'திருமகள்' - 112, 238, 244.*

(3) **பிரமன் தங்கை:** *'விதியானவன் இளையாள்' (1185)*

(4) **சுந்தரவல்லி (பழைய பெயர்)** *'சுந்தர குறம் பெண்' (65)*

(5) **அமுதவல்லியின் (தேவசேனையின்) தோழி:**

*'அமுத மாதுவின் நல தோழிமாது' (788)*

(6) **சிவமுனிவர் மகள்:** *முனிபெறு புனமான்' (513)*

(7) **மான் ஈன்ற மகள்:** *'மான் ஈனும் அரிவை' (1053)*

(8) **வேடர் குலத்து விநோத மகள்:**

*"வியாதர்கள் விநோத மகள்" (352)*

(i) **வர்ணனை:**

*குயில்மொழிக் கயல்விழித் துகிரிதழ்ச் சிலைநுதற் சசிமுகத்*
*திளநகைக் கனகுழற் றனகிரிக் கொடியிடைப்*
*பிடிநடைக் குறமகட் டிரு (672)*

*கொச்சை மொழிச்சி கறுத்த விழிச்சி சிறுத்த இடைச்சி*
*பெருத்த தனத்தி குறத்தி (128)*

(ii) **திறம்:** *பச்சை நிறம் -'பச்சைக் கொச்சைக் குறவி' (476)*

(iii) **அழகு:** *எழுதிட அரிய எழில் (1080); மடலூடே எழுத அரியவள் (1199); கவர்பூ வடிவாள் 563.*

'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்பதற்கு ஏற்ப அறுமுகவேள் வள்ளியைத் தனது அகத்திற் கொண்டிருந்தாராதலின் வள்ளியின் இதய தாமரையை ஒக்கும் அறுமுக வேளின் திருமுகத் தாமரை என்கின்றார் அருணகிரியார்.

"தெய்வவள்ளிசே அகம் அன்ன வதனாம்புய! (கந் அந் 64)

**(iv)** 'பேச்சின் அழகு' இந்தளாம்ருத வசனம் (289), (பண் இந்தளம் - நாத நாமக்கிரியை;) 'ரஞ்சிதாம்ருத வசனம் (79); 'நல்ல கொல்லியைச் சேர்கின்ற சொல்லி' (பண் கொல்லி-நவரோசு) கந். அலங் 10- "சர்க்கரை முப்பழும் ஒத்த மொழிச்சி குறத்தி" (300)

**(v) உடை:** - 'பீலியும் இலையும் உடுத்திட்டு' (1199)

**(vi) தொழில்:** பரண்மீதிருந்து, கவண்கல் எறிந்து, தினைப்புனங் காத்தல்: 'வேடர் செழுந்தினை காத்து இதண் மீதிலிருந்த பிராட்டி' 1003, 'ஆயுதகவணொரு கைச்சுற்றி விளையாடும் வேடுவர் சிறுமி' 1199.

**(vii) கருணையும் திருவும்:-**

"கருணை யகலா விழிச்சி, களபம் அழியா முலைச்சி, கலவி தொலையா மறத்தி" (521)

முருகவேளின் பெரும்புகழுக்குக் காரணம் அவர் வள்ளியோடு கொண்ட திருவிளையாடலே. கண்ணப்ப நாயனாரது எச்சிலை உண்டதாலும், சுந்தரமூர்த்திப்பெருமானுக்குத் தூது சென்றதாலும், சிவபிரானது புகழ் பெருகி நிற்பது போல, வள்ளிக்கு வேடை கொண்டதால் முருகவேளின் புகழ் ஓங்குகின்றது. இவ்வுண்மையை உணர்ந்த அருணகிரியார் முருகவேளைக் காட்டிலும் வள்ளியையே பெரிதும் பாராட்டுவர்; அம்மட்டும் அன்று; வள்ளியம்மையின் ஏற்றத்தை வாழ்த்தி வாழ்த்தி முருகவேளின் எளிமையைத் தாழ்த்தித் தாழ்த்திப் பாடுவர். அங்ஙனம் தாம் தாழ்த்திப் பாடுதல் முருகவேளுக்கு விருப்பே ஒழிய வெறுப்பு இல்லை.

சீரேறு தணிமலைத் தெய்வமே நான்இன்று
  செப்புவேன் எங்கள் வள்ளிச்
செல்வநா யகிபெருமை, பத்தியொடு, புத்தியின்
  செம்மைத் திறங்க ளெல்லாம்
ஆரேயிவ் வறிவிலி என் பெருமை தன்னிலும்
  அவன்பெருமை மேலதாக
அடுக்கடுக் காயுரைக் கின்றனன் என்றுநீ
  அழுக்காறு கொள்ள மாட்டாய்.
காரேறு குழல்வள்ளி பெருமையைக் கேட்ட ஓர்
  களிப்பு பூரிப்பினாலுன்
கவசம் பிளந்திடும் புதுப்புதுக் கவசங்கள்
  கட்டினும் பிளந்து வீழும்
ஏரேறு மயிலேறி என்முனே வந்து நீ
  எனையும் புரந்தருளுவாய்
இவ்வுண்மை அருணகிரி நாதரறி வாரன்றி
  யாவர் பிறர் அறிய வல்லார்!

**(viii) மாமிக்கு (பார்வதிக்கு) உகந்த மருமகள்:**

*'பார்வதியார்க்கும் இனித்த பெண் ஆகிய மான்மகள்'* 789

**(ix) வனதேவதைகள் வள்ளியை மலரிட்டுத் தொழுது வழிபட்டது:**

*அடவி வனிதையர் தனதிரு பரிபுர, சரண மலரடி மலர்*
*கொடு வழிபட, புனமதி வினி துறை தனிமான்;* 516

*"அடவிவனிதையர் பரவ மரகத இதனில் இருப்பாள்"* - சேவகன் வகுப்பு

**(x) வள்ளியின் அருமைத் திருநாமங்கள்:**

*அமுத சொருபி, அமுதாசனத்தி, இன்பரச சத்தி, எயினர் குலோத்தமை, கலைக்கொம்பு, காவற்பாவை, கிராத குலதிலக மான், கிராதலக்ஷ்மி, சந்தானமாது, சுசிஞான ரம்பை, சோதிப் பிரகாசச் செயலாள், ஞானாதனத்தி, பட்டாள், பெண்கள்நாயகம், மிருகக்கரும்பு, மாயக்குறமாது, முத்தமிழ் மான், மூலஞான மங்கை, வேடபதிவ்ருதை, வேதச் சொருபி.*

*எவ்வெவ்வாறு வள்ளியிடம் முருகவேள் தமது காதற் பெருக்கத்தைக் காட்டினார் என்பதை அருணகிரியார் நன்கு காட்டியுள்ளார்; உதாரணமாகச் சில கூறுவாம்.*

**வள்ளியிடம் முருகர் கொண்ட காதலும்**
**வள்ளிக்கு அவர் செய்த தொண்டுகளும்:-**

**(1) வள்ளிக்குக் காணிக்கையாக (உடுக்கத்) தழை ஏந்திச் சென்றது**

*வள்ளி புனமேசென்று கொய்து தழையே கொண்டு*
*செல்லு மழவா! கந்த!* (389)

**(2) வள்ளி யிருந்த காட்டுக்கும் ஒரு கும்பிடு போட்டது:**

*அடவியும் தொழுமொடு தொழும்படி*
*அநுராக அவசமும் புனைந்து'* (1151)

**(3) தினையை க் குத்துதற்கு உலக்கையாக வள்ளிக்கு யானையின் தந்தத்தைப் பறித்துக் கொடுத்தது:-**

*"குற (குற்றுதற்கு) குறச் சத்திக்கு (வள்ளிக்கு) அத்திக் கோடு (யானையின் தந்தத்தைப்) பறித்துக்கொடு (கொடுத்த) ஆதி! (கந்-அந்-11)"*

**(3)A வள்ளியை அணைவ தை விடார்** (522)

**(4) கைத்தானம் இட்டுவள்ளியை இரண்டு கைகளாலும் கும்பிட்டது:-**

"கொண்டல் நிறத்தோன் மகளைத் தரைமீதே கும்பிட கைத்தான மெடுத்து- புகழ்- அறுமுகப் பெருமாளே" (867), "எயினர் மயிலை இருகைதொழுது புணர்மார்பா!" (1069), "மன்றற்பைம்புனத் தாள் பதாம்புயம் வந்திக்கும் தனிக்காம வாஞ்சையன்" (பூத - வகுப்பு)

**(5) உலகோர் சிரிக்க, லஜ்ஜையை விட்டு, வள்ளிக்கு மெய்க் காவற் காரனாயிருந்து (Body guard), அவளோடு வேளை பார்த்துக் கூடிக் குலவியது:-**

"இலஜ்ஜையற்று, எழுபாரும் வெறுத்துச் சிரிப்ப
நட்பொடு வேளை வெளைப்புக்கு நிற்கும் வித்தக" 1186
"புனம்வாழும், கோலப் பெண் வாருகண்டு
மாலுற்று வேளைகொண்டு கூடிக் குலாவும்** பெருமாளே" 1241
'இதுவேளையென்று கிராத... மாதுடன் கலவிபுரிவாய்' 1245
'திருமாளை... அவசமாய்த் தொழுது பொழுது
போக்கிய பெருமாளே' 1181
'மேதகு குறத்தி திரு வேளைக்காரனே' (திருவகுப்பு)
'மயிலை இருக்கும் ஒரு வேடிச்சி காவலனே'
'குறத்தி கிங்கரன்' 1233

**(6) யானை, மான், கிளி இவையெலாம் உருகி நிற்கத் திணைப் புனத்தில் நின்று இசைபாடித் துதித்து வள்ளிக்கு உவகை ஊட்டியது:**

'கரி நற்கலைத் திரள், கற்புடைக்கிளி உட்கருத்துருகத் திணைக்குள் இசைத்து, இசைபாடி, குயிலை கைப்பிடித்த மணப் பெருமாளே' 1024; 'கொங்கைக் கொப்பாகும் வடகிரி, செங்கைக் கொப்பாகும் நறுமலர், கொண்டைக் கொப்பாகும் முகிலென, வனமாதைக் கும்பிட்டுக் காதல் குலகிய இன்பச் சொற்பாடும் இளையவ!" 945

**(7) வள்ளியின் காலைக் கூசாமல் வருடியது**

'குறமறவர் கொடி யடிகள் கூசாது போய்வருட' 1143
'குறமான் வனத்தில் மேவி அவள் கால் பிடித்து' 790
'மாது குறமகள் பாதம் வருடிய மணவாளா' 225

**(8) வள்ளியை அருச்சித்து வெட்சிமாலை சூட்டியது**

'அர்ச்சித்து...கொச்சைத் தத்தைக்குச்
செச்சைத் தொடை சூழ்வாய்' 474

**(9) தினைப்புனம் காக்கும் தொழிலைப் புதிதாகக் கற்றுக் கொண்டு நாள்தோறும் (வள்ளிக்கு உதவியாகக்) குயில், கிளி வராது தினை காத்தது:** 'நாடொறும் மயில் பயில் குயில் கிளி 'வம்பிலே கடி தொண்டினோனே' 768 (வம்பு - புதுமை) "தினைகாவல் கொண்ட முருகா" 902

**(10) வள்ளியைக் கண் காட்டி வேட்டது:**

'குன்ற வேட்டிச்சியைக் கண் காட்டிக் கொண்டு வேட்டு' (373)

**(11) வள்ளியைத் தோளின் மேல் வைத்து ஒளித்தோடியது:**

'குறமானைத் தோளில் உறவாகக் கொண்ட வாழ்வே' 524
'வேடுவர் மாதாம் ஓர்மினை எடுத்தே தான்வர' 714
'உரத்தோ ளிடத்திற் குறத்தேனை வைத்திட்
டொளித்தோடும் வெற்றிக் குமரேசா' 534

இம்மட்டோ! இன்னும் கூறுகின்றார் அருணகிரியார்:

(1) முருகா நீ தேவர்தம் பெருமாள்; ஆதி நாதராம் சிவனும் (உனது தண்டைக் கழலைப் பேணித்) தொழுது நிற்கின்ற தேசிக மூர்த்தி நீ; அங்ஙனமிருந்தும், நீ வள்ளியின் பாதத்தை உன் தலைக்கு அணியாகக் கொண்டுள்ளாய் - என்கிறார்.

"புனமேவும்... வஞ்சி... பாதம் படுஞ் சேகரா!
தண்டையங் கழல்பேணி.. ஆதிநாதன் தொழும்
தேசிகா! உம்பர்தம் பெருமாளே! (1107)

(2) முருகா! வானவர் பெருமாளாய்த் தேவர்களுக்கெல்லாம் தஞ்சம் அளிக்கின்றவன் நீ; அங்ஙனமிருந்தும் நீ வள்ளிபால் மால்கொண்டவனாய் அவளிடம் சென்று 'எனக்கு உன்னை ஒழிய வேறு தஞ்சம் இல்லை' என்று கூறி அவளிடம் காத்து நின்றனையே என்கின்றார்.

'தின்புன மீதே மாதொடு மிகமாலாய் -
மேகமென் குழலாய்! நீகேள் இனி
வேறு தஞ்சமும் நீயே யாமென
வேளை கொண்ட பிரானே வானவர் பெருமாளே' (1000)

பின்னும், தான் வழியடிமை என்று வள்ளிக்கு அடிமைச் சீட்டு முருகவேள் எழுதிக்கொடுத்த ஒரு ரகசியத்தையும் அருணகிரியார் வெளிப்படுத்துகின்றார். இந்த ரகசியம் அவருக்கு வள்ளிமலையில் வெளிப்பட்டது. இதைத் தான் "குன்னம் குறிச்சி வெளியாக்கி விட்டது". என்றார் கந்தர் அலங்காரத்தில் (24) பத்திரம்

எழுதிக்கொடுத்தால், எழுதிவாங்குபவரிடம் மூலப்பிரதியும், யாவரும் காணக் கூடிய பொது இடத்தில் (Public Registry Office -ல்) உண்மை நகலும் இந்நாளில் இருப்பது போல - முருகவேளும் தான் வள்ளிக்கு வழியடிமை என்றெழுதிய சாசனத்தை (Service agreement) வள்ளியின் காதோலையில் மூலத்தை எழுதிக்கொடுத்தும், அதன் உண்மை நகலை 'வேதம் அறிய, தேவர்கள் அறிய, உலகமெல்லாம் அறிய மேருமலையில் எழுதியும்' வைத்தனராம். இதை -

"குறமாதின்..... குழையோலை சாதனம் என்றுரையா" (1002) "வேடுவர் சிறுமி ஒருத்திக்கு யான் வழியடிமை யெனச் செப்பி வேத மும் அமரரும் மெய்ச்சக்ர வாளமும் அறிய விலைப்பட்டு மேருவில் மிகவும் எழுந்திட்ட பெருமாளே. (1199) என விளக்கியு ள்ளார்.

இங்ஙன மெல்லாம் வள்ளியின் பெருமையைக் கண்ட காரணத்தால் - "முருகா! நீ 'குறத்தி கிங்கரன்', 'நீ வள்ளி திருவேளைக்காரன்', 'நீ "வேடிச்சி காவலன்" என்றெல்லாம் வள்ளியோடு மருவிய உன திருநாமங்களையே நான் ஓதி உன் சீர்பாத வகுப்பாதி பாட வேண்டும்' என அருணகிரிநாதர் வேண்டினர்.

"குறத்தி கிங்கரன் எனப் படைத்த பெயர் பேசா
நின் பதயுகப் ப்ரசித்தி யென்பன வகுத்துரைக்க
நின்பணி தமிழ்த்ரயத்தை யருள்வாயே" - (1233) என்றனர்.

வேண்டுவார் வேண்டுவதே இறைவன் ஈவான்; எனவே இவ் வேண்டுகோளின் விளைவாகத் "திருவகுப்பு" என்னும் திப்பிய நூல் எழுந்தது. ஆதலால் அருணகிரியார் அருளிய திருவகுப்புக்களில் எல்லாம் (பதினெட்டிலும்) (9-10 தவிர) வள்ளியின் பெருமையோ, பெயரோ காணலாகும். மேலே குறித்தவாறு வள்ளியுடன் பல திருவிளையாடல்களைச் செய்த பெருமான் ஈற்றில் வள்ளிக்கு ஸ்பரிச தீக்ஷையும், பிரணவ உபதேசமும் செய்து, தமது தேவியாக்கிக் கொண்டார். செட்டியாக வந்து வளையல் இட்டதால் ஸ்பரிச தீக்ஷையும், விநாயகர் யானையாய் எதிரில் வந்ததால் பிரணவக் காட்சியும் பெற்றுப், பின்முருகவேளை அணைந்த போது முருகவேளால் பிரணவ உபதேசமும் வள்ளியம்மை பெற்றதாக அருணகிரியார் தெரிவிக்கின்றனர்.

இதை -

'ஓது குறமான் வனத்தில் மேவியவள் கால் பிடித்துன்
ஓமெனுப தேச வித்தொ டணைவோனே." (790)

எனவரும் இடத்துக் காணலாம். 'ஓம்' என் (என்கின்ற) உபதேச வித்து - இதுதான் சிவபிரானுக்கு உபதேசிக்கப் பட்டதாம்.

"சிவனார் தமக் குரிய உபதேச வித்தை யருள்
திருவேரகத்தில் வரு பெருமாளே" (224)

என்பது கவனிக்கற்பாலது. உபதேச வித்தே ஞானவித்து.

"சுவாமி வெற்பில் ஞானவித்தை அருள் செய் தாதை கற்க
விளவ ஓது வித்த பெருமாளே" (226)

என வருவதைக் காண்க.

இத்துணைப் பெருமை வாய்ந்த வள்ளிபால் ஸ்பரிச தீக்ஷைபெற்று, வினை மாளப் பெற்றார் அருணகிரியார் என்றால், அருணகிரியாரின் பெரும் பேற்றை என்னென்று கூறுவது!

'எனதாயி வளிநாயகி' (664)

'கடையேன் இருவினை நோய் மலம் மாண்டிட
தீண்டிய ஒண் கமோகினி வளி நாயகி' (568)

"இடர் கலிகள் பிணியோட எனையுமருள் குறமாது" (643)

இங்ஙனம் வள்ளிபால் தாம் பெற்ற பேற்றை நினைந்து மகிழ்ந்தே அருணகிரியார் தமது நூல்களில் வள்ளியின் பெருமையையே எடுத்தெடுத்துரைத்து மகிழ்கின்றார். ஆதலால் திருப்புகழ் "முருகன் புகழ் நூல்" மட்டும் அன்று; "வள்ளியின் திருப்புகழ் நூலுமாம்" என்று திடம்பட உரைக்கலாம்.

பாலப் பருவத்தில் முருகன் மறக்கருணை காட்டினன்; வள்ளியை மணந்த பின் முருகன் கருணை அறக்கருணையாய் மாறிற்று என்னும் கருத்தமைந்த பாடலைச் செப்பி இக்கட்டுரையை முடிப்போம்.

கருணைநிறை கடவுள் நீ என்றாலும் உன்கருணை
ஓஹோ! மறக்கருணையே
கார்நிறச் சூரர்களை வேல்கொண்டு மாய்த்தனை
கமலமலர் மேவயனையே

பொருளிறைவு காண்கிலை என்றே புடைத்துப்
புலம்பிடச் சிறையிலிட்டாய்
புனக்குறும் பாகுமெம் வள்ளியை மணந்தபின்
பூண்டனை அறக்கருணையை
இருளிறையும் உள்ளம்உள கீரர்பொய் யாமொழிக்
கின்பந் தனை யூட்டினை,
எழிலிவடி வினன்எகினன் இந்திரன் சேடன்முதல்
யாவர்க்கும் நற்றனிகையில்
அருளிறைவு காட்டினை, அருணகிரி நாதரை
ஆட்கொண்டு பாவகுக்கும்
அந்த அருள் தந்தனை செந்தமிழ்த் தெய்வமே!
ஆயிகுற மாண்மகிணனே!

## 8. திருப்புகழும் வேலும்.

"அந்தமில் ஒளியின் சீரால் அறுமுகம் படைத்த பண்பால்
எந்தைக ணின்றும் வந்த இயற்கையாற் சத்தி யாம்பேர்
தந்திடும் பனுவல் பெற்ற தன்மையால் தனிவேற் பெம்மான்!
கந்தனே யென்ன நின்னைக் கண்டுளங் கவலை நீத்தோம்".
(கந்தபுராணம் மூன்றாம்நாள் பாநுகோபன் - 212)

என வீரவாகு தேவர் வேலாயுதத்தைப் போற்றினர். அருணகிரியார் யாது கூறுகின்றார் பார்ப்போம்:

### 1. வேலின் ஒளி

(i) நூறுகோடிக் கணக்கான உதய சூரியர்களின் ஒளிக்கு நிகராகும் வேலின் ஒளி.

"உதய பாநு சதகோடி உருவான ஒளிவாகு மயில்வேல"
(திருப். 207)

(ii) சூரியன் பன்னிருவர் வடிவையும் உருக்கி வடிவெடுத்தாற் போன்ற மாசற்ற பேரொளியைக் கொண்டது வேல்:

"திவாகரர் வடிவை உருக்கி யெடுத்த திருக்கைவேல்"
(பூதவேதாள வகுப்பு)

(iii) சூரியனது வெய்ய ஒளியும், சந்திரனது தண்ணொளியும், வடவைத் தீயின் கடிய ஒளியும் வேலின் ஒளிக்கு முன் பயந்து ஒளிக்குந் தன்மையன:

"சுடர்ப்பரிதி ஒளிப்ப, நில ஒழுக்குமதி ஒளிப்ப, அலை
அடக்குதழல் ஒளிப்ப, ஒளிர் ஒளிப் பிரபை வீசும்"
(வேல்வகுப்பு)

ஒளியின் காரணமாக - வேல் -

ஒளிவேல், கிரண அயில், சுடரயில், சோதிவேல், பாநுசக்தி, பிரபை அயில், மின் அயில், தடி(மின்) நிகர் அயில் - எனக் கூறப்பட்டுளது.

**2. வேலின் அலங்காரமும் அழகும்:**

குஞ்சம், மணி முதலிய பொருந்தி அழகுடன் பொலியும் வேல் என்பது 'குஞ்சங் கட்டிய வேல்', 'மணிவேல்', 'மணிக்கதிர் வேல்', கோமளசுசக்தி', சிங்கார அயில் வேல்', 'சித்ர வடிவேல்' என வருவனவற்றால் தெரிகின்றது.

**3. வேலின் உக்ரம்:**

சினவடிவு தங்கியவேல், உக்ரவடிவேல், இடி முழங்கிய வேற்படை, கால பாநுசக்தி - சண்டவிக்ரம வேல் - என வருவனற்றால் வேலின் உக்கிரம் புலப்படுகின்றது.

**4. வேலின் உருவம்:**

வேலின் உருவம் இன்னதென்பதை 'நெட்டிலைவேல்', தாரை (கூர்மை) வேல், நெடுவேல், நீள் வேல் என வருவனவற்றால் அறிகின்றோம்.

**5. வேலின் குணம்:**

வஞ்சர்க்கு வஞ்சனை செய்யும்; அடியார்க்கு உதவும், 'வார மதாம அடியார்க்கு வாரமாகி வஞ்சனை செய்வார்க் கென்றும் வஞ்சனாகும் சீர் அரசு' என்று சிவபிரானை அப்பர் கூறியவாறு வேலும் வஞ்சர்க்கு வஞ்சனை செய்யும்; இது "வஞ்ச வேல்" எனத் திருப்புகழில் (750, 773) வருவதால் அறியலாகும்.

**6. வேல் - மந்திரம்:**

தியானத்துக்குச் சிறந்தது 'வேல் மந்திரம்': வேல், வேல் எனப் பெரியோர் பலர் தியானித்துப் பல சித்திகளை அடைந்திருக்கிறார்கள். இதனால் 'மந்த்ர வேல்' சித்திமன்னு செய்ய சத்தி', 'மெய்ஞ்ஞான அயில்' 'சிவமஞ்செழுத்து' - என்றெல்லாம் வேல் சிறப்பிக்கப்பட்டுளது.

**7. வேலின் பஞ்ச கிருத்தியம்:**

'கண்ணாடியில் தடம் கண்ட வேல்' (908) - ஆதலின் தோற்றமும், வீரவாகு தேவரையும் நக்கீரரையும் காத்து அளித்த

காரணத்தால் **திதியும்**, சூர சங்காரம் செய்ததால் **சங்காரமும்**, அடியாரிடத்து வெம்மையை **மறைத்துத்** தண்ணருள் காட்டியும், பகைவரிடத்துத் தண்மையை மறைத்து வெம்மையைக் காட்டியும் ஒழுகுதலால் **திரோ பவமும்**, அருணகிரியார் நாவிலும் குமரகுருபரர் நாவிலும் பொறித்து நலந் தந்த காரணத்தால் **அனுக்கிரகமும்** - ஆகப் பஞ்ச கிருத்திய சத்தி வேலிடத்து உண்டு என்பது விளக்கமாகின்றது.

## 8. வேலின் பெருமை:

*'சிவமஞ்செழுத்து'* (606) என்று வேலைக் குறித்ததால் பஞ்சாக்ஷரத்துக்கு உள்ள பெருமை யெல்லாம் வேலுக்கு உண்டு; 'மறச்சிறுமி விழிக்கு நிகராகும்' (வேல் வகுப்பு) - என்றதால் வள்ளியம்மையின் திருக்கண் நோக்கத்தால் வரும் பேறுகள் அனைத்தையும் வேல் தரவல்லது; 'இறை கழற்கு நிகராகும்' (வேல் வகுப்பு) - என்றதால் சிவன் சேவடிக்கு உள்ள பெருமையெல்லாம் வேலுக்கு உண்டு என்னும் அரிய பெரிய உண்மைகளை அருணகிரியார் வெளியிட்டுள்ளார்.

## 9. வேலைத் தியானிப்பதும், அதனால் வரும் பயனும்:

அருணகிரியார் தாம் அனுட்டித்ததும் உலகோர்க்கு உபதேசித்ததுமான ஒரு விரதம் வேலின் தியானமே.

*"வினையோட விடுங் கதிர்வேல் மறவேன்" (கந் -அநு 40)*
*"காமக்கள்ளை மொண்டுண் டயர்கினும் வேல்மறவேன்"*
*(கந்-அலங்37)*

'வேல் பாடாதே... நாயேன் வாணாள் வினை போகத் தகுமோ தான்" (820)

பின்னும், வேலாயுதம் பிறவிக்கு வித்தாகிய ஆசையை ஒழிக்கும்; யமனது கொடுமையைத் துடைத்துவிடும்; பிறப்பு இறப்பை நீக்கும் என்றும் விளக்கியுள்ளார்.

*"நீண்டகன்ம -செ - இக்குன்று - அவா - ரண வேலாயுதம் செற்றது"*
*(கந்-அந் 26)*
*'வெங்கூற்றுவற்குச் - செல் -வந்தி - கழும் - திருக்கையில்வேல்' " (100)*
*சாதக விகாரக் சாதலவை போகச்.... சிந்தையாலுன்*
*தாரைவடிவேலைச்... சிந்தியேனோ (525)*

இங்ஙனம் வேலின் பெருமையையும் சிறப்பையும் நன்கு உணர்ந்தே அறிஞர்கள் 'வேல்' என்ற பெயரைத் தனித்தோ, தங்கவேல், வஜ்ரவேல் - என்று அடைமொழி கொடுத்தோ மக்களுக்குச்

சூட்டுகின்றனர். அருணகிரியாரும் - வேல் வகுப்பு, வேல்வாங்கு வகுப்பு என இரண்டு வகுப்புக்கள் வேலின் பெருமையைக் காட்டப் பாடியுள்ளார்.

## 9. திருப்புகழும் மயிலும்

இனி, வேலுடன் இணைந்து நிற்கும் 'மயிலை'ப் பற்றிக் கூறுவோம். திருப்புகழ் எங்ஙனம் பாடவேண்டும் என்று விநாயகமூர்த்தி அருணகிரியாருக்கு அருளியபோது 'பகலியெனும் உக்ர துரகத்' தையும், 'திக்கது மதிக்கவரு குக்குடத்தை'யும் வைத்து உயர் திருப்புகழைச் செப்புக - என்று கட்டளையிட்டார். அக்கட்டளையை நெஞ்சிற் பதித்தவராய்த் தமது பாடல்களில் ஆங்காங்கு மயிலையும் சேவலையும் சிறப்பித்துப் பாடினார் அருணகிரியார். அவர் எவ்வாறு மயிலைச் சிறப்பித்துள்ளார் என்பதை ஆராய்வோம்.

### 1. மயிலின் அலங்காரம்:

அங்கவடி, மணி, சேணம் பூட்டிய குதிரைபோல அலங்காரங் கொண்டது (3). நாகப்பூண் பூண்டது. காலில் முத்து, பவளம் கோத்துக் கட்டிய அலங்காரம் பூண்டது.

"துப்பு முத்துச் சரண பச்சை வெற்றிப் புரவி" (1117)

### 2. மயிலின் ஒளி - கலாபத்தின் ஒளி:

பொன்மலை போலவும், வெள்ளிமலை போலவும், மரகத மலை போலவும், கங்கை - யமுனை போலவும், ஒளிகளை வீசுங் கலாபம் (1048, 1095). அக் கலாபத்தை எட்டாத வெளிமட்டும் விரிக்கும். (கந். அலங். 65) மயிலின் இறகு பல நிறங்களைக் கொண்டது. 'பலநிறம்'டைந்த விழுசிறை மலர்ந்த பருமயில்' (164). வேலின் பேரொளியையும் பசுமை நிறத்தையும் கொண்டது. 'நிகரில் அயில்வெயில் எழு பசுமைய நிறமுளதான மயில்' (1005)

### 3. மயிலின் ஆற்றலும் வேகமும்:

(1) விநாயகரோடு பந்தயமிட்டு முருகர் உலகெலாம் மயிலின்மீது வலம்வந்தபோது, மயிலின் வேகத்தின் ஆற்றலைக்கண்டு விநாயகக் களிறு (அஞ்சிப்) பிளிறியதாம்.

(பாரதக் கதை) 'எழுதுமொரு களிறு பிளிறிட நெடிய கடலுலகு நொடியில் வரும் அதிவேகக் கலப சுக மயில்" (1098)

(2) பீலியின் கொத்து அசைவதால் உண்டாகும் காற்றின் வேகத்தால் மேருமலையும் அசைந்தது; மயில் அடியிட்டுச் செல்லத் திசைகளில் உள்ள மலைகள் எல்லாம் பொடிபட்டுத் தூளாயின; அத்தூளினால் கடல் நீர் வறண்டு திட்டு (மேடு) உண்டாயிற்று (கந்.அலங். 11). பிரமலோகம் - ககன கோளம் - கடற்கப்புறம் திசைக்கப்புறம் எல்லாம் மயில் திரியும், மயிலின் வேகத்தில் எட்டுத் திசையில் உள்ள நாகங்கள் அஞ்சி வீழும் (1048; 1095, கந். அலங். 96); மயில் ஆலித்து ஆதிசேடனது பணாமகுடங்களைத் தாக்க அந் நாகத்தின் மாணிக்கக் குவைகளும், நாகத்தின்மீது பள்ளிகொண்டிருந்த திருமாலும், அவரது சக்ராயுதமும் சங்கும் உருண்டு புரண்டு மயிலின் காலின் கீழ்க் கிடப்பன வாகும். (கந் அலங். 97).

(3) வாசுகியை வாயடக்கி ஆலும் (1188); சேடனையும் வாசுகியையும் எடுத்து உதறும் (1212); வேளைக்காரன்வகுப்பு.

## 4. மயிலின் உருவம்:

திரிவிக்ரம அவதாரங்கொண்ட திருமால்போல ஆகாயம் வரையும் எட்டும்படியான பேருருவங்கொண்டது. (1096); இந்திரனது ஆயிரங் கண்களைப்போலத் தோகையிற் கண்கள் பல கொண்டது. (1095); ஆடலின்போது விரிந்த கலாப மயில் மந்த்ர ரூப நிலை கொண்டது.(444)

## 5. மயிலின் நடனமும் விளையாடலும்:

(1) நடனம்: மயில் பரதநாட்டியம் ஆடும் (1050); 'செஞ் செணகு சேகு தாளத்தோடு நடமாடும்' (41); 'பேரண்டம் ஒக்க நடமாடும்' (148); சேடன் முடியுங் கலங்கிட நடமாடும் (972); தேவர்கள் மகிழ்ந்து பொங்க நடமாடும் (972); மணிகள் சப்திக்க நிர்த்தம் ஆடும் (147); நடன மூர்த்தியாகிய நடராஜப் பெருமானே மகிழும்படியாகவும், அவர் கருதுதற்கு அரிதாம் வகையிலும் அழகிய நடனத்தை நடிக்கும்.

"நடனமிடும் இறைவர் மகிழ் கருதரிட விதமொ
டழகுடனாடுங் கலபசுக மயில்' (1099)

(2) **விளையாடல்:** சேடன் முடி கிழிய நிலமதிர விளையாடும் (1008). நாகத்தைக் கொத்தி எடுத்து விளையாடும் (149, 1027)

## 6. மயில் செய்த தவம்:

முருகவேளின் திருவடியைப் போற்றித் தவஞ் செய்து முருகவேளுக்கு வாகனமாகும்படியான பேற்றை மயில் பெற்றது.

"பொற்பதம் இறைஞ்சிப் பரியாய பொற்சிகி" (986)

## 7. மயில் - மந்திரப்பொருள்:

வேலுடன் சேர்ந்து 'வேலு மயிலும் துணை' என்பது ஒரு சிறந்த மந்திரம். அருணகிரியார், 'வேலு மயிலும்' என்னும் மந்திரத்தையே நினையுங்கள், ஓதுங்கள், வாழ்த்துங்கள் என்று உபதேசிக்கின்றார்; அங்ஙனம் ஓதுதலின் பயனையும் விளக்குகின்றார்.

1. '**ஆடும்பரி வேல்** அணி சேவலெனப்
பாடும் பணியே பணியா அருள்வாய்' (கந். அநு 1)
(சேவல் - காக்கும் துணை).
2. 'அடல்புனைந்த **வேலு மயிலும்** என்றும் வாழி' (சித்து வகுப்பு)
3. 'பயந்த தனி வழிக்குத் துணை வடி**வேலுஞ்** செங்கோடன்
மயூரமுமே' (கந். அலங். 70)
4. 'மயிலையும் அவன் திருக்கை **அயிலையும்**
..நினைந்திருக்க வாருமே' (கடைக்கணியல் வகுப்பு)
5. "மரணப்ரமாதம் நமக்கில்லையாம் என்றும்வாய்த்ததுணை
கிரணக் **கலாபியும் வேலுமுண்டே**" (கந். அலங். 21)
6. "**வேலு மயிலும்** நினைந்தவர் தந்துயர்
தீர அருள்தரு கந்த" (920)

## 8. வேலும் மயிலும் வினையையும் ஆசையையும் அழிக்கவல்லன:

(1) 'வினைஓட விடும் கதிர்வேல்' (கந். அநு. 40)

(2) 'நீண்டகன்மச் செவிக்குன்றவா... வேலாயுதம் செற்றது' (கந். அந். 26)

(3) 'சிந்து ...மால் வினைக்குன்றைச் சிகண்டிகொண்டே' (கந்.அந் 66)

## 9. மயிலின்மீது முருகவேள் பதுமாசனமிட்டு வீற்றிருத்தல்:

'பங்கயாசன மிருந்து' (1105)

'மட்டுமரை நால்வேத னிட்டமலர் போல் மேவ
மத்தமயில் மீதேறி' (1112)

## 10. மயிலைக் குறிக்கும் அருமைச் சொற்றொடர்கள்:

அடல்மயில், அழகுமயில், ஆடுமயில், ஓகாரபரி, சண்டநீல கலாபவாசி, சாமள கலாபப் பரி, சிங்காரரூப மயில், சித்ர மணி மயில், துரகத பதங்க இரதம், நாட்டிய மயில், நிர்த்தம் நடித்திடு பக்ஷி, நீலக்ரீப கலாபத்தேர், (*) (நீலகண்டம்), நீலமயில், பச்சை மஞ்ஞை, ரத்னபடாக மயில், ரத்னரேகை யொக்கச் சிறக்கு மா மயில், விகடநடங்கொள் சித்ர மயில், வையாளிப்பரி.

## 11. மயில் வர்ணனைப் பாடற் பகுதிகள்:

(1) "பக்கரை விசித்ரமணி பொற்கலணை யிட்டநடை
பக்ஷியெனும் உக்ர துரகம்" (3)

(2) விமலை தோடி மீதோடு யமுனைபோல, வோரேழு
விபுத மேகமேபோல வுலகேழும்
விரிவு காணு மாமாயன் முடிய நீளு மாபோல,
வெகுவிதாமு காகாய பதமோடிக்
கமலயோனி விடான ககன கோள மீதோடு
கலப நீல மாயூரம் (1048)

(3) இளநிலவு தலைமலைய அடியினுகிர் இலைகளென
இருசதுர திசையிலுரக கும்ப விழ
இரணியச விலம்ர சித சயிலமர கதசயிலம்
என விமலை யமுனையென நிழல்வீசிக்
கனமழை புகைகடவுள் உலகமென முதியவிழி
கதுவியெழில் பொதியமிசை படர்கோலக்
கலப ககமயில் (1095)

# 10. திருப்புகழும் சேவலும்

"அரிய குருகுகொடி யெங்குந் தழைத்தருள" (989)

"திக்கது மதிக்கவரு குக்குடம்" என்று பாராட்டப்பட்ட சேவலைக் குறித்து இனி ஆய்வாம்.

(1) 'சேவல்' என்னுஞ் சொல்லுக்குக் 'கோழி' என்ற பொருளுடன் "துணை", "காவல்" என்ற பொருளும் உண்டு. அதனால்தான், இருவகைப் பொருள்படும்படி "ஆடும்பரி வேல் அணி சேவலெனப் பாடும்பணியேபணியா அருள்வாய்" - என அருணகிரியார் அநுபூதியிற் பாடினார். ஆடும்பரி (மயில்), வேல், அணி சேவல் -அழகிய கோழி என மூன்றையும் பாடும்பணி என ஒரு

பொருளும், ஆடும்பரி (மயில்), வேல் - இவையிரண்டும் "வேலும் மயிலும்" - அணி - (அழகிய) சேவல் (துணை) - எனப்பாடும் பணி - என உருப் போடும் பணி - "வேலும்மயிலுந்துணை" என ஜெபிக்கும் பணி எனப் பிறிதொரு பொருளும் பிறக்கும் வேலையும் மயிலையுந் துதிப்பதுபோல், வேலையுஞ் சேவலையும் துதியுங்கள் என்றுகூட அருணகிரியார் உபதேசிக்கின்றார். 'வேலுஞ் செஞ் சேவலும் செந்தமிழாற் பகர் ஆர்வம் ஈ (கொடு) (கந்-அங் 52) எனப் பிரார்த்திக்கின்றார்.

(2) விநாயகக் கடவுள் 'மயில்', வேல், 'குக்குடம்' மூன்றையும் செப்பித் திருப்புகழ் பாடுக என இட்ட கட்டளைக்கு (திருப்புகழ் 3) இணங்க, ஆங்காங்கு வேலையும் மயிலையும் சேவலையும் தனித் தனியோ, அன்றி ஒன்றோடொன்று இணைத்தோ அருணகிரியார் தமது பாக்களிற் சிறப்பித்துள்ளார்; இதற்கு ஒவ்வோர் உதாரணம் காட்டுவாம்.

1. **வேல்:**

"வேல்பாடாதே... நாயேன் வாணாள்
வீணே போகத் தகுமோதான்" (820)

2. **மயில்:**

'ஆனதனி மந்த்ர ரூப நிலை கொண்ட
தாடு மயில் என்ப தறியேனே' (444)

3. **சேவல்:**

'சென்றே இடங்கள் கந்தா எனும்பொ
செஞ்சேவல் கொண்டு வரவேணும்' (367)
'வாரணம் அஞ்சலென்றாண்டது' (கந் அந் 26)

4. **வேலும் மயிலும்:**

'வேலு மயிலும் நினைந்தவர் தந்துயர்
தீர அருள் தரு கந்த' (920)

5. **வேலுஞ் சேவலும்:**

'வேலுஞ் செஞ் சேவலும் செந்தமிழாற்
பகரார்வம் ஈ' (கந் -அலங்52)
'தாரை வடி வேலைச் சேவல் தனை ** சிந்தியேனோ; (525)

6. **மயிலுஞ் சேவலும்:**

'குக்குடமும் மயிலும் உட்பரிவாலே
படிய மனதில்வைத் துறுதிசிவ மிகுத்து' (675)

**7. வேல், மயில், சேவல்:**

'ஆடும்பரி வேல் அணி சேவலெனப்
பாடும் பணியே பணியா அருள்வாய்' (கந். அநு. 1)

'அயில் நுனை வெற்றி வேலதும்
அரவு பிடித்த தோகையும் - உலகேழும்
அதிர அரற்று கோழியும் "மறவேனே' (162)

**(3) சேவலின் வர்ணனை:**

(i) முட்பதத்தை உடையது (254). காலே ஆயுதமாக உடையது (காலாயுதம் -கந் - அலங். 86); நகமே ஆயுதமாகக் கொண்டது (நகாயுதகோழி - புயவகுப்பு); செந்நிறத்தது - செஞ் சேவல் (கந் -அலங். 52), சிவத்த குக்குடம் (252); கொக்கரிப்பது (கொக்ரிக் குக்குடம் 386);

(ii) உக்ரம் உள்ளது, இருட்டை ஓட்டுவது

'அல்லைப் பொறா முழங்கு சொல் உக்ர சேவல்' (315)

(iii) இராக்காலம் தொலையாதா என்னும் தலைவிக்கு இதமாகக் கொக்கரிக்கும்.

'அல்லைக் கொல் வார்த்தை சொல்லிக் கிதோத்து
சொல் குக்குடம்' (318)

(iv) சூரியனைக் காலையில் வரக் கூவி அழைப்பது; சூரியனைக் கக்குவது (தோன்றச் செய்வது)

'சோதிக் காலைப் போதக் கூவத் தூவற் சேவல்' (992)

'ரவியுமிழ் துவசம்', 'வெயிலுமிழ்கொடி'

(387, 1008 சித்து வகுப்பு)

**(4) சேவலின் ஆற்றல்:**

சேவல் சிறக்கடிக்கக் கடல் கிழியும், அண்டகடாகம் உடையும், நக்ஷத்திரங்கள் உதிரும், மேரு முதலிய மலைகள் இடிபடும்', 'சேவல் சிறகடிக்கொள்ளச் சலதி கிழிந்தது, உடைபட்டது அண்டகடாகம், உதிர்ந்தது உடுபடலம்... குன்றமும்மா மேரு வெற்பும் இடிபட்டவே' - (கந் -அலங் 12); ஏழு உலகமும் அதிரும்படி ஒலி செய்யும் (169); தன் முழக்கத்தால் சூரியன், ஏழு பூமிகள், எண்கரிகள் இவைகளை இடர்படச்செய்யும் -'இரவி, எழுநிலமொடக்கரிகள் இடர்பட முழக்கியெழு சேவல்'- (வேடிச்சி வகுப்பு); சக்ரவாளகிரியைத் தனது தாளால் இடித்து வெற்றிகொள்ளும் 'வாளகிரியைத் தனது தாளிலிடியப் பொருது வாகைபுனை குக்குடம்'- (வேளை - வகுப்பு); வடவாக்கினிக்கு ஒப்பானது -'வட அனலம் நேர் கொடிய குக்குடம்'- (பூத - வகுப்பு).

### (5) சேவலை நினை:

சேவல் -'அறச் சேவல்' எனப்பட்டது (518); அதுகுற்றமற்றது 'புகரில் சேவல்' (1176); அது அஞ்சல் என்று ஆளுங் கருணையது 'வாரணம் அஞ்சல் என்றாண்டது (கந் -அலங் 26); அது ஏழுலகங்களையும் வாழ்விப்பது - 'ஏழு லோகம் வாழ்வான சேவல் (1032); ஆதலால், சேவலைச் சிந்தித்தல் வேண்டும் -'சேவல் தனைச் சிந்தியேனோ', (525) -

## 11. திருப்புகழும் பிற தெய்வங்களும் - தேவதைகளும்

### 1. வீரபத்திரர்:

(i) தேவியின் சொற்படி தக்கன் வேள்வியை அழித்தார். சந்திரன் மேனியைத் தேய்த்தார்; சூரியன் பற்களை நெரித்தார்; அக்கினியின் கையைக் குறைத்தார்; தக்கன் தலையைத் தகர்த்தார்; கலைமகளின் மூக்கை அரிந்தார், திருமாலை வேள்விச்சாலையில் நின்றும் ஓடச் செய்தார்.

"உமை சாற்றும் அளவினில், மாமகம் கூருமது தீர்க்க வடிவுடை வீரனென்பாள் ஒரு பராக்ரன் எனவர, அன்று சோமன் மேனியுந் தேய, கதிர் தோற்ற எயிறு உக, ** தீ கையற, சேட்ட விதி தலை வீழ, நன் பாரதியும் மூக்கு நழுவிட வந்த மாயன் ஏக ** வென்று ஆடுகளம்" (390)

(ii) கர்வங் கொண்ட நரசிங்கத்தைச் சரபமாய் வடிவெடுத்து அடக்கினார்.

"சிங்கம தாகத் திரிந்த மால் கெரு
வம்பொடி யாகப் பறந்து சீறிய சிம்புள்" ( 589)

### 2. வீரவாகுதேவர்:

முருகவேளைத் தமது தியானப் பொருளாகக் கொண்டு அவர் ஏவக் கடல் தாண்டிச் சூரனிடம் தூது சென்று (அசுரர்கள்) அஞ்சப் பொருதவர்.

"சந்துத் தலையுற் றஞ்சப் பொருதுற்று
கடலிற் சென்றுற்றவர் (தற்பொருளானாய்) (20)
(சந்து - தூது)

### 3. பிரமன்:

(I) திருமாலின் உந்தியிற் பிறந்தவர். 'மாமனும்', உந்திமீதே
செனித்தும் சதுர்வேதம் ஓது நாமனும்' (952)

(II) பொன் நிறம் உடையவர்.
'சிரம்பொன் அயன் (113); இரணி ஆகாரவேதன் (366)

(iii) முருகன் கை வேலால் விலங்கிடப்பட்டவர், வேலுக்கு மிக அஞ்சி அலறி ஓடுபவர்

'விதியோட விடு சுடர் வேலா' (1008) 'வேதா கோ கோ
கோ என .. நீள்வேல் ஏவிய இளையோனே' (1180)
'விட வசனஞ்சில பறையும் விரிஞ்சன் விலங்கது கால்பூண்டுதன்
மேல் தீர்ந்தனன் – வேல் வாங்கவே' வகுப்பு

(iv) படைப்புத் தொழில் பூண்டவர்.
'எச் சகத்தையும் தரு நான்முகன்' (394)

(v) தாமரை மலரில் வீற்றிருப்பவர்,
'தாமரையின் மண அறை புகுந்த நான்முகன்' (55)

(vi) நேர்மை யுள்ளவர்:- 'கோடாத வேதன்' (கந். அலங் 76)
(vii) நான்கு குடுமி உள்ள அந்தணர், 'கலைமகளின் கணவர்'
'வேதத்துக்கு உரியவர்'- 'ஈரிரு குடுமி ஆரியன்'. 'கலைமகள் நாயன்',
'சுருதி வள்ளல்' - என வருவன காண்க.

**4. இந்திரன்:**

(1) நூறு அசுவமேதயாகம் முடித்தவரே இந்திர பதவியை அடைவர் என்பது:-

'சதம் முடிவுற உழைத்த இந்திரர்' (232)
'சத வேள்விக் குலிச பார்த்திபன்' (1064)

(2) இந்திரன் மலைகளின் சிறகை அரிந்தான் என்பது.
'சக்ர மால்வரை யரிந்த வஜ்ர பாணியர்' (216)
'திசைக்கிரியை முதற்குலிசன் அறுத்த சிறை' (வேல் வகுப்பு)

(3) இந்திரர் பலர்:-
'தேவேந்திரர் சேனாண்டனர்' (வேல்வாங்கு வகுப்பு)

(4) இந்திரன் பெயர்கள் - ஆயிரங் கண்ணன், மேகவாகனன் வலாசுரனுக்குப் பகைவன், ஆயிரநாட்டன், சசிபதி, முகிலூர்தி, வலாரி, எனவருவன காண்க.

**5. சூரியன்:**

(1) ஆயிரங் கதிர்களை வீசி இருளை ஓட்டுபவன்.
'வெயில் வீசிய கதிராயிர அருணோதய இருள்நாசன
விசையேழ்பரி ரவி (913)

(2) சூரியன் தேரும் குதிரையும் - பல நிறத்தன.
'பவள மரகத கனக வயிரக
பாட கோபுர அரிதேர் பரி' (795,

**6. சந்திரன்:**

குளிர்ந்த கிரணங்களை உடையவன், குமுத மலரை மலரச் செய்பவன் - 'இமகரன்', (344), 'குமுதபதி' (17)

**7. யமன்.**

(i) பிரமன் எழுதிய எழுத்தின்படி தான் காலன் வருவான்.

'காலன் - ஆதிவிதி யோடுபிற மாதவனை தேடி...
ஆவிதனை யே குறுகிவருபோது' (1242)
'போதன் தீட்டும் தொடர துபடி எமன் சங்காரம்' (1183)
'வேதன் அடையாள மருள் சீட்டு வரக் காண்டு
நலிகாலன் அணுகா..... (760)

(ii) ஏமன் ஏவக் காலன் வருவது.
'ஏமனால் ஏவிவிடு காலன்'- (1051)

(iii) நெருப்பைப் பொழியுங் கண்கள், இருண்ட மேக மொத்த மேனி: -
'தழலே பொழி கோர விலோசனம் (813), 'முகில் மேனி' (813),

(iv) யமன் படைகள்; சூலம், பாசம், தண்டம் (17, 813, 1051) யமன் வாகனம்: கரிய பெரிய எருமை (129, 567, 1266)

**8. மன்மதன்:**

(i) சிவபிரான் உமையை மணக்க வேண்டிக் கழுநீர் மலர்ப்பாணம் எய்தவன்.

'காலகாலப்ரபுச் சாலுமா லூற்று உமைக்காக வேளைப் புகக்
கழுநீராற் காதும்............காமவேள்! ..........' (1108)

'காலன் மார்புற்றுதைத்தாலும் ஓர் கற்புடைக் கோதை
காமக் கடற்கிடை மூழ்கக், காவி சேர் கொத்தலர்ப் பாணம் எய்...
காமவேள் (1109)

(ii) காமனது பாணம் உண்மைப் பத்தி சான்ற ஞானிகள் மேற் செல்லாது என்பது:- 'சரண கமலம் ஏத்திய வழி பாடுற்று; அரிய துரிய மேற்படுகருவி கரணம் நீத்ததொர், அறிவின் வடிவமாய்ப் புளகிதமாகி...... அமரும் அமலர் மேற்சில ரதிபதி விடு பூக்கணை படுமோதான்!" (1058)

(iii) எப்படிப்பட்ட தவம் நிறைந்த சற்புருஷர்களும் நைந்து ஏங்கும்படி ஆட்டிப்படைக்க வல்லவன் காமன் என்பது.

'நெடிது தவங் கூர்க்குஞ் சற்புருடரும் நைந்து ஏக்கம் பெற்று அயர்வு ற நின்று ஆர்த்து அங்கன் கணையேவு ம் நிகரில் மதன்' (25)

(iv) ( ஈசனது கண்ணினில் தோன்றிய) தீயால் வெந்து போனான் என்பது. 'வெந்துபோன புராதன சம்பராரி' (299)

(v) ரதியின் கணவன்: காமத்தை ஊட்டி வருத்துவதால் துஷ்ட ஆத்மா அவன் என்பது:-

'ரதிபதி எனவரு துட்டாத்மா' (1152)

(vi) காமனது வில் கரும்பு (வேழச்சிலை - 1108: கருப்புச் சாபன் 98.1, இக்குச் சிலை - 1171); பாணங்கள் - மலர்கள்; பஞ்சபாணன் (தாமரை - அசோகு, மா, முல்லை, நீலோற்பலம் 45, 480, 974)

(vii) காமனுக்கு - எக்காளம் - குயில்; தேர் - தென்றல் (24), குடை - சந்திரன் (608), கடல் - பேரிகை (952), கொடி - மீன் (226, 1171); திருமாலின் மகன் (அரிபுத்திரன்); திருவின் மகன் (கஞ்சாக்கன்று); சம்பராசுரனுக்குப் பகைவன் (சம்பராரி - 299)

**9. இலக்குமி:**

(i) செந்தாமரையில் வீற்றிருப்பவள் -'செந்தாமரைக் கிழவி' (785), 'அலர்கமல மலர் மடந்தை' (144)

(ii) கடலைக் கடைந்தபோது அமுதுடன் தோன்றியவள்,

'அமுதோடே துலைவருந் திருமாமயில்'- (918)

**10. சரஸ்வதி:**

எழுத்துக்கு உரியதேவி - 'அகஷரதேவி' - (1204); வெண்ணிறத்தவள் 'வெள்ளைப் பிராட்டி' (319), 'தவளரூப சரஸ்வதி'- (337), தாமரையில் வீற்றிருப்பவள் - 'கமலமாது'- (213); 'வேதத்துக் குரியவள் - 'மறைமகள்' - (399); - (446)

**11.** சசி - (இந்திரன் மனைவி) - சசிபதம் விரும்பத் தக்கது - 'விழைவு தரும் பத சசி' (வேல்வாங்கு வகுப்பு )

**12.** ரதி - அழகி - 'இளகிடா வளர் சந்தன குங்கும, களப பூரணகொங்கை நலம்புனை இரதி (22).

## 12. திருப்புகழும் அடியார்களும்

'ஈசன் எதிர் நின்றாலும் ஈசனருள் பெற்றுயர்ந்த
நேசர் எதிர் நிற்ப தரிதாமே - தேசுவளர்
செங்கதிர்முன் நின்றாலும் செங்கதிர வன்கிரணம்
தங்கு மணல் நிற்கரிதே தான்'

-என நீதிவெண்பா கூறுகின்றது. அடியார்களைப் பழித்து உரைத்தால் கெட்ட பிணி எலாம் சேரும் என அருணகிரியாரே அச்சுறுத்துகின்றனர் - "அடியார் மனஞ்சலிக்க எவராகிலும் பழிக்க அபராதம் வந்து கெட்ட பிணிமூடி" - என்கின்றார் திருப்புகழ் (1202). இவ்வுண்மையை உணர்ந்தே மெஞ்ஞானியர்களாம் பெரியோர்கள் யாவரும் தமது முக்கிய வேண்டுகோளாக இறைவனைப் பிரார்த்தித்தது 'அடியாரொடு இணங்கும் பாக்கியத்தைத் தந்தருள்' - என்பதே

'அத்தன் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயம் கண்டாமே' என்றார் மணிவாசகனார்; 'வின்டொழிந்தன நம்முடை மேல்வினை. தொண்டரோ டினிதிருந்தமையாலே' - என்றார் சம்பந்தர்: "உய்யப் போந்தேனுக்கும் உண்டு கொலோ ஆரூர்த் திருமூலட்டானனுக்குப் பொய்யன்பிலா அடித்தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே"- என்றார் அப்பர்; சுந்தரரோ "அடியாருக்கு அடியேன்" எனத் திருத்தொண்டத் தொகை எனத் திருப்பதிகமே பாடியுள்ளார். அருணகிரியாரோ - தாம்பாடிய திருப்புகழிற் பல இடங்களில் அடியாரோடும் கூடும் பேற்றினைத் தந்தருள என வேண்டுகின்றனர். உதாரணமாக -

'உன் அடிபேணாக் கூளன் எனினும் எனை நீ உன்
அடியரொடு கூடும் வகைமையருள் புரிவாயே' (121)
'உன் அடிபேணி..... உருகுதொண்ட ருடனதாகி
அடிமையாகும் முறைமை ஒன்றை அருள்வாயே' (227)
'நின்னை உணர்ந்துருகிப் பொற்பத்மக் கழல்
சேர்வார் தங் குழாத்தினில் என்னையும் அன்போடு
வைக்கச் சற்றுக் கருதாதோ' (492)
'நானுன் திருவடி பேணும்படி...... உன் நாமம் புகழ்பவர்
பாதந் தொழ இனி நாடும் படியருள் புரிவாயே' (1038)

நல்ல அன்பர் கூட்டத்திற் சேரும் பேற்றினை இறைவன் தமக்குத்தந்து அருள் புரிந்தார் என்பதையும் அருணகிரியார் வெளிப்படையாகக் கூறிப் "போதமிலேனை அன்பாற் கெடுதலிலாத் தொண்டரிற் கூட்டியவா வேலோன்"- எனக்கூறி மகிழ்கின்றார். (கந்தரலங்காரம் 100)

தாயுமானவர் "ஐயா அருணகிரி அப்பா உனைப்போல மெய்யாக ஓர் சொல் விளம்பினர் யார்" - என வியந்தவாறே அருணகிரியார் தாம் பெற்ற பேற்றினைக் கண்டு மகிழ்ந்த அளவில் நில்லாமல், நாம் எல்லாம் கதிபெற்று உய்ய மெய்ந்நிறைந்த ஒரு உபதேசத்தையும் செய்துள்ளார். அததான் "அடியார் கூட்டத்துடன் சேர்ந்தால் அன்றிக் கதிபெற இயலாது என்னும் அருமை உபதேசம். இதைச்

"சூரிற் கிரியிற் கதிர்வேல் எறிந்தவன் தொண்டர் குழாம் சாரிற் கதி யன்றி வேறிலைகாண்" - என்னும் தெளிவுரையிற் காண்கின்றோம், (கந்தரலங்காரம் 49). இந்த நல்லுரையை நாம் கடைப்பிடித்துத் தொண்டர் குழாத்திற் கலந்து நற்கதியைப் பெறுவோமாக.

உ
வேலும் மயிலுந் துணை.

## முருகவேள் பன்னிரு திருமுறை - தொகுதி 5

## முதற்குறிப்பகராதி - (திருப்புகழ்ப் பொதுப் பாடல்கள்)

(*உடுக்குறி யுற்றன புதிய பாடல்கள்)

# விஷய ஆராய்ச்சி

(பொதுப் பாடல்கள் - தொகுதி 5.)

6. அருணகிரிநாதர்:-



7. அருணகிரியார் செய்துள்ள உபதேசங்கள்:-



8. அருணகிரி நாதர் விண்ணப்பிக்கும் வேண்டுகோள்கள்



காவிரி வடகரை மேவிய
குருகிரி இருந்த
ஆறெழுத் தந்தணர்
அடியிணை போற்ற
ஏரகத் திறைவன்
எனஇருந் தனையே
ஆடும்பரி
வேல்
அணிசேவல்

உ

# அருணகிரிநாதர்அருளியதிருஎழுகூற்றிருக்கை-இலக்கணக்குறிப்புக்கள்

*திருஎழுகூற்றிருக்கை என்னும் †சித்ரகவி 96 வகைப் பிரபந்தங்களுள்ஒன்று. சுருக்கமாகக் கூறுமிடத்து இது: "ஒன்றுமுதல்ஏழுவரையும் எண்கள் முறையே ஒவ்வொன்றாக ஏறியும் இறங்கியும் வருமாறு கூறப்படும் மிறைக்கவிவகை" [Tamil lexicon] இதன் இலக்கணம்

"ஒன்றுமுதலாஓர்ஏழ் ஈறாச்
சென்ற எண் ஈரேழ் நிலந்தோறுந்திரிதர
எண்ணுவதொன்றாம் எழுகூற்றிருக்கை" — அவைதாம்—
"இரதபெந்தத்தினில் இடையறை இரண்டாய்ச்
சரதம துற நடை சார்தரு பான்மையின்
ஒன்று பன்னொன்றாய் ஒருபன் னிரண்டாய்
நின்றய லனைவும் நிலந்தோறு முபயம்
குன்றுவதாய்த் தொகைகூடி யொன்றிலிறும்"

மாறனலங்காரம்.சூத்திரம் 297-298

[இதன் பொருள் :—"செய்யுளகத்து எண்ணப்பட்ட ஒன்றென்னும் எண் ஒன்று முதலாக ஓரேழ் ஈறாக நிகழ்ந்த எண்களைப் பதினாலு நிலந்தோறும் மீள எண்ணுவதாகும் எழுகூற்றிருக்கை; அங்ஙனம் எண்ணப்படும் எண்கள் தாம் இரதத்திற் பெந்திக்குமிடத்து மையத்திற் பத்தியிரண்டு பத்தியாய்க் கீறி வலமே இடமே நடத்தலைத்தரும் பகுதியில் மையத்தில் ஒன்று பன்னொன்றாகவும், அதன் அயல் இருபத்தியில் இரண்டும் பன்னிரண்டாகவும் ஒழிந்த மூன்றுமுதலிய எண்ணும் பத்திதோறும் இரண்டு குறைந்து ஏழ்எனனும் தொகை பொருந்தி முதலேகின்ற ஒன்றில் வந்துமுடியும்" ஏழுறையாக்கக், குருமக்கள் முன்னொன்றும் புக்கும் போந்தும்வினையாடும் பெற்றியால் வழுவாமையால் ஒன்றுமுதலாக ஏழு இறுதியாக முறையானே பாடுவது."

---

நக்கீரர்,சம்பந்தர்,திருமங்கையாழ்வார், இம்மூவர் பாடிய திருஎழுகூற்றிருக்கை பின்வருமாறு அமையும்

ஓம்

அருணகிரி நாதர் திருஎழுகூற்றிருக்கை ஒரு சிறிது வேறுபட்டுப் பின்வருமாறு அமையும். (ரதபந்தப்படம் பின்புறம்)




* இம் 'முதியமாதமிழின்' (திரு. 584) 'இலக்கண இலக்கிய'த்தின் (திரு. 271) பெருமை உணரற்பாலது. †சித்ரகவி—(திருப்புகழ் 1103

17. கந்த புராணம்:-



18. முருகனும் வள்ளியும்:-

19. கிருஷ்ண லீலை:-